அ. கோரெவ்,
வி. எபிம்யானின்

# ஜவஹர்லால் நேரு



மொழிபெயர்ப்பாளர்: நா. தர்மராஜன், எம். ஏ.
சர்வதேச உறவுகளைப் பற்றிய நூல் பிரிவு
ருஷ்ய வெளியீட்டின் பதிப்பாசிரியர் க.கோ. போல்கரெவா
விஞ்ஞானப் பதிப்பாசிரியர் அ.அ. கேன்தின்

А. ГОРЕВ, В. ЗИМЯНИН

**НЕРУ**

*на тамильском языке*

A. Gorev, V. Zimyanin
Nehru
*in Tamil*

முதலாவது பதிப்பு 1985

இரண்டாவது பதிப்பு 1986



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

Г $\frac{0302030103\text{-}246}{014(01)\text{-}86}$ без объявления

## பொருளடக்கம்

இந்நூலின் 1, 2, 7, 9, 12ஆம் அத்தியாயங்கள் அ. கோரெவாலும் 3, 4, 5, 8, 10, 11ஆம் அத்தியாயங்கள் வி. ஸிம்யானிஞலும் 6, 13, 14ஆம் அத்தியாயங்கள் இருவராலும் எழுதப்பட்டன.

இந்நூலை எழுதுவதற்கு ஆலோசனைகள் வழங்கி உதவிய எஸ். எல். திஹ்றவின்ஸ்கி, என். ஜி. சுடாரிக்கவ், இ. ஏ. பெனெடிக்தவ், வி. ஏ. சக்கலோவ், ஏ. எஃப். ஃபியல்கோவ்ஸ்கி, ஏ. ஏ. அகபியெவ், ஏ. எம். வவீலவ், வி. ஜி. ஹாய்கின் ஆகியோருக்கு நூலாசிரியர்கள் நன்றி தெரிவிக்கின்றனர்.

சோர்வைத் தருகின்ற சிறை வாழ்க்கை குறிப்பிடத்தக்க முறையில் தாங்க முடியாமற்போகின்ற தருணங்களில் அவர் ஒரு பறவையைப் போல பூமிக்கு மேலே பறந்து செல்வதற்கு, ''மேகக் கூட்டங்களின் அமளிக்கு நடுவே வேகமாக நுழைவதற்கு,'' ''வாழ்க்கையின் விளிம்பை எட்டிப் பார்ப்பதற்கு'' விரும்பினர். பூமியை இன்னும் சிறந்த முறையில் திருத்தியமைக்க, இன்னும் நியாயமானதாகவும் அன்பு நிறைந்ததாகவும் ஆக்குவதற்காக வேகமாக மாறிக்கொண்டிருக்கும் சம்பவங்களில் பூமியைப் பார்ப்பதோடு மட்டுமல்லாமல் விண்வெளியின் உச்சியிலிருந்தும் அதை ஆராய்வதற்கு அவர் விரும்பினர். இந்த உலகத்தை மொத்தமாக, ஒரே பார்வையில் பார்த்துவிட வேண்டுமென்று அவர் கனவு கண்டார். ''நான் எல்லாவற்றையும் எடை போட்டுப் பார்த்துவிட்டேன், எல்லாவற்றையும் மனதில் நிறுத்துப் பார்த்து விட்டேன், இந்த வாழ்க்கையோடும் மரணத்தோடும் ஒப்பிடும்பொழுது என்னுடைய அறிவுக்குத் தெரிந்தது ஒன்றுமேயில்லை'' என்று சொல்லவும் விரும்பினர். **இந்திய தரிசனம்** என்ற புத்தகத்தில் அவர் தன்னுடைய விருப்பங்களைப் பற்றி இவ்வாறு எழுதியிருக்கிருர்.

சோவியத் விண்வெளிக் கப்பலின் துவாரத்தின் வழியாக இந்தியாவைக் கண்ட முதல் மனிதரைப் பார்த்தபொழுது அவர் உணர்ச்சிமயமானர்.

வானவெளியிலிருந்து பார்க்கும் பொழுது இந்தியா கடல் நுரையின் ஓரப் பின்னலில் அடைக்கப்பட்டு நரம்புகளைப் போல நதிகள் குறுக்கும் நெடுக்குமாகப் போக மனிதனுடைய இருதயத்தின் வடிவத்தைக் கொண்டிருக்கிறது.

இந்தியாவின் முதல் செயற்கை துணைக்கோள் பூமியைச் சுற்றிவருமாறு விண்வெளிக்கு அனுப்பப்பட்ட பொழுது ஜவகர்லால் நேரு உயிரோடிருக்கவில்லை.

... தன்னுடைய ஆன்மபலத்தினுல் மனித உணர்ச்சிகளை வெல்வதிலும் அதே சமயத்தில் சாதாரணமான இந்திய உழைப்பாளியின் விருப்பங்களையும் கனவுகளையும் பகிர்ந்து கொள்வதிலும் வெற்றியடைந்த ஒருவரின் சாம்பலை ஏந்திக்கொண்டு இந்திய விமானங்கள் வெவ்வேறு இடங்களிலிருந்து வானத்தை நோக்கிப் பறந்தன. ஜவகர்லால் நேருவின் சாம்பல் அவர் மிகவும் நேசித்த பூமியில் விழுந்து அங்கே உயிராற்றலைத் தரும் மண்ணோடு கலந்து அதன் பகுதியாக மாறி வாழ்க்கையின் புதிய வித்துக்களுக்கு ஆற்றலைக் கொடுக்கும், அழிவற்ற இந்தியாவைப் பற்றி அவருடைய கருத்துக்களை நிரூபிக்கும். நேரு விரும்பியதும் இதுவே.

செங்கோட்டையில் அரைக் கம்பத்தில் பறந்து கொண்டிருந்த மூவண்ணக் கொடி மறுபடியும் மேலே ஏற்றப்படுகிறது. இந்தியாவின் முதல் பிரதமரான ஜவகர்லால் நேரு உணர்ச்சியோடும் முழு மனதோடும் நம்பிக்கை கொண்டிருந்த இந்தியக் குடியரசின் ஒற்றுமை மற்றும் சுதந்திரத்தின் சின்னமாகத் திகழ்கிறது அந்தக் கொடி.

# அத்தியாயம் ஒன்று

ஒரு பெரிய அரச மரத்தின் நீண்டு வளர்ந்த கிளைகளின் கீழ் ஒரு சிறுவன் நின்று கொண்டிருக்கிறுன். அவன் முகத்தில் வயதுக்கு மீறிய சிந்தனை தேங்கியிருக்கிறது. அந்த மரத்தின் இலைகளின் நிழல் அவன் முகத்தோடு விளையாடிக் கொண்டிருக் கிறது. அவன் தலையின் ஓரத்தில் வகிடு எடுத்து கவனமாக, அழகாக சீவிவிடப்பட்டிருக்கிறது. அவன் மாலுமியின் மேற் சட்டையும் அரைக் காற்சட்டையும் முழங்கால்வரை காலு றைகளும் அணிந்திருக்கிறுன். அவன் வயதுச் சிறுவர்கள் ஆற்று நீரில் குறும்புத்தனமாகக் குதித்து விளையாடிக் கொண் டிருக்கிறுர்கள். ஐரோப்பிய உடைகளை அணிந்திருக்கும் இந்தச் சிறுவன் அவர்களைச் சிறிதும் ஒத்திருக்கவில்லை. மாலுமியைப் போல உடையணிந்திருக்கும் இந்தச் சிறுவனை நெருங்க அவர் களில் ஒருவனுக்குக் கூடத் துணிவு கிடையாது. அந்தச் 'சின்னத் துரையின்' கண்களில் அவர்களைப் பற்றிப் பொறுமை தோன்றி மறைந்தாலும் அவன் வெளிப்படையான அக்கறை யைக் காட்டவில்லை என்பது உண்மையே.

இளமையான, ஓரளவுக்குக் குட்டையான தோற்றம் கொண்ட அவன் தாயார் சொரூபராணி தண்ணீருக்குப் பக்கத்தில் கரையின் மீது நின்று கொண்டிருக்கிறுள். அங்கே காணப்படுகின்ற யாத்திரிகர்கள் கூட்டத்தின் பார்வையிலி ருந்து தன் முகத்தை மறைப்பதற்காக அவள் தன்னுடைய சேலைத்தலைப்பை லேசாக உயர்த்துகிறுள். ''ஜவகர், இங்கே வா!'' என்று தன் மகனைப் பார்த்து அன்பாகக் கூப்பிடுகிறுள். ஆனுல் அவன் நின்று கொண்டிருக்கும் இடத்திலிருந்து நகர வில்லை. அவள் விருப்பத்தை நிறைவேற்ற மறுப்பதற்காகத் தன்னை மன்னிக்குமாறு கண்களாலேயே கேட்டுக் கொள்கிறுன்.

அவன் தாயார் அவனை வற்புறுத்தவில்லை. ஆற்றில் முங்கி யெழுவதற்காக அவள் மட்டும் தனியே போகிறாள்.

''அருமை மகனே! என்ன காலமோ...'' என்று அவள் முணுமுணுக்கிறாள். அவன் வர மறுப்பதற்குக் காரணம் அவளுக் குத் தெரியும். அவன் தகப்பனார் மோதிலால்தான் இதற்குக் காரணம். அவர் மதச் சடங்குகளை அங்கீகரிக்காதவர், தன் குடும்பத்தில் பின்பற்றப்படும் மூடப் பழக்கவழக்கங்களை மனதில் வெறுப்பவர். தன் உறவினர்களும் தன்னைப் போல அதே மாதிரியாகச் சிந்திக்க வேண்டும், நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் அந்தச் சிறுவன் எல்லாவற்றையும் புரிந்துகொண்டு தன்னுடைய தகப் பனாரைப் போல இருக்க விரும்புகிறான். ''கடவுளே! இதெல் லாம் எப்படி முடியப்போகிறதோ!'' என்று சொரூபராணி மனதில் வேதனைப்பட்டபடியே கணவனையும் மகனையும் மன் னித்துவிடுமாறு கடவுளிடம் பிரார்த்திக்கிறாள்.

ஆனால் ஜவகர் தகப்பனாரைப் பெரிதும் போற்றுகிறான். அவர் மற்றவர்களைப் போன்றவரல்ல—அவனுடைய தகப்பனார் பலசாலி, துணிவு மிக்கவர், பலமாக, பகிரங்கமாகச் சிரிப் பவர்.

மோதிலால் நேரு பிராமணர் குலத்தைச் சேர்ந்தவர். அவர் 1899ம் வருடத்தில் ஐரோப்பாவுக்குப் போய்விட்டுத் திரும்பிய பொழுது எல்லோரும் வழக்கமாகச் செய்கின்ற தூய்மைப்படுத்தும் சடங்கைச் செய்ய மறுத்தார். அவர் அதனால் சக பிராமணர்களின் கோபாவேசத்துக்கு ஆளானார். சமயக் கடமையை மீறியதாக அவருடைய நண்பர்களில் சிலர் அவரைக் கண்டனம் செய்தார்கள், அவரோடு தொடர்பை நிரந்தரமாக வெட்டிக் கொண்டார்கள். ஆனால் மற்றவர்கள் (அவர்கள்தான் பெரும்பான்மையினர்) பிராமணர்கள் கடல் கடந்து போகக் கூடாது என்று விதிக்கின்ற காலாவதியான மரபுகளைத் தங்கள் குலத்தைச் சேர்ந்த செல்வாக்குள்ள உறுப் பினர் ஒருவர் எதிர்த்துப் புரட்சி செய்ததைப் பற்றி மனதுக் குள் மகிழ்ச்சியடைந்தார்கள். அவர்களில் பலர் தாங்களும் ஐரோப்பாவுக்குப் போக விரும்பியவர்கள், ஆனால் அவ்வாறு போனால் ஜாதியிலிருந்து ஒதுக்கிவைத்துவிடுவார்களே என்ற பயத்தில் முடிவுக்கு வர இயலாது தவித்தவர்கள். மோதி லாலின் தனிப்பட்ட கலகம் இந்து மதத்தின் பழமைவாத

தடைகள் தளர்த்தப்படும் என்ற நம்பிக்கையை விதைத்தது.

மோதிலாலின் ஐரோப்பியப் பயணத்துக்கு முன்பே பிராமணர்கள் தடையை மீறி வெளிநாடுகளுக்குப் போய்விட்டுத் திரும்பியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வீட்டுக்குத் திரும்பியதும் கங்கைத் தண்ணீரில் குளிக்கும் சடங்கை நிறைவேற்றித் தங்களைத் தூய்மைப்படுத்திக் கொண்டார்கள். இப்பொழுது அவர்களில் சிலர் மோதிலாலோடு சேர்ந்து பிராமண தர்மத்தின் காலாவதியாகிவிட்ட மரபுகளைத் திருத்தியமைக்க வேண்டும் என்று வற்புறுத்துகின்ற சீர்திருத்தக் குழுவை அமைத்தார்கள். ஐரோப்பாவில் கல்வி கற்க விரும்பிய வசதியான குடும்பங்களைச் சேர்ந்த வாலிபர்களும் பெண்களும் இத்தகைய புது முயற்சிகளைத் தீவிரமாக ஆதரித்தார்கள்.

புனிதமான நதிகளான கங்கை, யமுனை, கண்ணுக்குத் தெரியாத நதி என்று தொல் கதைகளில் சொல்லப்படுகின்ற சரஸ்வதி ஆகியவை ஒன்று கலக்குமிடத்தில் ஒரு காலத்தில் பிரயாகை என்ற ஊர் இருந்தது. அது இப்பொழுது அலகபாத் நகரமாக வளர்ச்சியடைந்திருக்கிறது. மாபெரும் முகலாயர்களின், சக்கரவர்த்திகளான அக்பர், ஔரங்கசீப்பின் (தனக்கே உரிய சிறப்பான அடையாளத்தை எதிர்காலத்துக்கு விட்டுச் செல்ல வேண்டும் என்று அவர்கள் ஒவ்வொருவரும் விரும்பினார்கள்) துருப்புகள், வெற்றிகரமான படையெடுப்புகள், பிரமிப்பைத் தருகின்ற சடங்குகள், துரோகமான கொலைகள், கொடூரமான சித்திரவதைகள் ஆகியன அந்த நகரத்தைச் சும்மா விடவில்லை. ஆணவம் மிக்க ஆங்கிலேயர்கள் புனிதமான பொருள்களை அவமதித்தார்கள், வடக்கேயிருக்கும் தீவுகளிலிருந்து வியாபாரிகள் என்ற பெயரில் வந்த கபடம் நிறைந்த போக்கிரிகள் மக்களைக் கொள்ளையடித்தார்கள், ஆங்கில வைசிராய்களின் ஆணைகள் துப்பாக்கியையும் வாளையும் கொண்டு நிறைவேற்றப்பட்டன.

ஆனால் அலகபாத் தன்னுடைய புனிதமான விதிமுறைகளின்படி தன் வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தது; நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் கூட்டம் கூட்டமாக வருகின்ற யாத்திரிகர்களை அந்த நகரம் விருந்தோம்பலோடு வரவேற்றது. செடிகொடிகளின் காரமான

வாசனைகள், பிரார்த்தனைப் பாடல்களின் ஒலி, பக்கிரிகள் மற்றும் பாம்பாட்டிகள் காட்டும் வேடிக்கைகள், மரணச் சிதையின் நெருப்புகள் மற்றும் ஒளிமயமான, கண்கவர் திரு மணக் காட்சிகள், சித்தார் வாத்தியங்களிலிருந்து வருகின்ற இனிமையான இசை ஆகியவை கலந்த கோடைக்கால இரவு களில் நட்சத்திரங்கள் பிரகாசிக்கின்றன. ஆங்கிலேயர்களின் படைப்பிரிவு அணிவகுத்துப் போய்க் கொண்டிருக்கிறது. மாபெரும் முகலாயர்களின் வழிவந்தவர்கள் தலையைத் தாழ்த்திய படியே அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் கள்....

பழங்காலத்தின் எண்ணற்ற இரகசியங்களைப் பாதுகாத்து நிற்கின்ற தன்னுடைய நகரத்தை ஜவகர்லால் நேசித்தான். பூமியின் அடியில் புதைந்திருக்கும் பாதாளக் கோயிலுக்குச் செல்லும் நெடிய படிக்கட்டுகளின் வழியாக அவன் கீழே செல்லுவான். அங்கே ஒரு பாழடைந்த இடத்தில் இந்துக்கள் மிகவும் புனிதமாகப் போற்றுகின்ற அரசமரம் இருந்தது. மிகவும் முந்திய காலமான கி. பி. 540இல் அந்த மரத்தைப் பற்றி எழுதப்பட்டிருப்பது அதன் பழமையை எடுத்துக் காட்டு கிறது. அந்தக் கோயிலுக்கு இலவச ஊழியம் செய்பவர்கள் அந்த மரத்துக்குத் தண்ணீர் ஊற்றுவார்கள். முகலாயப் பேரரசின் சக்கரவர்த்தியான அக்பர் அந்த இடத்தைச் சுற்றி ஒரு கோட்டையைக் கட்டினார். ஆயினும் பல நூற்றாண்டுக் காலமாக பூமியில் புதைந்திருக்கும் அந்தக் கோயில் இந்துக் கள் வழிபடுகின்ற புனித இடமாக என்றென்றும் இருந்து வருகிறது.

அந்தக் கோயிலுக்கும் கோட்டைக்கும் சற்று தூரத்தில் ஆற்றங்கரையின் மீது முனிபுங்கவரான பாரதவர்ஷர் வசித்த இடம் இருந்தது. அங்கேயிருந்து பார்த்தால் ஒவ்வொரு இந்துவின் மனதையும் குளிர்விக்கும் காட்சி, புனிதமான கங்கையும் யமுனையும் ஒன்று கலக்கும் காட்சி தென்படும்.

நேரு குடும்பம் பிரதான வீதியையும் சந்தடி நிறைந்த கடைத் தெருவையும் ஒட்டியிருந்த பழைய பகுதியான சௌக் கியில் முதலில் வசித்தது. அந்தப் பகுதியிலிருந்த வீடுகள் மிகப் பழமையானவை; ஒவ்வொரு வீடும் ஒவ்வொரு கல்லும் அந்த நகரத்தின் வரலாற்றைச் சொல்லும்.

மோதிலால் நேரு பரந்த விருப்பார்வங்களைக் கொண்ட

வர், சுறுசுறுப்பான இயல்புடையவர். அவர் வாழ்க்கையில் பெரிய திட்டங்களை விரும்பியவர், அவருடைய ஆசைகளுக்கு ஒத்திருந்தால் செலவுகளைப் பற்றி அவர் கவலைப் பட்டதில்லை. ஆன்ம பலவீனத்தையும் தாழ்வுணர்ச்சியையும் அவர் வெறுத்தார். இந்த குணங்கள் தன்னிடம் சிறிதும் தலையெடுக்காதபடி நசுக்கிவிட்டார். விஞ்ஞானங்களுக்கு—குறிப்பாக 'சட்டவியலுக்கு—அவர் தலைவணங்கினார். அவர் சட்டத்தை நன்றாகக் கற்றிருந்தார். எல்லாவிதமான சிக்கலான நிலைமைகளிலும் சட்டத்தை எப்படிக் கையாள வேண்டுமென்பது அவருக்கு நன்றாகத் தெரியும். பாரசீகம், அராபிய மொழி, ஆங்கிலம் உட்பட பல மொழிகள் அவருக்கு நன்கு தெரியும். அவர் நிறையப் படித்தவர், ஓரளவுக்குச் சிறப்பான கவிதைகளும் எழுதக் கூடியவர். அவர் தொழில்நுட்பவியலில், நீரேற்றும் குழாய்களில், நீராவிக் கொதிகலங்களில், மின்சாரம் மற்றும் கார் வண்டிகளில் அக்கறை கொண்டிருந்தார். கட்டிடக்கலையிலும் அவர் ஓரளவுக்கு ஈடுபாடு கொண்டிருந்தார். அவரால் சோம்பேறித் தனத்தை மட்டும் சகித்துக் கொள்ள முடியாது. வாழ்க்கையில் ஏதாவதொரு தொழிலில் ஈடுபட முடியாதவர்களைக் கண்டால் அவருக்கு ஆத்திரமேற்படும். வழக்குரைஞராகத் தொழிலை ஆரம்பித்த காலத்தில் அவருக்குச் சொற்ப ஊதியமே கிடைத்தது. இப்பொழுது அவர் ஒவ்வொரு வழக்குக்கும் ஐந்து இலக்க ஊதியம் பெற்று வந்தார். அந்த வட்டாரத்திலேயே அதிகத் திறமையான, அதிக நம்பகமான வழக்குரைஞர் என்று பெயரெடுத்திருந்தார். அவர் இராஜாக்கள், ஜமீந்தார்கள் மற்றும் பணக்கார வர்த்தகர்களின் வழக்குகளை நடத்தினார். அவர் அநேகமாக எல்லா வழக்குகளிலும் வெற்றி பெற்றார், புகழும் நிதியும் அவரிடம் குவிந்தது.

மோதிலால் சௌக்கியிலிருந்து பணக்காரர்கள் வசிக்கும் பகுதிக்குத் தன்னுடைய இருப்பிடத்தை மாற்றிக் கொண்டார். அங்கே அமைதியான, வசதியான மாளிகைகளில், செடிக் கொடிகள், மலர்கள் நிறைந்த பங்களாக்களில் ஐரோப்பியர்களும் அலகபாத்திலுள்ள செல்வந்தர்களும் வசித்து வந்தார்கள்.

ஜவகர்லால் தனிமையில் வளர்ந்தான். அவனுடைய உறவினர்களில் குறைந்த வயதுடையவர்கள் கூட அவனைக்

காட்டிலும் அதிக வயதானவர்களாக இருந்தார்கள். அவர்கள் அன்போடும் பாசத்தோடும் நடந்துகொண்ட போதிலும் அவர்களோடிருப்பதை ஜவகர் விரும்பவில்லை. மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் தகப்பஞரோடிருப்பதைத்தான் சிறுவஞன ஜவகர் மிக விரும்பிஞன். ஆஞல் அத்தகைய சந்தர்ப்பங்கள் குறைவாக இருந்தது துரதிர்ஷ்டமே. அவனுடைய தகப்பஞர் புதிதாக ஏதாவது விளையாட்டைக் கண்டுபிடிப்பார் என்பது நிச்சயம். உதாரணமாக, அவர்கள் பெரிய, பல வர்ணப் பட்டத்தைப் பறக்க விடுவார்கள். அதன் வால் மிகவும் நீளமாக இருக்கும். அந்தப் பட்டம் வானத்தில் பறந்து சென்று அங்கே மிதக்கும் அல்லது ஒரு பக்கத்திலிருந்து மற்ருெரு பக்கம் தாவும். கட்டுக்கதைகளில் சொல்லப்படும் அதிசயமான பறவையைப் போல அது சூரிய வெளிச்சத்தில் பிரகாசித்து விளையாடும். மோதிலால் பட்டத்தின் துடிக்கும் கயிறை ஜவகரிடம் பிடித்துக் கொள் என்று கொடுப்பார். பூமியிலிருந்து வானத்தை நோக்கி இழுக்கப்படுவது போல, பட்டத்தோடு வானத்தில் பறப்பதைப் போல அந்தச் சிறுவனுக்குத் தோன்றும். கட்டுக்கடங்காத உற்சாகமும் பறந்து செல்ல முடியுமென்ற ஆனந்தமும் அந்தச் சிறுவனைப் பரவசப் படுத்தும்.

ஆஞல் ஜவகரின் குழந்தைப் பருவத்தில் குழந்தைகளுக்குரிய வேடிக்கைகளும் விளையாட்டுகளும் இதைத் தவிர அநேகமாக இல்லாதிருந்தன. அவன் ஆரம்பத்திலிருந்தே தனிமையில் சிந்திக்க, பெரியவர்களின் செயல்களை எடைபோட்டுப் பார்க்க, அவர்களுடைய உரையாடலின் அர்த்தத்தை ஊகிக்கக் கற்றுக்கொண்டான்.

அவனுடைய வாழ்க்கை முழுவதுமே தன் தகப்பஞர் ஏற்படுத்திய ஒரு சடங்கை நினைவு வைத்திருந்தான். அது வருடந்தோறும் நடைபெற்றது. ஏராளமானவர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். அதில் ஜவகர்லால் முக்கியமான பாத்திரத்தை வகித்தான்.

ஜவகர்லால் (ஜவகர்லால் என்ற சொல்லுக்கு அழகிய ஆபரணம் என்பது பொருள்) 1889 நவம்பர் 14ந் தேதியன்று அலகபாதில் பிறந்தான். வருடந்தோறும் அந்த தினத்தின் அதிகாலைப் பொழுதில் அந்தச் சிறுவனைப் பெரிய தராசில் உட்காரவைத்து நிறுப்பது வழக்கம். தராசின் மறுதட்டில்

எடைக் கற்களுக்குப் பதிலாக கோதுமை அல்லது அரிசி மூட்டைகளை வைப்பார்கள். நிறுக்கும் சடங்கு முடிவடைந்ததும் அவற்றை ஏழைகளுக்குக் கொடுப்பார்கள். இப்படிப் பல தடவை ஜவகர்லாலை நிறுப்பார்கள். எடையிடப்பட்ட கோதுமை, அரிசி, இனிப்புப் பண்டங்கள் மற்றும் உடைகளை அங்கே நின்று கொண்டிருக்கும் கூட்டத்தினருக்குக் கொடுக்கும்பொழுது ஜவகர்லால் மிகவும் மகிழ்ச்சியடைவான். நவம்பர் 14ந் தேதியைப் பலரும் நினைவில் வைத்திருந்தார்கள். அதற்கு முந்திய நாள் மாலையிலேயே பலரும் குடும்பத்தோடு மோதிலால் நேருவின் மாளிகை வாயிலுக்கு வந்து விடுவார்கள், அதிகாலைப் பொழுதில் கதவுகள் திறக்கப்படுகின்ற வரை அங்கேயே காத்துக் கொண்டிருப்பார்கள். பிறந்த நாள் விழாச் சடங்குகளில் பங்கு கொள்பவர்கள் ஜவகர்லாலின் கால்களில் மலர்களை வைப்பார்கள்; பிறகு பரிசுப் பொருள்களைப் பெற்றுக்கொண்டு சிறுவனின் தகப்பனுரை வணங்கி மரியாதை செலுத்துவார்கள். அங்கே வந்திருக்கும் குழந்தைகள் இனிப்புப் பண்டங்களைச் சாப்பிடும் பொழுது ஒரு ''இளவரசனைப்'' போல அமர்ந்திருக்கும் ஜவகர்லாலை ஆச்சரியத்தோடு பார்ப்பார்கள். அந்தச் சிறுவர், சிறுமியர்களின் பரட்டைத் தலைகளையும் அவர்களணிந்திருக்கும் நைந்து போன உடைகளால் மறைக்க முடியாத மெலிந்த உடல்களையும் ஜவகர்லால் பார்ப்பான். உணவு அல்லது உடைகளை அந்தக் குழந்தைகளோடு பகிர்ந்து கொள்வது அவனுக்கு விசேஷமான மகிழ்ச்சியைக் கொடுக்கும். ஆனல் வருடத்துக்கு ஒரு தடவை தானே இந்தச் சடங்கு நடைபெறுகிறது. அது ஏன்? தன் பிறந்த நாளை இன்னும் அடிக்கடி கொண்டாட முடியாதா என்று அவன் தகப்பனுரிடம் கேட்ட பொழுது அவர் சிரித்தார். அவசரப்படாதே, ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் அதிகமான பிறந்த நாட்கள் வரப்போவதில்லை என்று அவர் பதிலளித்தார்.

தன் தகப்பனுரின் உயரமான தோற்றம், அகன்ற தோள்கள், அச்சமில்லாத சுபாவம், அறிவார்ந்த கண்கள், மீசை ஆகிய ஒவ்வொரு அம்சமும் ஜவகர்லாலுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவருடைய பெரிய முகத்துக்கு அந்த மீசை மிகப் பொருத்தமாக இருந்தது. லேசாக வெளியே நீட்டிக் கொண்டிருந்த மோவாய் அவருடைய அசாதாரணமான ஆளு

மையையும் உறுதியையும் எடுத்துக் காட்டியது. மோதிலால் உள்கோட் உட்பட ஐரோப்பிய உடையும் சங்கிலி வைத்த கடிகாரமும் அணிந்திருப்பார். ஜவகர்லாலின் கண்களில் அவர் துணிச்சலின் சொரூபமாகத் தோன்றினர்.

அந்தச் சிறுவன் தன்னுடைய தகப்பனரை நேசித்தான். ஆனல் அவருக்குக் கோபமேற்படும் பொழுது, குறிப்பாக வேலைக்காரர்கள் மீதும் தன் கீழுள்ள எல்லோர் மீதும் அவர் எரிந்து விழும் பொழுது அவரைக் கண்டு அவனுக்கு பயமேற்படும். அம்மாதிரியான சமயங்களில் ஜவகர்லால் உண்மையிலேயே மிரண்டு போவான். அந்த மாளிகையிலுள்ள எல்லோருமே அவரைக் கண்டு பயந்து அவருடைய கோபம் தங்கள் மீது பாய்ந்து விடக் கூடாதென்று அவர் கண்ணில் படாமல் மறைந்து கொள்வார்கள். மோதிலால் நேருவுக்கு ஏற்படும் கோபம் அவ்வளவு அதிகமாக இருக்கும்.

ஜவகர்லால் சில சமயங்களில் ஒரு விஷயத்தைப் பற்றி தீவிரமாகச் சிந்திப்பான்: மற்றவர்களிடமிருந்து அவருடைய தகப்பனரை வேறுபடுத்திக் காட்டுவது எது, மற்ற இந்தியர் களின் வாழ்க்கைக்குச் சிறிதும் ஒத்திராத ஒரு வாழ்க்கை முறையைத் தன் தகப்பனர் பின்பற்றுவது ஏன் என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்வான். இந்தக் கேள்விக்குப் பதிலைத் தேடுகின்ற முயற்சியில் ஜவகர்லால் மோதிலாலுடைய தகப்பனரின், தன் தாத்தாவின் படத்தை நோக்குவான். அந்தப் படத்திலிருக்கும் கடுமை நிறைந்த விழிகள் அந்தச் சிறுவனை உற்றுப் பார்க்கும். ''அவருக்கு அநேகமாக எல்லாமே தெரியும்'' என்று ஜவகர்லால் நினைப்பான். ஆனல் அந்தப் படம் ரகசியத்தைத் தெரிவிக்காது. தாத்தா மார்பில் கைகளைக் கட்டியபடியே இருக்கிருர்... மௌனம் சாதிக்கிருர்.

மோதிலால் நேருவின் மாளிகையில் அந்தக் குடும்பத் தலைவரிடம் விசேஷமான மரியாதை வைத்திருந்த எண்ணற்ற உறவினர்கள் வசித்து வந்தார்கள். மோதிலால் குடும்ப விவ காரங்களில் அநேகமாகத் தலையிட மாட்டார். அவருடைய தாயார்—எதற்கும் மசியாத, அதிகாரத்தை விரும்பும் பெண்மணி—குடும்பத்தை ஆட்சி செய்து வந்தாள். அந்த அம்மையாரிடம் அசாதாரணமான திறமையும் விவேகமும் உண்டு. எல்லோரைப் பற்றியும் எல்லாவற்றைப் பற்றியும் அவளுக்கு நினைவாற்றல் அதிகம். அவளிடம் மறுத்துப் பேசவோ

அவளுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிய மறுப்பதற்கோ யாருக்கும் துணிச்சல் ஏற்பட்டதில்லே.

மோதிலால் நேருவுக்கு இருபது வயதான பொழுது லாகூர் நகரத்தில் வசித்த காஷ்மீரக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணேத் திருமணம் செய்து கொண்டார். ஆனால் ஒரு ஆண் மகவைப் பிரசவித்த பின் அந்தப் பெண் இறந்து விட்டாள். அதற்குப் பிறகு அந்தக் குழந்தையும் உயிரோடிருக்கவில்லே. —

அதே லாகூர் நகரத்தில் மற்றொரு காஷ்மீர பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த பதினேந்து வயதுப் பெண்ணே மோதிலால் இரண்டாம் மனேவியாகத் திருமணம் செய்துகொண்டார். அவள் திருமணத்துக்கு முன்பு துஸ்ஸு என்ற பெயரைக் கொண்டிருந்தாள். அன்றைக்கிருந்த பழக்கத்தின்படி திருமணத்துக்குப் பிறகு சொரூபராணி என்ற புதிய பெயர் அவளுக்குச் சூட்டப்பட்டது. அவள் குட்டையாக, ஓரளவுக்கு ஒல்லியான தோற்றத்தைக் கொண்டிருந்தாள். எனினும் அவளுடைய மெலிந்த உடலில் தன்னேச் சுற்றியிருப்பவர்கள் மீது தன்னலமற்ற அன்புடைய, தன்னுடைய நிலேயை அடக்கத்தோடு ஏற்றுக் கொள்ளக்கூடிய தகுதி மட்டுமல்லாமல் வாழ்க்கையின் துன்பங்களேயும் உறுதியோடு தாங்கிக் கொள்ளக்கூடிய ஆன்மா குடி கொண்டிருந்தது. திருமணம் முடிந்த முதல் வருடங்களில் அந்தப் புதிய வீட்டில் தன்னுடைய நிலேக்குத் தன்னேத் தகவமைத்துக் கொள்வது அவளுக்குச் சுலபமாக இருக்கவில்லே. அதோடு அந்தக் குடும்பத்தின் தலேவியாக அவள் இருக்கவில்லே, அந்த உரிமை அவளுடைய மாமியாரிடம் இருந்தது.

மோதிலால் நேருவும் அவர் மனேவியும் அன்பால் இணேந்த கருத்தொருமித்த வாழ்க்கையை நடத்தினர்கள். அவர்களுடைய ஒரே மகனை ஜவகரை இருவரும் நேசித்தார்கள். அதிலும் தாயார் தன்னுடைய ஓய்வுநேரம் முழுவதையும் குழந்தையைக் கவனித்துக் கொள்வதில் செலவிட்டாள். அந்தப் பழமையான குடும்பத்தின் சரித்திரத்தை ஜவகர்லால் தன் தாயாரிடமிருந்துதான் தெரிந்துகொண்டான்.

''மகனே! நாம் காஷ்மீரத்தைச் சேர்ந்தவர்கள்'' என்று அவன் தாயார் பெருமையோடு கூறுவாள். ''காஷ்மீர் இந்தியாவின் வட பகுதியிலுள்ள அழகான மலேப்பிரதேசம். அங்கே

மலைச் சிகரங்களில் பனி உறைந்திருக்கும். கீழேயுள்ள பள்ளத் தாக்குகளில் எங்கு பார்த்தாலும் ஏராளமாக மலர்கள் இருக் கும். காஷ்மீரிகள் மிகவும் பழமையான, பெருமைமிக்க மர பைச் சேர்ந்தவர்கள்.''

இரண்டு நூற்றாண்டுகளுக்கு அதிகமான காலத்திற்கு முன் ஜவகர்லாலின் முன்னோர்களில் ஒருவரான ராஜ் கவுல் புகழும் பணமும் அடைவதற்காக இந்தியாவின் செழிப்பான சம வெளிப் பிரதேசத்துக்கு வந்தார். அப்போது சக்கரவர்த்தி ஔரங்கசீப்பின் மரணத்துக்குப் பிறகு முகலாயப் பேரரசின் வீழ்ச்சி ஆரம்பமாகி விட்டது. சக்கரவர்த்தி பரூக்சியார் காஷ்மீரப் பள்ளத்தாக்குக்கு வந்தபொழுது சமஸ்கிருதம் மற்றும் பாரசீக மொழிகளில் பாண்டித்தியம் உடையவர் என்று புகழ்பெற்றிருந்த ராஜ் கவுலைச் சந்தித்தார். சக்கரவர்த்தி யின் அழைப்பின் பேரில் ராஜ் கவுல் அரசவைக்குப் பக்கத் திலிருப்பதற்காக டெல்லிக்கு வந்தார். பரூக்சியார் ஆற்றங் கரையில் ஒரு பண்ணையை அவருக்கு மானியமாகக் கொடுத் தார். அன்று முதல் அவர்கள் தங்களுடைய குடும்பப் பெய ரோடு நேரு* என்ற சொல்லையும் சேர்த்துக் கொண்டார் கள்.

டில்லி அரசவை வீழ்ச்சியடைந்த பொழுது கவுல் நேரு வின் பண்ணையும் அழிந்துவிட்டது. மோதிலால் நேருவின் தாத்தா டில்லியிலிருந்த பேரரசரின் வழக்காடு மன்றத்தில் ''சர்க்கார் கம்பெனியின்'' சார்பில் வாதாடும் முக்கியமான வழக்குரைஞராக இருந்தார். அவருடைய தகப்பனுரான கங் காதர் நேரு டில்லி போலீஸ் துறையில் தலைமை அதிகாரியாக இருந்தார். இவருடைய படத்துக்கு முன்னுல்தான் ஜவகர் லால் அடிக்கடி நின்று சிந்தித்துக்கொண்டிருப்பான். அவர் மோதிலால் பிறப்பதற்கு முன்பே தன்னுடைய இளமைப் பருவத்தில்—முப்பத்து நான்காம் வயதில்—இறந்து விட்டார்.

*1857—1859*ம் வருடங்களில் ஏற்பட்ட சிப்பாய்களின் எழுச்சிக்குப் பிறகு பிரிட்டிஷ் இராணுவம் பழிவாங்கும் நோக் கத்தில் கைகளில் அகப்பட்டவற்றையெல்லாம் அழித்தது, எரித்தது. அந்த சமயத்தில் நேரு குடும்பம் அநேகமாகத் தன்னுடைய சொத்துக்கள் அனைத்தையும் இழந்துவிட்டது.

* சமஸ்கிருதத்தில் நேரு என்ற சொல்லுக்குக் கால்வாய் என்று பொருள்.

தலைநகரமான டில்லியிலிருந்து அந்தக் குடும்பம் ஆக்ரா வுக்குத் தப்பியோடிய பொழுது நடைபெற்ற சம்பவங்களை அவர்கள் வெகுகாலம் வரை நினைவில் வைத்திருந்தார்கள். மோதிலாலின் தமக்கைக்குப் பொன்னிறத்தில் முடியிருந்தது. அவர்களை வழியில் சந்தித்த ஆங்கிலப் படையினர் அவர்கள் ஒரு ஆங்கிலப் பெண்ணைக் கடத்திக் கொண்டு போவதாக நினைத்தார்கள். அந்த பயங்கரமான காலத்தில் விசாரணை கள் கிடையாது. அந்த இடத்திலேயே தண்டனை கொடுக்கப் படும். அந்த குடும்பத்தின் மாமாவும் மற்றவர்களும் தூக்கி லிடப்படாமல் தப்பியது அதிசயமே. அவர்களுடைய ஆங்கில அறிவும் டெல்லியில் அவர்களைத் தெரிந்திருந்த ஒருவர் அந்த வழியாகப் போனது ஆதரவாக சாட்சியமளித்ததுமே அந்தக் குடும்பத்தை மரண தண்டனையிலிருந்து காப்பாற்றியது.

மோதிலால் ஆக்ராவில் 1861 மே 6ந் தேதியன்று பிறந்தார். அவருடைய மூத்த சகோதரர்கள் உயர்ந்த பதவி களை வகித்தார்கள், அவர்களில் இளையவர் வழக்குரைஞர் பதவி வகித்தார். அவர்களுடைய அன்பு நிறைந்த மேற்பார் வையில் மோதிலால் வளர்ந்தார்.

அவர் இந்தியாவின் வடபகுதியில் பிறந்தார். அங்கே மொழி, பழக்கவழக்கங்கள், உடை, உணவு முதலிய பல அம்சங்களில் இந்து மற்றும் முஸ்லிம் கலாச்சாரங்கள் இணைந் திருக்கின்றன. அவருடைய வீட்டில் மதப் பகைமையின் சிறு அறிகுறிகூடத் தோன்றியதில்லை. இந்துக்களும் முஸ்லிம் களும் ஒரே தாய்நாட்டில் வசிக்கிறார்கள், ஒன்றாகவே துன்பங் களையும் இன்பங்களையும் அனுபவிக்கிறார்கள், 1857—1859ம் வருடங்களில் மக்கள் எழுச்சியின் போது நடைபெற்றதைப் போல இந்தியாவின் விடுதலைக்காக ஒன்றாகவே போராடினார் கள்.

முபாரக் அலி என்ற மதப்பற்றுடைய முஸ்லிம் காஷ்மீர பிராமணரான மோதிலால் நேருவிடம் வந்து சேர்ந்தார். அவர் நேருவிடம் எழுத்தராக வேலை செய்தபோதிலும் அந்தக் குடும்பத்தில் எல்லோருமே அவரைத் தங்களில் ஒருவராகவே கருதினார்கள்.

1857—1859ல் நடைபெற்ற சம்பவங்களை முபாரக் அலி நேரில் பார்த்தவர். ஆங்கிலப் படைவீரர்கள் அவருடைய தாயாரின் கண்களுக்கு முன்னால் அவரது தகப்பனாரைத் தூக்கி

விட்டார்கள், அவருடைய மற்ற உறவினர்களையும் கொன்றார்கள். வாழ்க்கையில் அவர் அன்புக்குரியதாகக் கருத எஞ்சியது நேரு குடும்பம் மட்டுமே. அவர் இளம் ஜவகர்லாலிடம் தனியான அன்பு கொண்டிருந்தார். அதைப் போலவே ஜவகர்லாலும் அவரிடம் பேரன்பு கொண்டிருந்தான். முபாரக் அலியின் அன்பு நிறைந்த கண்கள், பனி போன்ற வெண்மையான தலைமுடி, அதே போன்ற வெண்மையான தாடி அந்தச் சிறுவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஜவகர்லால் அவரை ஒரு மாபெரும் ஞானியாகவும் பழங்காலக் கதைகளின் கருவூலமாகவும் கருதினான்.

ஜவகர்லாலுக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டால் முபாரக்கின் பாதுகாப்பும் உதவியும் அவனுக்கு எப்பொழுதும் கிடைக்கும். அவருக்குப் பக்கத்தில் அந்தச் சிறுவன் உட்கார்ந்து கொண்டு அராபிய இரவுகள் என்ற பழங்காலப் புத்தகத்திலிருந்து அவர் சொல்லும் கதைகளை மணிக்கணக்காகக் கேட்டுக் கொண்டிருப்பான். அப்படிப்பட்ட கதைகள் அவருக்கு ஏராளமாகத் தெரியும். இஸ்லாமியப் பண்டிகைகளின் போது முபாரக் முறைப்படியான உடைகளை அணிந்து கொண்டு மசூதிக்குச் சென்று வழிபாடு செய்வார். அவர் அதிகமான மன அமைதியோடு வீட்டுக்குத் திரும்பியவுடன் ஜவகர்லாலைக் கூப்பிட்டு அன்போடு பேசிக் கொண்டிருப்பார்; இனிப்பான தின்பண்டங்களைக் கொடுப்பார்.

இருவரும் வயதிலும் அந்தஸ்திலும் அதிகமான வேறுபாடுகளைக் கொண்டவர்கள். ஆனால் அவர்களுக்கிடையே ஏற்பட்ட நட்பு கால ஓட்டத்தில் பலமடைந்தது. சிப்பாய்களின் எழுச்சியைப் பற்றி, அதன் தலைவர்களில் ஒருவரான தாந்தியா தோபேயைப் பற்றி, இளம் வீராங்கனையான லட்சுமிபாயைப் பற்றி அவர் சொல்லிய கதைகள் ஜவகர்லாலின் நினைவில் நிரந்தரமாகப் பதிந்தன. அந்த வயோதிகர் அமைதியாக, அவசரப்படாமல் சொல்லிய வார்த்தைகள் அந்தச் சிறுவனின் இதயத்தில் ஆழமாகத் தைத்தன.

மதச் சடங்குகள் நடைபெறுகின்ற பொழுது ஜவகர்லால் குழந்தைக்குரிய ஆர்வத்தோடு அவற்றைப் பார்த்துக்கொண்டிருப்பான். அவன் தன்னுடைய தாயார் அல்லது அத்தையோடு கங்கையில் நீராடச் செல்வதுண்டு. அவர்களோடு கோயிலுக்குச் சென்று அங்கே எல்லோராலும் புனிதமான

வராக மதிக்கப்பட்ட சாதுவின் பிரார்த்தனைப் பாடல்களைக் கவனமாகக் கேட்பான். இந்துப் பண்டிகைகள் எண்ணற் றவை. அவை ஒன்றோடொன்று சடங்குகளில் வேறுபட்டிருந் தாலும் எல்லாமே ஒரே மாதிரியாக ஆடல் பாடல்களோடு ஆரவாரமாக, உயிர்க்களையோடிருக்கும். வசந்த காலத்தில் வரும் ஹோலிப் பண்டிகையின் போது ஜவகர்லால் வரிசை யாக ஒவ்வொருவர் மீதும் தண்ணீரைப் பீச்சியடிப்பான். அதைப் போலவே அவன் மீதும் தண்ணீர் பீச்சியடிக்கப்படும். இது அந்தப் பண்டிகையைக் கொண்டாடுகின்ற முறையாகும். எல்லோரும் இதைப் பார்த்து பலமாகச் சிரிப்பார்கள். தன் தகப்பனார் உள்பட எல்லாப் பெரியவர்களும் குழந்தைகளைப் போல அந்தப் பண்டிகையில் ஆனந்தமாக ஈடுபடுவதைப் பற்றி அவன் மகிழ்ச்சி அடைவான். தீப விழாவாகிய தீபா வளிப் பண்டிகையின் போது களிமண் சிட்டிகளில் எரிந்து கொண்டிருக்கும் ஆயிரக் கணக்கான தீபங்களை அவன் உற் சாகத்தோடு பார்த்துக் கொண்டிருப்பான், அசுரர்களின் 'கொடும்பாவிகளுக்குத்' தீ வைப்பதையும் அவை நெருப்பில் அழிவதையும் அவன் பார்த்து கொண்டிருப்பான். இராம் லீலா பண்டிகையின் போது இராமர் இலங்கையை வெற்றி கொண்டதைச் சித்தரிக்கும் கவர்ச்சிகரமான வண்ணக் காட்சி களைக் கொண்ட ஊர்வலம் தெருவிலே வருவதைப் பார்த்துப் பரவசமடைவான். நேரு குடும்பம் காஷ்மீரப் பண்டிகைகளை, குறிப்பாக நவ்ரோஸ் என்ற வருடப் பிறப்பு விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடும். ஜவகர்லால் முஸ்லிம் பண்டி கைகளிலும் அக்கறை எடுத்துக் கொண்டான். மொகர்ரம் பண்டிகையின் போது பட்டுக் கொடிகளை ஏந்திக்கொண்டு முஸ்லிம்கள் சோகமாக ஊர்வலம் செல்வதை அவன் வருத்தத் தோடு பார்த்துக் கொண்டிருப்பான்.

ஜவகர்லால் விழாக்களையும் சடங்குகளையும் பார்த்துப் பரவசமடைந்தாலும் உண்மையான மத உணர்ச்சிகளை வெளிக் காட்டவில்லை; மத நம்பிக்கைகள் அவனிடம் சிறிதுமில்லை. அவனுடைய தகப்பனும் மூத்த மைத்துனர்களும் மதத்தை அவசியமற்றதாகக் கருதினார்கள். அவர்களுடைய தாக்கம் அவன் மீது ஏற்பட்டிருந்ததென்பதில் ஐயமில்லை. நெகிழ்ச்சி யும் விமர்சனத் தன்மையும் கொண்ட அறிவைப் பெற்றி ருந்த ஜவகர்லால் எதையும் நம்பத் தொடங்குவதற்கு

முன்னால் ''ஏன்? எதற்காக?'' என்ற கேள்விகளுக்கு உடனடியாக பதில் வேண்டுமென்று தங்களுடைய கற்பனையின் முழுத் தீவிரத்தோடும் வற்புறுத்துகின்ற சிறுவர்களில் ஒருவனாக இருந்தான். அவன் மதத்தைப் பற்றி எதிர்பாராத கேள்விகளைத் தன்னுடைய தகப்பனார், தாயார், அத்தை மற்றும் முபாரக் அலியிடம் கேட்பான். ஆனால் அவர்கள் ஒருவராலும் அவன் ஏற்றுக் கொள்ளக் கூடிய விளக்கத்தைக் கூற முடியவில்லை. ஆகவே மதத்தைப் பற்றி அவன் குழப்பமான கருத்தைக் கொண்டிருந்தான். மேலும் மகாபாரதம், இராமாயணத் திலுள்ள கதைகள் அந்தச் சிறுவனின் மனதில் பண்டைக் கால இந்தியாவைப் பற்றித் தெளிவான பிம்பங்களை ஏற்படுத்தின, பன்னெடுங்காலமாக மக்களிடையே போற்றப்பட்டுவரும் உண்மை, விசுவாசம் என்ற கருத்துக்களை விதைத்தன. காவியத் தலைவர்கள் அவனுக்கு ஒழுக்கத்தையும் இரக்கத்தையும் கற்றுக் கொடுத்தனர், பொய்மையையும் கொடுமையையும் பற்றி வெறுப்பை வளர்த்தனர்.

1900ம் வருடத்தில் ஜவகர்லாலுக்குப் பத்தாவது வயது நிறைந்த பிறகு அவன் தகப்பனார் அலகபாத்தின் அழகிய புறநகர்ப் பகுதியில் ஒரு பெரிய மாளிகையை வாங்கினார். தொல்கதைகளின்படி இராமர் தன் சகோதரனை பரதனைச் சந்தித்த புனிதமான இடத்தில் அந்த மாளிகை கட்டப்பட்டிருந்தது. அந்த இடத்துக்குப் பக்கத்தில்தான் இராமாயணத்தை எழுதிய வால்மீகி முனிவர் வசித்தார் என்றும் பழங்கதைகள் கூறின. அந்த மாளிகையை மாற்றியமைக்கவும் வசதிகளை ஏற்படுத்தவும் மோதிலால் நேரு ஏராளமாகப் பணம் செலவழித்தார்.

அந்த மாளிகையைச் சுற்றிலும் அகன்ற வராந்தாப் பாதைகள் அமைக்கப்பட்டிருந்தன. அந்த மாளிகையில் வரிசையாகத் தூண்கள், வளைவுகள், பால்கனிகள் இருந்தன. அந்தத் தூண்களுக்கு இடையே உள்ள இடங்களில் கல்லாலான திரைகளைப் போன்ற அமைப்பு தொங்கிக் கொண்டிருந்தது. அங்கே திருக்கு மறுக்கான அமைப்பில் கற்களை நீட்டிவைத்தும் குழிவாகச் செய்தும் மாடிகள், பால்கனிகளின் மூலம் அந்த மாளிகை முழுவதுமே எடை குறைவானதாகத் தோன்றும்படி செய்யப்பட்டிருந்தது. அதன் காரணமாக வெளியில் தாங்க முடியாத வெய்யிலடித்த போதிலும் அந்த

மாளிகைக்குள் எப்பொழுதும் குளிர்ச்சியாக இருக்கும். அந்த இரகசியம் கட்டிடக் கலைஞர்களுக்கு மட்டுமே தெரியும். அதன் உச்சியில் மாபெரும் கும்பமும் அதன்கீழ் ஒரு விதானமும் இருந்தது. அந்த மேடையிலிருந்து பார்த்தால் அந்த வீட்டைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த பூங்காவும் வரிசையாக வளர்ந் திருந்த மரங்களும் ரோஜாத் தோட்டமும் நன்கு கத்தரித்து விடப்பட்ட புல்வெளிகளும் நன்ருகத் தெரியும். அந்தப் பூங் காவில் டென்னிஸ் மற்றும் பல விதமான விளையாட்டுகளுக் கான மைதானங்கள் இருந்தன. அந்த மாளிகைக்குள் ஒரு நீச்சல் குளம் இருந்தது. அது வேறு எங்கும் இல்லாத புதுமையாகும். அந்தக் காலத்தில் மின்சார விளக்கு ஒரு அதிசயமாகக் கருதப்பட்டது. மாலை நேரத்தில் மின்சாரம் அந்த மாளிகை முழுவதையும் பிரகாசமான ஒளியில் மூழ்கச் செய்தது, அதைச் சுற்றிலுமிருந்த இருட்டில் அந்த மாளிகை தனியாகப் பிரகாசித்தது. எல்லாமே அந்த மாளிகையின் உடைமையாளரின் வளப்பெருக்கத்தையும் வசதியையும் சுட்டிக் காட்டியது. மோதிலால் நேரு வழக்குகளில் மிகவும் அதிகமான ஊதியம் வாங்கிக் கொண்டிருந்தார். எனவே அவருடைய விருப்பங்களுக்கேற்ப, அவருடைய திடீர் ஆர்வங்களுக்குத் தகுந் தவாறு தன்னுடைய வாழ்க்கை முறையை அமைத்துக்கொள் வதில் அவருக்கு எத்தகைய் கஷ்டமும் இல்லை.

வாழ்க்கையை எப்படி அனுபவிக்க வேண்டும் என்பது மோதிலால் நேருவுக்குத் தெரியும். எனவே அவர் தன்னுடைய மாளிகைக்கு ஆனந்த பவனம் என்று பெயரிட்டார்.

இதற்குப் பத்தாண்டுகளுக்குப் பிறகு, முதலில் அவர் மகனும் பிறகு மோதிலால் நேருவுமே வாழ்க்கையின் மகிழ்ச்சியை ஆனந்த பவனத்தின் அமைதி நிறைந்த அறை களில் அல்ல, ஆயிரக் கணக்கான ஆர்ப்பாட்டக்காரர்கள் குழுமியிருக்கும் சந்தடியான சதுக்கங்களில் காண்பார்கள் என் பதை அப்பொழுது யாராவது எதிர்பார்த்திருக்க முடியுமா?

துரதிர்ஷ்டம் பிடித்த, துன்பங்களில் உழல்கின்ற கோடிக் கணக்கான இந்தியர்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்ற உணர்ச்சி ஜவகர்லால் நேருவின் வாழ்க்கையில் ஒரே குறிக் கோளாயிற்று, எதிர்காலம் அவருக்காகத் தயாரித்துக்கொண் டிருந்த சோதனைகளுக்கு நடுவில் அவருக்கிருந்த ஒரே ஆறுதல் அதுதான். அவனுடைய தந்தையாரின் கருத்துக்கள் முதலில்

பழமை நோக்கு, கலகத் தன்மை, உயிராற்றல் நிரம்பிய நம்பிக்கை, அரசியல் அவநம்பிக்கை, தேசியவாத விருப்பார் வங்கள், எல்லாவிதமான ஆங்கிலப் பழக்கவழக்கங்களையும் அப்படியே பின்பற்றுவது என்ற விசித்திரக் கலவையாக இருந் தன. அவை அவருடைய பாதையில் குறுக்கிடவில்லை.

கால ஓட்டத்தில் தேசபக்த உணர்ச்சிகள் மற்ற எல்லா வற்றையும் துரத்தி விட்டன. அலங்காரமாக வாழ வேண்டு மென்ற ஆசை மறைந்தது, எந்த வழக்குரைஞர் தொழிலுக்கு மோதிலால் நேரு தன் சக்தி, அறிவு முழுவதையும் ஆரம் பத்தில் அர்ப்பணித்தாரோ அந்தத் தொழிலைப் பற்றிய ஆசை கள் இப்பொழுது ஒய்ந்துவிட்டன. மோதிலால் ஆனந்த பவனத்தில் தான் நிர்மாணித்த ஆனந்தமயமான சிறிய உலகத்தின் சுகபோகத்தை ஒதுக்கித் தள்ளுகின்ற துணிவைத் தன்னிடமே கண்டார். அவர் ஜவகர்லாலின் ஒப்புதலோடு அந்த மாளிகையை இந்திய தேசியக் காங்கிரசுக்கு அன்பளிப் பாகக் கொடுத்தார். அந்த மாளிகைக்கு சுயராஜ்ய பவனம் என்ற புதிய பெயர் சூட்டப்பட்டது.

இவை அனைத்தும் இனிமேல்தான் நடக்கப் போகின் றன. இதற்கிடையில் மோதிலாலின் விருந்தோம்பலும் அவரு டைய வசீகரமும் அரசியல் மற்றும் பொதுவாழ்க்கையில் ஈடுபட்டிருந்த பிரமுகர்களையும் இலக்கிய மேதைகளையும் வழக் கறிஞர்களையும் ஆனந்த பவனத்துக்கு ஈர்த்தன. இந்தியர் களும் ஐரோப்பியர்களும் அவருடைய விருந்தினர்களாக வந்தனர்.

ஒரு சமயத்தில் அன்னி பெஸன்ட் அம்மையார் நேரு குடும்பத்தினரோடு தங்கியிருந்தார். அவர் அயர்லாந்தைச் சேர்ந்தவர். ஏழ்மையும் மனிதத் தன்மையற்ற தாழ்வுநிலை மையும் கோலோச்சிய பிரதேசமான லண்டனின் கிழக்குப் பகுதியின் ''பரோபகார நங்கை'' என்று பிரபலமடைந்தவர். ஆனால் அவர் பரோபகாரி மட்டுமல்ல, ஆவேசமூட்டக் கூடிய பேச்சாளர், பெருந்திரளான மக்களின் தலைவர். அவருடைய சீர்திருத்தவாத ஜனநாயகச் சேவைகள் பிரிட்டன் முழுமைக் குமே நன்றாகத் தெரிந்தவை, இப்பொழுது இந்தியாவிலும் அவை பிரபலமடைந்தன.

பிரிட்டனில் 1880க்களின் முடிவில் அன்னி பெஸன்ட் டைத் தம்முடைய தலைவர்களில் ஒருவராகக் கருதாத அர

சர்ங்க எதிர்ப்பு ஸ்தாபனம் அநேகமாக ஒன்றுகூட இல்லை என்று சொல்ல வேண்டும். பெர்னுர்ட் ஷாவோடு சேர்ந்து அவரும் பேபியன் கழகத்தில் உறுப்பினராக இருந்தார்; கற்பனுவாத சோஷலிசத்தைத் தீவிரமாக ஆதரித்தார்; நாத்திகரும் நாடாளுமன்ற உறுப்பினரும் ''சுதந்திரமான சிந்தனையாளர்கள்'' கழகத்தின் தலைவருமான சார்லஸ் பிராட்லாவின் நெருங்கிய துணைவராக இருந்தார்; கம்யூனிஸ்டாகிய வில்லியம் மாரிசோடு கூட அவருக்குப் பழக்கம் இருந்தது. ஆனுல் புயலைப் போன்று சீறியெழுகின்ற இந்த அம்மையார் மாயாவாதியாக; ''தியாசபி''* என்ற போதனையை நிறுவிய திருவாட்டி எக்கதரீனு பிளாவட்ஸ்கியின் வலது கரமாகவும் இருந்தது ஒரு புதிரே. திருவாட்டி பிளாவட்ஸ்கி அம்மையார் ருஷ்யாவைச் சேர்ந்தவர், பிரபலமானவர், உலகம் சுற்றியவர். அவருடைய ''நிகழ்வுகள்'' மற்றும் ''தொலை நோக்கு ஆருடக்'' கனவுகள் எதையும் சுலபமாக நம்பக் கூடியவர்களின் கற்பனையைத் தொற்று நோயைப் போலப் பிடித்திருந்தன. தியாசபி இந்து மதம் மற்றும் புத்த மதத்துக்கு நெருக்கமாக இருந்ததனுல் அந்தக் காலத்தில் இந்தியாவில் அதற்கு அதிகமாக ஆதரவாளர்கள் இருந்தார்கள்.

அன்னி பெஸன்ட் 1893ம் வருடத்தில் இந்தியாவுக்கு வந்தார்: உடனே New India என்ற நாளிதழை வெளியிடத் தொடங்கினுர். பிரிட்டன் ''பொருளாயத மோகம்'' கொண்டிருக்கிறது, அதற்கு மாறுபட்ட வகையில் இந்தியா ''ஆன்மிகப் பற்றுடைய'' நாடாக இருக்கிறது, அங்கே பண்டைக்கால உலகத்தின் ஆன்மிக மதிப்பீடுகள் சாதாரண மக்களின் நடத்தையை நிர்ணயிக்கின்றன என்று கருதி இந்தியாவின் பால் அவர் ஈர்க்கப்பட்டார்.

அன்னி பெஸன்ட் உறுதியான கருத்துமுதல்வாதி. தங்களுடைய சுதந்திரத்துக்காகவும் தேசிய கௌரவத்துக்காகவும், தங்களுடைய பண்டைக்கால அறநெறிக் கோட்பாடுகள் மறுபடியும் பின்பற்றப்படுவதற்காகவும் போராடுமாறு

---

* கிரேக்க மொழியில் ''தியோ'' என்ற சொல் தெய்வீகத்தையும் ''சோபியா'' என்ற சொல் அறிவையும் குறிக்கும். இந்த இரண்டு சொற்களையும் இணைத்து உருவாக்கப்பட்ட ''தியாசபி'' என்ற சொல் கடவுளைப் பற்றிய அறிவை, தெய்வீக அறிவைக் குறிக்கும்.

இந்தியர்களைக் கேட்டுக் கொண்டார். 19ம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ம் நூற்றாண்டின் துவக்கத்திலும் இந்தியாவில் ஏற்பட்டிருந்த மதச் சீர்திருத்த வேகம் அவரைக் கவர்ந்தது. இந்தியர்களின் மத நம்பிக்கைகள் ''தூய்மைப்படுத்தப்பட்டு'' அவர்கள் ஐரோப்பிய நாகரிகத்தின் தீமைகளைத் தவிர்ப்பதற்கு, இந்தியாவையும் தன்னுடைய தாய்நாடான அயர்லாந்தையும் அடிமைப்படுத்திய, கொச்சையான ''பொருள்முதல்வாதத்தின்'' அரணாக விளங்கும் பிரிட்டனின் மீது எதிர்மறையான அரசியல் தாக்கத்தை ஏற்படுத்துவதற்கு இந்திய மக்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று அவருக்குத் தோன்றியது.

இந்தியாவின் தலைசிறந்த சிந்தனையாளர்களான சுவாமி விவேகானந்தர், அரவிந்த கோஷ், லோகமான்ய திலகர் ஆகியோரின் சமகாலத்தவர் அன்னி பெஸன்ட்.

உலக மதங்களின் மாநாடு முதல் தடவையாக 1893ம் வருடத்தில் சிக்காகோவில் நடைபெற்ற பொழுது அந்த சந்தர்ப்பத்துக்காகவே விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட மாபெரும் ''சுதந்திர மணி'' ஒலித்துக்கொண்டிருந்த நேரத்தில் சுவாமி விவேகானந்தர் பேசினார். அவர் காலனியாதிக்கவாதிகள் போலித்தனம், பொய் பேசுதல், மோசடி செய்தல், அநீதி இழைத்தல் ஆகியவற்றைச் செய்திருக்கிறார்கள் என்று ஆத்திரத்தோடு குற்றம் சாட்டினார். ''பட்டினி கிடக்கும் மக்களிடம் மதத்தைக் கொடுப்பது அவர்களை அவமதிப்பதாகும்; பட்டினி கிடக்கும் மனிதனுக்கு மெய்ஞ்ஞானத்தைக் கற்பிக்க முயற்சிப்பது அவனை அவமதிப்பதாகும்''... என்று அவர் உரையாற்றினார்.

இந்தியாவின் அறிவுஜீவிகளின் முன்னணி பகுதியினர் பின்பற்றிய குட்டி முதலாளித்துவ தேசியவாதத்தில் தாய் நாட்டின் மீது மனப்பூர்வமான பாசம், நாட்டு விடுதலை என்ற இலட்சியத்துக்காகத் துன்பங்களை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கும் மனோபாவத்தோடு இணைந்திருந்தது. ''எங்கே வக்கற்றவர்கள் வாழ்கிறார்களோ, எங்கே வறுமை இருக்கிறதோ, எங்கே துயரமும் அவமதிப்பும் இருக்கின்றனவோ, அங்கே என் கடவுள் இருக்கிறார்... எனினும் என் கடவுளை நினைக்கும் பொழுது நான் ஆனந்த பரவசமடைகிறேன்... இரத்தக் கறை படிந்த சொர்க்கத்தில் நான் என்னுடைய நாட்டின் ஒளிநிறைந்த, விடுதலையடைந்த எதிர்

காலத்தைக் காண்கிறேன்'' என்று தாகூருடைய நாவல்களில் ஒன்றில் அதன் கதாநாயகன் கூறுகிறான்.

இந்தியாவின் சீர்திருத்த இயக்கத்தின் ஜனநாயக உள்ளடக்கமும் கல்விவளர்ச்சி நோக்கங்களும் மக்களுக்கு விரோதமாக பிரயோகிக்கப்பட்ட முரட்டுத்தனமான வன்முறைக்கு எதிராக, அடிமைப்படுத்தியவர்கள் நாட்டைக் கொள்ளையடிப்பதற்கு எதிராக அதன் ஆவேசமான எதிர்ப்பும் மேற்கு நாடுகளைச் சேர்ந்த கண்ணியமான மனிதர்களை ஈர்த்தது.

மற்ற பிரம்மஞானிகளைப் (தியாசபிஸ்டுகள்) போல அன்னி பெஸன்ட்டும் மரணத்துக்கும் அப்பால் ஒரு உலகம் இருப்பதாக, அங்கே வசிப்பவர்களோடு தொடர்பு கொள்ளும் சாத்தியம் இருப்பதாக உண்மையிலேயே நம்பினாரா என்ற கேள்விக்குப் பதில் கூறுவது கடினம்; ஆனால் இங்கே வாழ்கின்ற மக்களின் கதி அந்த அம்மையாரை நிச்சயமாக நிலை குலையச் செய்தது. ஒடுக்கப்பட்ட இந்தியர்கள் மீது அவர் உண்மையான அனுதாபம் கொண்டிருந்தார்.

உண்மையையும் நீதியையும் தேடித் துடிதுடிக்கின்ற ஆன்மாவைக் கொண்ட இந்த அம்மையார், ''பெண் உடையிலே தோன்றிய டெமாஸ்தனிஸ்'' என்று தன் நண்பர்களால் அன்புடன் வர்ணிக்கப்பட்ட அம்மையார் நேரு குடும்பத்தினருடைய நண்பரானார். அவர் ஜவகர்லாலிடம் வெகு தூரத்துக்கு அப்பாலுள்ள பிரிட்டனைப் பற்றியும் அங்கே ஆங்கிலேயர்கள் மத்தியில் இந்தியர்களை சகோதரர்களாகக் கருதுபவர்கள், காலனியாதிக்க அரசின் கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர்கள் இருக்கிறார்கள் என்பதையும் எடுத்துக் கூறினார்.

மோதிலால் நேரு தன் மகனுக்கு ஐரோப்பியக் கல்வி கற்பிக்க உறுதி கொண்டார். தன் மகனுக்குக் கல்வி கற்பிப்பதற்குக் கல்வி கற்ற ஐரோப்பியர்கள் மத்தியிலிருந்து ஒரு ஆசிரியரைத் தேர்ந்தெடுக்கத் தனக்கு உதவி செய்யுமாறு அன்னி பெஸன்ட்டைக் கேட்டுக் கொண்டார்.

அன்னி பெஸன்ட் அடுத்தமுறை ஆனந்த பவனத்துக்கு வருகையளித்தபொழுது ஒரு பெரிய விருந்து நடைபெற்றது. மோதிலாலின் வேண்டுகோளை அந்த அம்மையார் நிறைவேற்றியிருந்தார். பாரசீகக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்த வரவேற்பு அறைக்குள் அன்னி பெஸன்டுடன் ஒரு உயரமான

இளைஞர் வந்தார். அவர் புரோட்டெஸ்டென்ட் பாதிரியாரைப் போலத் தோற்றமளித்தார். அவர் முகத்தில் வெட்கம் கலந்த புன்னகை மிளிர்ந்தது. அவருடைய வயது இருபத்தைந்துக்கு மேல் இருக்காது. அவர் பெயர் பெர்டினண்ட் புரூக்ஸ். அவர் தகப்பனார் ஐரிஷ்காரர், அவருடைய தாயார் பிரான்சையோ, பெல்ஜியத்தையோ சேர்ந்தவராக இருக்க வேண்டும். அவர் தன்னுடைய வாழ்க்கையில் பெரும் பகுதியை இந்தியாவில் கழித்திருக்கிறார், இந்தியத் தத்துவஞான நூல்களையும் காவியங்களையும் அவர் நன்கு கற்றவர். **பகவத்கீதையை** சமஸ்கிருதத்திலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். ஐரோப்பிய இலக்கியங்களையும் பண்டைக்கால கிரேக்கத் தத்துவஞானிகளின் நூல்களையும் அவர் நன்கு கற்றிருந்தார். அவர் பிரம்மஞானத்துக்காகத் தன்னைத் தீவிரமாக அர்ப்பணித்துக் கொண்டவர்.

ஆனந்த பவனத்தில் நடைபெற்ற விருந்து சாதாரணமானதல்ல. மதநம்பிக்கை வழுவாத இந்துச் சைவர்களுக்கென்று தனியான சமையல் அறையும் சமையற்காரர்களும் உணவுக் கூடமும் இருந்தன. பளிங்குத் தரையில் பந்திப் பாய் விரிக்கப்பட்டிருந்தது. அதற்கு எதிரே வெள்ளியினால் செய்யப்பட்ட கலங்களில் சிறந்த முறையில் தயாரிக்கப்பட்ட சப்பாத்தி மற்றும் காய்கறி உணவு வகைகள், பழங்கள் பரிமாறப்பட்டிருந்தன. காரமான அந்த உணவைச் சாப்பிட்டதும் அருந்துவதற்காக அழகான வெனிஸ் டம்ளர்களில் பனிக்கட்டி போடப்பட்ட தண்ணீரும் பழச்சாறுகளும் தேநீரும் வைக்கப்பட்டிருந்தன. ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு வைக்கப்பட்டிருந்தது.

ஐரோப்பியர்களுக்கும் புலால் உணவு அருந்துகின்ற இந்தியர்களுக்கும் தனி அறை ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கே நீண்ட மேசையின் மீது பனி போன்ற வெண்மையான துணி விரிக்கப்பட்டிருந்தது. அந்த மேசையைச் சுற்றி சிற்ப வேலைப்பாடமைந்த நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. மேசையில் மெழுவர்த்திக் கொத்து விளக்குகள், டிரெஸ்டென் பீங்கான் தட்டுகள், வெள்ளிக் கரண்டிகள், முட்கரண்டிகள் வைக்கப்பட்டிருந்தன. எங்கு பார்த்தாலும் ரோஜா மலர்க் கொத்துகள். அந்த மலர்களில் மாலைநேரப் பனித்துளிகள் உட்கார்ந்திருந்தன. எங்கு பார்த்தாலும் ஒளி வெள்ளம், வானவில்லின்

ஏழுவண்ணக் காட்சிகள், மனங்கவரும் வாசனை. விருந்தினர்களின் உற்சாகமான உரையாடலைக் கவனமாகக் கேட்டுக் கொண்டு மோதிலால் நேரு சுற்றி வருவார். அவர்கள் கருத்தை ஏற்றோ அல்லது மறுத்தோ பொருத்தமான அபிப்பிராயங்களைக் கூறுவார்.

மோதிலால் நேருவின் வலது பக்கத்தில் சிறப்பு விருந்தினரான அன்னி பெஸன்ட் அம்மையார் அமர்ந்திருக்கிறார். விருந்து முடிவடைந்ததும் கிண்ணங்களில் தண்ணீர் கொண்டு வரப்படுகிறது. அந்தத் தண்ணீரில் ரோஜா இதழ்கள் மிதந்து கொண்டிருக்கின்றன. விருந்தினர்கள் தண்ணீருக்குள் விரல்களை நனைத்துக் கழுவிய பிறகு சிறு துண்டுகளில் கைகளைத் துடைத்துக்கொண்டு இருக்கைகளிலிருந்து எழுகிறார்கள். நூலக அறையில் மதுவகைகள், சுருட்டுகள், தேநீர் முதலியன வைக்கப்பட்டிருக்கின்றன. வட இந்தியாவிலேயே மிகச் சிறந்த தனியார் புத்தகத் தொகுப்பு அங்கே இருக்கிறதென்பது பொதுவான கருத்தாகும். அட்டையில் தங்க எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட கலைக்களஞ்சியங்கள், சட்டத் தொகுப்பு நூல்கள், லண்டன், பாரிஸ், பெர்லின் ஆகிய நகரங்களின் வெளியீடுகள், அராபிக், பாரசீக, உருது, சமஸ்கிருதம், இந்தி ஆகிய மொழிகளில் எழுதப்பட்ட பழைய கையெழுத்துப் பிரதிகள், மிகவும் சமீபத்தில் வெளியிடப்பட்ட ஆங்கில நூல்கள் அலமாரிகளில் இருந்தன. ஐரோப்பிய ஓவியங்களும் உலோகத்தில் செதுக்கப்பட்ட பழங்காலத்து இந்தியப் படங்களும், பளிங்கும் பீங்கானும், வெண்கலமும் வெள்ளியும் வெவ்வேறு உலகங்களின் வெவ்வேறு காலங்களின் கலாச்சாரங்கள் அங்கே ஒன்று கலந்திருப்பதை நினைவூட்டின.

பெஸன்ட்டும் பெர்டினன்ட் புரூக்சும் நூலக அறையில் உட்கார்ந்து தேநீர் அருந்திக்கொண்டிருந்தார்கள். அங்கே தகப்பனாரின் அனுமதியோடு ஜவகர்லாலும் உட்கார்ந்திருந்தார். அவர் தன்னுடைய ஆசிரியரைக் கூர்ந்து கவனித்து ஆராய்ந்து கொண்டிருந்தார். அவர் மென்மையான முகபாவமும் பட்டுப் போன்ற தலை முடியும் லேசான பொட்டுகளைக் கொண்ட சருமமும் உடையவர். அவர் மோதிலால் நேருவிடம் மரியாதை கலந்த முறையில் தன்னம்பிக்கையோடு ''மாபெரும் ஆன்மாவை'', கடவுளை அறிதலை, சிறுவன் ஜவகர்லாலுக்குச் சிறிதும் புரியாத மற்ற பல விஷயங்களைப்

பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். ஜவகர்லாலுக்குத் தன் தகப்பனுரைப் பற்றி நன்ருகத் தெரியும், சிரித்துக் கொண்டிருந்த அவருடைய கண்களில் கரிய நிறம் படர்வதைக் கண்டார். புரூக்ஸ் பேசிக் கொண்டிருந்த விஷயங்கள் அவருக்குப் பிடிக்க வில்லை என்பது அதற்குப் பொருள். ஆனுல் புரூக்ஸ் இதைக் கவனியாமல் மத உற்சாகத்தோடு பேசிக்கொண்டிருந்தார். மோதிலால் பொருத்தமான தருணத்தைத் தேர்ந்தெடுத்து அவருடைய பேச்சில் குறுக்கிட்டார்.

''மிஸ்டர் புரூக்ஸ்! என் மகனிடம் வளமான கற்பனையை வளர்க்க உங்களால் முடியும் என்பதை நான் உணர்கிறேன்... சரி. அது ஒன்றும் தவருனதல்ல. ஆனுல் என் மகனுடைய வாழ்க்கையில் உணர்ச்சிகள் அல்ல, பகுத்தறிவே வழிகாட்டியாக இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அப்பொழுது தான் அவன் யதார்த்தத்தைப் பார்ப்பதைக் கற்பனை தடுக்க முடியாது'' என்ருர்.

உங்கள் விருப்பத்தை எப்பொழுதும் மனதிலிறுத்துவேன் என்று. புரூக்ஸ் குழப்பத்தோடு பதில் சொன்னுர்.

புரூக்சின் ஆளுமையிலுள்ள பலவீனமான அம்சங்களை அன்னி பெஸன்ட் அறிவார். புரூக்ஸ் கற்பனைகள் நிரம்பிய உலகத்தில் வாழ்ந்துகொண்டிருப்பவர் என்பது உண்மையே. ஆனுல் ஒன்று நிச்சயம். புரூக்ஸ் நேர்மையானவர், பொறுப்பானவர், அவர் இனவெறியை வெறுப்பவர், அவர் இந்தியாவையும் அதன் மக்களையும் தீவிரமாக நேசிப்பவர், மிகச் சிறந்த கல்வி அறிவுடையவர், குழந்தைகளை மிகுந்த அன்போடு நேசிப்பவர். அவர் மீது அன்னி பெஸன்ட்டுக்கு முழு நம்பிக்கை இருந்தது, தன்னுடைய சிபாரிசைப் பற்றி முழுத்திருப்தி ஏற்பட்டது.

அன்னி பெஸன்ட் சுவர் நெடுகிலும் நீண்டிருந்த பெரிய புத்தக அலமாரியின் அருகில் சென்று பார்த்தபொழுது பெர்னர்ட் ஷா, சிட்னி வெப் ஆகியோர் எழுதிய நூல்கள் அங்கே இருப்பதைக் கண்டார். அவர்கள் இருவரையும் அம்மையாருக்கு நன்ருகத் தெரியும். திடீரென்று 1886ம் வருடத்திய லண்டனையும் ஷா, ஹென்ரி ஹைன்ட்மான், வில்லியம் மாரிஸ் மற்றும் இதர சோஷலிஸ்டுகளோடு சேர்ந்து அவள் நடத்திய வேலையில்லாதோர் ஆர்ப்பாட்டங்களைப் பற்றியும் நினைவு கூர்ந்தார். ஹைட் பார்க்கில் தொழிலாளர்

கள் மத்தியில் சொற்பொழிவாற்றியதையும் போலீசாரோடு ஏற்பட்ட மோதல்களையும் பற்றி எடுத்துக்கூறினர். அவரும் பெர்னர்ட் ஷாவும் தலைமைதாங்கி நடத்திய ஒரு ஆர்ப்பாட்டத்தின் போது போலீசார் தடியடி நடத்தினர்கள். ஐரிஷ்காரரான பெர்னர்ட் ஷா வீரத்தோடு ஏதாவது செய்வார் என்று எதிர்பார்த்தார். ஆனல் அவரோ இந்த இடத்தை விட்டு நாம் வேகமாகப் போய்விட வேண்டும் என்று பலமான குரலில் கத்தினர். அதைத் தவிர வேறென்றும் அவருக்குத் தோன்றவில்லை. போலீஸ் அடக்குமுறை மக்கள் மத்தியில் அதிகமான ஆத்திரத்தைத் தூண்டியது. டிரஃபால்கர் சதுக்கத்தின் மீது படையெடுப்போம் என்று அன்னி பெஸன்ட் சொன்ன பொழுது ஷாவோ, மற்ற தலைவர்களோ அதை ஆதரிக்கவில்லை. அம்மாதிரியான காரியங்களைச் செய்தால் தெருக்களில் தடையரண்களை ஏற்படுத்திப் போராட வேண்டியிருக்கும், பாரிஸ் கம்யூன் கதி என்ன என்று நமக்கு நன்றாகத் தெரியும், மறுபடியும் அதைச் செய்ய நாங்கள் விரும்பவில்லை என்றார்கள்...

அன்னி பெஸன்ட் இத்தகைய நினைவுகளில் மூழ்கிச் சிறிது நேரம் அமைதியாக இருந்தார். பிறகு மோதிலால் நேருவை உற்றுப் பார்த்தார். அவள் ஏன் அப்படிப் பார்க்கிறளென்பது அவருக்குப் புரியவில்லை போலும். இந்திய தேசிய காங்கிரசின் ஆரம்ப மாநாடுகளில் முன்பே அவர் தன்னுடைய நிலையை விளக்கிக் கூறியிருக்கிறர், அது அவளுக்கு நன்றாகத் தெரியும் என்றாலும் மோதிலாலின் அமைதிகுலையாத்தன்மை அவளுக்கு ஓரளவு வருத்தத்தைக் கொடுத்தது. அவர் மிகவும் நிதானப் போக்குடையவர் என்பதால் சமூக சீர்திருத்தவாதிகள் அல்லது ''நிதானப் போக்குடையவர்கள்'' என்று அழைக்கப்பட்ட தாதாபாய் நவ்ரோஜி, கோபால கிருஷ்ண கோக்கலே ஆகியோரோடு சேர்ந்திருந்தார். குழந்தைத் திருமணம், ஜாதி வெறி, விதவைகள் மறுமணம் செய்து கொள்ளத் தடை ஆகியவை போன்ற மத்திய காலத்தின் எச்சங்களை ஒழிக்கக் கூடிய சீர்திருத்தங்களை அவர் விரும்பினர். கல்வி அமைப்பில் முன்னேற்றத்தையும் மானிட இனக் கட்டுப்பாடுகளை ஒழிப்பதையும் நீதிமன்றங்களில் ஆங்கிலேயர்களோடு. இந்தியர்களும் சமமாக நடத்தப்படுவதையும் அரசாங்க இலாகாக்களில் இந்தியர்களின் பிரதிநிதித்துவத்தை அதிகப்படுத்துவ

தையும் இராணுவத்தில் அதிகாரிகளாகப் பதவி உயர்வுபெற இந்தியர்களுக்கு உரிமை கொடுக்கப்பட வேண்டும் என்பதையும் அவர் ஆதரித்தார் என்பது உண்மையே. ஆனால் அவற்றுக்கும் அப்பால் அவர் போகவில்லை.

திலகரைப் பற்றி அவருடைய அணுகுமுறையைத் தெரிந்து கொள்வதில் அன்னி பெஸன்ட் அக்கறையோடிருந்தார்.

திலகர் ஒரு ஒப்புயர்வற்ற தலைவர் என்ற முறையில் மோதிலால் அவருக்கு அதிகமான மரியாதை அளித்தார். எனினும் திலகரின் ''தீவிரவாதத்தை'' அவர் புரிந்து கொள்ளவில்லை, அதை அங்கீகரிக்கவுமில்லை. திலகரை ஆதரிப்பவர்கள் (''தீவிரவாதிகள்'' என்று சொல்லப்பட்டவர்கள்) நடத்துகின்ற பிரம்மாண்டமான வெகுஜன நடவடிக்கைகளால் நாட்டில் மேலும் அதிகமான குழப்பமும் கலவரமுமே ஏற்படும், அவை காலனியாதிக்க அதிகாரிகளுக்குக் கோபமூட்டி அவசியமற்ற துன்பங்களுக்கு வழிவகுக்கும் என்று அவர் கருதினார்.

மோதிலால் நேரு ஒரு வழக்குரைஞர். இந்தியாவின் அன்றைய அரசு அமைப்பு பல குறைகளைக் கொண்டதே என்று அவர் ஒத்துக் கொண்டாலும் அந்த சமூக அமைப்பை அவர் காத்து நின்றார். சட்டத்தை மீறுவதால் அதில் முன்னேற்றம் ஏற்படாது. அவரும் அன்னி பெஸன்ட்டும் நெடு நேரம் விவாதித்துக் கொண்டிருந்தார்கள்.

கடைசியில் அவர்கள் ஜவகர்லாலை நினைத்துக் கொண்டார்கள். விருந்தினர்கள் அந்தச் சிறுவனிடம் அன்பாகப் பேசினார்கள். தகப்பனார் அவனை அன்போடணைத்து விடை கொடுத்தார். ஜவகர்லால் தாயாரோடு உறங்குவதற்குச் சென்றான்.

அன்றைய நாள் முடிந்தது. அன்று தான் கண்டவற்றால் பரபரப்படைந்த ஜவகர்லால் படுக்கையில் சிறிது நேரம் இங்குமங்கும் புரண்டு கொண்டிருந்தான். பிறகு குழந்தைப் பருவத்துக்கே உரிய சுகமான, புத்துணர்வூட்டும் உறக்கத்தில் மூழ்கினான். சிப்பாய்களின் எழுச்சியைப் பற்றி முபாரக் அலி கூறிய கதைகளும் லண்டனில் வேலையில்லாதோர் நடத்திய ஆர்ப்பாட்டத்தைப் பற்றிய அன்னி பெஸன்ட்டின் வர்ணனையும் இந்தியாவில் சீர்திருத்தங்களின் அவசியத்தைப் பற்றி அவன் தகப்பனார் கூறிய வார்த்தைகளும் அவனுடைய நினைவில் எங்கோ ஒரு மூலையில் தங்கிவிட்டனவா? அந்தச் சிறு

வனின் பயம் நிறைந்த—இன்னும் முதிர்ச்சி அடையாத— உணர்வில் அவனுடைய தகப்பனாரும் அவருடைய நண்பர்களும் எந்த இலட்சியத்துக்காக வாழ்ந்தார்களோ, எந்த இலட்சியத்துக்காக அவனும் வாழ வேண்டுமோ அந்த மிக முக்கியமான விஷயத்தைப் பற்றிக் குழப்பமான யூகத்தின் மங்கிய ஒளி மட்டுமே ஏற்பட்டிருக்க வேண்டும்...

வெடிப்பதற்கு முந்தைய ஒரு வெடிமருந்துக் கிடங்கைப் போல இந்தியா இருந்தது. சுமார் மூன்று கோடி இந்தியர்கள் பசியால் செத்துக் கொண்டிருந்தார்கள், இன்னும் பல கோடியினர் வாழ்க்கைக்கும் மரணத்துக்கும் இடையில் ஊசலாடிக் கொண்டிருந்தார்கள். பொறுமை தீர்ந்துபோன மக்களின் கோபாவேசத்தைக் காட்டிலும் அதிகப் புனிதமானது, நியாயமானது, பயங்கரமானது வேறு எதுவுமே இல்லை. இந்தியா ஒரு பிரம்மாண்டமான மாவீரனாக கம்பீரமாக தோள்களை அகல விரித்துக் கொண்டிருந்தது. மாவீறு படைத்த மக்களின் சித்தத்தை நசுக்கக்கூடிய வேறு எந்தச் சக்தியாவது உண்மையில் இருக்க முடியுமா? அந்நிய ஆட்சியாளர்களுக்கு எதிர்ப்பு பரவிக் கொண்டிருந்தது...

இந்தியாவின் முதல் அகில இந்திய அரசியல் கட்சியான இந்திய தேசிய காங்கிரஸ் 1885ம் வருடத்தில் அமைக்கப்பட்டது. காங்கிரசைக் கீழ்ப்படிதல் நிறைந்த "விண்ணப்பதாரர்களைக்" கொண்ட கட்சியாக மாற்றுவதற்கு, திலகர் குறிப்பிட்டது போல வாதாடுதல், மறுப்புத் தெரிவித்தல், ஒத்துப்போவது என்ற முறையில் அதன் நடவடிக்கையைக் குறைப்பதற்கு லண்டனில் எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டு வந்தன. ஆனால் மக்களுடைய மனங்களில் தேசிய உணர்ச்சி கிளர்ந்தெழுந்தது, உறங்குபவர்கள், திருப்தியில் மூழ்கியவர்கள், சோம்பேறிகளின் தூக்கத்தைக் கலைத்தது, பட்டினியால் வாடிய, எல்லாவற்றையும் பறிகொடுத்த பெருந்திரளான மக்களிடம் மூண்டெழுந்த கோபக்கனலை விசிறிவிட்டது, இந்துக்கள், முஸ்லிம்களின் மத உணர்ச்சிகளைக் கிளறியது... 1897ல் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் பொதுஜனப் பிரமுகர்கள் பழிவாங்கப்படுவதைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பாதுகாப்பு, வாழ்க்கை, சொத்துடைமை என்ற அடிப்படையின் மீதுதான் ஆங்கில ஆட்சி என்ற மாளிகை நிர்மாணிக்கப்பட்டிருந்தது. ஆனால் எந்த நேரத்திலும்

உடைமை பறிக்கப்பட முடியுமென்றால், நீதி விசாரணை இல்லாமல் மக்கள் கைது செய்யப்பட முடியுமென்றால் அதன் கதி என்ன?

மோதிலால் அவசர வேலையாக ஐரோப்பாவுக்குச் சென்றார். ஜவகர்லாலின் தாயார் தன்னுடைய அறைகளை விட்டு வெளியே வருவது மென்மேலும் குறைந்து அபூர்வமாயிற்று. ஜவகர்லால் தாயாரை நோக்கி ஓடுவான். தாயார் எப்பொழுதும் போல மகனை ஆசையோடு தடவிக் கொஞ்சுவாள், ஏதோ ஒரு வகையான வேதனையைச் சகித்துக்கொண்டிருப்பதைப் போல கண்களைக் கீழே தாழ்த்தி முனகுவாள். விரைவில் தனக்கு ஒரு தம்பி அல்லது தங்கை பிறக்கப் போவது அந்தச் சிறுவனுக்குத் தெரியும். அதற்கிடையில் புரூக்சும் அவனும் மட்டுமே நீண்ட உணவருந்தும் மேசைக்கு முன்பு அமர்ந்து தனியே உணவருந்தினார்கள். ஆசிரியர் தன் மகனிடம் ஆங்கிலத்தில் மட்டுமே பேச வேண்டும், எல்லாவற்றிலும் ஐரோப்பிய முறைகளையே பின்பற்ற வேண்டும் என்று மோதிலால் கண்டிப்பாக உத்தரவு போட்டிருந்தார்.

கடைசியில் அவர்கள் எல்லோருமே எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாள் வந்தது. அந்த மாளிகை கலைக்கப்பட்ட தேன்கூட்டைப் போலக் காட்சியளித்தது. மருத்துவர்களும் செவிலிப்பெண்களும் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஜவகர்லால் செய்தியை எதிர்பார்த்த படியே அமைதியின்றி வராந்தாவில் நின்று கொண்டிருந்தான். பரபரப்பும் தாயாரின் உடல்நலத்தைப் பற்றி ஒரு பயமும் தன்னுடைய வாழ்க்கையில் மகிழ்ச்சி நிரம்பிய மாற்றங்கள் ஏற்படப் போகின்றன என்ற ஊகமும் அந்தச் சிறுவனை உள்ளுக்குள் வீரமானவனாக, முதிர்ச்சியடைந்தவனாக மாற்றியிருந்தது.

மருத்துவர் தாயாரின் அறையிலிருந்து வெளியே வந்தார். அவருடைய தங்கப் பட்டை மூக்குக் கண்ணாடி சூரிய ஒளி பட்டுப் பிரகாசித்தது. அவர் ஆழமாகப் பெருமூச்சு விட்டார், சிறிது நேரம் மௌனமாக இருந்தார், பிறகு உனக்குத் தங்கை பிறந்திருக்கிறாள் என்று ஜவகர்லாலிடம் கூறிப் பாராட்டினார். தம்பி பிறந்திருந்தால் சொத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டியிருக்கும், ஆகவே தங்கை பிறந்ததைப்

பற்றி மகிழ்ச்சிதானே என்று கேட்டார். இவ்வளவு அற்பத் தனமான எண்ணங்கள் தன்னிடம் இருக்குமென்று நினைத்த அந்த செம்பட்டை முடியையுடைய மருத்துவர் மீது ஜவகர் லாலுக்குக் கோபமேற்பட்டு முகம் சிவப்படைந்தது. ஆனால் அவன் உள்ளத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியை எதுவுமே குறைக்க முடியாது. ஒரு தங்கை பிறந்து விட்டாள்! அவனுக்கு ஏற்பட்ட ஆனந்த பரவசத்தில் அவன் வராந்தாவிலேயே குதிக்க ஆரம்பித்தான்.

தங்கைக்கு ஸ்வரூப் என்று பெயரிட்டார்கள். பிரசவத் துக்குப் பிறகு அவன் தாயார் உடல்நலம் அபிவிருத்திய டைந்து முன்னைக் காட்டிலும் அழகாகக் கூடத் தோன்றினாள். விரைவில் மோதிலால் நேரு ஐரோப்பாவிலிருந்து திரும்பினார்.

ஜவகர்லால் தன்னுடைய பகற்பொழுதுகள் எல்லா வற்றையுமே புரூக்சோடு கழித்தான். அவர்கள் ஒரு சிறு விஞ்ஞானப் பட்டறையை ஏற்படுத்தியிருந்தார்கள். அவன் தகப் பனார் முதல்தரமான உபகரணங்களை வாங்கிக்கொடுத்தார் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அந்த ஆய்வுச்சாலையில் ஆசிரியரும் மாணவனும் இரசாயனச் சோதனைகளைச் செய் வதிலும் பொருள்களின் இரகசியங்களை அறிவதிலும் பல மணி நேரங்களைச் செலவிடுவார்கள். பிறகு தூரதரிசினியின் மூலம் நட்சத்திரங்களின் மர்ம உலகத்தை ஆராய்வதற்காக எப்பொழுது இரவு வரும் என்று பொறுமையில்லாமல் காத்துக்கொண்டிருப்பார்கள். ஜவகர்லால் ஆங்கிலத்தில் நன்கு பேசுவதற்கும் படிப்பதற்கும் முன்பே கற்றுக் கொண்டிருந் தான். அந்நிய மொழி அறிவு உலக இலக்கியச் செல்வங்களை அவனுக்கு முன்பாகத் திறந்து வைத்தது. அந்தச் சிறுவன் புத்தகங்களின் வழியாகப் பல இடங்களுக்கு யாத்திரை சென்றான். சிறுவனை ஆலிவர் டுவிஸ்ட் விதியின் கொடு மைகளைத் தாங்கி வளர்ந்து கொண்டிருந்த லண்டன் சேரி களுக்கு, துப்பறியும் நிபுணரான ஷெர்லக் ஹோல்ம்சின் சாமர்த்தியத்தைக் கண்டு வெகுளியான டாக்டர் வாட்சன் எப்பொழுதுமே வியந்து கொண்டிருக்கும் பேக்கர் தெருவுக்கு, இப்படிப்பல இடங்களுக்குச் சென்றான். ஜூல் வெர்னின் அச்சமற்ற கதாநாயகர்களோடு கடலில் சென்றான். தோம் ஸோயர் மற்றும் ஹக்கிள்பெரி பின்னின் குறும்புச் சேட்டை களைப் படிக்கும் பொழுது தாங்க முடியாத சிரிப்பினால்

கண்ணீர் வடிப்பான். ஜெரோம் கே. ஜெரோமின் அதிர்ஷ்ட மில்லாத கதாநாயகர்களைப் பற்றி விமர்சிப்பான்; டோன் க்விக்சோட்டையும் அவருடைய நம்பிக்கையான உதவியாளனை ஸாஞ்சோ பான்ஸாவையும் பற்றி—இவர்களது உருவங்கள் குஸ்தவ் டோரேயின் மகத்தான படங்களால் விளக்கப் பட்டுள்ளன—உருக்கமாக நினைப்பான். வால்டர் ஸ்காட்டின் நாவல்களில் சித்தரிக்கப்படும் மத்திய காலத்தின் வீரமும் பெருந்தன்மையும் கொண்ட பாத்திரங்களும் எச். ஜி. வெல் சின் கற்பனையான படைப்புகளும் அவனுக்கு ஒரே மாதிரி யான மகிழ்ச்சியைக் கொடுத்தன. அவனுக்கு விலங்குகளிடம் அதிகமான பிரியமிருந்தது. இந்தியாவின் காடுகளில் வாழ்க் கையைப் பற்றி ருட்யார்டு கிப்லிங் எழுதிய **காடு** என்ற சிறுகதைத் தொகுப்பைப் படித்தான். இலக்கிய மேதைகளின் எழுத்தாற்றல், அழகு, துல்லியம் ஆகியவற்றை அவன் தன்னை யறியாமலே பற்றிக் கொண்டான்.

அவன் தன்னுடைய ஆசிரியர் புரூக்சை ஒரு தலைசிறந்த மனிதராகக் கருதினான். தன் ஆசிரியரிடம் ஏதோ ஒரு ரகசிய ஆற்றல் இருக்கிறது, வாழ்க்கையின் அர்த்தத்தைப் பற்றி ஏதோ ஒரு ரகசியம் அவருக்குத் தெரியும் என்று நினைத்தான். புரூக்சையும் அவனுடைய தகப்பனரையும் வேறு படுத்திக் காட்டுவது இது என்று நினைத்தான். குறிக்கோள் ஏதுமின்றி மேகங்களுக்கு நடுவே வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும் (மோதிலால் இப்படி அடிக்கடி வர்ணிப்பார்) இந்த உலகத்தின் இன்பங்களும் தொழிலும் சிறப்பானவை என்று அவர் கருதினர். அந்த ஊரைச் சேர்ந்த பிரம்ம ஞானிகள் வாரத்துக்கு ஒரு முறை புரூக்சின் அறையில் கூடுவது வழக்கம். அங்கே அவர்கள் ஆன்மாக்கள் கூடு விட்டுக் கூடு பாய்தல், ஆன்மாவுக்குத் தொடக்கம் இல்லை, முடிவும் இல்லை என்ற பிரச்சினைகளைப் பற்றி நீண்ட நேரத்துக்கு விவாதிப்பார்கள். ஆவியுருவைப் பற்றி, இயற்கை கடந்த உடலைப் பற்றிப் பேசுவார்கள், பிளாவட்ஸ்கி அம்மையார் எழுதிய புத்தகங்களை ஆராய்வார்கள். புரூக்ஸ் எப்பொழு துமே அமைதியான தோற்றம் உடையவர், அதிகமாகப் பேசாதவர். ஆனல் இந்தக் கூட்டங்களின்போது அவர் முற்றி லும் மாறிவிடுவார். உபநிஷதங்கள், **பகவத்கீதை** முதலிய நூல்களை அவர் நன்கு கற்றவராதலால் உணர்ச்சியோடு,

பரவசத்தோடு அவற்றின் பொருளை விளக்குவார். அந்த நேரத்தில் அவருடைய கண்கள் ஈரமடைந்து கருமையடையும். சில சமயங்களில் அவர் தன்னை மறந்த நிலையை அடைவார், ஆனால் அந்த நிலையிலும் கூட அவர் தன்னுடைய கருத்துக்களை இலக்கிய நயத்தோடு எடுத்துக் கூறிக் கொண்டிருப்பார். அவர் இந்து மதத்திலிருந்து புத்த மதத்துக்குப் போவார், பிறகு கிறிஸ்தவ சமயத்தையும் பண்டைக்கால கிரேக்கத் தத்துவஞானிகளின் போதனைகளையும் விமர்சிப்பார். கடைசியில் இந்தச் சுற்றோட்டத்தை நுட்பமான பிரம்மஞானத்தின் முடிவுகளோடு பொருத்தி முடிப்பார். அவர் பேசுவதைக் கேட்பது சுவாரசியமானதே. அதில் பல விஷயங்கள் ஜவகர்லாலுக்குப் புரியாத போதிலும் அந்தப் புரியாத விஷயங்களில்தான் ''பிரபஞ்சத்தின் ரகசியங்களுக்குத் திறவுகோல்'' மறைந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

அன்னி பெஸன்ட் அம்மையார் அலகபாத் நகரத்துக்கு அடிக்கடி வருவார். அப்படி வந்த ஒரு சமயத்தில் பிரம்மஞானத்தைப் பற்றிய தலைப்புகளில் பேசினார். அன்னி பெஸன்ட்டின் பேச்சுத்திறன் ஜவகர்லால் மீது அதிகமான தாக்கத்தை ஏற்படுத்தியது. அவன் ''தன்னை மறந்தவனாக, கனவிலே நடப்பவனைப் போல வீட்டுக்குத் திரும்புவான்''. அவன் பிரம்மஞானத்தின் ''இரகசியங்களைத்'' தெரிந்து கொள்வதற்காக அந்த சங்கத்தில் சேர விரும்பினான். தன் தகப்பனாரின் அனுமதியைப் பெறுவதற்காக அவருடைய தனி அறைக்குள் நுழைந்தான். அப்பொழுது அவர் நீதிமன்றத்தில் பேசுவதற்குத் தன்னுடைய வாதத்தைத் தயாரித்துக் கொண்டிருந்தார். உள்ளே நுழைந்ததும் ஜவகர்லாலுக்குச் சங்கடமாக இருந்தது. பிரம்மஞான சபைக் கூட்டங்களுக்குப் போவதற்குத் தனக்கு அனுமதி வேண்டும் என்று கேட்டான். மோதிலால் முகம் சுளித்தார். ஆனால் ஒரு நிமிடத்துக்குள் அவருடைய கடுகடுப்பு மறைந்து சிரிக்கத் தொடங்கினார் (அவர் சிரித்ததுதான் ஜவகர்லாலுக்கு வருத்தத்தைக் கொடுத்தது). அந்த நிகழ்ச்சிக்குச் சிறிது கூட மதிப்பளிக்காதவரைப் போல அலட்சியமாக அனுமதி கொடுத்தார். பிறகு அறையில் முன்னும்பின்னும் நடந்தார், சுருட்டைப் பற்ற வைத்தார், அவருடைய நாசித்துவாரங்கள் விரிந்தன, உதட்டை மெதுவாகக் கடித்தார். புரூக்ஸ் தன் மகன் மீது ஏற்படுத்தியிருக்

கும் தாக்கத்தை அவர் விரும்பவில்லை என்பதில் ஐயமில்லை. கடைசியில் ஜவகர்லாலின் தோள்மீது அவர் தன்னுடைய கனமான கையை வைத்தார். லண்டனுக்குப் பக்கத்திலுள்ள ஒரு பள்ளிக்கூடத்தில் உன்னைச் சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன் என்று சொன்னார்.

ஆனால் அதன் பிறகு மோதிலால் பயப்பட்ட மாதிரியே சம்பவங்கள் அவர் விருப்பத்துக்கு மாறான வகையில் வளர்ச்சி அடையத் தொடங்கின. பிரம்மஞானத்தால் ஈர்க்கப்பட்ட ஜவகர்லாலிடம் வயதுக்கு மீறிய சிந்தனை மற்றும் மந்தத்தின் அறிகுறிகள் தோன்றின. அவன் மிகவும் பக்தியுடையவனாக, மற்றவர்களோடு நெருங்கிப் பழக விரும்பாதவனாக மாறிக் கொண்டிருந்தான்.

அவன் தகப்பனார் இதைப் பார்த்துக் கவலைப்பட்டார். புரூக்சைப் பற்றித் தன்னுடைய அதிருப்தியை மென்மேலும் அதிகமாக வெளிப்படுத்தினார்.

ஆனால் புரூக்சிடமும் ஏதோ தவறாகிவிட்டதைப் போன்ற மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அவர் அவநம்பிக்கை உடையவராக, எதற்கெடுத்தாலும் சந்தேகப்படுபவராக மாறினார். தன்னுடைய ஆன்மிக குருவான அன்னி பெஸன்ட்டிடம் அடிக்கடி தகராறு செய்து கொண்டார், கருத்து வேறுபாடுகள் முற்றின. பிரம்மஞானத்தை ''பிளாவட்ஸ்கியிசம்'' என்று வர்ணிக்கின்ற கிண்டலான கட்டுரைகள் பத்திரிகைகளில் வெளிவந்தன. இவற்றைப் படித்த பொழுது புரூக்ஸ் இன்னும் அதிகமாகத் தளர்ச்சி அடைந்தார். பிளாவட்ஸ்கியின் ''தெய்விக நிகழ்வுகளைப்'' பற்றி திடுக்கிடக் கூடிய உண்மைகள் வெளிவரத் தொடங்கின. புரூக்சுக்கு இவற்றைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவரது நம்பிக்கை இப்போது இடிந்து வீழ்ந்தது, எள்ளி நகையாடப்பட்டது. அவர் தனக்கென்று நிர்மாணித்த உறுதியற்ற உலகம் இடிந்து நொறுங்கி விட்டது.

ஒரு நாள் புரூக்சின் உடல் ஆற்றில் மிதந்தது. அவர் மரணம் எல்லோருக்கும் புதிராக இருந்தது. தன்னுடைய ஆசிரியரான புரூக்சின் திடீர் மரணம் ஜவகர்லாலைத் திடுக்கிடச் செய்தது.

புரூக்சின் மரணத்தால் அதிர்ச்சியடைந்த ஜவகர்லால் பிரம்மஞானத்தில் எல்லாவிதமான அக்கறையையும் சீக்கிரத்

திலேயே இழந்தான். பிற்காலத்தில் ஜவகர்லால் நேரு பின் வருமாறு எழுதினர்: ''அதற்குப் பிறகு பிரம்மஞானி கள் என்னுடைய மதிப்பீட்டில் தாழ்ந்து போய் விட்டார் கள் என்று கருதுகிறேன். தேர்ந்தெடுக்கப்பட்ட புனிதர் கள் என்பதற்கு மாருக அவர்கள் மிகவும் சாதாரணமான நபர்களாகத் தோன்றினர்கள். அவர்கள் ஆபத்துக்களைத் துணிந்து ஏற்றுக் கொள்வதைக் காட்டிலும் பாதுகாப்பான வாழ்க்கையை சிறப்பாக விரும்பினர்கள், தியாகிகளாவதைக் காட்டிலும் சுலபமான வேலையைத்தான் அதிகமாக விரும் பினர்கள்.'' எனினும் அவர் தன்னுடைய வாழ்க்கை முழு வதும் புரூக்சைப் பற்றி அன்போடு, நன்றியோடு நினைத்துவந் தார். அன்னி பெஸன்ட் அம்மையாரைப் பற்றியும் ஆழமான மரியாதை வைத்திருந்தார்.

1905 மே மாதத்தில் நேரு குடும்பத்தினர் அனைவருமே—தகப்பனர், தாயார், சிறுமி ஸ்வரூப் உள்பட—பிரிட்டனுக்குப் புறப்பட்டார்கள். பெற்றோர்களின் அன்புக்குரிய மகனும் எதிர்கால நம்பிக்கையுமான ஜவகர்லால் வீட்டிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பால் வேற்று நாட்டில் பல வருட காலம் படிக்கப் போவதால் அவனேடு அவர்களும் சென்றார்கள்.

## அத்தியாயம் இரண்டு

*1905 மே 13ம் நாள். கடல் வழியில் இந்தியாவின் நுழைவாயிலான பம்பாய் நகரம்.*

*நகரத்தைத் தழுவிக்கொண்டிருக்கும் அடர்த்தியான நீலக் கடல் மற்றும் வானத்தில், துலக்கமான காற்றில் கடலோரச் சாலையில் உள்ள மாளிகைகளையும் கலங்கரை விளக்க ஸ்தூபியையும் துறைமுகத்தில் நின்று கொண்டிருக்கும் கப்பல்களையும் உல்லாசப் படகுகளின் பாய்மரங்களையும் பார்சி இனத்தவருடைய மௌன ஸ்தூபியையும் கண்ணைக் குருடாக்கும் ஒளிவெள்ளம் பிரகாசமாகக் காட்டுகிறது. வசந்தம் எல்லாவற்றையும் அடியோடு மாற்றி புதுப்பித்திருந்தது.*

*பட்டுப் போன மரங்களின் கிளைகள் கப்பல் கம்பிகளைப் போல வளைந்திருக்கின்றன. அவற்றில் கறுப்புக் கழுகுகள் தமது மொட்டையான கழுத்துக்களோடு தொங்கிக்கொண்டிருக்கின்றன. எங்கும் தோன்றும் வர்ணஜாலத்தின் ஆனந்தமான காட்சியில் இது அருவருப்பை ஏற்படுத்துகிறது. பாரசீகத்திலிருந்து வந்திருக்கும் பார்சி இனத்தவர் தம்முடைய மதப் பழக்கத்தின் படி மௌன ஸ்தூபியில் பிரேதத்தைப் போடுவதற்காக அந்தப் பறவை வெட்டியான்கள் காத்துக் கொண்டிருக்கின்றன. பிரேதத்தைப் போட்டதும் கழுகுகள் வழக்கம்போல தம்முடைய விருந்துக்காக மரங்களை விட்டுப் பறந்து செல்கின்றன.*

*மாசிடோனியா என்ற பெயர் கொண்ட அந்தக் கப்பல் வசதிமிக்கது. கடற்கரையில் இருப்பதைப் போன்ற வெப்பம் கப்பலில் இல்லை. கடலிலிருந்து குளிர்ச்சி பரவிக் கொண்டிருக்கிறது. உப்புக் கலந்த காற்று சுதந்திரமாக மார்பு மேல் அடிக்கிறது, சாதாரணமான, அன்றாட உணர்ச்சிகளைக் கூர்மைப்படுத்துகிறது. அந்தச் சிறுவன் தன்னுடைய வாழ்க்கை*

யில் ஏற்படப் போகும் மாற்றங்களைப் பற்றி ஆனந்தமும் தெரியாததைப் பற்றிக் கவலையும் அதிகமாக அடைந்திருக்கிறான். அவன் தனக்குள் இருக்கும் பலத்தையும் துணிவையும் அறிந்திருந்தாலும் தன் மீதே அவனுக்கு சந்தேகம் ஏற்படுகிறது, பயமடைகிறான். இரண்டு விதமான உணர்ச்சிகளும் ஒன்று சேர்கின்றன, ஒன்றையொன்று வெல்கின்றன.

பளபளப்பான பம்பாய் நகரம், கம்பீரமான கடல், வர்ண ஜாலங்கள், புதுவகையான நறுமணங்கள், நங்கூரச் சங்கிலிகளின் சத்தம், கப்பல் தலைவரின் உரத்த ஆணைகள், மாலுமிகளின் தாளலயமான இயக்கங்கள், கப்பல் சங்கின் ஒலம், கடற்பறவைகளின் வெறிக் கூச்சல்—இவை எல்லாமே ஜவகர்லாலின் மனதில் அவனுடைய சுதந்திரமான வாழ்க்கையின் தொடக்கத்தோடு இணைந்தவையாகப் பதிந்துவிடும்.

கடற்கரை பின்னால் போய்க்கொண்டிருக்கிறது, சரியாகப் பார்க்க முடியாத துண்டு நிலமாக மாறிக் கொண்டிருக்கிறது, பகல்வெளிச்சத்தின் கடைசிக் கீற்றில் அது முற்றிலும் மறைந்து கொண்டிருக்கிறது. வெப்பமும் வெளிச்சமும் மறைந்து தெற்கின் குறுகிய அந்தி நேரம் வருகிறது. அங்கே வெகுதூரத்துக்கு அப்பால், பின்னால் விடப்பட்ட பூமியில் வானம் நடுங்கிக் கொண்டிருக்கிறது, இடி இல்லாமல் மின்னல் பிரகாசிக்கிறது. ஆம், இடியோசை இனி கப்பலுக்கு எட்டாது.

கடற்பயணம் இரு வாரங்கள் நீடித்தது. வழியில் **மாசிடோனியா** ஏடென், போர்ட் செயிட் ஆகிய இடங்களில் நின்றது. சூயஸ்கால்வாய் வழியாக மத்தியதரைக் கடலில் நுழைந்து மால்டா மற்றும் ஜிப்ரால்டரில் தங்கியது. மே 31ம் தேதியன்று டோவருக்குள் நுழைந்தது. அங்கே குளிர்காற்று பலமாக வீசிக்கொண்டிருந்தது, மழை பெய்து கொண்டிருந்தது. மேகங்கள் மாதாகோவில் ஸ்தூபிகளையும் தொழிற்சாலைகளின் புகைபோக்கிகளையும் தொட்டுக் கொண்டு அந்த நகரத்தின் மேல் தாழ்வாக மிதந்து கொண்டிருந்தன.

மோதிலால் நேருவின் குடும்பத்தினர் லண்டனிலேயே மிகவும் சிறந்த ஹோட்டல் ஒன்றில் தங்கினார்கள். பிரபுக்கள் சபையின் உறுப்பினர்கள் தங்களுடைய பழங்காலப் பண்ணைகளிலிருந்து நாடாளுமன்றக் கூட்டங்களில் கலந்து கொள்வதற்காக லண்டனுக்கு வரும் பொழுது அந்த ஹோட்டலில்தான் தங்குவார்கள்.

ஹாரோவில் ஜவகர்லாலின் படிப்பு ஆரம்பமாவதற்கு இன்னும் அதிகமான காலம்—சுமார் மூன்று மாதங்கள்—இருந்தது. குடும்பத்தினர் எல்லோரும் ஹைட் பார்குக்கு நடந்து சென்றூர்கள், சந்தடி நிறைந்த தெருக்களிலும் சதுக்கங்களிலும் உலாவினூர்கள், அவர்கள் பரபரப்பின்றி லண்டன் வாழ்க்கையை அனுபவித்தார்கள். மோதிலால் எப்பொழுதும் சுறுசுறுப்பானவர், எனவே அவருக்கு இங்கும் அதிகமான வேலே இருந்ததென்பது உண்மையே. அவர் வழக்குரைஞர்களின் அலுவலகங்களுக்குச் சென்றூர், வர்த்தகக் கம்பெனிகளில் தமக்குத் தேவையான பொருள்களே அனுப்புவதற்கு உத்தரவு கொடுத்தார்; தன் மனேவியின் மருத்துவ சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தது மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமானதாகும். சொரூபராணியின் உடல்நலத்தைப் பற்றி அவருக்குக் கவலே ஏற்பட்டிருந்தது. அதனூல்தான் அந்த ஐரோப்பியப் பயணத்தில் சொரூபராணியும் வர வேண்டும் என்று அவர் வற்புறுத்திக் கூட்டிக் கொண்டு வந்திருந்தார். ஐரோப்பிய மருத்துவ நிபுணர்களிடம் அவர் அதிகமான நம்பிக்கை வைத்திருந்தார்.

இதற்கிடையில் ஜவகர்லால் பிரிட்டனேப் பற்றி மென்மேலும் நன்ருகத் தெரிந்து கொண்டான். இனிமேல் சில வருடங்களுக்கு அவன் அங்கே தனியாக இருக்க வேண்டும். அந்த நகரத்தின் சாலேகளில் அவற்றின் காலம் முடிந்துவிட்டபோதிலும் குதிரைகள் பூட்டப்பட்ட பெரிய வண்டிகள் ஓடிக் கொண்டிருந்தன. அவற்ருேடு சாரட் வண்டிகளின் உருவ அமைப்பை இன்னும் கைவிடாத மோட்டார் வண்டிகளும் ஓடிக் கொண்டிருந்தன.

லண்டன் செய்தித்தாள்களில் இராணுவ விவகாரங்களேப் பற்றிய அறிக்கைகளே நிறைந்திருந்தன. ஜெர்மனிக்கும் பிரிட்டனுக்குமிடையே அரசியல் போட்டி அதிகமான சிக்கலே ஏற்படுத்தியிருந்தது. வேகமாக அதிகரிக்கும் ஜனத் தொகையைக் கொண்ட உலகத்துக்கு யுத்தம் சாராம்சத்தில் நன்மையானதே என்று கூறிய மால்தசை மேல்குடி மக்கள் போற்றினூர்கள்.

எடுவார்டு மன்னர்களின் காலத்திய பிரிட்டன், வர்த்தகம் மற்றும் தொழில் துறையில் முடிசூட்டப்படாத அரசர்களேக் கொண்ட நாடு, வங்கி முதலாளிகளாக மாறிவிட்ட

பிரபுக்களைக் கொண்ட நாடு கவலையில்லாத வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தது. காலனியாதிக்கப் பேரரசு என்ற காடிச் சத்தில் பொங்கிய மாவைப் போல பிரிட்டனின் செல்வம் வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. தன்னுடைய தொழில்துறை வளத்தையும் கடல்வலிமையையும் பற்றி அது அகந்தையடைந்து அண்டை நாடுகளுக்கு எச்சரிக்கை செய்வதைப் போல பீரங்கிகள் பொருத்தப்பட்ட புதிய கப்பல்களை, மென்மேலும் புதிய கப்பல்களைத் தயாரித்துக் கொண்டிருந்தது...

பிரிட்டனின் உயர்குடிச் செல்வந்தர்களின் குழந்தைகள் கல்வி கற்பதற்காக ஹாரோவில் தனியார் பள்ளிக்கூடம் 1572ல் நிறுவப்பட்டது. இது லண்டனுக்கு வட மேற்குத் திசையில் சில மைல் தூரத்தில் அமைந்திருக்கிறது. இப்பள்ளியோடு ஒரே ஒரு பள்ளியைத்தான் உண்மையில் ஒப்பிட்டுக் கூற முடியும். அது ஈட்டனிலுள்ள அதே மாதிரியான தனியார் பள்ளிக்கூடம் தான். ஈட்டன் பள்ளியின் மாணவர்கள் பிற்காலத்தில் இராணுவத் தலைவர்களாகப் பிரபலமடைந்திருக்கின்றனர். வாட்டர்லோ சண்டை முதலில் ஈட்டன் விளையாட்டு மைதானத்தில் வெற்றிகொள்ளப்பட்ட தென்று சொல்லப்படுவதுண்டு. ஹாரோ பள்ளி ஆங்கிலப் பேரரசுக்குப் பல பிரதம மந்திரிகளைக் கொடுத்திருக்கிறது—பிட், பால்மெர்ஸ்டன், பால்ட்வின், வின்ஸ்டன் சர்ச்சில் முதலியோர் அந்தப் பள்ளியில் படித்த மாணவர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமரான ஜவகர்லால் நேருவும் ஹாரோவில் படித்தவர் என்பது வரலாற்றின் விசித்திரமே!

ஹாரோ பள்ளிக்கூடம் குன்றுகள் நிறைந்த பிரதேசத்தில் அமைந்திருக்கிறது. பச்சை நிறக் கடலுக்கு நடுவே அதன் அலைகளில் புனித மேரியின் மாதாகோவில் (பள்ளிக்கூட வட்டாரத்துக்கு நடுவில் இருப்பது) மிதந்து கொண்டிருப்பது போலத் தோன்றும். இங்கே ஜவகர்லால் குடியேறினான்.

மோதிலால் நேரு சில அலுவல்களுக்காகப் பாரிசுக்குப் போக வேண்டியிருந்தது. கர்ப்பவதியான சொரூபராணியை மறுபடியும் மருத்துவர்களிடம் காட்டுவதற்காக அங்கே கூட்டிக் கொண்டு போக விரும்பினார்.

பிரிட்டனிலிருந்து புறப்படுவதற்கு முன்பு மோதிலால்

ஹாரோவில் தன் மகனுடைய வாழ்க்கை மற்றும் படிப்பு சம்பந்தமான எல்லா விஷயங்களேயும் உரியவர்களோடு நன்கு பேசி முடிவு செய்தார். இந்த கவனம் அவருக்கே உரிய சிறப்பான அம்சமாகும். ஹாரோ பள்ளி சிறப்பான தகுதி களேக் கொண்ட சிலருக்காக மட்டுமே ஏற்பட்ட கல்வி நிலேயம். அங்கே ஜவகர்லாலேச் சேர்ப்பதற்கு ஏராளமான பணச் செலவு ஏற்பட்டது. ஆனல் மோதிலால் அதைப் பொருட்படுத்தவில்லே. அந்தக் கல்விக்கு அவ்வளவு செலவிடு வது ஒரு விதத்தில் பொருத்தம் தான் என்று அவர் கரு தினர்.

ஹாரோ பள்ளியின் தலேமை ஆசிரியரான ஜோசஃப் வுட்டையும் தன் மகனுக்குப் பொறுப்பாசிரியரான மதகுரு எட்கார் ஸ்டோக்டனேயும் மோதிலால் சந்தித்து விடை பெற்ருர். பிறகு தன் மனேவி, மகளோடு பாரிசுக்குப் புறப் பட்டார். ஆனல் இந்தியாவுக்குத் திரும்புவதற்கு முன்பு தன் மகன் வசதியாக இருக்கிருனு, எல்லாம் முறையாக நடைபெறுகின்றனவா என்று தெரிந்து கொள்வதற்காக அவர் மறுபடியும் பிரிட்டனுக்கு வந்தார்.

பிரான்சிலிருக்கும் பொழுது தன் மகனுக்கு எழுதிய முதல் கடிதத்தில் மோதிலால் பின்வருமாறு எழுதினர்: ''இந்த உலகத்திலும் இன்னும் வரப் போகின்ற மற்ற உலகங்களிலும் எங்களுடைய மிகச் சிறந்த பொக்கிஷமான உன்னே விட்டுப் பிரிந்து செல்கிருேம்... உனக்கான செலவு கள் அவ்வளவு முக்கியமான விஷயமல்ல. ஏனென்ருல் என்னு டைய ஒரு வருட வருமானத்தைக் கொண்டே நான் அதைச் செய்ய முடியும்... உன்னே ஒரு உண்மையான மனிதனுக ஆக்குவதே முக்கியம். நீ அப்படி வளர்வாய் என்பதில் ஐயமில்லே. உன்னே எங்களோடு வைத்துக் கொண்டு குறை வான கல்வித் தகுதியைக் கொடுத்து அல்லது அது கூட இல்லாமற் செய்து விட்டுத் திரண்ட செல்வத்தை உனக்கு விட்டுப் போனல் அது தீவிரமான சுயநலமே, அது பாவச் செயல் என்று கூட நான் சொல்வேன்... உன் மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறேன் என்பதை உன்னே விட்டுப் பிரிகின்ற இந்த நேரத்தில்தான் உணர்கிறேன்...''

''அன்புள்ள அப்பா அவர்களுக்கு, உங்கள் அருகே இருக்க வேண்டும் என்று மிகவும் விரும்புகிறேன்! நாட்கள் வேகமாகக்

கழிந்து நான் உங்களை மறுபடியும் பார்க்கும் அந்த மகிழ்ச்சி நிரம்பிய நாள் உடனே வராதா என்று துடிக்கிறேன்'' என்று ஜவகர்லால் பதில் எழுதினன்.

ஒரு பெரிய அறையில் நான் தாங்கியிருக்கிறேன், அதிலிருக்கும் பழைய கணப்பு அழகாக இருக்கிறது என்று ஜவகர்லால் தெரிவித்தான். இலையுதிர் பருவத்தின் ஈரம் நிறைந்த நாட்களில் அவன் கணப்பில் நெருப்பு மூட்டியதும் அந்த அறை வெப்பமடைந்து வசதியாக மாறும். விளக்கோடு கூடிய மேசையின் மீது ஜவகர்லால் தன் தகப்பனுர், தாயார் மற்றும் தங்கை நானியின் புகைப்படங்களை வைத்தான். அறைச் சுவர்களில் சில படங்கள் தொங்கின. ஒரு மரக் கட்டில், ஒரு பீரோ. அந்த அறையில் இவையே இருந்தன. ஜவகர்லால் தனிமையை விரும்பினன். அவ்வப்பொழுது ஆனந்த பவனத்தைப் பற்றிய இனிய நினைவுகளுக்குத் திரும்புவதைத் தடுப்பதற்கு அங்கே யாரும் இல்லை என்பது அவனுக்கு மகிழ்ச்சியே.

அலகபாத்திலிருந்து மோதிலால் எழுதினர். ''நாங்கள் வந்து சேர்ந்துவிட்டோம். ஆனல் என்ன காரணமோ ஆனந்த பவனத்தில் அவ்வளவு ஆனந்தம் இருப்பதாகத் தெரியவில்லை...''

விரைவிலேயே வந்த கடிதம் ஜவகர்லாலுக்குத் தம்பி பிறந்திருக்கும் மகிழ்ச்சியான செய்தியைத் தெரிவித்தது. அவன் உடனே பதில் எழுதினன்: ''அன்புள்ள அப்பா அவர்களுக்கு, நம் குடும்பத்தில் ஒரு புதிய உறுப்பினர் வந்திருக்கும் மகிழ்ச்சி நிறைந்த செய்தியைத் தாங்கிய உங்கள் கடிதம் கிடைத்தது. இன்னும் ஒரு மாதம் வரை இந்தச் செய்தியை நான் எதிர்பார்க்கவில்லை. எனவே இது எனக்கு ஆச்சரியமே. என்னுடைய பிறந்த தினத்தன்று தம்பி பிறந்திருப்பது ஆச்சரியமான பொருத்தம், அல்லது அதைக் காட்டிலும் முக்கியத்துவமுடையதாகக் கூட இருக்கலாம்...''

ஆனல் ஜவகர்லால் இந்தக் கடிதத்தை எழுதிக் கொண்டிருந்த நேரத்தில் அவனுடைய தம்பி உயிரோடிருக்கவில்லை. அந்தக் குழந்தை ஒரு மாதம் கூட உயிர் வாழவில்லை.

குழந்தையின் மரணம் மோதிலாலுக்கு வேதனையைக் கொடுத்தது. அதற்குப் பிறகு அவர் தன்னுடைய ஒரே மகனை மேலும் அதிகமாக நேசித்தார்; வீட்டில் நடக்கும்

எல்லா விஷயங்களையும் விரிவாக வர்ணித்து வாரந்தோறும் கடிதம் எழுதினர். ஜவகர்லாலின் தாயாரும் இந்தியில் அவனுக்குக் கடிதம் எழுதுவதுண்டு. தங்கை நானி கூட கடிதம் அனுப்புவதுண்டு.

வகுப்புகள் முடிந்தபிறகு ஜவகர்லால் அறைக்குத் திரும்புவான். அங்கே ஆனந்த பவனத்து வாழ்க்கையையும் அவன் மிகவும் நேசித்தவர்களின் முகங்களையும் கற்பனையில் காண்பான். அவர்களுடைய கடிதங்களுக்கு விரிவான பதில் எழுதுவான், ஒவ்வொரு சொல்லையும் நன்ருகச் சிந்தித்து எழுதுவான். இரவில் நெடுநேரம் வரை உட்கார்ந்து எழுதுவான். தன்னுடைய எண்ணங்களை முழுமையாகவும் தத்ரூபமாகவும் காகிதங்களில் வடிப்பதற்குரிய திறமை தன்னையறியாமலே ஜவகர்லாலிடம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே இலக்கியத்திலும் கவிதையிலும் ஈடுபாடு கொண்டிருந்தான். இப்பொழுது வளரும் பருவத்தில் வரலாறு, தத்துவஞானம், குறிப்பாக அரசியல் ஆகியவற்றில் அக்கறை எடுத்துக் கொண்டான். இராஜியவாதிகளின் உணர்ச்சிகரமான சொற்பொழிவுகளிலும் தெளிவற்ற அறிவிப்புகளிலும் மறைந்திருப்பதை, அரசியலின் சாராம்சத்தைக் கண்டு பிடிக்க விரும்பினன். இந்திய செய்தித்தாள்களைத் தனக்குத் தவருமல் அனுப்பிவைக்குமாறு தகப்பனுருக்குக் கடிதம் எழுதினன். பிரிட்டனின் செய்தித்தாள்களில் இந்தியாவைப் பற்றிய செய்திகள் குறைவாகவே வெளியிடப்பட்டன. அரச குடும்பத்தினர் விருந்து சாப்பிட்டதைக் காட்டிலும் குறைவான முக்கியத்துவத்தோடுதான் அந்த செய்திகள் வெளியிடப்பட்டன. நானி கடித உறைகளுக்குள் தன் அண்ணனுக்கு அன்பளிப்புகளை, வீட்டிலுள்ள தோட்டத்தில் மலர்ந்த ரோஜா இதழ்களை அல்லது செடிகளின் குச்சிகளை அனுப்புவாள். அவன் தாயார் வெற்றிலை பாக்கையும் தகப்பனர் செய்தித்தாள்களையும் அனுப்பினர்கள். அவர் அனுப்பும் செய்தித்தாள்களில் அவருடைய சொந்த விமர்சனங்களும் எழுதப்பட்டிருக்கும்.

தன் மகனை அரசியலில் ஈடுபடாது தடுக்க முடியாது, அவர்களுக்கிடையே இரத்த உறவுகளைக் காட்டிலும் அதிக நெருக்கமான உறவுகளை ஏற்படுத்துவதற்குத் தாய்நாட்டின் கதியில் அவர்கள் இருவருக்கும் ஏற்பட்டுள்ள பொதுவான

அக்கறை நல்லதொரு அடிப்படையாக இருக்கலாம் என்பதை மோதிலால் சீக்கிரத்திலேயே புரிந்து கொண்டார். ஜவகர் லால் தன்னுடைய சொந்த வாழ்க்கையைத் தான் விரும்பும் வகையில் அமைத்துக் கொள்ளும் உரிமையை மோதிலால் அங்கீகரித்தார். அதில் எந்த வகையிலும் குறுக்கிடுவதற்கு அவர் எண்ணவில்லை. ஆனால் அரசியலில் அவன் கொண்டிருக்கும் அக்கறை காலப்போக்கில் மறைந்து விடும் என்று அவர் இரகசியமாக நம்பினார். எனினும் அரசியல் ரீதியில் ''சந்தேகப்படும்படியான'' நபர்களோடு தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டாமென்று அவர் அவ்வப்பொழுது ஜவகர் லாலை எச்சரிப்பார். தன் மகன் விமர்சன அறிவுடையவனாக, சிந்தனைத்திறம் கொண்டவனாக, ஆனால் அதிகாரிகளிடம் விசுவாசமுடையவனாக இருக்க வேண்டுமென்று அவர் விரும்பினார்.

பள்ளிக்கூடத்தில் ஜவகர்லால் வெகு சீக்கிரத்தில் எல்லாத் துறைகளிலும் ஈடுபடத் தொடங்கினான். அவன் சதுரங்க விளையாட்டுக் குழுவில் சேர்ந்தான், கால்பந்தாட்டம் மற்றும் கிரிக்கெட் விளையாட்டுக்களில் பங்கு கொண்டான், நீண்டதூர ஓட்டப் பந்தயங்களிலும், உடல் விளையாட்டுக்களிலும் குதிரை யேற்றம் முதலியவற்றிலும் கலந்துகொண்டான். ஆனால் விளை யாட்டுப் போட்டிகளில் சாதனைகளை ஏற்படுத்துவதில் அவனுக் குச் சிறிதும் ஈடுபாடு கிடையாது. முன்பு போலவே அவன் நிறையப் படித்தான். ஆரவார மிக்க விளையாட்டுக்களில் ஈடுபட்ட பிறகு அவன் அறைக்குச் சென்று கதவை மூடிக் கொண்டு சற்று நேரம் சிந்திப்பதையும் கனவு காண்பதையும் விரும்பினான். அங்கேயிருந்த மற்ற விளையாட்டுக்களைக் காட் டிலும் பள்ளி மாணவர் படையில் நடத்தப்பட்ட இராணுவ விளையாட்டுக்களையும் போட்டிகளையும் அவன் விரும்பினான். அவன் ''எதிரியை'' விரட்டிக்கொண்டு நன்கு குதிரைச் சவாரி செய்தான், இலக்கைக் குறிபார்த்துச் சுட்டான்.

பள்ளி ஆசிரியரான ஸ்டோக்டன் அந்தக் காலத்திய நேருவைப் பற்றிப் பிற்காலத்தில் பின்வருமாறு நினைவு கூர்ந் தார்: ''மிகவும் நல்ல பையன், அமைதியானவன், மிகுந்த நாகரிகமுடையவன்... அவனிடம் அதிகமான மன உறுதி இருப்பதாகத் தோன்றியது. தன்னுடைய அபிப்பிராயங்களை அவன் மற்ற மாணவர்களிடமோ அல்லது ஆசிரியர்களிடமோ சொல்லியிருப்பானா என்பது எனக்குச் சந்தேகமே. அவன்

உழைத்துப் படித்தான், சிறிதும் (ஒருபோதுமே) தொல்லே கொடுக்காததால் ஆசிரியர்கள் அவனைப் பற்றி உயர்வாக நினைத்தார்கள்...''

ஜவகர்லால் பாடங்களைச் சுலபமாகக் கற்றுன், ஆனால் லத்தீன் பாடத்தில் மற்ற மாணவர்களைக் காட்டிலும் சிறிது பின்தங்கினான். இதற்கு மொழித்துறையில் திறமையில்லாதது காரணமல்ல. செத்துப்போன லத்தீன் மொழியைப் படிப்பதில் நடைமுறைப் பலன் இருப்பதாக அவன் நினைக்காததே காரணம். மற்ற எல்லாப் பாடங்களிலுமே அவன் தன்னோடு படித்த மாணவர்களைக் காட்டிலும் முந்தியிருந்தான். மேலும் அவனுடைய விருப்பார்வங்கள் அவர்களைக் காட்டிலும் விரிவானவை என்பதில் சந்தேகமில்லை. பெரும்பாலான ஆங்கில மாணவர்கள் மந்தமானவர்கள், ஏனென்றால் தங்களுடைய விளையாட்டைத் தவிர வேறு எதைப் பற்றியும் அவர்களுக்குப் பேசத் தெரியவில்லை. ஆனால் அவர்களில் பலருக்கு சமூகத்தில் உயர்ந்த பதவிகள் முன்பே முடிவு செய்யப்பட்டிருக்கின்றன, தனது தாய்நாட்டின் எதிர்காலத்தை முடிவு செய்யக்கூடிய உரிமை அவர்களுக்குக் கிடைப்பதும் சாத்தியமே என்று தன் தகப்பனருக்கு எழுதினான்.

மகன் ஏமாற்றத்தோடு எழுதியிருப்பதை மோதிலால் கவனமாகப் படித்துச் சிந்தித்தார். அந்த ஏமாற்ற உணர்ச்சியின் தீவிரமான முனைகளைச் சரிப்படுத்துகின்ற முயற்சியில் பின்வருமாறு பதில் எழுதினார்: ''ஹாரோ வாழ்க்கையின் உணர்ச்சிச் சூழலுக்குள் நுழைவதில் உனக்குள்ள சிரமங்களை நான் உணர்கிறேன். பொதுவாகவே ஒரு இந்திய மாணவன் அதே வயதுடைய ஆங்கில மாணவனைக் காட்டிலும் அதிகமான சிந்தனைசக்தி உடையவனாக இருக்கிறான். இந்தியாவைக் காட்டிலும் பிரிட்டனில் குழந்தைப் பருவம் வாழ்க்கையில் அதிகமான பகுதியைக் கொண்டிருக்கிறது. மாணவப் பருவமும் வாலிபமும் கூட அப்படியானவைதான். அங்கே ஒருவருக்கு அறுபது வயது முடியும் வரை முதுமை தொடங்குவதில்லை. இந்தியாவில் இந்த வயது வரையில் ஒருவர் உயிரோடிருப்பதே அபூர்வம். அதனால்தான் இந்தியாவில் சிறுவர்கள் கூட செய்யத்தயங்கும் முட்டாள்தனமான வேடிக்கைச் செயல்களை பிரிட்டனைச் சேர்ந்த பெரிய பையன்கள் செய்கிறார்கள். ஆனால் அதற்காக அவர்களைப் பற்றிக் குறைவாக நினைத்துவிட முடியாது...''

மோதிலால் நேரு தன்னுடைய கடிதங்களில் சில விஷயங்களைப் பற்றி எதுவும் சொல்லாமல் விட்டுவிடுவதுண்டு, எல்லாவற்றையும் முழுமையாக விளக்குவதும் இல்லை. சம்பவங்களை அவற்றின் காரண காரியத் தொடர்போடு பார்க்க விரும்பிய ஜவகர்லால் தானகவே சிந்தித்து முடிவுகளுக்கு வந்தான். கட்சிகளின் அரசியல் போராட்டங்களைப் பற்றி சரியான முறையில் தெரிந்துகொள்வதற்காக செய்தித்தாள்களில் வெளியிடப்பட்டிருந்த செய்திகளைக் கவனமாகப் படித்தான். அந்த சமயத்தில் பிரிட்டனில் லிபரல் கட்சியினர் பதவிக்கு வந்திருந்தார்கள். அவர்கள் இந்தியாவில் சில சீர்திருத்தங்களைச் செய்யப் போவதாக வாக்குறுதியும் அளித்தார்கள்.

படிப்பில் சிறந்து விளங்கியதற்காக ஜவகர்லாலுக்கு அடிக்கடி பரிசுகள் கிடைத்தன. அந்தப் பரிசுகள் புத்தகங்களாக இருப்பது வழக்கம். அவற்றில் ஜே. எம். திரெவெலியான் என்பவர் கரிபால்டியைப் பற்றி எழுதிய புத்தகங்களில் ஒன்று இருந்தது. இத்தாலியின் தேசிய வீரனை கரிபால்டியின் மகத்தான வீர வாழ்க்கை ஜவகர்லாலின் மனதில் ஆழமாகப் பதிந்தது. புத்தகக் கடைகளிலும் நூலகத்திலும் கரிபால்டியைப் பற்றிக் கிடைக்கக் கூடிய எல்லாப் புத்தகங்களையும் அவன் படித்தான், திரும்பத்திரும்பப் படித்தான். இத்தாலியை ஒன்றுபடுத்துவதற்கு, அங்கே ஜனநாயகக் குடியரசை நிறுவுவதற்கு நடைபெற்ற போராட்டத்தின் சரித்திரம் அதன் பிரம்மாண்டமான பரிமாணத்தாலும் வரலாற்று முக்கியத்துவத்தாலும் நோக்கங்களின் மேன்மையாலும் அவன் கற்பனையில் அழியாத இடத்தைப் பெற்றது. இந்தியாவிலும் அதே மாதிரியாக நடப்பதைப் போல் அவன் கனவு கண்டான்.

ஜவகர்லால் ஏராளமாகப் படித்தான், உற்சாகத்தோடு படித்தான்; இதற்கு முன்பு முறையில்லாது படித்ததைப் போலன்றி இப்பொழுது முறையாகப் படித்தான். இத்தாலிய விடுதலை இயக்கம், ஆங்கில ஆதிக்கத்திற்கு எதிராக அமெரிக்கக் குடியேற்றவாதிகள் நடத்திய யுத்தம், பிரெஞ்சுப் புரட்சி, ஐரிஷ்காரர்கள் சுதந்திரத்துக்காக நடத்திய போராட்டம் ஆகியனவற்றைப் பற்றி எழுதப் பட்ட புத்தகங்களைத் தேர்ந்தெடுத்துப் படித்தான். ஒரு சமயத்தில் *Indian Sociologist* என்ற இதழ் அவனுக்குக் கிடைத்தது. லண்டனிலிருந்த

இந்திய தேசபக்தர்களின் குழு அந்த இதழைக் குறைவான பிரதிகளில் வெளியிட்டுவந்தது. அதை வெளியிட்டுவந்த ஷியா மாஜி கிருஷ்ணவர்மா ஆங்கில சோஷலிஸ்டுகளோடு, குறிப்பாக அன்னி பெஸன்ட்டின் பழைய நண்பரான ஹின்டெமானோடு தொடர்புடையவர். சோஷலிஸ்டுகளை நேரில் சந்தித்துத் தொடர்புகொள்ள வேண்டும் என்று ஜவகர்லால் நினைப் பதுண்டு.

அரசியல் போராட்டம் என்பது அதிகாரிகளின் அடக்கு முறையைத் தவிர்க்க முடியாத வகையில் தன்னை நோக்கி ஈர்க்கின்ற அற்புதமான வீரச் செயல் என்று அவன் தன்னு டைய இளமை காரணமாக நினைத்தான். அதை நினைக்கும் பொழுதே அவனுக்கு ஆனந்த பரவசம் ஏற்பட்டது. ஆனால் தன் தகப்பனார் அதைப் பற்றி என்ன நினைப்பார் என்று சிந்திப்பதற்குக்கூட அவனுக்குப் பயமாக இருந்தது. ஏதாவ தொரு அரசாங்க எதிர்ப்பு கோஷ்டியில் தன் மகனும் சம்பந் தப்பட்டிருக்கும் செய்தியை ஒருவேளை அவரால் தாங்கிக் கொண்டிருக்க முடியாது. அப்பொழுது லண்டனில் வசித்து வந்த இந்திய தேசபக்தர்களின் நடவடிக்கைகளில் தானும் நடைமுறையில் பங்கெடுக்க வேண்டும் என்ற அவனுடைய விருப்பத்தை நசுக்கிவிட்டுத் தனக்குள் பின்வாங்கினான்.

வீட்டைப் பற்றி, இந்தியாவைப் பற்றி தன்னுடைய சிந்தனைகளை யாருடனாவது பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று அவன் தீவிரமாக விரும்பும்பொழுது தன்னுடைய ஒன்று விட்ட சகோதரர்களான பிரிஜ்லால்* மற்றும் ஸ்ரீதரை** சந்திப்பதற்குச் செல்வான். அவர்கள் இருவரும் அப்பொ ழுது பிரிட்டனில் வசித்து வந்தார்கள், பிரிஜ்லால் ஆக்ஸ் போர்டிலும் ஸ்ரீதர் கேம்பிரிட்ஜிலும் படித்துக்கொண்டிருந் தனர். ஜவகர்லாலைப் பார்ப்பதில் அவர்களுக்கு எப்பொழுதுமே மகிழ்ச்சி அதிகம். அவனுக்கு ஆலோசனைகள் கூறுவதற்கும்

---

* பிரிஜ்லால் நேரு (1884—1965)—மோதிலால் நேருவின் சகோதரரான நந்தல் நேருவின் மகன். அவருடைய மனைவி திருமதி இராமேஸ்வரி நேரு பொதுச் சேவையில் ஈடுபட்டுப் பிரபலமானவர். அவருக்கு 1961ம் வருடத்தில் சர்வதேச லெனின் சமாதானப் பரிசு வழங்கப்பட்டது.

** ஸ்ரீதர் நேரு (1886—1967)—மோதிலால் நேருவின் சகோதரரான பன்சிதர் நேருவின் மகன்.

உதவி செய்வதற்கும் அவர்கள் எப்பொழுதுமே தயாராக இருப்பார்கள். மோதிலால் இவர்களை பெரிதும் நம்பினர், என்ன இருந்தாலும் அவர்கள் நெருங்கிய உறவினர்கள் அல்லவா! அவர்களோடு ஜவகர்லால் கிராமப் பகுதிகளுக்கு நடந்து செல்வான், அரும்பொருளகங்களுக்கும் நாடக அரங்குகளுக்கும் செல்வான், தன் மனதைத் துன்புறுத்திய எல்லாவற்றையும் அவர்களோடு விவாதிப்பான்.

இந்தியாவின் வைசிராயாக இருந்த கர்ஸான் பிரபு தம்முடைய ஒடுக்குமுறைக் கொள்கையின் ஒரு அங்கமாக வங்காளத்தை இந்து, முஸ்லிம் பகுதிகள் என்று இரண்டாகப் பிரித்தார். இது வங்காள தேசியம் என்ற உயிரோடு கூடிய உடலை வாளினுல் வெட்டியதைப் போல இருந்தது. நாட்டில் கலவரங்கள் ஏற்பட்டன. அப்பொழுது பிரிட்டனில் ஆட்சிக்கு வந்திருந்த லிபரல் கட்சியினர் இந்த சம்பவங்களைக் கண்டு பயமடைந்து அந்தக் காலனியில் சீர்திருத்தங்கள் செய்யப் போவதாகப் பேசினுர்கள். வைசிராய் பதவியில் கர்ஸான் பிரபுவுக்குப் பிறகு வந்த மின்டோ பிரபுவும் இந்தியாவுக்குப் பொறுப்பு வகித்த அமைச்சரான மார்லி பிரபுவும் ''இந்தியாவில் சட்ட மன்றங்களுக்குப்'' புதிய தேர்தல் முறையை ஏற்படுத்தி இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே பகைமையைத் தூண்டிவிட்டு மக்கள் இயக்கத்தின் ஒற்றுமையை பலவீனப்படுத்துகின்ற வஞ்சகமான நோக்கத்தைப் பின்பற்றினுர்கள்.

ஆனுல் இந்திய தேசபக்தர்கள் அவர்களுடைய திட்டங்களின் உள்நோக்கத்தைப் புரிந்து கொண்டார்கள். **நம்மை ஆட்சி புரிவது யார்?** என்ற தலைப்போடு வெளிவந்த பிரசுரத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''நம்முடைய கைத்தொழில்களை நசுக்கிய இந்தத் திருடர்கள், நம் நெசவாளர்களும் கொல்லர்களும் செய்து வந்த தொழிலைப் பறித்தவர்கள், தங்கள் சொந்த நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட ஏராளமான பொருள்களை இங்கே இறக்குமதி செய்து நம்முடைய கடைகளில், நம்முடைய ஆட்கள் மூலமாகவே விற்பனை செய்பவர்கள், அதன் மூலம் நம்முடைய செல்வத்தைத் திருடி நம்முடைய உயிரைப் பறிப்பவர்கள் உண்மையாகவே நம்மை ஆட்சி செய்பவர்களாக இருக்க முடியுமா? நம்முடைய வயல்களில் விளைந்த தானியத்

தைக் கொள்ளையடித்து பசிக்கும் நோய்க்கும் விஷஜுரத்துக்கும் நம்மை ஆளாக்கி அழிக்கின்றவர்கள் உண்மையாகவே நம்மை ஆட்சி செய்பவர்களாக இருக்க முடியுமா?.. நம் மீது புதிது புதிதாக வரிகளைச் சுமத்துகின்ற அந்நியர்கள் உண்மையாகவே நம்மை ஆட்சி செய்பவர்களாக இருக்க முடியுமா?.. சகோதரர்களே! நீங்கள் எவ்வளவு பொறுமையோடு இருக்கிறீர்களோ அவ்வளவு அதிகமாக இந்த வஞ்சகர்கள் உங்களை ஒடுக்குவார்கள். நாம் சொந்தக் கால்களில் நிற்போம், விடுதலை அடைய வழிகள் என்னவென்று சிந்திப்போம். சகோதரர்களே, பூமியில் நாம்தான் எல்லாமே. அவர்கள் உழைத்துப் பாடுபடாமலே நமது பணத்தைக் கொண்டு உண்டு கொழுக்கிறார்கள். அவர்கள் நம் இரத்தத்தைக் குடிக்கிறார்கள். நாம் அதைச் சகித்துக் கொண்டிருப்பது ஏன்?!

...சகோதர இந்துக்களே! காளி, துர்க்கை, மகாதேவர், கண்ணன் மீது சபதம் செய்யுங்கள்! சகோதர முஸ்லிம்களே! அல்லாவின் மீது சபதம் செய்யுங்கள்! ஒவ்வொரு கிராமத்திலும் இந்துவும் முஸ்லிமும் ஒன்றாகத் தாய்நாட்டுக்குச் சேவை செய்வோம் என்று பிரகடனம் செய்யுங்கள்!.. சகோதரர்களே! எழுக! அன்னை இந்தியாவின் தகுதிமிக்க புத்திரர்களாக, தாய் நாட்டுக்காக வீரத்தோடு போர் புரிந்து நம் உயிர்களை அர்ப்பணிக்கக் கூடியவர்களாக விளங்குவோம்!''

இந்தப் பிரசுரம் பிரிட்டனுக்கும் வந்துசேர்ந்தது. ஜவகர்லால் இதைப் படித்த பொழுது அவன் ரத்தம் தலைக்கேறுவதைப் போல உணர்ந்தான். வீட்டிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பால், தனிவசதிகளைக் கொண்ட அந்தப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது புறப்படுங்கள் என்று கோரிய அந்த ஆணையை அவன் எப்படி நிறைவேற்ற முடியும்?

வங்காளத்திலும் பஞ்சாபிலும் மகாராஷ்டிரத்திலும் பெருந்திரளான மக்கள் பங்கெடுத்துக் கொண்ட புதிய கலவரங்களைப் பற்றி செய்திகள் கிடைத்தன. செய்தித்தாள்களில் திலகரின் பெயர் மென்மேலும் அதிகமாக வெளிவந்தது. சுதேசி இயக்கம் விரிவாக வளர்ந்துகொண்டிருக்கும் செய்திகள் வெளியிடப்பட்டன.

இந்தச் சம்பவங்களைப் பற்றி ஜவகர்லால் தன்னுடைய

ஒன்றுவிட்ட சகோதரர்களோடு பேசும்பொழுது (அவற்றைப் பற்றிப் பேசுவதற்கு ஹாரோவில் ஒருவருமே கிடையாது) ''தீவிரவாதிகளின்'' தீர்மானமான நடவடிக்கைகளுக்கு ஆதர வாகப் பேசினான், இந்தியாவில் சுதந்திரப் போராட்டத்தின் எழுச்சியைப் பற்றி ஆனந்தமடைந்தான்.

சுதேசி இயக்கம் காஷ்மீரத்துக்குக் கூடப் பரவிவிட்டது, காஷ்மீரிகள் தங்கள் தியாகத்தின் மூலம் பணம் சேர்த்து பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஜீனி முழுவதையும் விலைக்கு வாங்கி அதற்குத் தீ வைத்தார்கள் என்று *The Times* பத்திரிகையில் வெளியிடப் பட்டிருந்த செய்தி தன்னை பிரமிக்கச் செய்தது என்று தகப்பனாருக்குக் கடிதம் எழுதினான். ஒரு விஷயம் ஜவகர்லாலுக்குக் கவலையைக் கொடுத்தது. இந்தியாவில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சம்பவங்களைப் பற்றிய தன்னுடைய மதிப்பீட்டுக்கும் தகப்பனாருடைய மதிப்பீட்டுக்கும் இருந்த வேறுபாடுதான் அது. இதே விஷயம் மோதிலால் நேருவுக்கும் கலவரத்தைக் கொடுத்தது. அவர்கள் எழுதிய கடிதங்களில் மகனுக்குரிய பணிவும் தந்தைக்குரிய பாசமும் இருந்தன. ஆனால் ஒரே விஷயத்தைப் பற்றி அவர்கள் அடிக்கடி மாறுபட்ட அபிப்பிராயங்களை வெளியிடுவதை இது தடுக்கவில்லை.

1906 டிசம்பரில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரசின் மாநாட்டைப் பற்றி ஜவகர்லாலுக்கு எழுதுகின்ற பொழுது இந்திய அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை உடனே தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கோரிய ''எரி கொள்ளித்'' தலைவர்களின் நடத்தையை மோதிலால் கண்டித்தார். ஆனால் அந்தத் தலைவர்கள் மீது தனக்கு முழு மரியாதை இருப்பதாக அவருடைய மகன் பதில் எழுதினான். இதற்கிடையில் மோதிலால் நேருவே இந்திய தேசியக் காங்கிரசின் பணிகளில் மென்மேலும் அதிகமாக ஈடுபடத் தொடங்கினார். தன்னுடைய மகனின் பார்வையில் தன்னைப் பற்றி உயர்வான அபிப்பிராயம் ஏற்பட வேண்டும், சித்தாந்த ரீதியில் அவனுக்கும் தனக்கும் ஒற்றுமை இருக்க வேண்டும், பொது இலட்சியத்துக்காக இருவரும் ஒரே விதமான உணர்ச்சி கலந்த வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று அவர் விரும்பியதும் காங்கிரசோடு அவர் ஒத்துழைத்ததற்கு ஒரு காரணமாகும்.

1907ம் வருடத்தில் காங்கிரஸ் மாநாட்டுக்கு மோதிலால் நேரு தலைமை வகிக்க வேண்டுமென்று மிதவாதிகள் வற்புறுத்தினர். அவர் அந்த மாநாட்டுக்குத் தலைமை வகிக்க விரும்பவில்லை. ஆனால் தன்னுடைய தகப்பனரைப் பற்றி உயர்ந்த கருத்தைக் கொண்டிருந்த ஜவகர்லால் சிறுவனுக்கே உரிய அவசர புத்தியோடு அந்தப் பொறுப்பை நீங்கள் மிகச் சிறப்பாக நிறைவேற்றுவீர்கள் என்று தனது நம்பிக்கையைத் தெரிவித்தான்.

மோதிலால் நேருவும் வளர்ச்சியடைந்த ஒருவரோடு பேசுவதைப் போல தன்னுடைய மகனேடு அபிப்பிராயங்களைப் பகிர்ந்து கொண்டார். ''நான் குறிப்பாகக் கவலைப்படுவது மாணவப் பகுதியினரைப் பற்றியே'' என்று அவர் ஜவகர்லாலுக்கு எழுதினர். ''சமீப காலத்தில் அவர்கள் குறிப்பிடத்தக்க வகையில் காலித்தனத்தில் ஈடுபட்டு வருகிறார்கள்... நிதானமும் ஆழமான சிந்தனையும் கொண்டிருக்கும் ஒருவர் இந்தப் பகுதியினரடங்கிய கூட்டத்தில் பேசும்பொழுது குறுக்கீடுகள் இல்லாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள் என்று ஒரு போதும் எதிர்பார்க்க முடியாது.

சிறிது காலத்துக்கு முன்பாகத் திலகர் இங்கே வந்திருந்தார். மாணவர்கள் மத்தியில் பேசுவதற்கென்றே அவர் வந்தார். தன்னுடைய கட்டுக்கடங்காத புரட்சிகரமான பிரச்சாரம் முழுவதையும் செய்தார். ''மூயர்'' கல்லூரி மாணவர்கள் (குறிப்பாக இந்துக்கள் தங்கிப் படிக்கும் பிரிவினர்) இந்த மாகாணங்களைச் சேர்ந்த அதிகமான மிதவாதத் தலைவர்களிடம் பகிரங்கமான எதிர்ப்பைக் காட்டுகின்ற அளவுக்கு அது வெற்றியடைந்தது. அவர்கள் சுந்தர்லாலையும் மாளவியாவையும் பகிரங்கமாகத் திட்டுகிறார்கள். அவர்களுடைய ஏச்சுக்களிலிருந்து நான் இது வரை தப்பிவிட்டேன். ஆனால் மிதவாதிகள் என்று சொல்லப்படுபவர்களுடைய கருத்துக்களைக் காட்டிலும் என்னுடைய கருத்துக்கள் இன்னும் அதிகமான அளவுக்கு மிதமானவை என்பதால் இன்னும் அதிகமான காலத்துக்கு நான் தப்ப முடியாது.''

தகப்பனர் மனந்திறந்து எழுதிய கடிதங்கள் அந்த இளைஞனைக் கவர்ந்தன. ''அலகபாத்திலுள்ள மாணவர்கள் உங்களைப் பற்றி ஏமாற்றமடைவார்கள் என்று நான் நினைக்கவில்லை. அவர்கள் காலித்தனத்தில் ஈடுபடுகிறார்கள் என்று

கேட்க நான் வருத்தமடைகிறேன். காலித்தனம் சிறிதும் விரும்ப முடியாததாகும். எனினும் அதில் மேற்கு நாடு களின் தாக்கம் இருக்கிறது, அவர்கள் ஓரளவுக்கு சுதந் திரமான உணர்ச்சியைப் பின்பற்றுவதைக் காட்டுகிறது.''

...ஹாரோவில் சேர்ந்த இரண்டாவது வருடத்தின் முடி வில் பள்ளிச் சூழல் ஓரளவுக்குத் தன்னைக் குறுக்குவதாக ஜவகர்லால் உணரத் தொடங்கினன். அவன் அங்கே இருந் ததைக் காட்டிலும் அதிகமான சுதந்திரத்தை விரும்பினன். தலைமை ஆசிரியர் வுட்டும் ஆசிரியர் ஸ்டோக்டனும் அவன் இன்னும் ஒரு வருட காலம் அங்கே படிக்க வேண்டும் என்று கூறிய போதிலும் அவன் பல்கலைக்கழகத்தில் கல்வி யைத் தொடர விரும்பினன். 1907 ஜூலை 25ந் தேதியன்று ஜவகர்லால் தகப்பனருக்குப் பின்வருமாறு எழுதினன்:

''அன்புள்ள அப்பா அவர்களே, ஹாரோவில் என் னுடைய பள்ளி வாழ்க்கை வேகமாக முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறது. இன்னும் நான்கு நாட்களில் அந்த வாழ்க்கை பழங்கதையாக மாறிவிடும். நான் இதற்காக வருந்துகிறேன் என்று சொல்ல முடியாது... ஹாரோவிலிருந்து—குறைந்த பட்சம் அந்தப் பள்ளியின் மாணவன் என்ற முறையில்— நான் உங்களுக்கு எழுதுகின்ற கடைசிக் கடிதம் இதுவே...''

ஹாரோ பள்ளியை விட்டு விலகிய பொழுது அதன் மீது தான் கொண்டிருக்கும் பற்றுதல் எவ்வளவு அதிகமானது என்பதை அவன் திடீரென்று உணர்ந்தான். ஆசிரியர்களிடம் விடை பெற்றுக்கொள்ள வேண்டிய நேரத்தில் அவன் உணர்ச்சி வசப்பட்டான். அவன் கண்களில் நீர் துளும்பியது. அந்தப் பிரிவு வருத்தத்தைக் கொடுத்தது. ஹாரோவின் மரபுக்கு அது பொருத்தமானதே.

பல்கலைக்கழகப் படிப்பைத் தொடங்குவதற்கு முன்னர் ஜவகர்லாலும் பிரிஜ்லாலும் அயர்லாந்துக்குச் சென்று அங்கே சில வாரங்களைக் கழித்தார்கள். அவர்களிருவரும் நெடுங் காலமாகக் கனவு கண்டு கொண்டிருந்த பயணம் அது. அங்கே என்ன நடை பெற்றுக்கொண்டிருக்கிறதென்று நேரடி யாகப் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கு ஜவகர்லால் விரும் பினன். ஆங்கிலப் பத்திரிகைகளின் மீது அவனுக்கு நம்பிக்கை இல்லை. தங்களை அடிமைப்படுத்திய ஆங்கிலேயர்களுக்கு எதி ராக அயர்லாந்து மக்கள் நடத்திக் கொண்டிருந்த போராட்

டத்தை அவன் தீவிரமாக ஆதரித்தான். அவன் தகப்பனுர் அந்தப் பிரயாணம் வேண்டாம் என்று கூறினுர். குறைந்த பட்சம் பெல்ஃபாஸ்டுக்காவது போகாதிருக்குமாறு கேட்டுக் கொண்டார். அங்கே மிகவும் சமீப காலத்தில் ''தொல்லை தரும்'' தொழிலாளர்கள் மோசமான கலவரங்களை ஏற்படுத்தியதால், இராணுவத்தினர் தொழிலாளர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். ஆங்கில ஆட்சிக்கு எதிரான கலகத்தை நேரில் பார்க்க வேண்டுமென்பதற்காகவே அந்தப் பிரயாணத்தில் ஈடுபட்டதாக ஜவகர்லால் டப்ளினில் இருந்து பதில் எழுதினுன்.

ஆங்கில ஆட்சியை அகற்றுவதற்கு அயர்லாந்தின் சின் பெய்ன்* இயக்கத்தினர் நடத்திவரும் தீர்மானமான நடவடிக்கைகளைப் பற்றி அந்த இளைஞன் பெருமையோடு பேசினுன். ''அயர்லாந்திலுள்ள சின்பெய்னியர்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா?'' என்று ஒரு கடிதத்தில் அவன் தகப்பனுருக்கு எழுதினுன். ''அது மிகவும் சுவாரசியமான இயக்கம். இது இந்தியாவில் தீவிரவாத இயக்கம் என்று சொல்லப்படுவதை மிகவும் ஒத்திருக்கும். அவர்களுடைய நோக்கம் சலுகைகளைக் கெஞ்சிப் பெறுவது அல்ல, வன்முறையின் மூலம் பறிப்பதே.''

இந்தியாவின் சுதந்திரத்தை எப்படி அடைவது என்பதைப் பற்றி தகப்பனுருக்கும் மகனுக்குமிடையே இருந்த கருத்து வேறுபாடுகள் அயர்லாந்துப் பயணத்துக்குப் பிறகு மேலும் தீவிரமடைந்தன.

''...கேம்பிரிட்ஜ், டிரினிட்டி கல்லூரி, 1907 அக்டோபர் மாதத்தின் தொடக்கம். என்னுடைய வயது பதினேழு; அல்லது பதினெட்டை நெருங்கிக்கொண்டிருக்கிறது. பள்ளிக்கூடத்தோடு ஒப்பிடும் பொழுது நான் விரும்பியதைச் செய்வதற்கு அதிகமான அளவு சுதந்திரத்தைக் கொண்ட கல்லூரி மாணவன் என்பதை நினைக்கும்பொழுது நான் பரவசமடைந்தேன். சிறுவன் என்ற கட்டுத்தளைகளைக் கடந்து கடைசியில் வாலிபனுகிவிட்டேன் என்பதை உணர்ந்தேன். கேம்பிரிட்ஜின் அகன்ற சதுக்கங்களிலும் குறுகலான தெருக்களிலும் எனக்குத் தெரிந்தவர்கள் யாரையாவது சந்தித்து மகிழ்ச்சி அடைய

---

* அயர்லாந்தின் சுதந்திரத்துக்காகப் போராடிய இயக்கம்.

விரும்பித் தன்னுணர்வோடு அலைந்தேன்'' என்று பிற்காலத்தில் ஜவகர்லால் நினைவு கூர்ந்தார்.

டிரினிட்டி கல்லூரியில் ஜவகர்லாலுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அறை மிக மோசமானது. இருண்ட சன்னல்கள், வெளிச்சம் உட்புகாத கண்ணாடிகள். அந்த சன்னல்களின் வழியாக உள்முற்றத்தைத்தான் பார்க்கலாம். அவன் இயற்கை விஞ்ஞானப் பிரிவில் சேர்ந்து இரசாயனம், மண்ணியல், தாவர இயல் ஆகிய பாடங்களை விசேஷமாகப் படித்தான். அவன் மாணவ வாழ்க்கையை விரும்பினான். ஓய்வு நேரம் குறைவு என்பது உண்மைதான். ஆனால் விளையாட்டிலும் தன்னுடைய வயதுக்குரிய பொழுதுபோக்குகளிலும் உற்சாகத்தோடு தொடர்ந்து ஈடுபட்டான்.

அவன் தன்னுடைய மாணவ நண்பர்களோடு அரசியல், வரலாறு மற்றும் தத்துவஞானம் ஆகியவற்றைப் பற்றி உரையாடுவது வழக்கம். அந்தக் காலத்தில் மிகவும் புதுமையாகக் கருதப்பட்ட நீட்ஷேயைப் பற்றியும் உரையாடுவான். அவர்கள் இளைஞர்களுக்கு வழக்கமான முறையில் பாலின்பத்தையும் ஒழுக்கத்தையும் பற்றி விவாதிப்பார்கள். அவனிடம் ஓரளவுக்கு சங்கோஜம் இருந்தபோதிலும் அவன் இதைப் பற்றி போலித்தனமற்ற அபிப்பிராயம் கொண்டிருந்தான். அவன் இவ்வுலகத்தின் இன்பங்களை அந்நியமானவையாகக் கருதவில்லை. பாவம் என்ற கருத்து போலி ஆசாரவாதிகளின் கண்டுபிடிப்பு என்று கருதினான். தன்னைப் பொறுத்தவரை, எல்லா ஆசைகளையும் நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்ற கீழ்த்தரமான திருப்திக்கு இடமளிக்காமல் முழுமையான, பன்முகப்பட்ட வாழ்க்கையை நடத்த விரும்பினான். ''நான் வாழ்க்கையை அனுபவித்தேன். அதை ஒரு பாவகாரியமாக ஏன் கருத வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. அதே சமயத்தில் ஆபத்தான காரியங்களில் ஈடுபடுவதும் வீரசாகஸச் செயல்களும் என்னைக் கவர்ந்தன. என் தகப்பனாரைப் போலவே நானும் ஓரளவுக்குச் சூதாட்டக்காரன்தான்; முதலில் பணத்தை வைத்தும் பிறகு வாழ்கைப் பிரச்சினைகளோடும் சூதாடினேன்...''

இந்தியாவில் அரசியல் உணர்ச்சிகள் ஓங்கிக்கொண்டிருந்தன, சில சமயங்களில் இரத்தக் களறியும் கூட ஏற்பட்டது. அந்த ஒரு விஷயம் தான் ஜவகர்லாலிடம் தொடர்ந்து கலவரத்தை ஏற்படுத்தியது.

மேலும், பிரிட்டனில் இனப் பாகுபாட்டைப் பின்பற்றுவது அவனுக்கு வேதனையைக் கொடுத்தது. ஓரிரு சந்தர்ப்பங்களில் அவனுக்கும் அந்த அனுபவம் ஏற்பட்டது. ஹாரோவில் இராணுவப் பாடத்தில் வெற்றிகரமாகத் தேர்வு பெற்ற எண்ணத்தில் பல்கலைக்கழகத்தின் இராணுவப் பயிற்சி அணியில் குதிரைப் படையில் சேர முயற்சி செய்தான். இந்திய மாணவர்களைக் குதிரைப் படையில் சேர்த்துக் கொள்வதில்லை என்ற பதில் கிடைத்தது.

இந்திய மாணவர்களின் எண்ணிக்கையைக் குறைத்தல், அவர்களுடைய விசுவாசத்தைச் சோதனை செய்யப் பரீட்சை முறை ஆகியவை பற்றி முடிவு செய்வதற்காக இந்தியாவுக்குப் பொறுப்பு வகித்த அமைச்சரான மார்லி பிரபு கேம்பிரிட்ஜுக்கு வந்த பொழுது ஜவகர்லாலுக்கு மிக அதிகமான ஆத்திரம் ஏற்பட்டது. பிரிட்டனை விட்டு வெளியேறி வேறு ஏதாவதொரு ஐரோப்பிய நாட்டில் தன் கல்லூரிப் படிப்பைத் தொடர்வதற்கும் அவன் தயாராக இருந்தான்.

கேம்பிரிட்ஜிலிருந்த இந்திய மாணவர்கள் தங்களுக்கென்று தனியாக ஒரு சங்கம் அமைத்துக் கொண்டார்கள்; அதற்கு மஜ்லிஸ் என்று பெயரிட்டார்கள். இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கு அவ்வப்பொழுது வருகின்ற பிபின் சந்திர பால், லாலா லஜபத் ராய், கோபாலகிருஷ்ண கோக்கலே போன்ற பிரபலமான காங்கிரஸ் தலைவர்கள் அச்சங்கத்தில் சொற்பொழிவாற்றினார்கள். அம்மாதிரியான சந்தர்ப்பங்களின் போது தங்கள் நாட்டின் புகழ்மிக்க தலைவர்களைச் சந்திக்கப் போகின்ற எதிர்பார்ப்புக்களினால் இந்திய மாணவர்கள் பரபரப்படைவார்கள். அவர்கள் சிறு குழுக்களாகக் கூடி தங்கள் விருந்தினர்கள் ஒவ்வொருவருடைய தகுதியையும் சேவையையும் பற்றி உணர்ச்சிகரமாக விவாதிப்பார்கள், அந்தத் தலைவருடைய பேச்சைக் கேட்பதற்காகப் பொறுமையின்றிக் காத்துக் கொண்டிருப்பார்கள். ஜவகர்லால் இதற்கு விதிவிலக்கல்ல. அவனுடைய வெளித் தோற்றத்திலிருந்த அமைதியும் கலங்காத தன்மையும் தான் அவனுக்கும் மற்ற மாணவர்களுக்கும் வேறுபாடு என்று சொல்லலாம். எனினும் அவனுடைய மதிநுட்பமும் ஆழ்ந்து சிந்தித்து அகந்தையின்றி அவன் வெளியிட்ட முடிவுகளும் குறிப்பிடத்தக்கவையாக இருந்தன. ஜவகர்லால் தன்னை உறுதியான தேசியவாதி என்று கருதினான்; ஆனால்

அவனே ஒரு தேசபக்தன் என்று சொல்வதே இதைக் காட்டிலும் உண்மையாக இருக்கும். இன அல்லது மத வேற்றுமையின் அடிப்படையில் வைக்கப்படும் கோரிக்கைகளைப் பற்றி அவன் ஆத்திரமடைவான். மாணவப் பருவத்திலேயே அவன் இனவெறியின் மனித எதிர்ப்புக் கருவை—ஸையோனிஸ்டுகள் உள்பட ''வெள்ளை'' இனத்தின் பிரதிநிதிகளிடம் மட்டுமல்லாமல் ஆசியாவில் ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களைச் சேர்ந்த சில தலைவர்களிடம் தோன்றிய இனவெறிக் கருத்துக்களின் ஆபத்தான அறிகுறிகளை—உணரவும் புரிந்து கொள்ளவும் தகுதி உடையவனாக இருந்தான்.

மாணவர்களுடைய மன்றங்களில், குறிப்பாக மஜ்லிசில் மிகவும் தீவிரமான கருத்துக்கள் பேசப்படுவதுண்டு. ஆனால் இந்தத் தீவிரமான சொற்பொழிவுகள் பேச்சாளர்களின் முதிர்ச்சியடைந்த கருத்துக்களைப் பெரும்பாலும் எடுத்துக் காட்டவில்லை; மொத்தத்தில் அவை திடீரென்று வெடிக்கும் அதிர் வேட்டாக, சீக்கிரத்திலேயே அணைந்து விடுகின்ற இளமைத் துடிப்பின் தீப்பொறியாகவே இருந்தன என்பதை வாழ்க்கை எடுத்துக் காட்டியது. ''இந்த எரிகொள்ளிப் பிரசங்கிகளில் ஒருசிலர் மட்டுமே பிற்காலத்தில் இந்தியாவின் அரசியல் இயக்கங்களில் ஓரளவு தீவிரமாக பங்கு கொண்டார்கள்'' என்று நேரு எழுதினார். கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப் பட்டம் பெற்ற பிறகு அவர்கள் இந்திய நிர்வாகத் துறையில் அதிகாரிகளாக, நீதிபதிகளாகப் பதவியேற்றனர்கள்; ஆங்கில அதிகாரிகளுக்கும் மாட்சிமை பொருந்திய அரசருக்கும் மிகவும் விசுவாசமானவர்களாக இருந்தார்கள்.

அதே சமயம் முதல் தடவையாக ஜவகர்லால் கேம்பிரிட்ஜிலிருந்த இந்திய மாணவர்களில் சிலரோடு நெருங்கிய நட்புக் கொண்டான். அவர்களிடம் தன் வாழ்க்கை முழுவதுமே பாச உணர்ச்சியைக் கொண்டிருந்தான். அவர்களில் சைபுதீன் கிச்லூ, ஸையது முகம்மது, டி. ஏ. ஷெர்வானி மற்றும் சிலர் முக்கியமானவர்கள். அவர்களுடைய இனிய குணங்களும் தீவிரமான கருத்துக்களும் தேசபக்தியும் அவனைக் கவர்ந்தன. ஜவகர்லால் மனப் பூர்வமான உறவுகளையும் பரஸ்பர நம்பிக்கையையும் உண்மையான நட்பையும் அனுபவிப்பதற்கு அவர்கள் உதவினார்கள். அத்தகைய அனுபவம் இதற்கு முன்பு அவனுக்கு ஏற்படவில்லை.

ஜவகர்லாலுக்கு நெருங்கிய நண்பர்கள் இல்லா திருந்த பொழுது, தன்னுடைய ஒன்றுவிட்ட சகோதரர்களின் தொடர்பும் தகப்பனுருக்கு எழுதும் கடிதங்களும்—அவற்றின் உள்ளடக்கம் குடும்ப விவகாரங்களைத் தாண்டிப் போய் நெடுங்காலமாகிவிட்டது—அந்தக் குறையைப் பகுதியளவுக்கு ஈடு செய்தன. மோதிலால் நேருவின் சொந்தக் கருத்துக்களோடு மகனின் சுயேச்சையான கருத்துக்கள் அடிக்கடி ஒத்துப் போகவில்லை என்ருலும் அவர் மகனின் கருத்துக்களை உயர்வாக மதிப்பிட்டார். அவருடைய சகிப்புத் தன்மையை ஜவகர்லால் மதித்தான், தன்னுடைய தகப்பனுரிடமிருந்து தன்னுடைய கருத்துக்களை மறைப்பது நேர்மையற்றதென்று கருதியபடியால் அவருடைய சகிப்புத் தன்மையை நன்கு பயன்படுத்திக் கொண்டான்.

1907 டிசம்பரில் சூரத்தில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரஸ் மாநாட்டில் திலகர் தலைமையிலிருந்த தீவிரவாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் (மோதிலால் நேரு இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்) பிளவு ஏற்பட்டது. அந்த மாநாட்டின் முடிவுகளைப் பற்றி தகப்பனுருடைய மதிப்பீட்டை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. மக்களுடைய ஆதரவை அடிப்படையாகக் கொண்டு தீவிரவாதிகளின் நடவடிக்கையை ஜவகர்லால் நியாயப்படுத்தினுன். இது அவன் தகப்பனுருடைய முடிவுக்கு மாருக இருந்தது.

மகனுடைய கடிதம் கிடைத்தபொழுது மோதிலால் நேரு ஆத்திரமடைந்தார். அவருடைய உடல்நலமும் ஓரளவுக்குப் பாதிக்கப்பட்டது. தகப்பனுருக்கு உடல்நலமில்லை என்று அறிந்த பொழுது ஜவகர்லால் மிகவும் கவலையடைந்தான். அவருக்கு மனவருத்தத்தை ஏற்படுத்தத் தான் விரும்பவில்லை, ஆனுல் அதே சமயத்தில் தன்னுடைய சொந்தக் கருத்தை மறைப்பது சாத்தியமென்று தான் கருதவில்லை என்று அவன் எழுதிய நீண்ட, பாசம் நிறைந்த கடிதத்தில் தெரிவித்தான்.

...காலம் ஓடிக் கொண்டிருந்தது. அவன் எந்தத் தொழிலைத் தேர்ந்தெடுப்பது என்று முடிவு செய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது.

1909ம் வருடத்தின் கோடைகால விடுமுறையின்போது ஜவகர்லால் தன் தகப்பனுரை பெர்லினில் சந்தித்தார். அவர்கள் இருவரும் அட்லான் ஹோட்டலில் தங்கியிருந்தார்கள்.

நீண்ட மாலைப் பொழுதுகளில் ஜவகர்லாலின் எதிர்காலத்தைப் பற்றி விவாதித்தார்கள். கடைசியில் வழக்குரைஞராவதென்று முடிவு செய்தனர். தந்தையின் அடிச்சுவடுகளை மகன் பின்பற்றுவது இந்திய மரபாகும். இந்த முடிவு அந்த மரபுக்குப் பொருத்தமாக இருந்தது.

கேம்பிரிட்ஜுக்குத் திரும்பியதும் ஜவகர்லால் தேர்வுகள் எழுதி இரண்டாம் வகுப்பில் பட்டம் பெற்றான். படிப்பு வெற்றிகரமாக முடிவடைந்ததைப் பாராட்டி மோதிலால் நேரு அவனுக்குத் தந்தி அனுப்பியிருந்தார்.

தகப்பனுரோடு முன்பே முடிவு செய்தபடி ஜவகர்லால் லண்டன் இன்னர் டெம்பிளைச் சேர்ந்த வழக்குரைஞர்கள் சங்கத்தில் சேர்ந்து பயிற்சி பெற்றான்.

சட்டவியல் அவனுக்குச் சுலபமாகவே இருந்தது. அவன் எத்தகைய விசேஷமான உற்சாகத்தோடும் பயிற்சியில் ஈடுபடவில்லை என்பது உண்மையே. ''என்னுடைய சட்டப் படிப்புக்கு அதிகமான நேரம் தேவைப்படவில்லை. ஒவ்வொன்றாக சட்டத் தேர்வுகளில் வெற்றி பெற்றேன். எனக்குப் புகழும் இல்லை, அவமதிப்பும் இல்லை'' என்று நேரு பிற்காலத்தில் எழுதினார்.

அவனுடைய வாழ்க்கையில் ஒரே ஒரு சமயத்தில் ''உல்லாசிகளான இளைஞர்களைப்'' பின்பற்றி ஓரளவுக்கு வீணான முறையில் காலம் கழித்தான். முன்பு தன்னோடு படித்த சில ஆங்கில மாணவர்களைக் கொண்ட கோஷ்டியில் சேர்ந்தான். அவர்களுடைய அர்த்தமற்ற பொழுதுபோக்குகளிலும் கேளிக்கைகளிலும் மேற்குடிமக்களின் படாடோப வாழ்க்கையிலும் ஈடுபட்டான்.

அந்த வாழ்க்கை எவ்வளவு பொருளற்றது, தன்னுடைய சுய திருப்தி மனப்பான்மை எந்த அளவுக்கு விரும்பத்தகாத வளர்ச்சியை அடைந்துவிட்டது என்பதை அவனே விரைவில் உணர்ந்தான். அறிவுப் பசி கொண்ட ஜவகர்லால் உல்லாச வாழ்க்கை என்ற உலகத்தின் திரையை விலக்கிப் பார்த்தான், அந்த வாழ்க்கை தனக்கு ஏற்றதல்ல என்று புரிந்துகொண்டான்.

1912ம் வருடத்தின் கோடை காலத்தில் ஜவகர்லால் நேரு வழக்குரைஞராக ஏற்றுக் கொள்ளப்பட்டார். அந்தத் தொழிலில் ஈடுபடுவதற்குரிய உரிமைச் சான்றிதழ் அவருக்கு வழங்கப்பட்டது.

# அத்தியாயம் மூன்று

*1912ம் வருடத்தின் இலையுதிர்காலத்தில் ஜவகர்லால் நேரு இந்தியாவுக்குத் திரும்பினார். தாய் நாட்டு மண் மீது கால் வைக்க வேண்டும் என்ற ஆசை அவரிடம் மிகவும் தீவிரமாக ஏற்பட்டிருந்தது. எனவே அந்தக் கப்பல் மிகவும் மெதுவாகப் போய்க் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. பம்பாய் நகரத்தின் ஓரத்தோற்றம் எந்த நிமிடத்திலும் தெரியும் என்ற எண்ணத்தில் நேரு மூடுபனியை ஊடுருவிப் பார்த்துக்கொண்டிருந்தார்.*

*காலம் ஜவகர்லாலை மாற்றியிருந்தது. தாய் நாட்டை மீட்பதற்காக மகத்தான காரியங்களைச் செய்ய வேண்டும் என்ற ஆசையினால் துடித்துக் கொண்டிருந்த, ஆசியாவில் ஐரோப்பிய ஆதிக்கத்தை எதிர்க்கும் தேசியவாதக் கருத்துக்களை சதா நினைத்துக் கொண்டிருந்த, பதினைந்து வயது பாலகன் அனுபவம் நிறைந்த, தன்னைச் சுற்றியுள்ள உலகத்தைப் பற்றி அதிக நிதானமான கருத்துக்களைக் கொண்ட இருபத்திரண்டு வயது இளைஞனாக, அவர் இருபது வருடங்களுக்குப் பிறகு கிண்டலாக எழுதியதைப் போல ஓரளவு ''சுயபூர்த்தி உடைய ஏட்டுப் படிப்பாளியாக'' மாறியிருந்தார்.*

*ஏட்டுப் படிப்பின் முளைகள் பிரிட்டன் மண்ணில் வளர்ந்தவை. இருபத்திரண்டு வயதில் சுயபூர்த்தி உணர்ச்சி முற்றிலும் இயற்கையானதே. அவர் அறிவை, தோற்றத்தில் ஓரளவுக்குக் கணிசமான அறிவைச் சேகரித்திருந்தார், பயன்மிக்க அனுபவங்களைத் திரட்டியிருந்தார்.*

*அவருடைய தோற்றமும் மாறியிருந்தது. அவருடைய அங்கங்களில் ஒரு முழுமை—இது பெரும்பாலும் கடைசிக்*

காலம் வரை இருக்கும்—ஏற்பட்டிருந்தது. அவர் தலைமுடி குறைந்திருந்தது. ஆனால் முன்பு அவருக்கு அடர்த்தியான தலைமுடி இருந்ததென்று சொல்ல முடியாது. ஆகவே அவரு டைய நெற்றி அகலமாக, எடுப்பாகத் தெரிந்தது. நெற்றியில் முதல் சுருக்கங்கள் முன்பே தோன்றத் தொடங்கியிருந்தன...

மோதிலால் நேரு முசூரி என்ற சிறு நகரத்தில், மலையடி வாரத்தில் அந்தக் கோடை காலத்தில் வசிப்பதற்காக ஒரு வீட்டை அமர்த்தியிருந்தார். அலகபாத்தில் கோடைகாலத் தில் இருக்கும் புழுக்கமும் வெப்பமும் அங்கே இல்லை; இமய மலையிலிருந்து வருகின்ற காற்று குளிர்ச்சியாக இருக்கும்...

அந்த வீட்டில் எல்லா உறவினர்களும் ஜவகர்லாலை எதிர் பார்த்துக் காத்திருந்தார்கள். மகனை இரயில் நிலையத்தில் வரவேற்பதற்காக மோதிலால் நேரு சில வேலைக்காரர்களோடு குதிரை மீது புறப்பட்டார். ஜவகர்லாலை வரவேற்பதற்கு எல்லாத் தயாரிப்புகளும் முடிந்துவிட்டன. அவருடைய தாயார் தனக்கு மிகவும் பிடித்தமான சேலையை அணிந்திருந்தாள். சகோதரிகள் அழகான பட்டு கவுன்களை அணிந்திருந்தார் கள். வேலைக்காரர்கள் வெள்ளைச் சீருடை அணிந்திருந்தார் கள். அவர்களில் ஒருசிலர் அந்த மகத்தான சந்தர்ப்பத்துக் காக வெள்ளைக் கோட்டும் தொப்பியும் அணிந்திருந்தார்கள்.

குதிரைகளின் குளம்பொலி கேட்டதும் எல்லோரும் தெரு வுக்கு ஓடினார்கள். சிலர் குதிரை மீது வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். ஒரு அழகான குதிரையின் சேணத் தின் மீது மோதிலால் நேரு கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் ஜவகர்லால் சிரித்த படியே உட்கார்ந் திருந்தார். மெலிந்த உடல், களையான முகம், ஐரோப்பிய உடை.

மகன் தாயாரை அன்போடு தழுவினார். அவள் குடும்பக் கவலைகளாலும் மகனைப் பற்றிய ஏக்கத்தாலும் மெலிந்து பலவீனமடைந்திருப்பதாகத் தோன்றியது. தாயார் மீது தனக்கு ஏற்பட்ட அன்பையும் இரக்கத்தையும் மறைப்பதற் காக ஜவகர்லால் தன் சகோதரி கிருஷ்ணாவை நோக்கித் திரும்பினார். ஐந்து வயதான அந்தச் சிறுமி தன் சகோதரனைப் பிரமிப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள். அவருக்குப் பக்கத் தில் போகலாமா கூடாதா என்பதை அவளால் முடிவு செய்ய இயலவில்லை. ஜவகர்லால் அவளைக் கைகளில் எடுத்துக் கொண்டார்.

''என் தங்கை நீதானு? மிகவும் அழகாக இருக்கிருயே!'' என்ருர்.

ஸ்வரூப் அவர்களிருவரையும் பார்த்துச் சிரித்தபடியே அண்ணன் தன்னே எப்பொழுது தூக்குவார் என்று காத்துக் கொண்டிருந்தாள். அவளுக்குத் தன்னுடைய அண்ணன் மீது பாசம் அதிகம். ஆனுல் இப்பொழுது இந்த உணர்ச்சியோடு குழந்தைக்கே உரிய கலப்பற்ற பெருமிதமும் சேர்ந்திருந்தது. வீரமும் பலமும் அறிவும் நிறைந்திருக்கும் இந்த மனிதர் என்னுடைய சகோதரர், தெரியுமா! ஜவகர்லால் அன்போடு அவளிடம் நலம் விசாரித்தார். ஸ்வரூப் ஒரு அழகியாக வளர்ச்சி அடைந்திருந்தாள். அவள் மென்மையான், நீண்ட முகத்தையும் வில் போன்று வளைந்த புருவங்களேயும் எடுப் பான நெற்றியையும் உற்சாகம் குமிழியிடும் அகன்ற, பெரிய காவி நிற கண்களேயும் கொண்டிருந்தாள். அவள் சுறுசுறுப்பும் பெருமையும் கொண்டவள் என்பதை இவை எடுத்துக் காட்டின.

வெளியூருக்குச் சென்று நெடுங்காலத்துக்குப் பிறகு திரும் பும் ஒருவருக்கு வீட்டிலே கிடைக்கும் எல்லாவித சிறு சுகங் களேயும் ஜவகர்லால் ஆனந்தமாக அனுபவித்தார். அவர் நீச்சல் குளத்தில் நீந்திஞர், டென்னிஸ் விளேயாடிஞர், நிறைய குதிரைச் சவாரி செய்தார், தோட்டத்தில் தன்னுடைய சகோதரிகளோடு உற்சாகமாக விளேயாடிஞர், பழைய நண்பர் களேச் சந்தித்தார், புதிய நண்பர்களேப் பெற்ருர், எண் ணற்ற உறவினர்களேப் போய்ப் பார்த்துவிட்டு வந்தார்.

மாலே நேரங்களில் குடும்பத்திலுள்ள எல்லோருமே பெரிய அறைகளில் ஒன்றில் கூடுவார்கள். ஜவகர்லால் வெளிநாட்டில் கழித்த வருடங்களேப் பற்றி உணர்ச்சியோடு பேசுவார்; தன்னு டைய மாணவ வாழ்க்கையில் நடை பெற்ற மிகவும் வேடிக் கையான அல்லது விசித்திரமான சம்பவங்களே நினேவுபடுத்திக் கூற முயற்சிப்பார். அவருடைய உறவினர்கள் அவர் வெளி நாட்டிலிருந்த பொழுது நடைபெற்ற மிகச் சாதாரணமான சம்பவங்களேக் கூட விரிவாக எடுத்துக் கூறுவார்கள்.

மோதிலால் நேரு ஒவ்வொரு வாக்கியத்தையும் நன்ருகச் சிந்தனே செய்து அவசரமில்லாமல் பேசுவார். ஜவகர்லாலின் தாயார் பெரும்பாலும் அமைதியாகவே இருப்பார். ஆனுல் எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருப்பார்.

அவருடைய கண்களில் திருப்தி பிரகாசிக்கும். கடைசியில் எல்லோரும் கணப்புக்கு அருகே கூடுவார்கள்.

பிறகு தாயாரும் பெண், குழந்தைகளும் அங்கே ஆண்களைத் தனியே விட்டுவிட்டு அமைதி நிறைந்த மகளிர் பகுதிக்குச் செல்வார்கள். மோதிலாலின் முகத்தில் தீவிரமான சிந்தனையின் அறிகுறி தோன்றும். மகன் வழக்குரைஞராகப் போவதால் அந்தத் தொழிலுக்கு அவசியமென்று அவர் கருதுகின்ற குணங்களைப் பற்றி எடுத்துக் கூறுவார்.

வழக்குரைஞர் நல்ல பேச்சாளராக இருந்தால் மட்டும் போதாது. அவருடைய பேச்சுவன்மையும் இயல்பும் மக்களிடம் உற்சாகமாகப் பாராட்டு முணுமுணுப்பையும் நீதிபதி, ஜுரிகளிடம் குற்றவாளியின்பால் சற்றுக் கூடுதலான அனுதாபம் கொண்ட அணுகுமுறையையும் ஏற்படுத்தினால் மட்டும் போதாது. சட்டவியல் நிபுணராக, நினைத்தமாத்திரத்தில் எண்ணற்ற சட்டத் தொகுப்புகளிலிருந்து தனக்குத் தேவையான ஷரத்தை மட்டும் எடுத்துக் கூறும் ஆற்றலைக் கொண்டவராக இருந்தால் மட்டும் போதாது. விடாமுயற்சி, துல்லியக் குணம், பொறுமை, அடக்கம் மற்றும் இவற்றைப் போன்ற ஒரு டஜன் குணங்களும் கூட இரண்டாம் நிலை முக்கியத்துவம் கொண்டவையே. உண்மையான வழக்குரைஞர் சிந்தனைத் திறன் கொண்ட உளவியல் நிபுணராக இருப்பார். அவர் மக்களுடைய மனங்கள் என்ற சிக்கலான — சில சமயங்களில் மிகவும் வளைந்திருக்கின்ற — வழிகளில் சுலபமாகப் பாதையைக் கண்டுபிடித்துப் போகக் கூடியவராக இருக்க வேண்டும். அவர் தன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் வழக்குகளை முக்கியமானவை, சாதாரணமானவை, சுவாரசியமானவை, சலிப்புத் தருபவை என்று பிரிக்கக் கூடாது. ஒருவனது வாழ்க்கையைப் பற்றிப் பேசப்பட்டாலும் அல்லது அந்த வழக்கு சம்பந்தமான சொத்து முக்கியமானதாக இருந்தாலும் அல்லது இல்லாவிட்டாலும் ஒவ்வொரு வழக்குக்கும் பின்னுலுள்ள மனிதனை மறக்கக் கூடாது. வழக்குரைஞர் தன்னிடம் வழக்கைக் கொடுத்தவர்களுக்காக வாழ வேண்டும், அவர்களுக்காக அவர்களோடு சேர்ந்து துன்பங்களை அனுபவிக்க வேண்டும்! குற்றம் சாட்டப்பட்டவர் மீது குறைவான தண்டனை விதிக்கப்படும் பொழுது, ''குற்றவாளி அல்ல'' என்று தீர்ப்புக் கூறப்படும் பொழுது,

அவர்களுடைய கண்களிலிருந்து நன்றி கண்ணீராக வடிகின்ற பொழுது, அவர்களுடைய உற்றார், உறவினர்கள் தங்களுடைய நன்றியைத் தெரிவிக்கும் பொழுது ஏற்படுகின்ற மகிழ்ச்சியே தனி...

அவருடைய மகன் இடையில் குறுக்கிடாமல் கேட்டுக் கொண்டிருந்தார். இரண்டு வருடங்களுக்கு முன்பே வழக்குரைஞராகத் தொழில் செய்வதென்று முடிவு செய்தாகி விட்டது. அவருக்கும் ''ஓரளவுக்கு'' அந்தத் தொழிலில் விருப்பமுண்டு.

**1912**ம் வருடம் நவம்பர் மாதத்தில் ஜவகர்லால் நேரு தகப்பனுருடைய வழக்குரைஞர் அலுவலகத்தில் வேலை செய்யத் தொடங்கினுர். ஆரம்பத்தில் அவர் வேலையிலேயே, எண்ணற்ற வழக்குகளின் குவியலிலேயே மூழ்கியிருந்தார். ஆனுல் அவரிடம் சங்கோஜம் இன்னும் இருந்தது. எனவே தன்னு டைய தகப்பனுரைப் போல அவரால் மனதைக் கவரும் முறையில் வாதாட முடியவில்லை. எனினும் அந்த இளம் வழக்குரைஞரின் ஆரம்பச் சொற்பொழிவுகளில் தர்க்க ரீதி யான நம்பிக்கையும் சொல்லலங்காரமும் இருந்தன. குற்றச் சாட்டில் வெளியே தெரியாதிருக்கும் குறைகளைத் ''தூண்டில் போட்டுப் பிடித்து'' நம்பிக்கையில்லாதவை போலத் தோற்ற மளிக்கும் வழக்குகளையும் காப்பாற்றக் கூடிய திறமை இருந் தது. மோதிலால் எல்லா விஷயங்களிலும் அக்கறையோடும் ஆர்வத்தோடும் தன் மகனைக் கவனித்து வந்தார்.

ஒரு வாடிக்கைக்காரரர் ஜவகர்லாலுக்கு ஊதியமாக ஐநூறு ரூபாய்க்குக் காசோலை அனுப்பியிருந்தார். மோதிலால் நேரு அந்தக் காசோலையைக் கையில் வைத்துக் கொண்டு வேடிக் கையாகக் கூறினுர்: ''எனக்கு ஐந்து ரூபாய்தான் முதல் ஊதியமாகக் கிடைத்தது. நான் இப்போது இருக்கும் நிலையில் இல்லாதிருந்தால் உனது இடத்தை வகிப்பதில் எனக்கு ஆட் சேபணை இருந்திருக்காது.''

வழக்குரைஞர் தொழிலில் அவருக்கு முதலில் ஏற்பட்ட உற்சாகம் மெதுவாக மறைந்து ஒரு வாடிக்கையான தொழில் முறையாயிற்று. இந்த வாடிக்கையான தொழில்முறை அவ ரிடம் தொழிலிலும் தன்னிடமுமே அதிருப்தியை ஏற்படுத் தியது. ''என்னுடைய வாழ்க்கை—என்னைப் போன்ற பெரும் பான்மையான மற்றவர்களும் அதே மாதிரியான வாழ்க்கை

யைத்தான் நடத்தி வந்தார்கள்—படிப்படியாக அதன் புது மலர்ச்சியை இழக்கத் தொடங்கியது. குறியோ பயனோ இல்லாத வாழ்க்கையின் சலிப்புத் தருகின்ற அன்றாடப் பணிகளில் நான் மூழ்கிக்கொண்டிருப்பதை உணர்ந்தேன்'' என்று அவர் பிற்காலத்தில் எழுதினார். ஜவகர்லால் அவ்வப்பொழுது மற்ற வழக்குரைஞர்கள் கூடுகின்ற நூலகத்துக்கு அல்லது பொழுதுபோக்கு மன்றத்துக்குச் செல்வார். ஆனால் இரண்டு இடங்களிலும் அதே நபர்களைத்தான் அவர் பார்த்தார். அவர்கள் ''தம் தொழிலோடு சம்பந்தப்பட்ட அதே பழைய விஷயங்களைத்தான் திரும்பத் திரும்ப விவாதித்துக் கொண்டிருந்தார்கள்... உயர்ந்த பதவிகளை வகிக்கும் அதிகாரிகளோடு உட்கார்ந்து பதவி உயர்வுகள், விடுப்பு விதிகள், பதவி மாற்றங்கள், ஊழல்கள் சம்பந்தமான சில்லறைச் செய்திகளைப் பற்றி அவர்கள் முடிவேயில்லாமல் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருப்பதைக் காட்டிலும் அலுப்பூட்டுகின்ற அனுபவங்கள் வேறு இருக்க முடியாது.'' ''அதிகாரவர்க்க மனநிலையைப்'' பற்றி ஜவகர்லால் கொண்டிருந்த எதிர்ப்புணர்ச்சி மேலும் உறுதியடைந்தது. உண்மையான வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி தங்களுடைய பாதுகாப்பான, காற்றோட்டமில்லாத உலகத்தில் அடைந்துகிடக்கின்ற சகவழக்கறிஞர்களோடு இனியும் சேர்ந்திருக்க ஜவகர்லால் விரும்பவில்லை. அந்த விருப்பமின்மையே தார்மிகச் சூழலை மாற்ற, ''நடவடிக்கையின் மூலமாக வாழ்க்கையை அனுபவிக்க'' வேண்டுமென்னும் உந்துதலை அவரிடம் ஏற்படுத்தியது.

ஜவகர்லால் 1912 டிசம்பரில் பங்கிப்பூரில் நடைபெற்ற இந்திய தேசியக் காங்கிரஸ் மாநாட்டில் முதல் தடவையாகக் கலந்து கொண்டார்.

திலகர் சிறையிலிருந்தபடியால் தலைவரை இழந்த தீவிரவாதிகள் மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. ஆகவே எல்லாப் பிரதிநிதிகளுமே மிதவாதிகளாக இருந்தார்கள். அவர்களில் பெரும்பான்மையானவர்கள் சொத்துடைமை வர்க்கத்தினரின் பிரதிநிதிகளாக இருந்தார்கள். காங்கிரசில் அவர்கள் குரல் ஓங்கியிருந்தது. மாநாட்டு அரங்கத்தில் ஆங்கில மொழி ஒலித்தது, அலங்காரமான ஐரோப்பிய உடையணிந்த பிரதிநிதிகள் இங்குமங்கும் போய்க் கொண்டிருந்தார்கள். பிரதிநிதிகளின் மிகையான நாகரிக பாவனைகளும் பகட்டும் குறிப்பிடத்தக்க முறையில் இருந்தன.

ஒருவர் பின் ஒருவராக உரையாற்றினார்கள். காலனி யாதிக்க ஆட்சியாளர்கள் இந்தியாவுக்கு வழங்கியிருக்கும் ரொட்டித் துண்டுகளை, மின்டோ-மார்லி சீர்திருத்தங்களின் மூலம் ஏற்படப் போகும் சட்டமியற்றும் கவுன்சில்களைப் பற்றி பல பேச்சாளர்கள் தங்களுடைய திருப்தியைத் தெரிவித்தார்கள். காங்கிரசின் நடவடிக்கைகள் மிகவும் அதிகமான அளவுக்கு சட்ட பூர்வமான முறைகளை ஒட்டியிருக்க வேண்டும் என்று பேச்சாளர்கள் வற்புறுத்தினார்கள். திலகரின் ஆதரவாளர்கள் ''மிகவும் தீவிரவாதிகளாக'' இருக்கிறார்கள் என்று கண்டனம் செய்தார்கள். பெருந்திரளான மக்களைக் காங்கிரசின் நடவடிக்கைகளுக்கு ஈர்ப்பதைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. பங்கிப்பூரில் மிதவாத உணர்ச்சி ஆட்சி செலுத்தியது. அங்கே கருத்து வேறுபாடுகளோ விவாதங்களோ இல்லை. ''அது சாராம்சத்தில் ஒரு சம்பிரதாயமான சந்திப்பாக இருந்தது; அரசியல் உணர்ச்சியோ பரபரப்போ கிடையாது'' என்று ஜவகர்லால் பின்னர் எழுதினார். தென் ஆப்பிரிக்காவில் சட்ட பூர்வமான உரிமைகள் இல்லாதிருக்கும் ஒரு இலட்சத்துக்கும் அதிகமான இந்தியர்களுடைய நிலைமையின் பிரச்சினையைப் பற்றி விவாதம் நடைபெற்ற நேரத்தில் லேசான ஆர்வம் காணப்பட்டது. விவாதம் முடிந்தவுடன் மறுபடியும் அமைதி, அலட்சியம், அக்கறையின்மை ஏற்பட்டது... மாநாட்டைப் பற்றி ஜவகர்லால் ஏமாற்றமடைந்தார். ''நாகரிகமான மேன்மக்கள்! சாய்வு நாற்காலி அரசியல் வாதிகளுக்கு ஓய்வு நேரப் பொழுதுபோக்கு'' என்று அந்த மாநாட்டைப் பற்றி எழுதினார்.

மகனுடைய முடிவை மோதிலால் நேரு ஒத்துக்கொள்ளவில்லை. ஜவகர்லால் மிகவும் அவசரப்பட்டு முடிவு செய்துவிட்டதாக நினைத்தார். இது ஆரம்பம்தானே? அதற்குள் முடிவு கட்டிவிடலாமா? மனதில் முதலில் தோன்றும் அபிப்பிராயங்கள் எப்பொழுதுமே மிகவும் சரியாக இருக்காது.

ஜவகர்லால் அங்கே கண்டவற்றில், கேட்டவற்றில் மிகவும் மறக்க முடியாதது கோக்கலேயோடு அவருடைய சந்திப்பே. மாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகள் எத்தகைய தனித்தன்மையும் இல்லாதவர்கள் என்று ஜவகர்லாலுக்குத் தோன்றியது. அவர்கள் மத்தியில் மரபுவழிப்பட்ட மராத்திய உடையான கோட்டும் வேட்டியும் இரத்தச் சிவப்பு நிற

பட்டுத் தலைப்பாகையும் அணிந்த கோக்கலே தனிச்சிறப்போடு விளங்கினார். அவருடைய மொத்தையான முகம் வெளுப்பாகத் தெரிந்தது, அவருடைய மூக்குக் கண்ணாடிகளுக்குப் பின்னால் பெரிய கண்கள் ஆரோக்கியமில்லாத, காய்ச்சலால் பாதிக்கப் பட்டதைப் போல சிவந்திருந்தன. எவ்விதமான வன்முறை யையும் அவர் உறுதியாக எதிர்ப்பவர். எனினும் மாநாட்டில் நடைபெற்ற ஒவ்வொன்றும் அவருக்குக் கவலையைத் தந்தது. காங்கிரஸ் ஸ்தாபனத்தில் இரத்தச் சோகையும் தேக்கமும் அதிகரிப்பதைப் பார்த்து அவர் வேதனைப்பட்டார்.

கோக்கலே 1905ம் வருடத்தில் தொடங்கிய இந்திய ஊழியர் சங்கத்தைப் பற்றி ஜவகர்லால் ஒரு காலத்தில் மிகவும் அக்கறை கொண்டிருந்தார். அவர் இச்சங்கத்தில் சேர உத்தே சிக்கவில்லை (அச்சங்கத்தினரின் அரசியல் நடவடிக்கை அதி கமான அளவுக்குத் தீர்மானமில்லாதிருப்பதாக அவருக்குத் தோன்றியது, மேலும் அவர் அப்பொழுது வழக்குரைஞர் தொழிலை விட்டுவிட நினைக்கவில்லை). எனினும் அச்சங்கத்தின் உறுப்பினர்களின் தனிப்பட்ட நேர்மையும் அவர்களுடைய நம்பிக்கை உறுதியும் தன்னலமின்மையும் அவர் மீது ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தின.

''இது பூராவுமே சரியான பாதையில் இல்லை என்ற போதிலும் குறைந்த பட்சம் இங்காவது நேரடியான, ஒரு மனதான, தொடர்ச்சியான வேலை நடைபெறுகிறது'' என்று அவர் பிற்காலத்தில் எழுதினார்.

ஜவகர்லாலின் அரசியல் கருத்துக்கள் இன்னும் தெளிவற்ற நிலையில்தான் இருந்தன. 1912ம் வருடத்தில் அவர் காங் கிரசில் சேர்ந்த போதிலும் அதன் நடவடிக்கைகளில் தீவிர மாகப் பங்கெடுக்கவில்லை. அவர் அப்பொழுது தன்னை ''மிகவும் பரிசுத்தமான தேசியவாதியாகக்'' கருதினார். தீவிர வாதிகளில் பலரும் வலியுறுத்திய வன்முறைக் கொள்கையை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும் அவர்களிடம் அனு தாபம் காட்டினார் என்பது தெளிவு.

அன்றைய நிலை அவருக்கு திருப்தியளிக்கவில்லை. அந்நிய ஆட்சியாளர்களின் பால் அதிக எதிர்ப்பான, போர்க் குணமிக்க அணுகுமுறையைக் கடைப்பிடிப்பது அவசியம் என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டார். ஆனால் எந்த நிலை? அவரோடு சேர்ந்து நிற்பவர் யார்? அவர் யாரை

நம்ப முடியும்? இப்படிப் பல கேள்விகள் எழுந்தன. அப்போ தைக்கு ஜவகர்லாலினல் இந்தக் கேள்விகளுக்கு விடைகளைக் காண முடியவில்லை.

தத்துவஞானத்தில் அவருக்கு அக்கறை ஏற்பட்டது. பல வருடங்களாகவே பெர்ட்ரான் ரஸ்ஸலின் எழுத்துக்களில் அவருக்கு நாட்டம் அதிகம். **மதமும் விஞ்ஞானமும், சுதந்திர மான மனிதனின் வழிபாடு** என்ற புத்தகங்களைத் திரும்பத் திரும்பப் படித்தார். ''மேற்குடியில் பிறந்த கிளர்ச்சிக்கார ரான'' ரஸ்ஸலின் போர்க்குணமிக்க நாத்திகம், அவருடைய சுதந்திரமான சிந்தனை, அவநம்பிக்கையான முடிவுகள் நேரு வுக்கு அறிவுபூர்வமான மகிழ்ச்சியைக் கொடுத்தன, அவருடைய பகுத்தறிவைத் தூண்டின.

உலகம் ஆபத்தான நிலைமையை எட்டிக் கொண்டிருந்தது. அவர் அந்த நிலைமையின் வளர்ச்சியை நுணுக்கமாக கவனித்துக் கொண்டிருந்தார்.

துருக்கி மீது இத்தாலி படையெடுத்தது. பிறகு இத்தா லிய துருப்புகள் திரிபோலி, கிரிஞயிக்கா, டோடெக்கானெஸ் தீவுகளை ஆக்கிரமித்தன. அதன் பிறகு 1912-1913ம் வருடங் களில் பால்கன் யுத்தங்கள் வெடித்தன. இந்தியர்கள், குறிப் பாக முஸ்லிம்கள் துருக்கியின் மீது முழு அனுதாபம் காட்டி ஞர்கள். இந்தியாவிலிருந்து ஒரு மருத்துவக் குழு துருக்கியர் களுக்கு உதவி செய்வதற்கு அனுப்பப்பட்டது.

இந்தியாவில் முஸ்லிம்களின் இயக்கம் அகண்ட இஸ்லா மிய பச்சைக் கொடியின் கீழ் புத்துயிர் பெற்றது. ஆங்கில ஆட்சியின் பாதுகாப்போடு அமைக்கப்பட்ட முஸ்லிம் லீக் அந்த இயக்கத்துக்குத் தலைமை தாங்கியது. காலனியாதிக்க வாதிகள் பிரித்தாளுகின்ற கொள்கையைக் கடைப்பிடிப்ப வர்கள் என்பதால் இந்துக்கள் மற்றும் முஸ்லிம்களின் தேசிய நலன்களை எதிர்ப்பதற்கு, அவர்கள் இருவரும் மோதிக் கொள் ளும்படி செய்வதற்கு, இந்திய நாட்டை இரண்டு எதிர் முகாம்களாகப் பிரிப்பதற்கு, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக் கத்துக்கு ஓரளவு அபாயத்தைப் பிரதிநிதித்துவப்படுத்திய சக்திகளைப் பலவீனப்படுத்துவதற்கு தங்கள் சக்திக்கு உட் பட்ட எல்லாவற்றையும் செய்தார்கள்.

சராயெவோ என்ற நகரத்தில் பதினெட்டு வயதான கவ்ரீலோ பிரின்சிப்பின் துப்பாக்கியிலிருந்து குண்டுகள் வெடித்

தன். அதற்கு மறுமொழியாக ஐரோப்பாக் கண்டம் முழுவதி லும் பீரங்கிகளின் இடிமுழக்கமும் குண்டுகள், கண்ணி கள், வெடிகுண்டுகள் வெடிக்கும் பயங்கர ஓசையும் கேட்டது. உலக பூகோளப் படத்தைத் தங்களுடைய சொந்த நலன் களுக்குத்தக்க முறையில் திருத்தி வரைய விரும்பிய பலம் மிக்க ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கிடையே மிகவும் பயங் கரமான யுத்தம் நடைபெறும் களமாக 1914 ஆகஸ்ட்டில் ஐரோப்பா மாறியது.

முதல் உலக யுத்தத்தின் சண்டைகள் இந்தியாவுக்கு வெகு தூரத்துக்கு அப்பால் நடைபெற்றன. அவை இந்திய மக்களுக்குப் புரியாதவையாக, அந்நியமானவையாக இருந் தன. அவர்கள் துருக்கியின் மீது அனுதாபம் காட்டியதால் அதன் கூட்டாளியான ஜெர்மனிக்கு எதிர்ப்பாக இருக்கவில்லை. ஆனால் இந்தியா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதி; எனவே மனிதகுலம் இதுவரை கண்டிராத இரத்தக்களறியான யுத்தத்தினுள் இந்தியாவும் இழுக்கப்பட்டது.

ஜவகர்லாலின் உணர்வில் யுத்தம் என்ற கருத்தே அந்நிய மானதாகும். அவர் இரண்டில் எந்தத் தரப்பையும் ஆதரிக்க வில்லை. ஆனால் அவருடைய நண்பர்கள் மத்தியில் ஜெர் மனிக்கு ஆதரவான மனோபாவம் நிலவியது. கெய்ஸர் அரசாங் கத்தின் மீது அனுதாபத்தைக் காட்டிலும் தங்களை அடிமைப் படுத்திய ஆங்கிலேயர்கள் தோல்வியடைவதைப் பார்க்க வேண் டுமென்ற ஆசை இதற்குக் காரணமாகும். யுத்தத்தில் ஈடுபட் டிருந்த எல்லா நாடுகளிலும் பிரான்சின் மீதுதான் ஜவகர் லாலுக்கு அதிகமான அனுதாபம் ஏற்பட்டிருந்தது. ஜெர்மனி யோடு செய்யப்படும் யுத்தத்தின் பிரதான சுமையைப் பிரான்ஸ் தாங்கிக் கொண்டிருப்பதாக அவர் கருதினார். ''ஏராளமான இளம் உயிர்களைப் பலிகொடுக்கின்ற மாபெரும் விலையைக் கொடுத்து ஜெர்மன் இராணுவ இயந்திரத்தைச் சமாளித்துக் கொண்டிருப்பவர்கள் பிரெஞ்சுக்காரர்கள்தான்'' என்று எழுதினார். இது தவிர பிரெஞ்சு மக்களின் வரலாறு மற்றும் கலாச்சாரத்தின் பால் நேரு எப்போதும் உயிரோட்ட முள்ள ஆர்வம் கொண்டிருந்தார்.

இந்திய தேசிய காங்கிரசின் பிரமுகர்கள் சிலர் இந்த நேரத்தில் பிரிட்டனின் சிம்மாசனத்துக்கு விசுவாசத்தைக் காட்டினால் உடனடியாக வெகுமதிகள் கிடைக்கும் என்று

நினைத்தார்கள். எனவே யுத்தத்தில் பிரிட்டனுக்கு ஆதரவு கொடுக்க வேண்டுமென்று வலியுறுத்தினார்கள்.

அதே சமயத்தில் அதிகாரிகள் ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் பற்றிப் பேசினார்கள், தேசங்களின் சுயநிர்ணய உரிமைகளைப் பற்றிக்கூடப் பேசினார்கள். யுத்தம் முடிந்த பிறகு பிரிட்டன் ''புதிய பார்வைக் கோணத்தில்'' இந்தியாவைப் பற்றிய அணுகுமுறையைப் பரிசீலிக்கும் என்று அவர்கள் பிரிட்டிஷ் அரசியல்வாதிகளுக்கே உரிய உண்மையான தெளிவற்ற முறையில் கூறினார்கள். கடைசியில் இத்தகைய அறிக்கைகள் கனவுகாண்பதில் ஈடுபாடுடைய காங்கிரஸ் உறுப்பினர்களை வெகுமதி கிடைத்து விட்டது என்று நம்பச் செய்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அதிகார எல்லைக்குள் இந்தியாவுக்கு சுய நிர்வாகம் கொடுக்கப்படும்! ஆறு வருட சிறை வாசத்துக்குப் பிறகு திலகர் அப்பொழுதுதான் விடுதலை அடைந்திருந்தார். ஆங்கிலேயர்களின் வாக்குறுதிகள் அவரைப் போன்ற அனுபவமிக்க அரசியல்வாதியைக்கூட பாதித்தன.

''மாட்சிமை தங்கிய மன்னருடைய அரசாங்கத்துக்கு ஆபத்தேற்பட்டிருக்கும் இந்த நேரத்தில் உங்கள் முழு பலத்தோடும் அதை ஆதரியுங்கள்!'' என்று அவர் மக்களை அறை கூவினார்.

இந்திய இளைஞர்களுக்கு இராணுவப் பயிற்சி அவசியம், அவர்கள் ஆயுதங்களை உபயோகிக்கக் கற்றுக் கொள்வது அவசியம் என்று கருதிய ஜவகர்லால் ஐரோப்பிய முறையில் அமைக்கப்பட்டுக் கொண்டிருந்த பாதுகாப்புப் படையில் சேருவதற்கு மனுச் செய்தார். நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் கிராமத்திலும் இராணுவத்துக்கு ஆள்சேர்க்கும் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அலகபாத்திலும் அப்படி ஒரு குழு இருந்தது. ஜவகர்லால் அந்தக் குழுவின் பணிகளில் ஒத்துழைத்தார்.

சுமார் பதினைந்து லட்சம் இந்தியர்கள் மெசபொடாமியா, சிரியா, பாலஸ்தீனம் மற்றும் அராபிய தீபகற்பத்தின் புதைமணலில் போரிட்டனர், எகிப்தைக் காத்து நின்றார்கள், ஆப்பிரிக்காவிலும் இரானிலும் ஆப்கானிஸ்தானத்திலும் யுத்தத்தில் ஈடுபட்டார்கள்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவை ''பீரங்கித் தீனி'' கொடுக்கும் நாடாக மட்டும் உபயோகிக்கவில்லை; இந்தியாவிலிருந்து

மூலப்பொருள்களையும் உணவுப் பொருள்களையும் பணத்தை யும் கொள்ளையடித்துக் கொண்டு போனார்கள். இந்தியாவில் மாங்கனீஸ் தாது, மைக்கா, வெடியுப்பு முதலியவற்றை நகைப்புக்கிடமளிக்கும் குறைவான விலைகளில் வாங்கிக் கப்பல் களில் ஏற்றி பிரிட்டனுக்கும் அன்டான்டு நாடுகளுக்கும் அனுப்பினார்கள். பாதி பட்டினி, பாதி ஏழ்மையில் உள்ள இந்திய விவசாயிகள் உழைத்துப் பாடுபட்டு உற்பத்தி செய்த கோதுமை, தேயிலை, தேங்காய், சணல் முதலியவற்றை இலவ சமாகக் கொடுப்பது போல மிகவும் குறைவான விலைக்கு விற்பனை செய்யுமாறு கட்டாயப்படுத்தப்பட்டார்கள்.

காலனியாதிக்கவாதிகள் இந்தியாவின் இயற்கைச் செல் வங்களை ஏற்றுமதி செய்ததோடு நின்று விடவில்லை. அவர் களுடைய கொள்ளை மென்மேலும் புதிய பரிமாணங்களை அடைந்தது. நூற்றுக்கணக்கான கிலோமீட்டர் இரயில் தண்ட வாளங்களை, ஆயிரக்கணக்கான பாலங்களைக் கழற்றியெடுத்து ஏற்றுமதி செய்தார்கள். டஜன்கணக்கான இரயில் என்ஜின் களும் ஆயிரக்கணக்கான இரயில் பெட்டிகளும் போர்முனைக்கு அனுப்பப்பட்டன. இந்தியாவின் ஆறுகளில் மிதந்து கொண்டி ருந்த கப்பல்களைப் பிரித்து அனுப்பி டைக்ரிஸ், எப்ராட்டு நதிகளில் கப்பற்படைகளை அமைத்தார்கள்.

இந்தியாவில் எல்லா தொழில் துறை நிறுவனங்களும் யுத்த வேலைகளைத்தான் செய்தன. தொழிலூக்கம் கொண்ட ஜெம்ஷெட்ஜி டாட்டாவினால் (அவர் பிற்காலத்தில் இந்தி யாவின் மிகப் பெரிய தொழிலதிபர்களில் ஒருவரானார்) நாட் டிலேயே முதல் இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்தியிருந் தார். அந்தத் தொழிற்சாலை அண்மைக் கிழக்குப் போர்முனை களில் ஆங்கிலேயர்களால் அவசரமாக அமைக்கப்பட்ட இரயில் போக்குவரத்துப் பாதைகளுக்குத் தேவையான தண்டவாளங் கள் கிட்டத்தட்ட அனைத்தையுமே அனுப்பியது. இந்திய நெசவாளர்கள் பிரிட்டிஷ் துருப்புகளுக்கும் அவர்களுடைய கூட்டாளிகளுக்கும் பல்லாயிரக்கணக்கான இராணுவ உடை களையும் கூடாரத் துணிகளையும் போர்வைகளையும் அனுப் பினார்கள்.

சாதாரண இந்தியர்களால் தாங்க முடியாத அளவுக்கு வரிகள் உத்தேசமாக இரண்டு மடங்கு அதிகரித்தன. காலனி யாதிக்கவாதிகள் தங்களுடைய லாபங்களை அதிகப்படுத்துவ

தற்கு எல்லாவகையான தந்திரங்களையுமே கடைப்பிடித்தார்கள். ''யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவதற்காக நன்கொடைகள்'' அல்லது ''யுத்தக் கடன்கள்'' என்ற பெயரில் கோடிக்கணக்கான பவுன்கள் பிரிட்டனுக்குக் கிடைத்தன.

அன்டான்டு நாடுகளுக்கும் எல்லாவற்றுக்கும் மேலாக கிரேட் பிரிட்டனுக்கும் இந்தியா கொடுத்த உதவியின் முக்கியத்துவத்தைப் பற்றி பர்க்கென்ஹெட் பிரபு பின்வருமாறு கூறியது பொருத்தமானதே: ''இந்தியாவின் உதவி இல்லாமல் யுத்தத்தை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டு வந்திருக்கலாம் என்றாலும்கூட இந்தியா இல்லாமலிருந்தால் யுத்தம் நெடுங்காலம் நீடித்திருக்கும்.''

தேசியவாதிகளில் பெரும்பான்மையினர் படிப்படியாக இதே முடிவுக்கு வந்தார்கள். யுத்தத்தின் காரணமாக தேசிய சுய உணர்ச்சி வளர்ச்சியடைந்தது. அன்னி பெஸன்ட் உணர்ச்சியோடு கூறிய வார்த்தைகள் நாடு முழுவதும் பரவின: ''சிறிய போயர் இனம் பிரிட்டிஷ்காரர்களை எதிர்த்துப் போராடியது. அவர்கள் சுதந்திரத்தைப் பெறுவதற்குத் தகுதி உடையவர்கள் என்றால் இன்று பிரிட்டனுக்காக யுத்தம் செய்து கொண்டிருக்கும் இந்தியர்களும்... சுதந்திரத்துக்குத் தகுதி உடையவர்களே.''

அரசியல் வாழ்க்கை மெதுவாகப் புத்துயிர் பெறத் தொடங்கியது. ஆறு வருட காலமாக நிறுத்தி வைக்கப் பட்டிருந்த காலனி எதிர்ப்பு இயக்கம் மறுபடியும் தன் பலத்தைத் திரட்டத் தொடங்கியது. தீவிரவாதிகள் மறுபடியும் காங்கிரசுக்குள் வருவதைப் பற்றி திலகருக்கும் கோக்கலேக்குமிடையே பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்தன. முஸ்லிம் லீக் கட்சியும் காங்கிரசோடு ஒத்துழைப்பதற்கு ஆர்வம் காட்டியது. முகம்மது அலி ஜின்னாவைத் தலைவராகக் கொண்டிருந்த அதன் புதிய தலைமை பிரிட்டன் துருக்கியைப் பற்றி விரோதமான கொள்கையைக் கடைப்பிடிப்பதைப் பற்றி அதிருப்தியைக் கொண்டிருந்தது, இந்தியாவுக்கு சுய நிர்வாகம் என்ற கோரிக்கையை ஆதரித்தது, அந்த அடிப்படையில் காங்கிரஸ்காரர்களோடு சேர்ந்து பாடுபடத் தயாராக இருந்தது.

போலீஸ் அடக்குமுறை, காட்டு மிராண்டித்தனமான தணிக்கை விதிகள், 1915ம் வருடத்தில் நிறைவேற்றப்பட்ட

இந்தியப் பாதுகாப்புச் சட்டம் (அதன்படி ஏற்படுத்தப்பட்ட விசேஷ நீதி மன்றங்களின் தீர்ப்பை எதிர்த்து மேன்முறையீடு செய்ய முடியாது) ஆகியவை மக்களிடையே மேலும் அதிக மான அதிருப்தியைத் தூண்டின.

1916 ஏப்ரல் மாதத்தில் மகாராஷ்டிரத்தில் திலகரும் சென்னையில் அன்னி பெஸன்ட்டும் ஹோம்ரூல் சங்கங்களைத்* தொடங்கினார்கள். இரண்டு சங்கங்களுமே பிரிட்டிஷ் சாம் ராஜ்யத்தின் அதிகார எல்லைக்குள் சட்டபூர்வமான வழி களின் மூலம் இந்தியாவுக்கு சுயநிர்வாக உரிமையைப் பெறு தல் என்ற ஒரே நோக்கத்தைக் கொண்டிருந்தன. இந்தியா வுக்கு சுயநிர்வாக உரிமையைக் கொடுப்பதற்குக் கெடுவைக்க அன்னி பெஸன்ட் விரும்பவில்லை. ஆனால் திலகர் அதிகத் தீர்மானத்தோடு நடந்து கொண்டார். ஆங்கில அரசாங்கம் தன்னுடைய வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டும், இந் தியர்களுடைய கோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்ற வேண்டும் என்று வற்புறுத்தினார்.

ஜவகர்லால் இரண்டு சங்கங்களிலுமே சேர்ந்தார். திலக ருடைய நிலை அவருக்கு அதிகம் உடன்பாடாக இருந்திருந் தாலும் பிரதானமாக அன்னி பெஸன்ட்டோடுதான் இணைந்து வேலை செய்தார். அவர்களுக்கிடையே இருந்த பழைய நட் புறவுத் தொடர்புகளை நினைக்கும்பொழுது இது இயற்கையே.

இந்தியாவில் தோன்றிக்கொண்டிருந்த புதிய ஸ்தாபனங் களை ஆங்கிலேயர்கள் முதலில் அவ்வளவு முக்கியமாகக் கருத வில்லை. இந்தியாவுக்கு சுயநிர்வாக உரிமை வழங்க வேண் டும் என்ற பழைய கோரிக்கைகளுக்கு அப்பால் ஹோம்ரூல் இயக்கத் தலைவர்கள் போகவில்லை. இந்தியாவையும் பிரிட் டனையும் நெருக்கமாகக் கொண்டு வருவதற்குத் தன்னுடைய சங்கம் எல்லா முயற்சிகளையும் செய்யும் என்று அன்னி பெஸன்ட் அடிக்கடி வற்புறுத்தியதும் ஆங்கிலேயர்களுக்கு திருப்தியைக் கொடுத்தது.

ஹோம்ரூல் இயக்கம் சீக்கிரத்திலேயே பரவத் தொடங்

---

* ஹோம்ரூல் என்ற சொல்லை அயர்லாந்தின் தேசிய விடுதலை இயக்கம் முதலில் உபயோகித்தது. அயர்லாந்துக்காரர்கள் அப்பொழுது சுதந்திரமான நாடாளுமன்றத்துக்கும் அந்த நாடாளுமன்றத்துக்கு (பிரிட்டிஷ் நாடாளுமன்றத் துக்கு அல்ல) கட்டுப்பட்ட அரசாங்கத்தை அமைக்கும் உரிமைக்காகவும் போராடிக் கொண்டிருந்தார்கள்.

கியது. தேசிய காங்கிரசுக்கும் இந்த சங்கங்களுக்கும்—குறிப் பாக திலகருடைய தலைமையிலிருந்த சங்கத்துக்கும்—வேறு பாடு என்னவென்றால் விவசாயிகளும் கைவினைஞர்களும் தொழிலாளர்களும் இவற்றில் உறுப்பினராக முடியும். ''சட்ட பூர்வ வழிகளில்'' அவநம்பிக்கை கொண்டு ஹோம்ரூல் இயக் கத்தில் ஈடுபட்டவர்கள் மேலும் தீர்மானமான நடவடிக் கைகளில் ஈடுபட வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இந்த விவகாரம் வெறும் வார்த்தைகளோடு நின்று விடவில்லை: சில இடங்களில் காலனியாதிக்க அரசாங்கத் துருப்புகளுக்கும் இந்தியர்களுக்குமிடையே மோதல்கள் ஏற்பட்டிருந்தன. ஆயு தங்கள் பயன்படுத்தப்படலாயின.

இரண்டு சங்கங்களின் நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்த முடியும், தெளிவாக வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் அவற்றின் நடவடிக்கைகளைக் குறுக்கிவிட முடியும் என்று நினைத்த அதிகாரிகளுக்கு இத்தகைய வளர்ச்சி திருப்தியளிக்க வில்லை. மறுபடியும் அடக்குமுறை தொடங்கியது. அதிகாரி கள் **1917** ஜூன் **16**ந் தேதியன்று அன்னி பெஸன்ட்டையும் மற்ற ஹோம்ரூல் இயக்கத் தலைவர்களையும் கைது செய்தார் கள். மக்களின் பேராதரவைப் பெற்ற திலகரை மட்டும் கைது செய்யாமல் விட்டு வைத்தார்கள். ஹோம்ரூல் சங்கங் கள் நடத்தும் பொதுக்கூட்டங்களில் மாணவர்கள் பங்கு கொண்டால் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப் படுவார்கள் என்று எச்சரிக்கை செய்யப்பட்டது.

ஹோம்ரூல் இயக்கத்துக்குப் புதிய நண்பர்கள் தோன் றினார்கள். அன்னி பெஸன்ட் கைது செய்யப்பட்டது மோதி லால் நேருவோடு தொடர்புடைய காங்கிரஸ் உறுப்பினர் கள் கோஷ்டியை ஹோம்ரூல் சங்கத்தில் உறுப்பினராகச் சேரத் தூண்டியது. ஜூன் 22ந் தேதியன்று அலகபாத் ஹோம்ரூல் சங்கத்தின் தலைவராக மோதிலால் நேரு தேர்ந் தெடுக்கப்பட்டார். ஜவகர்லால் நேரு காரியதரிசி பொறுப் பேற்றார். மோதிலாலின் மனோபாவத்தில் ஏற்படுகின்ற ஒவ் வொரு மாற்றத்தையும் ஜவகர்லால் கூருணர்ச்சியோடு கண் டறியக் கூடியவர். தன் தகப்பனாருடைய இதயத்தில் ஒரு வேதனையான போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது, பல வருடங்களாக அவர் உருவாக்கியுள்ள அலட்சியம் என்ற முகமூடியால் அதை மறைத்துக்கொண்டிருக்கிறார் என்று

ஜவகர்லால் கருதினர். மோதிலால் தன்னுடைய அரசியல் சித்தாந்தத்தில் முன்னர் தனக்கிருந்த நம்பிக்கையை இழந்து கொண்டிருந்தார். அவருக்கு அது வேதனையான அனுபவமாக இருந்தது. மிதவாதிகளால் இந்தியாவுக்கு சுயராஜ்யம் (சுய நிர்வாகம்) வாங்கித்தர முடியாது என்ற உறுதி அவருக் கேற்பட்டது. அவர் படிப்படியாக மிதவாதிகளிடமிருந்து வில கிக்கொண்டார். ஆனல் தீவிரவாதிகளோடு நெருக்கமான தொடர்பு வைப்பதைப் பற்றி நினைத்துப் பார்க்கக் கூட அவர் விரும்பவில்லை.

''நம்மைப் புறக்கணித்து அவமதிக்கின்ற அதிகாரிகளிடம் நாம் காட்டும் மிகையான பணிவும் அவர்களுக்கு வேண்டு கோள் விடுப்பதற்குச் செய்கின்ற முயற்சிகளும் கேவலமா னவை. மிதவாதிகளுடைய செயல்தந்திரம் எவ்விதத்திலும் பொருத்தமல்ல'' என்று அவர் அக்காலத்தில் ஜவகர்லாலிடம் கூறுவார்.

தன்னுடைய அரசியல் நிலை சரிதான என்பதைப் பற்றி மோதிலால் சந்தேகமடைந்தார். அதே சமயத்தில் தன்னு டைய மகனைப் பற்றியும் கவலைப்பட்டார். ஜவகர்லால் தீவிர வாதிகளிடம் அதிகமான அனுதாபம் கொண்டிருப்பதாக மோதிலாலுக்குத் தோன்றியது. ''வெறும் பேச்சில் மட்டும் ஈடுபடுகின்ற கொள்கை'' உபயோகமற்றது, நடவடிக்கைகளில் ஈடுபடுவது அவசியமானது என்ற விஷயங்களைப் பற்றி விவா திப்பது தன் மகனை நெடுந்தொலைவுக்கு இட்டுச் செல்லக் கூடும் என்று அவர் கருதினர்.

...1916ம் வருடத்தில் நேருவின் குடும்பத்தில் ஒரு முக் கியமான நிகழ்ச்சி, ஜவகர்லாலுக்குத் திருமணம் நடை பெற்றது. வசந்த பஞ்சமி நாளன்று திருமண விழா சிறப் புடன் கொண்டாடப்பட்டது. கல்வி மற்றும் கலைகளின் கட வுளான சரஸ்வதிக்கு அர்ப்பணிக்கப்பட்ட அந்த தினம் (பிப்ர வரி 8ந் தேதி) திருமணம் செய்வதற்கு மிகவும் பொருத் தமான நாள், அன்று திருமணம் செய்துகொள்ளும் இளந் தம்பதிகள் இன்பமான வாழ்க்கை நடத்துவார்கள் என்பது மரபு.

ஜவகர்லாலுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகளான கமலா கௌல் டில்லியில் காஷ்மீர பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த ஜவகர்முல் கௌலின் குடும்பத்தில் 1899ஆம் ஆண்டு

ஆகஸ்டு 1ஆம் தேதி பிறந்தவர். மோதிலால் நேரு 1912 ஏப்ரலில் லண்டனிலிருக்கும் தன்னுடைய மகனுக்கு எழுதிய கடிதத்தில் அவளைப் பற்றிய முதல் குறிப்பு காணப்படுகிறது. தன்னுடைய உறவினர்களில் ஒருவர் டில்லியில் சிறந்த அழகுடைய ஒரு பெண்ணைப் பார்த்ததாகவும், அந்தப் பெண்ணையும் அவள் குடும்பத்தினரையும் நீங்கள் சந்திக்க வேண்டும், ஜவகர்லாலுக்குத் திருமணம் செய்வதற்கு வேறு எந்தப் பெண்ணையும் நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்று அவர் வற்புறுத்திவருவதாகவும் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தார். இதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு மோதிலால் டில்லிக்குச் சென்று அந்த நங்கையைப் பார்த்துவிட்டுத் திரும்பினார். பதின்மூன்று வயதான கமலா கௌலின் அழகைப் பற்றிக் குறிப்பிட்ட பிறகு அவளைக் காட்டிலும் வேறு அழகான பெண் இருக்க முடியாது என்று எழுதினார்.

ஆரம்பத்தில் ஜவகர்லால் இதைப் பற்றி அவ்வளவாக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. ''டில்லிப் பெண்ணைப் பொறுத்தவரை, என்னோடு ஒப்பிடும் பொழுது அவள் மிகவும் குறைந்த வயதுடையவளாக இருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை. எனக்கு அவளைக் காட்டிலும் பத்து வயது அதிகம். வயது வித்தியாசம் மிகவும் அதிகமே. அவளுக்குப் 18 அல்லது 19 வயதாகும் வரை, அதாவது இன்னும் ஆறு அல்லது ஏழு வருடங்கள் வரையிலும் நான் அவளைத் திருமணம் செய்து கொள்வது சாத்தியமல்ல. நான் காத்திருக்கத் தயார். ஏனென்றால் இப்பொழுது திருமணத்தைப் பற்றி நான் நினைக்கவில்லை'' என்று ஜவகர்லால் பதில் எழுதினார். எனினும் மோதிலால் நேரு அனுப்பியிருந்த கமலாவின் புகைப்படம் ஜவகர்லாலைக் கவர்ந்தது. ''தோற்றத்தைப் பற்றி எழுதியிருக்கிறீர்கள். அழகானவர்களைப் பார்க்கும் பொழுது அதிகமான மகிழ்ச்சியை அனுபவிக்காமல் யாரால் இருக்க முடியும்? அகப் பண்புகளைப் பொறுத்தே முகத் தோற்றம் அமையும் என்று நீங்கள் எழுதியிருப்பது முற்றிலும் சரியானதென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் சில சமயங்களில் அப்படி இல்லாமலும் இருக்கலாம்.''

ஜவகர்லால் கமலாவை முதல் தடவையாகப் பார்த்த பொழுது அவளுக்குப் பதினாறு வயது முடிந்திருந்தது. ஜவகர்லாலின் தங்கையான கிருஷ்ணா பின்வருமாறு எழுதினாள்:

''அவளுக்கு வயது பதினாறு; மிகவும் அழகாக இருந்தாள். ஒல்லியான உடல், ஒரு இந்தியப் பெண்ணுடைய சராசரி உயரத்தைக் காட்டிலும் அதிகமான உயரம், காஷ்மீரப் பரம்பரையைச் சேர்ந்த பிராமணர்களுக்குரிய சிகப்பு நிறம், தலைமுடி அடர்த்தியான பழுப்பு நிறம், அகன்ற, காவி நிறக் கண்கள், மிகவும் அமைதியான சுபாவம்... எனக்குத் தெரிந்த அல்லது நான் இதுவரை பார்த்த பெண்களிலேயே அவள் மிக அழகானவள்.'' கமலா ஆடம்பரம் சிறிதுமில்லாமல் ஒரு சாதாரணப் பருத்திச் சேலையை அடக்கமாக அணிந்திருப்பாள். அது அவளுக்குப் பொருத்தமாகவும் இருக்கும். அவள் மிகவும் அபூர்வமாகவே ஆபரணங்களை அணிந்து கொள்வாள். வாசனைப் பொருள்களை ஒரு போதும் உபயோகிப்பதில்லை. பெண்களை வீட்டுக்கு வெளியே அனுப்பக் கூடாது என்ற மரபை அவளுடைய பெற்றோர்கள் உறுதியாகப் பின் பற்றிய காரணத்தால் அவள் பள்ளியில் கல்வி கற்கவில்லை. எனினும் அவள் இந்தியும் உருது மொழியும் நன்ருகப் படிப்பாள், ஆங்கிலமும் சிறிதளவு தெரியும்.

அவர்களுடைய திருமணத்துக்கு இன்னும் சில மாதங்கள் இருக்கும் பொழுதே கமலா ஆனந்த பவனத்தில் போய்த் தங்கிஞள். அங்கே ஐரோப்பிய முறைகள் இந்திய மரபுகளோடு விசித்திரமான வகையில் இணைந்திருந்தன. அது அவளுக்குப் புதுமையாகத் தெரிந்தது. சுறுசுறுப்பும் எதையும் புரிந்துகொள்ளக் கூடிய திறமையும் கனிவான இயல்பும் கமலாவிடம் இருந்ததஞல் அவள் மணமகன் வீட்டில் வெகு சீக்கிரத்தில் நல்ல பெயரெடுத்து நேரு குடும்பத்தில் முழு உரிமை கொண்ட உறுப்பினராகிவிட்டாள்.

சில மாதங்களாகவே திருமணத் தயாரிப்புகள் நடை பெற்றுக் கொண்டிருந்தன.. எல்லா ஏற்பாடுகளுமே பெரிய அளவில் இருந்தன. மோதிலால் நேரு செலவைப் பொருட்படுத்தவில்லை. ஆனந்த பவனத்துக்கு தினமும் எண்ணற்ற வியாபாரிகளும் தையற்காரர்களும் பொற்கொல்லர்களும் வந்து கொண்டிருந்தார்கள். மோதிலாலின் அலுவலகத்தைச் சேர்ந்தவர்கள் திருமண விழா நிகழ்ச்சிகளை நுணுக்கமாகத் தயாரித்தார்கள்.

திருமணத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்பு நேரு குடும்பம் முந்நூறு விருந்தினர்கள், உறவினர்கள், நண்பர்கள் மற்றும்

பலரோடு சிகப்பு, வெள்ளை மலர்களால் அலங்கரிக்கப்பட்ட விசேஷ இரயில் வண்டியில் டில்லிக்குப் புறப்பட்டார்கள். மணமகளின் தகப்பனுர் அவர்களைத் தன்னுடைய வீட்டின் வாசலில் வரவேற்ருர். சம்பிரதாயப்படி ஒரு டம்ளரில் தேனும் தயிரும் கலந்த பானத்தை ஜவகர்லாலிடம் குடிக்குமாறு கொடுத்தார்.

வந்திருந்த விருந்தினர்கள் எல்லோருக்கும் கமலாவின் வீட்டில் இடம் இல்லை. விருந்தினர்கள் தங்குவதற்காகக் கௌல் தன் பக்கத்து வீட்டுக்காரருடைய (அவரும் காஷ்மீரத்தைச் சேர்ந்தவர்தான்) மூன்று மாடி வீட்டை ஏற்பாடு செய்திருந்தார். ஆனுல் அந்த வீடும் போதுமானதாக இருக்கவில்லை. ஆனுல் அந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு கண்டுபிடிக்கப்பட்டது. அந்த வீடுகளைச் சுற்றி கூடாரங்களைக் கொண்டு ஒரு கிராமம் அமைக்கப்பட்டது. அதற்கு ''நேருவின் திருமண முகாம்'' என்று விமரிசையாக பெயர் சூட்டப்பட்டது.

டில்லியில் ஒன்பது நாட்கள் விழா நடைபெற்றது. பிறகு சம்பிரதாயப்படி முகாம் அலகபாத்திலுள்ள மணமகன் மாளிகைக்கு மாறியது. அந்த மாளிகையின் விருந்தோம்புகின்ற மரபைப் பின்பற்றி இன்னும் சில வாரங்களுக்கு விழாக்கள் தொடர்ந்தன.

அலகபாத்தில் அந்த இளந்தம்பதிகள் தங்களுடைய முதல் மாலை நேரத்தில் மாளிகைக்கு வெளியே சென்ருர்கள். ஒருவரை ஒருவர் ஒட்டி நின்று கொண்டு அமைதியாக இருண்ட வானத்தைப் பார்த்தார்கள். அங்கே துருவ நட்சத்திரம் தெரிந்தது. பழங்கால மரபின்படி மணமக்கள் உறுதி, விசுவாசம், மாருத்தன்மையின் சின்னமான துருவ நட்சத்திரத்தைப் பார்க்க வேண்டும்.

சில வருடங்களுக்குப் பின்னர். ஜவ்கர்லால் நேரு சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் பொழுது நீண்ட, சோகம் நிறைந்த மாலை நேரங்களில் வானத்தின் கறுப்பு நிறம் சன்னல் கம்பிகளை அடைத்துக் கொண்டிருக்கும் பொழுது அந்தச் சிறு, இருண்ட மூலையில் இந்த நட்சத்திரத்தைத் தேடுவார், அதைக் கண்டுபிடிப்பார்; கமலாவின் ஆழம் காண முடியாத கண்களில் அதன் பிரதிபலிப்பைக் கற்பனை செய்வார்; அவர் மனதில் அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படும்.

பதினேழு வயது நிரம்பிய மென்மையான இளங்கொடி

யான கமலாவைப் பற்றி ஜவகர்லால் பின்வருமாறு எழுதினர்: ''சிறுமியின் அந்தப் பார்வையை அவள் ஒருபோதும் முற்றிலும் இழந்துவிடவில்லை. ஆனல் அவள் ஒரு பெண்ணுக வளர்ச்சியடைந்த பொழுது அவளுடைய கண்களில் ஆழமும் தீவிரமும் ஏற்பட்டன, அவை அமைதியாகத் தோற்றமளிக்கின்ற ஆனல் அதற்குப் பின்னல் புயல்கள் வீசிக் கொண்டிருக்கின்ற ஏரிகளைப் போலக் காட்சியளித்தன... அவள் சாராம்சத்தில் ஒரு இந்தியப் பெண், இன்னும் சிறப்பாக ஒரு காஷ்மீரப் பெண், கூருணர்ச்சியும் பெருமிதமும், குழந்தைத் தனமும் வளர்ச்சியும், முட்டாள்தனமும் மதிநுட்பமும் கொண்டிருந்தாள். அவளுக்குப் பழக்கமில்லாதவர்களிடம் அல்லது பிடிக்காதவர்களிடம் அவள் ஒதுங்கிக் கொள்வாள். ஆனல் தனக்குப் பழக்கம் உடையவர்களிடம், பிடித்தமானவர்களிடம் குதூகலத்தோடும் திறந்த மனதோடும் அவள் உற்சாகமாக நடந்து கொள்வாள். அவள் சீக்கிரமாகவே முடிவுகளுக்கு வந்து விடுவாள். அவை எப்பொழுதுமே நியாயமாகவோ அல்லது சரியாகவோ இருக்கும் என்று சொல்ல முடியாது. ஆனல் அவள் தனக்கு இயல்பாக ஏற்பட்ட விருப்பு, வெறுப்புக்களில் உறுதியாக இருந்தாள். அவள் உணர்ச்சிகளை மறைக்கக் கூடியவளல்ல. அவளுக்கு ஒரு நபரைப் பிடிக்கவில்லையென்ருல் அது உடனே தெரிந்துவிடும், அதை மறைப்பதற்கு அவள் முயற்சி செய்ய மாட்டாள். அதை மறைக்க முயற்சித்தாலும் வெற்றியடைந்திருக்க மாட்டாள். அவளுடைய கள்ளங்கவடற்ற தன்மை என்மீது ஏற்படுத்திய தாக்கத்தைப் போல இன்னும் மிகச் சிலரிடமே நான் கண்டிருக்கிறேன்...'' கமலாவின் மீது அவர் கொண்ட காதல், ஆழமான அன்புணர்ச்சி அவள் இதயத்தில் மறுவிளைவை ஏற்படுத்தியதில் அவர் மகிழ்ச்சி அடைந்தார். தனக்கு ஒரு மனைவி கிடைத்திருப்பது மட்டுமல்லாமல் விசுவாசமிக்க, தன்னைப் பேணிக் காக்கின்ற ஒரு துணைவி கிடைத்திருப்பதைப் புரிந்துகொள்ள அவருக்கு இன்னும் சிறிது காலமாகும். அந்தத் துணைவி அவருக்கு ஆதரவு கொடுப்பதோடு கூடுதலான பலத்தையும் கொடுப்பாள், அவர் நெருக்கடியான நேரங்களில் அவளிடம் செல்வார். ''நம்பிக்கையான புகலிடத்துக்குப்'' போவதைப் போல திரும்பத் திரும்ப அவளிடம் செல்வார்.

ஜவகர்லாலும் அவருடைய குடும்பத்தினரும் 1916ஆம் ஆண்டு கோடைக்காலத்தில் தங்கள் முன்னோர்கள் பிறந்த இடமான காஷ்மீரத்துக்குச் சென்றார்கள். அவர் ஸ்ரீநகரில் சில நாட்கள் இருந்துவிட்டு மலைகளுக்கு அருகேயுள்ள பஹல்காமுக்குச் சென்றார். ஜவகர்லாலும் அவருடைய ஒன்று விட்ட சகோதரரும் தங்களுடைய வாழ்க்கையில் முதல் தடவையாக இமய மலைக் குன்றின் மீது ஏறுவதற்குத் திட்டமிட்டார்கள். வழிகாட்டுவதற்கு ஒரு நபரையும் சில கூலியாட்களையும் கூட்டிக்கொண்டு அவர்கள் பிரயாணத்தைத் தொடங்கினார்கள்.

மேகங்கள் அநேகமாக முற்றிலும் மறைந்து விட்டன. நண்பகல் நேரச் சூரிய ஒளி மலைச்சிகரங்கள் மீது தங்க முலாம் பூசியிருந்தது. அவற்றுக்குப் பின்னால் நீல வானம். பனிமூடிய மலைப்பிளவுகள் அடிப்பகுதியில் கருப்பு நிறத்தில் தோன்றின. நீலப் பனியாறுகள் பயங்கரமான வளைவுகளோடு அடிவானத்தை நோக்கி ஊர்ந்து போய்க் கொண்டிருந்தன. வெகு தூரத்தில் நீலநிற மூடுபனியில் இமயமலையின் பதினேழு உயரமான சிகரங்கள் தெரிந்தன. யாரும் போக முடியாத ஷம்பாலா நாடு அந்தச் சிகரங்களுக்குப் பின்னால் ஒரு வேளை இருக்கலாம். அது இந்திய மக்களின் கற்பனையில் உருவாக்கப்பட்டுத் தொல்கதைகளில் இடம் பெற்றிருக்கும் நாடு. அங்கே செல்வந்தரும் இல்லை, ஏழைகளும் இல்லை, அங்கே ஒடுக்குமுறை அல்லது அநீதி கிடையாது. அறிவும் உண்மையும், வளப்பெருக்கமும் அன்பும் அங்கே ஆட்சி செய்கின்றன. அந்த மலைகளின் தோற்றம் இந்தியாவின் புராணங்களில் வர்ணிக்கப்படுகின்ற கடவுள்களை நினைவுபடுத்துகின்றன. நான்கு கரங்களைக் கொண்ட சிவபெருமான் தேவர்களைக் காப்பாற்றுவதற்காக விஷத்தை அருந்திய பிறகு தாங்க முடியாத வலியினால் துடிப்பதைப் போல ஒரு வளைந்த சிகரம் இருக்கிறது. அதற்குப் பின்னால் சந்திரனின் வடிவத்தைக் கொண்ட வெற்றிக் கடவுளான, அன்பான லட்சுமியின் முகம் தெரிகிறது. அழிவை ஏற்படுத்துவதற்காக வந்து கொண்டிருக்கும் தன் சகோதரியான சிவ தாண்டவியிடமிருந்து பூமியைக் காப்பாற்ற அந்தக் கடவுள் விண்ணகத்திலிருந்து இறங்கி வருவது போல் இருக்கிறது...

இமயமலையின் கொடூரமான, ஆனால் மகத்தான அழகினால்

கவர்ச்சிக்கப்பட்ட ஜவகர்லாலுக்கும் அவருடைய சகாக்களுக்கும் களைப்பே தோன்றவில்லை. இன்னும் பனிரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் அழகு நிறைந்த அமர்நாத் குகைக் கோயில் இருக்கிறது என்று வழி காட்டுபவன் கூறினன். அவர்கள் அங்கே செல்வதென்று முடிவு செய்தார்கள்.

அவர்கள் மேலும் பத்து மணி நேரம் மலையில் ஏறினர்கள். அவர்களுக்கும் குகைக்கோயிலுக்கும் இடையே சுமார் ஒரு கிலோமீட்டர் பனி விழுந்து கிடந்தது. திடீரென்று பனி கொட்டத் தொடங்கியது. அது பெரும் கட்டிகளாக விழுந்து அங்கேயிருந்த எண்ணற்ற பிளவுகளை மூடிவிட்டது. ஜவகர்லால் கவனமில்லாமல் ஒரு காலடி வைத்தார். அவ்வளவுதான்! ஒரு பிளவுக்குள் அவர் விழுந்து விட்டார். விழுந்த வேகத்தில் பனித்துகள் மேலே பறந்து கொண்டிருந்தது. அவர் இடுப்பில் கட்டப்பட்டு ஏற்கெனவே அதிகமான பாரத்தைத் தாங்கிக் கொண்டிருந்த கயிறு நல்ல வேளையாக அவரைக் காப்பாற்றியது. உரிய நேரத்தில் துள்ளிக்குதித்த சகாக்கள் அந்த முடிவில்லாத இருண்ட பள்ளத்திலிருந்து ஜவகர்லாலை வெளியே இழுத்துக் காப்பாற்றினர்கள்.

அந்த சம்பவம் அதிர்ச்சியாக இருந்தபோதிலும் அவர்கள் பிரயாணத்தைத் தொடர முடிவு செய்தார்கள். விசேஷமான கருவிகள் இல்லாமல் அங்கேயிருந்த அகலமான பள்ளங்களைக் ' கடக்க முடியாது ' என்று உறுதியாகத் தெரிந்த பிறகுதான் ஜவகர்லாலும் அவருடைய நண்பர்களும் திரும்பினர்கள்.

காஷ்மீரத்தை விட்டுப் போகும்பொழுது இனிமேல் கிடைக்கும் முதல் சந்தர்ப்பத்தில் அங்கே மறுபடியும் வர வேண்டுமென்று அவர் உறுதி கொண்டார். தன்னைப் பற்றிக் கிண்டலான முறையில் எழுதுகின்றபொழுது தன் உயிருக்கு ஆபத்தை அநேகமாக ஏற்படுத்திவிட்ட அந்த சம்பவத்தைப் பற்றி அவர் புன்சிரிப்போடு நினைத்துப் பார்க்கிருர். அந்த மலைகளின் மத்தியில் போய்க்கொண்டிருந்த பொழுது ஏற்பட்ட பரிபூரணமான சுதந்திர உணர்ச்சி, போதை யூட்டுகின்ற இலேசான தன்மை அவ்வப்பொழுது அவருடைய உணர்வில் தலை தூக்குவதுண்டு, அவருடைய களைத்துப் போன அறிவை பலவீனப்படுத்துவதுண்டு. அந்த மலைச் சிகரங்களின் உச்சியில் மறுபடியும் ஏற வேண்டும், அங்கே நின்றுகொண்டு

''நிகழ்காலத்தின் உயிரையும் வன்மையையும் அழகையும் மட்டுமில்லாமல் நினைவுகளில் வாழ்கின்ற நெடுங்காலத்துக்கு முந்திய பேரழகையும்'' பார்க்க வேண்டும் என்ற தீவிரமான ஆசை அவருக்கு ஏற்படும்.

1916 டிசம்பரில் இந்திய தேசிய காங்கிரசின் 31வது மாநாடு லக்னோவில் கூடியது. தீவிரவாதிகளுக்கும் மிதவாதி களுக்குமிடையே ஏற்பட்டிருந்த பிளவு குறைந்து வருவதைக் கண்டு ஜவகர்லால் உற்சாகமடைந்தார். சுமார் பத்து வருட கால இடைவெளிக்குப் பிறகு லோகமான்ய திலகர் அந்த மாநாட்டில் கலந்து கொண்டார். ஏராளமான பிரதிநிதிகள் அதை வரவேற்றார்கள். காங்கிரசும் முஸ்லிம் லீகும் இந்தியா வுக்கு சுயநிர்வாக உரிமை வேண்டும் என்று கோரின, சுய நிர்வாக உரிமையைக் கொண்டிருக்கும் மற்ற டொமினியன் களைப் போல இந்தியாவும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் சம உரிமைகளைக் கொண்ட பங்காளியாக நடத்தப்பட வேண்டும் என்று அவர்கள் கூறினார்கள்.

தென் ஆப்பிரிக்காவில் இருபது வருடங்களைக் கழித்த பிறகு இந்தியாவுக்குத் திரும்பியிருந்த மோகன்தாஸ் கரம் சந்த் காந்தியை ஜவகர்லால் லக்னோவில் சந்தித்தார்.

நேருவும் காந்தியும்... நன்றிமிகுந்த நாடு ஒருவரை ''பாரத் பூஷண்,'' ''இந்தியாவின் மாணிக்கம்'' என்றும் அடுத்தவரை ''மஹாத்மா,'' ''பாபு,'' ''மாபெரும் ஆன் மீகி,'' ''தேசத் தந்தை'' என்றும் அழைத்து மகிழ்ந்தது.

குஜராத்தில், பனியாக்கள் என்ற வியாபாரிகள் இனத்தில் பிறந்த காந்தி பிரிட்டனில் சட்டக்கல்வி படித்தவர். அவர் 1893ம் வருடத்தில் தென் ஆப்பிரிக்காவில் இருக்கும் இந்திய வர்த்தக நிறுவனத்துக்கு வழக்குரைஞராக அங்கே சென் றார். அங்கே வசதியான வாழ்க்கை கிடைக்கும் என்ற நம்பிக் கையோடு ஒரு லட்சத்துக்கும் அதிகமான இந்தியர்கள் ஒப் பந்தக் கூலிகளாகப் போயிருந்தார்கள். அவர்கள் நிலக்கரிச் சுரங்கங்களில், காபித் தோட்டங்களில் பாடுபட்டார்கள். இவர் களைத் தவிர இன்னும் பலர் கைவினைஞர்களாகவும் சிறு வியாபாரிகளாகவும் போயிருந்தார்கள். அவர்களுடைய கேவ லமான வாழ்க்கை நிலையை காந்தி கண்டார். அங்கே அவர் கள் கொடுமையான சுரண்டலுக்கு உட்படுத்தப்பட்டிருந்தார்கள் (இந்தியாவிலிருப்பதைக் காட்டிலும் அதிகமாக இல்லாவிட்

டாலும் அது குறைவாக இருக்கவில்லை). அதோடு அவர்கள் மிகக் கேவலமான இன ஒடுக்குமுறைக்கு உட்படுத்தப்பட்டிருந்தார்கள். அந்த நாட்டின் எஜமானர்களான வெள்ளையர்கள் தயாரித்த டஜன்கணக்கான சட்டங்கள், விதிகள், ஆணைகள் அவர்களை நசுக்கிக் கொண்டிருந்தன.

''நீங்கள் கறுப்பர்கள், மனிதப் பிறவிகளுக்குக் கீழ்ப்பட்டவர்கள், பாதி மிருகங்கள்! அடிமைகளாக இருப்பதற்கும் கடுமையாக உழைப்பதற்குமே நீங்கள் விதிக்கப்பட்டவர்கள்!'' என்று வெள்ளையர்கள் ஆணவத்தோடு கூறினார்கள்.

காந்தியால் இதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவர் தன்னுடைய சொந்த நாட்டு மக்களோடு நெருங்கிப் பழகினார். அவர்களுடைய நலிவைப் போக்குவதற்குத் தன்னாலியன்ற எல்லாவற்றையும் செய்தார். அவர் சீக்கிரத்திலேயே வழக்குரைஞர் தொழிலைத் துறந்தார். ஜோகானஸ்பர்க்குக்கு அருகில் பேனிக்ஸ் என்ற இடத்தில் ஒரு குடியேற்றத்தை அமைத்தார். அந்தப் பண்ணையில் குடியேறினார். அங்கே அவர் அஹிம்சா பூர்வமான எதிர்ப்பு, சமாதான பூர்வமான ஒத்துழையாமை என்ற தன்னுடைய தத்துவத்தை உருவாக்கினார். இது பின்னர் இந்திய மக்களின் சுதந்திரப் போராட்டத்தில் தனித்தன்மையைக் கொண்ட அரசியல் ஆயுதமாகப் பயன்பட்டது.

உலக சமூகச் சிந்தனையில் காந்தியின் தத்துவம் புதியது அல்ல. ''இந்தக் கொள்கை அநேகமாக மனிதகுலச் சிந்தனையின் அளவுக்குப் பழமையானதே. ஆனால் காந்திஜிதான் அதைப் பெருந்திரளான மக்களின் அரசியல், சமூக இயக்கங்களுக்கு முதல் தடவையாகக் கையாண்டார்'' என்று ஜவகர்லால் பிற்காலத்தில் எழுதினார்.

காந்தியத்தின் தோற்றுவாய்கள் இந்து மதம், பௌத்தம், ஜைனம், கிறிஸ்துவ மதம் போன்ற பழமையான மதங்களில் (காந்தியின் அஹிம்சைக் கொள்கையையும் ''நீ கொலை செய்யாதே'' என்று கிறிஸ்துவ மதம் கூறுவதையும் ஒப்பிடலாம்), இராமகிருஷ்ணர், விவேகானந்தர், திலகர், அரவிந்தர் போன்ற தலை சிறந்த இந்தியச் சிந்தனையாளர்களின் தத்துவஞான பாரம்பரியத்தில், பூர்ஷ்வா நாகரிகத்தைக் கண்டனம் செய்து விவசாய கிராமச் சமுதாயத்துக்கும் கைத்தொழில்களுக்கும் திரும்ப வேண்டும் என்று வற்புறுத்திய பிரிட்டனை

சேர்ந்த ஜான் ரஸ்கினைப் போன்றவர்களின் நூல்களில், ரால்ப் வால்டோ எமெர்ஸன், ஹென்றி டேவிட் தோரோ போன்ற அமெரிக்கத் தத்துவஞானிகளின் நூல்களில் இருக்கின்றன.

மாபெரும் ருஷ்ய எழுத்தாளரும் மனிதாபிமானியுமான லேவ் தோல்ஸ்தோய் காந்தி மீது அதிகமான தாக்கத்தைக் கொண்டிருந்தார். ''தோல்ஸ்தோய் எழுதிய **கடவுளின் சாம்ராஜ்யம் உனக்குள் இருக்கிறது** என்ற நூல் என்னை உண்மையிலேயே மெய்மறக்கச் செய்துவிட்டது'' என்று காந்தி எழுதினார். ''அந்த நூல் என்மீது ஏற்படுத்திய பாதிப்பு நெடுங்காலம் நீடித்தது... தோல்ஸ்தோய் எழுதிய மற்ற புத்தகங்களையும் தீவிரமாகப் படித்தேன். **சுவிசேஷங்களின் சுருக்கம், இனி என்ன செய்ய வேண்டும்?** என்ற புத்தகங்கள் என்னிடம் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தின. அனைத்தையும் தழுவிய அன்பின் முடிவில்லாத வாய்ப்புக்களை நான் மென்மேலும் உணரத் தொடங்கினேன்.'' அவர் தோல்ஸ்தோய் தன்னுடைய குருநாதர் என்று கூறினார். வாழ்க்கையில் நான் அவருக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறேன் என்றார். உறவினர்களோடும் நண்பர்களோடும் அவர் வசித்த பண்ணைக்குத் தோல்ஸ்தோயின் பெயரைச் சூட்டினார்.

அந்தப் பண்ணையில் வசித்த ஒருவருடைய ஆலோசனையின்படி அஹிம்சா பூர்வமான எதிர்ப்பு முறைகளுக்கு சத்யாக்ரஹம் என்று பெயர் சூட்டப்பட்டது.

அநீதிக்குக் கீழ்ப்படியாதே என்று காந்தி போதித்தார். எதிரியின் சித்தத்துக்கு விரோதமாக உங்களுடைய கோரிக்கைகளைச் சொன்ன பிறகு அவற்றில் உறுதியாக நில்லுங்கள். ஆனால் உங்களுடைய எதிரிக்குத் தீமை செய்யாதீர்கள். எதிரி உங்களை தண்டிக்கலாம், ஆனால் உங்களுடைய வேதனைகள் அவருடைய இதயத்தை இளகச் செய்யும். அவர் தன்னுடைய தவறை ஒத்துக் கொண்டு உங்களுக்கு வழி விடுவார்.

காந்தியின் சத்யாக்ரஹமும் தோல்ஸ்தோயின் ''தீமையை வன்முறையால் எதிர்க்காதே'' என்ற கருத்தும் மெய்யாகவே மிக நெருக்கமானவை. இந்து மதத்தில் கூறப்படும் பிரமச்சரிய விரதமும் (புலனின்பத்தை விலக்கி வாழுதல் பிரமச்சரியமாகும்; காந்தி 1906ல் பிரமச்சரிய விரதம் ஏற்று தன் வாழ்நாளின் கடைசி வரை அதைக் கடைப்பிடித்தார்)

கருத்துமுதல்வாதியான தோல்ஸ்தோய் வற்புறுத்திய தார்மிக சுய-பரிபூரணத்துவமும் (அதன் மூலம் பூமியில் பொதுவான வளப்பெருக்கம் கோலோச்சும் என்று தோல்ஸ்தோய் கருதினார்) அப்படிப்பட்டவையே...

வேலைநிறுத்தம் செய்த இந்திய சுரங்கத் தொழிலாளிகள் ''வெள்ளையரல்லாதோர்'' ஒரு பிரதேசத்திலிருந்து மற்றொரு பிரதேசத்துக்குப் போகக் கூடாதென்று விதித்த சட்டத்தை மீறி நேட்டாலிலிருந்து டிரான்ஸ்வாலுக்கு நடந்து சென்றார்கள். அது காந்தி தென் ஆப்பிரிக்காவில் நடத்திய சத்யாக்ரஹத்தின் உச்சக்கட்டமாகும். இனவேற்றுமைச் சட்டங்களுக்குக் கீழ்ப்படியாதீர்கள், ஆனால் அதே சமயத்தில் அதிகாரிகளின் ஆத்திரமூட்டல்களையும் கொடுமைகளையும் எதிர்த்து வன்முறையைப் பயன்படுத்தாதீர்கள் என்ற காந்தியின் கட்டளையை ஆயிரக்கணக்கான மக்கள் பின்பற்றினார்கள். இந்திய சமூகம் நடத்திய மாபெரும் போராட்டம் சில சலுகைகளை வழங்குமாறும் தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களின் உரிமைகளைக் கட்டுப்படுத்திய மிக மோசமான சட்டங்களைத் திரும்பப்பெறுமாறும் அதிகாரிகளைக் கட்டாயப் படுத்தியது.

காந்தி இந்தியாவுக்குத் திரும்பியதும் குஜராத் மாநிலத்தின் தலைநகரமான அகமதாபாத்துக்கு அருகிலுள்ள கொச்ராப் என்ற சிறிய கிராமத்தில் தங்கினார். இங்கே 1915ஆம் ஆண்டு மே 25ஆம் தேதி தன்னுடைய நண்பரான ஒரு வழக்குரைஞரின் உதவியின் மூலம் வாங்கிய ஒரு சிறு வீட்டில் ''சத்யாக்ரஹ ஆசிரமத்தை'' ஏற்படுத்தினார். அங்கே ஆண்களும் பெண்களுமாக தமது பந்தபாசங்களை எல்லாம் தன்னிச்சையாகத் துறந்த இருபத்தைந்து நபர்கள் ஆசிரம விதிகளை ஏற்றுக் கொண்டு வசித்தார்கள். அவர்களில் ஐவர் தென் ஆப்பிரிக்காவிலிருந்து காந்தியோடு வந்தவர்கள், மற்றவர்கள் இந்தியாவின் மற்ற பிரதேசங்களிலிருந்து வந்தவர்கள்.

அந்த சத்யாக்ரஹ ஆசிரமம் குறுகிய அளவிலிருக்கும் இந்தியா என்று காந்தி கருதினார். ''தென் ஆப்பிரிக்காவில் நான் உபயோகித்த முறைகளை இந்தியாவுக்கு அறிமுகப் படுத்த நான் விரும்பினேன், இந்தியாவில் அதை எந்த அளவுக்குப் பயன்படுத்த முடியும் என்பதை சோதித்துப் பார்க்க விரும்பினேன்...'' என்று அவர் பிற்காலத்தில் எழுதினார்.

சத்யாக்ரஹ முறைகளை இந்திய நிலைமைகளுக்குத் தக்க வாறு கவனமாக மாற்றியமைப்பதில் காந்தி ஈடுபட்டிருந் தார். ஆசிரமத்தின் எல்லைகளுக்கு அப்பால் அதை விஸ்தரிப் பதில் அவர் அவசரப்படவில்லை. அந்த சமயத்தில் காங் கிரசின் பணிகளில் ஈடுபடாது விலகியிருந்தார். ஆனால் இந்தி யாவில் அரசியல் சக்திகளின் போக்கைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த அரசியல் சக்திகளில் எதையும் விசேஷமாகத் தேர்ந்தெடுக்கவில்லை.

சிறிய உருவம், மெலிந்த உடல், பலவீனமான தோற் றம், கீச்சுக்குரல், பக்கப்பார்வை காரணமாகச் சுருக்கம் விழுந்த அன்பு ததும்பும் கண்கள்—காந்தியை இப்படித்தான் வர்ணிக்க முடியும். ஆனால் மக்களை எவ்வாறு ஈர்ப்பதென்பது அவருக்குத் தெரியும். வழக்கமாகவே ஒதுங்கிய சுபாவ முடைய விவசாயிகள், தங்களுடைய மனதிலிருப்பவற்றை வெளியே சொல்ல அஞ்சுபவர்கள் காந்தியிடம் தங்களுடைய சிந்தனைகளையும் கனவுகளையும் திறந்த மனதோடு கூறினர்கள். தனித்தனியான கூறுகளிலிருந்து மாபெரும் உழைப்பாளியான இந்திய விவசாயியைப் பற்றிய முழுமையான உருவத்தை காந்தி படிப்படியாகத் தயாரித்தார். இன்னும் சில வருடங் களுக்குப் பிறகு அனைத்து இந்தியாவையும் உலுக்கப் போகின்ற அரசியல் போராட்டங்களில் தலைமையான பாத்திரத்தை அந்த விவசாயியிடம் காந்தி சிறந்த மதிநுட்பத்தோடு ஒப்படைத் தார்.

காந்தி தாய்நாட்டுக்குத் திரும்பிய பிறகு லக்னோவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் முதல் தடவையாகக் கலந்து கொண்டார். தென் ஆப்பிரிக்காவில் காந்தியின் நட வடிக்கைகளைப் பற்றித் தெரிந்திருந்தபடியால் அவரிடமிருந்து அதிகமாக எதிர்பார்த்த ஜவகர்லாலும் அவருடைய நண்பர் களும், காங்கிரசிலிருந்த இளைஞர்களும் ஏமாற்றமடைந்தார் கள். நேற்று கடவுளாக இருந்தவர் இன்று அரசியல் இல்லா தவராக, தன்னைச் சுற்றிலும் நடைபெற்றுக் கொண்டிருப்ப வற்றிலிருந்து மிகவும் அதிகமான அளவுக்கு ஒதுங்கியிருப் பவராகத் தோன்றினர். ஆனால் சில மாதங்களுக்குப் பிறகு அவர்கள் தங்களுடைய அவசரமான முடிவுகளை மாற்றிக் கொள்ள நேர்ந்தது.

1917ம் வருடத் தொடக்கத்தில் காந்தி பீகார் மாநிலத்

தின் வடமேற்குப் பகுதியிலுள்ள சம்பரானில் ஆங்கில முதலாளிகளுக்குச் சொந்தமான அவுரித் தோட்டங்களில் ஒடுக்கு முறையின் கீழ் நலிந்து கொண்டிருந்த குத்தகை விவசாயிகளின் சத்யாக்ரஹப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கினார். அதன் பிறகு குஜராத் மாநிலத்தில் உள்ள கெடி என்ற மாவட்டத்தில் மோசமான அறுவடையின் காரணமாக பட்டினியாக இருக்க வேண்டுமோ என்று அஞ்சி வரி கொடுக்க மறுத்த விவசாயிகளின் போராட்டத்துக்குத் தலைமை தாங்கினார்.

ஆரம்பத்தில் இந்தியாவில் நடைபெற்ற இத்தகைய சட்ட மறுப்பு போராட்டங்கள் வெற்றியடைந்தன. நிலச்சுவாந்தார்களும் அதிகாரிகளும் விவசாயிகளுக்குச் சலுகைகள் வழங்குமாறு நிர்ப்பந்திக்கப்பட்டனர். சம்பரானிலும் கெடியிலும் காந்தி வெற்றியடைந்த செய்திகளைக் கேட்டு ஒருவேளை ஜவகர்லாலுக்கு அளவுகடந்த உற்சாகம் ஏற்பட்டிருக்கக் கூடும். காந்தி உருவாக்கியுள்ள போராட்ட முறைகள் இந்தியா முழுமைக்குமே பொருத்தமானவை, அவை ''வெற்றி தரக்கூடியவை'' என்ற அழுத்தமான நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது.

1917 நவம்பர் 19ந் தேதியன்று கமலாவுக்குப் பெண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு இந்திரா பிரியதர்சினி என்று பெயரிட்டார்கள். மோதிலால் நேருவின் தாயாரான இந்திரா எந்தச் சூழ்நிலையிலும் சிறிதும் மனம் கலங்காத உறுதிமிக்க பெண்மணி. அவருடைய பெயரும் பெற்றோர்களின் மகிழ்ச்சியை எடுத்துக் காட்டுகின்ற பிரியதர்சினி (''பார்வைக்கு அழகானவள்'') என்ற சொல்லையும் சேர்த்துப் பெயர் வைக்கப்பட்டது.

ஸ்காட்லாந்து மருத்துவர் நேரு குடும்பத்தினரிடம் கமலாவுக்குப் பெண்குழந்தை பிறந்திருப்பதாக அறிவித்தபொழுது சொரூபராணியின் முகம் வாட்டமடைந்தது. ஆண்குழந்தை, பேரன் பிறக்க வேண்டுமென்று அவள் விரும்பினாள். மோதிலால் நேரு தன் மனைவியைக் கடிந்து கொள்வது போலப் பார்த்தார்.

''ஆயிரம் பேரன்களைக் காட்டிலும் அதிகமான மதிப்பை இந்தப் பெண்குழந்தை அடையப் போகிறது'' என்று அவர் உறுதியோடு கூறினார்.

...*1917* டிசம்பர் மாதத்திற்குள் ருஷ்யாவில் நடைபெற்ற மகத்தான அக்டோபர் புரட்சியைப் பற்றிய செய்தி இந்தியா வுக்குள் சிறிது சிறிதாக வந்து கொண்டிருந்தது. அன்றைக் கிருந்த தணிக்கை முறை அவ்வளவு வேகமில்லாததாக இருந்த படியால் அந்தச் செய்திகள் பத்திரிகைகளிலும் வெளிவந்து கொண்டிருந்தன.

கே.பி. காடில்கர் என்ற பிரபலமான பத்திரிகையாளர் திலகருக்கு நெருக்கமானவர்; அவர் **சித்ரமய ஜகத்** என்ற இதழில் பின்வருமாறு எழுதினுர்: ''நவம்பர் மாதத்தில் பெத்ரோகிராடில் ஆட்சியதிகாரம் லெனின் தலைமையிலிருக் கும் சோஷலிஸ்டுகளுக்கு மாறிவிட்டது. கேரென்ஸ்கியும் அவ ருடைய மந்திரிசபையும் ஆட்சியிலிருந்து இறக்கப்பட்டு விட் டார்கள். புரட்சி செய்க என்று விடுக்கப்பட்ட அறை கூவலின்படி பின்லாந்து வளைகுடாவிலிருக்கும் கப்பற்படை யினர் கிளர்ந்தெழுந்தார்கள். கேரென்ஸ்கி நாட்டை விட்டு ஓடிவிட்டார். பெத்ரோகிராடிலும் மாஸ்கோவிலும் அவற் றைச் சுற்றியிருக்கும் பிராந்தியங்களிலும் லெனின் ஆட்சி யைக் கைப்பற்றிவிட்டார். துருப்புகளும் அவரைத்தான் ஆத ரிக்கின்றன... தேசங்களுக்குச் சுயநிர்ணய உரிமை வழங்கி லெனின் ஒரு ஆணை வெளியிட்டிருக்கிறுர். பால்டிக் அரசு களுக்கும் போலிஷ் மக்களுக்கும் அந்த உரிமையைப் பயன் படுத்திச் சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது...''

புரட்சிகரமான ருஷ்யாவில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் சம்பவங்களை வழக்கம் போல் யதார்த்த ரீதியில் மதிப்பிடு கின்ற இதைப் போன்ற சுருக்கமான, ஸ்தூலமான கட்டு ரைகளைக் காடில்கர் அதற்கடுத்த வருடம் முழுவதிலும் தொடர்ந்து எழுதினுர்.

*The Modern Review* என்ற இதழும் ருஷ்யப் புரட் சியைப் பற்றிய கட்டுரைகளைத் தொடர்ச்சியாக வெளியிட்டு வந்தது. அதன் ஆசிரியரான இராமாநந்த் சாட்டர்ஜி வங் காளத்தில் பிரபலமான அறிஞர், மனிதாபிமானி. சோவியத் ருஷ்யாவைப் பற்றி ஜான் ரீடு எழுதிய கட்டுரைகளிலிருந்து பல பகுதிகளை அவர் வெளியிட்டார்.

வெகு தூரத்துக்கு அப்பால் வடக்குத் திசையிலிருக்கும் இந்த நாட்டில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி உலக யுத்தம் முடிவடைந்ததும் போர்முனைகளிலிருந்து வீடுகளுக்குத்

திரும்பிய போர்வீரர்களிடமிருந்தும் இந்தியர்கள் அறிந்து கொண்டார்கள்.

ருஷ்யாவில் மக்கள் ஆட்சியதிகாரத்தைத் தம் கைகளில் எடுத்துக் கொண்டு முடியாட்சிக் கொடுங்கோன்மைக்கும் முதலாளிகள் மற்றும் நிலச்சுவாந்தார்களின் ஒடுக்குமுறைக்கும் முடிவு கட்டினார்கள். ருஷ்யாவைப் பற்றிக் கிடைத்த செய்திகளுக்கு இந்தியாவின் எதிர்ச்செயல் எவ்வாறிருந்தது?

இந்தியாவின் ராஜாக்களும் பலம் மிகுந்த ஜமீந்தார்களும் உள்நாட்டு தரகு முதலாளிகளும் தங்களுடைய எதிர்ப்பைச் சிறிதும் மறைக்கவில்லை. ''போல்ஷிவிக் கருத்துக்கள்'' இந்தியாவுக்குள் பரவிவிடும் என்று அவர்கள் பயந்தார்கள். தங்களை ஒடுக்கிக்கொண்டிருந்தவர்களைத் தூக்கியெறிந்த ருஷ்யத் தொழிலாளர்கள், விவசாயிகளின் உதாரணத்தை இந்திய மக்கள் பின்பற்றக் கூடும் என்று நினைத்தவுடனேயே அவர்களுக்குக் கிலி ஏற்பட்டது. ஆங்கில அதிகாரிகளுக்கும் இதே அச்சங்கள் ஏற்பட்டன. அப்பொழுது வைசிராய் பதவி வகித்த செல்ம்ஸ்போர்ட் பிரபு இந்தியாவில் ''ருஷ்யப் பிரச்சாரத்தைத்'' தடை செய்து தொடர்ச்சியாகப் பல ஆணைகளை வெளியிட்டார். ''வடக்கேயிருந்து வருகின்ற போல்ஷிவிக் அபாயத்துக்கு'' எதிராக அவர் நடத்திய போராட்டம் சில சமயம் அசட்டுத்தனமாகவும் இருந்தது. அவர் ருஷ்யப் பணத்தை இந்தியாவில் செலாவணி செய்வதற்குத் தடை விதித்தார். இந்தியர்களுக்கு அந்த நாணயம் என்ன என்பது கூட அப்போது முற்றிலும் தெரியாது.

காங்கிரஸ்காரர்கள், முஸ்லிம் லீக் உறுப்பினர்கள், மிதவாதிகளோடு சேர்ந்த அல்லது அவர்களுக்கு அனுதாபம் காட்டிய ஹோம்ரூல் இயக்கத்தில் பங்கு கொண்டவர்கள், ஒரு சில இந்தியத் தொழிலதிபர்கள், தேசிய அறிவுஜீவிகளில் மிகவும் வசதியானவர்கள் ஆகியோரடங்கிய மற்றவர்களிடம் இரட்டை உணர்ச்சி காணப்பட்டது. லெனின் வெளியிட்ட சமாதானத்தைப் பற்றிய ஆணையில் அடங்கியிருந்த தேசங்களின் சுய நிர்ணய உரிமையை அவர்கள் வரவேற்றார்கள். அந்த உற்சாகத்தைப் புரிந்து கொள்ள முடியும் (ஏனென்றால் அவர்கள் பிரிட்டனிடமிருந்து இதே உரிமையைப் பெறுவதற்கு முயற்சித்தார்கள்). ஆனால் இளம் சோவியத் குடியரசின் அரசாங்கம் தொடர்ச்சியாகவும் சுறுசுறுப்போடும் அமுல்

நடத்திய புரட்சிகரமான சமூக, பொருளாதாரச் சீர்திருத் தங்களைப் பற்றி மிகவும் ஜாக்கிரதையான அணுகுமுறையைக் கடைப்பிடித்தார்கள்.

மாபெரும் இந்தியரான இரவீந்திரநாத் தாகூரைப் போல இன்னும் பலரும் சோவியத் ருஷ்யாவில் ''புதிய சகாப்தத்தின் உதயத்தை அறிவிக்கின்ற காலை நட்சத்திரத்தைக்'' கண்டார் கள். அவர்களில் ஜவகர்லால் நேருவும் ஒருவர்.

''சோவியத் புரட்சி ஒரு மாபெரும் பாய்ச்சலில் மனித சமூகத்தை உயர்த்திவிட்டது, அது ஏற்றிய தீபத்தை யாரா லும் அணைக்க முடியாது, உலகம் முன்னேறக் கூடிய புதிய நாகரிகத்தின் அடிப்படைகளை அது அமைத்திருக்கிறது என் பதைப் பற்றி எனக்குச் சந்தேகமில்லை.'' என்று நேரு தன் னுடைய புத்தகங்களில் ஒன்றில் எழுதினர்.

ருஷ்யப் புரட்சியை எதிர்த்தவர்களும் ஆதரித்தவர்களும் ஒரு விஷயத்தில் ஏகமனதான அபிப்பிராயம் கொண்டிருந் தார்கள்: அக்டோபர் மாதத்தில் ருஷ்யாவில் நடைபெற்ற சம்பவங்கள் இந்தியாவின் அரசியல் வாழ்க்கையின் வளர்ச் சியைப் பாதிப்பது உறுதி.

1917 டிசம்பரில் கல்கத்தாவில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டில் அன்னி பெஸன்ட் ''அதற்கு முன்பு இந்தியாவில் இருந்த நிலைமையை அடிப்படையாக மாற்றியிருக்கும்'' காரணிகளில் ருஷ்யப் புரட்சியும் ஒன்று என்று பேசினர். பிரிட்டிஷ் காலனியாதிக்க கொள்கையை உருவாக்கிய இந்தியாவுக்குப் பொறுப்பு வகித்த அமைச் சரான மான்டேகு பிரபுவும் வைசிராய் செல்ம்ஸ்போர்டு பிரபுவும் விருப்பமில்லாமல் ஒத்துக் கொண்டதைப் போல ருஷ்யப் புரட்சி ''இந்தியாவில் அரசியல் விருப்பார்வங்களின் வளர்ச்சியை ஊக்குவித்தது.''

சுமார் ஒரு கோடி மக்கள் பலியான உலக யுத்தம் முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. இந்தியப் படைவீரர்கள் கடல் வழியாக, கண்களைக் குருடாக்கும் வெள்ளைப் பனியால் மூடப்பட்டிருக்கும் இமயமலையின் முடிவில்லாத பிரதேசங்களி லிருக்கும் கணவாய்களின் வழியில் கால் நடையாக வீடு களுக்குத் திரும்பினர்கள். ஆனல் அவர்கள் அகம்பாவம் நிறைந்த ஆங்கிலேயருக்கு, தற்பெருமை கொண்ட ஜமீந் தாருக்கு முன்னல் பயந்து நடுங்கி நின்ற கீழே போட்டு

மிதிக்கப்பட்ட விவசாயிகளாக, கைவினைஞர்களாக இனியும் இருக்கவில்லை. புதிதாக உழவு செய்யப்பட்டிருக்கும் மண்ணின் வாசனையை அவர்கள் மறந்துவிட்டார்கள். அவர்களுடைய கரங்கள் ஏரையும் மண்வெட்டியையும் பானை செய்யும் சக்கரத்தின் ஈரமண்ணையும் மறந்து விட்டன. இவற்றுக்குப் பதிலாக அவர்கள் வெடி மருந்து, நெருப்பு, இரத்தத்தின் வாசனையைக் கொண்டு வந்தார்கள். துப்பாக்கியை எப்படிச் சுட வேண்டும், துப்பாக்கி ஈட்டியால் எப்படிக் குத்த வேண்டும், வாளால் எப்படி வெட்ட வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும். அவர்கள் உயிருக்கு ஆபத்தான போர்களில் அதிசயமான முறையில் உயிர் தப்பியவர்கள். அவர்கள் தங்களுடைய தகுதியையும் கௌரவத்தையும் உணர்ந்து தங்களுடைய பலத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய கிராமங்களுக்குத் திரும்பிய பொழுது தங்களுடைய குடிசை இடிந்து கிடப்பதை அல்லது சிதிலமாகிக் கொண்டிருப்பதையும் ஒரு காலத்தில் வளமாக இருந்த தங்களுடைய நிலம் காய்ந்து பொட்டலாக மாறியிருப்பதையும் பார்த்தார்கள். அவர்களுடைய குழந்தைகள், மனைவியர், வயதான பெற்றோர்கள் நோயால், பட்டினியால் மரணமடைந்த சோகத்தைக் கண்ணீருக்கும் விசும்பலுக்குமிடையே எஞ்சியவர்கள் தெரிவித்த பொழுது அவர்கள் ஆத்திரத்தில் பற்களைக் கடித்துக் கொண்டு கேட்டார்கள். இவர்கள் இனிமேல் எங்களைக் காப்பாற்றுங்கள் என்று கடவுளை நோக்கிக் கருணை காட்டுமாறு பிரார்த்திக்கப் போவதில்லை. தங்களுடைய துன்பம் தாங்கள் தெரியாமற் செய்த பாவங்களுக்குள் கடவுள் கொடுக்கின்ற தண்டனை அல்ல, அது காலனியாதிக்கவாதிகள், நிலச்சுவாந்தார்களின் பேராசையாலும் கொடுமையாலுமே ஏற்பட்டிருக்கிறது என்று புரிந்து கொண்டார்கள்...

''உலக யுத்தம் முடிந்தபொழுது இந்தியா அடக்கி வைக்கப்பட்ட பரபரப்பான நிலைமையில் இருந்தது. பரவலான தொழில்துறை வளர்ச்சி ஏற்பட்டிருந்தது, முதலாளி வர்க்கம் செல்வத்திலும் செல்வாக்கிலும் வளர்ச்சி அடைந்திருந்தது. மேல் மட்டத்தினர் சிலர் யுத்த ஆண்டுகளில் வளப் பெருக்கத்தை அடைந்து தங்களுடைய செல்வத்தைப் பெருக்குவதற்காக சேமிப்புக்களை முதலீடு செய்வதற்கு அதிகமான சக்தியும் வாய்ப்பும் வேண்டுமென்று பேராசை கொண்டிருந்

தார்கள். ஆனால் சமூகத்தில் மிகவும் பெரும்பான்மையாக இருந்தவர்கள் அவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் அல்ல, எனவே தங்களை அழுத்தி நசுக்கிக் கொண்டிருந்த சுமை குறைக்கப் படுமென்று எதிர்பார்த்தார்கள். மாபெரும் அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் செய்யப்படுமென்றும் அவை பெரிய அளவில் சுயநிர்வாகத்தை ஏற்படுத்துமாதலால் தங்கள் வளர்ச்சிக்குரிய புதிய வாய்ப்புக்கள் ஏற்பட்டு தங்கள் நிலை உயருமென்று மத்தியதர வர்க்கத்தினர் எல்லோரும் கருதினார்கள். அரசியல் கிளர்ச்சிகள்—சமாதான பூர்வமாகவும் முற்றிலும் சட்ட பூர்வ மான முறைகளைப் பின்பற்றியும் நடைபெற்ற போதிலும்—பலன் தந்து கொண்டிருந்ததாகத் தோன்றின, மக்கள் சுயநிர்ண யத்தையும் சுயநிர்வாகத்தையும் பற்றி நம்பிக்கையோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.... இந்தியா முழுவதிலுமே காத்திருத் தல், எதிர்பார்த்தல் என்ற உணர்ச்சி முழு நம்பிக்கையோடு ஆனால் அச்சமும் கவலையும் கலந்த நிலையில் மேலோங்கியிருந் தது''—1918ம் வருடத்தின் முடிவில் இந்தியாவில் இருந்த நிலைமையை ஜவகர்லால் பிற்காலத்தில் இப்படி வர்ணித்தார்.

அடுத்த வருடத்தின் (1919) முதல் மாதங்களில் நடை பெற்ற சம்பவங்கள் ஜவகர்லாலுக்கு ஏற்பட்ட மிகவும் மோச மான கவலைகளை உறுதிப்படுத்தின: தங்கள் வாக்குறுதிகளை நிறைவேற்றுகின்ற எண்ணம் ஆங்கிலேயர்களிடம் இல்லை. ''தாய்நாட்டின் அடலேறுகள் நசுக்கப்பட்டுக் கொண்டிருந்த பொழுது, தடுக்கப்பட முடியாத, தொடர்ச்சியான சுரண் டல் நிகழ்வுப் போக்கு எங்களுடைய ஏழ்மையை ஆழப்படுத்தி உயிரைக் குடித்துக் கொண்டிருந்த பொழுது அரசியலமைப்புச் சட்டச் சீர்திருத்தம் மற்றும் நிர்வாகத் துறையை இந்திய மயமாக்குதலைப் பற்றி முடிவேயில்லாமல் நடைபெற்றுக் கொண்டிருந்த பேச்சுக்கள் அனைத்தும் கேலிக் கூத்தாக எங் களை அவமதிப்பதாக இருந்தன'' என்று அவர் பிற்காலத்தில் எழுதினார்.

இந்தியர்கள் சுயநிர்வாகத்தை எதிர்பார்த்தனர். அவர் களுக்கு ரௌலட்* சட்டங்கள் கிடைத்தன. இந்தச் சட்டங்

---

* சிட்னி ரௌலட் என்பவர் பிரிட்டனின் உயர் நீதிமன்ற நீதிபதி. இந்தி யாவில் ''சட்டம் மற்றும் ஒழுங்குமுறையைப்'' பாதுகாப்பதற்குத் தேவையான நடவடிக்கைகளைச் சிபாரிசு செய்யுமாறு அவருடைய தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. நாட்டில் புரட்சிகர நடவடிக்கையை நசுக்குவதற்கு ஏற்றவாறு

களின் மூலம் இந்தியாவின் தேசிய விடுதலை இயக்கத்தை நசுக்குவதற்குக் கிட்டத்தட்ட வரம்பற்ற அதிகாரங்கள் அதிகாரிகளுக்குக் கிடைத்தன.

இந்த அவமதிப்பைக் கண்டு ஜவகர்லால் ஆத்திரத்தில் துடித்தார். ''இந்தியாவைப் போன்று வளமான, நினைவுக்கும் எட்டாத பழமையான வரலாற்றைக் கொண்ட ஒரு மாபெரும் நாடு எங்கோ வெகு தூரத்துக்கு அப்பால் இருக்கின்ற ஒரு தீவோடு இறுக்கமாகப் பிணைக்கப்பட்டிருப்பதை நினைத்துப் பார்க்கவே எனக்கு அருவருப்பாக இருந்தது. பலவந்தமாக ஏற்பட்டிருக்கும் இந்த இணைப்பு கணக்கிட்டுக் கூற முடியாத ஏழ்மையையும் தாழ்வுநிலையையும் ஏற்படுத்தியிருப்பது இன்னும் அருவருக்கத் தக்கதே. நானும் மற்றவர்களும் நடவடிக்கையில் ஈடுபடுவதற்கு இதுவே போதுமான காரணமாகும்'' என்று அவர் எழுதினார்.

தன்னுடைய எதிர்காலம் என்ன என்ற தவிர்க்க முடியாத கேள்வியை ஒவ்வொரு மனிதரும் சீக்கிரமாகவோ தாமதமாகவோ கேட்டுக் கொள்கிறார். வேகமாக மாறிக்கொண்டிருக்கும் உலகத்திலிருந்து தன்னைத் தனிமைப்படுத்திக் கொண்டு (அவா எப்பொழுதாவது மட்டும் அதன் மாற்றங்களுக்குத் தன்னைத் தகவமைத்துக் கொள்வார், இல்லையேல் அவர் அழிந்து போய்விடுவார்) தன்னுடைய கூட்டுக்குள் புகுந்து தனக்காக மட்டுமே சோம்பேறித்தனமான வாழ்க்கையை நடத்துவது, தன்னுடைய ஆசைகளைத் திருப்தி செய்வது அல்லது மக்களின் இலட்சியங்களுக்கான மிகக் கடும் போராட்டத்தில் மக்களின் துன்பங்களைத் தன்னுடைய சொந்தத் துன்பமாக ஏற்றுக் கொண்டு நிகழ் காலத்திலும் எதிர்காலத்திலும் தனக்குக் கிடைக்கக் கூடிய நன்மைகளைத் துறப்பது—இந்த இரண்டு வெவ்வேறான பாதைகள் நெடுங்காலமாகவே இருந்து வந்திருக்கின்றன. வாழ்க்கையைத் தள்ளி நின்று எட்டிப் பார்ப்பவராக ஒருவர் இருப்பதா அல்லது வாழ்க்கையில் சுறுசுறுப்பாகப் பங்கெடுப்பவராக இருப்பதா? நேரு இரண்டாவது வழியைத் தேர்ந்தெடுத்தார். வழக்குரைஞர் தொழிலைத் துறந்து முற்றிலும் அரசியல் வாழ்க்கைக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வது என்று உறுதியாக முடிவு செய்தார்.

---

அதிகாரிகளுக்கு அவசர அதிகாரங்களைக் கொடுக்கின்ற சட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று இக்கமிட்டி சிபாரிசு செய்தது.

## அத்தியாயம் நான்கு

இரவு நேரத்தில் அந்த இரயில் வண்டி பஞ்சாப் மாநிலத்தின் எல்லைக்குள் நுழைந்தது.

இரயில் சக்கரங்களின் கடகட என்ற சத்தம், இரயில் என்ஜின் விசில் சத்தம், குறுகலான இரயில்பாதைகளில் வண்டிப் பெட்டிகளின் ஆட்டம் ஆகியவற்ருல் ஜவகர்லால் தூங்க முடியவில்லை. அந்த இருட்டு இரயில் பெட்டியில் அவர் அசையாமல் படுத்திருந்தார். இன்னும் சில மணி நேரங்களுக்குத் தனக்குத் தூக்கம் வராது என்பது அவருக்குத் தெரியும். எனவே கடந்த சில மாதங்களில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார்...

...இந்தியாவின் நிர்வாகத்தில் இந்தியர்கள் பங்கெடுப்பதை விரிவுபடுத்த, கடைசியில் ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பிரிக்க முடியாத பகுதியான இந்தியாவில் பொறுப்புவாய்ந்த அரசாங்கத்தை ஏற்படுத்த'' பிரிட்டிஷ் அரசாங்கம் உத்தேசிக்கிறது என்று இந்தியாவுக்குப் பொறுப்பு வகிக்கும் புதிய அமைச்சரான மான்டேகு பிரபு அறிவித்திருந்தார். அவர் இந்தியாவுக்குச் சென்று அங்கேயுள்ள நிலைமையைத் தெரிந்து கொள்வதில் ஆறு மாதங்களைக் கழித்தார். அதன் பலனுக 1918 ஜூலை மாதம் 12ந் தேதியன்று ''மான்டேகு—செல்ம்ஸ் போர்டு அறிக்கை'' என்ற பெயரைக் கொண்ட சீர்திருத்தத் திட்டம் வெளியிடப்பட்டது.

அதிகாரபூர்வமான பத்திரிகைகள், தனது தாராள மனப்பான்மையால் இந்திய மக்களுக்கு ஏதோ சுயநிர்வாகத்தை வழங்கிய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மகத்தான சமிக்கையாக சீர்திருத்தங்களைப் பற்றி உடனடியாக ஆரவாரமான பிரச்சாரத்தைக் கட்டவிழ்த்து விட்டன. ஆங்கிலேயர்கள் இந்தி

யாவில் ''இரத்தம் சிந்தாத புரட்சியைச்'' செய்திருப்பதாகக் கூட சிலர் அவசரப்பட்டுக் கூறினார்கள்.

உண்மை என்ன வென்றால் அந்தத் திட்டத்தில் சுயநிர்வாகத்தைப் பற்றிய பேச்சுக்கூட இல்லை. வைசிராயின் தலைமையில் இரண்டு சபைகளைக் கொண்ட சட்ட மன்றத்தை ஏற்படுத்த ஆலோசிக்கப்பட்டது. இந்தியர்கள் இந்தச் சபைகளுக்குப் பகுதியளவு தேர்ந்தெடுக்கப்படலாம், சிலரை அரசாங்கமே உறுப்பினர்களாக நியமிக்கும். எனினும் அங்கே நிறைவேற்றப்படும் மசோதாக்களும் தீர்மானங்களும் வைசிராயின் ஒப்புதலைப் பெறவில்லையென்றால் அவை சட்டமாக முடியாது. மாநில நிர்வாகத்தில் இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த சில அதிகாரங்கள் தந்திரமாக இல்லாமற் செய்யப்பட்டன. எல்லா சட்டமியற்றும் மற்றும் நிர்வாக அதிகாரமும் மாநிலங்களின் ஆளுநர்களிடம் இருந்தது. முன்பு இருந்ததைப் போலவே முதலாளிகளையும் நிலச்சுவாந்தார்களையும் கொண்ட ஒரு சிறு குழுவினருக்கு மட்டுமே வாக்குரிமை கொடுக்கப்பட்டது. தேசியச் சிறுபான்மையினருடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்காக தனித்தொகுதி முறையை சட்ட பூர்வமாக்குவதாகச் சொல்லப்பட்டது. ஆனால் நாட்டில் மதத் தகராறுகளைத் தூண்டிவிடுவதுதான் அதன் உண்மையான நோக்கமாகும்.

இந்தியாவில் ''பொறுப்பான அரசாங்கத்தை ஏற்படுத்தும் பாதையில் முதல் திட்டவட்டமான நடவடிக்கையாக'' இந்த சீர்திருத்தங்கள் இருக்குமென்று கல்கத்தாவில் கூடிய மிதவாதிகள் அவசரமாக அறிவித்தார்கள். தீவிரவாதிகள் மிதவாதிகளின் நிலையைக் கண்டித்தார்கள். காங்கிரசின் அவசரக் கூட்டம் 1918ல் ஆகஸ்ட் கடைசியிலும் செப்டெம்பர் தொடக்கத்திலும் பம்பாயில் நடைபெற்றது. இந்தச் சீர்திருத்தங்கள் ''முற்றிலும் ஏற்றுக்கொள்ளப்பட முடியாதவை'' என்று அறிவிக்கப்பட்டது. மிதவாதிகள் காங்கிரசிலிருந்து வெளியேறி இந்திய லிபரல் கட்சியை அமைத்தார்கள்.

நாட்டில் மிகவும் பெரிய அரசியல் சக்தியாக இருந்த இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியில் மறுபடியும் பிளவு ஏற்பட்டது. சூழ்ச்சி மிக்க லண்டன் அரசியல்வாதிகளால் தயாரிக்கப்பட்ட ''சீர்திருத்தங்கள்'' ''கிரேக்கர்களின் அன்பளிப்புகளாக'' இருந்தன.

இந்தச் சீர்திருத்தங்களைப் பிரிட்டன் பிரேரேபிப்பது, இந்தியா அவற்றை ஏற்றுக் கொள்வது இரண்டுமே தகுதியற்ற செயல்கள் என்று கருதியவர்களின் அணியில் ஜவகர்லால் இருந்தார். சமீபத்திய இணக்கங்களுக்கு உண்மையான காரணங்களை அவர் புரிந்து கொண்டார். நாட்டின் விடுதலைக்காக இந்தியர்கள் மென்மேலும் உறுதியாகவும் பிரம்மாண்டமான அளவிலும் நடத்திய போராட்டங்களைக் கண்டு காலனியாதிக்க வாதிகளுக்கு ஏற்பட்ட கவலைகளே அந்த உண்மையான காரணங்களாகும். மிதவாதத் தலைவர்களுடைய கோழைத் தனமான நடத்தையைப் பற்றி ஜவகர்லால் ஆத்திரமடைந்தார். ''சட்ட பூர்வமான வழிகள்'' என்ற கட்டுப்பாடுகளை மீற முடியாமல், மக்களுடைய ஆவேச எழுச்சியைக் கண்டு ப்யமடைந்து ஆங்கிலேயர்கள் தரக்கூடிய எந்தச் சலுகை யையும் அவர்கள் ஒத்துக் கொள்ளத் தயாராக இருந்தார்கள்.

மிதவாதிகள் அலகபாத்திலிருந்து *The Leader* என்ற செய்தித்தாளை வெளியிட்டு வந்தார்கள். இதற்கு எதிராக 1919 பிப்ரவரி மாதத்தில் மோதிலால் நேரு *The Independent* என்ற செய்தித்தாளை தன்னுடைய சொந்தச் செலவில் வெளியிடத் தொடங்கினர். ஜவகர்லால் அதன் இயக்குநர்களில் ஒருவராக இருந்தார். காலனியாதிக்க எதிர்ப்புத் திசை வழியும் மோதிலால் நேரு மற்றும் ஜவகர்லாலின் உணர்ச்சிகரமான கட்டுரைகளும் அச்செய்தித்தாள் அமோகமாக வெற்றியடைய உதவின.

1923ம் வருடத் தொடக்கத்தில் அந்தப் பத்திரிகை நிறுத்தப்பட்டது. நிதிக் கஷ்டம, பெரும்பான்மையான ஊழியர்களிடம் பத்திரிகைத் தொழிலுக்கு அவசியமான அனுபவம் இல்லாமை முதலியவற்றுலும், முக்கியமாக மோதிலாலும் ஜவகர்லாலும் நாடு முழுவதும் சுற்றுப் பயணங்கள் செய்து கொண்டிருந்தது, கைது செய்யப்பட்டது, சிறைத் தண்டனைகள் முதலிய காரணங்களாலும் செய்தித்தாளைத் தொடர்ந்து வெளியிட முடியவில்லை.

ரௌலட் மசோதாவின் அடிப்படையில் காலனியாதிக்க அதிகாரிகளுக்கு எல்லையற்ற அதிகாரத்தைக் கொடுக்கின்ற ஒரு சட்டம் 1919 மார்ச் 18ல் நிறைவேற்றப்பட்டது. இதற்கு எதிர்ப்பைத் தெரிவிக்கும் முறையில் ஒரு அகில

இந்திய ஹர்த்தால் நடத்த வேண்டும் என்று காந்தி கூறிய ஆலோசனையைக் காங்கிரஸ் தலைவர்கள் ஏற்றுக் கொண்டார் கள். மார்ச் 30ந் தேதியன்று எல்லா இந்துக்களும் முஸ்லிம் களும், அனைத்து இந்தியர்களும் தங்களுடைய தொழில்களைச் செய்யாமல் பிரார்த்தனை மற்றும் உண்ணாவிரதத்தில் அன்றைய தினத்தைக் கழிக்க வேண்டுமென்று காந்தி வேண்டுகோள் விடுத்தார். இதற்குச் சில வாரங்களுக்கு முன்பு அவர் பம்பா யில் நிறுவிய சத்யாக்ரஹ சபையின் உறுப்பினர்கள் இந்தச் சட்டம் தங்கள் மீது பிரயோகிக்கப்படுமானால் இந்தச் சட்டத் துக்கும் காலனியாதிக்க அரசாங்கத்தின் இதைப் போன்ற மற்ற சட்டங்களுக்கும் ஆணைகளுக்கும் பணிவதில்லை என்று சபதமெடுத்துக் கொண்டார்கள்.

காந்தியின் அறைகூவலைக் கேட்டதும் தனக்கேற்பட்ட பெருமித உணர்ச்சியை ஜவகர்லால் பிற்காலத்தில் நினைவு கூர்ந்தார்: ''இந்தச் சிக்கலான நிலைமையில் கடைசியாக ஒரு வழி கண்டுபிடிக்கப்பட்டது, நேரடியாகவும் பகிரங்கமான தாகவும்—அது பலன் கொடுப்பதும் சாத்தியமே—ஒரு செயல் திட்டம் முன்வைக்கப்பட்டது.'' அவர் உடனே சத்யாக் ரஹ சபை அணிகளில் சேர்ந்து காந்தியோடிருக்க விரும் பினார். ஆனால் அவர் தகப்பனார் இந்த உற்சாகத்தை ஆதரிக்க வில்லை என்பது வருத்தமளித்தது.

''பல தனிநபர்கள் சிறைக்குப் போவதால் என்ன நன்மை ஏற்படும்? அது அரசாங்கத்தை எப்படி நிர்ப்பந்திக்கும்?'' என்று அவர் குழப்பமடைந்தவராக ஜவகர்லாலிடம் கேட் டார்.

தகப்பனாரோடு விவாதம் செய்வது பயனற்றது என்பதை அறிந்த ஜவகர்லால் அமைதியாக இருந்தார். மோதிலா லுக்குத் தன்னுடைய குழந்தைகள் எல்லோர் மீதும் பாசம் இருந்தது. ஆனால் தன் மகன் மீது அதிகமான அன்பு வைத்திருந்தார். எனவே தன் மகன் சிறையில் அடைக் கப்படலாம், அங்கே சிரமங்களையும் துன்பங்களையும் அனுப விக்கலாம் என்ற எண்ணத்தையே அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. மகனைச் சிறையில் அடைத்தால் அவன் எத்த கைய கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கும் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அவர் தன் வீட்டில் சில இரவுகளில் யாருக்கும் தெரியாமல் வெறும் தரையில் படுத்து உறங்கினார்.

தன் மகனிடம் மனமாற்றத்தை ஏற்படுத்துவதற்குத் தான் செய்த முயற்சிகள் பலனளிக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்ட மோதிலால் காந்தியை ஆனந்த பவனத்துக்கு வருமாறு அழைத்தார். அவர்கள் இருவரும் பல மணி நேரம் உரையாடினார்கள். அவர்கள் எதைப் பற்றிப் பேசினார்கள் என்பதை ஜவகர்லால் ஊகித்துப் பார்க்கத்தான் முடிந்தது. அவர் மாளிகையைப் பார்த்தபடியே பொறுமையில்லாமல் தோட்டத்தில் நெடு நேரம் உலாவிக் கொண்டிருந்தார். கடைசியில் மோதிலாலும் அவருடைய விருந்தினரும் முன்வாயிலில் தோன்றினார்கள். அவர் தகப்பனார் வராந்தாவிலேயே நின்றுகொண்டார், ஆனால் காந்தி வெறுங்காலோடு ஜவகர்லாலை நோக்கி மெதுவாக நடந்து வந்தார். அவர் ஜவகர்லாலுக்கு மிக நெருக்கமாக வந்து அவர் தோளில் தன் சிறிய, மென்மையான கரத்தை வைத்தார். ஜவகர்லாலின் குழப்பமடைந்த முகத்தை ஊடுருவிப் பார்த்தபடியே மெதுவாகப் பேசினார்: ''உன் தகப்பனாருக்கு வேதனையை ஏற்படுத்தாதே'' என்றார். ''மெதுவாகப் போ'' என்று அவர் நேருவுக்கு ஆலோசனை கூறினார்.

ஏதோ சில காரணங்களுக்காகக் காங்கிரஸ் ஹர்த்தாலை ஏப்ரல் **6**ந் தேதிக்குத் தள்ளிவைத்தது. ஆனால் மார்ச் **30**ந் தேதியன்று டில்லி, லாகூர், மூல்டான், அலகபாத் மற்றும் இதர நகரங்களைச் சேர்ந்தவர்கள் தெருக்களில் ஊர்வலங்கள் நடத்தினார்கள். காந்தி கேட்டுக் கொண்டபடி பிரார்த்தனை, உண்ணாவிரதம் ஆகியவற்றைக் காட்டிலும் ஆர்ப்பாட்டங்களையும் பொதுக்கூட்டங்களையுமே ஏராளமானவர்கள் விரும்பினார்கள். ரௌலட் சட்டத்தைக் கண்டித்துத் தொடங்கிய இக்கூட்டங்களில் ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்று ஆயிரக்கணக்கான குரல்கள் முழங்கின. ஒரு வாரத்திற்குள் நாட்டின் எல்லா மாநிலங்களும் ஹர்த்தாலில் ஈடுபட்டன. தலைநகரத்திலும் லாகூர், அகமதாபாத், பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களிலும் பஞ்சாப் மாகாணத்தில் பல நகரங்களிலும் ஆர்ப்பாட்டக்காரர்களுக்கும் போலீசாருக்குமிடையே கைகலப்புகள் நடைபெற்றன. போலீசாருக்கு உதவியாகத் துருப்புகள் அனுப்பப்பட்டன. பிறகு பஞ்சாப் மாநிலத்தில் இராணுவ நிலை பிரகடனப்படுத்தப்பட்டது. அதன் விளைவாக அந்த மாநிலம் இந்தியாவின்

மற்ற பகுதிகளிலிருந்து துண்டிக்கப்பட்டது. பஞ்சாப் பல மாதங்களுக்கு ஒரு மாபெரும் சிறைச்சாலையாக மாற்றப்பட்டது.

அரசாங்கம் பஞ்சாப் மாநிலத்தை மௌனம் என்ற போர்வையில் பூரணமாக மூடிவைத்திருந்தது. எனினும் அங்கே இராணுவ நிலையினால் ஏற்பட்ட பயங்கரங்களைப் பற்றியும் வீரமிக்க பஞ்சாபியர்கள் மீது ஆங்கிலேயர்கள் செய்த இரத்தக் களறியான கொடுமைகளைப் பற்றியும் தாங்க முடியாத அவமதிப்புக்களைப் பற்றியும் மிகக் குறைவான, துண்டு துண்டான, சில சமயங்களில் முரண்பாடான செய்திகள் கிடைத்தன. இப்படியும் நடை பெற்றிருக்குமா என்று சந்தேகம் கூட ஏற்பட்டது. ஆனால் எப்படியோ அந்த மாநிலத்தை விட்டு வெளியே ஓடிவந்தவர்கள் தெரிவித்த சம்பவங்கள் அதிர்ச்சியளிப்பவையாக இருந்தன. பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி உடனே விசாரணை நடத்த வேண்டும், அதன் முடிவுகளை வெளியிட வேண்டும் என்று காங்கிரஸ் கோரியது.

பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களை இனியும் மூடி மறைக்க முடியாது என்று தெளிவான பிறகு பிரிட்டிஷ் அரசாங்கம் விசாரணை நடத்துவதற்கு ஹண்ட்டர் பிரபுவின் தலைமையில் ஒரு அதிகாரபூர்வமான கமிஷனை நியமித்தது. எட்டு உறுப்பினர்களைக் கொண்ட அந்தக் கமிஷனில் மூன்று இந்தியர்களும் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

ஹண்ட்டர் விசாரணைக் கமிஷனைப் பற்றி மக்களிடம் அவநம்பிக்கைதான் ஏற்பட்டிருந்தது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் மீது மக்கள் ஏற்படுத்திய நிர்ப்பந்தமே இந்த நடவடிக்கைகளுக்குக் காரணம் என்பதைப் பற்றி யாருக்கும் சிறிதளவு கூட சந்தேகம் கிடையாது. அரசாங்க அதிகாரிகள் இந்த விசாரணையை மனச்சாட்சிக்குக் கட்டுப்பட்ட வகையிலும் யதார்த்த பூர்வமாகவும் நடத்தி குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பார்கள் என்று அநேகமாக யாரும் எதிர்பார்க்கவில்லை. கமிஷனிலிருக்கும் இந்திய உறுப்பினர்களைப் பற்றியும் நம்பிக்கை இல்லை. ஏனென்றால் அவர்களும் லண்டன் வட்டாரங்களால் நியமிக்கப்பட்டவர்களே.

அக்டோபர் மாதத்தில் ஐக்கிய மாகாண காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மாநாடு சகாரன்பூரில் நடைபெற்றபொழுது

ஹன்ட்டர் கமிஷனில் காங்கிரசின் பிரதிநிதியையும் சேர்த்துக் கொள்ளுமாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்னும் ஆலோசனையை நேரு கூறினர். சட்ட முறைகளை முழுமையாகவும் முறைப்படியாகவும் பின்பற்றி எல்லா சாட்சிகளையும் விசாரிக்க வேண்டும்; எல்லா சாட்சியங்களும் கவனமாகப் பதிவு செய்யப்பட்டு விரிவாக விளம்பரம் செய்யப்பட வேண்டும். அரசாங்கம் இந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளா விட்டால் ஹன்ட்டர் கமிஷனை இந்தியர்கள் புறக்கணிக்க வேண்டும் என்று ஜவகர்லால் கூறினர்.

காங்கிரசின் கோரிக்கைகளைப் பற்றி அரசாங்கம் மௌனம் சாதித்தது. இது எதிர்பார்த்ததே. ஹன்ட்டர் கமிஷனேடு ஒத்துழைக்க முடியாதென்று கூறிய காங்கிரஸ் தலைவர்கள், பஞ்சாபில் நடைபெற்ற அட்டூழியங்களைப் பற்றி விசாரணை செய்வதோடு மட்டுமல்லாமல் துன்பமடைந்த மக்களுக்குப் பணமும் உணவும் கொடுத்துதவுவதற்காக ஒரு கமிஷனை ஏற்படுத்தினர்கள். மோதிலால் நேரு, கல்கத்தாவைச் சேர்ந்த பிரபலமான அரசியல் பிரமுகரும் வழக்குரைஞருமான சி.ஆர். தாஸ், மோ. க. காந்தி, பம்பாயைச் சேர்ந்த வழக்குரைஞர்களான அப்பாஸ் தயாப்ஜி மற்றும் எம். ஆர். ஜெயக்கர் அந்தக் கமிஷனில் உறுப்பினர்களாக இருந்தார்கள். பஞ்சாப் மாநிலத்தின் மதக் கேந்திரமான அமிருதசரசுக்குப் போகும் சி. ஆர். தாசுக்கு உதவியாக ஜவகர்லால் நேருவும் சென்றர்.

...அதிகாலையில்தான் ஜவகர்லாலுக்குத் தூக்கம் வந்தது, ஆனல் அவர் வெகு நேரம் தூங்கவில்லை. காலைப் பலகாரம் அருந்திய பிறகு அவர் இரயில் பெட்டியின் சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார்.

குறுக்கும் நெடுக்குமாக வாய்க்கால்கள் சென்று கொண்டிருந்த வயல்களைக் காலைக் கதிரவனுடைய ஒளி தங்க முலாம் பூசிக்கொண்டிருந்தது. ஒரு கூடை பட்டாணியும் ஒரே மாதிரியாக இருப்பதைப் போல சிகப்புச் செங்கற்களால் கட்டப்பட்ட வீடுகளைக் கொண்ட பஞ்சாபிக் கிராமங்கள் வேகமாக, ஒவ்வொன்ருக வந்து கொண்டிருந்தன. வெகு தூரத்தில் மலைகளின் நீலப்பிளவுகள் தொடர்ச்சியான, வளைவான ஒரே கோடு மாதிரி உயர்ந்து தோன்றின.

ஐந்து நதிகள் பாயும் சமவெளிப் பிரதேசங்களில் அமைதி

தவழ்கிறது. ஒரு காலத்தில் எதிரியின் எந்தத் தாக்குதலையும் எதிர்த்து நிற்கக் கூடியனவாக இருந்த, பலம் பொருந்திய கோட்டைகள் — இப்பொழுது யாருமில்லாமல் அங்குமிங்கும் அழிந்து போனவை — அடிக்கடி தென்படுகின்றன; அவை பல நூற்றாண்டுக் காலமாகவே மேற்கிலிருந்து வரும் எதிரிகளின் தாக்குதலை முதலில் தாங்கிக்கொள்கின்ற பஞ்சாபியர்களின் அரிய சாதனைகளை நினைவுபடுத்துகின்றன. மாபெரும் அலெக் சாந்தர் மற்றும் முகலாயர்களின் துருப்புகளை எதிர்த்துப் போர் புரிந்த ஆயிரக்கணக்கானவர்களின் வீரத்துக்கு நினைவுச் சின்னமாக அந்த ஊமைக் கோட்டைகள் உயர்ந்து நிற்கின் றன.

பஞ்சாப் மாநிலத்தில் வசிக்கும் சீக்கியர்கள் இந்து மதத் திலிருந்து வெளியேறியவர்கள். அவர்கள் சமூக வகுப்புக் களையும் ஜாதிப் பிரிவினைகளையும் நிராகரித்து எளிமையான மதச் சடங்குகளை, ஒரு கடவுட் கோட்பாட்டைப் பின்பற்று கிறார்கள். அவர்கள் போர்க் குணமும் வீரமும் பெருமிதமும் பெருந்தன்மையும் உடையவர்கள். அவர்கள் நீண்ட தலை முடியும் அடர்த்தியான தாடியும் வைத்திருக்க வேண்டுமென்று அவர்களுடைய மதம் விதிக்கிறது. ஒவ்வொரு சீக்கியரும் தன்னுடைய இடையில் ஒரு வாள் அல்லது குத்துவாளை (கிர்பான்) வைத்திருக்கிறார். எந்த நேரத்திலும் தன்னுடைய எதிரிகளை எதிர்த்துச் சண்டை போடுவதற்கு அவர் தயாராக இருக்கிறார். ஆங்கிலக் காலனியாதிக்கவாதிகளின் தாக்குதல் களுக்கு இந்தியாவிலேயே கடைசியாகக் கீழ்ப்படிந்த மாநிலம் பஞ்சாப். இப்பொழுது அந்த மாநிலம் அவர்களுடைய ஆதிக் கத்தை எதிர்த்து முதலாவதாகக் கிளர்ந்தெழுந்திருக்கிறது.

இரயில் பாதைக்கு இணையாகச் சென்ற சாலையில் அமிரு தசரசிலிருந்து ஒரு குதிரைப் படைப் பிரிவு திரும்பிப் போய்க் கொண்டிருந்தது. அதற்கு முன்பாக ஒரு தூசிபடிந்த கறுப்புக் காரில் நான்கு பிரிட்டிஷ் அதிகாரிகள் உட்கார்ந்திருந்தார் கள். மொத்தம் சுமார் ஐம்பது குதிரைப் படைவீரர் கள் போய்க் கொண்டிருந்தார்கள். குதிரைகள் புழுதிப் படலத்தில் மூழ்கி சோம்பலோடு மெதுவாக நடந்து கொண்டி ருந்தன. சோர்வோடு போய்க் கொண்டிருந்த படைப்பிரிவின் கடைசியில் களைத்துப்போன ஒரு ஜோடிக் குதிரைகள் ஒரு சிறு பீரங்கி வண்டியை இழுத்துக் கொண்டு வந்தன. காலனி

யாதிக்கத் துருப்புகளின் கடைசிப் படைகள் பஞ்சாபிலிருந்து வெளியே போய்க் கொண்டிருந்தன.

காலையில் சுமார் ஒன்பது மணிக்கு இரயில் வண்டி அமிருதசரஸ் நகரத்தை அடைந்தது. நேரு பெட்டியை விட்டுக் கீழே இறங்குவதற்கு முன்பே ஒரு கூலியாள் சாமான்களை எடுத்துச் செல்வதற்குத் தன்னுடைய சக்கர வண்டியைக் கொண்டு வந்து நிறுத்தினான். காங்கிரசின் அமிருத சரஸ் கிளையைச் சேர்ந்த கிரிதாரிலால் என்பவர் நேருவை வரவேற்பதற்கு வந்திருந்தார். நேரு தன்னுடைய பெட்டியைக் கூலியாளிடம் கொடுத்துவிட்டு கிரிதாரிலாலோடு ஹோட்டலை நோக்கி நடந்தார்.

''ஏப்ரல் 10ந் தேதி காலையில் அது ஆரம்பமாயிற்று'' என்று சொல்லிக்கொண்டே கிரிதாரிலால் நடந்தார். ''அகில இந்திய ஹர்த்தால் நடைபெற்ற ஏப்ரல் 6ந் தேதியன்று கலகம் செய்ததாகவும் அரசாங்க எதிர்ப்புக் கிளர்ச்சிகளைத் தூண்டியதாகவும் கிச்லூவும் சத்யபாலும் கைது செய்யப் பட்டு அமிருதசரஸ் நகரத்தை விட்டு வெளியேற்றப்பட்டார் கள். அதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பதற்காக சுமார் முப்பதா யிரம் பேர்கள் நகர் மன்றத்தை நோக்கிச் சென்றார்கள். அதோ தெரிகிறதே, அந்த ஹால் கேட் பாலத்துக்குப் பக்கத்தில் ஆர்ப்பாட்டக்காரர்களை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்த துருப்புகள் அவர்களைக் கலைப்பதற்கு முயற்சி செய்தார்கள். இரு தரப்பிலும் ஏராளமானவர்கள் மரண மடைந்தார்கள், இன்னும் அதிகமானவர்கள் காயமடைந்தார் கள். இந்த இடத்துக்குப் பக்கத்தில் சைக்கிளில் போய்க் கொண்டிருந்த ஷெர்வுட் என்ற ஆங்கிலப் பெண் பாதிரி யார்—மருத்துவப் பணியும் செய்பவர்—காயமடைந்தார்.

ஜவகர்லாலும் அவரோடு வந்தவரும் அந்தப் புழுதி நிறைந்த, வளைந்து செல்கின்ற, கற்பாதையில் நடந்து ஒரு சிறு சதுக்கத்தை அடைந்தார்கள். அங்கே மேற்கூரை இடிந்துபோன ஒரு கட்டிடம் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது.

''இந்த இடத்தில் நகர வங்கி இருந்தது'' என்று கிரி தாரிலால் தொடர்ந்து விளக்கிக் கொண்டு வந்தார். ''கலவரங் கள் இந்த இடத்தோடு நின்றுவிடவில்லை. மக்கள் கூட்டமாக அஞ்சல் அலுவலகம், இரயில் நிலையம், வங்கி மற்றும் கடை

களை நோக்கிச் சென்றார்கள். பல இடங்களில் தீப்பிடித்து எரிந்தது. ''ஐரோப்பியக் குரங்குகளை'' எதிர்த்துப் போராட இந்துக்களையும் முஸ்லிம்களையும் சீக்கியர்களையும் கூவியழைக் கும் கையால் எழுதப்பட்ட கோஷங்கள் சுவர்களில் தோன் றின. அன்றைய பகல் முடிவடைவதற்குள் நகரம் கலகக் காரர்களின் பிடியிலிருந்தது. பிரிட்டிஷ்காரர்கள் கோட்டைக் குள் ஒளிந்து கொண்டு இராணுவத்தின் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் நீண்ட காலம் காத்திருக்கவில்லை, அன்றிரவு சுமார் பத்து மணிக்கு ஜெனரல் டயர் தலைமையில் துருப்புகள் அமிருதசரசுக்குள் நுழைந்தன.''

கிரிதாரிலால் சொல்லிக் கொண்டு வந்த விஷயங்களில் பெரும்பாலானவை ஜவகர்லாலுக்கு முன்பே தெரியும். எனி னும் அவர் குறுக்கிடவில்லை. ஜவகர்லால் ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகு அவரை மறுபடியும் சந்திப்பதாகச் சொல்லி விட்டு ஹோட்டல் வாயிலில் கிரிதாரிலால் பிரிந்து சென்றார்.

கிரிதாரிலால் ஒரு கார் வண்டியில் வந்தார். ''கிரிதாரி லாலோடு காரில் நகரத்தைச் சுற்றிப் பார்த்தேன். தேசிய வங்கி, நகர் மன்றம் மற்றும் அஞ்சல் அலுவலகம் ஆகிய கட்டிடங்கள் இடிந்து கிடப்பதைப் பார்த்தேன்'' என்று ஜவகர்லால் தன்னுடைய நாட்குறிப்பில் சுருக்கமாக எழு தினார்.

ஜாலியன்வாலா பாக் நகரத்தில் ஒரு பெரிய சதுக்கம். அதன் மத்தியில் வெள்ளைக் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட கல்லறை இருக்கிறது. அது இடிந்து போயிருக்கிறது. அதன் ஓரங் களில் குட்டையான மரங்களும் பட்டுப்போன ஈச்ச மரமும் தூசி படிந்து காணப்படுகின்றன. அந்த சதுக்கத்தைச் சுற்றி மூன்று பக்கங்களில் இரண்டு, மூன்று மாடிகளடங்கிய வீடு களும் நான்காவது பக்கத்தில் ஒரு ஆள் உயரத்துக்கு செங்கற் களால் கட்டப்பட்ட சுவரும் இருந்தன. அதன் கதவுகள் குறுகலானவை, ஒரே சமயத்தில் இரண்டு அல்லது மூன்று பேர்கள் மட்டுமே உள்ளே போக முடியும். அந்தக் கதவுகளும் பார்வைக்கு உடனடியாகத் தெரியவில்லை.

புதுவருடப் பிறப்பின் போது (ஸ்தல பஞ்சாங்கத்தின் படி 1919ஆம் ஆண்டு புதுவருடம் ஏப்ரல் 13ந் தேதி பிறந்தது) அமிருதசரஸ் மற்றும் சுற்றிலுமுள்ள கிராமங்களைச் சேர்ந்த மக்கள் சுமார் இருபதாயிரம் பேர்கள் பிற்பகல் நான்கு

மணிக்கு ஜாலியன்வாலா பாகில் கூடினுர்கள். கதவுகளுக்குப் பக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த அந்த வளேகின்ற மேடையில் பேச்சாளர்கள் ஒவ்வொருவராக ஏறினுர்கள். அதிகாரிகள் கிச்லூரவையும் சத்யபாலேயும் விடுதலே செய்ய வேண்டும், ரௌலட் சட்டத்தை ரத்துச்செய்ய வேண்டும் என்று கோரினுர்கள். ஒவ்வொரு பேச்சாளரும் பேசி முடித்ததும் ஆயிரக்கணக்கான மக்கள் ''புரட்சி ஓங்குக!'' என்று முழங்கினுர்கள்.

நேரம் ஐந்தரை மணி. பொதுக்கூட்டம் உச்ச கட்டத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த சமயத்தில் ஆயுதந் தாங்கிய படைவீரர்கள் சுமார் நாற்பது பேர்—ஆங்கிலேயர்களும் கூர்க்காக்களும்—அந்த சதுக்கத்துக்குள் குதித்தனர். அதிகாரி ஆணே கொடுத்ததும் அவர்கள் கூட்டத்தின் தலேகளுக்கு மேலே குறிபார்க்காமல் சுட்டார்கள். உடனே அதிகாரி கைத்துப்பாக்கியை ஆட்டிய படியே படைவீரர்களேத் திட்டத் தொடங்கினுர். மறுபடியும் துப்பாக்கிகள் சுட்டன. இம்முறை கூட்டத்தினரை நோக்கிச் சுட்டன... கூக்குரல்கள், அழுகுரல், பிரார்த்தனே, வசவுகள். போர்வீரர்கள் திரும்பத் திரும்பச் சுட்டார்கள். மக்கள் பயமடைந்து காயமடைந்தவர்கள், பலவீனமானவர்கள், குழந்தைகள் மீது ஏறி மிதித்துக் கொண்டு வெறிபிடித்தவர்களேப் போல அந்த சதுக்கத்தைச் சுற்றி ஓடினுர்கள். அது உயிரைப் பறிக்கும் பயங்கரமான கூண்டாக மாறியிருந்தது. கூர்க்கா படைவீரர்களின் கூர்மையான வளேந்த கத்திகள் வாயிற் கதவுகளே நோக்கி ஓடியவர்களின் உயிர்களேக் குடித்தன. மதிற் சுவர்களின் மீது ஏறித் தப்புவதற்குப் பலர் முயன்ருர்கள், ஆனுல் துப்பாக்கி குண்டுகள் அவர்களுடைய உடல்களேத் துளேத்தன.

துப்பாக்கி குண்டுகள் தீருகின்றவரை சுட்ட படைவீரர்கள் இரத்தம் பெருக்கெடுத்தோடிய சதுக்கத்தை விட்டுச் சென்ருர்கள். அங்கே சுமார் ஆயிரம் பேர்கள் செத்துக் கிடந்தார்கள். அதைப் போன்று இரண்டு மடங்கு அதிகமானேர் காயமடைந்து கிடந்தார்கள்.

ஆயுதங்கள் இல்லாத, பாதுகாப்பு இல்லாத மக்களேக் கொல்லுமாறு தனது துருப்புக்களே ஏவி விட்ட அமிருத சரசின் புதிய சர்வாதிகாரியான ஜெனரல் டயர் ஜாலியன் வாலா பாக் படுகொலேயை நடத்திய பிறகு பொது மக்களில் யாராவது வீடுகளே விட்டு வெளியே வந்தால் உடனே

சுட்டுக்கொல்லப்படுவார்கள் என்று எச்சரித்தான். அதன் மூலம் சதுக்கத்திலும் தெருக்களிலும் காயமடைந்து கிடந்தவர்களுக்கு, செத்துக் கொண்டிருந்தவர்களுக்கு எத்தகைய உதவியும் கிடைக்காமற் செய்தான்.

ஜவகர்லால் ஜாலியன்வாலா பாக் சதுக்கத்துக்குப் பல தடவைகள் சென்றார். அதன் சுவர்களிலும் கற்களிலும் துப்பாக்கி குண்டுகள் துளைத்த இடங்களுக்குப் பக்கத்தில் சென்று கவனமாகப் பார்த்தார். அவை பலி எங்கே என்று கேட்பது போல அவருக்குத் தோன்றியது.

குடும்பத்தலைவர்களை இழந்த குடும்பங்களுக்கு உணவு கொடுப்பதிலும் வேலையில்லாதவர்களுக்கு உதவி செய்வதிலும் பஞ்சாபில் இராணுவச் சட்டத்தின்கீழ் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி சாட்சிகளை விசாரிப்பதிலும் காங்கிரஸ் உறுப்பினர்கள் அதிகாலையிலிருந்து இரவு வெகு நேரம் வரை உழைத்தார்கள்.

காங்கிரஸ் விசாரணைக் குழு 1,700 சாட்சிகளை விசாரித்தது. அவர்கள் வெவ்வேறு ரகங்களாக இருந்தார்கள். சிலர் எடுத்த எடுப்பிலேயே பேசினார்கள், சிலர் விருப்பமில்லாமல் பேசினார்கள், சிலர் உணர்ச்சிகரமாக ஆனால் முரண்பாடுகளோடு பேசினார்கள், வேறு சிலர் அமைதியாக ஆனால் துயரம் நிரம்பிய உறுதியோடு பேசினார்கள். அவர்கள் எல்லோருமே டயரின் துருப்புகள் செய்த அட்டூழியங்களைப் பற்றி, அமிருத சரசிலும் அந்த மாநிலத்தின் மற்ற நகரங்களிலும் அதிகாரிகளின் சர்வாதிகார நடவடிக்கைகளையும் கொடுமையான காரியங்களையும் பற்றி எடுத்துக் கூறினார்கள்.

சாட்சிகள் பல ரகம். ஒரு இளம் பெண் பிரேதக் களையோடு வந்து தன் கணவனும் மகனும் தன் கண்களுக்கு முன்னாலேயே சுட்டுக் கொல்லப்பட்டதைப் பற்றி உருக்கமாகச் சொன்னாள். துப்பாக்கி குண்டுகள் வெடிக்கும் சத்தத்தைக் கேட்டதும் வாண வேடிக்கை நடைபெறுவதாக நினைத்துக் கொண்டு கூரையின் மீது ஏறி உட்கார்ந்து ஏதோ ஒரு அதிசயத்தால் உயிர்தப்பிய ஐந்து வயதுச் சிறுவன் பயந்து போய் யாரும் புரிந்து கொள்ள முடியாதபடி முணுமுணுத்தான். ஒவ்வொரு சாட்சியமும் ஜவகர்லாலுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது.

மிஸ் ஷெர்வுட்டுக்கு ஏற்பட்ட காயங்களுக்குப் பழிவாங்கு

வதற்காக ஜெனரல் டயர் ஒரு ''வஞ்சத் தீர்வுக் கம்பத்தை'' அமைத்திருந்தான். ஜெனரல் டயரின் உத்தரவின் பேரில் ஆங்கிலப் படைவீரர்கள் அந்த வழியாகச் செல்லும் எல்லா இந்தியர்களையும் தங்களுடைய ரைபிள்துப்பாக்கிகளின் குழாய்களுக்குக் கீழே தரையோடு தரையாகப் படுத்து வயிற்றினுல் நகர்ந்து செல்ல வேண்டுமென்று பத்து நாட்கள் வரை கட்டாயப்படுத்தினுர்கள். ஜவகர்லால் இந்தத் தெருவையும் போய்ப் பார்த்தார்.

பஞ்சாபியர்கள் அனுபவித்திருக்கும் உடல் மற்றும் மனச் சித்திரவதைகளைப் பற்றிச் சிந்தித்தபடியே நேரு அமிருதசரஸ் தெருக்களில் மெதுவாக நடந்து சென்முர். அந்தத் தெருக்களில் நடைபெற்ற எல்லா அட்டூழியங்களும் பின்னர் பஞ்சாப் மாநிலத்தின் எல்லா நகரங்களிலும் மறுபடியும் நடைபெற்றன. எல்லா இடங்களிலும் டயரின் ஆட்கள் அட்டகாசம் புரிந்தனர். கம்பீரம் நிறைந்த, பலம் மிகுந்த பஞ்சாப் மக்களுடைய உடலையும் உள்ளத்தையும் நசுக்கிவிட வேண்டுமென்று ஆங்கிலேயர்கள் விரும்பினுர்கள். அந்த மாநிலத்தின் சதுக்கங்களிலும் தெருக்களிலும் ஆயிரக் கணக்கானவர்கள் சவுக்கால் அடிக்கப்பட்டார்கள். இராணுவ நீதி மன்றங்கள் நெடுநேரம் வேலை செய்தன, பல சந்தர்ப்பங்களில் எத்தகைய குற்றச் சாட்டுகளும் இல்லாவிட்டாலும் தண்டனைகளை வழங்கின. ஏராளமான பஞ்சாபியர்கள் சித்திரவதை செய்யப்பட்டுக் கொல்லப்பட்டனர். பலர் விசாரணை இல்லாமல் சிறையில் அடைக்கப்பட்டனர். முதல் உலக யுத்தத்தின் போது இதே பஞ்சாப் மாநிலம்தான் மிகவும் அதிகமான போர்வீரர்களை யுத்தம் செய்ய அனுப்பியது—அவர்களில் பலரும் பிரிட்டிஷ் அரசருடைய நன்மைக்காகத் தங்கள் உயிர்களை அர்ப்பணித்தார்கள்—என்பதை நினைத்துப் பார்க்கும் பொழுது இது மிகவும் மனிதத்தன்மையற்ற செயலாகத் தெரிந்தது.

பஞ்சாபிலிருந்து திரும்பியதும் காங்கிரஸ் விசாரணைக் குழுவின் உறுப்பினர்களான நேருவும் மற்றவர்களும் தங்களுடைய விசாரணைகளைப் பற்றிய அறிக்கையைத் தயாரித்தார்கள். 1920ல் அந்த அறிக்கை சில தொகுதிகளாக வெளியிடப்பட்டது. அதில் அறுநூறு நபர்களின் சாட்சியங்கள் இடம் பெற்றிருந்தன. சிறிதும் சந்தேகிக்கப்பட முடியாத ஆவணங்கள் மட்டுமே அந்த அறிக்கையில் சேர்க்கப்பட்டிருந்

தன. அதன் ஒவ்வொரு பக்கமும் ஆங்கில ஏகாதிபத்தியத் தைப் பற்றிச் சிறிதும் மறுக்க முடியாத கண்டனமாக இருந் தது.

''உண்மையை, மற்றவற்றை ஒதுக்கி உண்மையை மட் டுமே வெளிக் கொண்டு வருகின்ற ஒரே நோக்கத்துக்காக'' இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டிருக்கிறது; ''பிரிட்டிஷ் அர சாங்கம் அதிகாரத்தில் நீடிப்பதற்காக எந்த அளவுக்குப் போகக்கூடும், எத்தகைய மனிதத் தன்மையற்ற செயல் களையும் காட்டு மிராண்டித் தனங்களையும் செய்ய முடியும் என்பதை வாசகர் தெரிந்து கொள்ள இந்த அறிக்கை உதவும்'' என்று மகாத்மா காந்தி எழுதினார்.

பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றிய உண் மையைத் தெரிந்து கொண்டதும் ஒவ்வொரு இந்தியருக்கும் ஏற்பட்ட வேதனையையும் ஆத்திரத்தையும் கோபத்தையும் இரவீந்திரநாத் தாகூர் வைசிராய்க்கு எழுதிய கடிதத்தில் வெளிப்படுத்தினார். ''பஞ்சாபில் ஏற்பட்ட கலவரங்களை ஒடுக் குவதற்காக அரசாங்கம் செய்த அருவருக்கத் தக்க குற்றங் கள் பிரிட்டிஷ் பிரஜைகள் என்ற முறையில் இந்தியர்களின் பரிதாபகரமான நிலையை நினைவுபடுத்தும் ஈவிரக்கமற்ற அடி'' என்று அவர் எழுதினார். ''அந்தப் பரிதாபகரமான மக்கள் மீது விதிக்கப்பட்ட மிகவும் கொடுமையான தண்டனைகளுக் கும் அவற்றை அமுலாக்கிய முறைகளுக்கும் நாகரிகமான அரசாங்கங்களின் வரலாற்றில் நமது கருத்துப்படி இணையே கிடையாது'' என்று குறிப்பிட்டிருந்தார்.

1919ம் வருட சம்பவங்களை நினைவு கூர்ந்த ஜவகர்லால் பிற்காலத்தில் பின்வருமாறு எழுதினார்: ''ஏகாதிபத்தியம் எவ் வளவு காட்டுமிராண்டித் தனமானது, அறநெறி இல்லாதது, பிரிட்டிஷ் மேல் வர்க்கத்தினர்களின் ஆன்மாக்களை அது எப்படி அரித்துவிட்டது என்பதை முன்னெப்போதும் கண்டிராத அள வுக்கு மிகவும் தெளிவாக நான் புரிந்து கொண்டேன்.''

1919ம் வருடத்தின் கடைசி நாட்களில் தேசிய காங் கிரசின் மாநாடு அமிருதசரசில் நடைபெற்றது. இந்திய தேசிய விடுதலை இயக்கத்தின் முன்னணியிலிருந்த தலைவர்களான திலகர், அன்னி பெஸன்ட், அலி சகோதரர்கள், சி. ஆர். தாஸ், எம். ஏ. ஜின்னு, காந்தி, மோதிலால் நேரு, ஜவகர் லால் நேரு ஆகிய எல்லோருமே அங்கே திரண்டிருந்தார்கள்.

அந்த மாநாடு புயலைப் போன்ற சீற்றத்தோடு விளங்கியது. பஞ்சாபில் ஆங்கில அரசாங்கம் நடத்திய இரத்த வெறிப் படுகொலை காங்கிரஸ் உறுப்பினர்களுடைய மனங்களில் இன்னும் பசுமையாக இருந்தது. ஒவ்வொரு பேச்சிலும் கொலைகாரர்களைப் பற்றிக் கசப்பான அருவருப்பு தொனித்தது. பிரதிநிதிகளில் பெரும்பான்மையானவர்கள் மான்டேகு—செல்ம்ஸ்போர்டு சீர்திருத்தங்களை ஆத்திரத்தோடு நிராகரித்தார்கள், சுயநிர்வாகம் என்ற கோட்பாடுகளின் அடிப்படையில் முழுவதும் மக்களுக்குப் பொறுப்பான அரசாங்கம் நிறுவப்பட வேண்டுமென்று அவர்கள் கோரினார்கள். காலனியாதிக்கவாதிகளுக்கு எதிரான போராட்டத்துக்கு அணி திரளுமாறு இந்தியாவிலுள்ள எல்லா அரசியல் ஸ்தாபனங்களையும் காங்கிரஸ் கேட்டுக் கொண்டது.

மிதவாதிகள் அமைதியாக இருந்தார்கள்; அவர்களுடைய பிரதிநிதிகள் கூட அமிருதசரசுக்கு வரவில்லை. காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் ஏற்பட்டிருந்த ஒற்றுமை இன்னும் உறுதியாக இருப்பதைப் போலத்தான் தோன்றியது. முஸ்லிம் லீகின் தலைவர்களில் ஒருவரான அஜ்மல் கானும் காங்கிரஸ் மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய மோதிலால் நேருவும் சீக்கியர்களுடைய புனிதமான ஆலயமாகிய அமிருதசரஸ் தங்கக் கோயிலில் இந்து, முஸ்லிம் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக ஒன்றாக வழிபாடு செய்தார்கள். எனினும் இரண்டு கட்சிகளுக்கும் இடையே உள்ள உறவுகளில் முதல் பிளவுகள் முன்னரே தோன்றிவிட்டன. புதிய தலைவர்களான காந்தியும் அலி சகோதரர்களும் காங்கிரசில் ஏற்படுத்திய புதிய நீரோட்டங்கள் முஸ்லிம் லீகின் தலைவரான ஜின்னாவை பயமுறுத்தின என்பது தெளிவாகத் தெரிந்தது. அலி சகோதரர்களைப் பற்றித் தனக்கு ஏற்பட்ட வெறுப்பை ஜின்னா மறைக்கவில்லை. பஞ்சாப் கலவரங்களில் ஈடுபட்டிருந்த எல்லோருக்கும் ஐந்தாம் ஜார்ஜ் பொது விடுதலையளித்தபடியால் முகம்மது அலியும் ஷவுக்கத் அலியும் சிறையிலிருந்து நேராக மாநாட்டுக்கு வந்து கலந்து கொண்டார்கள். இந்திய முஸ்லிம்களிடத்தில் அவர்களிருவருக்கும் மிக அதிகமான செல்வாக்கு இருந்தது. ஆட்டோமான் சாம்ராஜ்யத்தைக் கூறு போட வேண்டுமென்று விரும்பிய ஏகாதிபத்திய அரசுகளின் நோக்கங்களுக்கு எதிராகத் துருக்கியின் சுல்தானை காலிஃபிற்கு

ஆதரவு கொடுப்பதற்காக 1918ல் அலி சகோதரர் களால் அமைக்கப்பட்ட காலிஃபேட் கமிட்டி இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை பகிரங்கமாக எதிர்த்தது. முஸ்லிம் லீகுக்கு மாறுன வகையில் இந்தக் கமிட்டி இந்திய முஸ்லிம் களின் எல்லாப் பிரிவினருடைய பிரதிநிதிகளையும் தன்னுடைய அணிகளில் சேர்த்துக் கொண்டது. சில மாதங்களுக்குள்ளா கவே அது ஏராளமான உறுப்பினர்களைக் கொண்ட, பலமான அரசியல் சக்தியாக வளர்ந்தது. மக்கள் மத்தியில் ''காலிஃ பேட்'' என்ற சொல் திடீரென்று புதிய அர்த்தத்தைப் பெற்றது. உருது மொழியில் ''கிலாஃப்'' என்ற சொல்லுக்கு ''எதிரான,'' ''விரோதமான'' என்று அர்த்தம். காலிஃபேட் என்ற சொல் இதிலிருந்து தோன்றியிருப்பதாக விவசாயி நினைத்தான். ஆகவே காலிஃபேட் இயக்கம் என்பது எல்லோ ராலும் வெறுக்கப்பட்ட ஒடுக்குமுறையாளர்களான பிரிட்டிஷ் காலனியாதிக்கவாதிகளுக்கும் சுதேசி நிலச்சுவாந்தார்களுக்கும் எதிரான இயக்கம் என்று கருதப்பட்டது.

1920 மே மாதத்தில் ஜவகர்லால் தன் மனைவியோடும் தாயாரோடும் முசூரிக்குச் சென்றார். கோடைகாலத்தின் அதி கமான வெப்பம் சொரூபராணி, கமலா ஆகியோரது மென் மையான உடல்நலத்துக்குத் தீங்கேற்படுத்துமாதலால் கோடை காலம் முழுவதும் அங்கே தங்கியிருப்பதென்று எண்ணியிருந் தார். அவர்கள் சவோய் ஹோட்டலில் தங்கியிருந்தார்கள், குறுகிய கால ஆங்கில-ஆப்கானிஸ்தான் யுத்தம் முடிவடைந் திருந்த படியால் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு பேச்சுவார்த் தைகள் நடத்துவதற்காக வந்திருந்த ஆப்கானிஸ்தானத்தின் பிரதிநிதிகளும் அதே ஹோட்டலில் தங்கியிருந்தார்கள்.

ஆப்கானிஸ்தானப் பிரதிநிதிகள் இந்தியாவின் காலனியா திக்க எதிர்ப்பு இயக்கத்தைச் சேர்ந்தவர்களோடு எத்தகைய தொடர்பும் ஏற்படுத்தாமலிருக்க வேண்டும் என்பதற்காகப் பல இரகசியப் போலீஸ் ஒற்றர்கள் அந்த தூதுக் குழுவினரைக் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களால் கண் காணிக்கப்படுபவர்கள் தங்கியிருக்கும் ஹோட்டலில் எல்லோருக் கும் அறிமுகமான ஜவகர்லால் நேரு வந்து தங்கியது அவர் களிடம் தீவிரமான பயத்தை ஏற்படுத்தியது.

ஜவகர்லால் தன்னுடைய நேரம் முழுவதையும் குடும்பத் தினரோடு கழித்தார். ஆப்கானிஸ்தான் தூதுக்குழுவினரைப்

பற்றி அவர் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. எனினும் ஒரு நாள் மாலைநேரத்தில் ஸ்தல 'போலீஸ் தலைவர் அவருடைய அறைக்குள் நுழைந்தபொழுது அவர் மிகவும் ஆச்சரியமடைந்தார்.

''ஆப்கானிஸ்தான் தூதுக்குழுவினரோடு தொடர்பு கொள்ளப் போவதில்லை என்று உங்களிடமிருந்து உறுதிமொழி வாங்குமாறு எனக்கு உத்தரவு கிடைத்திருக்கிறது'' என்று அவர் எந்தப் பீடிகையும் இல்லாமற் கூறினார்.

இதைக் கேட்டவுடன் ஜவகர்லாலுக்கு ஆத்திரமேற்பட்டது. அத்தகைய உறுதிமொழி தர முடியாது என்று திட்டவட்டமாக பதிலளித்தார். அவர் முசூரியை விட்டு உடனடியாக வெளியேற வேண்டும் என்ற உத்தரவு அவரிடம் கொடுக்கப்பட்டது.

மோதிலால் நேரு ஐக்கிய மாகாணத்தின் ஆளுநரோடு தமது தொடர்புகளைப் பயன்படுத்தி அந்த உத்தரவை ரத்துச் செய்வதற்கு ஏற்பாடு செய்தார். ஆனால் அதற்கிடையில் ஜவகர்லால் இரண்டு வாரங்களை அலகபாத்தில் கழிக்க வேண்டியதாயிற்று. ''அப்பொழுது என் வாழ்க்கையில் ஏற்பட்ட புதிய அக்கறைகள் அதற்குப் பின்னர் வந்த வருடங்களில் முக்கியமான பாத்திரத்தை வகித்தன'' என்று அவர் தமது சுயசரிதையில் எழுதினார்.

அவர் இப்பொழுது விவசாயிகளைச் சந்தித்தார். இதற்கு முன்பு கங்கைக் கரையில் மத விழாக்களின் போது மட்டும் தான் அவர் விவசாயிகளைப் பார்த்திருக்கிறார். எனவே அவர்களுடைய வாழ்க்கை மற்றும் உழைப்பின் நிலைமைகளைப் பற்றித் தெளிவில்லாத அபிப்பிராயங்களே அவரிடம் இருந்தன. ''விவசாயிகளைப் புரிந்துகொண்டால் இந்தியாவைப் புரிந்து கொள்ள முடியும்'' என்பது முதுமொழி. ஜவகர்லால் ஒரு விவசாயியின் ஆன்மாவின் மூலம் தன்னுடைய தாய் நாட்டைப் புரிந்துகொள்ள விரும்பினார்.

இந்தியாவின் மக்கள் தொகையில் அதிகப் பெரும்பான்மையினர் கிராமங்களில்தான் வசித்தார்கள்.* விவசாயியின் வாழ்க்கை மிகவும் துன்பம் நிறைந்தது. சிறிதும் நம்பிக்கைக்கு

---

* அந்தக் காலத்தில் இந்தியாவின் மக்கள் தொகை சுமார் 30 கோடியாகும். அவர்களில் 90 சதவிகிதத்தினர் கிராமங்களில் வசித்தார்கள்.

இடமில்லாத இருளடர்ந்த வாழ்க்கை, மனிதத்தன்மையற்ற, அதிகாலை முதல் அந்தி நேரம் வரை கடுமையான உழைப்பைக் கொண்ட அந்த வாழ்க்கைக்கு இணையாக வேறு எதுவுமே கிடையாது. முப்பதே வயதான விவசாயிகூட உலர்ந்து சுருங்கிப்போய், பற்களெல்லாம் விழுந்து சுமைகளாலும் நோய்களாலும் கூன் விழுந்து ஒரு காலுக்கு முன்னால் மற்றொரு காலை எடுத்து வைக்க முடியாதவனாக, கந்தலை அணிந்தவனாக இருந்தான். அவன் களிமண்சுவர்களும் ஓலைக்கூரையும் கொண்ட பாதி இடிந்து போன குடிசையில் வசித்து வந்தான். மழை பெய்யும்பொழுது அந்தக் கூரை வழியாகத் தண்ணீர் சொட்டும். அவன் ஈரமான தரையில் பாயின் மீது (சில சமயங்களில் அதுவுமில்லாது) படுத்துத் தூங்குவான். இரவு நேரங்களில் தரையிலிருக்கும் ஈரம் அவனுடைய களைத்துப் போன உடலைத் துளைக்கும். சிறிதளவு அரிசிச் சோறுதான் அவனுடைய உணவு. அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. பக்கத்திலுள்ள கிராமங்களோடு அவனுடைய உலகம் முடிந்து விடும். அரசாங்க அதிகாரிகள், நிலச்சுவாந்தார்கள், வட்டிக் கடைக்காரர்கள், போலீஸ்காரர்கள், பூசாரிகள் ஈவிரக்கமின்றி அவனை அவமதித்துச் சுரண்டிக் கொள்ளையடித்தார்கள். காலம் காலமாக வந்திருக்கும் அவனுடைய பொறுமைக்கு ஏதேனும் எல்லையுண்டா?

ஜவகர்லால் நிர்ப்பந்தவசமாக அலகபாத்தில் தங்கியிருந்த பொழுது அதிகமான விவசாயிகள் பல மைல் தூரம் கால் நடையாக வந்து நகரத்துக்குச் சற்றுத் தொலைவில் தங்கியிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டார். அவர்கள் அவூத் பிரதேசத்திலிருக்கும் பிரதாப்கார் மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். யாராவது முக்கியமான அரசியல் தலைவரைச் சந்தித்துத் தங்களுடைய கஷ்டங்களை எடுத்துச் சொல்லுமாறு மற்ற விவசாயிகள் அவர்களை அனுப்பியிருந்தார்கள்.

ஜவகர்லாலும் சில காங்கிரஸ்காரர்களும் யமுனை நதிக் கரையில் அவர்கள் தங்கியிருந்த இடத்துக்குச் சென்றார்கள். அவர்கள் விவசாயிகளோடு இரவில் நெடுநேரம் வரை பேசினார்கள். ''அவர்களை நசுக்கிவிடுகின்ற முறையில் நிலச்சுவாந்தார்கள் விதிக்கும் வரிகளைப் பற்றி, அவர்களை மனிதத்தன்மை இல்லாமல் நடத்துவதைப் பற்றி, சகித்துக் கொள்ள முடியாதபடி மோசமாகிவிட்ட தங்கள் நிலைமையைப் பற்றிப்

பேசினார்கள். எங்களோடு கிராமங்களுக்கு வந்து இதைப் பற்றி விசாரணை செய்யுங்கள், நாங்கள் இந்த வேலையாக அலகபாத்துக்கு வந்ததற்காக நிலச்சுவாந்தார்கள் எங்கள் மீது ஆத்திரமாக இருக்கிறார்கள், அவர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் எங்களோடு வர வேண்டும் என்று அவர்கள் கெஞ்சினார்கள். எங்கள் மறுப்பை அவர்கள் ஒத்துக் கொள்ளத் தயாராக இல்லை. உண்மையைச் சொல்வதென்றால் அவர்கள் எங்களிடம் அப்படியே ஒட்டிக்கொண்டார்கள்'' என்று நேரு எழுதினார்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு நேருவும் சில காங்கிரஸ்காரர்களும் பிரதாப்காருக்குப் புறப்பட்டார்கள். அங்கே கடவுளும் மனிதனும் மறந்துவிட்ட குக்கிராமத்தை அடைந்தார்கள். அவர்கள் வருவதைப் பற்றிக் கேள்விப்பட்ட விவசாயிகள் அங்கே அவர்களுக்காகக் காத்திருந்து நெகிழ வைக்கும் முறையில் நெஞ்சார எதிர்கொண்டார்கள். ஜவகர்லாலும் அவருடைய நண்பர்களும் அந்தக் குக்கிராமத்துக்கு வந்திருப்பதன் விளைவாக அந்த விவசாயிகளின் வாழ்க்கையில் நல்ல காலம் பிறக்கப் போகிறது, அவர்கள் அனுபவிக்கும் எண்ணற்ற துன்பங்களுக்கு முடிவு ஏற்படப் போகிறது என்று அங்கிருந்த எல்லோருமே நம்பினார்கள்.

''ஒரு முடிவில்லாத சோகக் கதை'' என்று தான் அங்கே கேள்விப்பட்டதை நேரு வர்ணித்தார்.

ஒவ்வொரு கிராமத்திலும் அதே மாதிரி சம்பவம் நடைபெற்றது. விவசாயிகள் நேருவைக் கூட்டமாகச் சூழ்ந்து கொண்டு தாங்கள் அனுபவித்த துன்பங்களைக் குழந்தைகளுக்கே உரிய நம்பிக்கையோடும் ஒளிவு மறைவில்லாமலும் எடுத்துக் கூறினார்கள். குடும்பங்களைக் கூண்டோடு அழித்த முன்பின் தெரியாத கொள்ளை நோய்களைப் பற்றி, ஒரு காலத்தில் வளமாக இருந்த நிலத்தை முற்றிலும் பொட்டலாக்கிவிட்ட வறட்சியைப் பற்றி, நில வாரத்தை நினைத்தபடி உயர்த்தி அதைக் கொடுப்பதற்கு ஒரு வழியுமில்லாத குடும்பங்களை ஈவிரக்கமின்றி நிலத்தை விட்டுத் துரத்திவிட்ட நிலச்சுவாந்தார்களுடைய கொடுமைகளைப் பற்றி, கொள்ளை வட்டி வாங்கும் கிராம லேவாதேவிக்காரர்களின் பேராசையையும் திருட்டுத்தனத்தையும் பற்றி, மிகவும் அற்பமான குற்றத்தைச் செய்பவர்களைக் கூட தண்டிக்கும் போலீஸ்காரர்களின்

சர்வாதிகாரத்தைப் பற்றி எடுத்துக் கூறினார்கள்.

சூரிய வெப்பத்தில் உழைப்பதால் கறுத்துப் போன மெலிந்த முகங்கள், அனாதையான நிலைமையாலும் ஆத்திரத்தாலும் பிரகாசிக்கின்ற கண்கள் — இவை ஜவகர்லாலை உலுக்கின. ''அவர்களையும் அவர்களுடைய துன்பங்களையும் பார்த்துக் கொண்டிருந்த பொழுது என் உள்ளத்தில் அவமானமும் வேதனையும் — ஏனெனில் இந்தியாவின் அவலமான ஏழ்மையை எண்ணி வேதனை, என்னுடைய சுகமான வாழ்க்கை மற்றும் அற்பத்தனமான அரசியலைப் பற்றி அவமானம் — நிறைந்தன'' என்று அவர் எழுதினார்.

ஜவகர்லால் முசூரியிலிருந்த தன் குடும்பத்துக்குத் திரும்பினார். ஆனால் அவூத் பிரதேசத்தில் அவர் சந்தித்த விவசாயிகளைப் பற்றிய நினைவுகள் அவரை அமைதியாக இருக்க விடவில்லை. கிராமத்தில் புதிய, பலம் மிக்க இயக்கம் வெடித்தெழப் போகிறது என்ற உணர்வு அவரை விட்டு அகலவில்லை. விவசாயிகளைத் திரட்டி இந்தியத் தாய்நாட்டின் விடுதலைக்கும் சுதந்திரத்துக்கும் போராடுகின்ற நாடு தழுவிய இயக்கத்தில் அவர்களை ஈடுபடுத்த வேண்டிய அவசியத்தை அவர் புரிந்து கொண்டார்.

அவர் எதிர்பார்த்தபடியே சம்பவங்கள் நடைபெற்றன. 1920ம் வருடத்தின் இலையுதிர்காலத்தின் போது கிராமங்களில் விவசாயிகளின் கலகங்கள் வெடித்தன.

1921 ஜனவரி மாதம் 6ந் தேதியன்று ராய்பரேலியில் இருந்த நேருவின் நண்பர்களில் ஒருவரான மார்த்தாண்ட் வைத்யா என்பவரிடமிருந்து அவருக்குத் தந்தி வந்தது. நாகபுரியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொண்டு விட்டு நேரு அப்பொழுதுதான் அலகபாத்துக்குத் திரும்பியிருந்தார். ராய்பரேலியில் மிகவும் பயங்கரமான நிலைமை ஏற்பட்டிருப்பதால் உடனடியாக அங்கே வர வேண்டுமென்று தந்தி அவரைக் கேட்டுக் கொண்டது. நேரு சிரமப்பட்டு தபால்களுக்கான ரயில் வண்டியில் இடம் பிடித்தார். மறுநாள் பிற்பகல் இரண்டு மணிக்கு அங்கே போய்ச் சேர்ந்தார். ஸ்தல காங்கிரஸ் உறுப்பினர்கள் அவரை ரயில் நிலையத்தில் சந்தித்தார்கள். அதிகாரிகள், விவசாயிகளின் தலைவர்களைக் கைது செய்ததைக் கண்டித்து அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்ய உத்தேசித்த விவசாயிகளைப் போலீசாரும் அவசரமாக

அங்கே கொண்டு வரப்பட்ட துருப்புகளும் தடுத்து பய முறுத்திக் கொண்டிருப்பதாக நேருவிடம் கூறினார்கள்.

ஜவகர்லால் நேரு ரயில் நிலையத்திலிருந்து நேராக சோன் நதிக்கரைக்குச் சென்றார். அங்கே விவசாயிகள் கூட்டமாகத் தங்கியிருந்தார்கள். படைவீரர்களோடு மோத வேண்டாம், இல்லையென்றால் பயனின்றி இரத்தம் சிந்த நேரிடும், அமைதி யாகக் கலைந்துபோய் விடுங்கள் என்று விவசாயிகளிடம் சொல்ல வேண்டுமென்று நேரு நினைத்தார். போகும் வழியில் ஒரு அதிகாரி மூச்சிறைக்க ஓடிவந்து மாவட்ட நீதிபதி பென்சிலால் எழுதிய குறிப்புச் சீட்டை நேருவிடம் நீட்டினார். ''ஜவகர் லால் நேருவுக்கு, இந்த மாவட்டத்துக்கு உமது வருகை தக்கதல்ல என்று இதன் மூலம் உமக்குத் தெரிவிக்கப்படு கிறது. அடுத்த இரயில் வண்டியிலேயே திரும்பிப் போக வேண்டும்'' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. ஜவகர்லால் தன் பதிலை அந்தக் குறிப்புச் சீட்டின் பின்புறத்தில் எழுதினார்: ''இது அதிகார பூர்வமான உத்தரவா அல்லது வெறும் வேண்டுகோளா என்பதை அறிய விரும்புகிறேன். முன்னதே என்றால் முறைப்படி எந்த சட்டத்தின் எந்த விதியின் படி என்பதைக் குறிப்பிட்டு எழுதியிருக்க வேண்டும். அத்தகைய ஆணை எனக்குக் கொடுக்கப்படுகின்றவரை நான் இங்கேயே இருப்பேன்.''

நேருவும் மற்ற காங்கிரஸ் உறுப்பினர்களும் ஆற்றங் கரைக்கு வந்த பொழுது மறுகரையிலிருந்து துப்பாக்கிகள் சுட்டன. ஜவகர்லால் சுறுசுறுப்பாக ஆற்றின் குறுக்கே போடப்பட்டிருந்த மூங்கில் பாலத்தை நோக்கி நடந்தார். அவர் ஆற்றின் அக்கரைக்குப் போக விரும்பினார். ஆனால் போலீஸ்காரர்கள் அவரைத் தடுத்து நிறுத்தினார்கள். துப்பாக்கி குண்டுகளிலிருந்து தப்புவதற்காக வயல்களிலும் புதர்களிலும் மறைந்துகொண்டிருந்த விவசாயிகள் சில நிமிடங்களில் நேரு வைச் சூழ்ந்து கொண்டார்கள். எத்தகைய முன்னேற்பாடு மில்லாமல் அங்கே ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. விவசாயிகள் அவசரப்பட வேண்டாம், போலீஸ் மற்றும் துருப்புகளின் ஆத்திரமூட்டல்களுக்கு எதிர்க்காரியங்களைச் செய்ய வேண்டாம் என்று அவர்களை ஒத்துக்கொள்ளச் செய் வதற்கு நேரு முயற்சி செய்தார்.

மறு நாள் காலையில் நேரு அலகபாத்துக்குத் திரும்பினார்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு **ராய்பரேலியில் சோக நாடகம்** என்ற பொதுத் தலைப்பில் தொடர் கட்டுரைகளை *The Independent* செய்தித்தாள் வெளியிடத் தொடங்கியது. அவற்றில் ஒரு கட்டுரை பின்வருமாறு தொடங்கிற்று: ''ஒரு முறை நடைபெற்ற வரலாற்றுச் சம்பவங்கள் மறுபடியும் அதே மாதிரி நடைபெறுவதுண்டு என்று சொல்கிறார்கள். என்றும் மறக்க முடியாத 1919ம் வருடத்தில் ஏப்ரல் மாதத்தில் அமிருதசரஸ் நகரத்தின் மத்தியப் பகுதி மிகவும் அத்து மீறிய முறையில், ஈவிரக்கமில்லாதபடி கொல்லப்பட்ட இந்தியர்களின் ரத்தத்தில் நனைந்தது... அதற்குப் பிறகு ஒரு வருடமும் எட்டு மாதங்களும் முடிந்துவிட்டன. இந்தியா மற்றும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் வரலாற்றில் மிகவும் சோககரமான மாதங்கள். இன்னும் பிரிட்டன் இந்தியாவை ஆட்சி செய்துகொண்டிருக்கிறது... பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அதன் கொடுமையான பயணத்தை இன்னும் தொடர்கிறது... இந்திய ரத்தம் இன்னும் சிந்தப்படுகிறது... விவசாயிகள் யார்? ஏழைகள், பரிதாபமான நிலைமையிலிருப்பவர்கள், கீழே தள்ளப்பட்ட ஆண்கள், பெண்கள், எப்பொழுதும் பற்றாக் குறையான வாழ்க்கை, எப்பொழுதும் துன்பத்தில் சிக்கியவர்கள், அநேகமாக ஒரு போதும் புகார் செய்யாதவர்கள். அவர்களைப் பற்றி நினைத்ததுண்டா? சோன் ஆற்றின் கரையில் அவர்களுடைய ரத்தம் கொட்டிக் கிடக்கிறது. அவர்களுடைய உடல்கள் லேசான மணல் படுகையின் கீழ் அல்லது அதுவும் இல்லாமல் திறந்த வெளியில் அழுகிப் போய், பிரேதங்களைச் சாப்பிடும் பிராணிகளுக்கு விருந்தாகக் கிடக்கின்றன. உயிரோடிருப்பவர்களின் நிலைமையோ இதைக் காட்டிலும் மோசம். போலீஸ்காரர்களும் நிலச்சுவாந்தார்களின் கையாட்களும் அவர்களைச் சித்திரவதை செய்கிறார்கள், அடித்து உதைக்கிறார்கள், சிறையில் அடைக்கிறார்கள்.''

காலனியாதிக்க ஆட்சி முறையின் புதிய குற்றங்களை அம்பலப்படுத்திய அந்தக் கட்டுரைகளை ஜவகர்லால் நேரு எழுதினார்.

1921ம் வருடத்தின் நடுப்பகுதி வருவதற்குள் இந்தியா முழுவதிலும் விவசாய இயக்கங்கள் வளர்ந்தன. காந்தியால் அறிவிக்கப்பட்டு இந்திய தேசிய காங்கிரசினால் நடத்தப்பட்ட பிரம்மாண்டமான ஒத்துழையாமை இயக்கத்தோடு சேர்ந்து

விவசாயிகள் இயக்கமும்—அது தானாகவே தோன்றியதாக இருந்தாலும், சில உதாரணங்களில் மத குணம்சத்தைக் கொண்டிருந்தாலும்—இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை பயமுறுத்தியது.

அதே 1921ம் வருடத்தில், வெகு தூரத்துக்கு அப்பால் உள்ள மாஸ்கோவில் வரலாற்றிலேயே முதல் முறையாக ஏற்பட்டிருந்த தொழிலாளர்கள் மற்றும் விவசாயிகளின் அரசின் தலைவரான வி.இ. லெனின் இந்தியாவின் புரட்சிகர இயக்கத்தின் தோல்விகளையும் வெற்றிகளையும் வேதனையோடும் நம்பிக்கையோடும் கவனித்துக் கொண்டிருந்தார் என்பது ஜவகர்லாலுக்கு அப்பொழுது தெரியாது. லெனின் தன்னுடைய கட்டுரையில் பின்வருமாறு எழுதினார்: ''உலகத்தின் மக்கள் தொகையில் மிகவும் அதிகமான பெரும்பான்மையினரான காலனி மற்றும் அரைக்காலனி நாடுகளைச் சேர்ந்த பெருந்திரளான உழைக்கும் மக்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே, குறிப்பாக ருஷ்யா, துருக்கி, பாரசீகம் மற்றும் சீனாவில் நடைபெற்ற புரட்சிகளினால் அரசியல் வாழ்க்கைக்குத் தூண்டப்பட்டார்கள். 1914-1918ம் வருடங்களில் நடைபெற்ற ஏகாதிபத்திய யுத்தமும் ருஷ்யாவில் சோவியத் ஆட்சியதிகாரமும் இம்மக்கள் திரளினரை உலக அரசியலின் சுறுசுறுப்பான பகுதியாகவும் ஏகாதிபத்தியத்தைப் புரட்சிகரமாக ஒழிப்பதன் காரணியாகவும் இறுதியாக மாற்றி கொண்டிருக்கின்றன... இந்த நாடுகளில் முதலிடத்தில் பிரிட்டிஷ் இந்தியா நிற்கிறது. அங்கே ஒரு பக்கத்தில் தொழில் துறை மற்றும் ரயில்வே பாட்டாளி வர்க்கத்தின் வளர்ச்சியோடும் மறுபக்கத்தில் படுகொலைகள் (அமிருதசரஸ்), பகிரங்கமாக சவுக்காலடித்தல், இதரவைகளை மென்மேலும் அதிகமாகச் செய்துவருகின்ற பிரிட்டிஷ்காரர்களின் காட்டு மிராண்டித்தனமான அடக்குமுறைகளின் அதிகரிப்புக்கும் ஏற்ற விகிதத்தில் புரட்சி முதிர்ச்சி அடைந்து கொண்டிருக்கிறது.''*

பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களும் எளிமையான விவசாயிகளோடு ஏற்பட்ட தொடர்பும் நேருவுக்கு இந்தியாவைப் பற்றிப் புதிய—ஓரளவுக்கு எதிர்பாராத—படப்பிடிப்பைக்

---

* V. I. Lênin, "Third Congress of the Communist International", *Collected Works,* Vol. 32, Progress Publishers, Moscow, 1965, pp. 454-455.

கொடுத்தன. இந்தியா ''ஆடையில்லாத, பசியால் வாடு கின்ற, ஒடுக்கப்பட்டிருக்கின்ற மிகவும் பரிதாபகரமானவர் களைக்'' கொண்டிருக்கும் நாடு மட்டுமல்ல; மறைந்திருக்கும் வலிமை, திறமை, சுதந்திர தாகம் மற்றும் வீரம் மிக்கவர் களைக் கொண்டது என்ற படப்பிடிப்பாகும். அந்த வகை யில் இந்தியா இன்னும் அதிகமான அன்புக்குரிய நாடாக அவருக்குத் தோன்றியது. இந்திய அன்னையோடு, அவளுடைய கடந்த காலத்தோடும் நிகழ்காலத்தோடும் அவரைப் பிணைக் கின்ற உறவுகள் சிறிதும் பிரிக்கப்பட முடியாதவை என்பதை அவர் உணர்ந்தார். தாய் நாட்டுக்குச் சேவை செய்ய வேண் டும் தன் மக்களுடைய சுதந்திரத்துக்காகப் பாடுபட வேண் டும் என்ற நோக்கங்கள் ஜவகர்லால் நேருவின் வாழ்க்கை இலட்சியங்களாக மாறி இவரது எதிர்காலத்தை என்றென் றைக்குமாக நிர்ணயித்தன, இவரது வாழ்க்கையின் ஒரே குறிக்கோளாக மாறின.

## அத்தியாயம் ஐந்து

வெளியிலிருந்து பார்த்தால் ஆனந்த பவனம் முன்பு இருந்ததைப் போலவே தோன்றும். எனினும் சிறிது கவன மாகப் பார்த்தால் அந்த மாளிகையைச் சுற்றியுள்ள பூங்கா இப்பொழுது சரியாக கவனிக்கப்படவில்லை என்ற அறிகுறிகள் தென்படும். மிகவும் அக்கறையுள்ள தோட்டக்காரனால் ஒரு காலத்தில் நன்கு கத்தரிக்கப்பட்டு வளர்க்கப்பட்ட செடிகள் தங்களுடைய அழகான உருண்டையான வடிவத்தை இழந்து விட்டன. பூச்செடிகளின் பாத்தியிலும் மணல் பரப்பிய பாதைகளிலும் களைச் செடிகள் வளர்ந்து விட்டன. 1920ம் வருடத்தின் இலையுதிர் காலத்தில் அந்த மாளிகையின் உள் ளேயும் பல மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. முன்பிருந்ததைப் போல விலையுயர்ந்த ஓவியங்களும் பழமையான கலைப் பொருட்களும் அதன் சுவர்களை அலங்கரிக்கவில்லை. பல அறை களில் கம்பளங்களும் நாற்காலி மேசைகளும் அகற்றப்பட்டு அவை இப்பொழுது முன்னைக் காட்டிலும் பெரிய அறை களாகத் தோன்றின. மோதிலால் நேரு தோட்டக்காரர் உள்பட பெரும்பாலான ஊழியர்களை வேலையிலிருந்து நீக்கி விட்டார். குதிரைகளும் கோச்வண்டிகளும் விற்பனை செய்யப் பட்டு விட்டன. மோதிலாலின் வேட்டை நாய்கள் இப்பொ ழுது வேறு எஜமானர்களிடம் இருக்கின்றன. குடும்பத்தின் வெள்ளிப் பாத்திரங்களும் பெண்களின் ஆபரணங்களும் ஆபரணக் கடைகளை அலங்கரிக்கின்றன.

முன்பு வந்ததைப் போலவே பல நண்பர்கள், காங்கிரஸ் காரர்கள், நகராட்சி மன்ற அதிகாரிகள் வருகிறார்கள். ஆனால் இப்பொழுது அவர்கள் எல்லோருமே இந்தியர்களாக இருந் தார்கள். யாராவது ஒரு ஆங்கிலேயர் அந்த மாளிகைக்குள்

வந்தால் அது அபூர்வமான காட்சிதான். மோதிலால் நேரு விடம் முன்பு நட்புக் கொண்டிருந்த ஆங்கிலேயர்களில் சிலர் இப்பொழுது அவரைக் கண்டால் மறைந்துகொள்கிறார்கள். மற்ற வர்களோ மோதிலால் நேருவுக்கும் காந்திக்கும் திடீரென்று ஏற்பட்டிருக்கும் நெருக்கத்தைக் கண்டு பயமடைந்திருக்கிறார் கள். காந்தியோடு ஏற்பட்ட நெருக்கத்தின் விளைவாக மோதி லால் நேரு தன்னுடைய வாழ்க்கை முறையில் தீவிரமான மாற்றங்களை ஏற்படுத்தியதோடு தன்னுடைய அரசியல் கருத் துக்களையும் மாற்றிக் கொண்டார். நேற்றைய ஆங்கில அபி மானி, சீர்திருத்தப் பாதையைப் பின்பற்றுவதன் மூலம் காலனியாதிக்க விலங்குகளிலிருந்து இந்தியா படிப்படியாக விடுதலை பெற முடியும் என்ற கருத்தை ஆதரித்துவந்த மோதிலால் நேரு திடீரென்று 1920ம் வருடத்தின் இலையுதிர் காலத்தில் காந்தி முன்வைத்த காலனியாதிக்க அதிகாரிக ளோடு ஒத்துழையாமைத் திட்டத்தின் எல்லா அம்சங்களையும் ஆதரித்தார். இது சி. ஆர். தாஸ், அன்னி பெஸன்ட், லாலா லஜபத் ராய் உள்பட காங்கிரசின் ''முதிய தலைவர் கள்'' சிலரிடம் அதிருப்தியை ஏற்படுத்தியது. அவர் கள் கோட்பாட்டளவில் ஒத்துழையாமைத் திட்டத்தை ஆத ரித்தனர், ஆனால் அதே சமயத்தில் சட்ட மன்றங்களைப் புறக்கணிக்க வேண்டுமென்று காந்தி முன்வைத்திருக்கும் திட் டம் மிகவும் தீவிரமானது என்று கருதினார்கள். ஏனென்றால் சுயராஜ்யத்துக்காகத் தாங்கள் நடத்தும் போராட்டத்தில் சட்ட மன்றங்களையும் உபயோகிக்க அவர்கள் உத்தேசித் திருந்தார்கள்.

ஆனந்த பவனத்தின் எஜமானருடைய முந்திய விருப் பார்வங்களை நினைவுபடுத்தக் கூடிய ஒவ்வொன்றும் மறைந்து விட்டன. மோதிலால் நேரு வசதிப்பொருள்களை ஒரு காலத் தில், எவ்வளவு தீவிரமாகத் தேடியிருப்பாரோ அதே தீவிரத் தோடு அவற்றைக் கைவிட்டார். ஐரோப்பிய உணவு வகை களைத் தயாரிப்பதற்கென்று தனியாக ஒரு சமையற்காரர் அந்த மாளிகையில் ஒரு போதும் இல்லாதது போலத் தோன் றியது. லண்டன், பாரிஸ் நகரங்களின் மிகச் சிறந்த தையற் காரர்களால் தைக்கப்பட்ட உடைகளை ஒதுக்கிவைத்து விட் டார்கள். நேரு குடும்பத்தினர் இப்பொழுது கையால் நெய்த உடைகளை அணிந்தனர். மோதிலால் வெள்ளை நிறத்தில்

குர்த்தாவும் வேட்டியும் அணிந்தார். இடது தோளின் மேல் வெண்மையான சால்வை தொங்கும். கால்களில் செருப்பு அணிந்திருந்தார். இந்த உடையில் அவரைப் பார்க்கும் பொழுது டோகா உடையணிந்த பழங்கால ரோமானிய செனெட்டரைப் போல அவர் இருக்கிறுர் என்று குடும் பத்திலுள்ளவர்கள் பாதி உண்மையாகவும் பாதி வேடிக்கை யாகவும் சொல்லும் பொழுது அவர் சிரித்து மகிழ்வார்.

அவர் நெடுங்காலம் சிந்தித்த பிறகு, வேதனை மிகுந்த தயக்கத்துக்குப் பிறகுதான் காந்தியின் ஒத்துழையாமை இயக் கத்தில் சேர முடிவு செய்தார். ''ஒத்துழையாவை இயக்கத் தில் ஈடுபடுவதென்றால் அவர் வழக்குரைஞர் தொழிலைக் கைவிட வேண்டியிருக்கும். அப்படியானுல் அவருடைய கடந்த கால வாழ்க்கை முறையோடு முற்றிலும் முறித்துக் கொள்ள வேண்டியிருக்கும், புதிய வாழ்க்கை முறையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். அறுபது வயதை நெருங்கிக் கொண்டிருக் கும் ஒருவருக்கு அது சுலபமான காரியம் அல்ல. அவருடைய பழைய அரசியல் நண்பர்களிடமிருந்து, தொழிலிலிருந்து, தனக்குப் பழக்கமாகிவிட்ட சமூக வாழ்க்கையிலிருந்து விலகி விட வேண்டும்; அதிகமான செலவை ஏற்படுத்தும் பல பழக்கங்கள் அவரிடமிருந்தன—அவற்றையும் கைவிட வேண் டும்'' என்று ஜவகர்லால் பின்னர் எழுதினுர்.

தன் தகப்பனுர் முதிய வயதில் ''ஒருவருக்கும் தெரியாத பிரதேசத்தில் புதிய காலடி'' வைக்கத் தூண்டிய காரணங் களைப் பற்றிச் சிந்தித்தபொழுது, பஞ்சாபில் நடைபெற்ற சம்பவங்களும் காந்தியின் நட்புமே அதற்கு முக்கியமான காரணங்கள் என்று ஜவகர்லால் முடிவு செய்தார். காந்தியும் மோதிலாலும் அதிகமான வேறுபாடுகளைக் கொண்டவர்கள் என்ற போதிலும் அவர்களுக்கிடையே நெருக்கமும் உறுதியும் நிறைந்த நட்பு விரைவில் வளர்ச்சியடைந்தது.

எனினும் மோதிலால் நேரு தன் மகன் மீது வைத்திருந்த பாசமே இதற்கு முதல் காரணம் என்பதில் சந்தேகம் இருக்க முடியாது. தன்னுடைய ஒரே மகனுக்குப் பக்கத்திலேயே இருக்க வேண்டுமென்று அவர் விரும்பினுர்.

மோதிலால் நேரு மரணமடைந்த பிறகு கல்கத்தாவைச் சேர்ந்த காங்கிரஸ் பிரமுகரான டாக்டர் பி. சி. ராய் மோதிலால் நேருவின் ஆளுமையில் மிகவும் குறிப்பிடத்தக்க

அம்சம் என்ன வென்று காந்தியைக் கேட்டபொழுது ''ஜவகர் லால் மீது அவர் வைத்திருந்த எல்லையற்ற அன்பு'' என்று அவர் பதிலளித்தார்.

''இந்தியா மீது வைத்திருந்த அன்பு என்று சொல்லலாமா?'' என்று பி.சி. ராய் ஆச்சரியத்தோடு கேட்டார்.

''இல்லை. ஜவகர்லால் மீது அவருக்கிருந்த அன்பிலிருந்து பிறந்ததே இந்தியா மீது அவருக்கிருந்த அன்பு. ஜவகர்லால் பிறந்த நாடு என்ற முறையில் தான் அவர் இந்தியாவை நேசித்தார்'' என்று காந்தி உறுதியாக பதிலளித்தார்.

1920 டிசம்பர் மாதத்தில் நாகபுரில் நடைபெற்ற காங் கிரஸ் மாநாட்டில். காந்தியின் வெற்றியை நேருவும் அவரது தகப்பனுரும் நேரில் கண்டார்கள். அதற்கு மூன்று மாதங் களுக்கு முன்பு கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் விசேஷ மாநாட்டில் விவாதிக்கப்பட்ட காந்தியின் ஒத்துழையாமைச் செயல்திட்டத்தைப் பெரும்பான்மையான காங்கிரஸ் உறுப் பினர்களோடு சேர்ந்து அவர்களும் ஆதரித்தார்கள்.

காந்தி சமாதான பூர்வமான, வன்முறை இல்லாத வழி களில், அதாவது சத்தியாக்ரஹ முறைகளில் சுயராஜ்யத்தைப் பெறுவதற்குக் காரிய சாத்தியமான செயல்திட்டத்தை முன் வைத்தார், அதன் மூலம் காங்கிரசை வெற்றிகொண்டார். அவர் மிக பொருத்தமான நேரத்தில் அந்த செயல்திட்டத்தை முன்வைத்தார். அநேகமாக எல்லா காங்கிரஸ் தலைவர்களும் சீர்திருத்தவாதக் கொள்கை, பயங்கரவாதக் கொள்கை இரண் டையுமே நிராகரித்தார்கள். சீர்திருத்தவாதக் கொள்கை சுற்றி வளைத்துப் போவது, அது வெற்றியடைவதற்கு நெடுங்கால மாகும், அது தெளிவில்லாதது என்றுல் உலகத்தில் பலம் மிகுந்த காலனியாதிக்க அரசான பிரிட்டனை எதிர்த்து ஆயுதந் தாங்கிய போராட்டத்தை நடத்தும் பாதை கஷ்டமானது, ஆபத்துக்குள் நிறைந்தது, இரத்தக் களறியானது என்று அவர்கள் கருதினுர்கள். காந்தி மூன்றுவது பாதையைச் சுட்டிக் காட்டினுர். அவர் அந்தப் பாதையை அதிகமான நம்பிக்கை யோடும் உணர்ச்சியோடும் வலியுறுத்திப் பேசி காங்கிரஸ் உறுப்பினர்களில் பெரும்பான்மையினரை உடனடியாக வெற்றி கொண்டார்.

சத்யாக்ரஹத்தின் செயல் முறையை உருவாக்கும் பொழுது காந்தி இந்திய மக்களின் மனிதாபிமான மரபு

களையும் அவர்களின் முக்கிய பகுதியான விவசாயிகளின் குறிப் பிடத் தக்க உளவியலையும் கணக்கிலெடுத்துக் கொண்டார். இந்திய விவசாயிகளின் உளவியலில் விதிக்குக் கீழ்ப்படுதலும் உணர்வு பூர்வமாக இல்லாமல் எதிர்ப்பதும், மதத்தில் ஊறிய சடத்தன்மையும் தன்னிச்சையான புரட்சிகர எழுச்சித்தன் மையும் பின்னிப் பிணைந்திருந்தன.

இந்திய தேசிய காங்கிரஸ் காந்தியைத் தன் தலைவராக ஏற்றுக் கொண்டது. காந்தி நிதானமான, பலவீனமான குரலில் தாய்மொழியிலேயே பேசுங்கள், கதராடையை மட்டுமே உபயோகியுங்கள், இந்து மதத்தை அசுத்தப்படுத்து கின்ற தீண்டாமையை அகற்றுங்கள், எல்லா விதமான சுகபோகங்களையும் கைவிடுங்கள், இந்துக்களுக்கும் முஸ்லிம் களுக்குமிடையே ஒற்றுமையைப் பலப்படுத்துங்கள் என்று நாட்டு மக்களைக் கேட்டுக்கொண்டார். அவருடைய கருத்துக் கள் கோடிக்கணக்கான மக்களின் இதயங்களைத் தொட்டன.

காந்தி வகுத்த புதிய வழியை சில நபர்கள் மட்டும் விரும்பவில்லை. முஸ்லிம் லீகின் தலைவரான முகம்மது அலி ஜின்னு சமீபத்தில் கூட காங்கிரசும் முஸ்லிம் லீகும் ஒன்ருக வேலை செய்வதை ஆதரித்தவர். இந்தியாவின் பிரபலமான கவிஞரும் தேசபக்தருமான சரோஜினி நாயுடு ஜின்னுவை ''இந்து—முஸ்லிம் ஒற்றுமையின் தூதர்'' என்று பாராட்டிக் கூறியதுண்டு. ஆனல் ஜின்னு காங்கிரசை விட்டு விலகினர். பிற்காலத்தில் நேரு **இந்திய தரிசனம்** என்ற புத்த கத்தில் பின்வருமாறு எழுதினர்: ''திரு. ஜின்னு... இந்து— முஸ்லிம் பிரச்சினையில் கருத்து வேறுபாடு காரணமாகக் காங் கிரசை விட்டு வெளியேறவில்லை. புதிய கொள்கைக்கும் முன்னைக் காட்டிலும் முற்போக்கான சித்தாந்தத்துக்கும் தன்னை மாற்றியமைத்துக் கொள்ள முடியாததனல் அவர் வெளி யேறினர். கந்தலாடைகளை அணியாதவர்கள், இந்துஸ்தா னியில் பேசுகின்ற கூட்டத்தினர் இப்பொழுது காங்கிரசில் நிறைந்திருப்பதை அவர் வெறுத்தது இன்னும் முக்கியமான காரணமாகும். அரசியலைப் பற்றி அவர் 'உயர்ந்த' கருத்துக் களைக் கொண்டிருந்தார். அவை சட்டமன்றத்துக்கு அல்லது கமிட்டி அறைக்குப் பொருத்தமானவை.''

ஐக்கிய மாகாணத்தில் ஒத்துழையாமை இயக்கத்தை அமைக்கும் பணியில் நேரு ஈடுபட்டார். ரயிலிலும் காரிலும்

குதிரை மீது சவாரி செய்தும் சில சமயங்களில் கால்நடையாகவும் அவர் அந்த மாகாணம் முழுவதும் பிரயாணம் செய்தார், அங்கங்கே பொதுக்கூட்டங்களிலும் மக்கள் கூடும் இடங்களிலும் காலையிலிருந்து நள்ளிரவு வரையிலும் சொற்பொழிவாற்றினுர். அவர் அரசாங்க வேலையிலிருந்து விலகுமாறு அரசாங்க ஊழியர்களையும், அதிகாரிகளால் கொடுக்கப்பட்ட பட்டங்கள், பதவிகளை உதறித்தள்ளுமாறு மக்களையும் கேட்டுக்கொண்டார். ஒத்துழையாமை இயக்கத்தை அஹிம்சா வழிகளில் நடத்துவதற்காகக் காங்கிரஸ் அமைத்திருக்கும் தொண்டர் படையில் சேர்ந்து சேவை செய்யுமாறு பள்ளி மாணவர்களைக் கேட்டுக் கொண்டார். பிரிட்டிஷ்காரர்கள் தயாரிக்கும் நூலையும் துணிகளையும் பயன்படுத்தாமலிருப்பதற்காக விவசாயிகள் கையால் நூற்பதையும் நெசவு செய்வதையும் மறுபடியும் தொடங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

''இந்த இயக்கத்தில் நான் முழுவதும் மூழ்கிப் போனேன், இன்னும் ஏராளமானவர்களும் அப்படியே மூழ்கிவிட்டார்கள். என்னுடைய மற்ற எல்லாத் தொடர்புகளையும் பழைய நண்பர்களையும் புத்தகங்களையும் கைவிட்டேன். உடனடியான வேலைக்கு உதவி செய்த அளவுக்குத் தவிர பத்திரிகைகளையும் ஒதுக்கிவிட்டேன். அதுவரையிலும் நான் அவ்வப்பொழுது வெளிவரும் புத்தகங்களைப் படித்து உலக நிலைமையில் ஏற்படும் வளர்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருப்பேன், ஆனுல் இப்பொழுது இதற்கு நேரம் கிடைக்காமற் போய் விட்டது. என்னுடைய குடும்ப உறவுகள் பலமானவை என்ற போதிலும் என்னுடைய குடும்பத்தையும் என் மனைவியையும் மகளையும் அநேகமாக மறந்து விட்டேன்...'' என்று ஜவகர்லால் அந்த நாட்களைப் பற்றி எண்ணிப் பார்த்தார்.

ஒத்துழையாமை இயக்கம் இந்தியாவின் எல்லாப் பிரதேசங்களுக்கும் வேகமாகப் பரவியது. காந்தி நாடு முழுவதும் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்தார். ஒத்துழையாமை இயக்கத்தின் நோக்கங்களைப் பெருந்திரளான மக்களிடம் விளக்கிக் கூறினுர். பல சந்தர்ப்பங்களில் காந்தியோடு ஜவகர்லாலும் உடன் சென்ற பொழுது மக்களிடையே காந்திக்கு ஆதரவு பெருகுவதைக் கண்டார். இந்தியர்கள் ''மகாத்மா காந்தி வாழ்க!'' என்ற கோஷத்தை முழங்கி புதிய காங்கிரஸ் தலைவரை வரவேற்றனர்.

இத்தகைய சுற்றுப்பயணங்களில் ஒன்றின் போது திலகர் மரணமடைந்து விட்டார் என்ற செய்தி அவர்களுக்குக் கிடைத்தது. துயரம் நிறைந்த செய்தியைக் கேட்ட நேரு அதிர்ச்சியடைந்தார். அவரால் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. காந்தியை நோக்கித் திரும்பினார். காந்தி மிகவும் கஷ்டப்பட்டுப் பேசினார். ''என்னுடைய மிகவும் பலமான கோட்டை விழுந்து விட்டது'' என்றார்.

1920 ஆகஸ்ட் முதல் தேதியன்று காலையில் காந்தியும் ஜவகர்லாலும் பம்பாய்க்கு வந்தனர். மற்ற தலைவர்கள் எல்லோரையும் காட்டிலும் மக்களின் தேசிய உணர்ச்சியைத் தட்டியெழுப்புவதற்கு, தாய்நாட்டின் விடுதலைப் போராட்டத்துக்கு அவர்களைத் திரட்டுவதற்கு அறிந்திருந்த மாபெரும் தேசபக்தர் திலகர். இலட்சக் கணக்கான மக்கள் தங்கள் துயரத்தைத் தெரிவிக்கும் வகையில் வெள்ளை உடை அணிந்து திலகருக்கு இறுதி வணக்கம் செலுத்துவதற்காக பம்பாய் நகரத்தின் தெருக்களில் திரண்டிருந்தார்கள். திலகரின் உடல் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட வண்டியில் வைக்கப்பட்டு இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. காந்தியும் நேருவும் அந்த வண்டிக்குப் பக்கத்தில் நடந்து சென்றார்கள். சிதையில் நெருப்பு கொழுந்து விட்டெரிந்தபொழுது ஜவகர்லால் கை கூப்பி இறுதி அஞ்சலி செய்தார்...

வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வரும்பொழுது சீர்திருத்தங்களுக்காக இந்திய மக்கள் அவருக்கு நன்றி தெரிவிப்பதை எடுத்துக்காட்டும் வகையில் பல நிகழ்ச்சிகளை அதிகாரிகள் அவசரமாக ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். 1921 நவம்பர் மாதத்தில் கூடிய காங்கிரஸ் செயற்குழு—ஜவகர்லாலும் அதில் உறுப்பினராக இருந்தார்—இந்த நிகழ்ச்சிகளைப் புறக்கணிக்குமாறு மக்களை அறைகூவியது.

உயர்ந்த அந்தஸ்துக் கொண்ட விருந்தினரான வேல்ஸ் இளவரசர் நவம்பர் 17ந் தேதியன்று பம்பாயில் வந்திறங்கியபொழுது நகர மக்கள் பிரம்மாண்டமான பிரிட்டிஷ் எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்தை நடத்தினார்கள். போலீசுக்கும் ஆர்ப்பாட்டக்காரர்களுக்கும் இடையே மோதல்கள் ஏற்படுவதை காங்கிரஸ் தொண்டர்களாலும் தடுக்க முடியவில்லை. வேல்ஸ் இளவரசர் கல்கத்தாவுக்கும் அலகபாத்துக்கும் சென்றபொழுது அங்கும் யாருமில்லாத தெருக்களே அவரை வரவேற்றன.

இந்த சத்யாக்ரஹத்தின் வெற்றி நேருவுக்கு உற்சாகமூட்டியது. அலகபாத்திலிருந்து வெளிவரும் பத்திரிகையின் ஆசிரியருக்கு அவர் பின்வருமாறு எழுதினார்: ''ஒத்துழையாமை மற்றும் அது சுட்டுகின்ற எல்லாவற்றையும் நான் தீவிரமாக நம்புகிறேன். நமக்கு வெற்றி தரக் கூடியது ஒத்துழையாமையே, வேறு எந்த வழியும் அல்ல என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஒரு வேளை அந்த வெற்றி ஒரு நாளில் அல்லது ஒரு வருட காலத்தில் வரப்போவதில்லை. ஆனால் வெற்றி நிச்சயமாக வரும், வர வேண்டும்.''

இந்தியர்கள் காட்டிய எதிர்ப்பைக் கண்டு வேல்ஸ் இளவரசர் கவலையடைந்தார். இந்தியாவை விட்டு அவர் புறப்படுவதற்குள், அவர் வருகையின் போது கலவரங்கள் செய்ததாகக் காங்கிரஸ் ஊழியர்கள் மீது அரசாங்கம் குற்றம் சாட்டியது, காங்கிரஸ் ஸ்தாபனம் சட்டவிரோதமானது என்று அறிவித்தது.

1921 டிசம்பர் 5ந் தேதியன்று மாலையில் காங்கிரஸ் தலைவரான மதன் மோகன் மாளவியாவின் மைத்துனரும் ஜவகர்லாலின் தோழர்களில் ஒருவருமான கபில் தேவ் அலகபாத்தில் கைது செய்யப்பட்டார்.

''வலை நெருங்கிக் கொண்டிருக்கிறது. அடுத்தபடியாக நம்மைக் கைது செய்வார்கள்'' என்று கபில் தேவ் கைது செய்யப்பட்ட செய்தி கிடைத்ததும் மோதிலால் நேரு கவலையோடு கூறினார்.

தன்னுடைய நண்பர் கைது செய்யப்பட்ட செய்தியை ஜவகர்லால் அமைதியாகவே கேட்டுக்கொண்டார். அரசாங்கத்தின் அடக்குமுறை அவருக்கு அச்சத்தை ஏற்படுத்தவில்லை. ஒத்துழையாமைப் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்த பரபரப்பான மாதங்களின்போது அரசாங்க எதிர்ப்பு நடவடிக்கைகளுக்காகவும் கிளர்ச்சிகரமான சொற்பொழிவுகளுக்காகவும் உங்களைக் கைது செய்யப்போகிறோம் என்று போலீஸ்காரர்கள் அவரை பயமுறுத்தாத வாரமே கிடையாது. எனவே அடக்குமுறையைத் தவிர்க்க முடியாது என்பதை அவர் நன்றாக அறிந்திருந்தார்.

மறுநாள் முழுவதும் ஜவகர்லால் காங்கிரஸ் கமிட்டியின் அறைகளில் முனைப்பாக வேலை செய்தார். இன்றில்லாவிட்டாலும் மறுநாள் தன்னைக் கைது செய்வார்கள் என்று அவர்

எதிர்பார்த்தபடியால் குறைந்த பட்சம் மிகவும் அவசரமான விஷயங்களையாவது முடித்துவிட வேண்டும் என்று விரும் பினர். மாலை நெருங்கும் நேரத்தில் அலுவலக அறைகளைச் சோதனை போட அனுமதிக்கும் உத்தரவோடு போலீஸ்காரர் கள் வந்து சேர்ந்தனர். அங்கேயிருந்த எல்லாக் காகிதங் களையும் அவர்கள் துருவிப் பார்த்தார்கள். ஆனால் சட்ட விரோதமாக ஒன்றுமே இல்லை. அவர்கள் போய் சிறிது நேரத் துக்குப். பிறகு அந்த நகரத்தைச் சேர்ந்த எழுபத்தைந்து காங்கிரஸ்காரர்கள் கைது செய்யப்பட்ட செய்தி நேருவுக்குக் கிடைத்தது. அவர் பரபரப்போடு வீட்டுக்குத் திரும்பினர்.

ஆனந்த பவனத்திலும் சோதனை நடைபெற்றுக் கொண் டிருந்தது. மோதிலால் நேருவையும் ஜவகர்லாலையும் கைது செய்வதற்குப் போலீஸ்காரர்கள் வந்திருந்தார்கள்.

குடும்பத்திலிருந்த எல்லோரும் மோதிலால் நேருவின் அறைக்குள் நுழைந்தார்கள். அங்கே அவர் அமைதியாக இரவு உணவு அருந்திக்கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில் கமலா உட்கார்ந்திருந்தாள். அவளுடைய முழங்கால்களில் மடித்து வைக்கப்பட்டிருந்த கைகள் மட்டுமே அவளுடைய உணர்ச்சிகளை வெளிப்படுத்தின. நான்கு வயதான இந்திரா மகிழ்ச்சியோடு தகப்பனை நோக்கி ஓடினாள். சொரூபராணி சிரமத்தோடு எழுந்து நின்று அவருடைய மைத்துனர் களும் *The Independent* பத்திரிகையின் ஆசிரியரான ஜியார்ஜ் ஜோசஃபும் கைது செய்யப்பட்ட விவரத்தை பலவீனமான குரலில் எடுத்துக்கூறினாள். உடனே ஜவகர்லால் அவசரமாக இரண்டு கடிதங்களை—ஒரு கடிதம் காங்கிரஸ்காரர்களுக்கும் மறு கடிதம் அலகபாத் மக்களுக்கும்—எழுதினர் (இந்தக் கடிதங்கள் *The Independent* பத்திரிகையில் 1921 டிசம்பர் 8ந் தேதியன்று வெளியிடப்பட்டன).

''ஒரு விஷயத்தை நீங்கள் என்றும் நினைவிலிறுத்த வேண் டும் என்று நான் விரும்புகிறேன்'' என்று அவர் தன் கட்சி யைச் சேர்ந்தவர்களுக்கு எழுதினர். ''தீமையோடு சமரசம் செய்ய அல்லது பேச்சுவார்த்தை நடத்த முடியாது. இந்தப் போராட்டம் நம்முடைய மக்களின் பரிபூரண வெற்றியில் தான் முடிவடைய வேண்டும், அவ்வாறுதான் முடிவடையும். நமது கோட்பாடுகளைத் தளர்த்துவது அல்லது கைவிடுவ தென்பது இந்த இலட்சியத்துக்காகத் தங்களுடைய மிகச்

சிறந்தவற்றைத் தந்திருக்கும் ஆயிரக்கணக்கான மக்களுக்கு துரோகம் செய்வதாகும்.''

அலகபாத் நகர மக்களுக்கு அவர் பின்வருமாறு எழுதினர்: ''நண்பர்களே! நான் மிகவும் அதிகமான மகிழ்ச்சியோடு சிறைக்குச் செல்கிறேன். நம் இலட்சியத்தின் ஈடேற்றம் அதில் அடங்கியிருக்கிறது என்ற முழு நம்பிக்கையோடு சிறைக்குச் செல்கிறேன். 12ந் தேதியன்று முழு ஹர்த்தாலுக்குத் திட்டமிட்டிருக்கிறோம் என்பதையும் தொண்டராகப் பதிவு செய்து கொள்வது ஒவ்வொரு நபருடைய கடமை என்பதையும் மறக்காதீர்கள். பரிபூரணமான அமைதியையும் அஹிம்சைச் சூழலேயும் பாதுகாப்பது மிகவும் முக்கியமான தாகும். அலகபாத் நகரத்தின் கௌரவம் உங்கள் கையிலிருக்கிறது. அது உங்களிடம் மிகவும் பாதுகாப்பாக இருக்குமென்று நான் நம்புகிறேன். சுயராஜ்யத்துக்காக நடைபெறுகின்ற போரில் துப்பாக்கி குண்டுகள் பாய்கின்ற இடத்தில் நீங்கள் எப்போதும் இருப்பீர்கள், நம்முடைய வரலாற்றில் அலகபாத் நகரத்துக்கு அழியாத புகழை ஈட்டித் தருவீர்கள் என்று நான் நம்புகிறேன்.''

ஜவகர்லாலே நகரச் சிறைக்குக் கூட்டிச் சென்ற போலீஸ் அதிகாரி அவரைக் கைது செய்யும் ஆணை லக்னோவிலிருந்து வந்திருப்பதால் அநேகமாக அங்கேதான் அவரை அனுப்புவார்கள் என்று தெரிவித்தார். அப்படியே நடைபெற்றது. அவருடைய தகப்பனர் அலகபாத் சிறையில் அடைக்கப்பட்டார். ஜவகர்லால் ஐந்து போலீஸ்காரர்களின் பாதுகாப்போடு அலகபாத்துக்கு வடமேற்கில் 300 கிலோமீட்டர் தொலேவிலுள்ள லக்னோவுக்கு இரவு ரயிலில் கூட்டிச் செல்லப்பட்டார்.

டிசம்பர் 7ந் தேதியன்று மோதிலால் நேரு நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டார். தனக்கு வழக்குரைஞருடைய உதவி தேவையில்லே என்று அவர் மறுத்து விட்டார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் விசாரணைகளேப் புறக்கணிக்க வேண்டும் என்று காந்தி கேட்டுக் கொண்டதற்கிணங்க நீதிபதியின் கேள்விகளுக்குப் பதிலளிக்க மறுத்தார். தடைசெய்யப்பட்ட தொண்டர் ஸ்தாபனத்தில் சேர்ந்திருந்ததாக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. அவருக்கு ஆறு மாத சிறைத் தண்டனேயும் ஐநூறு ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. தீர்ப்புக் கூறப்

பட்டதும் அவர் லக்னோ சிறைக்கு மாற்றப்பட்டார். அங்கே தன் மகனைச் சந்தித்தார்.

ஜவகர்லாலின் நீதிமன்ற விசாரணையும் டிசம்பர் 7ந் தேதியன்று நடைபெற்றது. அவரும் தனக்கு வழக்குரைஞர் தேவையில்லை என்று கூறியதோடு நீதிமன்ற விசாரணையிலும் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. அவருக்கு ஆறுமாத சிறைத் தண்டனையும் டிசம்பர் 12ந் தேதி ''ஹர்த்தால் நடைபெறும் என்று துண்டு அறிக்கைகளை வினியோகித்ததற்காக'' நூறு ரூபாய் அபராதம் அல்லது கூடுதலாக ஒருமாத சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டது. ஜவகர்லால் அமைதியாகத் தீர்ப்பைக் கேட்டார்.

லக்னோ சிறைச்சாலையில் சில பெரிய அறைகளும் அவற்றைச் சுற்றி உயரமான சுவரும் இருந்தன. ஜவகர்லாலுக்கும் அவருடைய தகப்பனாரோடு அலகபாத்திலிருந்து கொண்டு வரப்பட்டிருந்த அவருடைய உறவினர்களான ஷாம்லாலுக்கும் மோகன்லாலுக்கும் இருபது சதுர மீட்டர்களுக்குச் சற்று அதிகமான இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. அவர்கள் ஒருவரோடொருவர் கலந்து பழக, பத்திரிகைகளும் கடிதங்களும் வாங்கிக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். உறவினர்களும் அவர்களை வந்து பார்க்கலாம். சிறைச்சாலையின் சுவர்களுக்கு வெளியே நடக்கும் சம்பவங்களைப் பற்றி ஜவகர்லாலுக்கு முழுமையான தகவல்கள் கிடைத்தது மட்டுமல்லாது இன்னும் கைதாகாமல் இருந்த அலகபாத் காங்கிரஸ்காரர்களுக்கு அவர் அவ்வப்பொழுது கடிதங்களும் அனுப்பிக் கொண்டிருந்தார். ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடர்வதில் முயற்சிகளைத் தளரவிட வேண்டாம் என்று அவர்களிடம் விடாப்பிடியாக வற்புறுத்தினர்.

சத்யாக்ரஹம் அதன் சிகரத்தைத் தொட்டதாகத் தோன்றியது. அது மட்டுமல்லாமல் ஒத்துழையாமைப் போராட்டத்தின் புதிய, தனித்தன்மையான வடிவங்களும் தோன்றியிருந்தன. வேல்ஸ் இளவரசரின் வருகைக்கு எதிர்ப்புக் காட்டியதற்காக ஏராளமான மக்களைக் கைது செய்த அரசாங்கம் திகைப்படைந்தது: ஆயிரக்கணக்கான இந்தியர்கள் போலீஸ் நிலையங்களுக்கும் சிறைச்சாலைகளுக்கும் சென்று எங்களைக் கைது செய்யுங்கள் என்று கோரினர்கள். பலர் பலாத்காரமாகவே சிறைச்சாலைகளுக்குள் நுழைந்தார்கள் என்று கூடச் சொல்லலாம்.



பற்றோர்களுடன் ஜவகர்லால்



ஜவகர்லாலின் பாட்டனூர்
கங்காதர் நேரு



ஜவகர்லால்
சைக்கிள் ஓட்டுதல்




த்தில் ஒரு தெரு *(1910)*





மாஸ்கோவில் நேரு (1927 நவம்பர்)




சோவியத் ருஷ்யாவைப் பற்றி நேரு எழுதிய புத்தகத்தின் முதல் பதிப்பின் மேலட்டை



இந்தப் புகைப்படத்தை நேரு தான் எழுதிய ''சோவியத் ருஷ்யா'' என்ற புத்தகத்தில் வெளியிட்டிருந்தார்



ஜவகர்லாலும் கமலாவும் மகள் இந்திராவுடன்



மஹாத்மா காந்தி



ருவிழாக் காட்சி



வசிராய் அரண்மனை — இப்பொழுது இந்திய ஜனாதிபதியின் மாளிகை

அதிகாரிகளின் திகைப்பு வேகமாக மறைந்து பீதி அடைந்து விட்டதைப் போன்ற நிலைமை ஏற்பட்டது. எல்லாச் சிறைகளும் நிரம்பிவிட்டன; ஆனால் சிறைக்குச் செல்ல விரும்பிய சத்யாக்ரஹிகளின் எண்ணிக்கை குறையவில்லை. இந்த நிலைமையில் அதிகாரிகள் பொறுக்கியெடுக்கும் கொள்கையை அதிகமாகப் பின்பற்ற வேண்டியிருந்தது. அவர்கள் தொண்டர் படைத் தலைவர்களையும் மாநில மற்றும் நகர காங்கிரஸ் கமிட்டிகளின் செயலாளர்களையும் உறுப்பினர்களையும் மட்டும் கைது செய்தார்கள். மகாத்மா காந்தி இன்னும் கைது செய்யப்படவில்லை. அவர் தலைமை தாங்கிய இயக்கம் குறையவில்லை.

ஜவகர்லால் வெற்றிப் பெருமிதம் கொண்டார். அவரும் அவருடைய தோழர்களும் பலவிதமான நெருக்கடிகளுக்கிடையே செய்த கடுமையான உழைப்பு வீணாகவில்லை. நகரவாசிகளின் அரசாங்க எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களை விவசாயிகளின் போராட்டங்களோடு இணைத்து வெற்றி அடைந்தவர்கள் ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த காங்கிரஸ்காரர்கள்தான் (அதிலும் ஒத்துழையாமைப் போராட்டம் உச்ச கட்டத்தை அடைந்த பொழுது மாகாணக் கமிட்டியின் ஐம்பத்தைந்து உறுப்பினர்களுமே சிறையில் அடைக்கப்பட்டிருந்தனர்) என்பதை நினைத்து நேரு பூரிப்படைந்தார்.

1922 பிப்ரவரி மாதம் 13ந் தேதியன்று காந்தி நாடு முழுவதிலும் ஒத்துழையாமைப் போராட்ட இயக்கத்தை திடீரென்று நிறுத்திவிட்டார். அதிர்ச்சியைத் தருகின்ற இந்தச் செய்தி சிறைக்குள் ஒரு கைதி மூலமாகக் கிடைத்தது. அங்கே பலர் அந்தச் செய்தியை நம்பவில்லை. மகாத்மாவுக்கு அவப்பெயர் ஏற்படுத்துவதற்காக ஆங்கிலேயர்கள் இத்தகைய வதந்திகளைப் பரப்புவதாக நினைத்தார்கள். மறுநாள் காலையில் சிறையிலிருந்தவர்களுக்கு செய்திப் பத்திரிகைகள் கிடைத்தன. காங்கிரஸ் செயற்குழு நிறைவேற்றிய தீர்மானம் முதல் பக்கத்தில் வெளியிடப்பட்டிருந்தது. இனி சந்தேகத்துக்கு இடமில்லை. காந்தியின் வற்புறுத்தலின் பேரில் சத்யாக்ரஹம் நிறுத்தப்பட்டுவிட்டது.

கோரக்பூருக்கு அருகேயுள்ள சௌரி-சௌரா என்ற குக்கிராமத்தில் பிப்ரவரி 4ந் தேதியன்று நடைபெற்ற சம்பவங்கள் போராட்டத்தை நிறுத்திவிடக் காரணமாக இருந்தன.

அங்கே விவசாயிகளும் தொண்டர்களும் நடத்திய ஆர்ப்பாட்டத்தைக் கலைப்பதற்குப் போலீஸ்காரர்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். அதனால் ஆத்திரமடைந்த ஆர்ப்பாட்டக்காரர்கள் போலீஸ் நிலையத்துக்குள் நுழைந்து அங்கிருந்த போலீஸ்காரர்களைக் கொன்றனர். இந்த சம்பவங்களின் காரணமாகக் காங்கிரஸ் செயற்குழுக் கூட்டம் பர்தோலியில் பிப்ரவரி 11-12ந் தேதிகளில் நடைபெற்றது. காந்தி, இதன் உறுப்பினர்கள் ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்தும் தீர்மானத்தை ஏற்கும்படி செய்தார். செயற்குழு உறுப்பினர்கள் தீர்மானத்தை நிறைவேற்றினார்கள்.

''நம்முடைய நிலையைப் பலப்படுத்திக் கொண்டு எல்லா முனைகளிலும் முன்னேற்றமடைவது போலத் தோன்றிய சமயத்தில் போராட்டத்தை நிறுத்திவிட்டதைப் பற்றித் தெரிந்து கொண்ட பொழுது நாங்கள் ஆத்திரமடைந்தோம்'' என்று செயற்குழுவின் முடிவைப் பற்றி சிறையிலிருந்தவர்களின் ஏகமானதான அபிப்பிராயத்தைப் பிற்காலத்தில் ஜவகர்லால் நினைவுகூர்ந்தார்.

இதற்கு ஒரு வாரத்துக்குப் பிறகு ஜவகர்லாலின் தங்கையான ஸ்வரூப் காந்தியிடமிருந்து அவருக்கு ஒரு கடிதத்தைக் கொண்டு வந்தாள். செயற்குழுவின் முடிவு காரணமாகத் தன்னுடைய தோழர்களில் பலரிடம் ஏற்பட்டிருக்கும் திகைப்பு, கோபம்—ஆத்திரமும் கூட—ஆகியவற்றுக்குப் பதிலாக ''உண்மையான நிலைமையைப் புரிந்து கொண்டிருப்பீர்கள்'' என்று நம்புவதாக காந்தி எழுதியிருந்தார். நவம்பர் மாதத்தில் பம்பாயில் நடைபெற்ற சம்பவங்களும் சௌரி-சௌராவில் நடைபெற்ற பரிதாபகரமான நிகழ்ச்சியும் சத்யாக்ரஹத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் அஹிம்சைக் கோட்பாடுகளை நொறுக்கிவிட்டனர், தலைவர்களால் அவர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை, அவர்கள் மென்மேலும் ''வெறியும் எதிர்ப்பும்'' கொண்டவர்களாகி வருகிறார்கள் என்பதை எடுத்துக் காட்டின என்று காந்தி எழுதினார். அஹிம்சை பலாத்காரமாக வளர்ச்சி அடையக் கூடிய ஆபத்து இருந்தது. சத்யாக்ரஹப் போராட்டத்தின் இலட்சியங்கள் கறைபடாமலிருப்பதற்காக ஒத்துழையாமைப் போராட்டத்தை உடனே நிறுத்துவது அவசியமாயிற்று. ''இயக்கம் தன்னை அறியாமலேயே சரியான பாதையிலிருந்து விலகிப் போய்விட்டது.

நாம் சரியான நிலைக்குத் திரும்பிவிட வேண்டும். இனிமேல் நாம் மறுபடியும் நேராக முன்னேறிச் செல்ல முடியும்.'' தென் ஆப்பிரிக்காவின் சிறைகளில் தன்னுடைய சொந்த அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு ''வெளி உலகத்தில்'' நடக்கின்ற சம்பவங்களைப் பற்றித் தீவிரமாக முடிவுக்கு வர வேண்டாம், ஏனென்றால் சிறையிலிருப்பவர் அரசியல் நிலைமையைப் பற்றி நிதானமாக மதிப்பிடக் கூடிய நிலையில் இல்லை என்று காந்தி ஜவகர்லாலுக்கு அறிவுரை கூறினார்.

காந்தியின் கடிதம் ஜவகர்லாலுக்கு திருப்தி அளிக்கவில்லை. ''எங்கோ தொலை தூரத்திலிருக்கின்ற கிராமத்தையும் யாரும் சுலபமாகப் போக முடியாத இடத்தைச் சேர்ந்த ஆத்திரமடைந்த விவசாயிகளையும் சுதந்திரத்துக்காக நாம் நடத்தும் தேசியப் போராட்டத்தை—குறைந்த பட்சமாக சிறிது காலத்துக்காவது—நிறுத்திவைக்க அனுமதிப்பதா?'' என்று அவர் எழுதினார். அவர் காந்தியின் கடிதத்தைத் தன் தகப்பனாருக்கும் மற்ற நண்பர்களுக்கும் படித்துக் காட்டினார். அவர்களுடைய முகங்களில் ஏற்பட்ட வேதனையைப் பார்த்து தன்னுடைய உணர்ச்சிகளை அவர்கள் பகிர்ந்து கொள்கிறார்கள் என்பதை அறிந்தார்.

காந்தி செய்தது சரிதானா என்ற சந்தேகங்கள் நேருவின் அமைதியைக் குலைத்தன. ''ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்துவதற்கு காந்தியின் வாதம் சரி என்று கருதினால் நம்முடைய எதிரிகள் அதே மாதிரியான சந்தர்ப்பங்களை எப்பொழுதும் ஏற்படுத்தக்கூடிய சக்தி உடையவர்கள். அப்படியானால் போராட்டத்தை எப்பொழுதுமே கைவிட வேண்டிய அவசியமான விளைவு ஏற்படும்... இது அஹிம்சைப் போராட்ட முறையிலுள்ள குறையா? அல்லது காந்தியின் விளக்கத்திலுள்ள குறையா?'' என்று சிந்தித்தார். நேரு காந்தியின் கடிதத்தை எடுத்து முதலிலிருந்து கடைசிவரை மீண்டும் படித்தார். அதில் பதில் இல்லை என்பதை மறுபடியும் கண்டார்.

1922 மார்ச் 3ந் தேதியன்று எதிர்பாராதவிதமாக ஜவகர்லால் விடுதலை செய்யப்பட்டார். அவர் சிறையில் 87 நாட்களை, அதாவது தண்டனையளிக்கப்பட்ட காலத்தில் பாதிக்கும் குறைவான நாட்களைக் கழித்திருந்தார். நேருவின் தண்டனை பற்றிய பதிவேடுகளை ஆராய்ந்த சட்டத்துறை

அதிகாரி ஒருவர் நேரு மீது கிரிமினல் குற்றம் சாட்டப்பட வில்லை, ஆனால் அதிகமான தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது என்று சுட்டிக் காட்டியிருக்க வேண்டும் எனத் தோன்று கிறது. இதற்கிடையில் ஒத்துழையாமை இயக்கமும் குறிப் பிடத்தக்க அளவுக்குக் குறைந்து வந்தது, அதிகாரிகள் நிதா னமடைந்து கொண்டிருந்தார்கள். எனவே அதிகமானவர்கள் அடைக்கப்பட்டு நெரிசல் ஏற்பட்டிருந்த சிறைச்சாலைகளிலி ருந்து கைதிகளை விடுதலை செய்யத் தொடங்கியிருந்தார்கள்.

நேரு எத்தகைய மகிழ்ச்சியும் இல்லாமல் சிறைச் சாலை யிலிருந்து வெளியே சென்றார். அவருடைய தகப்பனார் ஆஸ் துமா நோயினால் அடிக்கடி பாதிக்கப்பட்டார். அவரும் மற்ற நண்பர்களும் இன்னும் சிறையில் இருந்தார்கள்...

அவர் சில நாட்கள் வீட்டில் தங்கிவிட்டு காந்தியை சந்தித்துப் பேச வேண்டும் என்ற நோக்கத்தில் அகமதாபாத் துக்குச் சென்றார். ஆனால் அந்தச் சந்திப்பு சபர்மதி நதிக் கரையிலுள்ள அவருடைய ஆசிரமத்தில் நடைபெறவில்லை. மார்ச் 10ந் தேதியன்று காந்தியைக் கைது செய்துவிட்ட படியால் சிறையில் அந்தச் சந்திப்பு நடைபெற்றது. ''பிரிட் டிஷ் இந்தியாவில் சட்டபூர்வமாக நிறுவப்பட்ட அரசாங் கத்தின் மீது அதிருப்தியைப் பரப்ப'' முயற்சி செய்ததாக காந்தி மீது குற்றம் சாட்டப்பட்டிருந்தது.

காந்தி நீதிமன்றத்தில் விசாரணை செய்யப்பட்டதை ஜவ கர்லால் பார்த்தார். காந்தியின் உணர்ச்சிகரமான உரையைக் கேட்டார். ''மொத்தமாகப் பார்க்கும் பொழுது இதற்கு முன்பிருந்த எந்த அமைப்பையும் காட்டிலும் இந்தியாவில் அதிகமான தீமையைச் செய்த அரசாங்கத்தைப் பற்றி அதிருப்தியைப் பரப்புவதை நான் ஒரு புண்ணிய காரிய மாகக் கருதுகிறேன்'' என்று காந்தி கூறினார். நீதி மன்றம் அவருக்கு ஆறு வருட சிறைத் தண்டனை விதித்தது.

நேரு அலகபாத்துக்குத் திரும்பியபொழுது காங்கிரசின் மாகாணக் கமிட்டி உண்மையில் இயங்காதிருப்பதைக் கண்டு வேதனைப்பட்டார். இன்னும் வெளியே இருந்த காங்கிரஸ்காரர் களை அவர் திரட்டினார். ஒத்துழையாமைப் போராட்டம் நிறுத்தப் பட்டிருக்கலாம், ஆனால் காங்கிரஸ் முன்வைத்த, இன்னும் அமுலிலிருந்த மற்ற அம்சங்களை நிறைவேற்றுவதற்கு அவர் கள் பாடுபடலாமே.

1922 ஏப்ரலில் நேருவின் தலைமையில் ஐக்கிய மாகாணத்தில் சுதேசித் தொழில் வளர்ச்சிக்கு வெற்றிகரமான இயக்கம் நடைபெற்றது. பிரிட்டிஷ் தொழிற்சாலைகளில் தயாரிக்கப்பட்ட நூலை விற்பனை செய்ய மாட்டோம், உள்நாட்டில் கையால் நூற்றுத் தயாரிக்கப்பட்ட கைத்தறித் துணிகளை விற்பனை செய்வோம், கைத்தறித் துணியைப் பரப்புவோம் என்று ஸ்தல துணி வியாபாரிகளிடம் உறுதி வாங்கினூர். அலகபாத்திலும் மற்ற நகரங்களிலும் தெருக்களில் தீ மூட்டப்பட்டு மூட்டை மூட்டையாக அந்நியத் துணிகள் எரிக்கப்பட்டன. காங்கிரஸ்காரர்களோடு ஒத்துழைக்க மறுத்த வணிகர்களின் கடைகளுக்கு முன்னுல் மறியல் செய்யப்பட்டது. இதில் பெண் தொண்டர்கள் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டார்கள். சுதேசி இயக்கத்தில் பெண்களை ஈடுபடுத்த வேண்டும் என்ற யோசனையை காந்தி தெரிவித்திருக்கலாம். அது மிகச் சிறப்பாக வெற்றி அடைந்தது. பெண்கள் அவருடைய அறைகூவலை மகிழ்ச்சியோடு நிறைவேற்றினூர்கள். விற்பனை நிலையங்கள் மற்றும் கடைகள் முன்பாகக் காலையிலிருந்து இரவுவரையிலும் அவர்கள் வீரத்தோடு நின்று கொண்டிருந்தார்கள். அங்கே துணிகள் வாங்க வந்த ஒரு சிலரும் கூட இதைப் பார்த்துத் திரும்பிப் போய்விட்டார்கள். கைத்தறிகள் இயங்கத் தொடங்கின. பிரிட்டிஷ் துணிகளில் தைக்கப்பட்ட உடைகளை அல்லது பொதுவான ஐரோப்பிய உடைகளை அணிந்த இந்தியர்களைப் பார்ப்பது அபூர்வமாகிவிட்டது. கைத்தறித் துணியில் தைக்கப்பட்ட தேசிய உடையை அணிந்து ஒவ்வொரு இந்தியரும் கம்பீரமாகக் காட்சியளித்தார்.

மே 11ந் தேதியன்று ஜவகர்லால் இன்னும் சிறையிலடைக்கப்பட்டிருந்த தன் தகப்பனுரைப் பார்ப்பதற்காக லக்னேவுக்கு வந்தார். அங்கிருந்து போலீஸ்காரர்கள் அவரை அலகபாத் சிறைச் சாலைக்குக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். துணி வியாபாரிகளை ''கிரிமினல் நோக்கத்தோடு பயமுறுத்தியதாகவும்'' ''கலகத்துக்குத் தூண்டியதாகவும்'' இம்முறை குற்றஞ்சாட்டப்பட்டார்.

ஜவகர்லால் குற்றச்சாட்டை ஒத்துக்கொள்ளவில்லை, தன் சார்பில் வழக்குரைஞர் வாதாடுவதற்கும் அனுமதிக்கவில்லை. நீதிமன்றத்தில் பேசும்பொழுது ஐக்கிய மாகாணத்தில் காங்

கிரஸ்காரர்களின் அரசியல் நடவடிக்கைகளைப் பற்றிய உண்மையை எடுத்துக்கூறுவதற்கு வாய்ப்பளித்த அதிகாரிகளுக்கு நன்றிகூறுவதாகக் கிண்டலாகக் கூறினார். தனக்கு எதிராகக் கொண்டுவரப்பட்டிருக்கும் குற்றச்சாட்டுகள் முற்றிலும் ஆதாரமற்றவை என்பதை நேரு சுலபமாக, நகைச்சுவையோடு, அனுபவம் நிறைந்த வழக்கறிஞரின் வாதத்திறமையோடு எடுத்துக் காட்டினார். சாட்சிகள், குறிப்பாக ''பாரபட்சமில்லாதவர்களான'' அலகபாத் போலீஸ்காரர்கள் கூறியவை அனைத்துமே சுதேசி இயக்கத்தின் அமைதியான தன்மையைத்தான் வலியுறுத்தின. பயமுறுத்தியதும் மிரட்டிப் பணம் பிடுங்கியதும் காங்கிரஸ்காரர்களோ அல்லது காங்கிரஸ் தொண்டர்களோ அல்ல, அவற்றைச் செய்தவர்கள் அரசாங்க அதிகாரிகளே. அவர்கள்தான் இந்தியாவை ஊழலிலும் பயங்கரத்திலும் மூழ்கடித்து விட்டார்கள். எனினும் இதற்காக அவர்களை தண்டிக்கவே வேண்டுமென்று யாரும் நினைக்கக்கூட இல்லை. அதற்கு மாறாக, அரசாங்கம் அவர்களுக்கு கௌரவங்களையும் பதவிகளையும் வாரி வழங்கி அவர்களை ஊக்குவித்தது.

''பயமுறுத்தலும் பயங்கரவாதமும் அரசாங்கத்தின் முக்கியமான கருவிகளாகிவிட்டன. இந்த முறைகளின் மூலம் மக்களைக் கீழே அமுக்கி வைப்பதற்கும் அவர்களுடைய அதிருப்தியை நசுக்குவதற்கும் அவர்கள் முயற்சிக்கிறார்கள், இப்படிச் செய்வதன் மூலம் மக்களிடம் தங்கள் மீது அன்பை ஏற்படுத்த முடியும் அல்லது அவர்களை ஏகாதிபத்தியத்தின் விசுவாசமான கருவிகளாக மாற்ற முடியும் என்று நினைக்கிறார்களா? அன்பும் விசுவாசமும் இதயத்திலிருந்து வர வேண்டும். அவற்றை சந்தையில் விலைக்கு வாங்க முடியாது, துப்பாக்கி ஈட்டியைக் கொண்டு பயமுறுத்தி அதைப் பெற முடியாது'' என்று ஜவகர்லால் நீதிமன்றத்தைப் பார்த்துக் கோபமாகக் கூறினார். காலனி ஆட்சிமுறைக்கு எதிரான போராட்ட முறைகளான சுதேசி இயக்கமும் மற்ற இயக்கங்களும் தன்னுடைய தாய் நாடு சுதந்திரமடைகின்ற நன்னாளை அருகே கொண்டு வரும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்தார். ''எனக்கு இந்தியாவின் சுதந்திரத்துக்காகப் போராடுவதை விட பெரிய கௌரவம் வேறு இல்லை'' என்று முடிவாகக் கூறினார்.

1922 மே 19ந் தேதியன்று தீர்ப்புக் கூறப்பட்டது. பதினெட்டு மாதச் சிறைவாசமும் நூறு ரூபாய் அபராதமும்

கட்ட வேண்டும். அபராதத்தைக் கட்ட மறுத்தால் கூடுத லாக மூன்று மாதங்கள் சிறைவாசம்.

மறுநாள் நேருவை அவர் நன்கு அறிந்த லக்னோ சிறைச் சாலைக்குக் கூட்டிக் கொண்டு சென்றார்கள். மோதிலால் நேரு அங்கே இல்லை. அவரை வேறு சிறைக்கு மாற்றியிருந்தார் கள். அங்கிருந்து 1922 ஜூன் 6ந் தேதியன்று அவர் விடுதலை செய்யப்பட்டார்.

சிறைச் சாலையில் இப்பொழுது அதிகமான கட்டுப்பாடு கள் இருந்தன. இதற்கு முன்பு கைதிகளை மிகவும் சிரமமில் லாத நிலைமைகளில் வைத்திருந்ததாக அதிகாரிகள் நினைத் திருக்க வேண்டும். சிறைக் கூடங்களுக்கு இடையேயான எல்லா விதமான தொடர்புகளும் தடுக்கப்பட்டன. கைதி கள் மாதம் ஒரு தடவைதான் உறவினர்களைப் பார்க்க முடி யும், கடிதங்கள் பெற்றுக் கொள்ள முடியும். ஜவகர்லாலுக்கு 4126 என்ற எண் கொடுக்கப்பட்டது; ஐம்பதுக்கும் அதி கமான கைதிகளைக் கொண்டிருந்த ஐந்தாம் கொட்டடியில் அவரை அடைத்தார்கள். ''அங்கே இருந்தவர்களிடமிருந்து தப்பி ஒரு அமைதியான மூலைக்குப் போக முடியாது. குடும்ப வாழ்க்கையின் — அதன் சுகங்களும் பலன்களும் ஒன்று கூடக் கிடையாது — சுவாரசியமற்ற பகுதியை எடுத்து நூறு மடங்கு பெரிதாக்கியது போல இருந்தது. அதிலும் வெவ்வேறு ரகங் களையும் விருப்பங்களையும் கொண்ட மனிதர்களுக்கு மத்தியில் வாழ வேண்டும். எங்கள் எல்லோருக்குமே அது ஒரு பெரிய மனச் சுமையாக இருந்தது. நான் அடிக்கடி தனிமைக் காக ஏங்கினேன்'' என்று ஜவகர்லால் சில வருடங்களுக்குப் பிறகு நினைவு கூர்ந்தார்.

ஜவகர்லால் நேருவின் உடல்நிலை பலவீனமாக இருந்தது. ஏப்ரல் மாதத்தின் பரபரப்பு அவருடைய உடல்நிலையைப் பாதித்திருந்தது என்பதில் சந்தேகமில்லை. அவர் மார்பு வலி யாலும் உறங்க முடியாமலும் சிரமப்பட்டார். தானே சிகிச்சை அளித்துக் கொள்வதென்று முடிவு செய்தார். புகை பிடிப்பதை நிறுத்தினார். அந்தக் காலத்தில் பரவலாயிருந்த முல்லருடைய முறையைப் பின்பற்றி உடற்பயிற்சிகள் செய் தார். அந்தப் பயிற்சிகளோடு யோக ஆசனங்களையும் குறிப் பாக சிரசாசனத்தையும் சேர்த்துக் கொண்டார். சிரசாசனம் செய்வது உடலுக்கும் உள்ளத்துக்கும் ஆரோக்கியத்தைத் தரு

கிறது என்று அவர் நண்பர்களிடம் கூறினார். தலைகீழாக நிற்பது அவருடைய இதயத்தைப் பலப்படுத்தியது, அவருடைய உடல் நலம் அபிவிருத்தியடைந்தது (அவர் தம் கடைசிக்காலம் வரை சிரசாசனம் செய்துவந்தார். மேற்கு நாடுகளைச் சேர்ந்த பத்திரிகையாளர்கள் இந்தியப் பிரதமரின் ''விசித்திரமான பழக்கம்'' என்று இதைப் பற்றி எழுதினார்கள்). அவர் உணவைக் குறைத்தார், புலால் உணவை விடுத்தார். ரொட்டி, காய்கறிகள், பால் மட்டுமே சாப்பிட்டார். சிறைக்கைதிகளில் பெரும்பான்மையானவர்கள் நூற்புப் பணியில் ஈடுபட்டு வந்தனர். ஜவகர்லாலும் நூல் நூற்றார். தான் நூற்ற நூலை வீட்டுக்கும் கூட அனுப்பினார். இராட்டையில் நூல் நூற்பதில் களைப்பு ஏற்படும்பொழுது ஒரு பெரிய வாளி நிறையத் தண்ணீர் இறைத்து அந்த அறைக் கட்டிடத்தின் ஓரத்திலிருந்த சிறிய காய்கறிப் பாத்தியில் கொண்டு போய் ஊற்றுவார்.

அவருடைய உடல்நலம் படிப்படியாக முன்னேற்றமடைந்தது. ''என்னுடைய உடல்நலத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் உடலை நன்கு கவனித்து வருகிறேன். சிறை வாழ்க்கையால் என் உடம்புக்கு நன்மையே'' என்று தன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதினார்.

ஆனால் புத்தகங்கள் படிப்பதே அவருடைய முக்கியமான வேலை. தனக்குக் கிடைத்த ஓய்வு நேரம் முழுவதையும் அதற்கே செலவிட்டார். அவர் வரலாற்றில் தனி ஆர்வம் கொண்டிருந்தார். வீட்டிலிருந்து அவருக்கு அனுப்பிய சுமார் இருநூறு புத்தகங்களில் கேய் மற்றும் மால்லிசன் எழுதிய **சிப்பாய்கள் யுத்தத்தின் வரலாறு**, வின்சென்ட் ஸ்மித் எழுதிய **இந்தியாவின் தொடக்க கால வரலாறு**, எச். ஜி. வெல்ஸ் எழுதிய **உலக வரலாற்றின் உருவரை**, ஜேம்ஸ் பிராய்ஸ் எழுதிய **புனித ரோமானியப் பேரரசு**, இத்தாலிய மறுமலர்ச்சியைப் பற்றி ஜே. ஏ. சைமான்ட்ஸ் எழுதிய புத்தகங்கள், டபிள்யு. எஸ். பிளான்ட் எழுதிய **பிரிட்டிஷ்காரர்கள் எகிப்தைக் கைப்பற்றிய இரகசிய வரலாறு**, ஏ. பிவான் எழுதிய **ஜெர்மன் சமூக-ஜனநாயகம்**, ஜே. எம். கெய்ன்ஸ் எழுதிய **சமாதானத்தின் பொருளாதார விளைவுகள்**, தாமஸ் கார்லைலின் **பிரெஞ்சுப் புரட்சி**, ஜான் ருஸ்கின் எழுதிய **சிசாமும் லில்லியும்** மற்றும் **காட்டு ஒலிவ மகுடம்**, திலகரின் வாழ்க்கை வரலாறு, ரொமேன் ரொலாந்து

எழுதிய **டான்டோன்**, ஜி. எம். திரெவெலியான் எழுதிய **கரிபால்டி** (அவருடைய இளமைப் பருவத்திலிருந்தே இது அவருக்கு மிகவும் விருப்பமான புத்தகம்) மற்றும் வரலாறு, பூகோளம், அரசியல், பொருளாதாரம், கலை ஆகிய பொருள் களைப் பற்றி எழுதப்பட்ட இன்னும் பல நூல்கள் இருந்தன.

இப்புத்தகங்களிலிருந்து தனக்குப் பிடித்தமான சிந்தனை கள், மதிப்பீடுகள், சுவையான விவரங்கள் மற்றும் அவற் றைப் பற்றித் தம்முடைய கருத்துக்களையும் நேரு கைத்தறித் துணியில் அட்டை போடப்பட்ட ஒரு விசேஷமான நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொண்டார்.

அட்டையில் **குறிப்புகளும் மேற்கோள்களும்** என்று நேருவின் கையெழுத்தில் எழுதப்பட்டிருக்கும் பல டஜன் நோட்டுப் புத்தகங்கள் உள்ளன. பிற்காலத்தில் உலக வரலாற்றில் நடைபெற்ற மிக முக்கியமான சம்பவங்களைப் பற்றித் தன் மகளுக்குக் கடிதங்கள் எழுதிய பொழுதும் **சுயசரிதை, இந்திய தரிசனம்** என்ற நூல்களை எழுதிய பொழுதும் அவர் இந்த நோட்டுப் புத்தகங்களை அடிக்கடி புரட்டிப்பார்ப்பார்.

1922ம் வருடத்தின் இலையுதிர்காலத்தின் மாலை நேரங் களில் மழை பெய்து கொண்டிருக்கும் பொழுது தனக்கு மிகவும் பிரியமான எழுத்தாளர்களின் புத்தகங்களைத் திரும்பத் திரும்பப் படித்து ரசிப்பார். இரவீந்திரநாத் தாகூரின் உரை நடை மற்றும் கவிதைகள், ஷேக்ஸ்பியர் மற்றும் ஷாவின் நாடகங்கள், விக்தோர் ஹியூகோவின் நாவல்கள், எட்கார் ஆலன் போவின் கதைகள், உமர் கயாம் எழுதிய ருபையாத் ஆகிய நூல்களை இப்படிப் படித்தார். ஷெல்லி, பைரன், கீட்ஸ் மற்றும் டென்னிசனின் புத்தார்வக் கவிதைகளைப் படிக்கும் பொழுது அவர் மேலே பறந்தார். (இந்தக் காலத் தில் நேரு எழுதிய கடிதங்களில் புத்தார்வவாதத்தின் அறிகுறி களை நேருவின் வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள் காண்பது தற்செயலானதல்ல.) துர்கேனெவ் எழுதிய **ருடின்** மற்றும் தோல்ஸ்தோய் எழுதிய **ஆன்னா கரேனினா** போன்ற நூல்கள் மாபெரும் ருஷ்ய இலக்கியத்தை அவர் தெரிந்துகொள்வதற் கும் அதன் மீது விசேஷமான ஆர்வங்கொள்வதற்கும் உதவி செய்தன.

சிறை வாழ்க்கை மென்மேலும் கடுமையாகிக் கொண்

டிருந்தது. கடிதங்களில் அரசியலைக் குறிப்பிடுவதாகத் தங்களுக்குத் தோன்றும் எந்தப் பகுதியையும் சிறை அதிகாரிகள் ஈவிரக்கமில்லாமல் அழித்துக் கொண்டிருந்தார்கள். கைதிகளுக்கு செய்தித்தாள்களும் பத்திரிகைகளும் மறுக்கப்பட்டன. சிறைச்சாலையின் தலைமை அதிகாரி அநுமதித்தால் மட்டுமே புத்தகங்களைப் பெற முடியும். சிறையில் தரப்பட்ட உணவு வரவர மோசமாகிக் கொண்டிருந்தது. ஆனால் வெளியிலிருந்து உணவுப் பொருள்களை வரவழைப்பதும் தடை செய்யப்பட்டது. உடல் உழைப்பு தடை செய்யப்பட்டது. கைதிகள் பணம் வைத்திருப்பதும் ''கலகம் செய்வதும்'' இன்னும் இதரவையும் தடை செய்யப்பட்டன. தலைமை அதிகாரி ஜவகர்லால் உட்பட ஏழு நபர்களை மிகவும் ஆபத்தான கைதிகளாகக் கருதி மிகவும் தொலைவிலிருந்த கொட்டடிக்கு மாற்றினார். தங்களுடைய அரசியல் எதிரிகளுக்கு வெளியிலிருந்து எந்தச் செய்தியும் வரக்கூடாது, அவர்களுடைய தீவிரமான உணர்ச்சியை ஒடுக்கா விட்டாலும் அவமதிக்கவாவது வேண்டும் என்ற நோக்கத்தில் சிறை அதிகாரிகள் தங்களாலியன்ற எல்லாவற்றையும் செய்து கொண்டிருப்பதாகத் தோன்றியது.

ஜவகர்லால் தன்னுடைய சமயோசித புத்தியை இழக்கவில்லை. சிறை வாழ்க்கையின் துன்பத்தை நகைச் சுவை உணர்ச்சியோடு ஏற்றுக் கொள்ள முயற்சி செய்தார். ''இந்தக் கடிதம் மிகவும் நீளமாகப் போய்விட்டது'' என்று தன் தகப்பனுருக்கு எழுதிய கடிதமொன்றில் குறிப்பிட்டார். ''இவ்வளவையும் படிப்பதற்குச் சிறை அதிகாரி மிகவும் கஷ்டப்படுவார். என்னுடைய கடிதங்களில் அவருக்கு ஏதோ ஒரு விசேஷமான அக்கறை இருப்பதாகக் கேள்விப்பட்டேன். இந்தக் கடிதம் நிச்சயமாக அவருக்குக் களைப்பைத் தரும்!'' சிறைக் கைதிகளின் கடிதங்களைப் படித்துத் தணிக்கை செய்கின்ற பொறுப்பைக் கொண்டிருந்த ஆங்கில அதிகாரி மீது நேரு ''அனுதாபப்பட்டதற்குக்'' காரணம் உண்டு. அவருடைய பொறுப்பிலுள்ளவர்கள் எதையாவது படிப்பதைப் பார்த்தால் அவருக்குக் கோபமேற்படும். அது முற்றிலும் வீண் வேலை என்று அவர் கருதினார்.

வெளியே நடைபெறும் செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியாதிருப்பது முதலில் நேருவுக்கு வேதனையைக் கொடுத்தது.

ஆனால் அவர் சீக்கிரமாகவே தன்னை சமாதானப்படுத்திக் கொண்டார். தன்னுடைய நிலையில் இருப்பவர்கள் ''ஆனந்த மான அறியாமையில் வாழ்வது'' மிகவும் நல்லது என்று முரண் நகையோடு முடிவு செய்தார். தன்னுடைய தோழர்கள் நடத் திக் கொண்டிருக்கும் போராட்டங்களைப் பற்றிப் படித்து விட்டுத் தான் மட்டும் சோம்பேறியாகச் சிறையில் இருப்பது அதைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகமான வேதனையை ஏற்படுத்தும். எனவே இந்த நிலைமையே நல்லது.

1923 ஜனவரி 31ந் தேதியன்று, ஜவகர்லால் கைது செய்யப்பட்டு எட்டு மாதங்களுக்குச் சிறிது கூடுதலான பிறகு, சிறைச் சாலையின் கனமான கதவுகள் அவருக்கு முன்னால் மறுபடியும் திறந்தன. ஐக்கிய மாகாண அரசாங்கம் அறி வித்த பொது விடுதலையின்படி 107 அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டார்கள். அதிகாரிகளின் ''பெருந்தன் மையைப்'' புரிந்து கொள்வது கடினமல்ல என்று நேரு எழுதினார். ''அரசாங்கத்தை எதிர்த்து காங்கிரஸ் ஒன்றும் செய்யவில்லை. காங்கிரஸ்காரர்கள் பரஸ்பரத் தகராறுகளில் ஈடுபட்டிருந்தார்கள். பிரபலமான காங்கிரஸ் தலைவர்கள் அதி கமான எண்ணிக்கையில் சிறையில் இல்லை. எனவே அரசாங் கம் இந்த சைகையைச் செய்தது.''

ஆனந்த பவனத்தில் ஜவகர்லால் அன்போடு வரவேற்கப் பட்டார். அவர் தன் தகப்பனாரிடம் சரமாரியாக வினாக் களைத் தொடுத்தார். நாட்டின் அரசியல் நிலைமையைப் பற்றி யும் காங்கிரசில் உள்ள நிலையைப் பற்றியும் மோதிலால் எவ்வளவு அதிகமான விவரங்களைக் கூறினாரோ அந்த அளவுக்கு ஜவகர்லாலின் இதயம் வேதனையடைந்தது.

ஒத்துழையாமை இயக்கம் தோற்கடிக்கப்பட்டு விட்டது என்பதை இப்பொழுது அவர் ஒத்துக் கொள்ள வேண்டிய நிலையிலிருந்தார். சத்யாக்ரஹத்தை மகாத்மா நிறுத்திவைத் தது அதற்குக் காரணமல்ல. காந்தி தன்னுடைய உள்ளுணர் வின் மூலம் அந்த இயக்கம் அதன் உச்சத்தை அடைந்து விட்டது என்பதைப் புரிந்து கொண்டார். அதன் பிறகு அது தடுமாறிக் கீழே விழுந்து மெதுவாக ஓய்ந்தது. ஆனால் மற்ற தலைவர்கள்...? இவர்கள் எல்லா நேரங்களிலும் சுயராஜ் யத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். சுயராஜ்யம் என்றால் என்ன வென்று அவர்களுக்கு உண்மையிலேயே தெரி

யுமா? சுயராஜ்யத்தைப் பற்றி அவர்களுடைய கருத்துக்கள் மிகவும் தெளிவில்லாமலிருக்கவில்லையா? ஒரு கோடி காங்கிரஸ் ஆதரவாளர்களைக் கொண்ட பலம் மிகுந்த இராணுவம் தங்களுக்குப் பின்னாலிருந்ததால் அவர்கள் மிகவும் சுயதிருப்தி உடையவர்களாக மாறிவிடவில்லையா? பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராக நொடிப்பொழுதில் வெற்றியடைந்து விட முடியும் என்ற பிரமைகள் அவர்களுக்குத் தாலாட்டுப் பாடவில்லையா? ''எங்கும் அந்நிய ஆட்சியைப் பற்றி அதிருப்தியும் காங்கிரசின் மீது அனுதாபமும் ஏற்பட்டிருந்தாலும் பொதுவாக மக்கள் நெடுங்காலத்துக்குத் தொடர்ந்து போராடுகின்ற அளவுக்கு வலிமை உடையவர்கள் அல்ல. அவர்களிடம் போதுமான அளவுக்கு முதுகெலும்போ, ஸ்தாபனமோ கிடையாது... சிறைக்குச் சென்ற கூட்டத்தினரும் கூட அந்த நேரத்தில் ஏற்பட்ட உணர்ச்சி வேகத்தில்தான் அதைச் செய்தார்கள், எல்லாம் வெகு சீக்கிரத்தில் முடிந்து விடும் என்றும் எதிர்பார்த்தார்கள்'' என்று அவர் எழுதினார். தங்களுடைய போராட்டத்தினால் பலன் ஏற்படவில்லை என்பதைக் கண்டதும் பெருந்திரளான மக்கள் காங்கிரசிலிருந்து விலகினார்கள். காங்கிரஸ் உறுப்பினர்களுடைய எண்ணிக்கை சில ஆயிரங்களாகக் குறைந்தது. காங்கிரஸ் தலைமையில் ''மாற்றத்தை ஆதரிப்பவர்கள்,'' ''மாற்றத்தை விரும்பாதவர்கள்'' என்ற இரண்டு போட்டிக் குழுக்கள் தோன்றியிருந்தன. ''மாற்றத்தை ஆதரிப்பவர்கள்'' மோதிலால் நேரு, சி. ஆர். தாஸ் ஆகியோரின் தலைமையில் சுயராஜ்யக் கட்சியை அமைத்தார்கள். சட்ட மன்றத்தில் பெரும்பான்மையைப் பெற்றுவிட்டபிறகு அதை உள்ளேயிருந்து அழிக்க முடியும், காலனியாதிக்க நிர்வாக இயந்திரத்தை ஸ்தம்பிக்கச் செய்து இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுக்குமாறு பிரிட்டனை நிர்ப்பந்திக்க முடியும் என்று சுயராஜ்யக் கட்சியினர் கருதுவதாக மோதிலால் நேரு மகனிடம் கூறினார். இன்னும் சிறையில் அடைக்கப்பட்டிருந்த காந்தியும் மற்ற காங்கிரஸ் தலைவர்களும் சுயராஜ்யவாதிகளை எதிர்த்தார்கள், மற்ற விஷயங்களோடு சட்ட மன்றங்களை பகிஷ்கரிக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்ற முந்திய அரசியல் பாதையைத் தொடர்ந்து பின்பற்ற வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

**1923** மே மாதத்தில் பம்பாயில் நடைபெற்ற காங்

கிரஸ் செயற்குழுக் கூட்டத்தில் அதன் உறுப்பினர்கள் அறுவர் (''மாற்றத்தை விரும்பாதவர்கள்'') சுயராஜ்யக் கட்சியினரு டைய மற்றும் அவர்கள் தலைவரான சி. ஆர். தாசின் (இவர் 1923க்குக் காங்கிரஸ் செயற்குழுவின் தலைவராகவும் இருந் தார்) கொள்கையை எதிர்த்துப் பேசியதோடு தங்கள் பதவி களிலிருந்தும் விலகினர்கள். ஜவகர்லால் அவர்களுடைய பதவி விலகலை அங்கீகரிக்க வேண்டாம் என்று வாதாடினர். ஆனல் ''மாற்றத்தை விரும்பாதவர்கள்'' தங்கள் பதவிகளிலிருந்து விலகுவதில் உறுதியாக இருந்தார்கள். இந்த மோதலின் காரணமாக சி. ஆர். தாஸ் தன்னுடைய பதவியிலிருந்து விலகிக் கொண்டார். போட்டி கோஷ்டிகள் இரண்டிலும் இல்லாத காங்கிரஸ்காரர்களைக் கொண்ட புதிய செயற்குழு அமைக்கப்பட்டது. அதன் மூன்று செயலாளர்களில் ஒருவராக ஜவகர்லால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த செயலாளர் பதவி அதிக நாட்களுக்கு நீடிக்கவில்லை. இலையுதிர்காலத்தில் காங் கிரசின் விசேஷ மாநாடு டில்லியில் நடைபெற்ற பொழுது சுயராஜ்யவாதிகளின் கை ஓங்கியிருந்தது. அவர்களுடைய முயற்சியினல் அங்கே நிறைவேற்றப்பட்ட தீர்மானம் ''மாற் றத்தை ஆதரிப்பவர்களுக்கு'' சட்டமன்றங்களுக்கு நடை பெறும் தேர்தல்களில் பங்கெடுப்பதற்கு உரிமை கொடுத்தது, ''சட்டமன்றங்களுக்குள் நுழைவதற்கு எதிரான எல்லாவித மான பிரச்சாரத்தையும் நிறுத்திக் கொள்வதென்று'' காங் கிரஸ் முடிவு செய்தது. ''மத்திய நிலையெடுத்த'' செயற்குழு வீழ்ச்சியடைந்தது. ஜவகர்லால் நிம்மதியாக பதவி விலகல் கடிதத்தைச் சமர்ப்பித்தார். இரண்டு நெருப்புகளுக்கு நடுவில் நின்று கொண்டிருந்ததைப் பற்றி அவருக்கு வெறுப்பு ஏற்பட் டிருந்தது. மேலும் ''மாற்றத்தை ஆதரிப்பவர்களும்'' ''மாற் றத்தை எதிர்ப்பவர்களும்'' செய்த ''அரசியல் தந்திரங்கள்,'' அல்லது சாதாரணமாகச் சொல்வதென்றல் அவர்களுடைய அற்பத்தனமான சூழ்ச்சிகள் அவருக்குக் கசப்பைக் கொடுத்தன.

1923 செப்டெம்பர் 19ந் தேதியன்று மாலையில் மாநாடு முடிவடைந்ததும் ஜவகர்லாலும் இரு சக ஊழியர்களும் முக்தசார் என்ற ஊருக்கு ரயிலில் புறப்பட்டார்கள். அவர் அங்கே ஒரு பொதுக் கூட்டத்தில் அகாலி* இயக்கத்துக்கு

* அகாலி (அழிவில்லாதது) — பழமையான சீக்கிய மரபுகளையும் மதத் தூய்மை யையும் மீண்டும் ஏற்படுத்துவதற்குப் பாடுபட்ட சீக்கியர்களின் மதப் பிரிவு.

ஆதரவாகப் பேசினுர். 21ந் தேதியன்று காலையில் நாபா என்ற சுதேச சமஸ்தானத்திலிருந்த ஜாய்தோ என்று நகரத்தை அடைந்தார்கள். அந்த சமஸ்தான மன்னரை பிரிட்டிஷ் அதிகாரிகள் சர்வாதிகாரமாக நீக்கிவிட்டு அவருடைய இடத்தில் ஒரு பிரிட்டிஷ் அதிகாரியை நியமித்திருந்தார்கள். இதன் காரணமாகக் கலவரங்கள் ஏற்பட்டன. ஜாய்தோவில் ஜவகர்லால் தன் வாழ்க்கையில் மூன்ருவது முறையாகக் கைது செய்யப்பட்டார். மிகவும் ஆபத்தான குற்றவாளி என்ற முறையில் கைவிலங்குகள் மாட்டப்பட்டு சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார். அந்தச் சிறையில் கைதிகள் மிகவும் பயங்கரமான சூழ்நிலையில் வைக்கப்பட்டிருந்தார்கள். அங்கே கைதிகளுக்குச் செய்யப்படும் கொடுமைகள் பிரபலமானவை. ''நாபா சிறைச் சாலையில் எங்கள் மூவரையும் மிகவும் அருவருப்பான, அசுத்தமான அறையில் அடைத்தார்கள். அந்தச் சிறிய அறை ஈரப்பிசுபிசுப்பாக இருந்தது. கூரை மிகத் தாழ்வாக இருந்தது. கையை நீட்டினுல் அதைத் தொட்டு விட முடியும். இரவில் வெறுந் தரையில் நாங்கள் படுத்துத் தூங்கிஞேம். தூக்கத்தின் நடுவே நான் திடுக்கிட்டுப் போய் பீதியோடு விழித்துக் கொள்வேன். ஒரு பெருச்சாளியோ எலியோ என் முகத்தின் மீது ஓடியிருக்கும்'' என்று அவர் பிற்காலத்தில் எழுதினுர்.

அக்டோபர் மாதத் தொடக்கத்தில் ஜவகர்லால் மீது ''இரகசியமான சதிச் செயலில்'', ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டி முப்பது மாத சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. அவருடைய தோழர்களுக்கும் அதே போல தண்டனை விதிக்கப்பட்டது. ஆனுல் அன்று மாலையில் சிறைச்சாலையின் தலைமை அதிகாரி நாபா சமஸ்தானத்தின் தலைமை நிர்வாகியிடமிருந்து வந்த இரண்டு உத்தரவுகளை நேருவிடம் எடுத்துக் கூறினுர். அவர் மீது விதிக்கப்பட்ட சிறைத் தண்டனை நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்று முதல் உத்தரவு தெரிவித்தது. அவரும் அவருடைய தோழர்களும் உடனடியாக நாபா சமஸ்தானத்தை விட்டு வெளியேற வேண்டும், விசேஷ அனுமதி இல்லாமல் சமஸ்தானத்துக்குள் நுழையக் கூடாது

---

அகாலி இயக்கம் தொடக்கத்தில் தீவிர மதச் சார்பைக் கொண்டிருந்தாலும் 1920க்களில் காலனியாதிக்க எதிர்ப்புத் தன்மையைப் பெற்றது.

என்று இரண்டாவது உத்தரவு தெரிவித்தது.

நாபா சிறைச்சாலை அனுபவம் ஜவகர்லாலின் உடல் நலத்தைப் பாதித்தது. அலகபாத்துக்குத் திரும்பியதும் அவர் படுத்த படுக்கையானார். அவருக்கு டைபாய்டு காய்ச்சல் ஏற்பட்டிருப்பதாகவும் சிறைச் சாலையில் தான் அது தொற்றி யிருக்க வேண்டுமென்றும் மருத்துவர்கள் முடிவு செய்தார் கள். காய்ச்சல் காரணமாக அவர் காங்கிரஸ் மாநில மாநாட் டில் கலந்து கொள்ள முடியவில்லை. எனினும் அவர் தன்னு டைய சொற்பொழிவை எழுதி அனுப்பிவைத்திருந்த கார ணத்தால் அதைக் கேட்கின்ற வாய்ப்பு மாநாட்டுப் பிரதிநிதி களுக்குக் கிடைத்தது. ஒத்துழையாமையும் அஹிம்சையும் காங்கிரஸ் கொள்கையின் முக்கியமான கோட்பாடுகளாகத் தொடர்ந்து இருந்து வருகின்றன என்று குறிப்பிட்ட பிறகு அவர் பின்வருமாறு எழுதியிருந்தார்: ''நாம் முழு சுதந்தி ரத்துக்காகப் போராடுகிறோம் என்பதை மிக விரிவான அள வுக்குத் தெளிவுபடுத்திவிட்டோம். மாநில சுயாட்சியிலோ அல்லது இந்திய அரசாங்கத்தின் சில அதிகாரிகளை மாற்று வதிலோ நமக்குச் சிறிதளவுகூட அக்கறை கிடையாது. முழு உள்நாட்டுச் சுதந்திரம் என்பதற்கு நிதியையும் இராணுவத் தையும் போலீசையும் நாமே நிர்வகிக்க வேண்டும் என்பதே பொருளாகும். இவை நமது நிர்வாகத்தில் இல்லாதிருக்கும் வரை இந்தியாவில் சுதந்திரம் என்பது இல்லை. இவைதான் குறைந்த பட்சமாகும். ''சுயராஜ்யம்'' என்பதை ''முழு சுதந்திரம்'' என்று நம் திட்டத்தில் நாம் குறிப்பிடலாமா என்ற கேள்வி எழுந்திருக்கின்றது. காங்கிரஸ் முழு சுதந் திரத்துக்காகப் போராடும் என்று அறிவிக்கப்படுகின்ற நாளை நான் தனிப்பட்ட முறையில் வரவேற்பேன். இந்தியாவுக்குப் பொருத்தமான, சரியான இலட்சியம் முழு சுதந்திரமே என்று நான் நம்புகிறேன்.''

நேருவின் உரை மாநாட்டுப் பிரதிநிதிகளிடம் வலுவான தாக்கத்தை ஏற்படுத்தியது. அவர்களில் பெரும்பாலானவர் கள் சுயராஜ்யத்தைப் பற்றிக் காங்கிரசிலிருக்கும் வெவ்வேறு கோஷ்டிகள் கொடுத்த எண்ணற்ற வியாக்கியானங்களில் மூழ்கிப் போனவர்கள், எனவே சுதந்திரத்தைப் பற்றித் தலைவர் கள் தெளிவான முறையில் பேச வேண்டும் என்று வற்புறுத் தியவர்கள். ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த காங்கிரஸ்காரர்

களுக்குத் தங்களுடைய தலைவரிடமிருந்து தெளிவான, நேரடி யான பதில் கிடைத்தது. தொடர்ந்து செயலில் ஈடுபடுங் கள், முழு தேசிய சுதந்திரத்துக்கான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துங்கள் என்று அவர் கூறினார்.

இந்த சமயத்தில் நேருவிடம் சுயராஜ்யவாதிகள் பின்பற் றும் பாதை (அவர்களுடைய நடவடிக்கைகளில் ''சீர்திருத்த வாத மற்றும் அரசியலமைப்புச் சட்டவாதக்'' கூறுகளை நேரு பார்த்தார், இவை தவிர்க்க முடியாத வகையில் அவர்களை ஒரு முட்டுச் சந்துக்குள் இழுத்துச் செல்லும் என்று அவர் கருதினார்) மற்றும் காந்தியை ஆதரிப்பவர் கள் பின்பற்றும் பாதை (காந்தியின் போதனையின் உணர்ச் சியைக் காட்டிலும் அதன் வாசகத்தையே இவர்கள் பெரிதும் மதிப்பதாக நேரு கருதினார்) சரியானவைதானா என்ற சந்தே கங்கள் பெருகியிருந்தன. தேசிய விடுதலை இயக்கத்துக்குப் பெருந்திரளான மக்கள் உற்சாகத்தோடு திரண்ட கட்டம் முடிந்து விட்டது, அதன் படிப்பினைகளைப் புரிந்து கொண்டு காலனியாதிக்கத்துக்கு எதிரான போராட்டத்தில் புதிய கட் டத்துக்கு மக்களைக் கவனமாகத் தயாரிக்க வேண்டிய நேரம் இப்பொழுது வந்துவிட்டதென்பதை அவர் நன்றாகப் புரிந்து கொண்டார். 1922 முதல் 1926 முடிய அவர் நிகழ்த்திய அநேகமாக எல்லாச் சொற்பொழிவுகளிலும் இந்தக் கருத் தைக் காண முடியும். ஆனால் செளரி-செளராவில் நடைபெற்ற தைப் போல ஏதாவதொரு சம்பவம் தங்களுடைய திட்டங் களைச் சீர்குலைத்து அவற்றைப் பின்னுக்குத் தள்ளிவிடுமா என்று ஜவகர்லால் கவலையடைந்தார். தான் தேடிக்கொண் டிருக்கும் பதிலைத் தரக் கூடிய மனிதரைச் சந்திப்பதற்கு அவர் பொறுமையில்லாமல் துடித்துக்கொண்டிருந்தார். ஒரு மகத்தான அசாதாரண மனிதர் என்ற முறையிலும் மிகச் சிறந்த தலைவர் என்ற முறையிலும் அவர் காந்தியின் மீது தொடர்ந்து நம்பிக்கை வைத்திருந்தார். காந் தியத்தின் தார்மிக மற்றும் அறநெறிப் பண்பு கலந்த அம்சங் களை அவர் தயக்கமில்லாமல் ஏற்றுக் கொண்டார். ஆனால் ''பொதுநல சமூகத்தைப்'' பற்றிய காந்தியின் தத்துவத்தில் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ஐரோப்பாவின் ''இயந் திர'' நாகரிகத்தை எதிர்த்தும் தன்னிறைவு கொண்ட விவ சாய சமூகங்களுக்குத் திரும்ப வேண்டும் என்றும் வலியுறுத்து

கின்ற அம்சங்களில் காந்திய அணுகுமுறை கற்பனாவாதத் தன்மையைக் கொண்டிருப்பதாகவும் அவர் கருதினார்.

1924 ஜனவரி 12ந் தேதியன்று பூனாவிலுள்ள சிறைச் சாலை மருத்துவ மனையில் காந்திக்கு குடல்முளை அழற்சிக்காக அறுவைச் சிகிச்சை நடைபெற்றது. பிப்ரவரி 5ந் தேதியன்று வைசிராய் ரீடிங் பிரபுவின் உத்தரவின்படி அவர் விடுதலை செய்யப்பட்டார். காந்தியின் மீது விதிக்கப்பட்ட ஆறு வருட சிறைத் தண்டனையில் இரண்டு வருடங்களை அவர் சிறையில் கழித்தார்.

நெடுங்காலமாக எதிர்பார்க்கப்பட்ட சந்திப்பு இப்பொழுது நடைபெற்றது. பம்பாய்க்கு அருகில் கடலோரத்திலுள்ள சிற்றூரான ஜுஹு என்ற இடத்தில் அந்த சந்திப்பு நடைபெற்றது. சிறைவாசம், அறுவைச் சிகிச்சை ஆகியவற்றுக்குப் பிறகு ஓய்வு பெறுவதற்காக காந்தி அங்கே தங்கியிருந்தார். நேரு குடும்பத்தினரும் விடுமுறையைக் கழிக்க அங்கே சென்றார்கள். ஆனால் மோதிலால் நேருவுக்கும் அவர் மகனுக்கும் காந்தியைச் சந்தித்துப் பேசுவதே முக்கிய நோக்கம். நவம்பரில் நடைபெற்ற தேர்தல்களில் சுயராஜ்யவாதிகளின் வெற்றிகளால் (மத்திய சட்ட மன்றத்தில் அநேகமாகப் பாதி இடங்களை அவர்கள் பிடித்திருந்தார்கள்) உற்சாகமடைந்திருந்த மோதிலால் நேரு, டெல்லியிலிருந்து அங்கே வந்த சி. ஆர். தாசின் உதவியோடு, காந்தியைத் தன் தரப்புக்கு இழுக்க முயற்சி செய்தார். மகாத்மா காந்தி மென்மையாக—ஆனால் திட்டவட்டமாக—சுயராஜ்யவாதிகளை ஆதரிக்க மறுத்தார். சட்ட மன்றங்களில் பங்கெடுப்பது ஒத்துழையாமை இயக்கத்தின் செயல்திட்டத்தோடு பொருந்தாது என்பதையும் அவர் தெளிவுபடுத்தினார்.*

ஜவகர்லால் ஜுஹுவிலிருந்து ஏமாற்றத்தோடு திரும்

* நாட்டில் ஏற்பட்டிருந்த நிலைமையை இன்னும் நன்றாகப் புரிந்து கொண்ட பிறகு சுயராஜ்யவாதிகளின் செல்வாக்கையும் அதிகாரத்தையும் பார்த்த பிறகு காந்தி அவர்களுக்கு இடமளிக்க முடிவு செய்தார். 1924 டிசம்பரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் ஒத்துழையாமை இயக்கம் நிறுத்தப்பட்டது; இந்திய தேசிய காங்கிரசின் சார்பில் சட்டமன்ற நடவடிக்கைகளுக்குத் தலைமை தாங்குமாறு சுயராஜ்யவாதிகளுக்குப் பொறுப்பளிக்கப்பட்டது. காங்கிரஸ் காந்தியின் தலைமையில் ''நிர்மாணத் திட்டத்தை'', குறிப்பாக இந்தியாவில் கைநூற்பையும் கைநெசவையும் வளர்க்கின்ற திட்டத்தை அமுலாக்கியது.

பினர். அவருடைய சந்தேகங்களில் ஒன்றைக்கூட காந்தி உண்மையில் தெளிவுபடுத்தவில்லை.

1923 டிசம்பரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் அதன் தலைவராக இருந்த மௌலான முகம்மது அலியின் பிரேரேபணையின்படி ஜவகர்லால் நேரு இந்திய தேசிய காங்கிரசின் மூன்று பொதுச் செயலாளர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதற்குச் சரியாக ஒரு வருடத்துக்குப் பிறகு பெல்காமில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் அவர் மறுபடியும் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இம்முறை காந்தி அவர் பெயரை முன்மொழிந்தார்.

காங்கிரசின் எதிர்கால அரசியல் பாதையைப் பற்றித் தெளிவான கருத்து ஒன்றுமில்லாதபடியால் இந்த இரண்டு சந்தர்ப்பங்களிலுமே குறிப்பிடத்தக்க உற்சாகம் எதுவுமில்லாமலேயே இந்தப் பதவிகளைத் தான் ஏற்றுக் கொண்டதாக நேரு எழுதியிருக்கிறார். எனினும் தன் விடாப்பிடியான சந்தேகங்களிலிருந்து ஓரளவுக்காவது தனக்கு விடுதலை கிடைக்கும் என்று நம்பிக்கையில் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் அவர் சுறுசுறுப்பாக வேலை செய்யத் தொடங்கினர்.

அறிக்கைகள், கட்டளைகள், காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மாநில மற்றும் நகரக் கமிட்டிகளுக்கு அனுப்பப்படும் ஆணைகள் போன்ற ஸ்தாபனப் பிரச்சினைகள், இந்தியாவில் போதைப் பொருள்களின் உபயோகம் பரவி வருவதை எதிர்த்து இயக்கம், சுதேசி இயக்கத்தை ஆதரித்தல், மத பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குரிய வழிகளைக் கஷ்டப்பட்டுத் தேடுதல்—இப்படிப்பட்ட ஏராளமான வேலைகள் இருந்தன. நேற்று நண்பர்களாக இருந்த இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கை எதிரிகளாக மாற்றியது. ஒத்துழையாமை இயக்கம் நிறுத்தி வைக்கப்பட்ட கடந்த மூன்று வருடங்களில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே எழுபத்திரண்டு கலகங்கள் நடைபெற்றிருந்தன. இவற்றில் பலர் உயிரிழந்தார்கள்.

வேலைப் பளுவினல் (நாளொன்றுக்குப் பதினைந்து மணி நேரம் நேரு வேலை செய்தார்) தன் குடும்பத்தினரோடு கழிப்பதற்கு அவருக்கு நேரமே இல்லை. எனவே பல கஷ்டங்களைத் தீரமாகவும் பொறுமையாகவும் சமாளித்து வந்த தன் மனைவியைப் பற்றி மிகவும் நன்றி பாராட்டினர்.

கமலா அடிக்கடி நோயால் பாதிக்கப்பட்டு பலவீனமாக இருந்தாலும் (அவளுக்கு எலும்புருக்கி நோய் ஏற்பட்டிருப்பதாக மருத்துவர்கள் சந்தேகித்தனர்) தன் கணவனைப் பேணுவதற்கும் ஊக்குவிப்பதற்கும் தேவையான சக்தியைத் தன்னிடமிருந்தே பெற்றார். ''கமலாவிடம் பெருமிதமும் கூருணர்ச்சியும் இருந்தாலும் அவள் என்னுடைய விசித்திரக் குணத்தைப் பொறுத்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் எனக்கு அதிகமாகத் தேவைப்படும்பொழுதெல்லாம் அன்பும் ஆறுதலும் அளித்தாள்'' என்று ஜவகர்லால் பிற்காலத்தில் எழுதினார்.

அவருடைய தகப்பனாரும் அவருக்கு ஆதரவளித்தார். மோதிலால் நேரு தன் மகனைப் பற்றி எப்பொழுதும் கவலைப் பட்டுக் கொண்டிருப்பார். ஆனால் இளைஞர்களைப் பெரியவர்கள் தேவை இல்லாமல், அற்பத்தனமாகக் கண்காணிக்கும் செயலாக ஒருக்காலும் அது இருக்கவில்லை. அவர்களுடைய கருத்துக்கள் வேறுபட்டிருந்த நேரத்திலும் (உதாரணமாக, சுயராஜ்யக் கட்சியைப் பற்றி) மகன் தன்னுடைய கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று விரும்பியவரல்ல மோதிலால். எனினும் ஜவகர்லால் தன்னைப் போலவே சிந்தித்திருந்தால் அவர் மகிழ்ச்சி அடைந்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

1925ம் வருடத்தின் இலையுதிர் காலத்தின் போது கமலாவின் உடல் நலம் மிகவும் பாதிக்கப்பட்டது. கணவரைப் பற்றி நிரந்தரமாக ஏற்பட்டிருந்த கவலையும் உரிய காலத்துக்கு முன்னர் பிறந்த ஆண்குழந்தையின் இழப்பும் (அந்தக் குழந்தை இரண்டு நாட்கள்தான் உயிரோடிருந்தது) அவளுடைய நோயை அதிகப்படுத்தின. மனைவியை ஸ்விட்சர்லாந்துக்குக் கொண்டுசெல்லுமாறு மருத்துவர்கள் ஜவகர்லாலைத் திரும்பத் திரும்ப வற்புறுத்தினார்கள். உயரமான மலைப்பிரதேசப் பருவநிலை சில சமயங்களில் ஆச்சரியப்படத்தக்க மாற்றத்தை ஏற்படுத்தலாம். மேலும் அந்தக் காலத்தில் நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய்களுக்கு ஸ்விட்சர்லாந்து மருத்துவர்கள் மிகச் சிறந்த நிபுணர்களாகக் கருதப்பட்டார்கள்.

ஜவகர்லாலிடம் எத்தகைய தயக்கமோ, சந்தேகமோ இல்லை. 1926 மார்ச் முதல் தேதியன்று அவரும் கமலாவும் எட்டு வயதுச் சிறுமி இந்திராவும் பம்பாயிலிருந்து ஐரோப்பாவுக்குப் பயணமானார்கள்.

## அத்தியாயம் ஆறு

ஒரு காலத்தில் தன்னுடைய இனத்தின் மேன்மையைப் பற்றி இறுமாப்புக் கொண்டிருந்த ஐரோப்பா இப்பொழுது களைத்துப் போய் சந்தேகங்களாலும் கவலைகளாலும் அரிக்கப்பட்டிருப்பதை ஐவகர்லால் நேரு கண்டார். அந்தக் கண்டத்தின் சுபிட்சம் நிறைந்த தோற்றத்தை யுத்தமும், அதன் அழிவும் இரத்தவெள்ளமும் மாற்றியிருந்தன. ஊனமடைந்த மக்கள் கூட்டம் கூட்டமாக முட்டுக் கட்டைகளின் உதவியோடு அல்லது நாற்காலி வண்டிகளில் உட்கார்ந்து அவலட்சணமான முறையில் தெருக்களில் போய்க் கொண்டிருந்தார்கள். வயதை மீறிய மூப்படைந்த பெண்கள் தெருவிலே செல்பவர்களைத் தங்களுடைய ஒளியிழந்த கண்களினால் கவலையோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

முன்னர் போலவே தொழிற்சாலைப் புகைபோக்கிகள் கன்னங் கரேலென்று பிசுபிசுப்பான புகையை வெளிவிட்டுக் கொண்டிருந்தன. தொழிற்சாலைகளிலிருந்து சிறிது தூரத்தில் தோட்டங்களுக்கும் பூங்காக்களுக்கும் அருகில் புதிய வங்கிக் கட்டிடங்கள் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன. பெரும் பணக்காரர்கள் பெரிய ஹால்களில் பச்சைக் கம்பளி விரிக்கப்பட்டிருந்த மேசைகளுக்கு முன்னால் அமர்ந்து யுத்தத்தில் கிடைத்த லாபத் தொகையைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தார்கள், மூலதனத்தை மறுவினியோகம் செய்து கொண்டிருந்தார்கள். இனி மக்களையும் அவர்கள் படைத்த பொருளாயத, ஆன்மிகச் செல்வங்களையும் அழிப்பதற்குப் பயன்படுகின்ற ஆயுதங்களைத் தயாரிப்பதற்கு இந்த மூலதனம் செலவழிக்கப்படும்.

ஆனால் மக்களினங்கள் இனிமேல் யுத்தத்தை விரும்ப

வில்லை. சோவியத் நாடு புதிய வாழ்க்கையை நிர்மாணிக்கும் மாபெரும் உதாரணத்தை உலகத்துக்குக் கொடுத்திருக்கிறது. எல்லா நாடுகளின் பாட்டாளி வர்க்கத்தினரோடும் தன் ஒருமைப்பாட்டை அறிவித்து ஒடுக்கப்பட்ட நாடுகளுக்கு உதவிக்கரம் நீட்டி உலகத்திலேயே முதலாவது தொழிலாளர்கள் மற்றும் விவசாயிகளின் அரசை சர்வதேசத் தொழிலாளர் மற்றும் தேசிய விடுதலை இயக்கங்களோடு இணைக்கும் மாற்றப்பட முடியாத நிகழ்வுப் போக்கை அது துவக்கி விட்டது.

1926 ஏப்ரலில் ஜவகர்லாலும் கமலாவும் மகளோடு ஜினீவாவுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே புறநகர்ப் பகுதியில் அமைந்திருந்த அடக்கமான வீட்டில் குடியேறினார்கள். மனைவியின் உடல்நிலை பற்றிய கவலையும் சோம்பலாக வீண் பொழுது போக்க வேண்டுமே என்ற வருத்தமும் நேருவை வாட்டின. மேலும் தன்னுடைய இலட்சியத்தை அடைவதற்குரிய பாதையைப் பற்றி அவர் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கவில்லை. இந்தியாவிலிருந்த பொழுது அவர் சுதந்திரத்தைப் பற்றி அதிகமாகப் பேசியிருந்தார். ஆனால் பார்வைக்கு எளிமையாகத் தோன்றும் இந்தச் சொல்லின் சரியான பொருளையும் உள்ளடக்கத்தையும் பற்றி ஆழமாகச் சிந்திப்பதற்கு அவருக்கு நேரம் கிடைக்கவில்லை.

''எங்களுக்குக் கருத்துச் சுதந்திரம், நடவடிக்கைச் சுதந்திரம், எங்கள் தலைவிதியை உருவாக்கிக் கொள்வதற்கு, எங்கள் நாட்டு மக்களின் மேதாவிலாசத்தோடு பொருந்திய முறையில் இந்தியாவை நிர்மாணிப்பதற்குச் சுதந்திரம் வேண்டும். மேற்கு நாடுகளை அப்படியே காப்பியடிக்கிற இந்தியாவை நாங்கள் விரும்பவில்லை''. ஜவகர்லாலின் தகப்பனார் இப்படிப் பேசுவார். அவரும் இதே வார்த்தைகளை அடிக்கடி திருப்பிச் சொல்லியிருக்கிறார். ஆனால் இந்த வார்த்தைகளை எவ்வாறு செயல்படுத்துவது என்று சிந்திக்கத் தொடங்கிய மறு வினாடியிலேயே அவை பொருளற்ற வார்த்தைகள் என்பதைக் கண்டார். நிலப்பிரபுத்துவ ஜமீன்தாருக்கும் விவசாயிக்குமிடையே ஒரே சுதந்திரத்தைப் பற்றிப் பேச முடியுமா? தங்களுடைய அன்றாடத் துன்பங்களுக்கும் சுயராஜ்யத்துக்கான போராட்டத்துக்குமிடையே எவ்விதத்திலும் தெளிவான தொடர்பு இருப்பதாக விவசாயிகள் பார்க்கவில்லை என்பது ஜவகர்லாலுக்குத் தெரியும். மேற்குடியினர், மிகவும் கீழ்நிலை

யிலிருக்கும் சமூகப் பிரிவினர் ஆகிய இரு தரப்பையும் தன் கோட்பாடுகளை விட்டுக்கொடுக்காமலேயே ஈர்க்கக் கூடிய மந்திர சக்தியைக் கொண்டிருக்கும் மகாத்மா காந்தியைப் பற்றி அவர் சிந்தித்தார். ''எல்லா விஷயங்களிலும் விவசாயியின் பார்வை யைக் கொண்ட ஒரு மாபெரும் விவசாயி காந்தி. வாழ்க்கையின் சில பகுதிகளைப் பற்றி விவசாயியிடமிருக்கும் குருட்டுத் தனமும் அவரிடம் இருக்கிறது'' என்று ஜவகர்லால் நினைத்தார். ''ஒரு வேளை இந்த நேரத்தில் வேறு எந்த நாட்டுக்கும் அவர் பொருத்தமில்லாதவராக இருக்கலாம். ஆனால் பாவபுண்ணி யங்கள், கடைத்தேற்றம், அஹிம்சை ஆகியவற்றைப் பற்றி அசரீரி மதத் தன்மைகளோடு பேசுகின்ற மனிதர்களை இந் தியா இன்னும் புரிந்து கொள்ளக் கூடியதாக இருக்கிறது, அல்லது குறைந்த பட்சம் அவர்களை மதிக்கிறது... தலைவர் என்ற முறையில் காந்தி எங்கோ உயரத்திலிருந்து வந்து விடவில்லை. அவர் கீழேயிருந்து இந்த நாட்டின் இதயத் திலிருந்து பிறர் உணராதபடி வந்திருக்கிறார். தன்னுடைய் நாட்டிலிருக்கும் கோடிக் கணக்கான துரதிர்ஷ்டசாலிகள், ஒடுக்கப்பட்ட மக்களின் கதியைப் பற்றிய கவலைகளே அவரு டைய சிந்தனைகளாக இருக்கின்றன. 'ஒவ்வொரு நபருடைய கண்களிலிருந்தும் வழிகின்ற ஒவ்வொரு சொட்டுக் கண்ணீரை யும் துடைப்பதே என்னுடைய ஆசை' என்று அவர் கூறு வதுண்டு.'' காந்தி சத்தியம், அன்பு ஆகியவற்றைப் பற்றித் தன்னுடைய சொந்த தார்மிகக் கொள்கையை (இது அஹிம் சையோடு ஒன்றிணைந்தது) பிரச்சாரம் செய்து தன்னுடைய நாட்டு மக்களுடைய ஆன்மிக ஒற்றுமையை மறுபடியும் ஏற் படுத்துவதற்கு முயற்சி செய்தார். ''அடிமட்டத்திலிருக்கும் ஏழைகள் இது என்னுடைய நாடு என்று உணரக் கூடிய, அதை உருவாக்குவதில் அவர்களுக்கு மெய்யான பங்குடைய, உயர்ந்த வகுப்பினர், கீழ் வகுப்பினர் என்ற பேதங்கள் இல்லாத எதிர்கால இந்தியாவே'' அவர் கனவு கண்ட இந்தியா. அவர் ''தரித்திர நாராயணனைப்'' பற்றி அல்லது ''ஏழைகளிடம் வசிக்கும் இறைவனைப்'' ,பற்றி அடிக்கடி எடுத்துக் கூறுவார். இந்த வார்த்தைகள் ''ஏழ்மைக்குக் கவர்ச்சி யூட்டுபவை'' என்று சில சமயங்களில் ஜவகர்லா லுக்குத் தோன்றும். ஆனால் ஏழ்மை ''வெறுக்கப்பட வேண் டியது; எதிர்த்துப் போராடி ஒழிக்கப்பட வேண்டியது, எவ்

விதத்திலும் அதை ஊக்குவிக்கக் கூடாது'' என்று தான் நேருவும் கருதினார். அவர் இதைப் பற்றி காந்தியோடு பேசத் தொடங்கிய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பணக் காரர்கள் தங்களுடைய செல்வத்தைத் தங்களுடைய பரா மரிப்பில் ஒப்படைக்கப்பட்டிருக்கும் தேசியச் செல்வம் என்று கருத வேண்டும் என்று காந்தி வலியுறுத்துவார். இந்த் பதில் ஜவகர்லாலுக்கு எவ்விதத்திலும் திருப்தியளிக்கவில்லை. இத்தகைய கருத்து சமூகப் பிரச்சினைக்குத் தீர்வளிக்கிறது என்று அவரால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. இதற்கு முன்பே நேரு அனுபவம் நிறைந்த அரசியல்வாதியாகிவிட் டார். தந்தைவழி மரபுகளையும் மதத்தையும் அடிப்படை யாகக் கொண்ட கற்பனைவாதக் கருத்துக்களை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் எல்லாப் பிரச்சினைகளையும் முன்னேற்றம் என்ற இலட்சியத்தோடு அணுகினார். ஜார்களின் சர்வாதி காரத்துக்கு முடிவு கட்டிய பிறகு இந்தியாவை எதிர்நோக் கிய பிரச்சினைகளைப் பெரும் அளவில் ஒத்திருந்த சமூக-பொரு-ளாதார மற்றும் தேசிய இன பிரச்சினைகளை எடுத்துக் கொண் டிருந்த ருஷ்யா உள்பட வளர்ச்சியடைந்த ஐரோப்பிய நாடு களின் அனுபவங்களில் மிகச் சிறந்த எல்லாவற்றையும் இரவல் வாங்குவது உபயோகமானது என்று நேரு கருதினார். மற்ற நாடுகளின் அரசியல் போராட்ட வரலாறுகளிலிருந்து படிப்பி னைகளைப் பெறுவதென்றால் அந்நிய உதாரணத்தைக் குருட் டுத்தனமாகப் பின்பற்றுவதென்று அர்த்தமல்ல. ''இன்று இந் தியா தன் பழைய மரபுகளைக் குருட்டுத்தனமாகப் பின்பற்று வதற்கும் அந்நிய வழிகளை அப்படியே காப்பியடிப்பதற்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருப்பது மோசமானது. இவை ஒன்றிலாவது இந்தியா உதவியையோ, வாழ்க்கை மற்றும் வளர்ச்சியின் மூல ஊற்றையோ அடைய முடியாது'' என்று நேரு கருதினார்.

வெளிநாட்டுக்கு வந்திருக்கும் சந்தர்ப்பத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள ஜவகர்லால் விரும்பினார். சர்வதேச நிலைமையை முழுமையாகத் தெரிந்து கொள்வ தென்றும் அவர் தந்தையாரும் காந்தியும் ஊக்குவித்தபடி இந்தியாவின் நண்பர்களோடு தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதென்றும் முடிவு செய்தார். மகாத்மா காந்தி அப்பொ ழுது ஜினீவாவின் புறநகர்ப் பகுதியில் ''ஓல்கா'' எனும் தனது

பங்களாவில் வசித்து வந்த ரொமேன் ரொலாந்துக்கு அவரை அறிமுகப்படுத்திக் கடிதம் கொடுத்திருந்தார். ''என்னுடைய சக ஊழியர்களிலும் நண்பர்களிலும் மிகவும் அன்புக்குரியவர்'' என்று காந்தி ஜவகர்லாலைப் பற்றி எழுதியிருந்தார்.

ரொலாந்தின் இல்லம் எளிமையாக இருந்தது. எங்கு பார்த்தாலும் புத்தகங்கள். ரொலாந்தின் மேன்மையும் தார் மிகத் தூய்மையும் ஜவகர்லாலை மிகவும் கவர்ந்தன. அவர் கள் இருவரும் நெடுங்காலம் பழகிய நண்பர்களைப் போல, ரொலாந்தின் தாய்மொழியிலேயே இனிதாகப் பேசிக்கொண் டிருந்தார்கள். ரொலாந்து இந்தியாவை நன்கு புரிந்து கொண்டு அதை நேசித்தார். அவர் மகாத்மா காந்தியைப் பற்றி மிகச் சிறப்பான புத்தகத்தை எழுதி அதன் மூலம் ஐரோப்பாவுக்கு அவரை ''அறிமுகம்'' செய்தவர். பிறகு இந்திய ஞானி களான இராம கிருஷ்ணர், விவேகானந்தருடைய வாழ்க்கைச் சரிதங்களை எழுதியவர். ரொலாந்து, நேரு இருவருமே தனி மனித ஆளுமைக்கும் சமூகத்துக்குமிடையே உறவு, அவற்றுக் கிடையே உள்ள முரண்பாட்டை அகற்றுதல் ஆகிய பிரச் சினைகளைப் பற்றி அக்கறை கொண்டிருந்தார்கள். ரொலாந் தின் **தனிமனித ஆன்ம சுதந்திரத்தைப் பற்றிய பிரகடனத்தை** யும் சமூக சண்டைகளிலிருந்து தனித்து நிற்கின்ற ''சுதந் திரமான சிந்தனையைக் கொண்ட அறிவுஜீவி'' சம்பந்தமான அவருடைய போதனையையும் ஜவகர்லால் அறிவார். அறிவு ஜீவி நடவடிக்கையிலிருந்து ஒதுங்கிக் கொண்டு சிந்தனையில் மட்டும் ஈடுபட வேண்டும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்ட முந்திய சிந்தனைகளை ரொலாந்து கைவிடத் தொடங் கியிருப்பது அவருடைய வார்த்தைகளில் ஒலிப்பதை நேரு கவனித்தார். அரசியலில் சம்பவங்களின் மையத்தில் குதிப் பதற்கு, தொழிலாளர்கள் மற்றும் ஒடுக்கப்பட்ட மக்களினங் களின் பிரதிநிதிகளோடு இணைந்து செயலாற்றுவதற்கு அந்த மாபெரும் எழுத்தாளர் தயாராக இருக்கிறார் என்று தோன் றியது. ரொலாந்து **சென்ற காலத்துக்கு விடையளித்தல்** என்ற தலைப்பில் எழுதியிருக்கும் தனது புதிய புத்தகத்தைப் பற்றி நேருவோடு பேசினார். தனிமனித ஆன்ம சுதந்திரத் தைப் பற்றித் தன்னுடைய பழைய நிலையை எவ்விதமான வருத்தமும் இல்லாமல் அவர் கைவிட்டிருப்பதை இப்புத்தகம் எடுத்துக் காட்டியது. உண்மையான தனிமனித ஆன்ம

சுதந்திரத்துக்கு ஒரே உத்தரவாதத்தை, தனிநபரின் ஒருங் கிணைந்த வளர்ச்சிக்கு ஒரே சாத்தியத்தை சோஷலிசமும் கம்யூனிசமும் மட்டுமே பிரதிநிதித்துவப்படுத்துகின்றன என்று அவர் கூறினார்.

புரட்சிகரமான பாதை இந்தியாவுக்கு ஏற்றதல்ல, இந் தியா போல்ஷிவிசத்தை விரும்பவில்லை என்று திரும்பத் திரும்பக் கூறிவருகின்ற காந்தியின் பிரச்சாரகராகவும் ஆதர வாளராகவும் இருந்தவர் ரொலாந்து. எனவே அவருடைய முடிவுகள் ஜவகர்லாலுக்கு வியப்பைக் கொடுத்தன.

*1926*ம் வருடத்தின் கோடைகாலத் தொடக்கத்தில் ஜவ கர்லாலின் இளைய சகோதரியான கிருஷ்ணு ஜினீவாவுக்கு வந்தாள். கமலாவை கவனித்துக் கொள்ளும் பொறுப்பை அவள் ஏற்றுக் கொண்டாள். ஆகவே அவ்வப்பொழுது ஜினீ வாவை விட்டு மற்ற ஐரோப்பியத் தலைநகரங்களுக்குச் சென்று பிரிட்டிஷ் காலனியாதிக்க அதிகாரிகளின் தொல்லைகளைத் தாங்க முடியாமல் இந்தியாவை விட்டு வெளியேறி அங்கே வாழ்ந்து கொண்டிருக்கும் பல இந்தியர்களைச் சந்திக்கும் வாய்ப்பு ஜவகர்லாலுக்குக் கிடைத்தது. அவர்களில் பெரும்பான்மை யானவர்கள் பெர்லினில் வசித்தார்கள். ஜெர்மனியில் படித்துக் கொண்டிருந்த, முதல் உலக யுத்தத்தின் காலத்தில் தேச பக்தக் கமிட்டிகளை அமைத்த பல இந்திய மாணவர்களும் அப்பொழுது ஜெர்மனியில் வசித்தார்கள். ஜெர்மன் அரசாங் கம் இந்தியர்களிடமிருந்த பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்ச்சியைத் தனது சொந்த அரசியல் நலன்களுக்காகப் பயன்படுத்த முயற்சி செய்தது. ஜெர்மனி யுத்தத்தில் வெற்றிபெற்றால் இந்தியாவுக்கு சுதந்திரமளிக்க ஒத்துக் கொள்வதற்காக அங்கே குடியேறிய இந்தியர்களின் தலைவர்கள் ஜெர்மானியர்களோடு பேச்சுவார்த்தைகள் நடத்தினார்கள். இந்தியாவின் தலைவிதியை நிர்ணயிக்கக் கூடிய தீர்மானமான பாத்திரத்தைத் தாங்கள் வகிப்பதாக அனுபவமில்லாத மாணவர்கள் நினைத்தார்கள். அவர்கள் வெகுளிகள்! யுத்தம் முடிந்துவிட்டது. அவர்களு டைய கற்பனைகள் நொறுங்கிவிட்டன. அவர்கள் இந்தியா வுக்குத் திரும்ப முடியாது, ஆனால் அந்நிய நாட்டில் வசிப்ப தும் தாங்க முடியாத துன்பமாகிவிட்டது. ''நோர்டிக் இனத் தைச் சேராத—குறிப்பாக ஆசியாவைச் சேர்ந்த—அந்நியர் களை ஜெர்மனி வரவேற்கவில்லை. அவர்கள் ஒழுங்காக நடந்து

கொண்டால், அதுவரையிலும் அங்கே இருக்க அனுமதிக்கப் படுவார்கள்'' என்று நேரு எழுதினர்.

பெர்லினில் வசித்த இந்தியர்கள் ஒருவருடன் ஒருவர் நேச தொடர்பு கொண்டிராதது மட்டுமல்ல, அவர்கள் ஒரு வருக்கொருவர் சச்சரவு செய்து கொள்வதுண்டு என்பதை நேரு அறிந்தார். அது மட்டுமல்லாமல் ஒவ்வொருவரும் மற்றவர்களைப் பற்றி துரோகம் செய்யக் கூடியவர்கள் என்று சந்தேகப்பட்டார்கள். ''அரசியல் அகதிகள் எல்லா இடங் களிலும் இப்படித்தான் இருப்பார்கள் என்று தோன்றுவ தாக'' நேரு நினைத்தார். அவர்களில் சிலர் ஐரோப்பிய பாணியில் பூர்ஷ்வாக்களாகவும் மாறிவிட்டார்கள்; அத்தகை யவர்கள் தங்களுடைய தேசபக்தியை எப்பொழுதோ இழந்து விட்டனர். எனினும் ஜவகர்லால் சந்தித்த இந்திய அர சியல் அகதிகளில் பெரும்பான்மையினர் உண்மையான தேசபக்தர்களாக இருந்தனர். அவர்களிடம் இந்தியா வைப் பற்றித் தீவிரமான ஏக்கங்கள் இருந்தன. இந்தி யாவின் யதார்த்த நிலைமையோடு அவர்களுக்குத் தொடர் பில்லாதபடியால் இந்தியாவை விடுவிப்பதற்கு விசித்திரமான திட்டங்களைத் தயாரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களு டைய வாழ்க்கை துன்பமயமாக இருந்தது, அடுத்த வேளை உணவுக்கு என்ன செய்வது என்ற கவலை எப்பொழுதுமே இருந்தது.

1926 ஜூலையில் ஸ்விட்சர்லாந்திலிருந்து வெளியிடப்படு கின்ற செய்தித்தாள்கள் ஒன்றில் அநேகமாக எல்லா இந்தியர் களுமே பிரிட்டிஷ் ஆட்சி நீடிக்க வேண்டுமென்று ஏகமன தாக விரும்புகிறார்கள் என்று வலியுறுத்தும் கட்டுரை வெளி யாயிற்று.

இந்தக் கட்டுரைக்கு நேரு ஆணித்தரமாக பதில் எழு தினர். இந்திய விடுதலை இயக்கம் உண்மையாகவே நாடு முழுவதும் பரவியிருப்பதைச் சுட்டிக் காட்டும் ஸ்தூலமான புள்ளிவிவரங்களை எடுத்துக் கூறினர். ''தங்கள் நாடு சுதந் திரமடைய வேண்டும் என்று கூறுகின்ற இந்தியர்கள் பொய் யர்கள் அல்லது வேடதாரிகள் என்று நீங்கள் நினைப்பதாக நான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. உங்கள் அபிப்பிரா யம் இதுதான் என்றால் நாம் விவாதிப்பதற்கு இடமில்லை'' என்று அந்தக் கட்டுரையின் ஆசிரியருக்கு எழுதினர்.

ஜவகர்லால் தன் தகப்பனருக்கும் நண்பர்களுக்கும் காங் கிரஸ் தலைவர்களுக்கும் கடிதங்கள் எழுதுவார். அவர்கள் தம் பதில்களில் இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற எல்லாச் சம்பவங்களையும் பற்றி அவருக்குத் தெரிவித்தார்கள். பிரிட்டிஷ் காரர்களின் தூண்டுதலால் ஏற்பட்ட மதக் கலகங்களைப் பற்றிய செய்திகள் அவருக்குக் கவலையைக் கொடுத்தன. இந்துக்கள் மற்றும் முஸ்லிம்களைக் கொண்ட மதவெறி கோஷ்டிகள் தங்களுக் கிடையில் சண்டை போட்டுக் கொண்டு மக்களைப் பிரித்தன. காலனியாதிக்கவாதிகள் எப்பொழுதும் தங்களுக்குப் பணிந்து கிடக்குமாறு மக்களை வைத்திருப்பதை இது சுலபமாக்கியது.

பிரபல தேசபக்தரான சுவாமி சகஜானந்தாவை ஒரு மதவெறியன் இரவு நேரத்தில் திருட்டுத்தனமாக அவருடைய படுக்கையின் அருகில் சென்று கொலை செய்தான். இந்த சோகச் செய்தி ஜவகர்லாலை உலுக்கியது. பிரிட்டிஷ்காரர் களுக்கு எதிரான ஒரு மக்கள் எழுச்சியின் போது வீரமிக் கவரான சுவாமி சகஜானந்தா துருப்புகளின் துப்பாக்கி ஈட்டி களுக்கு நேராகத் திறந்த மார்போடு சென்றார். படைவீரர் கள் அவருக்கு வழிவிட்டார்கள். இந்துவான சகஜானந்தா டில்லியில் முஸ்லிம்களின் புனித மசூதியான ஜும்மா மசூதி யின் படிக்கட்டுகளின் மீது தைரியமாக ஏறி நின்று கொண்டு இந்துக்களும் முஸ்லிம்களும் சகோதர பாசத்தோடு ஒன்றுபட வேண்டும் என்று அறைகூவினர். அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பொது மக்கள் உற்சாகமடைந்து ஒற்றுமை முழக்கங்களை எழுப்பினர்கள்.

பொதுவாக இந்தியாவிலிருந்து வந்த செய்திகள் அடிக் கடி நேருவுக்குக் கவலையையும் ஏமாற்றத்தையும் கொடுத்தன. பரம்பரைப் பட்டங்களை உடையவர்களும் நிலச்சுவாந்தார் களும் தொழிலதிபர்களும் இந்திய தேசியக் காங்கிரசில் மென் மேலும் அதிகமாகப் பொறுப்புப் பதவிகளைப் பெற்றுக் கொண் டிருந்தார்கள். அவர்களுடைய மத மற்றும் தேசியவாதக் கருத்துக்களுக்கும் தீவிர வலதுசாரிப் போர்க்குண மிக்க இந்து ஸ்தாபனமான இந்து மகாசபையின் தலைவர்களுடைய கருத் துக்களுக்கும் அநேகமாக சிறிது கூட வேறுபாடு இல்லை. தாய்நாடு காலனி ஆட்சியிலிருந்து விடுதலை அடைவதை மதவெறி கெடுத்து விடும் என்று நேரு தன் நண்பரான சையது முகமதுக்கு எழுதினர்.

...இலையுதிர் காலம் நெருங்கிய பொழுது கமலாவின் உடல் நிலை மறுபடியும் மோசமடைந்தது. குளிர் காலத்தில் கமலாவை மான்டானு என்ற இடத்தில் மலையின் மீது கட்டப்பட்டிருக்கும் ஆரோக்கிய இல்லத்திற்குக் கொண்டு செல்லுமாறு மருத்துவர்கள் ஆலோசனை கூறினர். அது மட்டுமின்றி, ஸ்விட்சர்லாந்தில் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த இந்திராவின் கல்விக்கும் செலவு செய்ய வேண்டியிருந்தது. மறுபடியும் பணத்தேவை ஏற்பட்டது. கமலாவிடமிருந்த ஒரு சில நகைகளையும் விற்பனை செய்வது அவசியமாயிற்று. ஆனால் அதுவும் போதுமானதாக இருக்கவில்லை. ஜவகர்லாலும் கமலாவும் மற்றவர்களிடமிருந்து—உறவினர்களிடமிருந்து கூட—கடன் வாங்க விரும்பவில்லை. எனவே தங்களிடமிருந்த குறைவான பணத்தைக் கொண்டே வாழ்க்கை நடத்தினர்கள். அவர்கள் கட்டாயத்தின் காரணமாக எல்லாவற்றிலும் சிக்கனத்தைக் கடைப்பிடித்தனர். இந்தியாவிலிருந்து வந்த ஜவகர்லாலுக்குக் குளிர்கால மேற்கோட்டு மிகவும் அவசியமாகத் தேவைப்பட்டது. ஆனல் அவரால் அதற்குப் பணம் செலவிட முடியவில்லை. மகன் பண முடையால் சிரமப்படுவதைப் பற்றிக் கேள்விப்பட்ட மோதிலால் நேரு பின்வருமாறு எழுதினர்: ''கமலாவின் தங்க வளையல்களை விற்றுவிட்டதாக நீ எழுதியிருந்ததைப் படித்து நான் மிகவும் வேதனைப்பட்டேன்... நீ மிகச் சிக்கனமாக வாழ்க்கை நடத்த முயற்சிக்கிறாய், உனக்கும் கமலாவுக்கும் தேவையான வசதிகளைச் செய்து கொள்ளத் தயங்குகிறாய் என்று அஞ்சுகிறேன்''.

கமலாவும் ஜவகர்லாலும் கிருஷ்ணவும் மான்டானுவுக்குச் சென்றனர். அங்கே பைன் மரங்களின் வாசனை கலந்த உலர்ந்த, சுத்தமான காற்று வீசியது. அங்கேயிருந்த மிகச் சிறப்பான மருத்துவ கவனிப்பில் கமலா விரைவில் குணமடைவதை எல்லோரும் எதிர்பார்த்தார்கள். அதைப் போலவே கமலாவின் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டது.

ஜவகர்லாலுக்கு ஐரோப்பாவின் குளிர்காலம் பிடித்துவிட்டது. உறை பனி சறுக்கு விளையாட்டு அவருக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. பனி மலைச் சரிவில் சறுக்கிக் கொண்டு இறங்கும் கலையில் அவர் தேர்ச்சி அடைந்தார்.

''என் நமையனே ஒரே இடத்தில் வைத்திருக்க சிறைச் சாலேக் கம்பிகளால்தான் முடியும்'' என்று கிருஷ்ண எழுதினுள்.

அது உண்மையே. கமலாவின் உடல்நிலேயில் முன்னேற்றம் ஏற்பட்டதும் ஜவகர்லால் பெர்லினுக்குப் புறப்பட்டார். அங்கே ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் தலேவர்களோடு தொடர்புகளே ஏற்படுத்துவதும் 1927ம் வருடத்தின் ஆரம்பத்தில் நடைபெறவிருந்த ஒடுக்கப்பட்ட மக்களினங்களின் காங்கிரசைப் பற்றி இன்னும் அதிகமான விவரங்களேச் சேகரிப்பதும் அவருடைய நோக்கமாகும்.

இம்முறை பெர்லினுக்குச் சென்ற பொழுது ஜவகர்லால் வீரேந்திரநாத் சட்டோபாத்யாயாவை சந்தித்தார் (அவருடைய நண்பர்கள் அவரை ''சட்டோ'' என்றுதான் சுருக்கமாகக் கூறுவார்கள்). அவர் நெடுங்காலமாக பெர்லினில் ஒரு ஏழை அகதியாக, அன்றுடச் செலவுகளுக்கு அல்லற்படுபவராக, தாய்நாட்டை நினேத்து ஏங்குபவராக வாழ்ந்து வருபவர். முதல் உலக யுத்தத்துக்கு முன்பே லண்டனிலும் பாரிசிலும் புரட்சிகரமான தேசபக்தப் பணியில் அவர் ஈடுபட்டவர். 1917ம் வருடத்தில் அவர் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் பிரதிநிதிகளேச் சந்தித்து மாஸ்கோவுக்கும் சென்று வந்தார். அவர் விஞ்ஞான சோஷலிசப் பாதையைப் பின்பற்றியபடியால் மூன்றுவது அகிலத்தோடு தொடர்புகளே ஏற்படுத்திக் கொண்டார். அவர் சிறந்த கல்வித் தகுதியும் அதிகமான திறமையும் கொண்டவர், பழைய உலகத்தின் அறவியலே நிராகரிக்கின்ற மனேவலிமையைப் பெற்றவர் என்ற முறையில் கம்யூனிஸ்ட் மற்றும் கம்யூனிஸ்ட் அல்லாத புரட்சிக்காரர்கள் மத்தியில் அவருக்கு அதிகமான செல்வாக்கு ஏற்பட்டிருந்தது. நேரு அவருடைய அறிவாற்றலே மிகவும் உயர்வாக மதித்தார். ''மிகவும் திறமையானவர், பழகுவதற்கு மிகவும் இனியவர்'' என்று நேரு அவரைப் பற்றி மதிப்பிட்டார்.

சட்டோபாத்யாயாவின் ஆலோசனேயின் பேரில் பிரஸ்ஸல்சில் நடைபெறவிருந்த காலனியாதிக்க எதிர்ப்புக் காங்கிரசின் தயாரிப்புப் பணிகளில் நேரு பங்கெடுத்தார். ''ஒடுக்கப்பட்ட தேசங்களுக்கு இடையிலும், அவற்றுக்கும் தொழிலாளர் இயக்கத்தின் இடதுசாரி அணியினருக்குமிடையிலும் ஏதாவது

பொது நடவடிக்கைகளின் அவசியத்தைப் பற்றிய கருத்துக் கள் அதிகமாகப் பேசப்பட்டன.'' ஒடுக்கப்படும் எல்லா மக் களுக்கும் சுரண்டப்படும் வர்க்கங்களுக்கும் ஏகாதிபத்தியம் எனும் ஒரே எதிரி உள்ளதால் இதற்கு எதிரான போராட் டத்திற்குக் கூட்டு நடவடிக்கை அவசியம் என்பதில் மேலும் மேலும் அதிக நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. ''பிரஸ்ஸல் சில் நடைபெறப்போகும் காங்கிரஸ் அதிகமான பிரதிநிதித் துவம் உடையதாக இருக்குமென்பது வெள்ளிடை மலை. இந்திய தேசிய காங்கிரசின் சார்பில் சில பிரதிநிதிகள் அதில் கலந்து கொள்வது மிகவும் விரும்பத்தக்கதாகும். ஏனென்றால் இன்றைய தினத்தில் மிகவும் அச்சுறுத்துகின்ற ஏகாதிபத் தியம் இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தும் பிரிட்டிஷ் ஏகாதிபத் தியமே'' என்று ஜவகர்லால் தன் தகப்பனாருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டார்.

அவர் இதே ஆலோசனையைக் காங்கிரஸ் தலைமைக்கும் எழுதினார். ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் நடவடிக் கைகளைப் பற்றி அதிகமான விவரங்களையும் தெரிவித்தார்.

காந்தி நேருவின் ஆலோசனையைச் சிறிதும் உற்சாகமின்றி ஏற்றுக் கொண்டார். ''ஒடுக்கப்பட்ட தேசங்களின் காங் கிரசைப் பற்றி நீங்கள் அனுப்பிய அதிகாரபூர்வமான அறிக் கையையும் தனிப்பட்ட அறிக்கையையும் மிகவும் கவனமாகப் படித்தேன். நான் இந்தக் காங்கிரசிலிருந்து அதிகமாக ஒன் றையும் எதிர்பார்க்கவில்லை.'' ஐரோப்பிய நாடுகளின் பிரதிநிதி கள் தங்களுடைய சொந்த நோக்கங்களுக்காக மட்டுமே பாடுபடுவார்கள் என்பது காந்தியின் கருத்தாகும். அவரு டைய சந்தேகங்கள் இக்கருத்தை அடிப்படையாகக் கொண் டிருந்தன. மேலும் இந்தியர்கள் ''அக பலத்தை வளர்ப்பதன் மூலம் தம் மீட்சியைச் சாதிக்க முயற்சிப்பதற்குப் பதிலாக அந்நிய சக்திகளையும் அந்நிய உதவியையும் எதிர்நோக்கு கின்ற'' ஆபத்தான கருத்தை பிரஸ்ஸல்ஸ் காங்கிரஸ் அவர் களுக்குக் கொடுக்கலாம் என்று அவர் நினைத்தார்.

இந்த வரிகளைப் படித்த பொழுது நேரு வேதனையடைந் தார். ஆனால் தன் கருத்துக்கள் மற்றவர்களுடைய கருத்துக் களிலிருந்து (தன் தகப்பனாரையும் மகாத்மா காந்தியையும் போல அவர் அன்பு காட்டி மதிப்பவர்களாக இருந்தாலும் கூட) வேறுபட்டிருக்குமானால் அதற்காக அவற்றை மாற்றிக்

கொள்கின்ற பழக்கம் அவரிடமில்லை. ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் சர்வதேச ஸ்தாபனங்களுக்கும் இந்திய தேசிய விடுதலை இயக்கத்தின் பிரதிநிதிகளுக்குமிடையே உறவுகளை ஏற்படுத்துவதற்கு அவர் இடைவிடாது முயற்சித்தார். பிரஸ்ஸல்ஸ் காங்கிரசுக்கு தூதுக்குழு அனுப்புமாறு அதிகாரபூர்வமான அழைப்பு இந்திய தேசிய காங்கிரசுக்கு அனுப்பப்பட்டது. அந்தக் கடிதத்தில் ஸுன் சின்லினும் (சீனுவின் தலைசிறந்த புரட்சிகர ஜனநாயகவாதியான ஸுன் யாட்ஸென்னின் விதவை) ஜியார்ஜ் லான்ஸ்பரியும் (பிரிட்டிஷ் லேபர் கட்சியின் முக்கிய பிரமுகர்) கையொப்பமிட்டிருந்தனர். 1926 டிசம்பரில் கௌஹாத்தியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் அந்த அழைப்பு ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பல மாதங்களாக நேரு எதிர்பார்த்துக் கொண்டிருந்த கடிதம் காங்கிரஸ் பொது காரியதரிசி ரங்கசாமி ஐயங்காரிடமிருந்து கடைசியில் மான்டாஞவுக்கு வந்து சேர்ந்தது. பிரஸ்ஸல்சில் நடைபெறும் காங்கிரசில் இந்திய தேசிய காங்கிரசின் பிரதிநிதியாகப் பங்கெடுக்குமாறு ஜவகர்லால் நேரு பணிக்கப்பட்டார். அவருடைய பிரயாணச் செலவுகளுக்காக ஐநூறு பவுன் ஸ்டர்லிங்குகளுக்குக் காசோலையும் கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்தது. எனினும் அவருக்கு மிகவும் அவசியமான அரசியல் உத்தரவுகள் அக்கடிதத்தில் இடம் பெறவில்லை. ''பிரஸ்ஸல்ஸ் காங்கிரசில் என்ன பேச வேண்டும் என்பதைப் பற்றி ஏதோ ஒரு விதமான வழிகாட்டுதல்களைக் கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால் என் பொறுப்பிலேயே எல்லாவற்றையும் விட்டுவிட்டார்கள் என்று தோன்றுகிறது'' என்று நேரு ஐயங்காருக்கு எழுதினர்.

சுயராஜ்யம் என்ற தெளிவற்ற கருத்துக்குப் பதிலாக இந்திய விடுதலை இயக்கத்தின் அரசியல் இலட்சியம் முழு சுதந்திரம் என்று குறிப்பிடலாமா என்று நேரு காங்கிரசின் தற்காலிகத் தலைவரான சீனிவாச ஐயங்காருக்குக் கடிதம் எழுதினர். அதற்குப் பதில் மோதிலாலிடமிருந்து வந்தது. அவர் மகனுடைய கருத்துக்கு ஆதரவாக பதில் எழுதியிருந்தார். ''நாங்கள் (காங்கிரஸ்) சுயராஜ்யத்தைக் கோருகிறோம். நீ இதை சுதந்திரம் என்று வியாக்கியானப்படுத்தலாம்.''

காங்கிரஸ் தொடங்குவதற்கு ஒரு மாதத்துக்குச் சிறிது கூடுதலான காலம் மட்டுமே இருந்தது. ஜவகர்லால் இன்னும் ஏராளமான வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது. பிரிட்டனில் லேபர் கட்சியின் இடதுசாரி அணியைச் சேர்ந்தவர்களோடு அவர் தொடர்பு கொண்டார். இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கொள்ளைக்காரத் தன்மையை வெளிப்படுத்துகின்ற ஏராளமான புள்ளிவிவரங்களையும் தகவல்களையும் அவர்களுடைய உதவியோடு தொகுத்தார். ஜினீவாவிலிருந்து வெளியாகும் *Review of Nations* என்ற இதழில் எழுதிய கட்டுரையில் பிரிட்டன் இந்தியாவை ''நாகரிகப்படுத்தும்'' பாத்திரத்தை வகிப்பதாக அதை வானளாவப் புகழ்ந்து பேசி தலைமையான நாடுகளுக்கும் அவற்றின் காலனிகளுக்குமிடையே சமாதானம் நிலவ வேண்டும் என்று பிரச்சாரம் செய்பவர்களைக் கடுமையாக விமரிசித்திருந்தார். ''சமாதானம் நன்மை தருவதே. ஆனால் இடுகாட்டின் அமைதியைக் காட்டிலும் போர்க்களத்தின் பயங்கரங்களும் துன்பங்களும் இன்னும் சிறப்பானவை'' என்று எழுதினார்.

ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் தலைமைக் கமிட்டிகளில் அன்ரி பார்பியூஸ், ரொமேன் ரொலாந்து, திருமதி ஸுன் சின்லின் ஆகியவர்களோடு சட்டோபாத்யாயாவும் சேர்ந்து பணி புரிந்தார்.

ஜவகர்லால் நேரு தன் செயலாளராகவும் தட்டெழுத்தாளராகவும் உதவி புரிந்த சகோதரி கிருஷ்ணவோடு 1927 பிப்ரவரி 6ந் தேதியன்று பிரஸ்ஸல்சுக்கு வந்து சேர்ந்தார். காங்கிரஸ் தொடங்குவதற்கு இன்னும் சில நாட்கள் இருந்தன. ஒவ்வொரு நாட்டின் தூதுக் குழுவின் அரசியல் நிலையைப் பற்றித் துல்லியமான விவரங்களை சட்டோபாத்யாயா அவருக்கு எடுத்துக் கூறிப் பேருதவி செய்தார். அந்தப் பிரதிநிதிகள் பலரிடம் அவரை அறிமுகப்படுத்தினார்.

நேருவும் சட்டோவும் தேசிய விடுதலை மற்றும் சர்வதேசத் தொழிலாளர் இயக்கங்களைப் பற்றி நள்ளிரவு முடிந்து வெகு நேரமான பிறகும் கூட பேசிக் கொண்டிருப்பார்கள். சட்டோவிடமிருந்து சோவியத் ருஷ்யாவைப் பற்றிய உண்மையான விவரங்களை நேரு தெரிந்து கொண்டார்.

நாட்கள் வேகமாக ஓடின. அங்கே நேரு தூங்குவதற்குக் கூட நேரமில்லாதபடி மிகவும் அதிகமான வேலைகள் இருந்

தன. காங்கிரஸ் தயாரிப்புக் கமிட்டியின் வேலைகளில் நேரு பங்கு கொண்டார், நகல் தீர்மானங்களை எழுதினார், உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்து கொண்டிருந்த பிரதிநிதிகளோடு பேசினார். அவர் சர்வதேசப் பத்திரிகைகளுக்குக் கொடுத்த அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்: ''முழு அடிமைப்படுத்தப்பட்ட, பாதி அடிமைப்படுத்தப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட பல்வேறு மக்களினங்கள் இன்று நடத்திக் கொண்டிருக்கும் போராட்டத்தில் பல பொதுவான அம்சங்கள் இருப்பதை நாங்கள் உணர்கிறோம். அவர்களுடைய எதிரிகள் சில சமயங்களில் வெவ்வேறு மாறுவேடங்களை அணிந்து கொண்டிருந்தாலும் அவர்கள் பெரும்பாலும் ஒரே மாதிரியானவர்களே. அவர்களை அடிமைப்படுத்த உபயோகிக்கும் வழிமுறைகளும் பெரும்பாலும் ஒரே மாதிரியானவைதான். பல்வேறு மக்களினங்களுக்கிடையே ஏற்படுகின்ற தொடர்பு பொதுவான பிரச்சினைகளையும் கஷ்டங்களையும் மேலும் நன்றாகப் புரிந்து கொள்ள உதவும்; அதன் பலனாக ஏற்படும் நெருக்கமான ஒத்துழைப்பு நம் எல்லோருக்கும் இன்னும் அருகே வெற்றியைக் கொண்டுவரும்.''

காங்கிரசின் தலைமைக் குழுவுக்கு நேரு தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். காங்கிரஸ் தொடங்கிய நாளன்று *Le Drapeau Rouge* என்ற பெல்ஜிய கம்யூனிஸ்டுகளின் பத்திரிகையில் நேருவின் பேட்டி வெளியிடப்பட்டிருந்தது. காலனி நாடுகளில் நடைபெறுகின்ற விடுதலை இயக்கங்களை ஒன்றுபடுத்தி முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளர் இயக்கங்களின் ஒத்துழைப்பையும் எழுத்தாளர்கள் மற்றும் அரசியல் பிரமுகர்களின் அனுதாபத்தையும் சார்ந்திருக்கின்ற ஸ்தாபனத்தை அமைப்பதை நேரு அந்தப் பேட்டியில் வரவேற்றார். பிரஸ்ஸல்ஸ் காங்கிரஸ் கம்யூனிஸ்டுகளால் நடத்தப்படுகிறது என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் எழுதியதை அவர் மறுத்தார்.

நேரு இப்பொழுது தேசியப் பிரச்சினைகளின் எல்லைகளுக்கும் அப்பால் போய்க் கொண்டிருந்தார். இந்தியாவில் நடைபெறும் சுதந்திரப் போராட்டத்தை உலக முழுவதிலும் எல்லா முற்போக்கு சக்திகளும் நடத்துகின்ற ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கங்களோடு இணைத்தார்.

''இந்திய விடுதலைப் பிரச்சினை முற்றிலும் தேசியப் பிரச்சினை அல்ல; நம் காலத்திலுள்ள மிகவும் பலமான ஏகாதிபத்

தியத்தை... அது நேரடியாகத் தாக்குகிறது என்ற பொருளில் அது மற்ற பல நாடுகளை நேரடியாகவும் உலக முழுவதையும் மறைமுகமாகவும் பாதிக்கக் கூடிய பிரச்சினை என்பதை நீங்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்தியாவிலுள்ள எங்களுக்கு இத்தகைய நிலைமை சகிக்க முடியாததாக இருப்பது உங்களுக்குத் தெரியும். நாங்கள் இனியும் இந்த நிலைமையை அனுமதிக்க முடியாது; சுதந்திரம் மேன்மையானது, அடிமைத்தனம் மோசமானது என்பது அதற்குக் காரணம் அல்ல. நாங்களும் எங்கள் நாடும் வாழ்வதா, சாவதா என்ற பிரச்சினையாக இருப்பதே காரணம். அது மட்டுமல்ல, இது உங்களுக்கும் அதே அளவுக்கு சகிக்க முடியாததாகும்...'' என்று காங்கிரஸ் பிரதிநிதிகளிடையே நிகழ்த்திய உரையில் நேரு கூறினார்.

காங்கிரஸ் பிரதிநிதிகள் நேரு முன்வைத்த தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். ''இந்தியாவின் முழு சுதந்திரத்துக்காகப் போராடும் இந்திய தேசிய இயக்கத்துக்கு இந்தக் காங்கிரஸ் தன் தீவிரமான ஆதரவைத் தெரிவிக்கிறது. அந்நிய ஆதிக்கத்திலிருந்தும் சுரண்டலின் எல்லா வடிவங்களிலிருந்தும் இந்தியாவின் விடுதலை உலக மக்களினங்களின் முழு விடுதலைக்கு ஒரு அவசியமான காலடி என்று இக்காங்கிரஸ் கருதுகிறது... இந்திய விவசாயிகள் மற்றும் தொழிலாளர்களுடைய முழு விடுதலை இல்லாமல் உண்மையான சுதந்திரம் இருக்க முடியாதென்பதால் இந்திய தேசிய இயக்கம் அவர்களுடைய முழு விடுதலையை அடிப்படையாகக் கொண்டு தன் செயல்திட்டத்தை அமைத்துக் கொள்ளும் என்று இந்தக் காங்கிரஸ் மேலும் நம்புகிறது'' என்று தீர்மானம் கூறியது.

இந்தக் காங்கிரசில் குயென் அய் குவோக் என்ற பெயர் கொண்ட வியத்நாமிய இளைஞரை ஜவகர்லால் சந்தித்தார். அவருடைய ஒல்லியான முகத்தில் கன்னத்தின் எலும்புகள் துருத்திக் கொண்டிருந்தன. அவருடைய கண்கள் பிரகாசமாக ஒளி வீசின. அவை வாழ்க்கையைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்ட அச்சமில்லாத கண்கள். அவர் அடக்கத்தோடு பரபரப்பான விவாதங்களிலிருந்து ஒதுங்கிக் கொண்டார். ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் தலைவர்கள் அவரிடம் மரியாதையோடு பழகியதைக் கொண்டுதான் அவர் ஏகாதிபத்தியத்தின் எண்ணற்ற ஒற்றர்கள், வேவு இலாகாக்

களிலிருந்து மறைந்து வாழ்ந்து கொண்டிருக்கிற ஆசியாவின் தேசிய விடுதலை இயக்கத்தின் தலைவர்களில் ஒருவர் என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். அவர்தான் ஹோ சி மின் என்பதை நேரு பிற்காலத்தில் அறிந்தார். இதற்கு இருபத் தேழு வருடங்களுக்குப் பிறகு 1954ல் அவர்களிருவரும் தங் கள் நாடுகளின் தலைவர்கள் என்ற முறையில் ஹனோயில் சந்தித்தார்கள்.

ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் தலைமைக் கமிட்டி களைத் தேர்ந்தெடுத்த பிறகு 1927 பிப்ரவரி 15ந் தேதியன்று காங்கிரஸ் முடிவடைந்தது. இந்தியாவின் பிரதிநிதி என்ற முறையில் ஜவகர்லால் நேரு கழகத்தின் ஐந்து கௌரவத் தலைவர்களில் ஒருவராகவும் அதன் நிர்வாகச் செயற்குழுவின் உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காங்கிரசின் பணிகளில் ஜவகர்லால் மிகவும் களைப்படைந் தார். ''எட்டு அல்லது ஒன்பது நாட்கள் நடைபெற்ற காங்கிரசுக்குப் பிறகு நான் மிகவும் களைப்படைந்திருந்தேன். இங்கே வந்ததிலிருந்து ஒரு இரவு கூட நன்கு உறங்கவில்லை, ஒரு வேளை உணவு கூட சரியாகச் சாப்பிடவில்லை'' என்று ஐயங்காருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். ஆனால் அவர் ஓய்வு கொள்ள முடியவில்லை. சில நாட்களுக்குள் பிரஸ்ஸல்ஸ் காங்கிரசைப் பற்றி விரிவான அறிக்கை தயாரித்து இந்தியாவுக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

நேரு காங்கிரசின் நடவடிக்கைகளைப் பற்றி விரிவாக எழுதி அங்கே நிறைவேற்றப்பட்ட ஆவணங்களை ஆய்வு செய்தது மட்டுமல்லாமல் உலகத்தில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் சக்தி களின் அணிச் சேர்க்கையைப் பற்றி தன்னுடைய ஆழ்ந்த சொந்தக் கருத்துக்களையும் எழுதியிருந்தார். ''நாம் இன்னும் அதிகமான காலத்துக்கு சில விஷயங்களைத் தெரிந்து கொள் ளாதிருப்பது சாத்தியமல்ல. ஏனென்றால் பிரிட்டிஷ் ஏகாதிபத் தியத்தைக் காட்டிலும் அமெரிக்க ஏகாதிபத்தியமே சமீபத்திய எதிர்காலத்தின் மிகப் பெரும் பிரச்சினையாக இருக்கும். அல் லது இவை இரண்டும் உலகத்தின் மீது ஆதிக்கம் செலுத்து வதற்காக ஒன்று சேர்ந்து பலம் மிகுந்த ஆங்கில-சாக்ஸனிய முகாமை ஏற்படுத்தக் கூடும், அதைச் சுட்டிக்காட்டுகின்ற குறியீடுகள் இப்பொழுது இருக்கின்றன'' என்று நேரு எழு தினார்.

அவர் ''குறுகலான தேசியவாதத்தைக்'' குறைகூறி மக்களினங்களுக்கிடையே வளர்ந்து வருகின்ற ஒத்துழைப்பை ஆதரித்தார். ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளைச் சேர்ந்த மக்களினங்களின் ஒருமைப்பாட்டுக்குச் சர்வதேச ஸ்தாபனத்தை ஏற்படுத்த வேண்டிய அவசியத்தைக் குறிப்பிட்டு ஏகாதிபத்திய யுத்தங்களை எதிர்த்தார்.

''நாம் சுதந்திரம் அடைந்த பிறகு உலகத்தில் சமாதானத்தைப் பரப்புவதற்கு நம் சக்தியைப் பயன்படுத்துவோம் என்று நம்புகிறேன்'' என்று நேரு எழுதினார். ''ஒடுக்கப்பட்டிருக்கும் எல்லா தேசிய இனங்களுக்கும்... சோவியத் ருஷ்யா... சிறந்த நண்பன். ஆகவே இந்தியா ருஷ்யாவுடன் நட்புறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்பதற்கு அதிகமான காரணங்கள் இருக்கின்றன'' என்று அவர் முன்பே முடிவு செய்து விட்டார்.

பிரஸ்ஸல்ஸ் காங்கிரஸ் முடிந்த பிறகு நேரு லண்டனிலும் பாரிசிலும் சில நாட்களைக் கழித்தார். அங்கே தொழிற் சங்கத் தலைவர்களும் இடதுசாரி கட்சிகளைச் சேர்ந்தவர்களும் அவருக்கு உற்சாகமான வரவேற்பளித்தார்கள். ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் நிர்வாகச் செயற்குழுக் கூட்டம் கொலோனில் நடைபெற்றது. நேரு அதில் கலந்து கொண்டார். பிறகு அங்கிருந்து டுஸல்டோர்ஃபுக்குச் சென்று ஸாக்கோ மற்றும் வன்செட்டி கொலை தண்டனையைக் கண்டித்து நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பங்கெடுத்தார். இத்தகைய பிரயாணங்களில் ஒன்றில் இரகசியப் போலீஸ்காரர்கள் தன்னைப் பின் தொடர்கிறார்கள் என்பதைக் கண்டுபிடித்தார். அவர் கைது செய்யப்படலாம் என்று நண்பர்கள் எச்சரிக்கை செய்தார்கள். அதைக் கேட்டு நேரு வியப்படையவில்லை. ஏனென்றால் அவர் இந்தியாவை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு ஐரோப்பாவில் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட மாட்டேன் என்று அவர் உறுதி தர வேண்டுமென்று பிரிட்டிஷ் அதிகாரிகள் சில முயற்சிகளைச் செய்தார்கள்.

செப்டெம்பர் மாதத்தில் மோதிலால் இந்தியாவிலிருந்து வந்தார். ஐரோப்பாவுக்கு வந்து ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள், சில வாரங்களுக்காவது என்னோடு தங்கியிருங்கள் என்று ஜவகர்லால் தன் தகப்பனாருக்குப் பல கடிதங்கள் எழுதியிருந்தார்.

இனி வரப் போகும் காலம் தன் தகப்பனுருக்குப் பல கஷ்டங்களைக் கொடுக்கும் என்பது ஜவகர்லாலுக்குத் தெரியும். மோதிலால் நேருவின் தலைமையிலிருந்த சுயராஜ்யக் கட்சியின்* சக்தியும் செல்வாக்கும் ஆபத்தான முறையில் வீழ்ச்சி அடைந்து கொண்டிருந்தன. ''தேசிய நலன்களை முன்னிட்டு'' சட்டமன்றப் பணிகளைச் சீரமைப்பதற்குச் செய்த முயற்சிகள் தோல்வி அடைந்தன. ''உள்ளேயிருந்து உடைப்போம்'' என்று சுயராஜ்யக் கட்சியினர் கொடுத்த வாக்குறுதி நிறைவேறவில்லை. கட்சித் தலைவர்களின் அரசியல் அகராதியில் ''டொமினியன்'' என்ற சொல் தெளிவில்லாத ''சுயராஜ்யம்'' என்ற சொல்லை அகற்றிவிட்டது போலத் தோன்றியது. வலதுசாரிக் கருத்துடையவர்கள், ''பொறுப்பு வாதிகள்'' என்று சொல்லப்பட்டவர்கள் தங்கள் நிலையை உறுதிப்படுத்திக் கொண்டு காலனியாதிக்க அதிகாரிகளோடு ஒத்துழைக்க வேண்டும் என்று விடாப்பிடியாக வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள். சென்ற தடவை சட்ட மன்றங்களுக்கு நடைபெற்ற தேர்தல்களில் சுயராஜ்யக் கட்சியினர் பல இடங்களில் தோற்றதற்கு இவை அனைத்தும் காரணமாகும்.

இந்த வளர்ச்சிகள் மோதிலால் நேருவுக்கு மிகவும் ஆழமான வேதனையைக் கொடுத்தன. தன் மகன் தன்னைப் பிரிந்து வெகு தூரத்திலிருந்ததும் அவருக்குத் துன்பமளித்தது. பிரஸ்ஸல்சிலிருந்து ஜவகர்லால் எழுதிய கடிதங்கள் அவர் மனதில் கலக்கத்தை ஏற்படுத்தியிருந்தன. தன் மகன் கம்யூனிஸ்ட் அகிலத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறுரா? ஜவகர்லால் அனுப்பிய அறிக்கையைப் படித்த காங்கிரஸ்காரர்கள் சிலர் இப்படிப் பேசினுர்களென்பதும் அவருடைய கவலையை அதிகப்படுத்தியது.

ஜவகர்லால் வெனிசுக்குச் சென்று தகப்பனுரைச் சந்தித்தார். அவர்களுக்கிடையே நடைபெற்ற உரையாடல்களும் மகன் அளித்த விளக்கங்களும் மோதிலால் நேருவை ஓரளவுக்கு அமைதிப்படுத்தின.

1927 அக்டோபரில் அவர்கள் இருவரும் மறக்க முடியாத ஒரு சம்பவம் நடைபெற்றது. ஜெர்மனியிலிருந்த

---

* 1925 ஜூனில் சி. ஆர். தாஸ் மரணமடைந்த பிறகு மோதிலால் நேரு சுயராஜ்யக் கட்சிக்குத் தலைமை தாங்கினுர்.

சோவியத் தூதர் அவர்களைச் சந்தித்தார். அந்நிய நாடுகளோடு கலாச்சார உறவுகளுக்கான அகில யூனியன் கழகத்தின் **(வோக்ஸ்)** அழைப்பைக் கொடுத்தார். மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சியின் பத்தாவது ஆண்டு விழாக் கொண்டாட்டங்களைக் காண சோவியத் யூனியனுக்கு வருமாறு இருவரும் அழைக்கப்பட்டிருந்தனர். மோதிலால் நேருவின் தயக்கம் அதிக நேரம் இருக்கவில்லை. ஜவகர்லாலின் வற்புறுத்தலுக்கு இணங்கினர், சோவியத் யூனியனுக்குப் புறப்பட இசைந்தார்.

மோதிலால் நேருவும் ஜவகர்லால் நேருவும் சோவியத் யூனியனுக்கு வரவிருக்கும் செய்தியை **பிராவ்தா** செய்தித்தாள் 1927 நவம்பர் 5ந் தேதியன்று அறிவித்தது. ''பிரிட்டிஷ் அதிகாரிகள் தடைகள் விதித்திருந்தாலும் ஒரு இந்திய தூதுக்குழு மாஸ்கோவில் நடைபெறும் விழாக்களில் கலந்து கொள்ளப் போகிறது. மூன்று இந்தியப் பிரதிநிதிகள், ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் இந்தியப் பிரிவின் பிரதிநிதிகள் ஏற்கெனவே மாஸ்கோவுக்கு வந்துவிட்டார்கள். இந்தியாவின் தேசிய இயக்கத்தின் மிக முக்கியமான தலைவர்களில் ஒருவரான பண்டிட் மோதிலால் நேரு இன்று அல்லது நாளைக்கு, வந்து சேருவார். தேசிய காங்கிரசின் இடதுசாரி அணியின் தலைவரும் மோதிலால் நேருவின் மகனுமான ஜவகர்லால் நேரு அவரோடு வருகிறார். அவர் 1927 பிப்ரவரியில் பிரஸ்ஸல்சில் நடைபெற்ற ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் முதல் மாநாட்டில் இந்திய தேசிய காங்கிரசின் அதிகாரபூர்வமான பிரதிநிதியாகக் கலந்து கொண்டார்.''

இரண்டு நேருக்களும் மாஸ்கோவுக்குச் செல்லவிருப்பதைப் பற்றி இந்தியப் பத்திரிகைகளும் எழுதின. கல்கத்தாவிலிருந்து வெளியிடப்பட்ட *The Forward* என்ற பத்திரிகை **நேசக் கரம்** என்ற தலைப்பில் பின்வருமாறு எழுதியது: ''இந்துக்களுக்குத் தரப்பட்டிருக்கும் இந்த அழைப்புக்குக் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் உண்டு. ஐரோப்பாவிலிருந்து ஆசியாவையும் ஆப்பிரிக்காவையும், வெள்ளை நிறத்தவர்களிடமிருந்து மஞ்சள் மற்றும் பழுப்பு நிறத்தவர்களைக் கூர்மையாகப் பிரித்து வைத்த 'கீழான இனங்கள்' என்ற ஆதிகாலப் பழங் கருத்து தோற்றுப் போய்விட்டது. அவமதிக்கப்பட்டவர்

களுக்கும் ஒடுக்கப்பட்டவர்களுக்கும் ருஷ்யா நேசக் கரம் நீட்டியிருக்கிறது''.

மோதிலால் நேரு, ஜவகர்லால், கமலா, கிருஷ்ணு ஆகியோர் நவம்பர் 6ந் தேதியன்று மாலையில் பெர்லினிலிருந்து மாஸ்கோவுக்கு ரயிலில் புறப்பட்டார்கள். ஒரு நாள் பிரயாணத்துக்குப் பிறகு நெகொரேலொயே என்ற இடத்தில் சோவியத் எல்லையைக் கடந்தார்கள். சுங்க அதிகாரி ஆங்கிலம் பேசக்கூடியவர். சோவியத் யூனியனுக்கு வருவதன் நோக்கம் என்ன என்று அவர்களை மரியாதையோடு கேட்டார். அவர்கள் பதிலளித்தார்கள். சோவியத் நாட்டின் விருந்தினர்களாக நீங்கள் வந்திருக்கிறீர்கள், சுங்கச் சோதனை உங்களுக்குக் கிடையாது என்று அன்போடு சிரித்தபடியே கூறினார் அதிகாரி.

ரயில் நிலையக் கட்டிடம் செங்கொடிகளாலும் பெரிய படங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ''சோவியத் மக்கள் விருந்தினர்களை வரவேற்கிறார்கள்'' என்று சிகப்புத் துணியில் பல்வேறு மொழிகளில் வெள்ளை எழுத்துக்கள் நல்வரவளித்தன. நேரு குடும்பத்தினர் வண்டியிலிருந்து வெளியே வந்ததும் மக்கள் அன்போடு அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கம் நடைபெற்றுக் கொண்டிருந்த பொழுது நம் நாட்டு மக்கள் நம்மை வரவேற்ற மாதிரியே இருக்கிறதல்லவா?'' என்று நெகிழ்ந்து மோதிலால் நேரு கூறினார்.

''கமலாவும் கிருஷ்ணுவும் அணிந்திருக்கும் சேலைகள் மீது தான் அவர்களுக்கு அதிகமான அக்கறை இருக்கிறது'' என்று ஜவகர்லால் வேடிக்கையாகச் சொன்னார்.

நேரு குடும்பத்தினர் நவம்பர் 8ந் தேதி மாலையில் மாஸ்கோவுக்கு வந்து சேர்ந்தனர். ரயில் நிலையத்தில் **வோக்ஸ்** பிரதிநிதிகளும் இந்திய கம்யூனிஸ்டான ஷாபுர்ஜி சக்லத்வாலாவும் அவர்களை வரவேற்றனர். சக்லத்வாலா ஜவகர்லாலை பிரஸ்ஸல்சில் சந்தித்தார். பிரிட்டன், அயர்லாந்து ஆகிய நாடுகளின் பெரிய தூதுக்குழுவின் உறுப்பினராக சில நாட்களுக்கு முன்னர் அவர் மாஸ்கோவுக்கு வந்தார். சோவியத் யூனியன் நண்பர்களின் உலக காங்கிரஸ் இரண்டு நாட்களுக்குப் பிறகு நடைபெறும், அதில் நாற்பத்து

மூன்று நாடுகளைச் சேர்ந்த சுமார் ஆயிரம் விருந்தினர்கள் கலந்து கொள்வார்கள் என்று அவர் தெரிவித்தார். நான் காங்கிரசில் பேசுவதென்று முடிவு செய்திருக்கிறேன், ஆனால் பிரிட்டன்-அயர்லாந்து தூதுக்குழுவின் சார்பில் பேசுவதா அல்லது இந்திய தூதுக்குழுவின் சார்பில் பேசுவதா என்பதை இன்னும் இறுதியாக முடிவு செய்யவில்லை என்று சக்லத்வாலா கூறினார். காங்கிரசின் ஆரம்பக் கூட்டங்களில் ஒன்றில் இந்திய தூதுக்குழுவின் சார்பில் சட்டோபாத்யாயா பேசுவார் என்று கேள்விப்பட்டதாகக் கூறினார். இந்தக் காங்கிரசின் அமைப்பைப் பற்றி மோதிலால் நேருவின் கேள்விக்குப் பதிலளிக்கும் பொழுது அதில் எந்த மர்மமும் இல்லை என்று சக்லத்வாலா பதிலளித்தார். ''இந்தக் காங்கிரஸ் கம்யூனிஸ்ட் சார்புடையது என்று சொல்ல முடியாது. அதில் பங்கெடுப் பவர்களில் கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் 10—15 சதவிகிதம் தான் இருப்போம். பெரும்பான்மையான பிரதிநிதிகள் ஒன் றுக்கொன்று அதிகமான வேறுபாடுகளைக் கொண்ட கட்சிகள், கோஷ்டிகளின் பிரதிநிதிகளே. அவை எப்பொழுதுமே இடது சாரிக் கொள்கை உடையவை என்று கூடச் சொல்ல முடி யாது'' என்று கூறினார்.

அக்டோபர் புரட்சி தினக் கொண்டாட்டத்தின் போது நடைபெற்ற இராணுவ அணிவகுப்பையும் இலட்சக்கணக் கான மக்களின் ஊர்வலத்தையும் சக்லத்வாலா சிறப்பாக வர்ணித்தார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த பொழுது இரண்டு நாட்களுக்கு முன்பு வந்திருக்கலாமே, இந்த அற்புத மான காட்சியைப் பார்க்கத் தவறிவிட்டோமே என்று நேரு குடும்பத்தினர் வருத்தமடைந்தார்கள்.

அவர்கள் மாஸ்கோவிலுள்ள கிராண்ட் ஹோட்டல் 207ம் அறையில் தங்கினார்கள். அதன் சன்னல் வழியாக ஸ்வெர்த் லோவ் சதுக்கத்தைப் பார்க்க முடியும். அந்த சதுக்கத்தைச் சுற்றிலுமிருந்த கட்டெளிமையான, உயரமான கட்டிடங்களும் அந்தச் சதுக்கத்தின் மையத்தில் கம்பீரமாகக் காட்சியளித்த போல்ஷாய் நாடக அரங்கும் ஜவகர்லாலைக் கவர்ந்தன.

1927ம் வருடத்தின் நவம்பர் மாதத்தில் மாஸ்கோ ஒரு பெரிய ஐரோப்பிய நகரத்தைப் போலவே தோன்று வதாக ஜவகர்லால் நினைத்தார். ஆனால் அவர் உடனே வேறுபாடுகளையும் கண்டார். கற்கள் பதிக்கப்பட்ட சாலை

களில் அதே மாதிரியான டிராம்களும் பஸ்களும் போய்க் கொண்டிருந்தன. ஆனால் கார்களின் எண்ணிக்கை மிகவும் குறைவே. அவ்வப்பொழுது குதிரைகள் பூட்டப்பட்ட சரக்கு வண்டிகளையும் கோச்வண்டிகளையும் நீண்ட தாடியோடிருந்த வண்டிக்காரர்களையும் பார்த்தார். கடைகளில் அவசியமான சில பொருட்கள் இல்லாதிருப்பதையும் மாஸ்கோவாசிகள் எளிமையாக உடையணிந்திருப்பதையும் அவர் கவனித்தார். ஆனால் சோவியத் தலைநகரத்தில் மக்களுடைய அன்றாட வாழ்க்கையின் இந்த அம்சங்கள்—இதற்கான காரணம் அவருக்கு நன்கு புரிந்தது—அவருடைய மனதில் நிலைத்திருக்கவில்லை. சோவியத் மக்களின் ஆற்றலும் உறுதியும் இலட்சியங்களை அடைவதற்காகத் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் சக்தியும் எங்கும் நிலவிய சமத்துவம், சகோதரத்துவம், நல்லெண்ணமுமே அவர் மனதில் பதிந்தன. அங்கே அடிக்கடி கேள்விப்பட்ட ''தோவாரிஷ்'' என்ற சொல்லின் பொருளைத் தெரிந்து கொண்டார். சோவியத் மக்கள் ஒருவரோடொருவர் பேசுகின்ற பொழுது எத்தகைய பெருமையோடும் கம்பீரத்தோடும் அந்தச் சொல்லை உபயோகிக்கிறார்கள் என்பதைக் கண்டு மெய்சிலிர்த்தார். ''ஒவ்வொருவரும்—அவர் ரயில் நிலையக் கூலியாளாக அல்லது உணவுவிடுதிப் பணியாளாக இருந்தாலும்—'தோவாரிஷ்', தோழரே. அவரை அப்படித்தான் அழைப்பார்கள்... கிராமத்திலிருந்து வருகின்ற விவசாயி அல்லது தொழிற்சாலையிலிருந்து வருகின்ற தொழிலாளி ஜனாதிபதியைச் சந்திக்கும் பொழுது தன்னுடைய வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவரை—அவர் அதிகமான மதிநுட்பமும் திறமையும் உடையவர் என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்—சந்திப்பதைப் போலவே நடந்து கொள்வார்கள். தோவாரிஷ் என்றுதான் அவரை அழைப்பார்கள்.''

மாஸ்கோவுக்கு வந்த சில மணி நேரங்களிலேயே நேரு குடும்பத்தினர் செஞ்சதுக்கத்துக்குச் சென்றார்கள். கிரெம்ளினுக்கு அருகே அமைந்திருக்கும் மாதா கோவிலுக்குள் ஜவகர்லால் சென்றார். அங்கே மத நம்பிக்கை உடைய பலர்—அவர்களில் பெரும்பான்மையோர் முதிர்ந்த வயதுடைய மாதர்கள்—வழிபாடு செய்து கொண்டிருப்பதைக் கண்டார்.

எத்தகைய அலங்காரமும் இல்லாமல் மரக்கட்டைகளால் அமைக்கப்பட்டிருந்த லெனின் கல்லறைக்கு முன்னால் ஆயிரக்

கணக்கான மக்கள் அமைதியாக வரிசையாக நின்று கொண் டிருந்தார்கள். ''ருஷ்யாவின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து... சாதாரண மக்களின் பிரதிநிதிகள், விவசாயிகள், தொழி லாளர்கள், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோர் அதலபாதாளத்திலிருந்து தங்களை வெளியே தூக்கி முழுமை நிறைந்த வாழ்க்கைக்கு வழிகாட்டிய, தங்களுடைய அன்புக் குரிய தோழருக்கு அஞ்சலி செலுத்துவதற்காக அங்கே நின்று கொண்டிருந்தார்கள்.''

சோவியத் யூனியனில் ஒவ்வொருவரும் லெனின் மீது எல்லையற்ற அன்பு வைத்திருக்கிறார்கள்—ஆனால் அது குருட்டுத் தனமான வழிபாட்டுணர்ச்சி அல்ல என்பதை ஜவகர்லால் உணர்ந்தார். தலைவர் லெனின் பெயரை உச்சரித்ததும் அவர் களுடைய முகங்கள் எப்படி மலர்கின்றன, அந்த விழா நாட்களின் போது மாஸ்கோ தெருக்களில் வைக்கப்பட்டிருந்த லெனின் உருவப்படங்களை அவர்கள் எத்தகைய நன்றியுணர்ச்சி யோடும் மரியாதையோடும் பார்க்கிறார்கள் என்பதை அவர் கண்டார்.

''ருஷ்ய மக்கள் தங்களில் ஒருவராக அவரை நேசிக் கின்ற உயர்ந்த கௌரவத்தை அவருக்குக் கொடுத்திருக்கிறார் கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவர் ஒரு சகோதரர், தோழர், உறவினர்'' என்று ஜவகர்லால் நினைத்தார்.

லெனினுடைய ஆளுமையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்னும் ஆர்வம் நெடுங்காலத்துக்கு முன்பே அவ ரிடம் ஏற்பட்டிருந்தது. ருஷ்யப் புரட்சியின் தலைவரைப் பற்றி 1917ம் வருட இறுதியில் அவர் முதன் முதலில் கேள்விப்பட்ட உடனே லெனினைப் பற்றி, அவருடைய தத்துவ மற்றும் செய்முறை நடவடிக்கைகளைப் பற்றி செய்தித் தாள்கள், பத்திரிகைகள் மற்றும் புத்தகங்களில் வெளிவந் திருக்கும் எல்லாவற்றையும் கவனமாகச் சேகரிக்கத் தொடங் கினார். அவர் எமில் லுட்விக் எழுதிய **லெனினுடைய வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம்**, ஆன்டன் கால்கிரென் எழுதிய **போல்ஷிவிக் ருஷ்யா**, பெர்ட்ரான் ரஸ்ஸல் எழுதிய **போல்ஷிவிசத் தத்து வமும் நடைமுறையும்**, ஜான் ரீடு எழுதிய **உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்**, இன்னும் மற்ற புத்தகங்களையும் படித் தார். இப்புத்தகங்கள் எல்லாமே ஒரே தரம் உள்ளவை என்று சொல்ல முடியாது. அவற்றில் ஒரு சில மட்டுமே

சோவியத் ருஷ்யாவைப் பற்றி உண்மையான தகவலைக் கூறின. பெரும்பான்மையான புத்தகங்களின் ஆசிரியர்கள் தங்களுடைய எதிர்ப்பையும் மறைக்கவில்லை. அவர்களில் மிகச் சிறந்தவர்கள் கூட சோவியத் ருஷ்யாவைப் பற்றி மிக ஜாக்கிரதையான எதிர்ப்போடு எழுதினுர்கள், கால்கிரென்னைப் போன்ற சிலர் பகிரங்கமான வெறுப்போடு எழுதினுர்கள். ஆனால் ஜவகர்லால் ''போல்ஷிவிக் அபாயத்தைப்'' பற்றி ஒருபோதும் அச்சமடையவில்லை. ''எதிர்காலத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும்'' சோவியத் யூனியனைப் பற்றித் தன்னுடைய அணுகுமுறையை நிர்ணயம் செய்திருந்தபடி யால், அதன் தலைவரைப் பற்றி ''மாபெரும் சிந்தனையாளர், புரட்சி மேதை'' என்ற கருத்தைக் கொண்டிருந்தபடியால் ருஷ்யாவுக்கு வந்த பொழுது அவருக்கு எத்தகைய ஏமாற்ற மும் ஏற்படவில்லை.

நேரு குடும்பத்தினர் மாஸ்கோவில் மூன்று நாட்கள்தான் தங்கினுர்கள். சோவியத் யூனியனில் மிகக் குறைவான நாட் கள்தான் இருந்தோம், ஆனல் இங்கே ஒரு மாதம் இருந் தாலும் இந்த மாபெரும் நாட்டின் வாழ்க்கையைப் பற்றி மேலெழுந்தவாரியாகக் கூடத் தெரிந்து கொள்ள முடியாது என்று தன் முதல் சகோதரிக்கு எழுதிய கடிதத்தில் ஜவகர் லால் தெரிவித்தார். மாஸ்கோவில் தங்கியிருந்த பொழுது சில பிரச்சினைகளைப் போல்ஷிவிக்குகள் எப்படித் தீர்க்கிறுர் கள் என்று அறிந்து கொள்ள அவர் ஒவ்வொரு மணி நேரத் தையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உபயோகிக்க முயற்சி செய்தார். எதிர்காலத்தில் புதிய இந்தியாவை நிர்மாணிப் பவர்கள் இதே பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்று அவர் கருதினுர்.

பாட்டாளி வர்க்க சர்வாதிகார அரசு எண்ணிக்கையில் மிகவும் அதிகமான விவசாய வர்க்கத்தின் பால் கடைப்பிடிக் கும் கொள்கை என்ன? ஜாரிசத்தின் காலனியாதிக்கப் பாரம் பரியத்திஞல் சிக்கலாக்கப்பட்டிருக்கும் தேசிய இனங்களின் பிரச்சினையை சோவியத் அரசாங்கம் எப்படித் தீர்க்கப் போகி றது? அநேகமாக எல்லோருமே எழுதப்படிக்கத் தெரியா தவர்கள் என்ற பழைய ஆட்சியின் எச்சங்களை—இவையும் முன்சொன்னதைப் போலவே சுமைநிறைந்த பிரச்சினைகளே— போல்ஷிவிக்குகள் எப்படி அகற்றப் போகிறுர்கள்? கலாச்சாரப்

புரட்சியை அவர்கள் எப்படி அமுலாக்கப் போகிருர்கள்? ஆண்களோடு பெண்களுக்கு சம உரிமைகளைக் கொடுக்க அரசு என்ன செய்துள்ளது? இவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதில் அவர் அதிகமான ஆர்வம் கொண்டிருந்தார்.

மாஸ்கோவில் கூட்டுப் பண்ணை விவசாயிகளின் ஓய்வு விடுதிக்குச் சென்ற பொழுது கண்டவை அவருடைய மனதில் மிகவும் ஆழமாகப் பதிந்துவிட்டன. சோவியத் அரசு தனது ஓய்வில்லாத உழைப்பாளிகளான விவசாய ஊழியர்களிடம் எத்தகைய மரியாதையும் பரிவுணர்ச்சியும் கொண்டிருக்கிறது என்பதை அவர் நேரில் கண்டார். அது 350 நபர்கள் தங்கி ஓய்வெடுக்கக் கூடிய பெரிய மாளிகையாகும். அங்கே விவசாயிகள் தங்கி ஓய்வெடுப்பதோடு விவசாயம் சம்பந்தமான பிரச்சினைகளைப் பற்றி நிபுணர்களைக் கலந்து கொண்டு ஆலோசனைகளைப் பெற முடியும். கல்வியறிவில்லாதவர்களுக்கு அங்கே எழுதப் படிக்கக் கற்பிக்கப்பட்டது. அவர்களுக்குப் புத்தகங்கள் வழங்கப்பட்டன. அவை கிராமப் பகுதிகளில் மிகவும் அவசியமாக இருந்தன. அந்த விடுதியிலிருந்த பெரிய அரங்கத்தின் சுவர்களில் விவசாயிகளின் கடும் உழைப்பைக் குறைக்கக் கூடிய இயந்திரங்களும் திட்டங்களும் வரைபடங்களும் கண்காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. இவையனைத்தும் கிராமப் பகுதிகளில் கூட்டுப் பண்ணையின் அவசியத்தை உணர்த்தின.

அவர் நாடு திரும்பிய பிறகு அளித்த முதல் பேட்டியில் மாஸ்கோவிலிருக்கும் கூட்டுப் பண்ணை விவசாயிகளின் ஓய்வு விடுதியைப் பற்றி மிகவும் பாராட்டினுர். அன்று முதல் இந்தியாவில் அத்தகைய அமைப்புக்களை ஏற்படுத்துகின்ற நன்னுளைப் பற்றிக் கனவு காணத் தொடங்கினுர்.

அவர் சோவியத் யூனியனில் ஒரு சில நாட்களே தங்கியிருந்த போதிலும் அங்கே தேசிய இனங்களின் பிரச்சினை வெற்றிகரமாகத் தீர்க்கப்பட்டு வருகிறது என்ற முடிவுக்கு வந்தார். அங்கே தேசியவாதம் அல்லது குறுகிய இனவெறியின் சுவடுகளைக் கூட அவர் பார்க்கவில்லை. புரட்சி எல்லா தேசிய இனங்களையும் சமமாக்கியிருந்தது. தங்களுடைய தேசிய குணும்சங்கள், கலாச்சாரம், மொழி ஆகியவற்றைப் பாதுகாப்பதோடு மட்டுமல்லாமல் வளர்த்துச் செல்வதில் அவர்களுக்கு சம உரிமைகள் கொடுக்கப்பட்டன. மூலச் சிறப்புடைய ருஷ்ய பாலே நடன நிகழ்ச்சியின் போது ருஷ்யர்

களோடு தேசிய உடைகள் அணிந்த தத்தார்களையும் கஜாக்கு களையும் அவர் ஒருங்கே கண்டார். இந்திய மக்களைப் போலவே ஒரு காலத்தில் ஒடுக்கப்பட்டுப் பின்தங்கிய நிலையில் இருந்த மத்திய ஆசியாவைச் சேர்ந்த மக்களினங்களின் முன்னேற்றம் அவருக்கு பிரமிப்பைக் கொடுத்தது. ஆயிரக்கணக்கான உஸ் பெக், துர்க்மென் மற்றும் தாஜிக் பெண்கள் மூடப் பழக்க வழக்கங்களை நிராகரித்து முகத்திரைகளை அகற்றிவிட்டு புதிய வாழ்க்கையை நிர்மாணிப்பதில் ஆண்களோடு சமமாகப் பங் கெடுத்து வருகிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டார். மக்கள் கமிஸாரகங்களின் பிரதிநிதிகள் ஜவகர்லால் நேரு வுடன் நடத்திய உரையாடல்களில் கீழ்த்திசை பிரதேசங் களில் பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் பின்தங்கிய நிலைமையைப் போக்குவதற்கும் தேசியப் பொருளாதார அமைப்பை உருவாக்குவதற்கும் அவற்றினுடைய கலாச்சார நிலையை மேம்படுத்தவும் தங்களுடைய எண்ணங்கள், கருத் துக்கள், திட்டங்கள் ஆகியவற்றைப் பகிர்ந்து கொண்டார் கள். இது அவருக்கு மகிழ்ச்சியளித்தது. அவர் போல்ஷி விக்குகளின் துணிவு நிறைந்த உற்சாகத்தையும் ஊசலாட்ட மில்லாத மன உறுதியையும் மனமுவந்து பாராட்டினார்.

பத்து வருடங்களுக்கு முன்னர் ஒரு சிலருடைய தனி உரிமையாக இருந்த கல்வி வாய்ப்புக்கள் இப்பொழுது எல் லோருக்கும் கிடைப்பதை அங்கே அவர் கண்டார். எழுத் தறிவின்மையை அகற்றுவதும் பள்ளிக்கூட அமைப்பை வளர்ப் பதும் சோஷலிஸ்ட் சமூகத்தை நிர்மாணிப்பதற்கும் புதிய மனிதனைப் படைப்பதற்கும் மிக முக்கியமான வழி என்று போல்ஷிவிக்குகள் கருதுகிறார்கள் என்று கல்வித் துறை மக் கள் கமிஸாரகத்தில் அவரிடம் விளக்கினார்கள்.

சோவியத் பெண்கள் வாழ்கின்ற, வேலை செய்கின்ற முறைகளை ஜவகர்லால் தெரிந்து கொண்டிருந்த காரணத் தால் ''போல்ஷிவிக் ருஷ்யாவில் பெண்கள் நாட்டுடைமை யாக்கப்பட்டு விட்டார்கள்'' என்ற பூர்ஷ்வா அவதூறை ஆத்திரத்தோடு மறுத்தார். சோவியத் பெண் ''சுதந்திர மானவள்... அவள் ஆண்களுக்குப் பின்பாட்டுப்பாட மறுத்து விட்டாள்'' என்று அவர் எழுதினார். சோவியத் யூனியனில் நாடு முழுவதுமே சர்வதேசப் பெண்கள் தினத்தைக் கொண் டாடுகிறது என்றும் அவர் எழுதினார்.

நவம்பர் 10ந் தேதியன்று யூனியன் மாளிகையிலுள்ள பிரபலமான பெருந் தூண்கள் நிறைந்த அரங்கத்தில் சோவியத் யூனியனுடைய நண்பர்களின் உலகக் காங்கிரசின் தொடக்க விழாவில் மோதிலால் நேருவும் ஜவகர்லால் நேருவும் விருந்தினர்களாகக் கலந்து கொண்டார்கள். ஜவகர்லால் தனக்கு அறிமுகமான பலரை அங்கே சந்தித்தார். சுறுசுறுப்பு மிக்க ஸுன் சின்லின், அன்ரி பர்பியூஸ், மெக்ஸிகோ நாட்டு ஓவியரான டியேகோ ரிவெரா, கம்யூனிஸ்ட் அகிலத்தின் பிரதிநிதிகளான கிளாரா ஸெத்கின் (ஜெர்மனி), ஸென் கட்டயாமா (ஜப்பான்), பால் வையான்-குடூரியே (பிரான்ஸ்), வில்லியம் கலாஹெர் (பிரிட்டன்) ஆகியோர் அவர் சந்தித்த நண்பர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். எங்கும் இருக்கும் சட்டோபாத்யாயாவின் மலர்ந்த முகம் அங்கே கூட்டத்தினருக்கு நடுவில் அடிக்கடி பிரகாசமாகத் தென்பட்டது. என். கே. குரூப்ஸ்கயா, யெ. டி. ஸ்டாஸொவா, எஸ். ஏ. லஸோவ்ஸ்கி, ஏ. வி. லுனச்சார்ஸ்கி, மற்ற முன்னணியிலிருந்த சோவியத் தலைவர்கள், பொது வாழ்வுப் பிரமுகர்கள் ஆகியோரை மொழிபெயர்ப்பாளர் அவர்களுக்கு அறிமுகம் செய்வித்தார்.

மிகவும் அதிகமான வேறுபாடுகளைக் கொண்ட தேசிய இனங்களைச் சேர்ந்த, வெவ்வேறு வயதும் தொழில்துறை ஈடுபாடும் கருத்துக்களும் நம்பிக்கைகளும் கொண்டவர்கள் காங்கிரசில் நிகழ்த்திய உரைகளை ஜவகர்லால் மிகவும் அக்கறையோடு கேட்டார். மறுபடியும் உலக யுத்தம் ஏற்பட அனுமதிக்கக் கூடாது என்ற தீவிரமான சமாதான வேட்கையையும் அமைதியான நிலைமைகளில் ஒரு புதிய சமூக அமைப்பை உருவாக்குவதற்கு சோவியத் மக்களுக்கு உதவி செய்ய வேண்டுமென்ற மெய்யான உறுதியையும் அவர்கள் எடுத்துக் கூறினார்கள்.

மாஸ்கோவை விட்டுப் புறப்படுவதற்குச் சில மணி நேரங்களுக்கு முன்பாக மோதிலால் நேருவையும் ஜவகர்லால் நேருவையும் காங்கிரசில் பங்கெடுத்த மற்ற பிரதிநிதிகளையும் சோவியத் யூனியன் மத்திய நிர்வாகக் கமிட்டியின் தலைவரான எம். ஐ. கலீனினும் வெளிநாட்டிலாகாவின் மக்கள் கமிஸாரான ஜி. வி. சிச்சேரினும் வரவேற்றுக் கலந்துரையாடினார்கள். சோவியத் தலைவர்களின் ஆர்ப்பாட்டமில்லாத ஜன

நாயகப் பாணியும் நிதானமான செயல்முறையும் ஜவகர்லாலுக்குப் பிடித்திருந்தன. சோவியத் அரசு சமாதான நோக்கங்களைக் கொண்டிருக்கிறது, எல்லா நாடுகளோடும் நட்புறவுகளை வளர்க்கத் தயாராக இருக்கிறது, தேசிய விடுதலை இயக்கங்களுக்கு ஆதரவு கொடுக்க விரும்புகிறது என்ற முழு நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. இது அவருக்கு ஏற்பட்ட முக்கியமான அனுபவம்.

நவம்பர் 11ந் தேதியன்று நேரு குடும்பத்தினர் பெர்லினுக்குப் புறப்பட்டனர். மாஸ்கோவில் தான் கண்டவற்றையும் கேட்டவற்றையும் பிரயாணத்தின் போதே ஜவகர்லால் எழுதத் தொடங்கினர்.

சில மாதங்களுக்குப் பிறகு சென்னையிலிருந்து வெளியிடப்படுகின்ற *The Hindu* செய்தித்தாள் சோவியத் பயணம் பற்றிய நேருவின் கட்டுரைகளை வெளியிட்டது. இந்தக் கட்டுரைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட நேருவின் முதல் புத்தகம் 1928 டிசம்பரில் அலகபாத்தில் வெளியாயிற்று. **சோவியத் ருஷ்யா** என்ற தலைப்புக் கொண்ட அந்தப் புத்தகத்தில் லெனின் கிரெம்ளினில் உள்ள தன் அறையில் **பிராவ்தா** பத்திரிகையைப் படித்துக் கொண்டிருக்கும் புகைப்படமும் சேர்க்கப்பட்டிருந்தது.

சோவியத் யூனியன் பயணத்தைப் பற்றி அவரால் எழுதாமலிருக்க முடியவில்லை. மாஸ்கோவில் மூன்று நாட்கள் தங்கியிருந்தது அவருடைய அரசியல் பார்வையின் வளர்ச்சிக்கு உதவியது. இப்பொழுது ''உலக விவகாரங்களைப் பற்றி முன்பிருந்ததைக் காட்டிலும் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிகிறது, எப்பொழுதுமே மாறிக் கொண்டேயிருக்கும் இன்றைய உலகத்தை நன்கு அறிய முடிகிறது'' என்று அவர் எழுதினர். அவருடைய அரசியல் எதிரிகள் அவர் மார்க்சியவாதியாக அல்லது கம்யூனிஸ்டாக மாறிவிட்டார் என்று பல சந்தர்ப்பங்களில் குற்றஞ் சாட்டியதுண்டு. அது உண்மையல்ல. அவர் அப்படி மாறவில்லை. காந்தியைப் பின்பற்றுபவர், அஹிம்சை வழியில் சமூகத்தை மாற்ற வேண்டும் என்ற காந்தியின் கருத்தை ஏற்றுக் கொண்டவர் என்ற முறையில் சோவியத் வாழ்க்கையில் அவர் புரிந்து கொள்ள முடியாத அம்சங்கள் சில இருந்தன. அந்த அம்சங்களை அவர் விமர்சனம் செய்தார். எனினும் முதலில் **சோவியத் ருஷ்யா** என்ற

புத்தகத்திலும் பிறகு சுயசரிதை என்ற புத்தகத்திலும் சோஷலிசம் மற்றும் கம்யூனிசத்தின் பால் தன்னுடைய அனுதாபத்தை அவர் பகிரங்கமாக எடுத்துக் கூறினர்.

இந்தியாவின் வட திசையிலிருக்கும் அண்டை நாடு இந்தியர்களுக்கு எதிரியல்ல, நண்பனே என்று சோவியத் ருஷ்யாவைப் பற்றிய தனது புத்தகத்தின் மூலம் நேரு எடுத்துக் கூற முயற்சி செய்தார். ''சமீப காலத்திய வரலாற்றை ஆராய்ந்திருக்கும் ஒவ்வொருவருக்கும் ருஷ்யா யுத்தத்தை விரும்பவில்லை என்பது தெளிவாகப் புரிந்திருக்கும்'' என்று அவர் எழுதினர். ''இந்தியாவுக்கு எதிராக ருஷ்யாவின் ஆக்கிரமிப்புத் திட்டங்கள்'' என்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் பொய்யான ஜோடனைகளை எழுதினர்கள். இவர்கள் தம்முடைய கொள்ளைக்காரத் தனமான, மோசடியான காலனியாதிக்கக் கொள்கையை நியாயப்படுத்துவதற்காகவே இப்படிச் செய்கிருர்கள் என்பதை நன்ருகப் புரிந்து கொண்ட நேரு ''இந்தியாவைப் பிடிக்க எத்தகைய பொருளாதார நோக்கமும்'' ருஷ்யாவுக்கு ஒரு போதும் இருந்ததில்லை என்று எழுதினர். தேசியப் பொருளாதாரத்தை நிர்மாணிப்பதிலும் கலாச்சாரத்தை வளர்ப்பதிலும் சோவியத் ருஷ்யாவின் அனுபவம் இந்தியாவுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று அவர் கருதினர். சுதந்திரமடைந்த இந்தியாவுக்கு சோவியத் யூனியன் தரப்போகின்ற நட்புறவான, தன்னலமற்ற உதவியை அவர் முன்னூகித்தார். ''ருஷ்யா இந்தப் பிரச்சினைகளுக்குத் திருப்திகரமான தீர்வுகளைக் கண்டுபிடித்தால்... இந்தியாவில் நம்முடைய பணி மேலும் சுலபமடைந்து விடும்'' என்று தொலைநோக்கோடு கூறினர்.

# அத்தியாயம் ஏழு

ஜவகர்லால் ஐரோப்பாவிலிருந்து உற்சாகத்தோடு திரும்பினர். இந்தியாவின் அரசியல் வாழ்க்கை என்ற கொந்தளிக்கும் நீரோட்டத்தில் குதிக்கத் தயாராக இருந்தார். ஐரோப்பாவுக்குப் போவதற்கு முன்பு அவரிடம் ஏற்பட்டிருந்த மனக் குழப்பம் முற்றிலும் மறைந்துவிட்டது.

மாபெரும் சம்பவங்கள் நடக்கப் போகின்றன என்ற எதிர்பார்ப்பில் இந்திய நாடு வாழ்ந்து கொண்டிருந்தது. தாய்நாட்டு மக்களை அதற்குத் தயாரிப்பது தன்னுடைய கடமை என்று நேரு கருதினர். முதலாவதாக, தேசிய விடுதலை இயக்கத்தின் முதன்மையான நோக்கத்தைப் பற்றி மக்களிடையே இருக்கும் ஐயங்களை அகற்ற வேண்டும், எதிர் காலத்தில் இந்தியாவின் சுதந்திரத்தைக் குறைக்கின்ற வரையறுப்புகளை அனுமதிக்கக் கூடாது என்று நினைத்தார்.

சுதந்திர இயக்கம் மக்களின் சமூக, பொருளாதார உரிமைகளை உறுதிப்படுத்தி உண்மையான ஜனநாயக சுதந்திரங்களைக் கொடுக்க வேண்டும். ஆனல் இந்தப் பிரச்சினையில் இன்னும் காங்கிரஸ் தலைவர்களுக்கிடையே ஒற்றுமை கிடையாது. காங்கிரஸ் ஸ்தாபனம் அடிப்படையில் சொத்துடைமை வர்க்கங்களின் தேசியவாத இலட்சியங்களைத்தான் எடுத்துக் கூறியது என்று நேரு வேதனையோடு கூறினர். சில சமயங்களில் தேசிய காங்கிரசின் கொள்கை இனி நமக்கு நல்ல வாழ்க்கை ஏற்படும் என்று கனவு காண்கின்ற அப்பாவியான விவசாயியை ஏமாற்றுவதைப் போல் இருந்தது. நிலச் சீர் திருத்தத்தின் அவசியத்தை, அதுவும் ஒரு விவசாய நாட்டில், காங்கிரஸ் உணரவில்லை.

விடுதலை இயக்கத்தின் தலைவர்களாகத் தங்களைக் காட்டிக்

கொண்ட சில காங்கிரஸ்காரர்கள் சுதேச மன்னர்களின் பெயர்களை உச்சரித்தவுடன் அடிமையைப் போலப் பணிவதையும் சாதாரண மக்கள் முட்டாள்கள், அகம்பாவம் உடையவர்கள், எப்பொழுதுமே வன்முறையில் ஈடுபடக் கூடியவர்கள் என்று அருவருப்போடு பேசுவதையும் கேட்கும் பொழுது அவர்களுடைய அரசியல் போலித் தனத்தைக் கண்டு ஜவகர்லாலின் உள்ளத்தில் ஆத்திரம் குமுறியெழும். அத்தகைய நேரங்களில் அவர் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் தான் வகித்த எல்லாப் பதவிகளையும் தூக்கியெறிந்துவிட்டுப் ''பொது மக்கள்'' என்று தெளிவில்லாத வகையில் குறிப்பிடப்படுபவர்களை நெருங்கும் வழிக்கு தானுகவே பாடுபட்டால் என்ன என்று நினைப்பார்.

1927இல் இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் ஸ்தாபன ரீதியான ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. சென்னையில் உலோகத் தொழில்களில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களும் பம்பாயில் பஞ்சாலைத் தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்தார்கள். இரயில்வேத் தொழிலாளர்களின் பொது வேலை நிறுத்தமும் நடைபெற்றது. தொழிற்சங்கங்களில் இடதுசாரிப் புரட்சிகர அணி ஏற்பட்டிருந்தது. அந்த அணியில் கம்யூனிஸ்டுகள் முக்கியமான பாத்திரத்தை வகித்தார்கள். விவசாயிகளிடமும் ஒற்றுமை வேகம் ஏற்பட்டுவிட்டதை எடுத்துக் காட்டுகின்ற வகையில் தொடக்கநிலை விவசாய சங்கங்களும் தோன்றின. கல்விநிலையங்களில் படித்துக் கொண்டிருந்த இளைஞர்கள் முதிர்ந்த காங்கிரஸ்காரர்களின் அரைகுறையான சீர்திருத்தவாதத்தைப் பற்றி ஏமாற்றமடைந்தனர். அவர்களிடம் பரபரப்பான நிலை ஏற்பட்டிருந்தது.

இந்தியாவில் 1919ல் நிறுவப்பட்ட நிர்வாக முறையைப் பற்றி ஆராய்ந்து நாட்டில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சட்டமன்றங்களின் அதிகாரத்தை விரிவுபடுத்தலாமா அல்லது கூடாதா என்று முடிவு செய்வதற்காக பிரிட்டிஷ் அரசாங்கம் 1927 நவம்பரில் ஜான் சைமன், எம். பி. தலைமையில் ஒரு கமிஷனை நியமித்தது. அந்தக் கமிஷனில் கன்சர்வேடிவ், லிபரல் மற்றும் லேபர் கட்சிகளைச் சேர்ந்த ஏழு உறுப்பினர்கள் இருந்தார்கள், ஆனால் இந்தியர்கள் ஒருவருமில்லை. இந்திய மக்களுடைய நிலைமையைப் பற்றிக் காலனியாதிக்கவாதிகள் அலட்சியமாக இருக்கவில்லை என்ற தோற்றத்தை ஏற்படுத்துவதற்காகவும்

அதன் மூலம் பெரும் அளவில் ஏற்பட்டுவரும் பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்ச்சியைப் பலவீனப்படுத்துவதற்காகவும் இக் கமிஷனை அமைத்தார்கள்.

...1927 டிசம்பரில் ஜவகர்லால் தன் மனைவி, மகளோடு கடல் வழியாக சென்னைக்கு வந்து சேர்ந்தார். காலைக் கதிரவனின் இளங்கதிர்கள் அங்கேயிருந்த எண்ணற்ற ஆலயங் களின் மீது பிரகாசித்துக் கொண்டிருந்தன. இந்து மத வைதீகத்தின் அரணாகத் தென்னிந்தியா இருந்து வருகிறது. வெளிநாடுகளைச் சேர்ந்த கொள்ளைக்காரர்களும் படைகளும் வட இந்தியாவின் மீது எண்ணற்ற தடவைகளில் படையெடுத் திருக்கிறார்கள். ஆகவே அப்பகுதிகளைச் சேர்ந்த மக்கள் வெற்றி யாளர்களால் நெருக்கப்பட்டுத் தென் பகுதியை நோக்கிச் சென்றார்கள். அவர்கள் இந்திய நாகரிகத்தின் வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே ஏற்பட்டிருக்கும் ஆன்மிக பாரம்பரியத் தைத் தம்மோடு எடுத்துச் சென்றார்கள்.

கிழக்கிந்தியக் கம்பெனி 17ம் நூற்றாண்டின் நடுவிலேயே தென்னிந்தியாவில் வர்த்தக நிலையத்தை ஏற்படுத்துவதற்கு முகலாயச் சக்கரவர்த்தியின் அனுமதியைப் பெற்றிருந்தது. அவர்கள் நிறுவிய புனித ஜார்ஜ் கோட்டையைச் சுற்றி சென்னை என்ற சுதேசி நகரம் வளர்ச்சியடைந்தது. புனித ஜார்ஜ் கோட்டை மதிற்சுவர்கள், சதுக்கங்கள், தெருக்கள், சந்துகளோடு நகரத்துக்குள் அமைந்திருக்கும் நகரமாக இருந் தது. அங்கேயிருந்த ''மேல் மட்டத்தினர் சாலையில்'' ஆங்கில அதிகாரிகளும் அவர்களுடைய மனைவிமார்களும் மாலை நேரங் களில் உலாவினார்கள். அந்தக் கோட்டையில் இன்றளவும் கூட அநேகமாக எத்தகைய மாற்றமும் ஏற்படவில்லை. பெருந் தூண்களைக் கொண்ட கட்டிடங்கள், மதிற்சுவர்களில் இருக் கும் பீரங்கிகள், புனித மேரி மாதாகோவில் ஆகியவற்றை இன்றும் காணலாம்.

''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நிறுவியவர்'' என்று வர்ணிக் கப்பட்ட இராபர்ட் கிளைவ் 1743ம் வருடத்தில் ஒரு சாதா ரண எழுத்தராக இந்தக் கோட்டைக்கு வந்தார். அவருடைய வருட ஊதியம் பதினைந்து பவுன் மட்டுமே. அவரும் இந்தப் புனித மேரி மாதாகோவிலில் வழிபாடு செய்வார். சில வருடங்களிலேயே அவர் ஜெனரலாக, பிரபுவாக (பிளாஸி பிரபு) உயர்ந்து விட்டார். இந்தியர்கள் தங்களுடைய

பாதாள அறைகளிலிருந்த தங்கத்தையும் மாணிக்கங்களையும் எனக்கு முன்னுல் குவியலாகக் கொட்ட, அந்தக் குவியல்களுக்கிடையே நான் உலாவுவதுண்டு என்று இவர் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஆணவமாகக் கூறிஞர். இவர் தனக்காகவும் கம்பெனிக்காகவும் ஏராளமாகக் கொள்ளையடித்து உலகத்தின் மிகப் பெரிய செல்வந்தர்களில் ஒருவராஞர். பல பண்ணைகளுக்கும் எண்ணற்ற மாணிக்கங்களுக்கும் உடைமையாளரான ஜெனரல் கிளைவ் தன்னிடம் பிச்சை கேட்ட ஒருவனைப் பார்த்து, ''நண்பனே! உனக்குக் கொடுப்பதற்குச் சிறிய மாணிக்கங்கள் என்னிடம் இந்த சமயத்தில் இல்லையே!'' என்று கூறிஞராம்.

காலனிகளைப் பிடித்துக் கொண்டிருந்த சகாப்தம் படைத்தளித்த கேடான மேதை என்று கிளைவைக் கூறலாம். அவர் துரோகம், சூழ்ச்சி, மோசடி ஆகியவற்றில் வல்லவர். கிளைவின் இராணுவத் திறமையும் அரசியல் மதிநுட்பமும் அவரை இந்தியாவிலேயே மிகவும் பலம் பொருந்திய மனிதராக மாற்றியது என்று ஆங்கில வரலாற்ருசிரியர்கள் கூறுவது உண்மையல்ல. அவருடைய இராணுவம் மிகவும் குறைவான படைவீரர்களைக் கொண்டிருந்தது. அவர்களில் பெரும்பான்மையானவர்கள் காலிகள், போக்கிரிகள், சமூகக் கழிசடைகள், மாபெரும் முகலாயர்களின் வழிவந்த நிலப்பிரபுத்துவ அரசர்கள் தமக்குள் இடைவிடாது சச்சரவு செய்து கொண்டிருந்தார்கள். கிளைவ் தந்திரத்தாலும் வஞ்சகத்தாலும் அவர்களை முறியடித்தார். இந்தச் சண்டைகளில் மக்களுக்கு எத்தகைய பங்குமில்லை. முடிவற்ற ஆட்சி மாற்றங்கள், பித்தலாட்டங்கள், பங்கு போடுதல், குருதி சிந்தும் சண்டைகள் ஆகியவற்றில் அவர்களுக்கு அக்கறையிருக்கவில்லை. அவர்கள் வழக்கம் போல நிலத்தை உழுது பயிரிட்டார்கள், கைத்தொழில்களில் ஈடுபட்டார்கள். அவர்கள் நாட்டின் செல்வத்தைப் படைத்தார்கள், பாதுகாத்தார்கள், பெருக்கிஞர்கள். அவர்களுடைய இதயங்களில் தங்களை அடிமைப்படுத்திய சுதேசி மற்றும் அந்நியச் சுரண்டல்காரர்களுக்கு எதிரான கோபாவேசம் மெதுவாகத் திரண்டு கொண்டிருந்தது.

இந்தியாவில் பிரிட்டிஷ் பொருளாதார விஸ்தரிப்பைப் பற்றி நேரு பின்வருமாறு எழுதிஞர்: ''அது' பகற் கொள்ளையே. அவர்கள் 'பண மரத்தை' ஆட்டிஞர்கள். பயங்கர

மான பஞ்சங்கள் வங்காளத்தை அழிக்கும் வரை அந்த மரத்தைத் திரும்பத்திரும்ப ஆட்டினார்கள்.'' இந்தியாவை ஆட்சி செய்த பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் முதல் தலைமுறைகளின் குணம்சம் கைக்கூலி வாங்குதலும் பேராசையும் காட்டுமிராண்டித்தனமுமே. கொள்ளையடிப்பதைக் குறிக்கின்ற ''லூட்'' (loot) என்ற சொல் இந்தி மொழியிலிருந்து ஆங்கிலத்துக்குக் கிடைத்திருப்பது ஆச்சரியப்படக் கூடியதல்ல.

இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்கு வந்து கொண்டிருந்த செல்வம் அங்கே தொழிற்துறை புரட்சியின் முன்னேற்றத்தைச் சுலபமாக்கியது. இந்தியாவுடன் ''வர்த்தகம்'' செய்வதன் மூலம் பிரிட்டிஷ்காரர்களுக்குக் கிடைத்த அபரிமிதமான லாபத்தைப் போல வேறு உதாரணத்தை உலகப் பொருளாதார உறவுகளின் வரலாற்றிலேயே பார்க்க முடியாது. பிரிட்டிஷ் முதலாளி வர்க்கம் காரணமில்லாமல் கிளைவைப் போற்றவில்லை. பிரிட்டன் ''உலகத்தின் தொழிற்சாலையாக'' மாறுவதற்கு அவர் உதவி செய்தார். லண்டனில் இந்தியா ஆபீசுக்கு எதிரில் கிளைவுக்கு நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டது. அது பிரிட்டிஷ் காலனியாதிக்கத்துக்கு நிறுவப்பட்ட அவமானச் சின்னம்...

ஜவகர்லால் தாய்நாட்டு மண்ணை மிதித்த பொழுது காங்கிரசின் வருடாந்தர மாநாடு சென்னையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதன் பணிகளில் நேரு உடனடியாக ஈடுபட்டார். இந்தியாவுக்கு முழு சுதந்திரத்தைக் கோருகின்ற தீர்மானத்தைப் பிரதிநிதிகளின் விவாதத்துக்கு முன்மொழிந்தார். அத்தீர்மானம் அநேகமாக ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. இதற்கு முன்பு டொமினியன் அந்தஸ்தை ஆதரித்த அன்னி பெஸன்ட் அம்மையார் கூட அத்தீர்மானத்துக்கு ஆதரவாக வாக்களித்தார்.

மிதவாதிகள் அத்தீர்மானத்தின் கருவை உடனடியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஏதோ அலங்காரமான ஐரோப்பியச் சொற்றொடர்களை உபயோகித்துத் தயாரிக்கப்பட்டிருக்கும் ''சம்பிரதாயமான ஆவணம்'' என்று அதைப் பற்றி நினைத்தபடியால் நேருவின் சுறுசுறுப்பான வற்புறுத்தலுக்கு இணங்கினார்கள். எனினும் இந்தத் தீர்மானம் மிகத் தீவிரமானது என்பதை சீக்கிரத்திலேயே புரிந்து கொண்டு பிரிட்டிஷ் சாம்

ராஜ்யத்தின் கட்டுக் கோப்புக்குள் இந்தியாவுக்கு சுயநிர் வாகம் பெறுதல் என்பதைப் பற்றி மறுபடியும் பேசத் தொடங்கினுர்கள். அந்நிய அரசருக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளே விசுவாசத்தோடு நிறைவேற்றுவது— அந்த அரசர் ''கீழ்' வர்க்கத்தினர்'' மீது தன்னுடைய அதிகாரத்தையும் லாபத்தையும் இவர்களோடு பகிர்ந்து கொள்வார்—என்ற அளவுக்கு மட்டுமே இவர்களால் சிந்தனே செய்ய முடியும்.

மிதவாதிகள் சைமன் கமிஷனே பகிஷ்கரிப்பது, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இந்தியா இருப்பதற்கு வழி செய்யும் வகையில் அரசியலமைப்புச் சட்ட நகலே தயாரிப் பதற்குப் பல கட்சிகளின் பிரதிநிதிகளடங்கிய மாநாட்டை நடத்துவது என்ற ஆலோசனேகளேக் கூறி பிரதிநிதிகளின் கவனத்தைத் திருப்புவதில் வெற்றியடைந்தார்கள். சுதந்தி ரத்தைப் பற்றிய தீர்மானம் ரத்துச் செய்யப்படவில்லே என்ரு லும் அது ஒன்றுமில்லாதபடிச் செய்யப்பட்டது.

சென்னே மாநாட்டில் ஜவகர்லால் மறுபடியும் காங் கிரசின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய தீர்மானங்களே மாநாடு ஏற்றுக் கொண்டிருப் பதால் அவற்றை அமுலாக்க உதவும் என்ற நம்பிக்கையில் அவர் பதவியை ஒத்துக் கொண்டார். காங்கிரசில் ஊசலாட் டங்கள் அதிகமாக இருந்தாலும் நாட்டில் அதிகமான ஸ்தாபன பலமும் செல்வாக்கும் கொண்ட அரசியல் சக்தி அது ஒன்றே என்பதையும் காங்கிரசின் தீவிர நடவடிக் கையிலிருந்து அவர் விலகினுல் வலதுசாரி அணியே பலப்படும் என்பதையும் அவர் புரிந்து கொண்டிருந்தார். ஜவகர்லால் தன்னுடைய அரசியல் எதிரிகளோடு கொண்டிருந்த உறவு களில் பலத்தைப் பெருக்கிக் கொள்வதற்கும் எதிர்காலத் தாக்குதலுக்குப் பொருத்தமான தருணத்தைத் தேர்ந்தெடுப் பதற்காகவும் தன் அடிப்படைக் கோட்பாடுகளேக் கைவிடாது இரண்டாம் நிலேயைக் கொண்டிருக்கும் விஷயங்களேத் தியாகம் செய்தார். அவருடைய அரசியல் வெளிப் பார்வைக்கு மாறுபட்டிருக்கும் கூறுகளே ஒத்திசைவான முறை யில் இணேத்துக் கொண்டது. நிர்ணயிக்கப்பட்ட இலக்கை அடையக் கூடிய வளேயா மன உறுதி மற்றும் சமரசம் செய்து கொள்ளக் கூடிய திறமை, வன்மை மற்றும் மென்மை,

எளிமை மற்றும் நுண்ணயம், அதிகம் பேசாமை மற்றும் திறந்த மனம் ஆகியவை அவருடைய ஆளுமையில் கலந்திருந்த மாறு பட்ட கூறுகளாகும். அவர் தன்னுடைய தவறுகளேயும் பல வீனங்களேயும் தயக்கமின்றி ஒத்துக்கொள்வார். தன்னுடைய எதிரிகளின் வலிமையான அம்சங்களே யதார்த்த ரீதியில் மதிப்பிட்டு அவர்களேப் பகுதியளவுக்கு நிராயுத பாணியாக்கி விடுவார்.

சைமன் கமிஷனே பகிஷ்கரிப்பது, எதிர்கால அரசியல மைப்புச் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளே நிர்ண யிப்பதற்காக பல கட்சிகளின் பிரதிநிதிகளும் அடங்கிய மாநாட்டைக் கூட்டுதல் என்ற இரண்டு அரசியல் நடவடிக் கைகளில் ஈடுபடுவதென்று காங்கிரஸ் முடிவு செய்தது. காங் கிரசின் பொதுச் செயலாளர் என்ற முறையில் ஜவகர்லால் இரண்டு இயக்கங்களிலும் பங்கெடுத்தார். எனினும் ஆட்சியதி காரத்தை வென்றெடுப்பது அடிப்படைக் கடமையாக இருக் கும் பொழுது நுணுக்கம் நிறைந்த ''காகித அரசியலமைப் புக்களேத்'' தயாரிப்பது அர்த்தமற்ற வேலே என்று கருதினர்.

அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படைகளேக் கொண்ட ஆவணத்தைத் தயாரிப்பதற்கென்று மோதிலால் நேருவின் தலேமையில் ஒரு கூட்டுக் கமிட்டி நியமிக்கப்பட்டது. இந்தியா ஒரு ஜனநாயகக் குடியரசு என்று எதிர்கால அரசியலமைப்புச் சட்டம் அறிவிக்க வேண்டுமென்று ஜவகர்லால் முன்மொழிந் தார். அந்தக் கமிட்டியில் மிதவாதிகள் பெரும்பான்மை யினராக இருந்தார்கள். எனவே இந்தப் பிரேரேபணேயைப் பற்றி யாரும் அக்கறை காட்டாதது இயற்கையே. அது அவருடைய தகப்பனுருக்கு ஆத்திரமூட்டியது. அவர் இன்னும் டொமினியன் அந்தஸ்தை ஆதரித்தது ஜவகர்லாலுக்கு ஏமாற் றத்தைக் கொடுத்தது.

அனேத்துக் கட்சியினர் மாநாடு லக்னேவில் கூடியது. நகல் அறிக்கையைப் பற்றிய விவாதத்தில் ஜவகர்லாலும் அவருடைய ஆதரவாளர்களும் சுதந்திரத்தைப் பற்றிய பிரச் சினேயில் காங்கிரஸ் எந்த முடிவும் எடுக்காமல் விட்டுவிட லாம், அந்தப் பிரச்சினேயில் பிரதிநிதிகளுக்குக் கருத்துச் சுதந் திரமளிக்க வேண்டும் என்று வாதாடினர்கள். இதற்கு முன்னர் கூறிவந்ததைப் போல காங்கிரசின் அடிப்படை நோக்கம் சுதந்திரம் என்று கூறுவதோடு நிறுத்திவிடலாம்;

அதிகமான அளவுக்கு மிதவாதக் கருத்துடையவர்கள் டொமினியன் அந்தஸ்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும் என்றார்கள்.

மோதிலால் நேரு சலுகையளிப்பதை விரும்பவில்லை. எனவே சுதந்திரமே எங்களுடைய இலட்சியம், அதற்குக் குறைவான எந்தக் கோரிக்கையையும் நாங்கள் ஆதரிக்க முடியாது என்று ஜவகர்லாலும் அவருடைய ஆதரவாளர்களும் அறிவித்தார்கள். மேலும் ''மாபெரும் அரை நிலப்பிரபுத்துவப் பண்ணைகளை வைத்திருப்பவர்களின் சொத்துரிமைகளை அரசியலமைப்புச் சட்டத்தின் மாற்றப்பட முடியாத அடிப்படைகளில் ஒன்றாக வரையறுப்பது ஒரு குற்றமாக எனக்குத் தோன்றுகிறது'' என்றார். காங்கிரஸ் தலைமை மக்களில் மிகவும் முற்போக்கான பகுதியினருடைய ஆதரவைப் பெற விரும்பவில்லை, அவர்கள் உள்நாட்டு நிலப்பிரபுக்களோடு ஒன்று சேருவதற்கு ஆதரவாக இருக்கிறார்கள் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. இத்தகைய சூழ்நிலையில் காங்கிரசின் பொதுச் செயலாளராக நீடிப்பது ஜவகர்லாலுக்குக் கடினமாக இருந்தபடியால் அவர் பதவி விலகல் கடிதத்தைச் சமர்ப்பித்தார். காங்கிரசுக்குள் இருக்கும் நிலைமையை மாற்ற முடியும் என்ற எல்லா நம்பிக்கையையும் அவர் இழந்து விட்டார். எனவே சுபாஷ் சந்திர போசுடன் சேர்ந்து இந்திய சுதந்திரக் கழகம் என்ற பெயரில் புதிய அரசியல் கட்சியைத் தொடங்கினார்.

ஆனால் காங்கிரஸ் தலைமை அவருடைய பதவி விலகலை அங்கீகரிக்க மறுத்தது. அவரும் போசும் காங்கிரசின் லட்சியங்களோடு முரண்படாத வரை இந்திய சுதந்திரக் கழக நடவடிக்கைகளில் ஈடுபடலாம் என்று கருத்துத் தெரிவித்தது.

இந்திய சுதந்திரக் கழகத்தின் இலட்சியங்கள் காங்கிரசின் சென்னை மாநாட்டு முடிவுகளுக்கு முரணானவை அல்ல என்று நேரு கருதினார். எனவே அவருடைய மனச்சாட்சி தெளிவடைந்தது. காங்கிரசின் பொதுச் செயலாளராக நீடிப்பதற்கு அவர் இணங்கினார்.

''பதவி விலகலை வாபஸ் பெறும்படி என்னிடம் மன மாற்றத்தை ஏற்படுத்துவது எவ்வளவு சுலபமான காரியமாக இருந்தது என்பது ஆச்சரியமே. பல சந்தர்ப்பங்களில் இப்படி நடைபெற்றது. இரு தரப்பில் யாருமே முறிவை ஏற்படுத்த

விரும்பாததால், அதைத் தவிர்ப்பதற்கு ஏதாவதொரு சாக்கு போதுமானதாக இருந்தது'' என்று அவர் பிற்காலத்தில் நினைவு கூர்ந்தார்.

நேரு காங்கிரசின் அணிகளில் இருந்த போதிலும் இந்திய சுதந்திரக் கழகப் பணிகளில் தீவிரமாக கவனம் செலுத்தினார். ''இந்தியா முழுவதிலும் வலிமையான சுதந்திரக் கழக ஸ்தாபனத்தைக் கட்ட வேண்டும், சுதந்திரத்துக்கும் சோஷலிசத்துக்கும் ஆதரவாகப் பிரச்சாரம் செய்வதற்கு அதை உபயோகிக்க வேண்டும்.''

சுதந்திரக் கழகத்துக்காக அவர் தயாரித்த நகல் வேலைத் திட்டத்திலிருந்து இந்தக் கட்டத்தில் நேருவின் அரசியல் கருத்துக்களை நாம் புரிந்து கொள்ள முடியும். சுதந்திரக் கழகம் ஒரு சமூக-ஜனநாயக அரசை நிறுவுவதற்கும் உற்பத்தி சாதனங்களில் மற்றும் விநியோகத்தில் அரசு நிர்வாகத்தை ஏற்படுத்துவதற்கும் போராடும் என்று அவர் குறிப்பிட்டிருந்தார்.

இந்திய சுதந்திரக் கழகம் முன்வைத்த கோஷங்களுக்கு இந்தியாவின் இளைஞர்களிடம் ஏற்பட்ட உற்சாகமான வரவேற்புக்கு ஜவகர்லாலின் தீவிரமான பிரச்சாரமே முக்கியமான காரணம் என்று அவருடைய தகப்பனார் எழுதினார்.

இந்தச் சமயத்தில் சைமன் கமிஷன் இந்தியாவில் எல்லா இடங்களுக்கும் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்தது. அவர்கள் போகுமிடங்களில் எல்லாம் ஏராளமான மக்கள் கறுப்புக் கொடிகளோடு "Simon, go back!" (''சைமனே! திரும்பிப் போ!'') என்ற கோஷத்தை முழங்கி அவர்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். இலட்சக் கணக்கான எழுதப் படிக்கத் தெரியாத இந்தியர்களுக்குக் கூட இந்த வார்த்தைகள் மனப்பாடமாகிவிட்டன. மக்கள் வன்முறையில் ஈடுபடும்படி ஆத்திரமூட்டுவதற்குப் போலீஸ்காரர்கள் அவ்வப்பொழுது முயற்சிகளைச் செய்தார்கள். ஆனால் அதற்கு முன்பே பெருந்திரளான மக்களிடம் அஹிம்சையில் பிடிப்பு ஏற்பட்டிருந்தது. எனவே இந்த ஆர்ப்பாட்டங்கள் தவறாமல் அமைதியான தன்மையைக் கொண்டிருந்தன. லாகூரில் போலீசார் ஆத்திரமூட்டிய சம்பவங்களில் ஒன்றைப் பற்றிக் கேள்விப்பட்டு நாடு முழுவதுமே வேதனைப்பட்டது. மக்களின் அமைதியான ஆர்ப்பாட்டத்துக்குத் தலைமை தாங்கிய முக்கியமான

காங்கிரஸ் தலைவரான லாலா லஜபத் ராய் ஒரு பிரிட்டிஷ் போலீஸ் அதிகாரியால் காட்டுமிராண்டித்தனமாகத் தாக்கப் பட்டார். சில நாட்களுக்குப் பிறகு அவர் மரணமடைந்தார்.

''நமது மிகப் பெரும் தலைவர்களில் ஒருவர், பஞ்சாபின் தலைசிறந்த மனிதர், மிகவும் அதிகமான செல்வாக்குடைய ஒருவர் இப்படித் தாக்கப்பட்டது அரக்கத்தனமான செய லாகத் தோன்றியது. நாட்டில், குறிப்பாக வட இந்தியா முழுவதிலும் ஆத்திரம் பரவியது. நமது மிகச் சிறந்த தலைவர் களைக் கூட நாம் பாதுகாக்க முடியாவிட்டால் நமது நிலைமை எவ்வளவு நம்பிக்கையற்றது, எவ்வளவு கேவலமானது!'' என்று ஜவகர்லால் எழுதினார்.

இந்தியர்களுக்கு அவமானமும் கோபமும் ஆத்திரமும் வெறியும் ஏற்பட்டன. 1928 ஏப்ரல் 8ந் தேதியன்று டில்லியி லுள்ள சட்டமன்றக் கூடத்தில் இளம் தேசபக்தர்களான பகத் சிங்கும் பாதுகேஸ்வர தத்தும் நாட்டு வெடி குண்டு களை வீசினார்கள். யாருக்கும் ஆபத்தேற்படவில்லை. ஆனால் சைமனுடைய உயிருக்கு ஆபத்தோ என்று நினைக்குமளவுக்கு அவர் பீதியடைந்தார். காலனியாதிக்கவாதிகளுக்கு எதிராக நாடு முழுவதிலும் எழுச்சி ஏற்படுவதற்குத் தங்கள் நடவடிக் கை ஒரு சமிக்கையாக இருக்கும் என்ற நம்பிக்கையில் அந்த இளைஞர்கள் தங்களையே பலியாகக் கொடுத்தார்கள். தியாகம் செய்த தனிநபர்களாகிய இவர்கள், மக்களது மகிழ்ச்சிக் காகத் தம்மையே பலி கொடுத்த இவர்கள் அதே நேரத்தில் மக்களிடமிருந்து பெரிதும் தள்ளியிருந்தனர். நாட்டின் நிலை மையைப் பற்றி அவர்கள் செய்த மதிப்பீடு தவறாகப் போய் விட்டது. நாட்டில் எழுச்சி ஏற்படவில்லை. அதிகாரிகள் மிக வும் கொடிய அடக்குமுறையைப் பிரயோகிப்பதற்கு அது ஒரு சாக்காக இருந்தது.

லாலா லஜபத் ராயின் சோக மரணத்துக்குப் பிறகு சைமன் கமிஷன் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் பிரம்மாண்ட மான அளவில் நடைபெற்றதைக் கண்டு அதிகாரிகளுக்கு நடுக்கம் ஏற்பட்டது.

சைமன் கமிஷன் லக்னோவுக்கு வருகையளிப்பதாக இருந்த படியால் நேரு அங்கே சென்றார். திடீர் சம்பவங்கள் நடக்கப் போகின்றன என்ற பரபரப்பில் அந்த நகரம் சிக்கியிருந்தது. மக்களிடம் அதிகமான உறுதியும் துணிவும்

இருந்தது. ஆனால் யாரும் எந்தவிதமான வன்முறை நடவடிக்கையைப் பற்றியும் சிந்திக்கவில்லை. எந்தத் துன்பத்தையும் எந்த அவமதிப்பையும் தாங்கிக் கொள்கின்ற—அவசியமானால் உயிரையும் பலியிடுகின்ற, ஆனால் திருப்பித் தாக்குவதைப் பற்றி நினைக்காத சக்தியே வீரம் என்று கருதப்பட்டது.

சைமன் கமிஷன் லக்னோவிற்கு வருவதற்கு ஒரு நாள் முன் நேருவும் மற்ற காங்கிரஸ்காரர்களும் நடைபெறவிருக்கும் பெருந்திரளான மக்கள் ஆர்ப்பாட்டத்துக்கு ஒத்திகை நடத்திக் கொண்டிருந்த பொழுது குதிரைப் போலீசார் ஆர்ப்பாட்டக்காரர்களைத் தாக்கினார்கள். தெருவின் மத்தியில் ஊர்வலத்தின் தலைமையில் நேரு நின்று கொண்டிருந்தார். குதிரைப் போலீசார் அவரை நோக்கிப் பாய்ந்தார்கள். ஒரு கண நேரம் அவருக்குக் கலவரம் ஏற்பட்டது, தப்பி ஓட வேண்டும் என்ற எண்ணம் மனதில் மின்னலைப் போலத் தோன்றியது. தன் தோழர்களின் முன்னால் தான் கோழையாக நடந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணமும் உடனே தோன்றி முதல் எண்ணத்தை அகற்றியது. திடீரென்று முதுகில் இரண்டு பலத்த அடிகள் விழுந்தன. அவர் உடல் முழுவதும் வலியெடுத்த போதிலும் தோழர்களோடு சேர்ந்து நின்றார்.

மறு நாள் பொழுது புலர்வதற்கு முன்பே ரயில்வே நிலையத்துக்கு முன்புறத்திலுள்ள அகன்ற சதுக்கத்தில் ஏராளமான மக்கள் திரண்டார்கள். படைவீரர்களும் குதிரைப் போலீசாரும் ரயில் நிலையத்துக்குச் செல்லும் பாதைகளை அடைத்துக் கொண்டு நின்றார்கள். கறுப்புக் கொடிகளை ஏந்திக் கொண்டுவந்த ஆர்ப்பாட்டக்காரர்களுக்கு ஜவகர்லால் மறுபடியும் தலைமை தாங்கி வந்தார். அவர்கள் சைமன் கமிஷன் வருகையை எதிர்பார்த்து இரயில் நிலையச் சதுக்கத்தின் மறுபகுதியில் திரண்டார்கள். சதுக்கத்துக்குப் பின்னால் மறைத்து வைக்கப்பட்டிருந்த குதிரைப் படைப் பிரிவு திடீரென்று அவர்களுக்கு முன்னால் வந்தது. ஆர்ப்பாட்டக்காரர்கள் கைகளைக் கோர்த்துக் கொண்டு சங்கிலியைப் போல நின்றார்கள். குதிரைகள் அவர்கள் மீது மோதின. அவர்கள் தலைகளுக்கு மேலே கால்களைத் தூக்கின. குதிரைகளைத் தொடர்ந்து போலீஸ்காரர்கள் அணியணியாக வந்து ஆர்ப்பாட்டக்காரர்களை குண்டாந்தடிகளால் காட்டுமிராண்டித் தன

மாகத் தாக்கத் தொடங்கினர்கள். அவர்களைத் திருப்பித் தாக்க வேண்டும், அடிக்கு அடி கொடுக்க வேண்டும் என்ற பலமான ஆசை நேருவுக்கு ஏற்பட்டது. ''எனக்கு முன்னு லிருந்த போலீஸ் அதிகாரியைக் குதிரை மீதிருந்து கீழே இழுத்துப் போட்டுவிட்டு அந்தக் குதிரை மீது நான் உட்கார் வது எவ்வளவு சுலபமானது என்று நினைத்தேன். ஆனால் நெடுங்காலப் பயிற்சியும் கட்டுப்பாடும் நிலைத்தது. என் முகத் தில் விழுந்த அடியை மறைப்பதற்காகக் கையைத் தூக்கிய தைத் தவிர வேறு ஒன்றும் நான் செய்யவில்லை. மேலும் நம் தரப்பில் ஏதேனும் எதிர்முயற்சியைச் செய்தால் நம் தொண்டர்கள் சுட்டுக் கொல்லப்படுவார்கள், அங்கே பயங்கர மான படுகொலை நடத்தப்படும் என்பது எனக்கு நன்ருகத் தெரியும்'' என்று பிற்காலத்தில் நேரு நினைவு கூர்ந்தார்.

போலீசார் ஜவகர்லாலைத் தாக்கினர்கள். அவர் உணர் விழந்து கீழே சாய்கின்ற வரையிலும் தலை, தோள்கள், முதுகின் மீது அடிகள் விழுந்தன. இரத்தம் கொட்டியது. அவர் பலவீனத்தோடு போலீஸ்காரர்களின் வெறி பிடித்த, அநேகமாகப் பைத்தியக்காரர்களைப் போலிருந்த முகங்களைப் பார்த்தார். ஆர்ப்பாட்டக்காரர்களின் கண்கள் ஆத்திரத்தில் நெருப்பைப் போலச் சிவப்படைந்தன. ஆனால் அவர்கள் சிறிதும் எதிர்ப்புக் காட்டவில்லை.

லக்னேவில் காங்கிரஸ் தொண்டர்களும் மக்களும் காட் டிய துணிவு, ஸ்தாபன அமைப்பு, உறுதி நாட்டையே கலக்கியது. சைமன் கமிஷன் மக்களின் இகழ்ச்சியில் அழிந்தது.

ஜவ்கர்லால் நாட்டு மக்களிடம் மென்மேலும் அதிகமான செல்வாக்கைப் பெற்ருர். இந்த சமயத்தில் காந்தி அவருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறினர்: ''என் அன்பை ஏற்றுக் கொள்க. கடவுள் உனக்கு நீண்ட ஆயுளைக் கொடுப் பாராக. அடிமை நுகத்தடியிலிருந்து இந்தியாவை விடுவிப் பதற்குக் கடவுள் உன்னைத் தன் கருவியாகத் தேர்ந்தெடுக் கட்டும்.''

காலனியாதிக்க அதிகாரிகளின் கவனமும் நேருவின் மீதே இருந்தது. நேருவின் எல்லாச் சொற்பொழிவுகளையும் அதிகாரி கள் கவனமாகப் படிக்க வேண்டுமென்று வைசிராய் உத்தர விட்டார். அவர் மறுபடியும் கைது செய்யப்படலாம் என்று நண்பர்கள் நேருவிடம் எச்சரிக்கை செய்தார்கள். அத்தகைய

இருளடர்ந்த நிலையை நினைத்து நேரு அதிகமாகக் கலவர மடையவில்லை. தன்னுடைய எதிர்காலம் எப்படிப்பட்டதாக இருப்பினும் அது அமைதியான, ஒழுங்கு முறையான வாழ்க்கையாக இருக்காது என்பது நேருவுக்குத் தெரியும். ''நிச்சய மில்லாத நிலைமைகளுக்கும் திடீர் மாற்றங்களுக்கும் சிறைவா சத்துக்கும் நான் எவ்வளவு சீக்கிரமாகப் பழகிவிடுகிறேனே அவ்வளவு நல்லது'' என்று அவர் கூறினார். எந்த நேரத்திலும் கைது செய்யப்படலாம் என்ற நிலைமை தன்னுடைய வாழ்க்கைக்கு இன்றியமையாத பரபரப்பையும் கூர்மையையும் கொடுப்பதாகக் கூட அவர் நினைத்தார். ''சுதந்திரமாகக் கழித்த ஒவ்வொரு நாளும் விலைமதிப்பற்றதாக, லாபமாகக் கிடைத்த ஒரு நாளாக இருந்தது.''

1928ம் வருடத்தில் பம்பாயில் நடைபெற்ற இளைஞர் மாநாட்டில் நேருவுக்கு உற்சாகமான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. அந்த மாநாட்டைப் பற்றிய பம்பாய் போலீஸ் அதிகாரியின் அறிக்கையில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது: ''முதலிலிருந்து கடைசிவரை அந்த மாநாடு சிறிதும் ஒளிவு மறைவின்றி கம்யூனிஸ்ட் தன்மையும் புரட்சித் தன்மையும் கொண்டிருந்தது.'' அங்கே ஜவகர்லால் நிகழ்த்திய சொற்பொழிவு நிதானமானதாக இல்லாதது மட்டுமின்றி, மாறாக அது திட்டவட்டமான முறையில் வன்முறைக் கலகத்தைப் பிரச்சாரம் செய்தது, அதற்குத் தேவையான ஸ்தாபன ஏற்பாடுகளைச் செய்வதை நோக்கமாகக் கொண்டிருந்தது என்று உள்துறை இலாகாச் செயலாளருக்கு அறிவிக்கப்பட்டது.

ஜவகர்லால் தொடர்ந்து சுற்றுப் பயணம் செய்தவண்ணமாக இருந்தார். 1928ல் அவர் பஞ்சாப், மலபார், டில்லி, ஐக்கிய மாகாணம் ஆகிய நான்கு காங்கிரஸ் மாநில மாநாடுகளிலும் இளைஞர் பெருமன்றக் கூட்டங்களிலும் தலைமை தாங்கினார். அவர் எங்கே சென்றாலும், தொழிலாளர்கள், விவசாயிகள், பல்கலைக்கழக மாணவர்கள், ஆசிரியர்கள் அல்லது முழு நேர அரசியல்வாதிகள் ஆகிய யாரிடம் பேசினாலும் எளிமையாக, தெளிவாக, நம்பக்கூடிய விதத்தில் பேசியபடியால் அவர் பேச்சை எல்லோரும் புரிந்து கொண்டார்கள்.

1928 டிசம்பரில் மோதிலால் நேரு காங்கிரசின் கல்கத்தா மாநாட்டுக்குத் தலைமை வகித்தார். பிரிட்டிஷ் சாம்ராஜ்யக்

கட்டுக் கோப்புக்குள் இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்துக் கோருகின்ற அரசியல் சட்டத்தைப் பற்றிய தன்னுடைய நகல் திட்டத்தை மாநாடு—எந்த விலையைக் கொடுத்தாகிலும்—அங்கீகரிக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். சுதந்திரத்தைப் பற்றிய பிரச்சினையில் சமரசம் செய்து கொள்வது ஜவகர்லாலுக்கு உடன்பாடல்ல. ஆனால் மோதிலால் நேரு தன்னுடைய நிலையில் உறுதியாக இருந்தார். தகப்பனுக்கும் மகனுக்கும் மோதல் ஏற்பட்டது. மோதிலால் நேருவை காந்தி தீவிரமாக ஆதரித்தார். ஜவகர்லால் நேருவை சுபாஷ் சந்திர போஸ் தீவிரமாக ஆதரித்தார். இந்த மோதல் காங்கிரசில் பிளவை ஏற்படுத்திவிடுமானால் தகப்பனும் மகனும் எதிர்முகாம்களில் இருக்க நேரலாம். அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் இத்தகைய தீவிரமான அளவை இதற்கு முன்பு ஒருபோதும் அடைந்ததில்லை. இப்பொழுது அவை குடும்ப உறவுகளையும் கூட பாதித்தன. மோதிலால்தான் முதலில் ஆத்திரமடைவார். அவர் நாற்காலியிலிருந்து கீழே குதிப்பார், கண்களில் தீர்பொறி பறக்க மகனுக்கு எதிரே நிற்பார். ஜவகர்லாலின் முகமும் கோபத்தால் மாறியிருக்கும். அவர்களிருவரும் உண்மையிலேயே எதிரிகளைப் போல ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நிற்பார்கள். ஜவகர்லால் விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்பது தெளிவாகப் புலப்படும். கமலா பீதியடைந்து தன் கணவனுக்கருகில் சென்று ஒருவார்த்தை கூடப் பேசாமல் அவர் கையைப் பிடித்து அன்போடு தடவுவாள். மோதிலால் நேரு மிகவும் அதிகமாக நேசித்த இரண்டு பேர் அவருக்கு முன்பாக நின்று கொண்டிருப்பார்கள். அவர் சோர்வடைந்து நாற்காலியில் விழுவார், தன் பெரிய பழுப்பு நிறத் தலையைக் குனிந்து கொள்வார்.

காங்கிரஸ் மாநாடு மோதிலால் நேருவின் நகலைக் காரசாரமான விவாதங்களுக்குப் பிறகு ஏற்றுக் கொண்டது. ஆனால் ஜவகர்லால் மற்றும் அவரது ஆதரவாளர்களின் வற்புறுத்தலின் பேரில், அந்த நகலில் குறிப்பிடப்பட்டிருக்கும் அரசியலமைப்பை ஒரு வருட காலத்துக்குள் பிரிட்டிஷ் அரசாங்கம் கொடுக்காவிட்டால், காங்கிரஸ் சுதந்திரத்தைத் தன்னுடைய இலட்சியமாக அறிவிக்கும், அதற்காக நாடு முழுவதும் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கும் என்று அந்த தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இது ஒரு மரி

யாதையான கடைசி எச்சரிக்கை என்று ஜவகர்லால் கூறினுர். இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தைக் கூட கொடுப் பதற்குக் குறைந்தபட்சம் அடுத்த சில வருடங்களுக்குள் பிரிட் டிஷ் அரசாங்கம் ஒத்துக் கொள்ளாது என்று அவர் உறுதி யாகக் கருதினுர். இந்தத் தீர்மானம் காங்கிரசின் ஒற்று மையைப் பாதுகாக்கக் கூடியது, இனி வரப்போகும் போராட் டத்துக்கு (அதைத் தவிர்க்க முடியாது என்று அவர் நினைத் தார்) தயாரிப்பதற்கு அவகாசத்தைத் தருகிறது என்றும் அவர் கருதினுர்.

எனினும் அந்தத் தீர்மானம் நியாயப்படுத்த முடியாத சமரசம் என்று கருதிய ஜவகர்லால் அதை நிறைவேற்றும் தருவாயில் மாநாட்டு அரங்கத்திலிருந்து வெளியே போய்விட் டார். காந்தி அவருடைய செயலைப் பின்வருமாறு வர்ணித் தார்: ''இந்தத் தீர்மானம் அவருடைய விருப்பத்துக்கு மிக வும் குறைவானதாக இருப்பதாகக் கருதுகிருர். எனினும் அவருடைய மேன்மையான உள்ளம் தேவையற்ற கசப்புணர்ச் சியை ஏற்படுத்த விரும்பவில்லை... அவர் அதிருப்தியடை யாமல் எப்படி இருக்க முடியும்? அவர் தன் இலட்சியத்தை அடைவதற்கு முற்றிலும் ஒப்புவமை இல்லாத, தற்சிந்தனை யான பாதையை உருவாக்கிக் கொள்ளவில்லையென்றுல் அவர் ஜவகர்லாலாக இருக்க முடியாது. அவர் யாரைப் பற்றியும்— தன் தகப்பனுர், மனைவி, குழந்தையைக் கூட—நினைப்பதில்லை. தன் சொந்த நாட்டையும் அந்த நாட்டுக்குத் தன் கடமை யையும் தவிர வேறு எதைப் பற்றியும் அவர் சிந்திப்பதில்லை.''

ஜவகர்லால் முக்கிய பிரச்சினைகளில் தீவிரமான கருத்து வேறுபாடுகளைக் கொண்டிருந்தாலும் அவருடைய செல்வாக்கு மிகவும் அதிகமாக இருந்தபடியால் அவர் மறுபடியும் காங் கிரசின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஸ்தாபனத் துறையில் ஜவகர்லாலின் விசேஷமான திறமையை காந்தி அறிவார். எனவே மாகாணங்களுக்குச் சென்று அங்கே யுள்ள காங்கிரஸ் கமிட்டிகளின் நடவடிக்கைகளைச் சுறுசுறுப் பாக்குமாறு அவர் ஜவகர்லாலுக்கு ஆலோசனை கூறினுர்.

மறுபடியும் நூற்றுக் கணக்கான பொதுக் கூட்டங்கள், சொற்பொழிவுகள். நேரு காங்கிரஸ் தொண்டர் அணிகளை அமைப்பதிலும் முதன்முதலாய் முழு நேரக் காங்கிரஸ் ஊழியர் களுக்கு ஊதியமளிப்பதற்கான நிறுவனத்தை ஏற்படுத்துவதற்

காக நன்கொடைகள் வசூலிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். இந்திய தேசிய காங்கிரஸ் மற்றும் இந்திய சுதந்திரக் கழகத்தின் அணிகளைத் தொழிலாளர், விவசாயிகள் மற்றும் இளைஞர் அமைப்புக்களோடு ஒன்றுபடுத்துவதற்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டம் என்ற பிரதானமான பிரச்சினையிலாவது பொது மேடையை உருவாக்குவதற்கும் அவர் முயற்சி செய்து கொண்டிருந்தார். சட்டோபாத்யாயாவும் ஐரோப்பாவிலிருந்து எழுதிய கடிதங்களில் இவற்றைச் செய்ய வேண்டுமென்று இடைவிடாது வற்புறுத்தினர்.

1928 டிசம்பரில் நடைபெற்ற தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் கட்சிகளின் அகில இந்திய மாநாடு இந்திய சுதந்திரக் கழகத்தோடு இணைவதென்ற பிரேரணையை நிராகரித்தது. இது புத்திசாலித்தனமான முடிவு அல்ல என்று சட்டோபாத்யாயாவுக்கு எழுதிய கடிதத்தில் நேரு வருத்தத்தோடு கூறினர். சமூக மற்றும் வர்க்கக் கட்டுக்கோப்பில் முற்றிலும் வேறுபட்டிருக்கும் கட்சிகளை ஒன்று சேர்ப்பது (ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தின் தலைவர்கள் அதை வற்புறுத்தினலும்) தற்பொழுது சாத்தியமல்ல என்று யதார்த்தவாதியான நேரு புரிந்து கொண்டார்.

ஏகாதிபத்திய எதிர்ப்புக் கழகத்தில் குறுங்குழுவாதப் போக்குகள் இந்த சமயத்தில் வெளிப்படத் தொடங்கியது துரதிர்ஷ்டமே. கம்யூனிஸ்ட் அகிலத்தின் நிர்வாகக் கமிட்டியின் முயற்சியினல் இக்குறைபாடுகள் பிறகு திருத்தப்பட்டன.

இன்றுள்ள கட்டத்தில் காலனியாதிக்க ஆட்சிமுறைக்கு எதிரான தொழிலாளர்கள், விவசாயிகள், கைவினைஞர்கள், வர்த்தகர்கள் மற்றும் மாணவர்களுடைய பல விதமான இயக்கங்களை ஸ்தாபன ரீதியாக ஒன்றுபடுத்துவதைக் காட்டிலும் உணர்ச்சிரீதியில் ஒன்றுபடுத்துவதே மிகவும் முக்கியம் என்ற கருத்தை ஜவகர்லால் மென்மேலும் அதிகமாக ஆதரித்தார். அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் நிலையை இந்திய தேசிய காங்கிரசுக்கு நெருக்கமாகக் கொண்டுவர முடிந்தால் தன்னுடைய கட்சி குணும்சத்தில் அதிகமான சோஷலிசத் தன்மையையும் சமூக அடுக்கமைவில் அதிகமான பாட்டாளி வர்க்கத் தன்மையையும் அடையும் என்று கரு

தினர். ஆனால் இந்தத் திசையில் அவர் செய்த எல்லா முயற்சிகளும் தோல்வியடைந்தன. ''தொழிலாளி வர்க்கம் தன்னுடைய தனித்துவத்தையும் சித்தாந்தத்தையும் நன்கு வரையறுக்கப்பட்ட முறையிலும் கட்டுக்கோப்புடனும் வைத்துக் கொண்டு காங்கிரசுக்கு உதவியளித்து ஒத்துழைப்புக் கொடுத்து அதன் மீது தாக்கத்தை ஏற்படுத்த வேண்டும்.'' தேசிய விடுதலை இயக்கத்தின் வளர்ச்சி தவிர்க்க முடியாத வகையில் காங்கிரஸ் சமூக-பொருளாதாரப் பிரச்சினைகளின் தீர்விற்கு இட்டுச் செல்லக் கட்டாயப்படுத்தும், அதை அதிகத் தீவிரமான சித்தாந்தத்தை ஏற்றுக் கொள்ளுமாறு செய்யும் என்றும் அவர் கருதினர்.

1929 பிப்ரவரி 21ந் தேதியன்று இந்திய அரசாங்கத்தின் உள்துறை இலாகாச் செயலாளர் மாகாண கவர்னர்களுக்கு அனுப்பிய விசேஷமான சுற்றறிக்கையில் பின்வருமாறு எழுதியிருந்தார்: ''பல்வேறு அரசியல்வாதிகள் மற்றும் கம்யூனிஸ்டுகள் ஒன்று சேரக் கூடிய போக்கு ஏற்பட்டிருக்கிறது. ஜவகர்லால் நேரு... சில கம்யூனிஸ்டு கோட்பாடுகளினல் மெய்யாகவே கவர்ச்சிக்கப்பட்டிருப்பதால், இவை சந்திக்கின்ற இடத்தில் நிற்கிறர்.''

கம்யூனிஸ்டுகளை நசுக்குவதற்காக இந்தியாவின் இளம் கம்யூனிஸ்ட் இயக்கத்தை தேசிய விரோதமானதாகச் சித்தரிக்கின்ற போலியான ஆவணங்களைக் காலனியாட்சி அரசாங்கத்தின் இரகசிய போலீஸ் இலாகா தயாரித்துக் கொண்டிருந்தது.

1929 மார்ச் 20ந் தேதியன்று முப்பத்து மூன்று முக்கியமான தொழிற்சங்கத் தலைவர்கள் சதி செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு பம்பாய், ஐக்கிய மாகாணம், வங்காளம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் கைது செய்யப்பட்டார்கள். அவர்களில் பதினன்கு பேர் கம்யூனிஸ்டுகள். அவர்கள் மீது மீரட் நகரத்தில் நான்கு வருடங்களுக்கு மேல் வழக்கு நடைபெற்றது.

தொழிலாளர் இயக்கத்தைப் பலவீனப்படுத்துவதும், காங்கிரஸ் தலைவர்களுக்கும் தொழிலாளர் தலைவர்களுக்கும் இடையில் தகராறுகளைத் தூண்டிவிடுவதும் அரசாங்கத்தின் நோக்கம். எனவே மீரட் சதி வழக்கில் அரசாங்க வழக்குரைஞர் அரசாங்கத்தின் இரகசிய ஆணைகளை வழுவாது பின்பற்றினர்.

கம்யூனிஸ்டுகளுக்குத் தேசபக்தி கிடையாது என்று வழக் குரைஞர் அவதூறுப் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். கம்யூ னிஸ்டுகள் ஜவகர்லாலை நிதானமான சீர்திருத்தவாதி என்றும் சுபாஷ் சந்திர போசை பூர்ஷ்வா மற்றும் பதவிப்பித்தர் என்று கூறியதாகவும் காந்தியை ஒரு தீவிரமான பிற்போக்கு வாதி, எதிரி என்று கருதுவதாகவும் கூறினர். காலனியா திக்க ''நீதிமுறையின்'' பிரதிநிதி நேற்றுக்கூட காங்கிரஸ் தலைவர்கள் மீது வழக்குத் தொடர்ந்தார். இன்று அவர்களை ''பாதிக்கப்பட்டவர்களாகச்'' சித்தரித்தார். இதைக் கேட்பது நேருவுக்கு வேடிக்கையாக இருந்திருக்கும்!

புரட்சிகரமான தொழிலாளர்கள் பலர் காங்கிரஸ் தலைவர் கள் மீது பரிபூரணமான நம்பிக்கை வைக்கவில்லை என்ற விவரம் ஜவகர்லாலுக்குத் தெரியாததல்ல. அவர்கள் அவ்வாறு முடிவு செய்வதற்குத் தக்க காரணங்கள் உண்டு என்பதும் ஜவகர்லாலுக்குத் தெரியும். தீவிரமான வர்க்க உணர்வு கொண்ட பாட்டாளி வர்க்க இயக்கம் காலனியாதிக்க அதி காரிகள், இந்திய செல்வந்தர்கள் ஆகிய இரண்டு தரப் பினருக்குமே ஆபத்தைக் கொண்டிருந்தது.

தொழிலாளர் தலைவர்கள் சார்பில் வழக்கை நடத்து வதற்காக நேரு ஒரு கமிட்டியை ஏற்படுத்தினர். அவருடைய வேண்டுகோளின் பேரில் அனுபவமிக்க வழக்கறிஞரான மோதி லால் அந்தக் கமிட்டியின் தலைவராக இருப்பதற்கு இணங் கினர்.

வழக்கை நடத்துவதற்கு நிதி தேவைப்பட்டது. நிதி வசூலிப்பது சுலபமான காரியமாக இருக்கவில்லை. ஜவகர் லாலும் அவருடைய தகப்பனரும் இன்னும் சில வழக் குரைஞர்களும் குற்றம் சாட்டப்பட்டவர்களிடமிருந்து ஊதியம் கோரவில்லை. ஆனல் மற்ற வழக்குரைஞர்களுக்கு ஊதியம் கொடுக்க வேண்டியிருந்தது. ''நாங்கள் நிதி வசூலில் ஈடுபட் டோம். அதில் பெரும்பகுதி மிகவும் ஏழ்மைப்பட்ட தொழி லாளர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட செப்புக் காசுகளாகும். ஆனல் வழக்குரைஞர்களுக்குப் பெருந்தொகைகளுக்குக் காசோ லைகள் கொடுக்க வேண்டியிருந்தது'' என்று ஜவகர்லால் வருத்தத்தோடு எழுதினர். ஆனல் ''உயர்ந்த மதிப்பைக் கொண்ட செப்புக் காசுகளால்'' வழக்கின் முடிவை நிர்ண யிப்பதன் மேல் சிறிது கூட தாக்கம் செலுத்த இயலவில்லை.

மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் அதுதான் வேதனையைக் கொடுத்தது. எவ்வளவு சிறந்த வழக்குரைஞர்களை வைத்து வாதாடினாலும் முடிவு ஒன்றுதான். அது நீதிமன்றமல்ல—பழிவாங்கும் மன்றமே.

இந்தியாவில் எல்லோருடைய கவனமும் மீரட் வழக்கின் மீதே இருந்தது. அரசாங்கத்தின் சட்டவிரோதமான நடவடிக்கைகளுக்குக் காங்கிரஸ் தலைவர்கள் எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

1929ம் வருடம் முடிவடைந்து கொண்டிருந்தது. அடுத்த வருடாந்தர மாநாட்டுத் தலைவர் தேர்தலில் பங்கெடுக்க ஸ்தல காங்கிரஸ் கமிட்டிகள் தயாராகிக் கொண்டிருந்தன. பெரும்பான்மையானவர் காந்தியை ஆதரித்தனர். சிலர் மற்ற தலைவர்களை ஆதரித்தனர். மிகச் சிறுபான்மையோர் ஜவகர்லால் நேரு பெயரை முன்மொழிந்தனர்.

இந்தப் பதவியில் இல்லாமலேயே காந்தி காங்கிரசின் அங்கீகரிக்கப்பட்ட தலைவராக இருந்தார். ஆனால் இனிமேல் அரசாங்கத்தோடு நெடும் போராட்டத்தில், தீர்மானமான போராட்டத்தில் ஈடுபடப் போவதை உணர்ந்த கட்சிப் பெரியவர்கள் கட்சியின் நேரடித் தலைமையை காந்தி எடுத்துக் கொள்வது அவசியம் என்று கருதினார்கள்.

செப்டெம்பர் 29ந் தேதியன்று காங்கிரஸ் செயற்குழுக் கூட்டம் லக்னோவில் நடைபெற்றது. அக்கூட்டத்தின் போது காங்கிரஸ் தலைவர் பதவி தனக்கு வேண்டாமென்று காந்தி மறுத்துவிட்டார். தனக்குப் பதிலாக ஜவகர்லால் நேருவின் பெயரை முன்மொழிந்தார்.

இந்த முக்கியமான பதவிக்கு ஜவகர்லால் நேருவின் பெயரை முன்மொழியுமாறு காந்தியைத் தூண்டியது எது? தன் கருத்தை விளக்கும் முறையில் நேருவிடம் ஒரு போராட்டக்காரரின் உறுதியும் துணிவும் இருப்பதோடு மட்டுமல்லாமல் முதிர்ந்த அரசியல் தலைவருக்குரிய தீர்க்கமான மதிநுட்பமும் இருக்கிறதென்று காந்தி கூறினார். ''அவர் ஸ்படிகத்தைப் போலத் தூய்மையானவர், யாரும் சந்தேகிக்க முடியாத அளவுக்கு உண்மையானவர். அவருடைய கரங்களில் நாடு பாதுகாப்பாக இருக்கும்'' என்று காந்தி தன் தோழர்களுக்கு உறுதியளித்தார்.

சர்தார் வல்லபாய் படேல், மௌலானா அபுல் கலாம்

ஆஜாத் மற்றும் வேறு சில செல்வாக்குடைய காங்கிரஸ் காரர்கள் இந்தப் பதவியை அடைய விரும்பினார்கள். அவர்களோடு போட்டி போட ஜவகர்லால் விரும்பவில்லை. அவர் இந்தப் பதவியைத் தீவிரமாக விரும்பினார் என்று சொல்ல முடியாது. மேலும் மூர்க்கத்தனமான உள்கட்சிப் போராட்டம் இல்லாமல் அதை அடைய முடியாது என்ற சூழ்நிலையும் இருந்தது. எனவே இந்தப் பிரச்சினையை முடிவு செய்வதற்காக நடைபெற்ற காங்கிரஸ் தலைவர்கள் கூட்டத்தின் போது அவர் அங்கேயிருந்து போய்விட்டார். இந்திய தேசிய காங்கிரஸ் தலைவராகத் தன்னைத் தேர்ந்தெடுத்ததைப் பற்றி பிற்காலத்தில் எழுதும் பொழுது அவர் பின்வருமாறு குறிப்பிட்டார்: ''அந்தத் தேர்தலின் போது எனக்கு ஏற்பட்ட மிக அதிகமான வேதனையையும் அவமதிப்பையும் போல ஒரு போதும் நான் உணர்ந்தது கிடையாது. அந்த கௌரவத்தைப் பற்றி நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று சொல்ல முடியாது. ஏனென்றால் அது ஒரு பெரிய கௌரவமே. சாதாரண முறைப்படி என்னைத் தேர்ந்தெடுத்திருந்தால் நான் பரவசமடைந்திருப்பேன். ஏனென்றால் நான் பிரதான வாயில் வழியாக அல்லது பக்கத்து வாயில் வழியாகக் கூட உள்ளே நுழையவில்லை. ஒரு இரகசியக் கதவு வழியாக திடீரென்று அங்கேயிருந்தவர்களுக்கு முன்னால் தோன்றினேன். அவர்கள் திகைப்படைந்து போய் என்னை ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் தங்களுடைய முகங்களை சிரமத்தோடு சரிப்படுத்திக் கொண்டு கசப்பு மாத்திரையைப் போல என்னை விழுங்கினார்கள்.''

எனினும் இந்தச் சமயத்தில் உணர்ச்சிகளுக்கு இடமளிக்கக் கூடாது என்பதை நேரு புரிந்து கொண்டார். இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி இறுதி முடிவுக்கு வருவதற்காக அரசாங்கத்துக்குக் காங்கிரஸ் கொடுத்த காலக்கெடு முடிகின்ற கட்டம் நெருங்கிக் கொண்டிருந்தது. காந்தியின் சத்யாக்ரஹத்தின் பலத்தை அரசாங்கம் முன்பே தெரிந்து கொண்டிருந்தபடியால் அடுத்த முறை ஏற்படும் சட்ட மறுப்பு இயக்கத்தைப் பற்றி அச்சமடைந்து எப்படியாவது அதைத் தடுப்பதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தது. இந்தியத் தலைவர்கள் எல்லாவிதமான ''சிக்கலான பிரச்சினைகளையும்'' பற்றி விவாதிக்கக் கூடிய ''வட்ட மேசை மாநாடு'' நடத்தப்

படுமென்று வைசிராய் இர்வின் பிரபு அறிவித்தார். இர்வின் அறிக்கைக்குப் பிறகு உடனேயே காந்தி, மோதிலால் நேரு, வல்லபாய் படேல் மற்றும் இதர காங்கிரஸ் தலைவர்கள் டில்லியில் கூடினார்கள். வைசிராயின் அறிக்கையை விவாதித்த பிறகு அவர்கள் பின்வரும் நிபந்தனைகளை வற்புறுத்துகின்ற கூட்டறிக்கையை வெளியிட்டார்கள்:

1) உத்தேசிக்கப்படும் மாநாட்டில் இந்தியாவுக்கு முழு டொமினியன் அந்தஸ்தைக் கொடுப்பது என்ற அடிப்படையின் மீதுதான் எல்லா விவாதங்களும் நடைபெற வேண்டும்.

2) இந்த மாநாட்டில் காங்கிரஸ்காரர்களுக்குப் பெரும்பான்மையான பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட வேண்டும்.

3) எல்லா அரசியல் கைதிகளும் முழு விடுதலை செய்யப்பட வேண்டும்.

4) இப்பொழுது முதல், இந்திய அரசாங்கம்—இன்றைய நிலைமைகளில் சாத்தியமான அளவுக்கு—டொமினியன் அரசாங்கம் என்ற முறையில் நடத்தப்பட வேண்டும்.

அரசாங்கம் இந்த நிபந்தனைகளை ஒத்துக் கொண்டால் மட்டுமே அரசாங்கத்தோடு பேச்சுவார்த்தைகள் நடத்துவதென்று காங்கிரஸ்காரர்கள் முடிவு செய்தார்கள்.

இந்த அறிக்கை அருவருப்புத் தருகின்ற சமரசம் என்று ஜவகர்லால் கருதினார். இந்த நிபந்தனைகளை அரசாங்கம் ஒத்துக் கொள்வது கடினம் என்ற நம்பிக்கையே அவருக்குச் சற்று ஆறுதலைக் கொடுத்தது. அறிக்கையில் கையொப்பமிடுவதற்கு அவர் முதலில் மறுத்தார். ஆனால் காங்கிரஸ் தீர்மானமான யுத்தத்தைத் தொடங்கப் போகின்ற நேரத்தில் பிளவு ஏற்படக் கூடாதென்பதற்காக மற்றவர்கள் தன் மனதை மாற்ற அனுமதித்தார்.

நேருவுக்கு அதிகமான மனச் சோர்வு ஏற்பட்டது. காங்கிரஸ் தலைவர் பதவியை மறுப்பதைப் பற்றிக் கூடத் தீவிரமாக சிந்திக்கத் தொடங்கினார். மேலும் பெர்லினிலிருந்து சட்டோபாத்யாயா எழுதிய கடிதத்தில் உங்களுடைய போராட்ட உணர்ச்சி பலவீனமடைந்து விட்டது என்று விமர்சனம் செய்திருந்தார். சட்டோவின் குற்றச் சாட்டு ஜவகர்லாலுக்கு வேதனையைக் கொடுத்தது. ஆனால் தன்னுடைய பாதை சரிதானா என்பதைப் பற்றி அவருக்கே உறுதி இல்லாதிருந்தது.

அவர் எதிர்பார்த்ததைப் போல வைசிராய், காந்தி, படேல், மோதிலால் நேரு ஆகியோரிடையே நடைபெற்ற பேச்சுவார்த்தைகளினால் ஒரு பலனும் ஏற்படவில்லை. இது ஜவகர்லாலுக்குத் திருப்தியைக் கொடுத்தது. கட்சியின் ஒற்றுமை நீடித்தது. இன்னும் சில வாரங்களில் காங்கிரசின் வருடாந்தர மாநாடு நடைபெறும், அதில் இந்தியா முழு சுதந்திரம் அடைவதை நோக்கமாகக் கொண்டு நேரடி நடவடிக்கைகளுக்கான வேலைத்திட்டம் நிறைவேற்றப்படும் என்பது உறுதி. இரண்டு வருடங்களுக்கு முன்பு சென்னையில் நடைபெற்ற மாநாட்டில் சுதந்திரத்தைப் பற்றி அவர் முன்மொழிந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. ஆனால் காந்தி மற்றும் மோதிலால் நேருவின் எதிர்ப்பினால் அந்தத் தீர்மானம் உண்மையில் சக்தியில்லாததாக இருந்தது. இன்று மகாத்மாவும் மோதிலாலும், அவர்களை ஆதரித்த எல்லோருமே இந்தத் தீர்மானத்தை ஒத்துக் கொள்வதோடு மட்டுமல்லாமல் சட்ட மறுப்புப் போராட்டத்தையும் ஆதரிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

1929 டிசம்பர் கடைசியில் காங்கிரசின் வருடாந்தர மாநாடு லாகூரில் தொடங்கியது. மாநாட்டுப் பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் அந்த நகரத்தின் மொத்த ஜனத்தொகையுமே காங்கிரசின் புதிய தலைவரை வரவேற்றனர். பொதுக் கூட்டங்களும் ஆரவாரமான வரவேற்புக்களும் நேருவுக்குப் பழக்கமானவையே. ஆனால் பல்லாயிரக் கணக்கான மக்கள் அவரிடம் அதிகமான நட்புணர்ச்சியையும் மரியாதையையும் காட்டியது அதுதான் முதல் தடவையாகும். அவரை வரவேற்றவர்களில் பலரும் நடைபெறப்போகின்ற மாநாட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தார்கள். ஜவகர்லால் தன்னுடைய தொடக்க உரையில் இந்தியாவும் அனைத்து ஆசியாவும் ஐரோப்பிய ஆதிக்கத்துக்கு முடிவு கட்டப்போகின்ற நாள் நெருங்கிக் கொண்டிருக்கின்றது என்று உறுதியாகக் கூறினார். இந்திய மக்கள் ஆட்சியதிகாரத்தைப் பெற்றவுடன் நாட்டில் சோஷலிஸ்ட் மாற்றங்களை ஏற்படுத்தக் கூடிய தேசியப் பாதையைத் தயாரித்துக் கொள்வது அவசியம். ஏழ்மையையும் வர்க்க ஏற்றத்தாழ்வையும் அகற்றுவதற்கு அந்தப் பாதை முதலிடம் தர வேண்டும். விவசாயிகளுக்கு நிலம் கொடுக்க வேண்டும், கூட்டுறவுக் கோட்பாடு

களின் அடிப்படையில் தொழிலாளர்களே தொழிற்சாலைகளை நிர்வகிக்க வேண்டும் என்று அவர் ஆலோசனை கூறினார். ''நான் ஒரு சோஷலிஸ்ட், நான் ஒரு குடியரசுவாதி. அரசர்களையோ குறுநில மன்னர்களையோ, பழைய காலத்து அரசர்களை விட மக்களின் எதிர்காலத்தின் மீது அதிக அதிகாரம் கொண்டுள்ள, ஆனால் அவர்களைப் போன்ற கொடுங்கோன்மை முறைகளையுடைய இன்றைய தொழிற்துறை அரசர்களை நிலை நாட்டும் அமைப்பையோ நான் நம்பவில்லை.''

காலனியாதிக்கவாதிகளுக்கு எதிராகப் போராடுவதற்கு அஹிம்சை முறையைத் தேர்ந்தெடுத்திருப்பதை செய்முறைக் கோணத்தில் நேரு விளக்கினார். ''ஸ்தாபனரீதியாகத் திட்டமிடப்பட்ட வன்முறையைச் செய்வதற்குக் காங்கிரசிடம் பொருளோ பயிற்சியோ கிடையாது. தனிப்பட்ட, சிதறலான வன்முறை நம்பிக்கையற்ற நிலைமையை வெளிப்படுத்திக் கொள்வதாகும். ஆனால் எதிர்காலத்தில் காங்கிரசோ அல்லது இந்த நாடோ அடிமை நிலையைப் போக்குவதற்கு வன்முறையான வழிகளைப் பின்பற்ற வேண்டும் என்ற முடிவுக்கு வருமேயானால், அந்த வழிகளைப் பின்பற்றுவோம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. வன்முறை மோசமானதே, ஆனால் அடிமைத்தனம் அதைக் காட்டிலும் மிகவும் மோசம்.''

ஜவகர்லால் பேசி முடித்த பிறகு காந்தி நிதானமாக மேடையின் மீது ஏறினார். காந்தி என்ன சொல்லப் போகிறார்? தலைவருடைய பேச்சை அவர் ஆதரிப்பாரா? இப்படிப் பலவிதமான ஊகங்களில் மாநாட்டுப் பிரதிநிதிகள் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர் பீடிகை எதுவுமேயில்லாமல் பேசினார். ''சென்ற வருடத்தில் கல்கத்தாவில் நடைபெற்ற மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் தொடர்பாக, ''சுயராஜ்யம்'' என்ற சொல் ''பூரண சுதந்திரத்தைக்'' குறிக்கும் என்று காங்கிரஸ் அறிவிக்கிறது. இன்று முதல் எல்லா காங்கிரஸ்காரர்களும் இந்தியா பூரண சுதந்திரம் பெறுவதற்குத் தங்களுடைய எல்லா முயற்சிகளையும் அர்ப்பணிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறது'' எனும் தீர்மானத்தை முன்மொழிந்தார்.

மாநாட்டு அரங்கத்திலிருந்த எல்லோரும் உற்சாகமாகக் கைதட்டினார்கள். இந்தத் தீர்மானத்தைப் பற்றி நேருவுக்கு

முன்பே தெரியும். எனினும் அவரால் தன் புன்சிரிப்பை மறைக்க முடியவில்லே.

டிசம்பர் 31ந் தேதியன்று நள்ளிரவில் கடிகாரம் பன்னிரண்டு மணியடித்து 1930ம் வருடம் பிறந்து விட்டதை அறிவித்த பொழுது மாநாட்டுப் பிரதிநிதிகள் தீர்மானத்தை நிறைவேற்றினர்கள். காங்கிரசின் வலதுசாரி அணியைச் சேர்ந்த பத்து அல்லது பதினைந்து பிரதிநிதிகள் மற்றும் சில இடதுசாரித் தீவிரவாதிகள் மட்டுமே தீர்மானத்தை எதிர்த்துப் பேசினர்கள்.

காங்கிரஸ் தலைமை சட்ட மறுப்பு இயக்கத்துக்குத் திட்டம் தயாரிக்க வேண்டும். அதற்கு ஆரம்பம் என்ற முறையில் ஜனவரி 26ந் தேதியை சுதந்திர தினம் என்று அறிவிக்க முடிவு செய்தார்கள். அந்த தினத்தன்று எல்லா இடங்களிலும் மக்கள் தாய்நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடுவோம் என்று உறுதியெடுத்துக் கொள்ள வேண்டும்.

லாகூர் மாநாட்டின் முடிவுக்கிணங்க மத்திய சட்டமன்றத்திலும் மாகாண சட்ட மன்றங்களிலும் உறுப்பினர்களாக இருக்கும் காங்கிரஸ்காரர்கள் தங்கள் பதவிகளிலிருந்து விலக வேண்டுமென்று மோதிலால் நேரு கேட்டுக் கொண்டார்.

ஜவகர்லால் 1930ம் ஆண்டு ஜனவரி மாதத்தின் முதற் பாதியை அலகபாத்தில் கழித்தார். அங்கே மகமேளா என்று சொல்லப்படும் இந்துக்களின் மதவிழாவும் வருடந்தோறும் நடைபெறுகின்ற சந்தையும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இந்த விழாக்கள் அவருடைய குழந்தைப் பருவத்திலிருந்தே அவருக்கு நினைவில் நின்றன. யாத்திரிகர்கள் கங்கையை நோக்கி வரிசையாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அந்த வரிசை முடிவே இல்லாமல் வந்து கொண்டிருந்தது. அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்த நேருவின் மனதில் எண்ணங்கள் அலைமோதின. ''கங்கையில் குளிப்பதற்காக இந்தியாவின் ஒவ்வொரு மூலையிலுமிருந்து இவர்கள் வந்திருக்கிருர்கள். இவர்களையும் இவர்களுடைய முன்னோர்களையும் ஆயிரமாயிரம் வருடங்களாக இப்படி ஈர்க்கின்ற மத நம்பிக்கை எவ்வளவு அதிசயமான ஆற்றலைக் கொண்டது! இந்த மகத்தான சக்தியில் ஒரு பகுதியையாவது தமது சொந்த வாழ்க்கையில் முன்னேற்றத்தை ஏற்படுத்துவதற்குரிய அரசியல், பொருளாதார போராட்டத்துக்கு இவர்கள் திருப்பக் கூடாதா? அல்லது

அவர்களுடைய மனங்களில் மதத்தின் சோடனைகளும் மரபுகளும் மிக அதிகமாக நிறைந்திருப்பதால் வேறு எத்தகைய சிந்தனைக்கும் இடம் கிடையாதா? பல யுகங்களாக நிலவி வந்திருக்கும் கம்பீரமான அமைதியைக் கலக்கிவிடுகின்ற பிற சிந்தனைகள் முன்பே அவர்களிடம் ஏற்பட்டிருப்பது எனக்குத் தெரியும்.''

இந்திய சுதந்திர தினம் என்று காங்கிரசினால் பெயர் சூட்டப்பட்ட ஜனவரி 26ந் தேதி நெருங்கிக் கொண்டிருந்தது. சட்ட மறுப்புப் போராட்டத்தை எப்படித் தொடங்குவது என்ற ஒரே கேள்வி ஜவகர்லால் மனதை அலைக்கழித்துக் கொண்டிருந்தது. மகாத்மா காந்தி என்ன சொல்லப் போகிறார் என்று காங்கிரஸ் தலைவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். தங்கள் உத்தேசம் என்ன என்று ஜனவரி 18ந் தேதியன்று இரவீந்திரநாத் தாகூர் காந்தியிடம் கேட்டார். நான் பகலிலிலும் இரவிலும் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன், ''சூழ்ந்திருக்கும் இருளிலிருந்து ஒளி வரவில்லை'' என்று காந்தி பதிலளித்தார்.

முதல் சுதந்திர தினத்தன்று இந்தியா முழுவதும் எல்லா நகரங்களிலும் கிராமங்களிலும், தொலைதூரத்திலுள்ள இடங்களிலும் கூட பொதுக் கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடைபெற்றன. சுதந்திரத்துக்காகப் போராடுவதென்று இந்தியர்கள் எல்லா இடங்களிலும் சபதமெடுத்து கொண்டார்கள்.

கடைசியாக, உப்புச் சட்டத்தை மீறுவதன் மூலம் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்குவதென்று மகாத்மா காந்தி முடிவு செய்தார். இந்த யோசனை நேருவுக்கு முதலில் ஆச்சரியத்தைக் கொடுத்தது. உப்புக்கும் சுதந்திரப் போராட்டத்துக்கும் எத்தகைய சம்பந்தமும் இல்லாதது போலத் தோன்றியது. காந்தி உடனே மேலும் பதினொரு அம்சங்களைச் சேர்த்துக் கொண்டார் என்பது உண்மையே, ஆனால் அவையும் குறைவான முக்கியத்துவமுடைய சீர்திருத்தங்களாக மட்டுமே இருந்தன. நேருவின் கருத்தில் இவை அனைத்துமே அரை நடவடிக்கைகள், தன் நாட்டின் சுதந்திரத்தைப் பற்றிய பிரச்சினையில் அவர் உச்சத்தைக் கேட்பவராதலால் இவை அவருக்கு எழுச்சியைத் தரவில்லை. ஆனால் சம்பவங்கள் மிகவும் துரிதமாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்தன; அரசியல்

நிலைமை விவாதங்களுக்கு ஏற்றதாக இருக்கவில்லை.

1930 மார்ச் 11ந் தேதியன்று உப்பு வரிச் சட்டத்தை மீறுவதன் மூலம் சத்யாக்ரஹத்தைத் தொடங்கப் போவதாக காந்தி வைசிராய்க்கு எழுதினார். குறிப்பிட்ட தினத்தன்று காலைப் பிரார்த்தனையை முடித்த பிறகு சபர்மதி ஆசிரமத்திலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட எழுபத்தெட்டு சத்யாக்ரஹிகளுக்குத் தலைமை தாங்கி காந்தி அரபுக் கடலின் கரையிலிருக்கும் தண்டியை நோக்கிப் புறப்பட்டார். அந்த ஊர் நானூறு கிலோமீட்டர் தூரத்திலிருந்தது. அங்கே போய்ச் சேருவதற்கு மூன்று வாரங்களாயின. மகாத்மா அச்சமில்லாத ஆனால் அமைதி தவழும் முகத்தோடு சத்யாக்ரஹிகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றார். அவர்களோடு சென்ற மக்களின் எண்ணிக்கை மென்மேலும் அதிகரித்துக் கொண்டிருந்தது. ஊர்வலத்தின் இரு பக்கங்களிலும் மக்கள் நின்று கொண்டு வாழ்த்துக்களும் வணக்கமும் தெரிவித்தார்கள். விவசாயிகள் அவர்கள் செல்கின்ற பாதையைக் கூட்டித் தண்ணீர் தெளித்து மலர்களைப் பரப்பினார்கள். ஆயுதங்கள் இல்லாத சத்யாக்ரஹிகள் ஆயிரக் கணக்கான மக்கள் புடைசூழ கடற்கரையை நெருங்கினார்கள். ஏப்ரல் 5ந் தேதி இரவு முழுவதும் பிரார்த்தனை செய்துவிட்டு 6ந் தேதியன்று (1919ல் நடைபெற்ற முதல் சத்யாக்ரஹப் போராட்டத்தின் ஆண்டு விழா நாளன்று) காலையில் காந்தி (அவர் தன்னுடைய உணவில் உப்பைச் சேர்த்துக் கொள்வதில்லை) கடலில் இறங்கினார். கடல் நீரைக் கொண்டு வந்து கடற்கரையில் ஒரு அடையாளபூர்வமான முறையில் உப்பைக் காய்ச்சினார். இதற்குப் பிறகு லட்சக் கணக்கான இந்தியர்கள் கடைகளில் விற்பனை செய்யப்படும் உப்பை வாங்க மறுத்துவிட்டுப் பக்குவமில்லாத முறைகளை உபயோகித்து உப்பு தாய்ச்சத் தொடங்கினார்கள்.

''உப்பு சத்யாக்ரஹத்தை'' மேலும் வளர்த்துச் செல்லக் கூடிய அரசியல் வழிமுறைகளைப் பற்றி விவாதிப்பதற்காக இந்திய தேசிய காங்கிரசின் தலைவர்கள் அலகபாத்தில் கூடினார்கள். சட்ட மறுப்பு இயக்கத்தை மேலும் வளர்ப்பதற்கு வைசிராயின் எல்லா உத்தரவுகளையும் ஆணைகளையும் பகிஷ்கரித்தல் அவசியமென்று ஜவகர்லால் வற்புறுத்தினார்: ''உப்புச் சட்டத்தை மீறுவதோடு நாம் திருப்தியடைந்துவிடக் கூடாது.

நம்முடைய இலட்சியம் முழு சுதந்திரம் என்பதை நாம் நினைவிலிறுத்த வேண்டும்'' என்று அவர் கூறினர்.

எத்தகைய விலை கொடுத்தாகிலும் ''சட்டத்தையும் ஒழுங்கையும்'' பாதுகாக்க வேண்டுமென்று அதிகாரிகள் முடிவு செய்தார்கள். அவர்கள் பெருந்திரளாக மக்களைக் கைது செய்யத் தொடங்கினர்கள். இந்தப் போராட்டத்தில் வெற்றி பெற வேண்டுமென்றால் அந்தக் கட்டத்தின் அரசியல் தேவைகளுக்குத் தகுந்தாற்போல காங்கிரஸ் தன் ஸ்தாபனப் பணிகளைத் திருத்தியமைத்துக் கொள்ள வேண்டும். உருக்குப் போன்ற கட்டுப்பாட்டை அமுலாக்க வேண்டும். இயக்கத்தின் தலைவர்களை அதிகாரிகள் அகற்றுவதற்குச் சந்தர்ப்பம் கொடுக்கக் கூடாதென்பது எல்லாவற்றிலும் மிக முக்கியமாகும். காங்கிரஸ் நேருவுக்கு அவசர அதிகாரங்களைக் கொடுத்தது. மாகாண காங்கிரஸ் கமிட்டிகளின் தலைவர்களுக்கும் அதைப் போன்ற அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. ''காங்கிரஸ் சர்வாதிகாரிகள்'' என்று அவர்களுக்குப் பெயர் தரப்பட்டது. கூட்டுத் தலைமை இயங்க முடியாத சூழ்நிலைமை ஏற்படுமானல் அவர்கள் தனிப்பட்ட முறையில் முடிவுகளெடுக்கலாம். யுத்தகாலத்தில் நடப்பதைப் போல, ஒவ்வொரு ''சர்வாதிகாரியும்'' தான் கைது செய்யப்படுகின்ற வரை போராட்டத்துக்குத் தலைமை தாங்க வேண்டும், அதன் பிறகு அவரால் நியமிக்கப்பட்ட வாரிசு தலைமை தாங்குவார். எனவே ஒரு தலைவர் கைது செய்யப்பட்டால் அவர் இடத்துக்குப் புதிய ''சர்வாதிகாரிகள்'' தொடர்ச்சியாக வந்த வண்ணமிருந்தார்கள்.

மார்ச்—ஏப்ரல் மாதங்களின் போது நேரு உறக்கமின்றி, ஓய்வின்றி நாடு முழுவதிலும் சுற்றுப்பயணம் செய்து பொதுக் கூட்டங்களில் பேசினர், பெருந்திரளான மக்கள் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபடுவதற்குரிய அமைப்புகளைச் செய்தார். ஏப்ரல் முதல் தேதிக்கும் நான்காம் தேதிக்கும் இடையே அவர் இருபத்திரண்டு பிரம்மாண்டமான கூட்டங்களில் பேசினர். சுமார் இரண்டு லட்சம் மக்கள் இக்கூட்டங்களில் கலந்து கொண்டார்கள். காங்கிரஸ் பிரச்சாரகர்கள் தேசிய விடுதலைப் போராட்டத்தின் கடமைகளைத் தெளிவாகவும் எளிமையாகவும் விவசாயிகளுக்கு விளக்கும்படி செய்தார். அதைப் போல காங்கிரஸ் கோஷங்களைப் பரப்புவதில், தேசிய இயக்

கத்தை மக்களிடையே எடுத்துச் செல்வதில் மாணவர்கள் முக்கியமான பங்கு வகிக்க வேண்டுமென்று அறைகூவல் விடுத்தார். ''பம்பாயில் நம் தொண்டர்களுடைய வேலையைப் பற்றி நீங்கள் தெரிந்து கொள்வது பயனளிக்கும். அவர்கள் சிறு குழுக்களாகப் புறப்படுகிறார்கள், தெரு முனைகளில் நின்று ஒரு சங்கை முழங்குகிறார்கள், பிறகு முன்பே ஒரு காகிதத்தில் எழுதி அவர்களிடம் கொடுக்கப்பட்டிருக்கும் தேசிய கோஷங்களை முழங்குகிறார்கள், அவர்களில் ஒருவர் சுருக்கமாகச் சொற்பொழிவாற்றுகிறார்... எல்லாம் பத்து நிமிடங்களுக்கு மேல் நீடிப்பதில்லை. பிறகு அடுத்த தெருவின் மூலைக்குப் போகிறார்கள். அவர்கள் இப்படியே பம்பாயில் ஒரு நாளில் மட்டும் இருநூறு தெரு முனைப் பொதுக் கூட்டங்களை நடத்தியிருக்கிறார்கள். பத்திரிகைகளைப் படித்துச் செய்திகளைத் தெரிந்து கொள்ள முடியாத ஏழை மக்கள் வசிக்கும் பகுதிகளில் இந்த முறைகள் எத்தகைய பிரம்மாண்டமான பிரச்சாரத்தைச் செய்ய முடியும் என்பதை நீங்கள் கற்பனை செய்துகொள்ளலாம்.''

நாட்டின் வெவ்வேறு பகுதிகளிலும் உப்பை மிகச் சிறந்த முறையில் எவ்வாறு தயாரிக்க வேண்டும், எப்படி விற்பனை செய்ய வேண்டும், பிரிட்டிஷ் சரக்குகள் பகிஷ்காரத்தை எப்படி நடத்த வேண்டும், அரசாங்க தபால் இலாகாவை உபயோகிக்காமல் காங்கிரஸ் கமிட்டிகள் மத்தியத் தலைமையோடு எவ்வாறு தொடர்பு கொள்வது என்பனவற்றைப் பற்றி ஸ்தல காங்கிரஸ் கமிட்டிகளுக்கு அவர் ஆலோசனைகளை எழுதினார். தேசியப் பத்திரிகைகளையும் பிரசுரங்களையும் வெளியிடுகின்ற வேலையைச் செவ்வனே திருத்தியமைத்தார். ''இப்பணிகளில் நம்மோடு பங்கு கொள்ளாதவர்கள் தாய் நாட்டுக்கு எதிரான துரோகிகள்!'' என்று அவர் கூறினார்.

வைசிராய் ஒவ்வொரு ஆணையாக வெளியிட்டுக் கொண்டிருந்தார். அரசாங்கம் எண்ணற்ற நடவடிக்கைகளுக்குத் தடை விதித்தது. மக்கள் ஒவ்வொரு தடையையும் மீறத் தூண்டியதே அவற்றின் பலன். சட்ட மறுப்பு இயக்கம் வேகமாகப் பரவியது. சத்யாக்ரஹப் போராட்டம் மக்களுடைய வீர உணர்ச்சிகளை வெளிக்கொண்டு வந்துவிட்டது போலத் தோன்றியது. பெண்களிடம் ஏற்பட்டிருந்த தேசபக்த எழுச்சி ஜவகர்லாலுக்குப் பரவசமூட்டியது. ''அந்தக் காலத்தில் எத்தனையோ

புதுமைகள் நடைபெற்றன. தேசியப் போராட்டத்தில் பெண்கள் வகித்த பங்கு அவற்றில் மிகவும் குறிப்பிடத்தக்கது என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் வீடுகளில் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களிலிருந்து ஏராளமாக வெளியே வந்தார்கள். அவர்களுக்குப் பொதுப் பணிகளில் அனுபவம் கிடையாது. எனினும் அவர்கள் போராட்டத்தில் உற்சாகத்தோடு குதித்தார்கள். அந்நியத் துணிகள் மற்றும் மதுபானங்களை விற்பனை செய்யும் கடைகளுக்கு முன்னால் மறியல் செய்வதைத் தங்களுடைய பொறுப்பாக எடுத்துக் கொண்டார்கள். நகரங்களில் பெண்கள் மட்டுமே கலந்து கொண்ட மாபெரும் ஊர்வலங்கள் நடைபெற்றன. பொதுவாகச் சொல்வதென்றால் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் அதிகமான உறுதியோடு நடந்து கொண்டார்கள். மாகாணங்களிலும் ஸ்தலங்களிலும் அவர்களில் பலர் காங்கிரஸ் 'சர்வாதிகாரிகளாக' நியமிக்கப்பட்டனர்'' என்று ஜவகர்லால் அக்காலத்திய சம்பவங்களைப் பற்றிப் பிற்காலத்தில் எழுதினார்.

நேருவின் தாயாரும் அவருடைய இரண்டு சகோதரிகளும் மனைவியும் அலகபாத்தில் நடைபெற்ற சட்டமறுப்பு இயக்கத்தில் அசாதாரணமான சுறுசுறுப்போடு ஈடுபட்டார்கள். காலையிலிருந்து மாலை வரை சுடும் வெய்யிலில் நின்றுகொண்டு அவர்கள் சத்யாக்ரஹத்தின் நோக்கங்களை மக்களுக்கு விளக்கிக் கூறினார்கள். கமலா ஸ்தாபன அமைப்பு வேலையில் தனித் திறமையைக் காட்டியது எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது. தன் மனைவியை நன்றாகப் புரிந்து கொண்டிருப்பதாக ஜவகர்லால் எப்பொழுதும் நினைப்பதுண்டு. ஆனால் இப்பொழுது ஒரு புதிய கமலா, அஞ்சா நெஞ்சமும் தீவிரமான மன உறுதியும் கொண்டு மக்களுக்குத் தலைமை தாங்கக் கூடிய கமலா உருவாகிக் கொண்டிருந்தார்.

அரசாங்கம் தன்னைக் கைது செய்யும் என்று எதிர்பார்த்த ஜவகர்லால் காந்தியைத் தலைவராகப் பொறுப்பு வகிக்குமாறு கேட்டுக் கொண்டார். அவர் மறுத்து விட்டபடியால் மோதிலால் மகனுக்குப் பிறகு அந்தப் பொறுப்பை வகிக்க இசைந்தார்.

ஜவகர்லால் 1930 ஏப்ரல் 14ந் தேதியன்று, இராய்பூரில் சத்யாக்ரஹிகள் மாநாட்டில் பேசுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்த பொழுது கைது செய்யப்பட்டார். அவர்

அன்றே சிறைச் சாலையில் விசாரணை செய்யப்பட்டார். உப்புச் சட்டத்தை மீறியதற்காக ஆறு மாத சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு நைனிடால் சிறைச் சாலைக்குக் கொண்டு செல் லப்பட்டார். அங்கே ''நாய்ப்பட்டி'' என்று சொல்லப்பட்ட ஒரு தனிக் கொட்டடியில் அவர் அடைக்கப்பட்டார்.

பல காங்கிரஸ் தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட் டிருந்த போதிலும் சட்ட மறுப்பு இயக்கம் புதிய வடிவங் களைப் பெற்று வேகமாகப் பரவிக் கொண்டிருந்தது. பெஷாவர் நகர மக்கள் இயந்திரத் துப்பாக்கி குண்டுகளுக்கும் அஞ்சாமல் தெருக்களில் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். பம்பாயில் பெரிய அளவில் வேலைநிறுத்தங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடை பெற்றன. போலீஸ்காரர்கள் மக்களைக் கண்டபடி அடித்தார்கள். கல்கத்தாவின் உப்பளங்களிலும் தொழிற்சாலைகளிலும் நர வேட்டையாடினார்கள். காலனியாதிக்கத்துக்கு எதிரான நாடு தழுவிய போராட்டத்தில் ஒரு சிறு கிராமம் கூட ஒதுங்கி நிற்கவில்லை.

வைசிராய் இர்வின் பிரபு ஆழ்ந்த சமய உணர்ச்சி உடையவர், கடவுளைப் பிரார்த்தனை செய்த பிறகே எந்த முடிவையும் செய்பவர் என்று சொல்வார்கள். அப்படிப் பிரார்த்தனை செய்த பிறகு அவர் காங்கிரஸ் செயற்குழு முழுவதையுமே சட்டவிரோதமானதென்று அறிவித்தார். காங் கிரஸ் தலைவர்கள் தங்களுக்குப் பிறகு பொறுப்பு வகிக்க வேண்டிய ''சர்வாதிகாரிகளை'' நியமிப்பதைத் தடுப்பதற்காக இப்படிச் செய்தார். இர்வின் பிரபுவின் முடிவைத் தெரிந்து கொண்ட பிறகு ''கடவுள் இப்படி மோசமாக புத்தி சொல் வது எவ்வளவு பரிதாபமானது'' என்று காந்தி புன்சிரிப் போடு கூறினார்.

காங்கிரஸ் சர்வாதிகார முறைகளைப் பின்பற்றுகிறது என்று காலனியாட்சியாளர்கள் அதைக் குறை கூறியதோடு தங்களுடைய மேற்கத்திய ஜனநாயகத்தைப் பற்றியும் வான ளாவப் பேசினார்கள். இதைக் காட்டிலும் வெட்கமில்லாத போலித்தனத்தை நேருவால் கற்பனை செய்யக் கூட முடிய வில்லை. ''இந்தியாவில் தனிமுதலான சர்வாதிகார ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவசரச் சட்டங்கள் மக் களின் எல்லா விதமான உரிமைகளையும் நசுக்கிவிட்டன. ஆனால் எங்களுடைய ஆட்சியாளர்கள் ஜனநாயகத்தைப் பற்றி

வாய்கிழியப் பேசிக் கொண்டிருந்தார்கள்'' என்று ஜவகர்லால் பிற்காலத்தில் எழுதினுர்.

மே 5ம் தேதியன்று இரவில் காந்தி கைது செய்யப் பட்டார். மோதிலால் நேருவின் உடல்நிலே திருப்தியளிக்க வில்லே என்று மருத்துவர்கள் கூறிய போதிலும் அவர் தொடர்ந்து இயக்கத்துக்குத் தலைமை தாங்கிஞர். அவர் அதிகமான இரத்த அழுத்தத்தாலும் அடிக்கடி ஆஸ்த்மா நோயினுலும் பாதிக்கப்பட்டார். அவருக்கு மருத்துவ சிகிச் சையும் ஓய்வும் அவசியமாகத் தேவைப்பட்டது. ஆனுல் அவர் மருத்துவர்களின் ஆலோசனைகளைப் புறக்கணித்துவிட்டுக் காங் கிரசின் கஷ்டங்கள் நிறைந்த ஸ்தாபன வேலே முழுவதையும் தானே எடுத்துக் கொண்டார். இதற்கு முன் எக்காலத்திலும் இல்லாத அளவுக்கு காங்கிரஸ் கட்சிக்குப் பலம் நிறைந்த தலைவர் தேவையாக இருந்தது. உத்தரவு போட்டுப் பழகிய மோதிலாலேத் தவிர வேறு யார் அந்த ''சர்வாதிகாரியின்'' பாத்திரத்தை நிறைவேற்ற முடியும்? அவர் எல்லாவற்றையும் ஒழுங்காக அமைத்தார், உத்தரவுகள் கொடுத்தார், முடிவு கள் செய்தார். ஆனுல் அவர் மிகக் கடுமையாக நடந்து கொண்டார் என்று யாரும் சொல்லவில்லே. அவருடைய தலைமையை யாரும் கேள்வி கேட்க முடியாது.

சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கிய சமயத்தில் மோதி லால் நேரு தன் மகனையும் காந்தியையும் கலந்தாலோசித்த பிறகு அலகபாத்திலுள்ள தன்னுடைய மாளிகையை இந்திய தேசிய காங்கிரசுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். ஆனந்த பவனம் என்ற பெயர் சுயராஜ்ய பவனம் என்று மாறியது. சத்யாக்ரஹம் நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில் அந்த மாளிகையின் ஒரு பகுதி மருத்துவ நிலேயமாக மாற்றப் பட்டது. அதிகாரிகளோடு நடைபெற்ற மோதல்களில் காய மடைந்த தொண்டர்களுக்கு அங்கே மருத்துவ சிகிச்சை அளிக் கப்பட்டது. மோதிலால் தன் குடும்பத்தினர் வசிப்பதற்காக அதற்குப் பக்கத்திலேயே ஒரு எளிமையான வீட்டை வாங்கி அதற்கு ஆனந்த பவனம் என்ற முந்திய பெயரைச் சூட்டினுர்.

1930 ஜூன் 30ந் தேதியன்று அதிகாலேயில் மோதிலால் நேரு படுக்கையில் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது போலீ சார் அவரை எழுப்பிக் கைது செய்திருப்பதாகத் தெரிவித் தார்கள். நகரம் இன்னும் உறங்கிக் கொண்டிருந்தது. எனவே

பெருந்திரளான மக்கள் எதிர்ப்புத் தெரிவிக்கலாமோ என்று அதிகாரிகள் பயப்பட வேண்டியதில்லை. மோதிலால் சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார். அங்கே ஜவகர்லாலைச் சந்தித் தார். காங்கிரஸ் செயற்குழுவின் செயலாளரும், நீண்ட காலமாக நேரு குடும்பத்தின் நண்பருமான டாக்டர் சையது முகமதுவும் சிறிது நேரத்தில் அங்கே கொண்டுவரப்பட்டார். அது மழை காலம். சிறைக் கூரையிலிருந்து தண்ணீர் ஒழு கியது. அங்கேயிருந்த ஈரமும் நாற்றமும் மோதிலாலின் ஆஸ்த்மா நோயை அதிகப்படுத்தின. தகப்பனாரின் துன்பங் களைத் தணிப்பதற்கு ஜவகர்லால் தன்னாலியன்ற முயற்சி களை—அவை சிறிதளவாக இருப்பினும்—செய்தார்.

இதற்குள்ளாக அநேகமாக எல்லா முக்கியமான காங் கிரஸ் தலைவர்களுமே சிறையிலடைக்கப்பட்டனர். ஆனால் சட்ட மறுப்பு இயக்கம் நாடு முழுவதும் தொடர்ந்து நடை பெற்றது. காங்கிரஸ் கட்சியின் ஒற்றுமையையும் அதன் வெகுஜன செல்வாக்கையும் ஆரம்பத்தில் குறைவாக மதிப் பிட்ட அரசாங்கம் இப்பொழுது காங்கிரஸ் தலைவர்களோடு பேச்சுவார்த்தை நடத்த விரும்பியது. இர்வின் பிரபு இப்பொ ழுது சமாதானவாதியாகப் பேசினார்; லண்டனில் ஒரு வட்ட மேசை மாநாட்டைக் கூட்டி எல்லாப் பிரச்சினைகளையும் அதில் விவாதிக்கலாம் என்றார். அரசாங்கத்துக்கும் காங்கிரஸ் கட்சி க்கும் இணக்கத்தை ஏற்படுத்த விரும்பிய, உயர்ந்த அந்தஸ் தைக் கொண்ட இந்தியர்கள் இருந்தார்கள். அவர்களில் தம்மை லிபரல் கட்சியின் உறுப்பினர்களாக அறிவித்த சர் டேஜ் பகதூர் சாப்ரூ மற்றும் எம். ஆர். ஜெயக்கர் ஆகி யோர் இந்த தூது வேலைக்குப் பயன்பட்டார்கள். சாப்ரூ முன்னர் ஒரு சமயத்தில் வைசிராயின் நிர்வாகக் கவுன்சிலில் உறுப்பினராக இருந்தவர். ஜெயக்கர் பம்பாயில் பிரபல மான வழக்கறிஞராக இருந்தார்.

இர்வின் பிரபுவைக் கலந்தாலோசித்த பிறகு சாப்ரூவும் ஜெயக்கரும் காந்தி வைக்கப்பட்டிருந்த யெராவ்தா சிறைக்குச் சென்றார்கள். பேச்சுவார்த்தைகள் நடத்துவதை காந்தி ஆதரித்தார், ஆனால் மோதிலால் நேருவையும் ஜவகர்லால் நேருவையும் கலந்து கொள்ளாமல் எந்த முடிவுக்கும் வரு வதற்கு மறுத்தார். ஒரு வாரத்துக்குப் பிறகு ''சமாதானத் தூதர்கள்'' காந்தியின் கடிதத்தோடு நைனிடால் சிறைக்கு

வந்தார்கள். அவர்கள் இரண்டு நேருக்களோடும் இரண்டு நாட்கள் பேச்சுவார்த்தைகள் நடத்தினார்கள். எந்த முடிவுக்கும் வராமல் விவாதங்கள் நெடுநேரம் நடைபெற்றன. மோதிலால் நேரு மிகவும் களைப்படைந்து சோர்ந்து போனதே அவற்றால் ஏற்பட்ட பலன். காங்கிரசுக்கும் அரசாங்கத்துக்கும் சமரசம் ஏற்பட முடியாதென்று இரண்டு நேருக்களுமே உறுதியாக நம்பினார்கள். ஆனால் காங்கிரஸ் செயற்குழுவில் இந்தப் பிரேரணையை விவாதிக்காமல் தங்களுடைய கருத்தைத் தெரிவிக்க மறுத்தார்கள். அவர்கள் காந்திக்கு எழுதிய கடிதத்திலும் இதே கருத்தைத் தெரிவித்தார்கள்.

''சமாதான தூதர்கள்'' தங்கள் முயற்சிகளைக் கைவிடவில்லை. ஆகஸ்ட் 8ந் தேதியன்று சாப்ரூ மறுபடியும் இரண்டு நேருக்களையும் சந்திப்பதற்காக வந்தார். அவர்கள் காந்தியைச் சந்திப்பதற்கு வைசிராய் மறுக்கவில்லை, ஆனால் காங்கிரஸ் செயற்குழுவின் மற்ற உறுப்பினர்களோடு கலந்து பேச வைசிராய் அனுமதி மறுத்துவிட்டார் என்பதைத் தெரிவித்தார். எனினும் மோதிலால் நேரு சையது முகமதுவைத் தன் தரப்புக்கு இழுத்துக் கொண்டார். ஆகஸ்ட் 10ந் தேதியன்று மூன்று பேரும் நைனிடால் சிறைச் சாலையிலிருந்து பூனாவுக்கு விசேஷ ரயிலில் புறப்பட்டார்கள். ரயில் செல்லும் இடங்களில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெறக் கூடும் என்று அதிகாரிகள் அச்சமடைந்தனர். எனவே அந்த விசேஷ ரயில் நகரங்களிலோ, கிராமங்களிலோ நிறுத்தப்படவில்லை. யாரும் வர முடியாத, ஒதுக்குப்புறமான இடங்களில் மட்டுமே நிறுத்தப்பட்டது. மோதிலால் நேருவும் ஜவகர்லால் நேருவும் யெராவ்தா சிறைக்கு வந்து இரண்டு நாட்களாகியும் அவர்களில் யாரும் காந்தியைப் பார்க்க அனுமதிக்கப்படவில்லை. காங்கிரஸ் தலைவர்களது உரையாடல்களின் போது சாப்ரூவும் ஜெயக்கரும் உடனிருக்க வேண்டுமென்று ஆட்சியினர் விரும்பியதால் அவர்களுடைய வருகையை எதிர்பார்த்து அதிகாரிகள் காத்திருந்தனர்.

கடைசியில் ஆகஸ்ட் 13ந் தேதியன்று காலையில் காந்தி, சாப்ரூ, ஜெயக்கர் ஆகியோர் சிறை அலுவலகத்தில் மோதிலால் நேருவையும் ஜவகர்லால் நேருவையும் சந்திப்பதற்காகக் காத்திருப்பதாக அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. ஜவகர்லாலும் அவருடைய தகப்பனாரும் இதை ஆட்சேபித்

தார்கள். முதலில் காந்தியைத் தனியாகச் சந்தித்துப் பேசிய பிறகுதான் ''சமாதான தூதர்களோடு'' பேச முடியும் என்று கண்டிப்பாகக் கூறினார்கள். பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்து விடலாம் என்று அஞ்சிய அதிகாரிகள் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

பேச்சுவார்த்தைகள் மூன்று நாட்கள் நடைபெற்ற பிறகு ஆகஸ்ட் 15ந் தேதியன்று முடிவடைந்தன. சமாதான நிபந்தனைகளை எடுத்துக் கூறும் கடிதத்தில் காங்கிரஸ் தலைவர்கள் கையெழுத்திட்டனர். ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து நினைத்த பொழுது விலகிக் கொள்வதற்கு உரிமை வேண்டும்'' என்பது காங்கிரஸ்காரரர்களின் அடிப்படைக் கோரிக்கையாக இருந்தது. எல்லா அரசியல் கைதிகளும் விடுதலை செய்யப்பட வேண்டும், வைசிராய் வெளியிட்ட எல்லா விசேஷ ஆணைகளும் வாபஸ் பெற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற நிபந்தனைகளின் பேரில் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்திக் கொள்வதற்கும் ''வட்ட மேசை மாநாட்டில்'' கலந்து கொள்வதற்கும் காங்கிரஸ் தலைமை ஒத்துக் கொண்டது.

பூனாவிலிருந்து நைனிடாலுக்குத் திரும்பிச் செல்லும் வழியில் அவர்களைப் பார்ப்பதற்கு ஏராளமான மக்கள் இரயில் நிலையங்களில் திரண்டு நின்றார்கள். அவர்களின் வரவேற்பு முழக்கங்கள் இரயில் வண்டிச் சக்கரங்கள் உருளுகின்ற ஓசைகளையும் மீறி இடியோசை போல ஒலித்தன, போராட்டத்தைத் தொடர்வதற்குத் தயாராக இருந்த மக்கள் தலைவர்களின் நடவடிக்கைகளை ஆதரித்தனர்.

நைனிடால் சிறையில் மோதிலால் நேருவின் உடல்நிலை சீர்கேடடைந்தது. அவர் மிகவும் மெலிந்து விட்டபடியால் அவரை அடையாளம் கண்டுகொள்வது அநேகமாக இயலாததாயிற்று. மருத்துவர்களின் முடிவுகள் கலவரமளிக்கக் கூடியவையாக இருந்தன. தேவையில்லாத சிக்கல்களைத் தவிர்ப்பதற்காக அவர் மீது விதிக்கப்பட்ட தண்டனையை மறுபரிசீலனை செய்யுமாறு அரசாங்கம் நிர்ப்பந்திக்கப்பட்டது. மோதிலால் அத்தகைய மறுபரிசீலனையை ஆத்திரத்தோடு எதிர்த்தார். எத்தகைய விசேஷமான சலுகைகளையும் நான் விரும்பவில்லை என்று கூட வைசிராய்க்குத் தந்தி அனுப்பினார்.

எனினும் பத்து வார சிறைத் தண்டனைக்குப் பிறகு, செப்டெம்பர் 8ந் தேதியன்று அவர் விடுதலை செய்யப்பட்டார். ஜவகர்லாலுக்கு விதிக்கப்பட்ட சிறைத் தண்டனை முடிந்து விட்டபடியால் அக்டோபர் 14ந் தேதியன்று அவரும் விடுதலை செய்யப்பட்டார்.

ஜவகர்லால் வீட்டுக்குத் திரும்பிய பொழுது அவருடைய தகப்பனார் முசூரியில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். ஜவகர்லாலின் தாயாரும் சகோதரியும் அவரோடு தங்கியிருந்தார்கள். வீட்டில் கமலா மட்டும்தான் இருந்தாள். அவர்கள் சந்தித்த பொழுது கமலாவினால் கண்ணீரை அடக்க முடியவில்லை. ஆனால் அந்த பலவீனம் சில நிமிடங்கள் மட்டுமே நீடித்தது.

ஜவகர்லால் அலகபாத்தில் ஒன்றரை நாள் மட்டுமே இருந்தார். அதற்குள் அவர் ஏராளமானவற்றைச் செய்து முடிக்க விரும்பினார். காங்கிரசின் ஐக்கிய மாகாணக் கிளையின் தலைவர்களுடைய கூட்டத்தை நடத்துவது அவற்றில் முக்கியமானதாகும்.

கிராமப் பகுதிகளில் அரசாங்கம் நிலவரி மற்றும் குத்தகைப் பணம் வசூலிக்கும் சமயம் நெருங்கிக் கொண்டிருந்தது. சத்யாக்ரஹத்தின் கட்டுக்கோப்புக்குள் அரசாங்கத்துக்கு நிலவரி மற்றும் குத்தகைப் பணத்தைக் கட்டாதீர்கள் என்று கோரும் இயக்கத்தை நடத்துவதற்கு இதுவே நல்ல நேரம் என்று ஜவகர்லால் முடிவு செய்தார். கமலா உள்பட கமிட்டியின் உறுப்பினர்கள் அவருடைய ஆலோசனைக்கு ஆதரவு தெரிவித்தார்கள். அக்டோபர் 19ந் தேதியன்று அலகபாத்தில் விவசாயிகள் மாநாடு நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

அவரால் தன் பெற்றோர்களையும் மகளையும் பார்க்கப் போகாதிருக்க முடியவில்லை. முசூரியை அடைந்ததும் தன் தகப்பனார் ஓரளவு குணமடைந்திருப்பதைப் போல அவருக்குத் தோன்றியது. அவருடைய தாயார் வெகு நேரம் வரை அவரை விட்டுப் பிரியாமல், அந்தக் காலகட்டம் முழுவதிலும் அவருக்கு ஏற்பட்ட துன்பங்களையெல்லாம் அவர் கண்களினுள் படித்தறிய முயற்சி செய்வதைப் போல அவருடைய கண்களை உற்று நோக்கியபடி இருந்தாள். அந்தக் குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களும் நெடுங்காலத்துக்குப் பிறகு மறுபடியும் ஒன்று

சேர்ந்திருந்தார்கள். அவர்களுடைய மகிழ்ச்சி முழுமை யடைந்து விட்டது போலத் தோன்றியது. மாலை நேரத்தில் தகப்பனும் மகனும் அமைதியாக உரையாடிக் கொண்டிருந் தார்கள். இனிமேல் என்றைக்கும் தன் தகப்பனரோடு அப்படி உரையாட முடியாது என்பது ஜவகர்லாலுக்கு அப்பொழுது தெரியாது. மோதிலால் மட்டும்தான் அதை உணர்ந்திருக்க வேண்டும்.

மறுநாள் மோதிலால் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்த படியே தனக்கு மிகவும் பிரியமான மகன் தன் மகளோடு மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் விளையாடிக் கொண்டிருப் பதை வருத்தத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார். ஜவகரும் இந்திராவும் குழந்தைகள் ஊர்வலம் போவதைப் போல விளையாடினர்கள். ஒரு சிறு பெண் காங்கிரஸ் கொடியைப் பிடித்துக் கொண்டு ஊர்வலத்துக்கு முன்னல் நின்றாள். அவர் க்ள் எல்லோரும் ''தாயின் மணிக் கொடி வாழ்க!'' என்று இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

நாட்கள் வேகமாக ஓடின. முசூரியில் தன் குடும்பத் தினரோடு கழித்த ஆனந்தமான நாட்களின் நினைவு ஜவகர் லாலின் இதயத்தில் என்றும் நிலைத்திருக்கும். அக்டோபர் 17ந் தேதியன்று அவரும் கமலாவும் விவசாயிகள் மாநாட் டில் கலந்து கொள்வதற்காக அலகபாத்துக்குப் புறப்பட்டார் கள். மோதிலால் நேருவும் குடும்பத்தில் மற்றவர்களும் மறு நாள் அலகபாத்துக்குப் புறப்பட எண்ணியிருந்தார்கள்.

ஜவகர்லாலின் பிரயாணம் பல இடங்களில் தடைப் பட்டது. டெராடூனிலும் லக்னேவிலும் கடைசியாக அலகபாத் துக்கு வந்தவுடன் அங்கும் ஜவகர்லாலிடம் உத்தரவுகள் தரப்பட்டன. கிரிமினல் சட்டத்தின் 144வது பிரிவின்படி அவர் பொது மக்களிடையே பேசுவதற்குத் தடை விதிக்கப் பட்டிருக்கிறது என்ற ஒரே விதமான உத்தரவு அந்த அர சாங்க ஆணைகளில் காணப்பட்டது. இந்த உத்தரவுகளுக்குக் கீழ்ப்படியும் உத்தேசம் அவருக்கு இல்லை என்பது இயற் கையே. 1930 அக்டோபர் 30ந் தேதியன்று அவர் விவசாயி கள் மாநாட்டில் சொற்பொழிவாற்றினர். அரசாங்கத்துக்கு நிலவரி மற்றும் குத்தகைப் பணத்தைக் கட்ட மறுக்கும் போராட்டத்தைத் தொடங்குமாறு விவசாயிகளைக் கேட்டுக் கொண்டார். அதே நாளன்று ஸ்தல விவசாயிகளும் நகர

மக்களும் கூட்டாக நடத்திய மற்ெருரு கூட்டத்திலும் அவர் பேசினுர்.

அன்றிரவு எட்டு மணிக்கு பின் அவரும் கமலாவும் மிகவும் களைப்படைந்து வீட்டுக்குத் திரும்பினுர்கள். மோதிலால் நேருவும் குடும்பத்தினர் அனைவரும் அவர்களை வரவேற்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அநேகமாக வீட்டின் வாயிலில் நுழைந்த பொழுது ஜவகர்லால் கைது செய்யப்பட்டார். உடனே யமுனை ஆற்றைக் கடந்து நைனிடாலுக்குக் கொண்டு செல்லப்பட்டார். அவர் ஐந்தாவது தடவையாக சிறையில் அடைக்கப்பட்டார். கலகம் செய்யுமாறு மக்களைத் தூண்டியதற்காக இரண்டு வருடம் தனிமைச் சிறைவாச தண்டனையும் அபராதத்தைக் கட்டா விட்டால் கூடுதலாக ஐந்து மாத சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டது.

துயரத்தால் வாடிய கமலா இந்த சோகச் செய்தியை வீட்டுக்கு வந்து தெரிவித்த பொழுது மோதிலால் நேரு மிகவும் கோபத்தோடு மேசையின் மீது ஓங்கி அடித்தார். இனியும் நான் நோயாளியாகப் படுத்திருக்க மாட்டேன் என்றுர். அவர் இப்படிச் சொன்ன பிறகு உண்மையிலேயே ஒரு அதிசயம் நடைபெற்றது. அவர் இரத்தம் கக்குவது நின்றுவிட்டது. ஜவகர்லால் கைது செய்யப்பட்டதைக் கண்டித்து எதிர்ப்புப் பிரச்சாரத்தை நடத்துவதற்கு ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினுர். அதில் அவர் காட்டிய சுறுசுறுப்பைக் கண்டு எல்லோரும் வியப்படைந்தனர். ஜவகர்லாலின் பிறந்த தினமாகிய நவம்பர் 14ந் தேதியன்று பெரும் ஆர்ப்பாட்டங்களை நடத்துகின்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது. அதில் வெற்றியும் அடைந்தார். அன்றைய தினத்தன்று நாடு முழுவதிலும் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. ஜவகர்லால் நேருவை விடுதலை செய் என்று இலட்சக் கணக்கான இந்தியர்கள் முழங்கினுர்கள்.

ஜவகர்லால் ஒரு சில நாட்கள்தான் சுதந்திரத்தை அனுபவித்தார். சிறையில் தன்னுடைய சுதந்திரத்தை இழந்தாலும் அந்த தியாகம் வீணுகைப் போவதில்லை என்று நினைத்து நிம்மதியடைந்தார். அவர் தொடங்கிவைத்த வரிகொடா இயக்கம் போராட்டத்தின் மையத்தை கிராமப் பகுதிகளுக்குள் கொண்டு போய்விட்டது.

சிறை வாழ்க்கை கீழ்மையும் அவமதிப்பும் மனித ஆளு

மையை நசுக்கிவிடுகின்ற அமைப்பும் கொண்டிருக்கிறது. எனி னும் மனிதன் சிந்தனை செய்வதை அது தடுக்க முடியாது. மேலும் சிறை வாழ்க்கை எந்த மாற்றமும் இல்லாமல் ஒரே மாதிரியாகப் போய்க் கொண்டிருப்பது வேதனையைத் தரும். அங்கே ஒரு மனிதனைக் காப்பாற்றுவது அறிவுபூர் வமான நடவடிக்கையே. ஜவகர்லால் தன் மகளுக்குக் கடிதங் கள் எழுதுவதற்கு சிறைச்சாலை அதிகாரிகளின் அனுமதியைப் போராடிப் பெற்றார். பல வருடங்களாக மகளைப் பிரிந்திருக் கும் தகப்பனருக்கு, அந்தப் பெண்ணின் அக வளர்ச்சியைத் தூண்டுவதற்கு, தன்னுடைய அறிவை அந்தப் பெண்ணோடு பகிர்ந்து கொள்வதற்கு இது ஒரு அதிசயமிக்க வாய்ப்பாக இருந்தது. உலக வரலாற்றில் தன்னைக் கவர்ந்த முக்கியமான சம்பவங்களைப் பற்றி எளிமையாகவும் சுவாரசியமாகவும் இந்திராவுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற எண்ணம் நெடுங்காலத்துக்கு முன்பே அவருக்கு ஏற்பட்டிருந்தது. இப் பொழுது அதை நிறைவேற்றுவதற்கு எந்தத் தடையும் இல்லை...

இந்திய மக்களின் உறுதி அதிகாரிகளுக்கு ஆத்திரமூட் டியது; அவர்கள் அடக்குமுறையையும் ஒடுக்குமுறையையும் அதிகப்படுத்தினார்கள். அரசியல் கைதிகளுக்குக் கசையடி தண் டனைகள் மென்மேலும் அதிகமாகப் பின்பற்றப்பட்டன. ஜவ கர்லால், சையது முகமது மற்றும் இதர இரண்டு கைதிகள் — இத்த கைய தண்டனைகளுக்குத் தாங்கள் உட்படுத்தப்படாத போதி லும் — மற்ற சிறைக் கைதிகளோடு ஒருமைப்பாட்டுக்கு அறி குறியாக மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருக்கப் போவ தாக அறிவித்தார்கள்.

1931ம் வருடம் பிறந்தது. வருடப் பிறப்பு தினத்தன்று கமலா கைது செய்யப்பட்ட செய்தி ஜவகர்லாலுக்குக் கிடைத் தது. ''எனக்கு மிகவும் அதிகமான மகிழ்ச்சி ஏற்படுகிறது. என் கணவரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுவதைப் பற்றிப் பெருமைப்படுகிறேன்'' என்று கமலா கைது செய்யப்பட்ட பொழுது கூறினாள்.

அந்த சமயத்தில் மோதிலால் நேரு சிகிச்சைக்காக ஐரோப்பாவுக்குப் புறப்படுவதற்காகக் கல்கத்தாவுக்குச் சென் றிருந்தார். கமலா கைதாகியிருப்பதை அறிந்ததும் அவர் தன் முடிவை மாற்றிக் கொண்டு அலகபாத்துக்கு அவசர மாகத் திரும்பினார்.

ஜனவரி 18ந் தேதியன்று அவர் தன் மகனுடனுன சந்திப்பைப் போராடிப் பெற்ருர். ஜவகர்லால் தன் தகப்பனுரைப் பார்த்து சுமார் இரண்டு மாதங்களாகியிருக்கும். இப்பொழுது தகப்பனுரின் தோற்றத்தைப் பார்த்து அவர் திடுக்கிட்டார். மோதிலால் நேருவின் முகம் வீங்கியிருந்தது, பேசிக்கொண்டிருக்கும் பொழுது சுவாசிப்பதற்கு அவர் சிரமப்பட்டார். தகப்பனுரை இழந்துவிட நேருமோ என்ற பயங்கரமான எண்ணம் ஜவகர்லாலின் மனதில் பளிச்சிட்டது. இந்த எண்ணம் பகலிலும் இரவிலும் அவருக்கு நிம்மதி இல்லாமற் செய்து விட்டது. தன் தகப்பனுர் இல்லாத உலகத்தை அவரால் கற்பனை செய்யக் கூட முடியவில்லை. தன் மரணம் நெருங்கிக் கொண்டிருப்பதை மோதிலால் உணர்ந்தார். எனினும் மலர்ந்த முகத்தோடும் உற்சாகத்தோடும் இருப்பதற்குத் தன் முழுச் சக்தியையும் உபயோகித்தார். இன்னும் பல வருடங்கள் நான் உயிரோடிருப்பேன் என்று மகனிடம் கூறினுர்.

லண்டனில் அப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருந்த முதல் ''வட்ட மேசை மாநாட்டில்'' கலந்து கொண்ட சாப்ருவையும் ஜெயக்கரையும் அவர் கடுமையாக விமர்சனம் செய்தார். அவருடைய கருத்துக்கள் இடதுசாரித் திசையில் கணிசமாக முன்னேறியிருந்தன என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. தன் தகப்பனுரிடம் இத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதைக் கண்டு ஜவகர்லால் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவருடைய உடல்நிலை இதற்கு மேலும் பலவீனமடையாதிருந்தால்...!

கடந்த சில வருடங்களாகவே பெருந்திரளான மக்கள் காங்கிரஸ் அணிகளுக்குள் இழுக்கப்பட்டிருந்தார்கள். அவர்களுடைய தாக்கத்தினுல் காங்கிரஸ் அதிகத் தீவிரமான போராட்ட முறைகளைப் பின்பற்றத் துணிந்தது. காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் அதில் மக்களுடைய பிரதிநிதிகளுக்கு அதிகமான செல்வாக்கு ஏற்படும், அவர்கள் சமூக, பொருளாதாரச் சீர்திருத்தங்களைக் கோருவார்கள் என்பதில் சந்தேகமில்லை என்பதை லண்டன் வட்டாரத்தினர் நன்ருக அறிந்திருந்தார்கள். இதை நினைத்துக் காலனியாதிக்கவாதிகள் மட்டு

மின்றி இந்தியாவின் சொத்துடைமை வர்க்கத்தினரும் அஞ்சினார்கள். இந்திய தேசியவாதத்தின் நாகரிக உடைகளை அணிந்து கொண்டிருந்த சொத்துடைமை வர்க்கத்தினர் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் தங்களுக்கும் பல பொதுவான அம்சங்கள் இருப்பதை ''வட்ட மேசை மாநாட்டில்'' கண்டார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவின் மிதவாதிகளைத் தட்டிக் கொடுத்தது. மிதவாதிகளின் உதாரணத்தைப் பின்பற்றுமாறு காங்கிரஸ் உறுப்பினர்களைக் கேட்டுக் கொண்டது.

லண்டனிலிருந்து வெளியான வேண்டுகோள்கள் எல்லா காங்கிரஸ்காரர்களின் மனங்களையும் மாற்றவில்லை என்று சொல்ல முடியாது. 1931 ஜனவரி மத்தியில் இந்தப் பிரச்சினையை விவாதிப்பதற்காக காங்கிரஸ் செயற்குழுவின் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. நெருக்கடி ஏற்படப் போவதை முன்னூகித்த மோதிலால் நேரு இக்கூட்டத்தைத் தன் வீட்டிலேயே நடத்துவதில் வெற்றி பெற்றார். சட்ட மறுப்புப் போராட்டத்தை நிறுத்திவைக்க வேண்டும் என்று ஒரு உறுப்பினர் முன்மொழிந்த பொழுது தேசிய இலட்சியம் நிறைவேறும் வரை எந்தச் சலுகையும் தர முடியாது, தேவைப்பட்டால் நான் ஒருவனே போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவேன் என்று மோதிலால் நேரு ஆத்திரமாகக் கூறினார். அவர் உறுதியான நிலையெடுத்தபடியால் செயற்குழு சமரசவாதிகளைக் கண்டனம் செய்து தீர்மானம் நிறைவேற்றியது.

1931 ஜனவரி 26ம் தேதி, சுதந்திரத்துக்கு உறுதிமொழி எடுத்த தினத்தின் முதல் ஆண்டு விழா நெருங்கிக் கொண்டிருந்தது. நாடு முழுவதிலும் நகரங்களிலும் கிராமங்களிலும் நடைபெற்ற பொதுக் கூட்டங்களில் ''போராட்டத்தில் கலந்து கொண்டவர்களுக்கு நன்றி தெரிவிக்கும்'' தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்தக் கூட்டங்களில் பங்கு கொண்டவர்கள் தங்களது பிரிட்டிஷ் குடியுரிமையைக் கைவிட்டுத் தாங்கள் சுதந்திரமான மக்கள் என்று ஆரவாரத்தோடு அறிவித்துக் கொண்டார்கள்; தாய்நாட்டின் சுதந்திரத்துக்காக நடைபெறும் மாபெரும் போராட்டத்தில் பங்கெடுத்துத் துன்பங்களை அனுபவித்துத் தங்கள் உயிர்களை அர்ப்பணித்த இந்தியப் புதல்வர்களுக்கும் புதல்வியர்களுக்கும் நன்றி செலுத்தினார்கள்... முழு வெற்றி கிடைக்கும் வரை போராட்

டத்தைத் தொடர்ந்து நடத்துவதென்று இந்தியர்கள் சபதம் செய்தார்கள்.

சத்யாக்ரஹப் போராட்டத்தை நிறுத்துவதைப் பற்றி இந்திய தேசிய காங்கிரசுடன் உடன்பாட்டுக்கு வர முடியும் என்று இன்னும் நம்பிய அதிகாரிகள் எல்லா காங்கிரஸ் தலைவர்களையும் சிறைச்சாலைகளிலிருந்து விடுதலை செய்யுமாறு உத்தரவிட்டார்கள். இந்த உத்தரவு ஜனவரி 26ந் தேதி யன்று நைனிடால் சிறைச் சாலைக்குக் கிடைத்தது. மோதி லால் நேரு மரணப்படுக்கையில் இருக்கிறார் என்ற செய்தியும் அதே சமயத்தில் ஜவகர்லாலுக்குக் கிடைத்தது.

உறவினர்களும் நண்பர்களும் வீடு முழுவதும் நிறைந் திருந்தார்கள். ஒருவரும் வாய் திறந்து பேசவில்லை. ஜவகர் லாலின் தாயார் நிம்மதியின்றி ஒரு நிழலைப் போல ஒவ் வொரு அறையாகப் போய்க் கொண்டிருந்தாள். அவள் கண வரின் படுக்கைக்குப் பக்கத்திலேயே பல இரவுகள் உறங் காமல் விழித்திருந்தாள். அவள் கவலையினாலும் களைப்பினாலும் மெலிந்து துரும்பைப் போலத் தோன்றினாள்.

ஜவகர்லால் தகப்பனாருடைய படுக்கை அறைக்குள் நுழைந்தார். மகன் வருகையை எதிர்பார்த்துக் கொண் டிருந்த மோதிலால் நேரு அவரைப் பார்த்ததும் அதிகமான சிரமத்தோடு தலையணைகளிலிருந்து எழுந்தார். மகனைத் தழுவு வதற்காக நடுங்கிக் கொண்டே கரங்களை நீட்டினார். அவர் முகம் மலர்ந்தது. மரணம் வருவதற்கு முன்பு தான் மிகவும் நேசித்த மகனைப் பார்க்க முடிந்ததைப் பற்றி அவர் ஆனந்த மடைந்தார்.

சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட கமலாவும் காந்தியும் அலகபாத்தை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தார்கள். மோதிலால் சில சமயங்களில் நினைவிழந்தார். ஆனால் நினைவு திரும்பிய ஒவ்வொரு தடவையும் காந்தி வந்து விட்டாரா என்று கவலையோடு கேட்டார்.

பூனாவிலிருந்து வரும் இரயில் இரவில் வெகு நேரத் துக்குப் பிறகு வந்து சேர்ந்தது. மரணப்படுக்கையிலிருந்த நண்பரை, தன்னுடைய போராட்டங்களின் உற்ற தோழரை காந்தி சில நிமிடங்கள் அமைதியாகப் பார்த்துக் கொண் டிருந்தார். ''இந்த நெருக்கடியிலிருந்து நீங்கள் உயிர் பிழைத்து விட்டால் நாம் நிச்சயமாக சுதந்திரத்தை அடைவோம்''

என்று மென்மையான, பிறரை வசீகரிக்கும் குரலில் கூறினார்.

''இல்லை'' என்று மோதிலால் உறுதியாகப் பேசினார். ''மகாத்மா! நான் சீக்கிரத்தில் இறந்து விடுவேன். சுதந்திரம் கிடைக்கும் பொழுது நான் இருக்க மாட்டேன். ஆனால் நீங்கள் வெற்றியின் விளிம்பில் நிற்கின்றீர்கள் என்பதை நான் பார்க்கிறேன். இந்தியா வெகு சீக்கிரத்தில் சுதந்திரம் அடையும்.''

அவரை லக்னோவிலுள்ள மருத்துவ மனைக்கு மாற்ற வேண்டுமென்று மருத்துவர்கள் வற்புறுத்தினார்கள். அவர் தன் வீட்டிலேயே மரணமடைய விரும்பினார். எனவே தன் எஞ்சிய பலத்தைத் திரட்டி மருத்துவ மனைக்கு மாற்ற வேண்டாம் என்று சொல்லிய பிறகு கடைசியில் ஒத்துக்கொண்டார். பிப்ரவரி 5ந் தேதியன்று காலையில் லக்னோ மருத்துவ மனையில் அவர் கண் விழித்த பொழுது அவரது உடல்நிலையில் திடீர் அபிவிருத்தி ஏற்பட்டிருந்தது. ஆனால் சற்று நேரத்தில் நம்பிக்கை குறைந்தது. அவரால் பிராணவாயு இல்லாமல் சுவாசிக்க முடியவில்லை. ஜவகர்லால் தகப்பனாரின் படுக்கைக்குப் பக்கத்திலேயே இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பொழுது புலர்வதற்கு முன்னர் அவர் தன்னையறியாமல் உறங்கிவிட்டார். அவர் கண் விழித்த பொழுது காலைக் கதிரவனின் முதற் கதிர்கள் அறைக்குள் ஊடுருவி வருவதைக் கண்டார். அவர் தகப்பனாருடைய முகம் அசாதாரணமான அமைதி நிறைந்து காலைக் கதிரவன் ஒளியில் பிரகாசித்தது. தாயாரின் அழுகுரலைக் கேட்டு அவர் உடல் நடுங்கியது.

மோதிலால் நேருவின் இறுதிச் சடங்குகள் மாலையில் கங்கை ஆற்றின் கரையில் நடைபெற்றன. அவர் உடல் காங்கிரஸ் மூவர்ணக் கொடியில் போர்த்தப்பட்டுத் தூக்கி வரப்பட்டது. சந்தனக் கட்டைகளின் மீது உடல் வைக்கப் பட்டது. ஜவகர்லால் சிதையில் தீப்பந்தத்தைச் சொருகி மகன் என்ற முறையில் தன் இறுதிக் கடனை நிறைவேற்றினார். நெருப்பு கொழுந்து விட்டு எரிந்தது. அங்கே இருட்டில் கங்கை ஆற்றின் இரு கரைகளிலும் திரண்டிருந்த ஆயிரக் கணக்கான இந்தியர்களின் கவலை தேங்கிய முகங்களை அது எடுத்துக் காட்டியது.

## அத்தியாயம் எட்டு

பழைய டில்லி நகரம் அதிகாலையிலேயே விழித்துக் கொண்டது. அந்தக் காலைப் பொழுதில் பால், காய்கறி கள், பழங்கள், பலகாரங்களை விற்பனை செய்பவர்கள் தெருக் களில் நடமாடிக் கொண்டிருந்தார்கள். நகராட்சி தெருக் கூட்டுபவர்கள் தலைப்பாகைகளோடும் கிழிந்த உடைகளோடும் டில்லிக் கடைவீதியின் குறுகலான தெருக்களைக் கூட்டிக் கொண்டிருந்தார்கள். · இவர்கள் ''தீண்டத்தகாதவர்கள்''. நகரத் தெருக்களைக் கூட்டிச் சுத்தம் செய்வதுதான் அவர் களுக்குத் தரப்பட்டிருந்த ஒரே ஒரு உரிமை.

டில்லிக்கு வருகின்ற காங்கிரஸ்காரர்கள் வழக்கமாகத் தங்கும் டாக்டர் அன்சாரியின் வீட்டிலிருந்து நகரத்தின் புதிய பகுதியிலிருக்கும் வைசிராய் மாளிகை பத்து கிலோமீட் டருக்கும் குறைவான தூரத்தில் இருந்தது. காந்தியும் நேரு வும் இந்த தூரத்தை நடந்தே கடந்தனர். பிப்ரவரி மாதத் தில் டில்லியில் பருவநிலை மிக நன்ருக இருக்கும். அங்கே வீசும் குளிர்ந்த காற்றில் புதிய புல்லின் இனிய மணம் கலந் திருக்கும்.

காந்தியும் நேருவும் மெதுவாக, பெரும்பாலும் மௌன மாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். மகாத்மா கையில் பிடித்துக் கொண்டிருந்த கைத்தடியைத் தரையில் தட்டிக் கொண்டே நடந்தார். அவருடைய மெலிந்த உடலையும் அந்தக் கைத்தடியின் பருமனையும் பார்க்கும் பொழுது விசித் திரமாக இருந்தது. நேரு பளபளப்பான கம்பளி ஷெர்வானி அணிந்து உடலை லேசாகக் குறுக்கியவாறு நடந்தார். உடலில் பாதியை மட்டுமே மூடியிருந்த காந்தியைப் பார்த்து நேரு அவ்வப்பொழுது சிரிப்பார். காந்தி தன் இடையைச் சுற்றி

ஒரு வெள்ளைத் துணியை மட்டும் போர்த்தியிருந்தார். பிப்ர வரி மாதத்தில் காலையில் வீசிய குளிர் காற்று அவரை ஒன்றும் செய்யவில்லை என்று தோன்றியது.

பழைய டில்லியின் புழுதிபடித்து வளைந்து போகும் தெருக் கள் மறைந்தன. புதிய டில்லியின் அகன்ற, நேராகச் செல் லும் சாலைகள் தோன்றின. சிறிது காலத்துக்கு முன்பு இது பாழ்நிலமாக இருந்தது. ஆனால் இப்பொழுது தலைசிறந்த ஆங்கிலச் சிற்பிகளின் திட்டங்களும் ஆயிரக்கணக்கான இந் தியத் தொழிலாளர்களின் உழைப்பும் அப்பாழ்நிலத்தை மாற்றி யமைத்து விட்டன. காலனி அதிகாரிகள் வசிப்பதற்காக அழகான வீடுகள் இங்கே கட்டப்பட்டிருந்தன.

சிகப்புப் பாறைக் கற்களால் கட்டப்பட்ட வைசிராய் மாளிகை குன்றின் மீது உயரமாகத் தோன்றியது. ஒரு காலத்தில் மாபெரும் முகலாய சக்கரவர்த்திகள் அதே சிகப்புப் பாறைக் கற்களைக் கொண்டு தங்களுடைய ஆட்சிக்கு நினைவுச் சின்னங்களை—செங்கோட்டையையும் ஜும்மா மசூ தியையும்—கட்டினார்கள். அந்த இடத்தைப் பற்றிச் சொல் லப்படும் பழங்கதையை ஜவகர்லால் நினைத்துக் கொண்டார். 14ம் நூற்றாண்டில் கொடூரமான தைமூர் போரில் கொல் லப்பட்ட பல்லாயிரக்கணக்கான இந்தியர்களின் மண்டை ஓடு களைக் கொண்டு அந்த இடத்தில் ஒரு பிரமிடைக் கட்டிய தாகச் சொல்லப்படுவதுண்டு. 1910 முதல் 1916 வரை இந்தி யாவின் வைசிராயாக இருந்த ஹார்டிங்கு பிரபு நாட்டை ஆட்சி புரியும் வைசிராயின் மாளிகையைக் கட்ட அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்த பொழுது அவருக்கு இந்தப் பழங் கதை தெரியுமா?

வைசிராய் இர்வின் பிரபுவோடு காந்தியின் பேச்சு வார்த்தைகள் 1931 பிப்ரவரி 17ந் தேதியன்று தொடங் கின. அதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஜவகர்லால் டில் லிக்கு வந்தார். காங்கிரஸ் செயற்குழுவின் எல்லா உறுப் பினர்களையும் டில்லிக்கு வருமாறு காந்தி தந்தி மூலம் கேட்டுக் கொண்டிருந்தார்.

இந்தப் பேச்சுவார்த்தைகளுக்கு முன்பாக முதல் ''வட்ட மேசை மாநாட்டில்'' கலந்து கொண்டவர்கள் லண்டனி லிருந்து திரும்பியதும் அலகபாத்தில் நேருவின் வீட்டில் காங் கிரஸ்காரர்களைச் சந்தித்துப் பேசினார்கள். அந்த மாநாட்டில்

கலந்து கொண்ட மிதவாதிகளின் தலைவர்களான சர் டேஜ் பகதூர் சாப்ரூ, சீனிவாச சாஸ்திரி மற்றும் எம். ஆர். ஜெயக்கர் காங்கிரஸ் தலைவர்களைச் சந்திப்பதற்கு மிகவும் அவசரமாக வந்தார்கள். லண்டனில் அவர்களுடைய இரட்டை வேடத்தை நியாயப்படுத்துவது அவர்களுடைய நோக்கமாக இருந்திருக்கலாம்.

சீனிவாச சாஸ்திரி எடின்பரோவுக்குப் போன பொழுது அந்த நகர மன்றம் அவரைத் தனது கௌரவ உறுப்பின ராக்கிச் சிறப்பளித்தது. அவர் இந்தியாவில் சத்யாக்ரகத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றவர்களைப் பழித்துப் பேசி பிரிட்டிஷ்காரர்களுக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். இப்பொழுது காங்கிரஸ்காரர்களைச் சந்தித்தவுடன் எடின் பரோவில் நிகழ்த்திய சொற்பொழிவுக்காக வருந்துவதாகக் கூறினார். பிறகு மிதவாதிகள் லண்டன் மாநாட்டின் விளைவு களைப் பற்றி ஒரு அறிக்கையைப் படித்தார்கள். லண்டன் அரசியல்வாதிகள் ''உலக சகோதரத்துவத்துக்கு'' விடுத்த அறைகூவலின் தாக்கம் அவர்கள் மீது இன்னும் நீடித்த படியால் அடுத்த ''வட்ட மேசை மாநாட்டில்'' காங்கிரஸ் காரர்கள் கலந்து கொள்ள வேண்டுமென்று சாப்ரூவும் சாஸ் திரியும் மிகவும் முயற்சி செய்தார்கள். ''தீர்க்கப்படாதிருக்கும் பிரச்சினைகளை'' சமாதானபூர்வமாகத் தீர்த்துக் கொள்வது அவசியம், அதற்கிடையில் முதல் சமிக்கை என்ற வகையில் சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப்பட வேண்டும் என்று மிதவாதிகள் வாதாடினார்கள்.

இந்த ''சமாதான தூதர்களின்'' அலங்காரமான, ஆற் றொழுக்கான சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்த நேரு, பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை விட்டுப் போய்விடக் கூடாது என்பதே இவர்களுடைய கவலை, அதற்காக இவர் கள் எதையும் ஒத்துக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள், இல்லையென்றால் இந்தியர்களிடமிருந்து, கட்டுப்பாடில்லாத ஜனநாயகத்திலிருந்து இவர்களை யார் காப்பாற்றுவார்கள் என்று வேதனையோடு நினைத்தார்.

மிதவாதிகளின் ஆலோசனைகளை நேரு ஆத்திரத்தோடு நிராகரித்தார். இந்தியாவில் இந்தியர்களுக்கு முழு அதிகாரம் இருக்க வேண்டும் என்றார். ''உறவுகளைச் சரிப்படுத்திக் கொள் ளுதல்,'' இந்தியாவின் எதிர்கால அரசு அமைப்பு ஆகிய

பிரச்சினைகளைப் பற்றி லண்டன் அதிகாரிகள் இந்திய தேசிய காங்கிரசோடு விவாதிக்க விரும்பினால் அவர்கள் இராணுவம் மற்றும் நாட்டின் நிதிப் பொறுப்பை இந்தியர்களிடம் ஒப் படைக்க வேண்டும், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் இராணு வத்தை உடனடியாகத் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண் டும் என்றார்.

**1931** பிப்ரவரியில் அமெரிக்காவிலிருந்து வெளியாகும் *The Hartford Times* இதழின் நிருபர் நேருவைப் பேட்டி கண்டார்.

''**கேள்வி:** காங்கிரசின் இலட்சியத்தை சட்டபூர்வமான முறைகளின் மூலம் அடைய முடியாதா?

**பதில்:** இந்தியாவில் அரசியலமைப்புச் சட்டம் கிடையாது, அத்தகைய சட்டம் ஏற்படும் வரை சட்டபூர்வமான முறைகளைப் பற்றிப் பேசுவது பொருளற்றதாகும்.

**கேள்வி:** பிரிட்டனின் உதவியினால் காலப்போக்கில் எல்லாம் சரியாகி விடும் என்று நீங்கள் நம்பவில்லையா?

**பதில்:** 'காலப்போக்கு' என்பதை நாங்கள் விரும்ப வில்லை. அது இப்பொழுது வேண்டும். ஆட்சியதிகாரத்தை அபகரித்தவர் கள் அதை ஒருபோதும் நயமான முறையில் திருப்பிக் கொடுத் தது கிடையாது.

**கேள்வி:** பிரிட்டனின் பெருந்தன்மையில் உங்களுக்கு நம் பிக்கை கிடையாதா?

**பதில்:** நான் பிரிட்டிஷ் வரலாறு முழுவதையும் படித் திருக்கிறேன். அந்த வரலாற்றில் பெருந்தன்மைக்கு ஒரு உதாரணத்தைக் கூட நான் பார்க்கவில்லை. மேலும் நாங்கள் பெருந்தன்மையை விரும்பவில்லை.''

மிதவாதிகளோடு இரண்டு நாட்கள் பேச்சுவார்த்தைகள் நடத்திய பிறகு லண்டன் மாநாடு முற்றிலும் தோல்வி யடைந்து விட்டதென்பதை நேரு கண்டார். எனினும் சத்யாக் ரஹம் நீடித்தால் இந்தியாவை நிர்வாகம் செய்வது சம்பந்த மாக புதிய சட்டமியற்றுவது பாதிக்கப்படும் என்று கவலைப் பட்ட அதிகாரிகள் இந்திய தேசிய காங்கிரசோடு தொடர்பு களை ஏற்படுத்துவதில் அக்கறை காட்டினார்கள். காந்தி வைசி ராயைச் சந்தித்து காங்கிரசின் நிலையைப் பற்றி மனந்திறந்து பேச வேண்டும், அதன் பிறகு வைசிராயும் இந்தியாவைப் பற்றி அரசாங்க உத்தேசங்களை விளக்குவார் என்று ஒரு

காங்கிரஸ்காரர் ஆலோசனை கூறினர். இந்த ஆலோசனை அரசாங்கத்துக்கு முன்னால் மண்டியிடுவதைப் போல ஜவகர் லாலுக்குத் தோன்றியது. ஆனால் காந்தியும் செயற்குழுவின் பெரும்பான்மையான உறுப்பினர்களும் இர்வின் பிரபுவோடு பேச்சு வார்த்தைகள் நடத்துகின்ற சாத்தியத்தை ஒருபோதும் விலக்கவில்லை என்பதனால் அவர் இந்த ஆலோசனையை ஆட்சேபிக்கவில்லை. தான் செய்வது சரியான காரியம் என்று எதிரியை ஒத்துக் கொள்ளச் செய்ய முடியும் என்று காந்தி எப்பொழுதுமே நம்புவது நேருவுக்குத் தெரியும்.

இர்வின் பிரபுவோடு காந்தியின் பேச்சு வார்த்தைகள் மூன்று வார காலம் நீடித்தன. ஒவ்வொரு நாளும் இரவில் வெகுநேரம் வரை அவை நடைபெற்றன. காந்தி களைப் போடு திரும்புவார்; எனினும் இரவில் எவ்வளவு நேரமாகி யிருந்தாலும் உடனே செயற்குழு உறுப்பினர்களிடம் பேச்சு வார்த்தைகளைப் பற்றி விளக்கிக் கூறுவார். காந்தியின் அன்றுட அறிக்கைகளைக் கேட்ட பிறகு, முதலில் தீர்மானிக்கப் பட்டதைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு சமரசம் செய்து கொள்ள காந்தி தயாராக இருக்கிறார் என்று நேருவுக்குத் தோன்றியது. காந்தியின் வற்புறுத்தலின் பேரில் காங்கிரஸ் எடுத்துக் கொள்ள வேண்டிய பொறுப்புகளோடு ஒப்பிடும் பொழுது அரசாங்கம் கொடுத்த சலுகைகள் மிகவும் அற்ப மானவையாகத் தோன்றின. பேச்சு வார்த்தைகளின் முடிவு அவருக்குக் கவலையைக் கொடுத்தது. அவர் காந்தியுடன் தன் அச்சங்களைப் பகிர்ந்து கொண்டார். நேருவை மற்றக் காங்கிரஸ்காரர்களும் ஆதரித்தனர். இந்த சமரசம் தோல்வி யாகக் கருதப்படாமலிருப்பதற்காக வேறு சில அம்சங் களையும் சேர்த்துக் கொண்டால் நல்லது என்று இராஜேந்திர பிரசாத் காந்திக்கு முன்பாகவே கிண்டலாகக் கூறினர். எனி னும் காந்தி தன் தோழர்களின் அச்சங்களைப் பகிர்ந்து கொள்ளவில்லை. இராஜேந்திர பிரசாத் கிண்டலாகப் பேசிய பிறகு ''சமரசம் தோல்வியை வெற்றியாகவோ அல்லது வெற்றி யைத் தோல்வியாகவோ மாற்றி விடாது'' என்று காந்தி பலத்த சிரிப்புக்கிடையே கூறினர்.

மார்ச் 4ந் தேதி நள்ளிரவு நேரத்தில் டாக்டர் அன்சாரி யின் வீட்டில் அதிகமான பரபரப்புக் காணப்பட்டது. காந் திக்கும் வைசிராய்க்கும் ஏற்பட்டிருக்கும் உடன்பாட்டின் வாசக

கத்தின் பிரதியோடு காந்தி வருவதை அவர்கள் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதிகாலையில் சுமார் இரண்டு மணிக்கு காந்தி வந்தார். அங்கேயிருந்த தோழர்களிடம் எண்ணற்ற குறிப்புகள் அடங்கிய சில காகிதங்களை ஒன்றுமே பேசாமல் கொடுத்து விட்டு அவர்களிடமிருந்து தள்ளிப் போய் ஒரு சாய்வு நாற்காலியில் சோர்வோடு உட்கார்ந்தார். அந்த உடன்பாட்டின் ஷரத்துக்களில் பெரும்பாலானவை ஜவ கர்லாலுக்கு முன்பே தெரிந்தவை என்ற போதிலும் அவர் அந்த ஆவணத்தின் வாசகத்தை மிகவும் கவனமாகப் படித் தார். காங்கிரஸ் செயற்குழு முடிவு செய்தபடி முதல் ஷரத்து சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்திவிடுவதைப் பற்றிக் குறிப் பிட்டது. இதற்குப் பதிலாக அரசாங்கம் அடக்குமுறையைப் பிரயோகிப்பதில்லையென்றும் இந்திய தேசிய காங்கிரசை சட்ட பூர்வமான ஸ்தாபனம் என்று அங்கீகரிப்பதற்கும் ஒத்துக் கொண்டது. அடுத்த ''வட்ட மேசை மாநாட்டில்'' இந்திய தேசிய காங்கிரஸ் கலந்து கொள்வதென்றும் முடிவு செய்யப் பட்டிருந்தது.

இந்த உடன்பாடு காங்கிரசுக்கு வெற்றி என்று மதிப்பிட முடியுமா? அதற்கு மாறானதே என்ற வேதனை தரும் முடி வுக்கு ஜவகர்லால் வந்தார். 1930ம் வருடத்தின் வசந்த காலத்தில் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கிய பொழுது அவர்கள் முன்வைத்த கோரிக்கைகளில் ஒன்றுகூட ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அரசாங்கம் நிர்ப்பந்தத்தின் பேரால் கொடுத்திருக்கும் சலுகைகளும் கூட பல்வேறு நிபந்தனைகளா லும் விதிவிலக்குகளாலும் பலனில்லாமற் போய்விடலாம்.

உடன்பாட்டின் இரண்டாவது ஷரத்து ஜவகர்லாலுக்கு முற்றிலும் வியப்பைக் கொடுத்தது. ''இந்தியாவின் நலன் களுக்கு உத்தரவாதமளித்தல்'' என்ற அலங்காரமான சொற் றொடருக்குப் பின்னால் இந்தியாவில் தங்கள் காலனி ஆதிக்கத் தைத் தக்க வைத்துக் கொள்வதோடு பலப்படுத்திக் கொள்ள பிரிட்டன் விரும்புவது அவ்வளவு சாமர்த்தியமாகக் கூட மறைக்கப்படவில்லை. கடைசி ஷரத்து இந்தியர்களைப் பகிரங்கமாகவே பயமுறுத்தியது. ''காங்கிரஸ் இந்த உடன் பாட்டிலுள்ள பொறுப்புகளை முழுமையாக நிறைவேற்றத் தவ றினால், பொது அமைதியையும் தனி நபர்களையும் பாதுகாப் பதற்கு, சட்டமும் ஒழுங்குமுறையும் நிலவச் செய்வதற்குத்

தேவையான எல்லா நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுக்கும்.''

ஜவகர்லால் சொல்ல முடியாத வேதனையில் மூழ்கினுர். ''நம் மக்கள் ஒரு வருடகாலம் வீரத்தோடு போராடியது இதற்காகத்தானு? நம் வீர உரைகளும் செயல்களும் கடைசியில் இப்படியா முடிய வேண்டும்? காங்கிரசின் சுதந்திரத் தீர்மானம், ஜனவரி 26ந் தேதி தரப்பட்ட, திரும்பத்திரும்ப எடுத்துக் கொள்ளப்பட்ட உறுதி மொழியின் கதி என்ன?''

காந்தியும் இர்வின் பிரபுவும் 1931 மார்ச் 5ந் தேதியன்று காலையில் உடன்பாட்டில் கையொப்பமிட்டார்கள். அது பிற் காலத்தில் டில்லி உடன்பாடு அல்லது காந்தி—இர்வின் உடன் பாடு என்று சொல்லப்பட்டது.

நேரு சோர்வடைந்திருப்பதைக் கண்ட காந்தி, ஆங்கில அரசாங்கத்தோடு உடன்பாட்டுக்கு வந்திருப்பதனுல் காங்கிரஸ் ஏற்கெனவே கொண்டிருந்த நிலைகளைக் கைவிட்டிருப்பதாகச் சிறிதும் அர்த்தமல்ல என்று அவரை நம்பவைப்பதற்கு முயற்சி செய்தார். உடன்பாட்டில் நேருவின் கவலையைத் தூண்டி யிருக்கும் ஷரத்துக்கள் சுதந்திரத்தைப் பெறுவதற்குத் தாங்கள் தேர்ந்தெடுத்திருக்கும் பாதைக்குச் சிறிதும் முரண்பட்டிருக்க வில்லை என்று காந்தி உறுதியளித்தார். பிரிட்டிஷ் அர சாங்கம் முதல் தடவையாக இந்தியாவின் மிகப் பெரிய கட்சியின் பிரதிநிதிகளோடு பேச்சுவார்த்தை நடத்தியிருப்பது தங்களுடைய இயக்கத்தின் பலத்தைக் காட்டவில்லையா, எதிர் கால வெற்றியில் தங்களுடைய நம்பிக்கையைப் பலப்படுத்த வில்லையா என்று கடைசியாகக் கேட்டார்.

நேருவின் கருத்தை காந்தியால் மாற்ற முடியவில்லை. அவர் திடீரென்று ஏதாவது முடிவுகளைச் செய்வது தங்களுக்குக் கவலையளிக்கிறது என்று நேரு வருத்தத்தோடு கூறினுர். உதாரணமாக, உடன்பாட்டின் இகழார்ந்த இரண்டாவது ஷரத்தைக் காங்கிரஸ்காரர்களின் அனுமதியில்லாமல் காந்தி சேர்த்திருந்தார். ஜவகர்லால் கூறியதை காந்தி ஒத்துக் கொண்டார். என்னிடம் ''எனக்குத் தெரியாத ஒரு அகப் பண்பு'' இருக்கிறது, அதன் முடிவுகளை நான் விளக்க முடி யாது என்று வேடிக்கையாகப் பேசுவதைப் போல சிரித்துக் கொண்டே கூறினுர். காந்தி இப்படிப் பேசும் பொழுது நேருவினுல் ஒன்றும் சொல்ல முடியாது போய்விடும். டில்லி

உடன்பாட்டைப் பற்றி மதிப்பிடுவதில்— அவர்களுக்கிடையே வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவர்களுடைய உறவை அது பாதிக்கவில்லை. மோதிலால் நேருவின் மரணத் துக்குப் பிறகு அது இன்னும் நெருக்கமானதாகி விட்டது. ஜவகர்லால் பிற்காலத்தில் பின்வருமாறு எழுதினார்: ''நான் எதைச் சொன்னாலும் அவர் எப்பொழுதும் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருப்பார், என்னுடைய விருப்பங்களை நிறை வேற்ற எல்லா முயற்சிகளையும் செய்வார். அவர் சோஷலிஸ்ட் திசையில் தொடர்ச்சியாகச் செல்லக் கூடிய தாக்கத்தை ஒரு வேளை நானும் சில சகாக்களும் அவர் மீது ஏற்படுத்த முடியும் என்று இது என்னை நினைக்கத் தூண்டியது. இப்பா தையைப் பார்க்க முடியுமானால் ஒவ்வொரு படியாக முன்னே றுவதற்கு நான் தயார் என்று அவரே சொல்லியிருக்கிறார். அவர் அடிப்படையில் சோஷலிஸ்ட் நிலையை ஏற்றுக் கொள் வது அநேகமாகத் தவிர்க்க முடியாதது என்று எனக்குத் தோன்றியது ஏனென்றால் இன்றைக்கிருக்கும் அமைப்பின் வன் முறை, அநீதி, வீணாக்குதல் மற்றும் வறுமையிலிருந்து விடுபடு வதற்கு எனக்கு வேறு வழி தெரியவில்லை.'' மகாத்மாவின் நோக்கங்களுக்கும் சோஷலிஸ்ட் இலட்சியங்களுக்கும் (நேரு பிந்தியவற்றைப் புரிந்து கொண்டு விளக்கிக் கூறிய அளவில்) தீவிரமான வேறுபாடுகள் இருப்பதைப் புரிந்து கொண்டு காந்தியை ''சோஷலிஸ்ட் இலட்சியத்துக்குத்'' திருப்புகின்ற எண்ணத்தை ஜவகர்லால் சீக்கிரத்திலேயே கைவிட்டார்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு செய்து கொண்ட உடன் பாட்டின் பலவீனத்தையும் ஸ்திரமற்ற தன்மையையும் பார்த்த ஜவகர்லால் அதைப் பற்றி காந்தி செய்த மதிப்பீட்டிலிருந்து வேறுபட்டார். எனினும் காங்கிரஸ் அணிகளின் ஒற்றுமை யைக் காப்பாற்றுவதற்காக அந்த உடன்பாட்டை அங்கீ கரிக்கும் செயற்குழு முடிவுக்குக் கட்டுப்படுவது அவசியமென்று கருதினார்.

1931 மார்ச் 8ந் தேதியன்று *The Hindu* நாளிதழுக்கு அளித்த பேட்டியில் நேரு இதைப் பற்றிப் பேசினார்: ''நாம் இன்னும் பேச்சுவார்த்தைகளைத் தொடர்கிறோ மென்றால் லாகூர் காங்கிரசின் முடிவின் அடிப்படையில்தான் அதைச் செய்கிறோம், குறிப்பாக இராணுவத்திலும் பொரு ளாதார, நிதிக் கொள்கையிலும் இந்தியா முழு அதிகாரத்

தைப் பெற வேண்டும் என்ற நோக்கத்தில்தான் அதைச் செய்கிறோம்... என்பவற்றைத் தவிர இந்த அறிக்கைகளுக்குக் கூடுதலாகச் சொல்ல என்னிடம் ஒன்றுமில்லை.''

சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துவது என்றால் பிரிட்டிஷ்காரர்களோடு சமாதானம் செய்து கொண்டதாக அர்த்தமல்ல—அது போர்நிறுத்தமே என்று நேரு மறுநாள் லக்னோவில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசும் பொழுது கூறினார். இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்த பிறகுதான் சமாதானத்தைப் பற்றிப் பேச முடியும். போர்நிறுத்த உடன்பாட்டின் ஷரத்துக்கள் எல்லாமே தனக்குத் திருப்தியளிப்பதாகச் சொல்ல முடியாது, ஆனால் காங்கிரசின் போர்வீரன் என்ற முறையில் அந்த உடன்பாட்டின் ஷரத்துக்களை அமுல்படுத்துவது என்னுடைய கடமை என்றார். ''போர் நிறுத்த காலத்தை சோம்பிக்கிடப்பதில் கழித்துவிடக் கூடாது, இன்னும் அதிகமான பலத்தைத் திரட்டுவதற்கு அதை உபயோகிக்க வேண்டும்'' என்றார். நிர்ப்பந்தவசமாக மூச்சு விடுவதற்கு நேரம் கிடைத்திருக்கிறது, நம் அணிகளைப் பலப்படுத்துவதற்கு அதை உபயோகியுங்கள் என்று எல்லா தேசபக்தர்களையும் கேட்டுக் கொண்டார்.

கட்சி முடிவுக்குக் கட்டுப்பட்டவர் என்ற முறையில் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துமாறு மக்களைக் கேட்டுக் கொள்வதற்காக நேரு நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். இப்பொதுக் கூட்டங்களிலும் பேரவைகளிலும் டில்லி உடன்பாட்டின் சாராம்சத்தைத் தெளிவுபடுத்தினார். காங்கிரஸ் இயக்கத்தில் கட்டுப்பாடு அதிகரித்து வருவதைத் திருப்தியோடு கவனித்தார். காங்கிரஸ் தலைவர்களுடைய கொள்கையை எல்லோரும் ஒத்துக் கொண்டதாகக் கூற முடியாது, பலர் இர்வின் பிரபுவோடு நடத்திய பேச்சுவார்த்தைகளில் காந்தியின் நிலையைக் குறைகூறி உடன்பாட்டிற்கு எதிராகக் கருத்துரைத்தனர். எனினும் மிகப் பெரும்பான்மையான காங்கிரஸ்காரர்கள் சத்யாக்ரஹத்தை நிறுத்துவதாகச் செயற்குழு செய்த முடிவை சட்டவிதியாகக் கருதினார்கள்.

அலகபாத்தில் சில நாட்கள் தங்கியிருக்க வந்த பொழுது, தன்னுடைய சொந்த வீட்டுக்குத் திரும்பிவந்த பொழுது, தான் மிகவும் களைப்படைந்திருப்பதை ஜவகர்லால் உணர்ந்தார். ''உடல்நலம் சிறிதளவு பாதிக்கப்பட்டது'' என்று

அதைப் பற்றி அவரே நகைச் சுவையோடு எழுதியிருக்கிறார். சிறையிலிருக்கும் பொழுதே அவருடைய உடல்நிலை சீர்கேடடைந்தது. அங்கே தலைவலியால் அவர் சிரமப்பட்டார். தூக்கமின்மையும் அவரை வாட்டியது. தகப்பனார் மரணமடைந்த அதிர்ச்சியும் அவருடைய வாழ்க்கையில் தொடர்ச்சியாக ஏற்பட்ட—குறிப்பாக டில்லியில் பேச்சுவார்த்தைகளின் முடிவுக்காகக் காத்துக் கொண்டிருந்த நேரத்திலும்—நரம்பு அழுத்தமும் இப்பொழுது அவரைத் தாக்கின. ஆனால் அவருடைய ஆரோக்கியமான உடலமைப்பும், பார்வைக்கு முடிவில்லாதது போலத் தோன்றும் ஆற்றலும் வாழ்க்கையின் மேலான அன்பும் குடும்பத்தினரின் அன்பு மிக்க பராமரிப்பும் சீக்கிரத்தில் அவர் உடலைக் குணப்படுத்தின. சில நாட்களிலேயே அவர், தன் தாயார், மனைவி, சகோதரி கிருஷ்ணாவோடு காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொள்வதற்காக கராச்சிக்குப் புறப்பட்டார்.

மாநாடு 1931 மே 27ந் தேதியன்று சர்தார் வல்லபாய் படேல் தலைமையில் தொடங்கியது. குஜராத்தில் சத்யாக்ரஹப் போராட்டத்துக்குத் தலைமையேற்று வெற்றிகரமாக நடத்தியதால் படேல் பிரபலமடைந்திருந்தார்.

''கராச்சி காங்கிரஸ் மாநாடுதான் திறந்த வெளியில் நடத்தப்பட்ட முதல் மாநாடு'' என்று இராஜேந்திர பிரசாத் எழுதினார். ''டில்லி உடன்பாட்டுக்குப் பிறகு, அதன் ஷரத்துக்களில் கூறியபடி சத்யாக்ரஹிகளில் பெரும்பான்மையானவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். அவர்களில் ஏராளமானவர்கள் அந்த மாநாட்டில் கலந்து கொண்டார்கள்... கராச்சியில் இரண்டு முக்கியமான தீர்மானங்கள்—காந்தி—இர்வின் உடன்பாட்டை அங்கீகரித்த ஒரு தீர்மானம், இந்தியா சுதந்திரமடைந்த பிறகு பின்பற்றப்பட வேண்டிய திட்டத்தின் உருவரையை வகுத்துத் தருகின்ற மற்றொரு தீர்மானம்—நிறைவேற்றப்பட்டன. இரண்டாவது தீர்மானம் பொருளாதார சுதந்திரத்தைப் பற்றிக் குறிப்பிட்டது.'' இரண்டாவது தீர்மானத்தை ஜவகர்லால் தயாரித்திருந்தார். பொதுவான ஜனநாயக உரிமைகள் இந்திய மக்களுக்குத் தரப்பட வேண்டும், ஜாதி, மதக் கட்டுப்பாடுகள் அகற்றப்பட வேண்டும், வரிகள் குறைக்கப்பட வேண்டும், அரசாங்கத்தின் உப்பு ஏகபோகத்தை ரத்துச் செய்ய வேண்டும் மற்றும்

இதர கோரிக்கைகளோடு ஒரு முக்கியமான அம்சமும் அந்தத் தீர்மானத்தில் இடம் பெற்றிருந்தது. கேந்திரமான தொழில் துறை பிரிவுகளையும் இயற்கைச் செல்வ வளங்களையும் அரசு நிர்வகிக்க, அதாவது உண்மையில் அவற்றை தேசியமயமாக்கு வதற்கு உரிமை கோரப்பட்டது. ''சோஷலிசத் திசை வழியில் இது ஒரு சிறிய காலடி'' என்று நேரு இதைப் பற்றி அடக்கத்தோடு கூறினார்.

முழு சுதந்திரம் (பூரண சுயராஜ்யம்) என்ற கோஷம் சரியானதே என்பதை நிரூபித்த பிரதிநிதிகள் லண்டனில் நடைபெறவிருக்கும் இரண்டாவது ''வட்ட மேசை மாநாட்டில்'' காங்கிரஸ் கலந்து கொள்வதைப் பற்றி முடிவு செய்தார்கள். மாநாட்டில் காங்கிரசின் ஒரே பிரதிநிதியாக காந்தி மட்டும் கலந்து கொள்ள வேண்டுமென்று முன்மொழியப்பட்டது. ''பிரிட்டிஷ் அரசாங்கம் பிடிவாதமாக நடந்து கொண்டால் எண்ணிக்கையால் மட்டும் அவர்களை மாற்றிவிட முடியாது'' என்று காந்தி கூறினார். எனவே இந்த விஷயத்தில் பிரதிநிதிகள் அவருடைய கருத்தைத்தான் பின்பற்றினார்கள் என்று கூற வேண்டும்.

மாநாடு முடிவடைந்த பிறகு நேரு தன் உடல்நலத்தைப் பற்றிக் கவலைப்பட்ட குடும்பத்தினர் மற்றும் மருத்துவர்களுடைய வற்புறுத்தலுக்கு இணங்கி ஓய்வெடுத்துக் கொள்ள இசைந்தார். தனக்கு ஓய்வு அவசியம் என்பதை அவரும் உணர்ந்தார். ''எனக்கு வேண்டியதெல்லாம் உறக்கமும் வித்தியாசமான சூழலுமே'' என்று தன் மூத்த சகோதரிக்கு எழுதிய கடிதங்களில் ஒன்றில் குறிப்பிட்டிருந்தார்.

ஓய்வுக்காக இலங்கைக்குச் செல்வதென்று முடிவு செய்த பிறகு அவர் தன் முடிவைப் பின்வருமாறு விளக்கினார்: ''இந்தியா பெரிய நாடாக இருந்த போதிலும் வித்தியாசமான சூழல் அல்லது மன ஓய்வு உண்மையாகவே கிடைக்கக் கூடிய இடம் அங்கே இல்லை. ஏனென்றால் நான் எங்கே சென்றாலும் அங்கே அரசியல் சகாக்களைச் சந்திக்க நேரும், அதே பழைய பிரச்சினைகள் என்னைத் தொடரும். இந்தியாவுக்கு மிக அருகில் இலங்கை இருக்கிறது. எனவே நாங்கள்—கமலாவும் இந்திராவும் நானும்—இலங்கைக்குச் சென்றோம்''.

இரண்டு நாட்கள் கடலில் பிரயாணம் செய்த பிறகு ஏப்ரல் 23ந் தேதியன்று நேரு குடும்பத்தினர் இலங்கையில்

கால் வைத்தார்கள். எங்கு பார்த்தாலும் பசுமையான சோலைகள், தென்னந் தோப்புகள், தேயிலை மற்றும் ரப்பர் தோட்டங்கள். இரு நாடுகளுக்கும் பொதுவான கடந்தகால வரலாற்றால் அந்த தீவு இந்தியாவோடு நெருக்கமாக இணைந்திருக்கிறது. இலங்கையின் பழமையான வரலாற்றுச் சின்னங்களை நேரு பார்வையிட்டார்.

சிகிரியாவில் (அல்லது சிக்ககிரி—சிங்க மலை என்று பொருள்) 5ம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட மிகவும் அழகு நிறைந்த சிற்பங்கள் இருக்கின்றன. அந்தத் தீவின் அரசருடைய ஆணையின்படி சிங்களச் சிற்பிகள் இருநூறு மீட்டர் உயர மலையை உட்கார்ந்திருக்கும் சிங்கத்தின் வடிவத்தில், அதன் முன் கைகள் தரையைத் தொட்டு ஒரு வாயிலாக அமையும்படி செதுக்கியிருந்தார்கள். சமதளமாக்கப்பட்ட உச்சியில் அரண்மனை அமைந்திருந்தது. உடைந்திருக்கும் கோட்டைச் சுவர்களும் ஆழம் காண முடியாத கிணறுகளும் பாறைகளில் செதுக்கப்பட்டிருக்கும் பெண்களின் உருவங்களும் பழங்காலத்தில் அதன் புகழை நினைவுபடுத்துகின்றன. எளிதில் நுழைய முடியாத பாறை அடுக்குகள் இயற்கை மற்றும் மக்களின் அழிவுச் சக்தியை வென்று அவற்றில் வரையப்பட்டிருக்கும் பழமையான ஓவியங்களைப் பாதுகாத்து அருளியிருக்கின்றன. இந்த ஓவியங்களின் அழிவில்லாத தெளிவும் வண்ணங்களின் புதுமலர்ச்சியும் அவற்றிலுள்ள மனித உருவங்களின் துல்லியமான அளவும் அழகும் அருளும் திகைப்பைக் கொடுக்கின்றன. நேரு அஜந்தாவிலுள்ள குகைக் கோவில்களின் சுவர்களில்தான் அத்தகைய எழில் நிறைந்த பெண்களின் முகங்களையும் அன்பும் சோகமும் கலந்த கண்களையும் பார்த்திருக்கிறார்.

அவர்கள் இலங்கையின் புராதனத் தலை நகரமான பொலன்னறுவாவுக்குச் சென்றார்கள். மாபெரும் புத்தபிரான் சிலைகளை வைப்பதற்காகக் கட்டப்பட்ட எண்ணற்ற "விஹாரங்கள்" ஜவகர்லாலின் கவனத்தை ஈர்த்தன. இவை அங்கேயுள்ள இயற்கைக் காட்சியோடு இணைந்து வடிவங்களின் எளிமையும் பூரணத்துவமும் காண்போரைப் பரவசப்படுத்தின. உலகத்தின் கவலைகளிலிருந்து மனிதன் விடுபட்டு புத்தரின் போதனைகளைச் சிந்தித்து உலகத்தைப் பரிபூரணமாக்கும் கனவுகளில் தன்னை ஈடுபடுத்த வேண்டுமென்பது இந்தத்

தொன்மையான நகரத்தை உருவாக்கிய பெயர் தெரியாத சிற்பிகளுடைய முக்கியமான நோக்கமாக இருந்திருக்கும் என்று தோன்றியது. பொலன்னறுவாவில் புத்தர் சாய்ந்த நிலையில் படுத்திருக்கும் பிரம்மாண்டமான சிலை இருக்கிறது. இது அவருடைய சிலைகளிலேயே மிகவும் பூரணத்துவம் நிறைந்ததென்று கருதப்படுகிறது. புத்தர் இடது பக்கமாக உடலைச் சாய்த்துப் படுத்திருக்கிறார், இடது கரம் உடல் மீது நீட்டப்பட்டிருக்கிறது, வலது கரம் முகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. அவர் தலைப் பகுதியில் அவருடைய அன்புக்குரிய சீடரான ஆனந்தா கைகளை மார்பில் கட்டியவாறு நிற்கிறார். அந்த மாபெரும் ஆசிரியர் ''உண்மையான இருத்தலாகிய'', நிர்வாண நிலையில் இருக்கிறார். ஆனந்தா மிகவும் அக்கறையோடு அவரை கவனித்துக் கொண்டிருக்கிறார். அந்தப் பழங்காலச் சிற்பியின் மேதாவிலாசம் கல்லுக்கு உயிர்க்களையைக் கொடுப்பதில் வெற்றியடைந்து விட்டது. அந்தச் சிலையிலிருந்து வர்ணிக்க முடியாத அமைதியும் அருளும் வெளிப்படுகிறது. புத்தரின் உருண்டையான, மென்மையான, அன்புநிறைந்த முகத்தில் அறிவார்ந்த புன்சிரிப்பு பிரகாசிக்கிறது.

கி. மு. 3ம் நூற்றாண்டில் சிங்கள ராஜ்யத்தின் முதல் தலைநகரமாக இருந்த அனுராதபுரத்தில் புத்தர் சிலை அமர்ந்திருக்கும் நிலையில் இருக்கிறது. ஜவகர்லால் இந்தச் சிலையை மிகவும் ரசித்தார். ''புத்தர் சிலையின் வன்மையான, அமைதி மிக்க கூறுகள் என் வேதனையைத் தணித்தன. பல சந்தர்ப்பங்களில் எனக்கு ஏற்பட்ட சோர்வை அகற்ற உதவின'' என்று அவர் எழுதினார்.

அனுராதபுரத்திலிருக்கும் புகழ்பெற்ற போதி மரத்தையும் அவர் பார்த்தார். உலகத்திலேயே அதுதான் மிகப் பழமையான மரம் என்று கருதப்படுகிறது. அதற்கு இரண்டாயிரம் வயது இருக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட குச்சியிலிருந்து அது வளர்ச்சியடைந்ததாகச் சொல்கிறார்கள். கயாவில் ஒரு காலத்தில் இளவரசரான சித்தார்த்த கௌதமர் ஏழு வருட கால அறச் செயல்களிலும் தேடல்களிலும் களைத்துப் போய், உண்மையைத் தேடிய பொழுது ஏற்பட்ட ஐயங்களினால் துன்புற்று போதி மரத்தடியில் உட்கார்ந்து தியானம் செய்தார்.

திடீரென்று ''அறிவொளி'' பெற்ருர். மக்களுக்கு ''நல் வாழ்க்கைப் பாதையைக்'' காட்ட முடிவு செய்தார். அரசர் குடும்பத்தில் பிறந்து துறவியான புத்தரின் (அறிவொளியைப் பெற்றவர் என்பது இந்தப் பெயரின் பொருள்) போதனை மனிதகுலத்துக்கு ஒரு புதிய மதத்தை வழங்கியது.

மத உலகக் கண்ணேட்டம் ''தெளிந்த சிந்தனைக்கு எதிரானது. ஏனென்ருல் சில வரையறுக்கப்பட்ட, மாற்றப்பட முடியாத தத்துவங்களையும் வறட்டுச் சூத்திரங்களையும் மட்டுமல்லாது உள்ளுணர்ச்சி, உணர்ச்சி, பாசம் ஆகியவற்றையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது'' என்று நேரு கருதினர். எந்த மதமானுலும் அது ''குறுகிய மனத்தையும் வெறியுணர்ச்சியையும், பேதமையையும் மூட நம்பிக்கையையும், உணர்ச்சி முனைப்பையும் பகுத்தறிவுக்கு மாருன பண்பையும் ஏற்படுத்தும். அது மனிதனுடைய மனத்தை மூடிவிட, சிந்தனையைத் தடை செய்ய, சார்ந்து நிற்கின்ற, சுதந்திரமில்லாத நபரைத் தயாரிக்க முற்படுகிறது'' என்று அவர் கருதினர். இந்தக் கருத்துக்கு ஆதாரத்தை அவர் இந்திய வாழ்க்கையில் கண்டார். மத வேற்றுமைகள் நேற்று வரை பக்கத்து வீடுகளில் நல்ல நண்பர்களாக வசித்து வந்தவர்களை இன்று ஆபத்தான எதிரிகளாக மாற்றிவிடுகின்றன. ஜாதி மற்றும் மதச் சண்டைகள் இந்திய மக்களின் சுதந்திர இயக்கத்துக்கு எவ்வாறு தீமை செய்கின்றன, காலனியாதிக்க வெறியர்கள் மக்களை சுலபமாக அடிமைப்படுத்துவதற்கு எப்படி உதவி செய்கின்றன என்பதை அவர் தெளிவாகக் கண்டார். மதம் ''ஒரு பிற்போக்குத்தனமான சக்தி, மாற்றத்தையும் முன்னேற்றத்தையும் எதிர்த்து நிற்பது'' என்பதைக் கண்ட நேரு தான் கனவு காண்கின்ற எதிர்கால சுதந்திர, ஜனநாயக இந்தியாவுக்கு அது எவ்வளவு ஆபத்தானது என்பதைப் புரிந்து கொண்டார். எனவே அவர் தன் நாட்டு மக்களிடம் பின்வருமாறு வற்புறுத்தினர்: ''குறுகிய மதச் சிந்தனையை, இயற்கைக்குப் புறம்பான, இயக்க மறுப்பியல் ஊகங்களை, மதச் சடங்குகளிலும் பக்தி பரவசத்திலும் அறிவுக் கட்டுப்பாட்டைத் தளர்த்துவதை விட்டுவிடுங்கள். அவை நம்மையும் உலகத்தையும் புரிந்து கொள்வதற்குத் தடையாக இருக்கின்றன.''

நேரு மதத்தைப் பற்றி விமர்சனப் பார்வையைக் கொண்

டிருந்தார். எனினும் ஒரு கேள்வியை அவர் அடிக்கடி தன்னிடமே கேட்டுக் கொண்டார். இந்த மகத்தான ஆற்றல் மதத்திற்கு எப்படிக் கிடைத்தது, துன்பமடைந்த எண்ணற்ற இதயங்களுக்கு அமைதியும் ஆறுதலும் அளித்தது எப்படி?'' இந்தக் கேள்விக்குப் பதிலைக் கண்டுபிடிக்க ஜவகர்லால் உலக மதங்களின் வரலாற்றை நோக்கித் திரும்பினார், பைபிளையும் குரானையும் படித்தார். புத்தரின் கட்டளைகளையும் அவருடைய சமகாலத்தவராகவும் இன்னும் அதிகமான அளவுக்குத் துறவையும் வைதீகத்தையும் வலியுறுத்திய ஜைன மதத்தை நிறுவிய மகாவீரரின் போதனைகளையும் ஆராய்ந்தார். இது இல்லையென்றால் தன்னுடைய நாட்டு மக்களிடம் பல மதங்கள் மற்றும் மதப் பிரிவுகளின்—இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள், பார்சிக்களின் பிரதிநிதிகளோடு அவர் சுலபமாகப் பழகியிருக்க முடியாது, பேசியிருக்க முடியாது. வெவ்வேறு மதப் பிரிவுகளைச் சேர்ந்த மக்களை ஆன்மிக ரீதியில் பிரிப்பது எது, இணைப்பது எது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் எல்லா இந்தியர்களுக்கும் பொது எதிரியான பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டத்தில் அவர்களை ஒன்றுபடுத்த முடியாது.

ஜவகர்லால் எப்பொழுதுமே மனிதர்களின் மனங்களில் வன்மையான தாக்கத்தை ஏற்படுத்திய சரித்திர புருஷர்களால் கவர்ச்சிக்கப்பட்டார். அவர் புத்தரை இந்த வரிசையில் வைத்தார், புத்தர் வாழ்ந்ததைப் பற்றி அவர் சந்தேகப்படவில்லை. ஆனால் அவரைக் கடவுளாகக் கருதுவதை எதிர்த்தார். நேரு புத்தரின் அறவுரைகளை மதக் கோட்பாடுகளாக வர்ணிக்கவில்லை. வாழ்க்கையில் எல்லாவற்றையும் அனுபவித்த, ''பகுத்தறிவையும் தர்க்க முறையையும் அனுபவத்தையும்'' சார்ந்து நின்ற ஒரு அறிவாளியின் உபதேசங்கள் அவை என்று கருதினார். மனிதனுடைய சுயகல்வி, சுயமுழுமையாக்கலைப் பற்றி புத்தரின் போதனைகளை ஜவகர்லால் மிகவும் போற்றினார். ''தன்னை அடக்கியாள்வதில் ஒரு மனிதன் வெற்றியடைந்தால் கடவுள் கூட அந்த வெற்றியைத் தோல்வியாக மாற்ற முடியாது'' என்று புத்தர் கூறியிருப்பதை அவர் அடிக்கடி நினைவுபடுத்திக் கொள்வார்.

18ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலக் காலனியாதிக்கத் துருப்புகளை முறியடித்து ஆங்கிலேயர்கள் இலங்

கையை அடிமைப்படுத்திருந்த போதிலும் அதன் மத்திய பகுதியில் தங்களுடைய சிறு ராஜ்யத்தின் சுதந்திரத்தை அடுத்த பத்து வருட காலம் வீரத்தோடு காத்து நின்ற சிங்களவர்களின் வழிவந்த கண்டி நகரத்தைச் சேர்ந்தவர்கள் நேருவை உற்சாகத்தோடு வரவேற்றுர்கள். இந்தியாவில் காலனியாதிக்க எதிர்ப்பு இயக்கத்தில் நேரடியாகப் பங்கெடுத்துள்ள தன்னிடமிருந்து சமீப கால சம்பவங்களின் கதையைத் தெரிந்து கொள்ள இந்த மக்கள் ஆர்வத்தோடு காத்திருக்கிறுர்கள் என்பதைப் புரிந்து கொண்டு ஜவகர்லால் அவர்களிடம் சொற்பொழிவாற்றினுர். அவர் முதலில் எளிமையாக, எத்தகைய கவனமான வரையறுப்புகளுமின்றி பேசத் தொடங்கினுர். உடனே தன்னைச் சுற்றிலும் இருந்த மக்கள் தமது கவனத்தையெல்லாம் தன் மீது குவிப்பதைக் கண்டார். இந்தியாவில் சுதந்திர இயக்கத்தின் வெற்றிகளையும் நெருக்கடிகளையும் பற்றித் தன்னுடைய சிந்தனைகளை நெருங்கிய நண்பர்களிடம் பேசுவதைப் போல, ஒளிவு மறைவில்லாமல் அவர்களோடு பகிர்ந்து கொண்டார். காங்கிரசின் சென்ற மாநாட்டின் முடிவுகளை அவர்களிடம் எடுத்துக் கூறினுர். இந்தியாவிலும் இலங்கையிலும் சுதந்திரம் கிடைத்த பிறகு சமூக, பொருளாதார மாற்றங்களைச் செய்வது அவசியம் என்பதை வலியுறுத்தினுர்.

கொழும்பு நகரத்திலும் அவர்கள் மிக உற்சாகமாக வரவேற்கப்பட்டனர். அவரை வரவேற்கும் பொழுது சொல்லப்படுகின்ற அலங்காரமான சொற்கள்—பெரும்பாலும் அவை புகழ்ச்சியுரைகளாகவே இருக்கும்—அவருக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. தாய்நாட்டுக்குத் தன்னுடைய சேவைகள் குறைவானவை என்றே அவர் மதிப்பிட்டார். எனவே மற்றவர்கள் அந்தச் சேவைகளை அடிக்கடி நினைவுபடுத்தும் பொழுது அவருக்குக் கஷ்டமாக இருந்தது. எனவே தன்னையும் தன் குடும்பத்தினரையும் அன்போடு வரவேற்று உபசரித்ததற்கு நன்றி தெரிவிக்கும் பொழுது, தனக்குத் தரப்பட்ட மரியாதையும் பாராட்டும் தாய்நாட்டின் விடுதலைக்காகத் தியாக உணர்ச்சியோடு போராடிக் கொண்டிருக்கும் லட்சக்கணக்கான இந்தியர்களுக்குத் தரப்பட்டதாகவே கருதுவதாகவும் அவர்களில் ஒருவராக இருப்பதே தனக்குப் பெரும் கௌரவம் என்று நினைப்பதாகவும் அவர் அடிக்கடி வலியுறுத்தினுர்.

நேரு எல்லோரிடமும் இனிமையாகப் பழகினுர். அவர் மனைவியின் உடல் நலம் அபிவிருத்தி அடைந்திருப்பதைக் கண்டு குறிப்பாக மகிழ்ச்சியடைந்தார். அவர் இலங்கைக்கு வந்த நோக்கத்தை முற்றிலும் மறந்துவிட்டதைப் போலவே தோன்றியது. தன்னுடைய வாழ்க்கை மறுபடியும் பரபரப்பான பொதுக் கூட்டங்களிலும் உரையாடல்களிலும் விவாதங்களிலும் சொற்பொழிவுகளிலும், இந்தியாவிலும் ஐரோப்பாவிலுமிருந்த எண்ணற்ற நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதுவதிலும் (அவர் நாள்தோறும் இருபத்தைந்து கடிதங்களும் கார்டுகளும் எழுதுவார்) கழிந்து கொண்டிருப்பதை அவர் கவனிக்கவில்லை.

கொழும்பில் தங்கியிருக்கும் பொழுது ஒரு நாள் ஜவகர்லால் இரவில் வெகு நேரத்துக்குப் பிறகு களைப்போடு ஹோட்டலுக்குத் திரும்பினுர். தூங்கிக் கொண்டிருந்த கமலாவையும் இந்திராவையும் எழுப்பிவிடக் கூடாதென்று சப்தம் ஏற்படுத்தாமல் அவர் தன்னுடைய அறைக்குச் சென்று உடைகளை மாற்றிக் கொண்டு படுக்கையில் படுத்தார். சீக்கிரத்திலேயே அயர்ந்து தூங்கத் தொடங்கினுர். திடீரென்று அவர் விழித்துக் கொண்ட பொழுது தரையின் மீது கிடந்தார். வாயில் ஏதோ இரத்தச் சுவை தட்டுப்படவே முகத்தைக் கையினுல் தடவினுர். காயத்தின் மீது கைபட்டதும் அவர் உடல் வலியால் துடித்தது. யாரோ அவரைத் தாக்கியிருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய உடனே அவர் துள்ளிக் குதித்தார். அவர் மனதில் பயம் ஏற்படவில்லை. ஏதோ ஆபத்து வரப்போகிறது என்ற அவருடைய உள்ளுணர்ச்சி கூறியது. இலங்கைக்குப் புறப்படுவதற்கு முன்பு அவரை பயமுறுத்தி இரண்டு அனுமதேயக் கடிதங்கள் வந்ததை நினைத்தார். கமலா பயந்து போய் அவருடைய அறைக்குள் ஓடிவந்தாள். கணவரின் முகத்தில் இரத்தக் கறை படிந்திருப்பதைக் கண்டதும் அவள் மயக்கமடைந்தாள். உணர்வு திரும்பியதும் அவர் முகத்திலிருந்த காயத்தைக் கழுவி கட்டுப் போடுவதற்கு உதவி செய்தாள். மறுநாள் காலையில் கமலாவின் வற்புறுத்தலின் பலனுக டாக்டர் வரவழைக்கப்பட்டார். அவர் ஜவகர்லாலின் உடல்நிலையை நன்கு பரிசோதித்தார். அளவுக்கு மீறிய சோர்வின் விளைவாக இப்படி நடந்தது என்று சொல்லிவிட்டு அவர் முழு ஓய்வு கொள்ள வேண்டும் என்று கண்டிப்பாகக் கூறினுர்.

நேரு குடும்பத்தினர் இலங்கையின் தென் பகுதியை நோக்கிக் காரில் புறப்பட்டார்கள். தென்மேற்குக் கடற் கரைப் பகுதியை ஒதுக்கி கலுதாரா, காலே, மாதாரா ஆகிய நகரங்களின் வழியாக அந்த தீவின் தெற்குமுனையான தோந்த்ரா முனையை அடைந்தார்கள். பிறகு இரயிலில் கொழும்பிற்குத் திரும்பினார்கள். இதற்குச் சில நாட் களுக்குப் பிறகு ஜவகர்லால் அந்த தீவின் வட பகுதி யிலுள்ள ஜாஃப்னுவுக்குச் சென்றார். அங்கே போர்க்குணமும் பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்ச்சியும் கொண்ட சுறுசுறுப்பான தமிழ் இளைஞர்கள் அவரை அதிகமான உற்சாகத்தோடு வரவேற்றார்கள்.

மே 22ந் தேதியன்று நேரு குடும்பத்தினர் வீட்டுக்குத் திரும்பினார்கள். ஜவகர்லால் ஒரே சமயத்தில் வருத்தத்தையும் மகிழ்ச்சியையும் அனுபவித்தார். ''சூறாவளியின் வேகத்திலி ருந்து ஒதுங்கிய, பாதுகாப்பான துறைமுகத்தை விட்டு'' நிரந்தரமாக இல்லா விட்டாலும் நீண்ட காலத்துக்குப் பிரிந்து செல்வதை உணர்ந்து வருந்தினார்; சூறாவளியும் பய முறுத்தும் புயற்காற்றும் இல்லாமல் தன்னுடைய சொந்த வாழ்க்கையை அவரால் நினைத்துப் பார்க்க முடியவில்லை என்பதால் அங்கிருந்து புறப்பட்டதற்கு மகிழ்ச்சி அடைந்தார்.

இந்தியாவில் நிறைவேற்றப்பட்ட போர்நிறுத்தம் நிலையில் லாதது என்பதை ஜவகர்லால் மென்மேலும் நன்றாகப் புரிந்து கொண்டார். வங்காளத்தில் பயங்கரவாதிகளின் குழுக்கள் தீவிரமாக இயங்கத் தொடங்கியிருந்தன. அதிகாரிகள் டில்லி உடன்பாட்டின் ஷரத்துக்களை நிறைவேற்றாததனால், அரசியல் கைதிகளை விடுதலை செய்யத் தவறியதனால் இந்த விளைவு ஏற்பட்டிருந்தது. ஐக்கிய மாகாணத்தில் பரபரப்பான சூழ் நிலை வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. டில்லி உடன்பாட் டின்படி அரசாங்கம் நில வரியையும் குத்தகையையும் குறைத் திருக்க வேண்டும். அரசாங்கம் அதைச் செய்யாதது மட்டு மல்ல மறுபடியும் நிலத்திலிருந்து விவசாயிகளை மொத்தமாக வெளியேற்றிக் கொண்டிருந்தது. வட மேற்கு எல்லைப்புற மாகாணத்தில் அடக்கு முறைச் சட்டங்கள் இன்னும் அமுலி லிருந்தன. அங்கே பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிரான ''செஞ் சட்டையினர்'' இயக்கம் வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. அவர்களுடைய தலைவரான கான் அப்துல் கபார் கான்

இரண்டு மீட்டர் உயரமுடையவர், மாவீரனுடைய தோற்றத்தைக் கொண்டவர். அவருக்கு மக்களிடையே அமோகமான செல்வாக்கு இருந்தது. அவர் காந்தியின் அஹிம்சைக் கொள்கையை வழுவாது பின்பற்றிவந்த காரணத்தால் ''எல்லே காந்தி'' என்று அழைக்கப்பட்டார்.

1931 ஜூலை 7ந் தேதியன்று காங்கிரஸ் செயற்குழுக் கூட்டம் பம்பாயில் ஆரம்பமாயிற்று. ஜவகர்லால் இக்கூட்டத்தில் கலந்து கொண்டார். அரசாங்கமும் ஸ்தல அதிகாரிகளும் டில்லி உடன்பாட்டின் ஷரத்துக்களை இடையருது மீறிவருவது சம்பந்தமாக காங்கிரஸ் எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி ஆறு நாட்கள் காரசாரமான விவாதங்கள் நடைபெற்றன.

அரசாங்கத்தோடு கலந்து பேசி உடன்பாட்டுக்கு வருவதற்கு மறுபடியும் ஒரு முயற்சி செய்ய வேண்டும்; அதன் தொடர்பாகப் புதிய வைசிராயான வில்லிங்டன் பிரபுவைச் சந்திப்பதற்காக காந்தியை சிம்லாவுக்கு அனுப்ப வேண்டும் என்ற பிரேரணையை நேரு ஆதரித்தார். வில்லிங்டன் பிரபு தனக்கு முன்பு வைசிராய் பதவியிலிருந்த இர்வின் பிரபுவைக் காட்டிலும் கண்டிப்பானவர், வளைந்து கொடுக்காதவர் என்று சொல்லப்பட்டது.

சிம்லாவில் ''திறந்த மனதோடு'' பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன என்று நேரு வர்ணித்தார். ஆனால் அவற்றினால் உபயோகமான பலன் ஏற்படவில்லை, அவ்வாறு ஏற்படவும் முடியாது. டில்லி உடன்பாடு மீறப்பட்டிருக்கிறது என்று காங்கிரஸ்காரர்கள் செய்த ஒவ்வொரு குற்றச் சாட்டுக்கும் பிரிட்டிஷ்காரர்கள் ஒரு டஜன் எதிர்க் குற்றச் சாட்டுகளைச் செய்தார்கள். இதன் பலனாக இவற்றை விளக்குவதற்கும் விரித்துரைப்பதற்குமே பெரும்பகுதி நேரம் செலவிடப்பட்டது. உடன்பாடு மீறப்படுவதைப் பற்றி விசாரிக்க ஏதாவதொரு வகையான ஸ்தாபனத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற பிரச்சினையில் முடிவு ஏற்படவில்லை. இந்தியாவில் அரசாங்கத்தைத் தவிர வேறு எந்த ஸ்தாபனமும் விசாரணை நடத்துகின்ற எண்ணத்தை அதிகாரிகளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. வைசிராயிடமும் அவருடைய அதிகாரிகளிடமும் பிரிட்டிஷ் இராஜியவாதிகளின் பரம்பரைப் பழக்கப்படி சம்பிரதாயமான மரியாதையும் வளைந்து கொடுக்காத உறுதியும்

இருந்தது. காங்கிரசின் எந்த நடவடிக்கையாவது பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு அதிருப்தியளித்தால் இப்பொழுது ஓய்வில் இருக்கும் அரசாங்கத்தின் அடக்குமுறை இயந்திரம் உடனே செயலில் ஈடுபடுத்தப்படும் என்பதை அவர்கள் தெளிவாகக் கூறினார்கள்.

சிம்லாவிருந்து வந்த செய்திகள் அதிகாரிகளோடு மோதல் ஏற்படுவது தவிர்க்க முடியாது என்று கடைசியாக நேருவை நம்பச் செய்தன.

காந்தி லண்டனுக்குப் புறப்படுகின்ற நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. ஆனால் காந்தி உள்பட காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் ''வட்ட மேசை மாநாட்டில்'' காங்கிரஸ் கலந்து கொள்ள வேண்டுமா என்பதைப் பற்றி இறுதி முடிவெடுப் பதற்குத் தயங்கினார்கள். மாநாட்டில் இந்தியர்களுக்குச் சாதக மான முடிவு ஏற்படுமா என்ற சந்தேகங்களைத் தவிர வேறொரு அடிப்படையான அச்சமும் காங்கிரஸ்காரர்களிடம் இருந்தது. நாட்டில் தேசிய அளவில் ஏற்பட்டிருக்கும் கொந் தளிப்பை நாம் மிகவும் சிரமத்தோடு தடுத்து வைத்திருக் கிறோம், பிரிட்டிஷ்காரர்கள் டில்லி உடன்பாட்டை மீறுகின்ற ஒவ்வொரு தடவையும் அது வளர்ச்சியடைந்து கொண்டிருக் கிறது. காந்தி நாட்டில் இல்லாத பொழுது அது போர் நிறுத்த ஒப்பந்தத்தின் குறுகிய வரம்புகளை மீறி கட்டுப்படுத்த முடியாத பயமுறுத்துகின்ற பேரெழுச்சியாக நாடு முழுவதும் பரவினால் என்ன செய்வது என்ற கேள்வியை அவர்கள் எழுப்பினார்கள். காந்தி அதை ஒத்துக் கொண்டார். இரண்டு தரப்பினரும் டில்லி உடன்பாட்டின் ஷரத்துக்களை அமுல் நடத்துவார்கள் என்ற முழுமையான உத்தரவாதம் இல்லா மல் நாட்டை விட்டுப் போவதற்கு அவர் விரும்பவில்லை. காந்தி வைசிராயை மறுபடியும் சந்தித்தார். உள்நாட்டி லாகாவின் செயலாளரான ஹெர்பெர்ட் எமெர்ஸனோடு கடி தங்களைப் பரிமாறிக் கொண்டார். போர்நிறுத்தத்தை உடைக்க மாட்டோம் என்று அதிகாரிகளிடமிருந்து தெளி வில்லாத வாக்குறுதியைப் பெற்று லண்டனில் நடைபெறும் பேச்சுவார்த்தைகள் முடிவடையும் வரை காங்கிரஸ் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடாது என்ற உத்தரவாதத்தைத் தமது தரப்பில் கொடுத்த பிறகு காந்தி ஆகஸ்ட் 29ந் தேதியன்று காலையில் பிரிட்டனுக்குப் புறப்பட்டார். இந்தியாவில் பொது

மக்களின் மிக அதிகமான ஆதரவைப் பெற்ற அரசியல் கட்சியின் ஒரே பிரதிநிதியான காந்தி கலந்து கொள்ளவில்லை என்றால் ''வட்ட மேசை மாநாடு'' எல்லாவிதமான முக்கியத்துவத்தையும் இழந்து விடும். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிகின்ற நபர்களையும், நவாபுகளையும் ராஜாக்களையும் மகாராஜாக்களையும் மட்டுமே பிரதிநிதித்துவப்படுத்துகின்ற பொம்மைகளின் மாநாடாகவே இருந்திருக்கும்.

காந்தி லண்டனுக்கு வர வேண்டுமென்பதில் பிரிட்டிஷ் அரசாங்கம் காட்டிய அக்கறைக்கு ஒரு உதாரணத்தைக் கூற வேண்டும். வில்லிங்டன் பிரபுவோடு மகாத்மாவின் இரண்டாவது சந்திப்பு முடிய ஓரளவு நீண்ட நேரமாயிற்று. பிரிட்டனுக்குப் புறப்படுவதற்கு பம்பாயில் கப்பல் காத்துக் கொண்டிருந்தது. மாநாட்டில் கலந்து கொள்ளும் எண்பத்தேழு பிரதிநிதிகள் அந்தக் கப்பலில் காத்துக் கொண்டிருந்தார்கள். காந்தி உரிய நேரத்தில் பம்பாய்க்குப் போய் கப்பல் பயணிகளோடு சேர முடியுமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. அரசாங்கம் அவருக்காக விசேஷ ரயில் வண்டியை ஏற்பாடு செய்தது. அந்த ரயில் சிம்லாவிலிருந்து பம்பாய்க்கு வழியில் எங்குமே நிற்காமல் சென்றது. அந்தப் பாதையில் செல்ல வேண்டிய மற்ற ரயில்கள் வழியில் நிறுத்தி வைக்கப்பட்டன.

ஜவகர்லால் நேரு பம்பாய் துறைமுகத்தில் காந்தியிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார். அங்கே குறுகிய நேரத்திற்குள் அவர்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள். கடலில் போய்க் கொண்டிருக்கும் கப்பலின் மூன்றாவது வகுப்புப் பயணிகள் தளத்தில் காந்தி தனியே நின்று கொண்டிருப்பதை நேரு சற்று நேரம் கவனித்தார். பிறகு காந்தி கூறியவற்றில் முக்கியமான விஷயங்களை நினைவுபடுத்திக் கொண்டார். வெற்றியடைய முடியும் என்ற குறிப்பான நம்பிக்கை எதுவுமில்லாமல் காந்தி லண்டனுக்குப் புறப்பட்டபோதிலும் பிரிட்டிஷ்காரர்களோடு உடன்பாட்டுக்கு வருவதற்கு ஓரளவு சாத்தியமிருப்பதாகவே காந்தி நினைத்தார். அப்படி உடன்பாடு ஏற்படுவதாக இருந்தால் இறுதிப் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொள்வதற்காக காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர்கள் லண்டனுக்கு வர வேண்டுமென்று தந்தி கொடுப்பேன் என்று அவர் ஜவகர்லாலிடம் கூறினார்.

'''வட்ட மேசை மாநாட்டையும்' மற்ற அரசியல் பிரச்சினைகளையும் தவிர, பொருளாதாரப் போராட்டங்களில் மக்களின், குறிப்பாக விவசாயிகளின் உரிமைகளைப் பாதுகாக்க நேரிடக்கூடும்'' என்று காந்தி ஜவகர்லாலிடம் கூறினார். காங்கிரஸ் விவசாயிகளின் இயக்கத்தை நேரடியாக ஆதரித்தால் அது டில்லி உடன்பாட்டை மீறுவதாகக் கருதப்படுமோ என்று காங்கிரஸ் தலைவர்கள் கவலையடைந்தார்கள். இந்தியாவில் விவசாயிகள் இயக்கம் நின்றுவிடவில்லை, பல இடங்களில் காந்தியின் அஹிம்சைக்கு மிகவும் அப்பாற்பட்ட வடிவத்தையும் அடைந்திருந்தது. சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துவதற்குக் காங்கிரஸ் ஒத்துக் கொண்டிருப்பது ''ஸ்தல பொருளாதாரப் போராட்டங்களை'', அதாவது நிரந்தரமான குத்தகை உரிமைக்கும் குறைவான வாரத்துக்காகவும் இந்திய விவசாயிகளின் நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் போராட்டங்களைக் கட்டுப்படுத்தாது என்று டில்லியில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் போது (அதற்குப் பின்னரும் கூட) காந்தி பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் கூறியது உண்மையே. காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்த வேண்டும் அல்லது அதன் செல்வாக்கைக் குறைக்க வேண்டும், மறுபடியும் அதை சட்டவிரோதமாக்க வேண்டும் என்ற நோக்கத்தை அரசாங்கம் கைவிடவில்லை, தங்கள் திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தக்க சந்தர்ப்பம் வரட்டும் என்று அதிகாரிகள் காத்திருக்கிறார்கள் என்பதை ஜவகர்லாலும் காங்கிரசின் மற்ற தலைவர்களும் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தார்கள். எனவே விவசாயிகள் தங்கள் உரிமைகளுக்காக நடத்துகின்ற ஸ்தாபன ரீதியான, அஹிம்சை வழியான போராட்டங்களைக் காங்கிரஸ்காரர்கள் ஊக்குவிக்கின்ற நேரத்தில் அதிகாரிகளோடு மோதலைத் தவிர்ப்பதற்கும் முயற்சி செய்தார்கள். காந்தி நாட்டில் இல்லாதிருப்பதால் இப்பொழுது நாட்டிலுள்ள சிக்கலான, பரபரப்பான நிலைமையில் தொடர்ந்து ஏற்பட்டுக் கொண்டிருக்கும் மாற்றங்களுக்கு அதிக நெகிழ்ச்சியான முறையில் ஈடுகொடுப்பதற்கு காங்கிரஸ் முன்னிலும் அதிகமான கவனம் செலுத்துவது அவசியமாக இருந்தது. ''தற்பொழுது போர் நிறுத்தத்தைத் தவறாமல் அமுல் நடத்துவதற்குக் காங்கிரஸ் முடிவு செய்திருக்கிறது என்றாலும் எல்லாமே அரசாங்கத்தின் அணுகுமுறையைப் பொறுத்திருக்கிறது. அரசாங்கத்தின்

இன்றைய போக்கு மாற்றிக்கொள்ளப்படாவிட்டால் உடன் பாட்டை அமுல் செய்யக் காங்கிரசால் முடியாது'' என்று நேரு அந்த சமயத்தில் எழுதினர்.

1931ம் வருடத்தின் இலையுதிர்காலத்தின் போது ஐக்கிய மாகாணத்தில் நிலைமை மறுபடியும் சீர்கேடடைந்தது. விவசாயிகள் உடனடியாக வரிகளையும் குத்தகைகளையும் கட்ட வேண்டுமென்று மாகாண அதிகாரிகள் கோரினர்கள். வரியைக் கட்டவில்லை என்ருல் நீதிமன்றங்களின் மூலம் பணம் வசூலிக்கப்படும் என்று விவசாயிகளிடம் தெரிவிக்கப்பட்டது. இத்தகைய வழக்குகள் ஆயிரக்கணக்கான விவசாயிகள் நிலங்களிலிருந்து வெளியேற்றப்படுவதிலும் அவர்களுடைய கால்நடை, விவசாயக் கருவிகள், தட்டு முட்டுச் சாமான்கள் பறிமுதல் செய்யப்படுவதிலும் வழக்கமாக முடிவடைந்தன. என்ன செய்வதென்று தெரியாத விவசாயிகள் உதவி கேட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கு வந்தார்கள். நிலைமை மோசமாகியிருப்பதைப் புரிந்துகொண்ட நேரு காந்தியின் ஆலோசனையைப் பெற விரும்பினர். அக்டோபர் 16ந் தேதியன்று அவர் காந்திக்குத் தந்தி அனுப்பினர். ஐக்கிய மாகாணத்தில் ''நெருக்கடியான நிலைமை'' ஏற்பட்டிருக்கிறது, இனி தாமதிப்பது ஆபத்தானது என்று தெரிவித்தார். லண்டனிலிருந்து இரண்டு நாட்களில் பதில் வந்தது. நான் எதுவும் செய்ய முடியாத நிலைமையில் இருக்கிறேன், தங்களுக்கு அவசியமானதாகத் தோன்றும் நடவடிக்கைகளைக் காங்கிரஸ்காரர்கள் செய்ய வேண்டும் என்று காந்தி ஆலோசனை கூறினர்.

சில காங்கிரஸ்காரர்கள் அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தை நடத்துகின்ற உபாயத்தில் அதிகமான நம்பிக்கை வைத்திருந்தார்கள். அவர்கள் தயக்கத்தைக் காட்டிய போதிலும் ''அரசாங்கத்துக்கு வரி மற்றும் குத்தகையைக் கட்டுவதை எந்தப் பிரதேசத்திலும் நிறுத்திவைக்கின்ற'' உரிமையை ஐக்கிய மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்கு வழங்குமாறு காங்கிரஸ் செயற்குழு தீர்மானம் நிறைவேற்றுமாறு செய்வதில் நேரு வெற்றியடைந்தார்.

இதற்கிடையில் லண்டனில் இரண்டாவது ''வட்ட மேசை மாநாடு'' தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டிருந்தது. நேரு எதிர்பார்த்ததைப் போல மாநாடு அற்பமான பிரச்சினைகளையும் இரண்டாம் நிலையான விஷயங்களையும்

விவாதிக்குமாறு செய்வதில் பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னு லியன்ற எல்லாவற்றையும் செய்தது.

மாநாட்டில் காந்தி தன்னுடைய எல்லா வாதங்களையும் பேசிவிட்டார்; பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஏதாவது ஒரு வகையான உடன்பாட்டுக்கு வர முடியும் என்ற நம்பிக் கையை அவரும் கடைசியில் இழந்தார். எனவே அவர் 1931 டிசம்பர் மத்தியில் இந்தியாவுக்குப் புறப்பட்டார்.

காந்தி நாட்டுக்குத் திரும்பியவுடன் பிரம்மாண்டமான அளவில் பிரிட்டிஷ் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் ஏற்படுமென்று அஞ்சிய அரசாங்கம் தீவிரமான நடவடிக்கைகளுக்குத் தயாரா யிற்று. முதலில் தங்களுடைய நிலை குறிப்பிட்ட வகையில் பலவீனமாக இருக்கும் மாகாணங்களில் கவனம் செலுத் தினர்கள். ஐக்கிய மாகாணத்தில் ''விவசாயக் கிளர்ச்சிகளின் தொடர்பாக'' வெளியிடப்பட்ட புதிய அரசு ஆணை எல்லா விதமான அரசியல் அல்லது சமூக நடவடிக்கைகளையும் தடை செய்தது.

இந்தச் சமயத்தில் பம்பாயில் தன் மனைவியை சிகிச் சைக்குச் சேர்த்த பிறகு ஜவகர்லால் அலகபாத்துக்கு வந்திருந் தார். காங்கிரஸ் மாகாண மாநாட்டு வேலைகள் முடிந்த பிறகு காந்தியைச் சந்திப்பதற்கும் செயற்குழுக் கூட்டங்களில் கலந்து கொள்வதற்கும் பம்பாய்க்குத் திரும்பிச் செல்ல நினைத் திருந்தார். ஆனால் அரசு ஆணை வெளியிடப்பட்ட உடனே அதிகாரிகள் நேரு, மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஷெர்வானி மற்றும் இதர சில காங்கிரஸ்காரர்கள் அலக பாத்தின் எல்லைகளை விட்டு வெளியே போகக் கூடாதென்று தடை விதித்தார்கள். மாநாடு நடைபெறவிருந்த எடாவா வுக்கு போலீஸ் மற்றும் இராணுவப் பிரிவுகள் அவசரமாக அனுப்பப்பட்டன. நேருவும் ஐக்கிய மாகாணத்திலுள்ள நிலை மையைப் பற்றி விவாதிப்பதற்காகக் காங்கிரஸ் செயற்குழு வால் அழைக்கப்பட்டிருந்த ஷெர்வானியும் மாநாட்டை ஒத்தி வைத்துவிட்டு அதிகாரிகளின் தடையை மீறி டிசம்பர் 26ந் தேதி காலையில் பம்பாய்க்குப் புறப்பட்டார்கள்.

ஜவகர்லால் போகும் வழியில் ரயில் நிலையத்தில் செய்தித் தாள்களை வாங்கினர். அரசாங்கம் மற்றொரு புதிய ஆணையை வெளியிட்டிருப்பதையும் (இந்தத் தடவை வடமேற்கு எல்லைப் புற மாகாணம் சம்பந்தமாக) அதன்படி ''செஞ்சட்டை

யினர்'' மீது நடவடிக்கை எடுத்திருப்பதையும் பற்றி அறிந்தார். கான் அப்துல் கபார் கான் உள்பட அந்த இயக்கத்தின் தலைவர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாக செய்தி வெளியாகியிருந்தது. இந்தக் கவலையளிக்கும் செய்தியைப் பற்றி நேரு ஷெர்வானியோடு பேசத் தொடங்கிய நேரத்தில் ரயில் எதிர்பாராத முறையில் நின்றது. அவர்களிருவரையும் கைது செய்வதற்காக போலீஸ் அதிகாரிகள் வண்டிக்குள் வந்தார்கள். இருவரும் கைது செய்யப்பட்டு ஜவகர்லாலுக்கு நன்கு அறிமுகமான நைனிடால் சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார்கள்.

காந்தி டிசம்பர் 28ந் தேதியன்று பம்பாய்க்கு வந்து சேர்ந்தார். பல தலைவர்கள் கைது செய்யப்பட்டிருப்பதைப் பற்றி தன்னைச் சந்தித்த காங்கிரஸ்காரர்களிடமிருந்து தெரிந்து கொண்டார். அரசாங்கத்தோடு மோதலைத் தவிர்ப்பதற்கு அவர் இன்னும் விரும்பிய காரணத்தால் வைசிராயைச் சந்தித்துப் பேசுவதற்கு சில முயற்சிகளைச் செய்தார். ஆனால் வைசிராய் பல சாக்குப் போக்குகளைச் சொல்லி அவரைச் சந்திக்க மறுத்தார். கடைசியில் வங்காளம், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், ஐக்கிய மாகாணம் ஆகியவற்றில் அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கைகளின் தொடர்பான பிரச்சினைகளை எழுப்பக் கூடாது என்ற நிபந்தனையை ஒத்துக் கொண்டால் வைசிராய் பேட்டியளிக்க முடியும் என்று செய்தி வந்தது.

1931ம் வருடத்தின் இறுதி நாட்களில் காங்கிரஸ் செயற்குழு கூடியது. ஜனவரி மாதத்தில் புதிய சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்குவதென்று முடிவு செய்தது. காங்கிரஸ் உறுப்பினர்கள் தனித்தனியான முறையில் சட்ட மறுப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுகின்ற அளவில் போராட்டத்தைக் குறுக்கிக் கொள்ள வேண்டும் என்று காந்தி வற்புறுத்தினர்.

நேருவின் மீது தொடுக்கப்பட்ட வழக்கை அலகபாத் மாவட்ட நீதிமன்றம் 1932 ஜனவரி 4ந் தேதியன்று விசாரணை செய்தது. ஜவகர்லால் நேருவின் அறிக்கை ''அரசியல் தன்மையைக் கொண்டிருந்தபடியால்'' அதை வாசிப்பதற்கு நீதிபதி அனுமதியளிக்க மறுத்து அவசரமாக தண்டனையை அறிவித்தார். ஐக்கிய மாகாண அரசாங்க அதிகாரிகளின் அவசர அதிகாரங்களைப் பற்றிய அரசு ஆணையின் 13வது

ஷரத்தை மீறியதற்காக நேருவுக்கு இரண்டு வருட கடுங் காவல் சிறைத் தண்டனையும் ஐநூறு ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. அபராதத்தைக் கட்டத் தவறினால் மேலும் ஆறுமாத சிறைத் தண்டனை கொடுக்கப்பட்டது.

அரசாங்கம் நான்கு ஆணைகளை அவசரமாக வெளியிட்டு நீதிமன்றங்களுக்கும் போலீசுக்கும் உண்மையில் முடிவில்லாத அதிகாரங்களைக் கொடுத்தது. காங்கிரஸ் நடவடிக்கைகளை அர சாங்கம் தடை செய்தது. காங்கிரசோடு இணைக்கப்பட்டிருந்த எல்லா ஸ்தாபனங்களும் நாட்டின் இதர முற்போக்கான அரசியல் கட்சிகள், கோஷ்டிகளோடு சேர்த்து சட்ட விரோத மானவை என்று அறிவிக்கப்பட்டன. ஜவகர்லால் மீது விசாரணை நடைபெற்ற தினத்தன்று காந்தியும் காங்கிரசின் தலைவராகிய வல்லபாய் படேலும் தேசத் துரோகக் குற்றத் துக்காகக் கைது செய்யப்பட்டனர். நாட்டில் கைது செய்யப் பட்ட ஏராளமானவர்களை அடைப்பதற்குச் சிறைகளில் இடம் போதவில்லை. எனவே அதிகாரிகள் தற்காலிகமான சிறை முகாம்களை அவசரமாக அமைத்தார்கள்.

ஜனவரி 13ந் தேதியன்று அதிகாரிகள் காங்கிரசுக்குச் சொந்தமான சுயராஜ்ய பவனத்தையும் மற்ற கட்டிடங் களையும் பறிமுதல் செய்தார்கள். தன்னுடைய வீட்டுக்கும் இதே நிலைதான் ஏற்படுமென்று நேரு நாள்தோறும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். ஏற்கெனவே அலகபாத்தில் அமைதியை நிலைநாட்ட முடியாதிருக்கும் பொழுது நேரு குடும்பத்தினரை வீட்டிலிருந்து வெளியேற்றினால் மறுபடியும் புதுக் கலவரங்கள் ஏற்படுமென்று அதிகாரிகள் அஞ்சினார்கள். எனவே நேருவின் கார்வண்டியைப் பறிமுதல் செய்து விற்பனை செய்ததோடு நின்று விட்டார்கள்.

அரசாங்கம் நாட்டின் சுதந்திர இயக்கத்துக்கு மூர்க்கத் தனமான அடியைக் கொடுத்தது. ''இந்தியா முழுவதுமே அநேகமாக இராணுவச் சட்டத்தின் கீழிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். காங்கிரஸ் தன் முன்முயற்சியையோ அல்லது நடவடிக்கையில் ஈடுபடும் சுதந்திரத்தையோ ஒரு போதும் உண்மையில் மறுபடியும் அடையவில்லை'' என்று நேரு எழுதினார். ஆனால் அடக்குமுறை எப்படி இருந்த போதிலும் காங்கிரஸ் உண்மையான தலைமையைத் தராத போதிலும் இந்தியாவில் சுதந்திர இயக்கம் பரவிக் கொண்

டிருந்தது, இந்தியர்கள் ஏராளமான எண்ணிக்கையில் மென் மேலும் அதிகமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள் என்பதை நிரூபிக்கும் தகவல்கள் நாள்தோறும் ஜவகர்லாலுக்குக் கிடைத்துக் கொண்டிருந்தன. சிறையிலடைக்கப்பட்ட தகப்ப ஞர்கள், கணவர்கள், சகோதரர்கள், மைந்தர்களின் இடத் தில் அவர்களுக்குப் பதிலாக மாதர்கள் காலனியாதிக்கத்துக்கு எதிரான போராட்டத்தில் கலந்து கொண்டார்கள். ஜவகர் லாலின் தாயாரும் சகோதரிகளும் (கமலா இன்னும் பம்பா யில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தாள்) ஐக்கிய மாகாணத் தின் கிராமங்களில் சுற்றுப்பயணம் செய்து அரசாங்கத்துக்கு வரிகளையும் குத்தகைப் பணத்தையும் கட்டாதீர்கள் என்று விவசாயிகளைக் கேட்டுக் கொண்டார்கள், அந்நியத் துணிகளை விற்பனை செய்யும் கடைகளில் மறியல் செய்தார்கள், தெருக் களில் நடைபெற்ற கூட்டங்களிலும் ஆர்ப்பாட்டங்களிலும் பங்கெடுத்தார்கள்.

தன்னுடைய சகோதரிகள் விஜயலட்சுமியும்* கிருஷ்ணு வும் கைது செய்யப்பட்டு மலாக்கா சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறுர்கள் என்ற தகவல் ஜனவரி 27ந் தேதி யன்று ஜவகர்லாலுக்குக் கிடைத்தது. 'பிப்ரவரி முதல் தேதி யன்று இருவருக்கும் ஒரு வருட சிறைத் தண்டனை விதிக்கப் பட்டது. அதைப் பற்றி அவர்கள் மிகவும் பெருமையடைந் தார்கள் என்று ஜவகர்லால் கேள்விப்பட்டார்.

பிப்ரவரி 7ந் தேதியில் ஜவகர்லால் ராய்பரேலி மாவட் டச் சிறைக்கு மாற்றப்பட்டார். அங்கிருந்து தன் சகோதரி களுக்குக் கடிதம் எழுதினுர். அவர்களுடைய துணிவுக்குப் போற்றுதலும் எதிர்காலத்தைப் பற்றிக் கவலையும் ஊடுருவி யிருந்த அந்தக் கடிதத்தில் அவர்களுக்குத் தன்னுலியன்ற உதவியைச் செய்ய, உற்சாகமூட்ட தன்னுடைய தீவிரமான ஆசையும் நகைச் சுவை கலந்த வாக்கியங்களுக்கு நடுவே மறைந்திருந்தன. ''சிறைச்சாலையில் உள்ள பாடமுறையைப் புரிந்துகொண்டால் அதுதான் மிகச் சிறந்த பல்கலைக்கழகம்'' என்று அவர் எழுதினுர். ''நாம் இதற்கு முன்பு சிறிது கூட கவனிக்காத சிறு விஷயங்களை இப்பொழுது ரசிக்கத்

* நேருவின் சகோதரி ஸ்வரூப் திருமணத்துக்குப் பிறகு விஜயலட்சுமி என்று பெயர் வைத்துக் கொண்டார்.

தொடங்குகிறோம். எனவே நாம் வாழ்க்கையை அனுபவிப்பது இன்னும் ஆழமடைகிறது'' என்று அவர் நம்பிக்கையோடு கூறினார்.

1932 மார்ச் மாதத்தில், பதினான்கு மாத இடை வெளிக்குப் பிறகு நேரு தன் மகளுக்கு எழுதிய கடிதங்களில் உலக வரலாற்றில் முக்கியமான சம்பவங்களைப் பற்றிய விளக் கத்தைத் தொடர்ந்தார். தன்னுடைய வர்ணனை முழுமை யானதென்றோ துல்லியமானதென்றோ அவர் கூறவில்லை (இத் தகைய வேலைக்கு மிகவும் அவசியமான ஆதார நூல்களை அவர் பயன்படுத்துவதற்கு சிறைச்சாலையின் கட்டுப்பாடுகள் அனுமதிக்கவில்லை, ஆனால் அவர் முன்னர் படித்த நூல்களி லிருந்து முக்கியமான பகுதிகளை நோட்டுப் புத்தகங்களில் எழுதிவைத்திருந்தபடியால் அவற்றை அதிகமாகப் பயன் படுத்திக் கொண்டார்). மிகவும் தொன்மையான காலத்திலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முப்பதுக்கள் வரையிலும் மனித குலத்தின் வரலாற்றில் மிக முக்கியமான, சுவையான, அறி வூட்டக் கூடியனவற்றைப் பற்றி உயிர்த்துடிப்போடு, தத்ரூப மான உரைநடையில் விளக்கிக் கூற விரும்பினார்.

கடந்த காலம் ''சிக்கலான சிலந்தி வலை; அதன் சிக்கலை அவிழ்ப்பது கஷ்டம், அதை மொத்தமாகப் பார்ப்பதும் கூட கஷ்டமான காரியமே.'' அக்கடந்த காலத்தைத் தன்னோடு சேர்ந்து பார்க்குமாறு தன் மகளை அழைக்கிறார் ஜவகர் லால். மற்ற நாடுகள் மற்றும் மக்களினங்களின் வரலாறு தன்னுடைய தாய்நாட்டின் வரலாற்றைப் படிப்பதையும் ஆராய்வதையும் காட்டிலும் குறைவான முக்கியத்துவத்தைக் கொண்டதாகக் கருதக் கூடாது என்று அவர் மகளை எச்சரிக் கிறார். ''வரலாறு என்பது பெரிய மனிதர்கள், அரசர்கள், சக்கரவர்த்திகள் மற்றும் அவர்களைப் போன்றவர்களின் நட வடிக்கைகளைப் பற்றிய பதிவேடு அல்ல'' என்று இந்திராவுக்கு எழுதினார். ''உண்மையான வரலாறு என்பது அங்குமிங்கும் சில தனிநபர்களைப் பற்றியதாக இருக்கக் கூடாது; தங் களுடைய உழைப்பின் மூலம் அவசியப் பொருள்களையும் வசதிப்பொருள்களையும் உற்பத்தி செய்து வெவ்வேறான ஆயிரம் வழிகளில் ஒருவர் மீதொருவர் தாக்கத்தை ஏற்படுத்து கின்ற, ஒரு நாட்டின் மக்களைப் பற்றியதாக இருக்க வேண்டும்.''

உலக வரலாற்றுப் பிரச்சினைகளைப் பற்றி நேருவின் பார்வை—முன்னரே உருவான அல்லது புதிய ஆதாரங்கள் கண்டுபிடிக்கப்பட்டதால் தன்னிடம் ஏற்படுகின்ற அகநிலை யான முடிவுகளைச் சில சமயங்களில் தன்னால் கட்டுப்படுத்த முடியவில்லை என்று அவர் எழுதிய போதிலும்—பூர்ஷ்வா அறிஞர்களின் குறியடையாளமான வலிந்து நிறுவும் போக்கினால் பாதிக்கப்படாதிருக்கிறது. அவர் தொழில்முறை வரலாற்றாசிரியர் அல்ல. எனவே ஆராய்ச்சியாளர் என்ற முறையில் தன்னுடைய தகுதிகளை அவர் எப்பொழுதும் அடக்கமாகவே மதிப்பிட்டார். ''எனக்குக் கிடைத்த கல்விப் பயிற்சி குறைபாடுடையதாக இருந்தால், எனக்குக் கற்பிக்கப்பட்ட வரலாறு தலைகீழாக இருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்?'' என்று ஹாரோவிலும் கேம்பிரிட்ஜிலும் அவருக்குக் கிடைத்த கல்வியறிவை மனதிற் கொண்டு எழுதினார். ''என்னுடைய நாட்டையும் என்னுடைய காலத்தையும் உலக வரலாற்றின் பொருத்தமான தொலைக்காட்சியில் பார்க்க வேண்டும்'' என்ற முக்கியமான கடமையை அவர் தனக்கு முன்னால் வைத்துக் கொண்டார். எனினும் இடையறாது வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் உல்கத்தை அதன் எல்லா விதமான பன்முகத்தன்மையுடனும் புற நிலையான சித்திரத்தை ஒரு உண்மையான ஆராய்ச்சியாளரின் விடாமுயற்சியோடும் முழு நிறைவான அறிவோடும் அவர் தீட்டுவதை அந்தக் கடமை தடுக்கவில்லை. அவர் தன்னுடைய நாட்டின் பழமையைப் பற்றி எழுதினார், அதன் ஆன்மிக அழகையும் அழிவில்லாத சுதந்திர வேட்கையையும் தன் மக்களின் துணிவையும் அவர்களுடைய மகத்தான படைப்புச் சக்தியையும் பற்றி எழுதினார். இந்தியா தனிவகையான வரலாற்றுப் பாதையில் நடந்து வந்திருக்கிறது, மற்ற நாடுகளுடன் ஒப்பிடும் பொழுது இந்தியா தனிவகையான நாடு, ஆசியாவுக்கும் உலக முழுமைக்கும் தலைமைப் பாத்திரத்தை வகிக்குமாறு இந்தியா படைக்கப்பட்டிருக்கிறது என்று தேசியவெறி கொண்ட சிலர் திரும்பத்திரும்ப எழுதிக் கொண்டிருந்ததை அவர் தீர்மானமான முறையில் மறுத்தார். தன்னுடைய நாட்டு வரலாற்றின் கேந்திரமான கட்டங்களை மற்ற நாடுகளில் நடந்திருப்பவற்றோடு அவர் ஒப்பீடு செய்து தொடர்பு படுத்தினார், உலக நாகரிகங்களின் இணைந்த தன்மையை

அழுத்தமாக எடுத்துக் காட்டினார், கடந்தகால, நிகழ்காலத் தின் அனுபவத்தில் எதிர்கால இந்தியா மிகவும் ஏற்றுக் கொள்ளத்தக்கவற்றை, உபயோகமானவற்றை அவர் விடா முயற்சியோடு தேடினார்.

1932 மார்ச்சிலிருந்து அவர் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட 1933 ஆகஸ்ட் முடிய மனிதகுலத்தின் வரலாற்றைப் பற்றி நூற்று எழுபதுக்கும் அதிகமான கடிதக் கட்டுரைகளைத் தன் மகளுக்கு எழுதினார். அவருடைய சகோதரி விஜயலட்சுமி இக்கடிதங்களைத் தொகுத்து **உலக வரலாற்றுக் காட்சிகள்** என்ற புத்தகத்தை 1934ல் தயாரித்தார். இப்புத்தகம் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது. இப் புத்தகத்தின் ஆழமான உள்ளடக்கத்தையும் சுவைமிகுந்த வர்ணனையையும் சமகாலத்தவர்கள் வியந்து பாராட்டினார் கள். இந்தியா மற்றும் வெளிநாடுகளைச் சேர்ந்த ஆராய்ச் சியாளர்கள் ஆசிரியரின் மேதாவிலாசத்தையும் கலைக்களஞ் சியத்தைப் போன்ற பரந்த புலமையையும் பாராட்டினார் கள். வரலாற்றின் பல முக்கியமான பிரச்சினைகளைப் பற்றி நேருவின் பார்வையில் மார்க்சிய-லெனினிய மூல நூல்களின் தாக்கம் இருப்பதில் சந்தேகமில்லையென்று சோவியத் யூனியனை யும் மற்ற சோஷலிஸ்ட் நாடுகளையும் சேர்ந்த வரலாற்று சிரியர்கள் எடுத்துக் காட்டினார்கள். நேருவே இதை ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளில் ஒத்துக் கொண்டிருக்கிறார். ''மார்க் சியத் தத்துவமும் தத்துவஞானமும் என் அறிவின் பல இருண்ட மூலைகளில் ஒளியைப் பாய்ச்சின. வரலாறு எனக்குப் புதிய அர்த்தத்தைப் பெற்றது. மார்க்சிய விளக்கம் வர லாற்றின் மீது வெள்ளம் போல ஒளியைப் பாய்ச்சியது, அது என்ன தான் தன்னுணர்வற்றதாக இருந்தாலும் அதற் குப் பின்னால் ஒரு ஒழுங்கையும் நோக்கத்தையும் கொண்ட வளர்ச்சியடைகின்ற நாடகமாயிற்று. கடந்த காலம் மற்றும் நிகழ்காலத்தில் திகைப்பைத் தரும் வீழ்க்குதலும் துன்பமும் இருந்தாலும் பல ஆபத்துக்கள் இடையிலே குறுக்கிட்டாலும் எதிர்காலத்தை நம்பிக்கை பிரகாசமாக்கியது. பெரும்பாலும் வறட்டுக் கோட்பாடுகள் இல்லாமையும் விஞ்ஞானப் பார்வை யும் மார்க்சியத்துக்கு ஆதாரமானவை. இவை என்னைக் கவர்ந் தன'' என்று நேரு **சுயசரிதையில்** எழுதினார். ''இன்றைய உலகத்தில் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் மாற்றங்களைப் பற்றி

மிக அதிகமான அளவுக்கு உண்மைகளை வெளிப்படுத்துகின்ற, மிகக் கூர்மையான ஆராய்ச்சி முடிவுகளை மார்க்சிய எழுத்தாளர்கள்தான் கூறியிருக்கிறார்கள்'' என்ற நம்பிக்கையையும் அவர் தெரிவித்தார். பெருந்திரளான மக்களே வரலாற்று முன்னேற்றத்தை இயக்கும் சக்தி என்ற மார்க்சிய மதிப்பீட்டையும் அவர் ஏற்றுக்கொண்டிருந்தார். மக்கள்தான் எப்போதுமே ''முக்கியப் பாத்திரங்களாக'' விளங்கினார்கள் என்று நேரு கூறினார். தம்முடைய **மார்க்சியம்** என்னும் கடிதக் கட்டுரையில் மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின் ஆகியோருடைய நூல்களை விரிவான முறையில் உபயோகித்து மனித சமூகத்தின் வளர்ச்சியைப் பற்றி அவர்களுடைய கருத்துக்களை எடுத்துக் கூறியிருந்தார். மார்க்சிய மூல நூல்கள் வரலாற்றை ''தவிர்க்க முடியாத வகையில் நிகழ்கின்ற வர்க்கப் போராட்டத்தின் மூலம் ஏற்படும் பரிணாம நிகழ்வு'' என்ற முறையில் பார்ப்பதை வலியுறுத்தினர். ஆனால் முப்பதுக்களிலோ அல்லது அதற்குப் பின்னரோ பூர்ஷ்வா ஜனநாயக, சீர்திருத்தவாதக் கருதுகோள்களை (அவர் இவற்றை ''மனிதாபிமான, மிதவாத மரபுகள்'' என்று குறிப்பிட்டார்) அவர் கைவிட முடியவில்லை. இந்தக் கருத்துக்கள் மற்றும் காந்தியத்தின் கற்பனாவாதக் கருத்துக்களின் தாக்கத்தினால் அவருடைய உலகப் பார்வை உருவாக்கப்பட்டிருந்தது.*

இக்கடிதக் கட்டுரைகளில் அவர் அடிமை உடைமைச் சமுதாயம் அல்லது நிலப்பிரபுத்துவம் அல்லது முதலாளித்துவம் ஆகிய எந்தச் சமுதாயத்தைப் பற்றி எழுதுகின்றபொழுதும்

* தேசிய விடுதலை இயக்கங்களின் பிரச்சினைகளைப் பல வருடங்களாக ஆராய்ந்திருக்கும் பிரபல சோவியத் வரலாற்றாசிரியரான ரோ. உலியானோவ்ஸ்கி நேருவைப் பற்றி எழுதியிருக்கும் கட்டுரையில் பின்வருமாறு கூறுகிறார்: ''நாட்டில் வர்க்கங்களும் வர்க்கப் போராட்டமும் இருப்பதை நேரு அங்கீகரிக்கவில்லை என்று சொல்ல முடியாது. ஆனால் அவர் வர்க்க ஒத்துழைப்பை அடிப்படையாகக் கொண்ட சமரசம் மற்றும் சீர்திருத்தங்களின் மூலம் வர்க்க முரண்பாடுகளைத் தீர்க்கக் கூடிய சாத்தியத்தை அரசின் அரசியல் பாதைக்கு அடிப்படையான கருத்துரையாக முன்வைத்தார். வர்க்க ஒத்துழைப்பின் மூலம் சமூகத்தின் ஒத்திசைவான வளர்ச்சியை அவர் ஆதரித்தார். நாட்டின் பொருளாதார மற்றும் அரசியல் வாழ்க்கையில் உடைமை மற்றும் சுரண்டும் வர்க்கங்களின் செல்வாக்கு அதிகரிப்பதை மனமாற்றத்தின் உதவியால் மட்டுமே தடுக்க முடியும் என்று அவர் கருதினார்.''

மனிதனை மனிதன் அடிமைப்படுத்துகின்ற அல்லது ஒடுக்கு கின்ற எல்லா வடிவங்களுக்கும் தான் ஒரு தீவிரமான எதிரி என்பதைத் தவறாமல் காட்டியுள்ளார். காலனியாதிக்கத்தைப் பற்றிய அவருடைய அணுகுமுறையில் சமரசம் என்ற பேச்சே இல்லை. ஆசியாவையும் ஆப்பிரிக்காவையும் சேர்ந்த மக்களினங் களுக்கு அதன் பயங்கரமான விளைவுகளை எடுத்துக்காட்டு களோடும் ஆணித்தரமாகவும் விளக்கியுள்ளார். காலனியா திக்க அரசுகள் தாங்கள் அடிமைப்படுத்திய நாடுகளில் ''அறி வைப் பரப்பியதாக மற்றும் நாகரிகத்தைப் பெருக்கியதாகச்'' சொல்பவர்கள் உண்டு. இதைப் பற்றி அவர் பின்வருமாறு எழுதுகிறார்: ''நற்பண்பு என்ற வெளித்தோற்றத்துக்கு அடி யில் பேராசையும் கொடுமையும் பழியஞ்சாமையும் இருக்கின் றன; நாகரிகத்தின் பட்டுக்கையுறைக்குக் கீழே மிருகத்தின் கூர்மையான நகங்கள் இருக்கின்றன...'' பிரிட்டிஷ் ஏகாதி பத்தியத்தை எதிர்த்து இந்திய மக்கள் நடத்துகின்ற போராட்டம் ''துன்பத்தையும் வேதனையையும் ஒழிப்பதற் காக மனிதகுலம் நடத்துகின்ற மாபெரும் போராட்டத்தில் ஒரு பகுதி, உலகத்தின் முன்னேற்றத்துக்கு உதவியாக நம்மு டைய சிறு பங்கைச் செய்கிறோம் என்பதைப் பற்றி நாம் மகிழ்ச்சியடைய முடியும்'' என்று அவர் எழுதினார்.

மனிதகுலத்தின் நிகழ்காலம் மற்றும் எதிர்காலப் பிரச் சினைகளைப் பற்றி சிந்தனை செய்த பிறகு ''முதலாளித்துவம் ஆட்சி செலுத்தியகாலம் முடிந்துவிட்டது, அது சோஷலிசத் துக்கு இடத்தைக் கொடுத்து விட்டு விலக வேண்டிய காலத்தை நாம் அடைந்து விட்டோம்,'' ஆனால் இது விருப்ப பூர்வமாகவும் வலியில்லாமலும் ஒரு போதும் நடை பெறப் போவதில்லை என்ற முடிவுக்கு நேரு வந்தார். மனித விரோதமான இனவெறித் தத்துவங்களைக் கொண்டு உலகத்தை அடக்கியாள விரும்பிய பாசிஸ்டுகள் இத்தாலியிலும் ஜெர் மனியிலும் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியதும் இதை நிரூ பித்தது. ''பாசிசமும் நாஜிசமும் தங்களுடைய காட்டு மிராண்டித்தனத்தைச் சிறிது கூட மறைத்துக் கொள்ளாமல் தோன்றின; அவை யுத்தத்தையே தங்களுடைய கொள்கை களின் நோக்கமாகவும் இலட்சியமாகவும் கொண்டுள்ளன'' என்று நேரு எழுதினார்.

இன்றைய உலகத்தில் ஏகாதிபத்தியத்தையும் பாசிசத்

தையும் எதிர்க்கக் கூடியது மட்டுமல்லாமல் ஒடுக்குமுறையும் உரிமையின்மையும் ஏழ்மையும் வேலையில்லாத் திண்டாட்டமும், பொருளாதார நெருக்கடிகளும் யுத்தங்களும் இல்லாத ஒரு சமூகத்தை நிர்மாணிக்கக் கூடிய சக்தி இருக்கிறதா என்று சிந்தித்த நேரு நம்பிக்கையோடு சோவியத் யூனியனை நோக்கித் திரும்பினார். இளம் சோவியத் அரசின் வெளிநாட்டுக் கொள்கை மற்றும் பொருளாதார நடவடிக்கைகளை, ''பழைய உலகத்தின் கடைசிக் கழிவுகளின் மீது புதிய உலகத்தைப் படைப்பதற்குச் செய்யப்பட்ட திகைப்பைத் தருகின்ற, பிரம்மாண்டமான முயற்சிகளை'' அவர் தொடர்ச்சியாகக் கவனித்துவந்தார். 1927 நவம்பரில் அவர் மாஸ்கோவுக்குச் சென்றது சோவியத் யூனியன் மீது அவருடைய அனுதாபத்தை அதிகப்படுத்தியிருந்தது. ஆனால் இங்கே முக்கியம் என்னவென்றால் ருஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் பல பொது அம்சங்கள் இருக்கின்றன, இரு நாடுகளின் மக்களும் ஒரே விதமான பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றிய கருத்தை அது உறுதிப்படுத்தியது.

நேரு தன் கடிதக் கட்டுரைகளில் 1917ம் வருடத்திய சம்பவங்களை **ருஷ்யாவில் ஜாரிசத்தின் வீழ்ச்சி, போல்ஷிவிக்குகள் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றுகிறார்கள்** என்ற தலைப்புகளில் விவரித்தார். மாபெரும் அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி ''உலக வரலாற்றிலேயே ஒப்புவமையில்லாத மாபெரும் சம்பவம்'' என்று கூறினார். ''அந்த வகையைச் சேர்ந்த முதல் புரட்சியாக அது இருந்த போதிலும் அந்த ரகத்தைச் சேர்ந்த ஒரே ஒரு புரட்சியாக அது நெடுங்காலத்துக்கு இருக்காது. ஏனென்றால் மற்ற நாடுகளுக்கு அது ஒரு சவாலாகிவிட்டது, உலக முழுவதிலுமுள்ள புரட்சிக்காரர்களுக்கு அது ஒரு உதாரணமாகிவிட்டது. எனவே அதை நுணுக்கமாக ஆராய்வது அவசியம்'' என்று நேரு எழுதினார்.

இந்தியர்களின் சுதந்திரப் போராட்டத்துக்கு ருஷ்யப் புரட்சியின் படிப்பினைகள் மிகவும் உபயோகமாக இருக்கும் என்று நேரு உறுதியாகக் கருதினார். எனவே அவர் லெனின் தலைமை தாங்கிய போல்ஷிவிக் கட்சியின் போர்த்திட்டத்தையும் செயல்தந்திரத்தையும் பற்றி விரிவாக எழுதினார். லெனினைப் பற்றித் தன் போற்றுதலை அவர் சிறிதும் மறைக்கவில்லை. ''லெனின் மனதில் சந்தேகமோ அல்லது தெளிவின்

மையோ சிறிதும் கிடையாது. அவருடைய கண்கள் ஊடுருவிப் பார்க்கக் கூடியவை; அவை பெருந்திரளான மக்களின் மனோபாவங்களை ஊடுருவிக் கண்டுபிடித்தன. அவருடைய அறிவு தெளிவானது; அது நன்கு சிந்திக்கப்பட்ட கோட்பாடுகளை மாறும் நிலைமைகளுக்கு ஏற்ப கையாள்வதிலும் தகவமைத்துக்கொள்வதிலும் தனிச்சிறப்பைக் கொண்டிருந்தது. அவர் வளையாத சித்தத்தைக் கொண்டிருந்தார்; எனவே உடனடியான விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல் தான் வகுத்த பாதையைப் பின்பற்றிச் சென்றார். 'நாம் போலி மருத்துவர்கள் அல்ல. பெருந்திரளான மக்களின் அரசியல் சுய உணர்வை மட்டுமே நாம் ஆதாரமாகக் கொள்ள வேண்டும். நாம் சிறுபான்மையினராக இருக்க நேரிட்டால்—அப்படியே சிறுபான்மையினராக இருப்போம். தலைமையான நிலையில் சிறிது காலத்துக்கு இல்லாமல் கூட இருக்கலாம். சிறுபான்மையாக இருப்பதைக் கண்டு நாம் அஞ்சக் கூடாது' என்று அவர் எழுதினார். எனவே அவர் தன் கோட்பாடுகளில் உறுதியாக நின்றார்; சமரசம் செய்து கொள்ள மறுத்தார். தலைவர் இல்லாமல், வழிகாட்டிகள் இல்லாமல் ஊசலாடிக் கொண்டிருந்த புரட்சி கடைசியில் அதன் தலைவரைப் பெற்றது. காலம் அதற்குத் தகுதியான தலைவரை உற்பத்தி செய்தது.''

சோவியத் யூனியனுடைய வரலாற்றைப் புறநிலையான, நன்னோக்குடைய ஆராய்ச்சியாளர் என்ற முறையில் மட்டுமே நேரு அணுகவில்லை, சிந்தனைத்திறன் உடைய செய்முறை ஊழியர் என்ற முறையில் தான் அதை அணுகினார். தன்னுடைய இந்தியாவுக்கு அன்றைக்கும் எதிர்காலத்துக்கும் பயன்படக் கூடிய எல்லாவற்றையும் அவர் தேர்ந்தெடுத்து கவனமாக ஆராய்ந்தார். இதனால்தான் சோவியத் அரசின் பொருளாதார, தேசிய மற்றும் கலாச்சாரக் கொள்கையின் மீது அவருக்கு மிகவும் தீவிரமான அக்கறை ஏற்பட்டது. **சோவியத் சோஷலிஸ்ட் குடியரசுகளின் ஒன்றியம், பியாத்திலேத்கா அல்லது ருஷ்யாவின் ஐந்தாண்டுத் திட்டம்** மற்றும் **சோவியத் யூனியனின் கஷ்டங்கள், தோல்விகள் மற்றும் வெற்றிகள்** என்ற கட்டுரைகளில் இவற்றைப் பற்றி விரிவாக எழுதினார்.

சோவியத் யூனியனுடைய வெளிநாட்டுக் கொள்கையை அவர் கவனிக்கத் தவறவில்லை; அதன் சமாதான, மனிதாபி

மானத் தன்மையைப் பற்றி அவருக்கு ஒருபோதும் சந்தேகம் ஏற்படவில்லை. ''அநேகமாக எவ்வளவு விலை கொடுத்தாகிலும் சமாதானத்தை ஏற்படுத்திக் கொள்வது மற்ற நாடுகளின் பால் சோவியத் யூனியனுடைய கொள்கையாக இருந்தது. ஏனென்றால் இழப்பிலிருந்து மீள்வதற்கு அவர்களுக்கு அவகாசம் தேவையாக இருந்தது. ஒரு மாபெரும் நாட்டை சோஷலிஸ்ட் திசையில் நிர்மாணிக்கும் கடமைக்கு அவர்களுடைய முழு கவனமும் தேவைப்பட்டது'' என்று அவர் எழுதினார். எதிர்காலத்தில் சுதந்திர இந்தியாவுக்கும் சோவியத் யூனியனுக்கும் பரந்த, நட்புறவான ஒத்துழைப்பு அவசியம் என்ற கருத்தை அவர் முன்பே அடிக்கடி கூறியதுண்டு. அதை உறுதிப்படுத்துவதைப் போல அவர் பின்வருமாறு எழுதினார்: ''சீனா, துருக்கி, பாரசீகம் மற்றும் ஆப்கானிஸ்தானைப் போன்ற கிழக்கத்திய நாடுகளின் பால் சோவியத் அரசு மிகவும் பெருந்தன்மையான கொள்கையைக் கடைப்பிடித்தது. பழைய ஜார் அரசாங்கம் வைத்திருந்த தனி உரிமைகளை அவர்கள் விட்டுக் கொடுத்து மிகவும் நட்புறவோடிருப்பதற்கு முயற்சி செய்தார்கள். அடிமைப்பட்டிருக்கும் எல்லா நாடுகளும் சுரண்டப்படுகின்ற எல்லா மக்களினங்களும் சுதந்திரமடைய வேண்டும் என்ற அவர்களுடைய கோட்பாடுகளுக்கு இது பொருந்தக் கூடியதே... பிரிட்டனைப் போன்ற ஏகாதிபத்திய நாடுகள் சோவியத் ருஷ்யாவின் பெருந்தன்மை காரணமாக அடிக்கடி இக்கட்டான நிலையை அடைந்தன. கிழக்கு நாடுகள் செய்த ஒப்பீடுகள் பிரிட்டனுக்கும் மற்ற அரசுகளுக்கும் சாதகமாக இருக்கவில்லை.''

நேரு தன் கடிதங்களில் அரசியல் மற்றும் சமூக வரலாற்றுப் பிரச்சினைகளைப் பற்றி எழுதுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை. அவர் உலக கலாச்சாரம், விஞ்ஞானத்தின் வரலாற்றை அதே உணர்ச்சியோடும், அதே திறமையோடும் தகுதியோடும் எழுதினார். மனிதகுலத்தின் ஆன்மிகச் செல்வங்களைப் படைத்த நூற்றிருபதுக்கும் அதிகமான மேதைகளைப் பற்றி அவர் எழுதினார். அவர்களில் பிதகோரஸ், அரிஸ்டாட்டில், ஹோமர், பிளேட்டோ, யூரிபிடஸ், சாக்ரடிஸ், பிர்தௌசி, காளிதாஸர், டாந்தே, பெட்ரார்கா, லியனார்டோ டா வின்சி, ரஃபயேல், நியூட்டன், வாட், செர்வான்டெஸ், ஷேக்ஸ்பியர், மோட்ஸார்ட், பித்ஹோவென்,

காண்ட், ஹெகல், வால்டேர், ருஸ்ஸோ, புஷ்கின், கோதே, பல்ஸாக், விக்தோர் ஹியூகோ, டாஸ்தயேவ்ஸ்கி, தோல்ஸ் தோய், டார்வின், பாவ்லவ், தாகூர், கோர்க்கி, ரொமேன் ரொலாந்து ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர் கலாச் சாரத்தின் நோக்கத்தையும் மக்களின் வாழ்க்கையில் அதன் இடத்தையும் பாத்திரத்தையும் பற்றிச் சிந்தித்தபிறகு பின்வரும் முடிவுக்கு வந்தார்: ''பொதுவாகக் கலாச்சாரமும் சிறப்பாகக் கவிதையும் உயர்ந்த இலக்கியமும் வசதிபடைத்த வர்க்கத்தினரின் ஏகபோகமாக இருக்கின்றன என்பதை நாம் பெரும்பாலும் மறந்துவிடுகிறோம். கலாச்சாரத்துக்கும் கவி தைக்கும் ஒரு ஏழையின் குடிசையில் இடமில்லாதிருக்கிறது. அவை காலியாக இருக்கும் வயிறுகளுக்குப் பொருத்த மானவை அல்ல. எனவே நமது இன்றைய கலாச்சாரம் வசதி படைத்த முதலாளி வர்க்கத்தினருடைய மூளையின் பிரதி பலிப்பாக இருக்கிறது. அதிலிருந்து வேறுவிதமான சமூக அமைப்பில் கலாச்சாரத்தில் ஈடுபடுவதற்குரிய வாய்ப்புக்களும் ஓய்வும் தொழிலாளிக்குக் கிடைக்கும் பொழுது, தொழிலாளி அதைத் தன் பொறுப்பில் எடுத்துக் கொள்ளும் பொழுது அது மிக அதிகமாக மாற்றமடையலாம். இதைப் போன்ற ஒரு மாற்றம் இன்று சோவியத் ருஷ்யாவில் ஏற்பட்டு வரு வதை எல்லோரும் அக்கறையோடு கவனித்துக் கொண்டிருக் கிறார்கள்... கடந்த சில தலைமுறைகளில் இந்தியாவில் ஏற்பட் டிருக்கும் கலாச்சார வறுமையில் மிகப் பெரும் பகுதிக்கு மக்களின் அதிகமான வறுமையே காரணமாகும். சாப்பிடு வதற்கு ஒன்றுமேயில்லாத மக்களிடம் கலாச்சாரத்தைப் பற்றிப் பேசுவது அவர்களை அவமதிப்பதாகும். மற்றவர் களோடு ஒப்பிடும் பொழுது வசதிபடைத்தவர்களாக இருக் கின்ற சிலரைக்கூட இந்த வறுமை நோய் பாதிக்கிறது. ஆகவே இன்றைய இந்தியாவில் இந்த வர்க்கத்தினரும் கூட ஆச்சரியப்படும் அளவுக்குக் கலாச்சாரம் இல்லாதவர்களாக இருக்கிறார்கள். அந்நிய ஆட்சியும் சமூகத்தின் பின்தங்கிய நிலைமையும் எத்தனை தீமைகளை ஏற்படுத்தியிருக்கின்றன, பாருங்கள்! ஆனால் பொதுவான இந்த வறுமையிலும் ஒளி யிழந்த நிலைமையிலும் கூட இந்தியா காந்தியையும் இரவீந் திரநாத் தாகூரையும் போல மேன்மையான மனிதர்களை, கலாச்சாரத்தின் மகத்தான விளக்கங்களை இன்னும் படைக்க

முடிகிறது'' என்று நேரு எழுதினார்.

பிரிட்டனின் காலனியாதிக்கம் இந்தியாவில் ஏற்படுத்தி யிருக்கும் பல நூற்றாண்டுக் காலப் பின்தங்கிய நிலைமையை அகற்றுவதற்கு எவ்வளவு அபரிமிதமான ஆற்றலையும் உழைப் பையும் செலவிட வேண்டும் என்பதைத் தெளிவாகப் பார்த்த நேரு விஞ்ஞான வளர்ச்சியின் மிகவும் சமீபகாலத்திய எல்லா சாதனைகளையும் இந்தியர்கள் உபயோகிக்கக் கற்றுக் கொள் ளாமல் பொருளாதார ரீதியில் பலம் மிகுந்த, உண்மை யிலேயே சுதந்திரமான இந்தியாவை நிர்மாணிக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்டார். அவர் நவீன விஞ்ஞா னத்தின் மாபெரும் ஆற்றலை வணங்கினார். ''விஞ்ஞானம் மென்மேலும் புதிய கேள்விகளுக்குப் பதிலளிக்கிறது, வாழ்க் கையை நாம் புரிந்து கொள்ள உதவுகிறது. அதன் உதவியை நாம் பயன்படுத்திக் கொண்டோமென்றால் தகுதியான இலட் சியத்தை நோக்கிச் செலுத்தப்பட்ட, முன்னைக் காட்டிலும் சிறந்த வாழ்க்கையை நாம் அடைவதற்கு உதவுகிறது. அது வாழ்க்கையின் இருண்ட மூலைகளில் ஒளி பாய்ச்சுகிறது. பகுத் தாராயும் அறிவு இல்லாவிட்டால் ஏற்படுகின்ற தெளிவற்ற குழப்பத்துக்குப் பதிலாக நாம் யதார்த்தத்தைச் சந்திக்கச் செய்கிறது.''

மகளுக்குக் கடிதம் எழுதும் பணியில் தன் முழு கவனத் தையும் அவர் ஈடுபடுத்தினார். சிறை வாழ்க்கையின் துன்பங் களை முன்னைக் காட்டிலும் சுலபமாகத் தாங்கிக் கொண்டார். ஆனால் சில நாட்களில்—அவர் தன்னையே எவ்வளவு பல வந்தப்படுத்திக் கொண்ட போதிலும்—எதுவுமே எழுத முடி யாத பலவீனமான நிலையில் இருந்தார்.

1932 ஏப்ரல் 8ந் தேதி ஜாலியன்வாலா பாக் படுகொலை யில் உயிர்நீத்தவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் தேசிய வாரம் தொடங்கும் நாள். அன்றைய தினத்தில் அலகபாத் நகர மக்கள் அதிகாரிகளின் அச்சுறுத்தல்களை மீறி ஆர்ப்பாட் டம் நடத்த ஏற்பாடு செய்தார்கள். மக்கள் ஊர்வலமாக வந்தபொழுது ஒரு இடத்தில் போலீஸ் படையினர் தெருவை அடைத்துக் கொண்டு நின்றார்கள். போலீஸ்காரர்களும் ஆர்ப் பாட்டக்காரர்களும் சற்று நேரம் மௌனமாக ஒருவரை யொருவர் பார்த்தபடியே நின்றார்கள். முன்வரிசையிலிருந்த ஆர்ப்பாட்டக்காரர்கள் இரண்டாகப் பிரிந்து வெள்ளைச் சேலை

டிருந்திருப்பேனு?'' என்று அவர் கவலையோடு தன்னைக் கேட்டுக் கொண்டார். இல்லை என்று அவர் மனம் பதிலளித்தது. அஹிம்சையில் குருட்டுத்தனமான நம்பிக்கை வைப்பதற்கு எதிராகத் தன்னிடம் ஆத்திரம் வளர்ச்சியடைவதை அவர் உணர்ந்தார். ''ஒரு இலட்சியத்துக்காகத் துன்பங்களை அனுபவிப்பது எப்பொழுதுமே போற்றப்பட்டிருக்கிறது. விட்டுக் கொடுக்காமலோ அல்லது எதிர்த்துத்தாக்காமலோ ஒரு இலட்சியத்துக்காகத் துன்பத்தை ஏற்றுக் கொள்வதில் உயர்வும் கம்பீரமும் இருக்கின்றன. அவை நிச்சயம் அங்கீகரிக்கப் படும். ஆனுல் இதை துன்பத்துக்காகத் துன்பத்தை அனுபவிப்பதிலிருந்து ஒரு மெல்லிய கோடுதான் பிரிக்கிறது. பின்னுல் கூறப்பட்ட சுயவேதனை ஒரு மன நோயைப் போன்றது, சிறிதளவு தரக்குறைவானதும் கூட. வன்முறை பெரும்பாலும் பிறரைத் துன்புறுத்தி மகிழ்ச்சியடையும் தன்மையைக் கொண்டிருந்தால், அஹிம்சை அதன் எதிர்மறையான அம்சங்களில் எதிர்த் தரப்புக்குச் சாய்கின்ற தவறைச் செய்யக் கூடியது; மேலும் அஹிம்சை கோழைத்தனத்தையும் செயலற்ற தன்மையையும் அதே போல இன்றைய நிலைமையை மாற்றமில்லாமல் வைத்துக் கொள்வதையும் மறைக்கும் போர்வையாகப் பயன்படும் சாத்தியமும் எப்பொழுதுமே இருக்கிறது'' என்று அவர் தன்னேடு வாதாடினுர்.

காந்தியின் கருதுகோள்களை நிராகரிக்கும் நிலைக்கு வெகு தூரத்திலிருந்தார் நேரு. விடுதலை இயக்கத்தின் சில கட்டங்களில் அஹிம்சை போதுமான அளவுக்கு பலமான, பயனுள்ள சாதனமாக இருக்கிறதென்று அவர் கருதினுர். ஆனுல் அஹிம்சையை மட்டும் பின்பற்றுவதன் மூலம் இந்தியர்கள் தம் இறுதி லட்சியத்தை அடைய முடியுமா என்பதைப் பற்றி அவர் அப்பொழுதே தீவிரமான சந்தேகங்களைக் கொண்டிருந்தார்: ''எப்படிப் பார்த்தாலும் ஏதாவது ஒரு வகையான வன்முறை தவிர்க்க முடியாததாகத் தோன்றுகிறது. ஏனென்றுல் ஆட்சியதிகாரத்தையும் தனிச் சலுகைகளையும் வைத்துக் கொண்டிருப்பவர்கள் பலவந்தப்படுத்தப்பட்டாலொழிய அவற்றைக் கைவிட மாட்டார்கள். அல்லது இந்தச் சலுகைகளைக் கைவிடுவதைக் காட்டிலும் அவற்றை வைத்துக் கொண்டிருப்பது தீங்கானது என்று காட்டக் கூடிய நிலைமைகள் ஏற்பட்டாலொழிய அவற்றைக் கைவிட மாட்டார்கள்.''

''சமூகத்தில் இன்றுள்ள மோதல்களை—தேசிய மோதல்களையும் வர்க்க மோதல்களையும்—வன்முறையை உபயோகிக்காமல் தீர்க்க முடியாது. மன மாற்றத்தைப் பொருத்தவரை அது பெரிய அளவில் நடைபெற வேண்டும். ஏனென்றால் ஏராள மானவர்கள் மனம் மாறினாலொழிய சமூக மாற்றங்களுக்கான இயக்கத்துக்கு உண்மையான அடிப்படை இருக்க முடியாது. ஆனால் சிலர் மீது வன்முறையை உபயோகிக்க வேண்டியிருக் கும்'' என்று அவர் முடிவு செய்தார்.

1932 ஜூனில் நேருவும் அவருடைய தோழர் கோவிந்த வல்லப பந்தும்* ராய்பரேலி மாவட்டச் சிறையிலிருந்து டேராடூன் சிறைக்கு மாற்றப்பட்டார்கள். அது இமயமலையின் அடிவாரத்திலுள்ள சிறிய நகரம். ராய்பரேலி வெக்கை மற் றும் தூசி நிரம்பிய இடம். அங்கே நேரு இருந்த கடைசி நாட்களின் போது வெப்பம் 45 டிகிரி சென்டிகிரேடைத் தொட்டது. எனவே ராய்பரேலியோடு ஒப்பிடும்பொழுது இந்தப் புதிய இடம் ஜவகர்லாலுக்கு சொர்க்கத்தைப் போல இருந்தது.

சிறைச்சாலையைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த குட்டை யான மதிற்சுவருக்கு அப்பால் ஒரு காடு தெரிந்தது. அது சில கிலோமீட்டர் தூரத்துக்கு நீளமாகப் போய் மலையடி வாரத்தில் முடிவடைந்தது. சிறைச்சாலையின் கதவுகளுக்குப் பக்கத்தில் நான்கு அரச மரங்கள் ஓங்கி உயர்ந்து கம்பீரமாக நின்றன. பொழுது மறைகின்ற நேரத்தில் ஜவகர்லால் அந்த மதிற்சுவருக்குப் பக்கத்தில் சென்று வெகு நேரம் நின்று முசூ ரியின் விளக்குகள் அந்த மரங்களுக்குப் பின்னால் தெரிகின்ற னவா என்று உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பார். அவர் கோடைகாலத்தைக் கழிப்பதற்குத் தன் குடும்பத்தோடு முசூ ரிக்குச் செல்வது வழக்கம். அந்தக் காலம் அமைதியும் ஆனந்தமயமானதாகவும் இருந்ததாக இப்பொழுது அவருக்குத் தோன்றியது.

1933 ஜனவரிக்குள்ளாகவே பந்தும் நேருவின் மற்ற தோழர்களும் விடுதலை செய்யப்பட்டார்கள். இப்பொழுது ஜவகர்லால் சிறையில் தனியாக இருந்தார். மூன்று அல்லது

---

* கோவிந்த வல்லப பந்த் (1887—1961)—அலகபாத் வழக்குரைஞர், சுயராஜ்யக் கட்சியின் தலைவர்களில் ஒருவர்.

நான்கு நாட்கள் தாமதித்துக் கிடைக்கும் செய்தித்தாள்கள், சிறை அதிகாரிகளின் உத்தரவுப்படி பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவை மட்டுமே கிடைக்கும் உறவினர்கள், நண்பர்களின் கடிதங்கள், உறவினர்களுடைய சந்திப்புகள் (அது அபூர்வமாக அனுமதிக்கப்படுவதுண்டு) அவருடைய தனிமையைப் போக்கின, அவருக்கு மிகவும் அவசியமான வெளியுலகச் செய்திகளைத் தெரிவித்தன. ஆனால் அந்தச் செய்திகள் கவலையளிப்பதாகவே இருக்கும். அதனால் அவர் அடிக்கடி மனச் சோர்வடைந்தார்.

சட்ட மறுப்பு இயக்கம் காங்கிரஸ் தலைவர்களின் தீர்மானமின்மையாலும் அதிகாரிகளின் மிருகத்தனமான அடக்கு முறையாலும் இந்தத் தடவை மாபெரும் ஆதரவைப் பெறவில்லை. அது தணிந்து கொண்டிருப்பது தெளிவாகத் தெரிந்தது. 1933 மே மாதத்தில் காந்தி போராட்டத்தை நிறுத்தி விட்டார். ஜம்மு, காஷ்மீர், ஆழ்வார் முதலிய சுதேச சமஸ்தானங்களில் நிலப்பிரபுத்துவ எதிர்ப்பு விவசாய எழுச்சிகள் தானாகவே ஏற்பட்டன. பிரிட்டிஷ் துருப்புகளின் உதவியோடு அவை சீக்கிரத்திலேயே நசுக்கப்பட்டன. 1932 டிசம்பர் 24ந் தேதியன்று மூன்றாவது ''வட்ட மேசை மாநாடு'' முடிவடைந்தது. இந்திய சமூகத்தின் மிகப் பிற்போக்கான பிரதிநிதிகள் அம்மாநாட்டில் பங்கெடுத்தனர். இந்தியாவை ஆட்சி செய்வதைப் பற்றி ஒரு மசோதாவைப் பிரிட்டிஷ் அரசாங்கம் அவர்களோடு விவாதித்த பிறகு எந்த சிரமமுமின்றி நாடாளுமன்றத்தில் நிறைவேற்றி 1933 பிப்ரவரியில் ஒரு ''வெள்ளை அறிக்கையாக'' அதை வெளியிட்டது.

அரசாங்கச் சார்புடைய பத்திரிகைகள் அந்த மசோதாவை ''அரசியலமைப்புச் சட்டம்'' என்று எழுதின, அனுபவமில்லாத இந்தியர்களை சுயநிர்வாகத்துக்குத் தயாரிப்பதற்காக பிரிட்டிஷ் அரசாங்கம் பெருந்தன்மையான முறையில் காட்டியிருக்கும் மற்றுமொரு சமிக்கை என்று அந்த மசோதாவைச் சித்தரித்தன. இதைப் படித்த பிறகும் தனக்கு வழக்கமான கோபமோ அல்லது ஆத்திரமோ வரவில்லையே என்று நேரு யோசித்தார். பிரிட்டனின் எதிர்காலப் பிரதம மந்திரியான வின்ஸ்டன் சர்ச்சில் 1930 டிசம்பரில் இந்தியாவின்பால் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கையைப் பின்வருமாறு எடுத்துக் கூறினார்: ''நம் அரசரின் மணி மகுடத்தில்

பதிக்கப்பட்டிருக்கும் உண்மையிலேயே மிகப் பிரகாசமான, விலைமதிப்பற்ற மாணிக்கத்தை, நம்முடைய மற்ற எல்லா டொமினியன்களையும் காலனிகளையும் காட்டிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் புகழுக்கும் பலத்துக்கும் காரணமாக இருக்கும் நாட்டை உதறியெறிகின்ற எண்ணம் எமக்குக் கிடையாது.'' நேரு இந்த வார்த்தைகளை நினைத்துக் கொண்டார். அந்த அரசாங்கத்திடமிருந்து வேறு எதை எதிர்பார்க்க முடியும்...

1933 ஆகஸ்ட் 23ந் தேதியன்று அவர் மறுபடியும் நைனிடால் சிறைக்கு மாற்றப்பட்டார். ஏழு நாட்களுக்குப் பிறகு அங்கிருந்து விடுதலை செய்யப்பட்டார். ''சூழ்நிலையோடு தொடர்பற்ற நிலையில் ஒதுங்கிய மனிதராக'' வந்தேன் என்று அந்த நேரத்தில் தன்னுடைய உணர்ச்சியைப் பற்றி அவர் எழுதினர்.

## அத்தியாயம் ஒன்பது

ஐக்கிய மாகாணத்தில் மறுபடியும் ஒழுங்கு அமைதியை ஏற்படுத்திவிட்டோம், சட்ட மறுப்பு இயக்கம் ஓய்ந்து கொண்டிருக்கிறது, நேருவின் கடிதங்களைக் கொண்டு பார்க்கும் பொழுது எதிர்காலத்தைப் பற்றி அவருக்குத் தெளிவான திட்டங்கள் இல்லை என்று அலகபாத்தைச் சேர்ந்த ஸ்தல அதிகாரிகள் இந்திய அரசாங்கத்துக்கு அறிக்கை அனுப்பினுர்கள்.

சிறையிலிருந்து விடுதலை அடைந்தவுடன் நேரு மிக அவசரமான குடும்ப விவகாரங்களைத் தீர்க்க விரும்பினுர். அவருடைய தகப்பனுர் மரணமடைந்ததிலிருந்து குடும்பச் செலவுகள்—அவை மிகக் குறைவாக இருக்கும்படி முயற்சி செய்யப்பட்டிருந்தாலும்—குடும்பத்தின் அடக்கமான வருமானங்களைக் காட்டிலும் அதிகமாகவே இருந்தன. அவர் தாயார் ஏற்கெனவே ஒரு வருட காலமாகப் படுத்தபடுக்கையாக இருந்து வருகிருர், கமலாவின் உடல்நலமும் கவலைக்கிடமாக இருந்தது, இந்திராவைப் பல்கலைக்கழகத்தில் சேர்க்க வேண்டும். இவை அனைத்தும் நிலைமையை மேலும் சிக்கலாக்கியிருந்தன.

நேரு விடுதலை அடைவதற்குச் சில மாதங்களுக்கு முன்பு அவருடைய இளைய சகோதரி கிருஷ்ணு ஒரு வருட சிறைவாசத்துக்குப் பிறகு விடுதலையாகியிருந்தாள். அவளுடைய காதல் திருமணம் விரைவில் நடைபெறவிருந்தது. தன் குடும்பத்தின் ஒரே ஆண்மகனை தன்னுடைய மதிப்பிற்குரிய சகோதரர் திருமணத்தில் கலந்துகொள்ள வேண்டுமென்று அவள் விரும்பினுள். ஆகவே மொத்தத்தில் நேருவுக்குப் போதுமான பொறுப்புகள் இருந்தன, ஆனுல் அவர் சிறிதும் கலங்கவில்லை. சிறைவாசமும் அதன் வெறுப்பான முடிவில்லாத நாட்களும்

அவருக்குப் பின்னுலிருந்தன. வழக்கமான பாதையில் வாழ்க்கை தொடங்கிக் கொண்டிருந்தது. அவர் காந்தியைச் சந்தித்து இரண்டு வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவரைச் சந்திக்க வேண்டும் என்று ஆர்வத்தோடிருந்தார். நாட்டின் அரசியல் நிலைமையைப் பற்றித் தன்னுடைய எண்ணங்களைக் காங்கிரஸ் தலைவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும், உலக விவகாரங்களைப் பற்றி அவர்களோடு விவாதிக்க வேண்டும் என்று துடித்தார். முதலாளித்துவ நாடுகள் பொருளாதார நெருக்கடியில் சிக்கியிருந்தன, இரண்டாம் உலகப் போர் ஏற்படும் ஆபத்து தோன்றி விட்டது, இவை காரணமாக இந்தியாவின் சுதந்திரப் போராட்ட அரசியல் செயல் திட்டத்தைக் காங்கிரஸ் தயாரிக்க வேண்டுமென்று அவர் கருதினுர்.

முப்பதுக்களின் தொடக்கத்தில் நடைபெற்ற வெகுஜன சட்ட மறுப்புப் போராட்டம் இந்திய சமூகத்தின் எல்லா நிலையினரையும் நடவடிக்கையில் இறக்கியது. தொழிலாளர்களின் வேலைநிறுத்தங்கள், விவசாயிகளின் கிளர்ச்சிகள், சிறு வர்த்தகர்கள் மற்றும் கைவினைஞர்களின் ஆர்ப்பாட்டங்கள், தேசிய முதலாளி வர்க்கத்தினருடைய அதிருப்தி—இவை அனைத்தும் நாட்டின் சுதந்திர எழுச்சியில் இணைந்திருந்தன. இந்தியாவில் காலனியாதிக்க எதிர்ப்புப் போராட்டம் என்ற மகத்தான சூறுவளியில் வெவ்வேறு வாழ்க்கை நிலைமைகளும் வர்க்க நலன்களும் கொண்ட மக்கள் ஈடுபட்டிருந்தார்கள்.

அதே சமயத்தில் ஏகாதிபத்தியம் உலக ரீதியான நெருக்கடியில் சிக்கியிருந்தபடியால் சர்வதேசத் தொழிலாளி வர்க்கத்துக்கும் சோவியத் யூனியனுக்கும் ஒருமைப்பாடு பலமடைந்து வருவதையும் கர்லனிகளில் தேசிய விடுதலை இயக்கம் வளர்ச்சி அடைவதையும் கண்டு அச்சமடைந்து தொழிலாளர்களை மூர்க்கத்தனமாக நசுக்கத் தொடங்கி பல நாடுகளில் பாசிஸ்ட் ஆட்சியை ஏற்படுத்தியது. ஜெர்மனியில் ஹிட்லர் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றினுர், இத்தாலியில் முஸ்ஸோலினி ஆட்சியில் இருந்தார். ஆஸ்திரியாவில் ஸ்திரமான சமூக-ஜனநாயக மரபுகளைப் பற்றிப் பெருமையாகப் பேசிய காலம் மறைந்து இப்பொழுது ஆர்ப்பாட்டம் செய்த தொழிலாளர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்றன. ஜப்பானிய இராணுவ வெறியர்கள் மஞ்சூரியாவைக் கைப்பற்றினுர்கள்.

சீர்திருத்தவாத சமூக-ஜனநாயகக் கட்சிகளும் பூர்ஷ்வா மிதவாதிகளும் தீவிரமான பிற்போக்குவாதம், இராணுவ வெறி மற்றும் பாசிசத்தோடு ஒரு சண்டை கூடப் போடாமலேயே தங்களுடைய நிலைகளைக் கைவிட்டார்கள்; கம்யூனிஸ்டுகள் மட்டுமே பாசிசத்தை இறுதிவரை எதிர்த்துப் போராடினார்கள்.

உலகப் பிற்போக்குவாதத்தின் தாக்குதல் இந்தியாவில் இருந்த நிலைமையையும் பாதித்தது. தேசிய முதலாளி வர்க்கத்தினரும் நிலப்பிரபுத்துவ மேற்குடியினரும் சுதந்திரத்துக்காக நாடு முழுவதும் நடைபெற்ற போராட்டத்தைக் கண்டு பயந்து பிரிட்டிஷ் ''நல்லெண்ணத்தின்'' மீது நம்பிக்கை வைப்பது, தங்களது தேசிய விருப்பார்வங்கள் அனைத்தையும் காலனியாதிக்கவாதிகளின் அரசியலமைப்புச் சட்டத் தந்திரங்களோடு இணைத்துக் கொள்வதே நல்லது என்று முடிவு செய்தார்கள். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவின் சுதேச மன்னர்கள், செல்வந்தர்களான வணிகர்கள் மற்றும் தொழிலதிபர்களிடம் அவர்களுக்கு மிகவும் அதிகமான சுதந்திரத்தைத் தரக் கூடிய ஒரு புதிய அரசாங்க முறையை ஏற்படுத்தப் போவதாக உறுதியளித்த அதே நேரத்தில் இந்தியாவில் ஒரு பயங்கரமான சர்வாதிகார அமைப்பையும் உருவாக்கிக்கொண்டிருந்தது.

உலகம் ''அரசியல், பொருளாதாரப் பேராபத்தின்'' விளிம்பில் நின்று கொண்டிருக்கிறது, அது இன்றைக்கு மக்களுக்கிடையே உள்ள உறவுகளை முற்றிலும் மாற்றியமைக்கப் போகிறதென்று நேரு கருதினார். இரண்டு உலக சக்திகளான பாசிசத்துக்கும் சோஷலிசத்துக்கும் இடையே மிகவும் ஆபத்தான மோதல் ஏற்படும் என்பதை அவர் எதிர்பார்த்தார். சோஷலிசத்தை ஆதரிக்கும் தரப்பைச் சேர்ந்தவர் என்ற முறையில் இந்தியாவின் தேசிய விடுதலை இயக்கத்தின் சோஷலிஸ்ட் திசையைச் சுட்டிக் காட்டும் முகமாக காங்கிரசின் செயல்திட்டத்தில் துல்லியமான நிலைகளை வரையறுத்துக் கூற வேண்டுமென்று நேரு அவசரப்பட்டார். எனினும் முதலில் காந்தியைக் கலந்தாலோசிக்காமல் எதையும் செய்வதற்குத் தனக்கு உரிமை இல்லை யென்று அவர் கருதினார். ஆனால் காந்தி தீண்டத்தகாதவர்களுக்கு மற்ற இந்தியர்களோடு சம உரிமைகளைப் பெற்றுத்தருவதற்காகச் சிறையில்

நீண்ட கால உண்ணுவிரதங்களை மேற்கொண்டு தன் உடல் பலம் முழுவதையும் இழந்துவிட்டார். அவர் உயிருக்கு ஆபத் தேற்படலாம் என்று பயமடைந்த அதிகாரிகள் அவரை விடு தலை செய்தார்கள். ஆசிரமத்துக்குப் பிரயாணம் செய்யத் தேவையான உடல்பலம் காந்தியிடம் இல்லை. எனவே அவர் பூனுவில் தங்கி மெதுவாக குணமடைந்து கொண்டிருந்தார். நேரு பூனுவுக்குப் புறப்பட்டார்.

தன்னுடைய அணுகுமுறைகளும் நடவடிக்கைகளும் நேரு வுக்குக் கலக்கத்தையும் பல சந்தர்ப்பங்களில் வேதனையையும் ஏற்படுத்தியிருப்பது காந்திக்குத் தெரியும். எனவே அவர் நேருவை அன்போடு வரவேற்ருர்.

''ஜவகர்! ஏன் கவலையாக இருக்கிருய்?'' என்று இளைய தலைமுறையைச் சேர்ந்த நேருவைக் கேட்டார்.

நேரு தன் மனந்திறந்த முறையில் தன்னை வாட்டிய சந்தேகங்களை அவரிடம் எடுத்துக் கூறினுர். காங்கிரஸ் முன்னர் ஏற்ற தீர்மானங்களிலிருந்து விலகியதாலும் வகுத்துக் கொண்ட அரசியல் இலட்சியங்களைப் பின்பற்றத் தவறிய தாலும் தனக்கு அதிருப்தி ஏற்பட்டிருப்பதாகக் கூறினுர்.

''துல்லியமான அரசியல் குறிக்கோளை வலியுறுத்த வேண் டும் என்று நீ ஏன் நினைக்கிருய்?'' என்று காந்தி கேட்டார். முழு சுதந்திரமே காங்கிரசின் குறிக்கோள் என்று நேரு வற்புறுத்துவது காந்திக்குத் தெரியும்.

''பெருந்திரளான மக்கள் ஒரு போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்ருல் அவர்களுக்கு எழுச்சி யூட்டக் கூடிய அரசியல் குறிக்கோள் அவசியம்.''

''நான் ஒத்துக் கொள்கிறேன். ஆனுல் குறிக்கோளை நிர்ணயித்த பிறகு அதை அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமா?''

மகாத்மா காந்தி தன்னுடைய கருத்துக்களைச் சிறிதுகூட விட்டுக் கொடுக்காதவர் என்பது பிரபலம். ஆனுல் தன் அன்புக்குரிய சீடரின் கருத்து வேறுபாடுகளைத் தணிப்பதற்கு அவர் முயற்சிப்பது தெளிவாகத் தெரிந்தது.

''குறிக்கோளை அடையக்கூடிய பாதையை வரையறுப்பது இன்று முக்கியமானது என்பதில் சந்தேகமில்லை'' என்று அவர் இணக்கமான குரலில் பேசினுர். ''ஆனுல் அதற்காக நாம் வெகு தூரம் முன்னுல் ஓடிவிட வேண்டுமா? ஒவ்வொரு

தருணத்திலும் ஒரு சரியான அடி மட்டும் எடுத்துவைப்பதே எனக்குப் போதுமானது.''

உரையாடல் சில மணி நேரம் தொடர்ந்தது. காங்கிரஸ் ஸ்தாபனத்தின் முந்திய மாநாடுகளில் அங்கீகரிக்கப்பட்ட சமூக-பொருளாதாரப் பிரச்சினைகளைப் பற்றிய ஷரத்துக்களை நேரு தீவிரமாகவும் வாதங்களுடனும் ஆதரித்துப் பேசினார். சமூகச் செல்வத்தை மறுவினியோகம் செய்வதற்கு உத்தேசிக்கிறோம், வசதிபடைத்த வர்க்கங்களின் உரிமைகளில் பெரும் பகுதி பறிக்கப்படும், பெருந்தொழில்கள் அரசு நிர்வாகத்தில் எடுத்துக் கொள்ளப்படும் என்று காங்கிரஸ் பகிரங்கமாக அறிவிக்க வேண்டுமென்று அவர் கூறினார். ''சொத்துடைமை நலன்களை மாற்றியமைக்காமல் பெருந்திரளான மக்களின் நிலைகளை ஒருபோதும் அபிவிருத்தி செய்ய முடியாது. ஆனால் அதை மனமாற்றத்தின் மூலமாகச் செய்ய வேண்டும். நிர்ப்பந்தத்தை உபயோகிக்கக் கூடாது'' என்று சொல்லி காந்தி ஒத்துக் கொண்டார்.

காந்தி விதித்த நிபந்தனை ஜவகர்லாலுக்குக் கசப்பான சிரிப்பைக் கொடுத்தது. சொத்துடைமை வர்க்கங்கள் தங்களுடைய தனி உரிமைகளை எங்காவது, எப்பொழுதாவது விருப்பத்தோடு விட்டுக்கொடுத்ததுண்டா?

இந்த உரையாடலுக்குப் பிறகும் ஜவகர்லாலினால் காந்தியின் உத்தேசங்களைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர் பெருந்திரளான மக்கள் கலந்து கொள்ளும் அஹிம்சா பூர்வமான போராட்டத்தைக் கைவிட்டு அதற்குப் பதிலாகத் தனிநபர் சத்யாக்ரஹத்தைத் தொடங்கினார். இரண்டுக்குமிடையே உள்ள வேறுபாடு என்ன என்று நேரு தன்னைக் கேட்டுக் கொண்டார். ஒவ்வொரு இந்தியனும் காலனியாதிக்கவாதிகளை எதிர்க்கத் தொடங்கினால், இது—கடைசி நிலையில்—பெருந்திரளான மக்களின் போராட்டத்துக்கே இட்டுச் செல்லும்.

நேருவின் ஐயங்களை தெரிந்து கொண்ட காந்தி அவருக்குப் பின்வருமாறு எழுதினார்: ''பெருந்திரளான அளவில் மக்களின் போராட்டத்துக்கும் தனிநபர் சத்யாக்ரஹப் போராட்டத்துக்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்னவென்றால் பின்னால் சொல்லப்பட்டதில் ஒவ்வொருவரும் ஒரு முழுமையான, சுயேச்சையான அங்கமாக இருக்கிறார், அவருடைய

வீழ்ச்சி மற்றவர்களைப் பாதிப்பதில்லை என்பதே. பெருந்திரளான அளவில் மக்கள் நடத்தும் போராட்டத்தில் ஒருவருடைய வீழ்ச்சி பொதுவாகவே மற்றவர்களையும் பாதிக்கிறது. மேலும் பெருந்திரளான மக்கள் போராட்டத்தில் தலைமை அவசியமாக இருக்கிறது, தனிநபர் போராட்டத்தில் ஒவ்வொரு சத்யாக்ரஹியும் தனக்குத் தலைவராக இருக்கிறார்... கடைசியாக, பெருந்திரளான அளவில் நடைபெறும் மக்கள் போராட்டத்தை அரசு சமாளிக்கக் கூடும். ஆனால் தனிநபர் போராட்டத்தைச் சமாளிப்பது அரசுக்கு மிகச் சிக்கலானது.''

தங்கள் இருவருடைய கருத்துக்களும் இப்பொழுது எவ்வளவு அதிகமாக வேறுபட்டிருக்கின்றன, இனி எதிர் காலத்தில் எந்த அளவுக்குத் தாங்கள் ஒத்துழைக்க முடியும் என்பதைப் பற்றி நேரு சிந்தித்தார். காங்கிரஸ் செயற் குழுவிலிருந்த நிலைமையும் அவருக்குக் கவலையைக் கொடுத்தது. காங்கிரஸ் கட்சியின் தலைமையான அமைப்புக்கள் அனைத்துமே தங்கள் நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று காந்தி முன்னர் கூறியிருந்தார். ஆகவே அந்த சமயத்தில் காங்கிரஸ் செயற்குழு செயலாற்றாமலிருந்தது. காங்கிரஸ்காரர்கள் கட்சிப் பொறுப்புகளிலிருந்து தாமாகவே விலகிக் கொள்ளும் செயல்தந்திரத்தை நேரு கண்டனம் செய்தார். தன்னைப் பொறுத்த வரை முன்பிருந்ததைப் போலவே காங்கிரசின் பொதுச் செயலாளராகக் கருத வேண்டும் என்று வற்புறுத்தினார். காங்கிரசில் ஏற்பட்டிருந்த நிலையை அவர் பின்வருமாறு கவலையோடு மதிப்பிட்டார்: ''அது முட்டுச் சந்திலே நின்று கொண்டிருந்தது. அதிலிருந்து வெளியேறுவதற்கு எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வழி இல்லாதிருந்தது.'' ஆனால் நேரு முயற்சியைக் கைவிடவில்லை.

நேரு இந்த சமயத்தில் **இந்தியா எங்கே போகிறது?** என்ற சிறு நூலை எழுதினார். இந்திய மக்கள் உலக முழுவதிலுமுள்ள ஒடுக்கப்பட்ட உழைக்கும் மக்களோடு சேர்ந்து அந்நிய ஆதிக்கத்தையும் தங்கள் நாட்டுச் சுரண்டல்காரர்களையும் எதிர்த்துப் போராடுவதே இந்தத் தேக்கத்திலிருந்து தப்புவதற்கு வழி என்று அவர் சுட்டிக்காட்டினார். ''இந்திய மக்கள் சுரண்டப்படுவதற்கு முடிவு கட்டுவது என்ற அளவில் தான் அவர்களுடைய முக்கிய குறிக்கோள் இருக்க முடியும்.

அரசியல் ரீதியில் சுதந்திரமும் பிரிட்டிஷ் தொடர்பை வெட்டிக் கொள்வதுமே அதன் அர்த்தம்... பொருளாதார, சமூக ரீதியில் எல்லா வகையான விசேஷ வர்க்க உரிமை களுக்கும் சொத்து சமமின்மைக்கும் முடிவு கட்டுவதே அதன் அர்த்தம்.''

நேருவின் காலனியாதிக்க எதிர்ப்புக் கருத்துக்கள் இடது சாரி காங்கிரஸ்காரர்கள் மற்றும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி யின் உறுப்பினர்களிடம் ஆதரவையும் அனுதாபத்தையும் பெற்றன. 1933 டிசம்பரில் கான்பூரில் நடைபெற்ற தொழிற் சங்கங்களின் மாநாட்டில் காலனியாதிக்க நுகத்தடியைத் தூக்கி யெறியுமாறு அவர் விடுத்த அறைகூவல் பிரிட்டிஷ் அரசாங் கத்துக்கு ஆத்திரமேற்படுத்தியது. நேருவைக் கைது செய்வதில் எவ்விதத் தாமதமும் கூடாது என்று உத்தரவு பிறப்பித்த இந்திய விவகாரங்களுக்கான அரசு செயலர், இவர் ''நாட்டி லேயே மிக ஆபத்தான நபர்'' என்றார்.

1934ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பிறந்தது. வைசிராய் அரசாங்கத்துக்கு எதிரான ஆர்ப்பாட்டங்களுக்குத் தடை விதித்திருந்த போதிலும் இந்திய சுதந்திர நாளாகிய ஜனவரி 26ந் தேதியைக் கொண்டாடுமாறு நேரு நாட்டு மக்களைக் கேட்டுக்கொண்டார். அவ்வாறு செய்வதன் மூலம் பிரிட் டிஷ் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களைத் தூண்டியதற்காக அரசாங்கம் தன்னைக் கைது செய்வது நிச்சயம் என்பது அவருக்குத் தெரியும். அவர் அதற்குத் தயாராகவே இருந் தார். ஒரு விஷயம்தான் அவருக்குக் கவலையைத் தந்தது. அவரைக் கைது செய்வதற்கு முன்பு மறுபடியும் ஒரு தடவை கல்கத்தாவுக்குப் போக வேண்டும், அங்கே டாக்டர்களைச் சந்தித்து கமலாவின் மருத்துவ சிகிச்சைக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். கல்கத்தாவுக்குப் பக்கத்தில் இருக்கும் சாந்திநிகேதனத்துக்குப் போய் அங்கே வசிக்கும் இரவீந்திரநாத் தாகூரைப் பார்க்க முடியுமானால் அது மிக நல்லது. தாகூர் நிறுவியுள்ள பல்கலைக்கழகத்தில் இந்திரா வைச் சேர்க்க வேண்டும்.

அவர் மகளுக்குப் பதினாறு வயது முடிவடைந்திருந்தது. அந்த வயதில் மற்றவர்களிடம் உற்சாகமும் குதூகலமும் நிறைந்திருக்கும். இந்திரா அடிக்கடி கவலை நிரம்பி சிந்தனை யில் மூழ்கிக் காணப்பட்டாள். அது ஒருவகையான தன்னு

ணர்ச்சிப் போக்கே. தகப்பனுரிடமிருந்து மகளுக்கு வந்திருக் கிறதென்பதில் சந்தேகமில்லே. இயற்கை அவளுக்குச் சிறந்த திறமைகளே, அழகை, மன உறுதியை அபரிமிதமாகக் கொடுத் திருந்தது. அவள் குழந்தைப் பருவத்தில் தனியாகவே வளர்ந் தாள். அவள் தகப்பனுரை ஒரு சிறை மாற்றி இன்னெரு சிறைக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். அவர் வெளியே இருக்கும் பொழுதும் கூட தன் முழு நேரத்தையும் அரசியல் நடவடிக்கைகளில்தான் செலவிட்டார். அவள் தாயாரும் பாட் டியும் அடிக்கடி நோய்ப்படுக்கையில் இருந்தார்கள். அவர்கள் வீட்டில் அடிக்கடி போலீஸ் சோதனைகள் நடைபெறுவதையும் கைது செய்யப்படுவதையும் அவள் பார்த்துக்கொண்டிருப் பாள். பெரியவர்களேப் போலவே அவளும் உயர்ந்த இலட் சியங்களுக்காகப் போராடுகின்ற பொழுது ஏற்படும் மகிழ்ச் சியையும் ஏமாற்றத்தையும் அனுபவித்திருக்கிருள். •எனவே அவள் வாழ்க்கையின் துன்பங்களுக்கு நடுவே வயதுக்கு மீறிய உறுதியைக் காட்டினுள். அவளுடைய சுயேச்சையான தன்மை தகப்பனுருக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஆனுல் அவள் சில சமயங்களில் விதியின் விளேயாட்டைத் தாங்கிக் கொள்ள முடியாது போவதை நினேத்து அவள் தகப்பனுர் முடிவில் லாத வேதனேக்கு ஆளானுர்.

ஜனவரி 15ந் தேதியன்று கல்கத்தாவுக்குப் புறப்படு வதற்குச் சில மணிநேரத்துக்கு முன்னர் நேரு தன்னுடைய வீட்டுக்கு முன்பாகக் கூடியிருந்த விவசாயிகளிடம் பேசினுர். அவர்கள் மகாமேளா விழாவுக்காக அலகபாத்துக்கு வந்திருந் தார்கள். திடீரென்று நாய்கள் குரைத்தன. பறவைகள் கூக்குர லிட்டுக் கொண்டு கூட்டம் கூட்டமாக வானத்தில் பறந்தன. அந்த நேரத்தில் அவர்களுடைய கால்களுக்குக் கீழே தரை நடுங்கியது. கூரையிலிருந்து ஓடுகள் சரிந்து விழுந்தன. அந்த நிலநடுக்கம் இரண்டு அல்லது மூன்று நிமிடங்கள் நீடித்திருக் கும். பிறகு திடீரென்று எங்கும் அமைதி. நிலநடுக்கத்தின் உள்மையம் அங்கேயிருந்து வெகு தூரத்துக்கு அப்பாலிருந் தது. அந்தச் சில விஞடிகள் கோடிக்கணக்கான இந்தியர் களுக்கு எவ்வளவு இழப்பை ஏற்படுத்தின என்பது நேருவுக்கு அப்பொழுது தெரியாது.

மறு நாள் திட்டமிட்டபடியே அவர் தன் மனேவி, மகளோடு கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். பீகாரில் ஏற்

பட்ட நிலநடுக்கத்தின் விளைவுகளைப் பற்றி இங்கும் அவர் தெரிந்து கொள்ள முடியவில்லை.

கல்கத்தாவில் அவர் மூன்று மாபெரும் பொதுக் கூட்டங்களில் பேசினார். எல்லாவிதமான சிந்தனைச் சுதந்திரத்தையும் நசுக்கிவிட வேண்டுமென்று அரசாங்கம் மக்கள் மீது கொடிய அடக்குமுறையைப் பிரயோகிப்பதை அவர் கண்டித்தார்.

போலீஸ் ஒற்றர்கள் நேருவை விடாமல் பின்தொடர்ந்தார்கள். அவர் யாரை சந்தித்தார், என்ன பேசினார் என்ற இரகசிய அறிக்கைகள் டில்லிக்கும் அங்கிருந்து லண்டனுக்கும் அனுப்பப் பட்டன. ''நமது அரசியல் எதிர்காலத்தைப் பற்றி இந்த நேரத்தில் ஏற்பட்டிருக்கும் ஒரே உண்மையான ஆபத்து ஜவகர்லால் நேரு கிராமங்களில் கலப்பற்ற சோஷலிஸ்ட் மற்றும் கம்யூனிஸ்ட் திசையில் பிரச்சாரத்தைத் தொடங்கக் கூடும் என்ற அச்சமே. அதைச் சமாளிப்பது மிகவும் கஷ்டமாக இருக்கும்... பெருந்திரளான மக்களை ஸ்தாபனரீதியாகத் திரட்டி கம்யூனிச விஷநோயை அவர்களுக்குப் புகுத்துவதே நேருவின் முக்கியமான நோக்கம் என்பதில் ஐக்கிய மாகாண அரசாங்கத்துக்குச் சிறிதும் ஐயமில்லை'' என்று வைசிராய் வில்லிங்டன் அறிக்கை அனுப்பினார்.

அற்பமான பிரச்சினைகளின் மீதில்லாமல் கணிசமான தண்டனை கொடுக்கக் கூடிய முக்கியமான குற்றச் சாட்டில் சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது நேருவைக் கைது செய்யுமாறு மாகாண அரசாங்கங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டது.

இரவீந்திரநாத் தாகூர் நேரு குடும்பத்தினரை மிகவும் நெருங்கிய நண்பர்கள் என்ற முறையில் வரவேற்றார். நீண்ட வெள்ளை அங்கி காற்றிலே படபடக்க, வெண்மையான தலை முடியும் நீண்ட அடர்த்தியான வெண்தாடியும் ஆச்சரியப் படத்தக்க அளவுக்கு இளமையும் துடிப்பும் நிறைந்த கண்களோடு தாகூர் முதிய குடும்பத் தலைவரைப் போலத் தோற்றமளித்தார். அவர் விருந்தினர்களுக்குப் பல்கலைக்கழக வகுப்பு அறைகளைச் சுற்றிக் காட்டினார். மாலையில் வெகு நேரமான பிறகும் இரு மருங்கும் மரங்கள் வளர்ந்திருந்த பாதைகளில் அவர்களைக் கூட்டிக் கொண்டு சாந்திநிகேதனத்தைப் பற்றியும் எதிர்காலத் திட்டங்களைப் பற்றியும் அவர்களோடு உலாவிய

படியே பேசிக் கொண்டிருந்தார். அங்கே திறந்த வெளியில் மரங்களின் நிழலில் பாடங்கள் பெரும்பாலும் நடத்தப்பட்டன. அங்கே மாணவர்கள் உபயோகத்துக்காக சிறந்த நூலகமும் ஆய்வுச்சாலைகளும் இருந்தன. பரிசோதனைகளைச் செய்வதற்காக வயல்களும் பட்டறைகளும் இருந்தன. ஆசிரியர்களும் மாணவர்களும் விவசாயிகள் மற்றும் தொழிலாளர்கள் மத்தியில் தீவிரமான கல்விச் சேவைகளைச் செய்தார்கள். ''இங்கே சாந்திநிகேதனத்தில் நாம் செய்ய முயற்சிப்பதை ருஷ்யர்கள் நாடு முழுவதும் மிகச் சிறப்பான முறையில் செய்து கொண்டிருக்கிறார்கள்'' என்றார் தாகூர். சோவியத் யூனியனுக்குச் சென்றிருந்த பொழுது அங்கே தான் பார்த்தவற்றை அவர் எடுத்துக் கூறினர். **ருஷ்யாவிலிருந்து எழுதிய கடிதங்கள்** என்ற தலைப்போடு தான் எழுதிய புத்தகத்தை அதிகாரிகள் தடை செய்திருப்பதைப் பற்றி அவர் ஆத்திரப்பட்டார். இந்தியாவில் ஆன்மிக அடிமைத்தனத்துக்கு முடிவு கட்ட வேண்டும், பசியோடிருப்பவர்களுக்கு உணவு கொடுக்க வேண்டும், சாதாரண மக்கள் கல்வி பெற வேண்டும் என்பதைப் பற்றியே அவர் தன் வாழ்க்கை முழுவதும் கனவு கண்டு வந்தார். கடந்த காலத்தில் இந்தியாவைப் போலவே ஒடுக்கப்பட்டுப் பின்தங்கிய நாடாக இருந்த ருஷ்யாவில் நம்பக்கூட முடியாத அளவுக்குக் குறுகிய காலத்தில் இவை அனைத்தையும் வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டார்கள். பிரபஞ்சத்தின் தோற்றத்தைப் பற்றிய ஆன்மிக விளக்கத்தை அவர் நம்பினர், போல்ஷிவிக்குகள் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் என்பது அவருக்குத் தெரியும்; ஆனல் காந்திக்கு மாறாக தாகூர் இதைக் கண்டு அஞ்சவில்லை.

தாகூரின் கருத்துக்களை நேரு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். தன்னுடைய சொந்த முடிவுகளுக்கு ஆதரவான சொற்களைத் தன்னுடைய நாட்டின் மாமேதையிடமிருந்து கேட்டதில் அவர் அதிகமான மகிழ்ச்சி அடைந்தார்.

தாகூர் அந்தப் பல்கலைக்கழகத்தில் உருவாக்கியிருந்த மனிதாபிமான, தேசபக்திச் சூழலையும் அங்கே நிலவிய பொதுவான ஜனநாயக நிலைமைகளையும் கண்டு நேருவும் கமலாவும் மகிழ்ச்சி அடைந்தனர். இந்திராவின் படிப்பைப் பற்றிய கவலைகள் மறைந்தன. சாந்திநிகேதனத்தில் இந்திராவை விட்டுச் சென்றார்கள்.

நேரு கல்கத்தாவுக்கு வந்து மூன்று நாட்களுக்குப் பிறகே பீகாரில் நிலநடுக்கத்தால் ஏற்பட்ட அழிவைப் பற்றிய செய்திகள் வரத் தொடங்கின. பேரழிவு ஏற்பட்டிருந்தது. இடிந்து விழுந்த கட்டிடங்களின் கீழ் பல்லாயிரக் கணக்கான மக்கள் புதைக்கப்பட்டார்கள். மக்களின் துன்பத்தைத் துடைப்பதற்கு அரசாங்கம் உடனடியாக நிவாரண நடவடிக்கைகளைச் செய்யாத காரணத்தால் பலியானவர்களின் எண்ணிக்கை மேலும் அதிகரித்தது.

அலகபாத்துக்குத் திரும்புவதற்கு முன்பாக பீகாருக்குப் போவதென்று நேரு முடிவு செய்தார். உணவு இல்லாமல், தங்குவதற்கு இடமில்லாமல் பாதிக்கப்பட்டிருக்கும் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் முதல் உதவி செய்வதற்காக அவர் தொண்டர் படைகளை அமைத்தார். அரசாங்கம் ஏதும் செய்யாமலிருப்பதைக் கண்டித்தார். பீகாரில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி புரிய நிதி வசூலிக்குமாறு நாட்டு மக்களைக் கேட்டுக் கொள்ளும் பிரசுரத்தை எழுதினார்.

அந்த நாட்களின் போது பத்திரிகையில் காந்தியின் அறிக்கையைப் படித்து நேரு அதிர்ச்சியடைந்தார். தன்னுடைய ''மனச்சாட்சியின் குரலே'' தனக்கு வழிகாட்டி என்று கொண்ட காந்தி பீகாரில் ஏற்பட்ட நிலநடுக்கம் ''தீண்டாமை என்ற பாவத்தைச் செய்ததற்குத் தரப்பட்ட தண்டனை'' என்று கூறியிருந்தார்.

தாகூரும் காந்தியும். இரண்டு மாபெரும் இந்தியர்கள். இருவருமே தேசபக்தர்கள். ஆனால் எவ்வளவு வேறுபாடுகளைக் கொண்ட மனிதர்கள்! சமூக, பொருளாதார முன்னேற்றத்துக்கு, நாடுகளின் ஆன்மிகச் செல்வங்கள் மற்றும் கலாச்சாரங்களின் சர்வதேச ஒற்றுமைக்கு ஆதரவளிக்கும் தாகூர். இந்தியாவின் ''பொற்காலத்துக்கு,'' தீண்டாமை அகற்றப்பட்டுத் தூய்மையடைந்த இந்து மதத்துக்குத் திரும்ப வேண்டும் என்று விரும்பும் காந்தி. வாழ்க்கையின் ஆனந்தத்தை அங்கீகரிக்கும் தாகூர். சுயமறுப்பையும் துறவு நெறியையும் போதிக்கும் காந்தி.

ஆனால் தாகூர், காந்தி இருவரிடமுமே தொன்மை மிக்க, என்றும் இளமையான, மாற்றமடைகின்ற, மாறாத்தன்மை கொண்ட அதே இந்திய ஆன்மா குடி கொண்டிருந்தது. அந்த ஆன்மாவின் கூறுகள் ஒவ்வொரு இந்தியருக்கும் அழி

வில்லாத நேசமும் நெருக்கமும் கொண்டவை. சமூக நீதி நிலவ வேண்டுமென்ற வேட்கை, தங்கள் நாடு சுதந்திரமும் வளமும் அடைய வேண்டுமென்ற தீவிரமான ஆசை இந்த இரண்டு மாபெரும் இந்தியர்களையும் ஒன்று சேர்த்தது. அவர்கள் இந்தியா முழுமைக்கும் சொந்தமானவர்கள், அதன் மக்கள் அனைவருக்கும் சொந்தமானவர்கள்.

காங்கிரஸ்காரர்கள் மத்தியில் மனச் சோர்வும் ஏமாற்றமும்—அச்சமும் கூட—ஏற்பட்டிருந்தாலும் ஜவகர்லால் நேருவும் அவருடைய ஆதரவாளர்களும் 1934 ஜனவரி 26ந் தேதியன்று சுதந்திர தினக் கொண்டாட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். நகரங்களிலும் கிராமங்களிலும் எப்பொழுதும் போல பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன. வலதுசாரி காங்கிரஸ் உறுப்பினர்கள் அவற்றில் கலந்து கொள்ளவில்லை. பிரதானமாகத் தொழிலாளர்களும் விவசாயிகளுமே அவற்றில் உற்சாகமாக ஈடுபட்டார்கள். மறுபடியும் போலீஸ்காரர்கள் பொதுக் கூட்டங்களைக் கலைத்தார்கள். மறுபடியும் கைதுகள். ஆனால் ஜவகர்லால் இன்னும் சுதந்திரமாக இருந்தார்.

நேரு நீண்ட சுற்றுப் பயணம் செய்துவிட்டு அதிகமாகக் களைத்துப் போய் பிப்ரவரி 11ந் தேதியன்று குடும்பத்தோடு சிறிது நேரமாவது தங்கியிருக்கின்ற ஆசையோடு அலகபாத்துக்குத் திரும்பினார். மறுநாள் அவரும் கமலாவும் வெளி வராந்தாவுக்குச் சென்ற பொழுது வீட்டுக்கு முன்னால் ஒரு போலீஸ் கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு போலீஸ் அதிகாரி இறங்கினார். சிறைக்குத் திரும்ப வேண்டிய நேரம் வந்துவிட்டதென்று நேரு புரிந்து கொண்டார்.

''நெடுங்காலமாக உங்களை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று நேரு போலீஸ் அதிகாரியிடம் கூறினார். அவரைக் கைது செய்யுமாறு கல்கத்தாவிலிருந்து வாரண்ட் வந்திருக்கிறதென்று அதிகாரி தயக்கத்தோடு கூறினார்.

ஜவகர்லால் இரயிலில் கல்கத்தாவுக்குக் கொண்டு செல்லப்பட்டார். இரயில் நிலையத்திலிருந்து போலீஸ் தலைமை நிலையத்துக்குச் சிறை வண்டியில் அதிகமான பாதுகாப்போடு கொண்டு செல்லப்பட்டார்.

நேரு மீதிருந்த வழக்கு விசாரணை ''மூடிய கதவுகளுக்குள்'' நடைபெற்றது. இதற்கு முந்திய சந்தர்ப்பங்களைப்

போலவே இப்பொழுதும் நேரு தனக்கான வழக்குரைஞரை மறுத்தார். ''அரசு எதிர்ப்பு நடவடிக்கைக்காக'' பிப்ரவரி 16ந் தேதியன்று அவருக்கு இரண்டு வருட சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. நேருவின் ஏழாவது சிறை வாசம் தொடங்கியது.

தான் சுதந்திரமாக இருந்த நாட்களை நேரு நினைத்துப் பார்த்தார். ஓரளவுக்கு சில வேலைகளைச் செய்து முடித்து விட்டதாக அவர் திருப்தியடைந்தார். காங்கிரஸ் வலது சாரிகளின் சரணடையும் கொள்கையைப் பலமாகத் தாக்குவதிலும் அதே சமயத்தில் மெதுவாக பலமடையத் தொடங்கியிருந்த இடதுசாரிகளை ஆதரிப்பதிலும் அவர் வெற்றியடைந்தார். குடும்ப விவகாரங்களை முடித்துவிட்டார். தாயாரின் நோய் குணமடைந்து கொண்டிருந்தது. கிருஷ்ணாவின் திருமணம் சிறப்பாக நடைபெற்றுவிட்டது. இந்திரா சாந்திநிகேதனத்தில் படித்துக் கொண்டிருக்கிறாள். அவருக்கு உண்மையில் கவலையைக் கொடுத்த ஒரே விஷயம் தன் மனைவியின் உடல் நிலைமை தொடர்ச்சியாக சீர்கேடடைந்து வந்தது தான்.

கல்கத்தாவுக்குப் பக்கத்தில் உள்ள அலிப்பூர் மத்திய சிறையில் ஒரு சிறிய அறையில் அவர் அடைக்கப்பட்டார். மாற்றமில்லாத நெடிய நாட்கள் மெதுவாக நகர்ந்தன. குளிர் காலம் முடிந்தது. பிறகு வசந்தகாலமும் முடிந்தது. கல்கத்தாவின் வெப்பமான, சோர்வூட்டுகின்ற கோடைகாலம் வந்தது. தனிமைச் சிறை அவர் உடலையும் உள்ளத்தையும் வாட்டியது. அவர் உடல் மெலிந்தது; முகம் வெளிறிய, பழுப்பு நிறத்தை அடைந்தது. ''சிறைச் சுவர்களையும் கம்பிகளையும் தாள்ப்பாள்களையும் பூட்டுகளையும் பார்த்தாலே வெறுக்கத் தொடங்கினேன்!'' என்று அவர் அலிப்பூர் சிறை வாசத்தைப் பற்றிப் பிற்காலத்தில் எழுதினார்.

இந்தியாவில் நேருவுக்கு ஏற்பட்டிருந்த அபரிமிதமான செல்வாக்கு வைசிராய்க்குத் தெரிந்ததே. ஆங்கில நாடாளுமன்றத்தில் கூட நேருவின் புலமை, அறிவு மற்றும் மன உறுதியைப் பாராட்டிப் பேசினார்கள். எனவே அப்படிப்பட்ட தலைவரிடம் கொடுமையாக நடந்து கொண்டதாகத் தோன்ற வைசிராய் விரும்பவில்லை. மேலும் காலமும் மாறிக் கொண்டிருந்தது. காலனியாதிக்கவாதிகளில் தொலை நோக்குடைய

சிலர் இந்தியர்களின் உதவியோடு இந்தியாவை எப்படி நிர்வாகம் செய்வது என்று சிந்திக்கத் தொடங்கியிருந்தார்கள். அப்படிப்பட்ட நிலைமை ஏற்படுகின்ற பொழுது நேருவின் அரசியல் செல்வாக்கைக் கணக்கிலெடுத்துக்கொள்வது அவசியமே.

நேருவை டெராடுன் சிறைக்கு மாற்ற அதிகாரிகள் முடிவு செய்தார்கள். அங்கே சிறைச்சாலை மதிப்பீடுகளின்படி ''சிறந்த'' அறையில் அடைக்கப்பட்டார். அது முன்பு மாட்டுக் கொட்டிலாக இருந்தது. உடற்பயிற்சி செய்வதற்கு அறைக்கு முன்பாகச் சிறிது இடமுமிருந்தது. எனினும் தனிமைச் சிறை வாசம் தொடர்ந்தபடியால் அவர் மன நலம் பாதிக்கப்பட்டது. வெளியிலிருந்து கிடைத்த மோசமான செய்திகளும் அவர் மனவாட்டத்தை அதிகப்படுத்தின. காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருந்த சரணடையும் மனப்பான்மையினர் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு காதல் விளையாட்டில் ஈடுபட்டிருந்தார்கள். அரசாங்கமும் நல்லெண்ண சமிக்கையாகக் காங்கிரஸ் மீது விதிக்கப்பட்ட தடையை அகற்றியது. அதே சமயத்தில் கம்யூனிஸ்டுகள் மீது தடை விதிக்கப்பட்டது. கம்யூனிஸ்டுகள் மீது அனுதாபம் காட்டியவர்கள் அல்லது முற்போக்கான கருத்துக்களைக் கொண்டிருந்தவர்கள் மற்றும் தொழிலாளர் அமைப்புகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்தவர்கள் இந்தத் தடைக்கு உள்ளானார்கள். ''காங்கிரசில் அல்லது தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் அணிகளிலிருந்த அதிக முற்போக்குடைய சக்திகளைத் தொடர்ந்து நசுக்குவது காங்கிரசிலிருந்த அதிகமான ஜாக்கிரதை உணர்ச்சி கொண்ட தலைவர்களுக்கு பெருங்கோபத்தை ஏற்படுத்தாது என்றும் அவர்கள் ஒரு வேளை கருதியிருக்கலாம்'' என்று நேரு பிற்காலத்தில் எழுதினார்.

சட்ட மறுப்பு இயக்கத்தைக் கடைசியாகவும் பரிபூரணமாகவும் முடித்துக் கொள்ளுமாறும், இந்தியாவில் பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிரான ஆர்ப்பாட்டங்களை நிறுத்துமாறும், காங்கிரஸ் முற்றிலும் சட்டபூர்வமான வழிகளையே பின்பற்ற வேண்டுமென்றும் காந்தி வேண்டுகோள் விடுத்திருப்பதாக சிறையிலிருந்த நேருவுக்குச் செய்தி வந்தது.

காங்கிரஸ் தலைவர்கள் காங்கிரஸ் செயற்குழுக் கூட்டத்தில் ''தனிச் சொத்துடைமை பறிக்கப்படும் மற்றும் வர்க்கப்

போராட்டத்தைத் தவிர்க்க முடியாது என்ற பொறுப்பில் லாத பேச்சுக்களைப் பற்றி'' ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள். வர்க்கப் போராட்டத்தைப் போதிப்பவர் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் உறுப்பினராக இருக்க முடியாது என்று அந்தத் தீர்மானம் தெளிவாக எடுத்துக் கூறியது.

காலனியாதிக்க எதிர்ப்பு இயக்கத்தில் முன்பு எத்தகைய பங்கும் வகிக்காத காங்கிரசின் புதிய உறுப்பினர்கள் இடது சாரி காங்கிரஸ்காரர்களைத் தீவிரமாகத் தாக்கினார்கள். ''அரசியல் அரங்கத்தில் ஆதிக்கம் வகித்த காந்தியின் மர்மம் நிறைந்த, நழுவிச் செல்கின்ற ஆளுமையைத் தவிர காங்கிரசிடம் இரண்டு முகங்கள் இருப்பது போலத் தோன்றியது. கலப்பற்ற அரசியல் முகம் ஒரு பாராளுமன்ற கட்சிக் கமிட்டியாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. அடுத்த முகம் ஒரு பிரார்த்தனைக் கூட்டத்தைப் போல பக்தியும் உணர்ச்சிப் பசப்பும் நிறைந்து காணப்பட்டது'' என்று நேரு எழுதினார்.

பிற்போக்குவாதத்தின் தாக்குதலும் காங்கிரசின் தலைமை வலதுசாரியினரிடம் சிக்கியதும் ஜவகர்லாலுக்கு வேதனையைக் கொடுத்தது. பதினைந்து வருடங்களாக நீண்ட போராட்டப் பாதையில் நடந்து வந்த பிறகு மறுபடியும் புறப்பட்ட இடத்துக்கே போய்விட்டதைப் போல அவருக்குத் தோன்றியது. காந்திக்கும் தனக்குமிடையே பொதுவான அம்சங்கள் குறைவே என்று அவர் சிறையில் தன்னுடைய நாட்குறிப்பில் எழுதினார்: ''எங்களுடைய நோக்கங்கள் வெவ்வேறாக இருக்கின்றன; எங்களுடைய இலட்சியங்களும் வெவ்வேறாக இருக்கின்றன, எங்களுடைய ஆன்மிகப் பார்வை வெவ்வேறாக இருக்கிறது; நாங்கள் பின்பற்றும் வழிமுறைகளும் வெவ் வேறாகவே இருக்க வேண்டும்.''

காங்கிரஸ் இயக்கத்தில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியின் காரணங்களைக் கண்டுபிடிப்பதற்காக நேரு கடந்த காலத்தை நோக்கித் திரும்பினார், இந்திய தேசிய காங்கிரசின் வரலாற்றை ஆராய்ந்தார். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை நினைத்துப்பார்த்தார், முப்பதுக் களின் நடுப்பகுதி வரை அந்த சம்பவங்களின் வளர்ச்சியை ஆராய்ந்தார்.

1934 ஜூனில் நேரு தன்னுடைய ''வாழ்க்கை வரலாற்று வர்ணனையை'' எழுதத் தொடங்கினார். ஒவ்வொரு

நாளும் நெடு நேரம் எழுதினர்; உடற்பயிற்சிகள் செய்வதற்கும் அறையின் முன்புறத்தில் உலாவுவதற்கும் மட்டுமே அவர் எழுத்து வேலையை நிறுத்துவார். அப்புத்தகத்தை எழுதுவது அவருடைய போராட்ட உணர்ச்சியை ஊக்குவித்தது; கமலாவின் உடல் நிலை திடீரென்று சீர்கேடடைந்திருப்பதாகத் தகவல் கிடைத்த பொழுது அவருடைய வேதனையைக் குறைத்து அவரிடம் ஏற்பட்ட அச்சத்தைப் போக்கியது.

தாகூரும் நாட்டில் செல்வாக்குடைய வேறு பலரும் அவருடைய விடுதலைக்காக முயற்சிகளைச் செய்தார்கள். பிரிட்டிஷ் லேபர் கட்சியின் தலைவர்களான கிளெமென்ட் அட்லியும் ஜியார்ஜ் லான்ஸ்பரியும் இதர சில தலைவர்களும் நேருவின் அரசியல் கருத்துக்களை ஆதரிக்காவிட்டாலும் அவரை விடுதலை செய்யக் கோரினர்கள். இந்தியப் பத்திரிகைகளும் இயன்ற அளவுக்கு இந்த இயக்கத்தை ஆதரித்து எழுதின. இத்தகைய நிலைமைகளில் பொது அபிப்பிராயத்தைப் பகுதியளவுக்காவது நிறைவேற்றுவது அறிவுடைய செயலாக இருக்குமென்று அதிகாரிகள் கருதினர்கள். உடல் நலமின்றி இருக்கும் மனைவியைப் பார்ப்பதற்காக சில நாட்களுக்கு அவரை விடுதலை செய்வதாக ஆகஸ்ட் 11ந் தேதியன்று நேருவிடம் தெரிவிக்கப்பட்டது.

போலீஸ்காரர்கள் ஜவகர்லாலை அலகபாத்துக்குக் கூட்டிச் சென்றார்கள். வீட்டில் டாக்டர்களும் தாதிகளும் உறவினர்களும் கூட்டமாக இருந்தார்கள். இந்திராவும் சாந்திநிகேதனத்திலிருந்து அங்கே வந்திருந்தாள். கமலா படுக்கையில் படுத்திருந்தாள். ''என்னல் உங்களுக்கு எவ்வளவு சிரமம்'' என்று சொல்வதைப் போல கணவனைப் பார்த்துக் குற்ற உணர்ச்சியோடு பலவீனமாகச் சிரித்தாள்.

வீட்டில் போலீஸ் காவலோடு இருந்தபொழுது நேரு அநேகமாக முழு நேரமும் மனைவியின் படுக்கைக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தார். நாட்டின் அரசியல் நிலைமையை மாற்றக் கூடிய எத்தகைய நடவடிக்கையையும் செய்யக் கூடிய நிலையில் அவர் இருக்கவில்லை. எந்த நேரத்திலும் அவரை மறுபடியும் சிறைக்குக் கொண்டு போகலாம்.

1934 ஆகஸ்ட் 23ந் தேதியன்று அவரைக் கூட்டிக் கொண்டு போவதற்காக போலீஸ் கார் வீட்டுக்கு வந்தது. அவரை நைனிடால் சிறைக்குக் கூட்டிக்கொண்டு போவதாகப் போலீஸ் அதிகாரி தெரிவித்தார். அவர் ''விசேஷ அனுமதி

யின்'' பேரில் பதினொரு நாட்கள் மட்டுமே சிறைக்கு வெளியே இருந்தார். போலீஸ் அதிகாரி அவரைக் கூட்டிக் கொண்டு புறப்பட்ட சமயத்தில் அவர் தாயார் வேதனை நிறைந்த முகத்தோடு கைகளை நீட்டிக் கொண்டு அவரை நோக்கி ஓடிவந்தாள். யமுனை நதியின் எதிர்க்கரையில் அமைந்திருந்த நைனிடால் சிறைச்சாலை வீட்டிலிருந்து வெகு தூரத்தில் இருக்கவில்லை என்பது ஒன்றுதான் ஆறுதலாக இருந்தது. அந்தப் ''பிடிவாதமான'' கைதியிடம் இரக்கம் காட்ட வேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படும் பொழுது அரசாங்கம் அவ்வாறு நடந்து கொள்ளுமென்று உறுதி கொடுத்திருப்பதாகப் பத்திரிகைகள் எழுதின.

அக்டோபர் மாதத்தின் தொடக்கத்தில் கமலாவுக்கு அதிகமான காய்ச்சல் ஏற்பட்டிருந்தது. அவளால் பேச முடியவில்லை. அப்பொழுது நேரு மறுபடியும் கமலாவைப் பார்ப்பதற்காக வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வரப்பட்டார்.

டாக்டர்கள் வற்புறுத்தியதனால் கமலா இமயமலைக்குப் பக்கத்திலிருந்த போவாலி என்ற இடத்துக்குக் கொண்டு செல்லப்பட்டாள். நேருவும் அந்த இடத்துக்குப் பக்கத்தில் அல்மோரா சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டார். ஆனால் போவாலியில் தங்கியிருந்தும் கமலாவின் உடல் நிலையில் அபிவிருத்தி ஏற்படாததைக் கண்டு ஜவகர்லால் மிகவும் வருத்தமடைந்தார். 1935 மே மாதத்தில் கமலா சிகிச்சைக்காக ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டாள்.

இதற்கு முன்பே, அதாவது பிப்ரவரி 14ந் தேதியன்று அல்மோரா சிறைச் சாலையில் அவர் தன் புத்தகத்தின் கடைசிப் பக்கத்தை எழுதி முடித்தார். முதலில் **சிறையிலும் சிறைக்கு வெளியேயும்** என்று அப்புத்தகத்துக்குப் பெயர் கொடுக்க நினைத்தார். பிறகு சாதாரணமாக **சுயசரிதை** என்ற தலைப்பைக் கொடுத்தார்.

நேரு **சுயசரிதை**யின் பின்னுரையில் பின்வருமாறு எழுதினார்: ''சிறையில் எத்தனை வருடங்களைக் கழித்துவிட்டேன்! தனியே அமர்ந்த நிலையில், சிந்தனையில் மூழ்கியவனாக எத்தனை பருவகாலங்கள் ஒவ்வொன்றாக மறைவதை, ஒன்றுக்குப் பின் ஒன்றாக மறதியில் புதைவதைப் பார்த்திருக்கிறேன்!.. என்னுடைய இளமைப்பருவத்தின் எத்தனை நேற்றைய தினங்கள் இங்கே புதைந்து கிடக்கின்றன. செத்துப்

போன நேற்றைய தினங்களின் ஆவிகள் சில சமயங்களில் மேலே தோன்றுவதை, உருக்கமான நினைவுகளைத் தூண்டி விடுவதைப் பார்க்கிறேன். 'நீ செய்தவை எல்லாமே பயனுள்ள வைதானா?' என்று அந்த ஆவிகள் என் காதில் முணுமுணுக் கின்றன. இதற்குப் பதிலளிப்பதற்கு நான் தயங்கவில்லை. இன்றைய அறிவையும் அனுபவத்தையும் சேர்த்துக்கொண்டு என் வாழ்க்கையை மறுபடியும் தொடங்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தால் என்னுடைய சொந்த வாழ்க்கையில் பல மாற்றங்களை ஏற்படுத்த முயற்சிப்பேன் என்பதில் சந்தே கமில்லை. நான் முன்பு செய்த பல காரியங்களையும் பல வழி களில் அபிவிருத்தி செய்யப் பாடுபடுவேன். ஆனால் பொது விவகாரங்களில் நான் செய்த முக்கியமான முடிவுகள் அப்படி யே மாற்றமின்றி இருக்கும்...''

நேரு தன்னுடைய **சுயசரிதையில்** கா. மார்க்ஸ், வி.இ. லெனின் எழுதிய நூல்களை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார். இந்தியாவின் அரசியல் போராட்டத்தோடு நெருக்கமான தொடர்பு கொண்ட தன்னுடைய சொந்த வாழ்க்கையிலிருந்து எடுக்கப்பட்ட உதாரணங்களின் மூலம் அவர் நாட்டில் பூர்ஷ்வா தேசியவாதம் வளர்ச்சியடைந் ததை விவரிக்கிறார், வர்க்க மோதல்களை விளக்கிக் காட்டு கிறார், காந்தியின் அஹிம்சைக் கோட்பாட்டை ஆராய்கிறார், இந்திய சமூகத்தின் சமூக, பொருளாதார மற்றும் மத, ஜாதிப் பிரச்சினைகளை மதிப்பிடுகிறார், ஏகாதிபத்தியத்தின் ஓநாய்த்தன்மையைத் திறமையோடு அம்பலப்படுத்துகிறார், மேற்கத்திய ஜனநாயகத்தின் போலித்தனத்தை ஏளனம் செய் கிறார்.

நேரு 1927 பிப்ரவரியில் பிரஸ்ஸல்சில் நடைபெற்ற ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களின் காங்கிரசில் கலந்து கொண் டதும் அதே வருட நவம்பரில் மாஸ்கோவுக்குச் சென்றதும் சோஷ லிசத்தின் தத்துவம் மற்றும் நடைமுறையில், தேசிய சுதந் திரத்துக்கும் அரசியல், பொருளாதார, சமூக விடுதலைக்கும் இந்திய மக்கள் நடத்தும் போராட்டத்துக்குச் சரியான பாதை களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் கூர்மையான அக்கறையை அவரிடம் தூண்டியது என்பதை **சுயசரிதை** தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. **சுயசரிதை** நேருவின் வாழ்க்கையில் ஒவ்வொரு வருடத்திலும் நடைபெற்ற சம்பவங்களின் அட்ட

வலை அல்ல; அது ஒரு ஆராய்ச்சி நூல். வாசகருடைய கவனத்தைத் தன்னை நோக்கித் திருப்புவதற்கு அப்புத்தகத்தில் எங்குமே அவர் முயற்சி செய்யவில்லை. மாற்றப்பட முடியாத உண்மைகளை எடுத்துக் கூறுகின்ற திருத்தூதராக அவர் தன்னைக் காட்டிக் கொள்ளவில்லை. அவரிடம் சந்தேகங்கள் உண்டு; அவர் தன்னோடு விவாதம் செய்கிறார்; தன்னுடைய தவறு களை ஒளிவுமறைவின்றி ஒத்துக் கொள்கிறார்; தன்னுடைய முந்திய முடிவுகள் சிலவற்றைப் பற்றி விவாதிக்கிறார்; அவர் நேர்மையோடும் பிடிவாதத்தோடும் உண்மையைத் தேடுகிறார்.

அப்புத்தகத்தின் பக்கங்களில் டஜன் கணக்கானவர் களின் — நண்பர்கள், எதிரிகள் இருவருடைய — பெயர்களும் வருகின்றன; ஆனால் ஒரு தடவை கூட அவர் உணர்ச்சிப் பசப்பான அல்லது வெறுப்பைக் காட்டும் நடையை உபயோ கிக்கவில்லை. அப்புத்தகம் முழுவதிலும் புறநிலையான தன்மை, சாமர்த்தியம், பெருந்தன்மை ஆகியவை அடிச்சரடாக இருக் கின்றன. அதே சமயம் போராட்டங்களில் தனக்கு மிகவும் நெருக்கமாக இருந்தவர்களை விமர்சிப்பதிலிருந்து — சில சமயங் களில் மிகக் கடுமையாகவும் எழுதுவதிலிருந்து — அவர் பின்வாங்கவில்லை. அது மட்டுமா? காந்தியைக்கூட அவர் விட்டுவைக்கவில்லை. ''இவர்களில் பலரிடம் நான் மரியாதை வைத்திருக்கிறேன். என் விமர்சனம் அந்த மரியாதையை அகற்றிவிடவில்லை. ஆனால் பொது வாழ்க்கையில் ஈடுபடுபவர் கள் ஒருவருக்கொருவரும் அவர்கள் சேவை செய்வதாகக் கூறும் பொதுமக்களிடமும் ஒளிவுமறைவில்லாமல் நடந்து கொள்ள வேண்டும் என்று நான் கருதி வந்திருக்கிறேன். மேலெழுந்தவாரியான மரியாதையும் சிரமத்தைக் கொடுக் கின்ற — சில சமயங்களில் வேதனை ஏற்படுத்துகின்ற — பிரச் சினைகளைத் தவிர்ப்பதும் உண்மையான பரஸ்பர புரிவை அடைவதற்கோ அல்லது நம் முன் நிற்கும் பிரச்சினைகளைப் புரிந்து கொள்வதற்கோ உதவி செய்வதில்லை. உண்மையான ஒத்துழைப்பு வேறுபாடுகளையும் அதே சமயத்தில் பொது வான அம்சங்களையும் சரியாகப் புரிந்து கொள்வதை, எவ் வளவுதான் தொல்லையாக இருந்தாலும் உண்மைகளைச் சந்திப் பதை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். நான் இங்கே எழுதியிருப்பதில் எந்தத் தனிநபர் மீதும் வெறுப்போ அல்லது விரோதமோ கடுகளவுகூட இல்லை என்று நம்பு

கிறேன்'' என்று சுயசரிதையின் முதல் பதிப்பின் முன்னுரையில் நேரு எழுதினார்.

இப்புத்தகம் எளிமையாகவும் தத்ரூபமான வர்ணனைகளோடும் எழுதப்பட்டிருக்கிறது; மிகவும் சிக்கலான விஷயங்கள் கூட வாசகர்களைத் திணறச் செய்யும் முறையிலோ அல்லது அலங்காரமான சொற்களைப் பயன்படுத்தியோ எழுதப்படவில்லை. நேரு தனக்கு மிகப் பிரியமான கவிஞர்களை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார். சில சமயங்களில் தன் சொந்தக் கவிதையையும் சேர்த்திருக்கிறார். இது வாசகருக்குத் தெரியாதிருக்கலாம். தன்னுணர்ச்சி நடை வாழ்க்கை வர்ணனையின் அடிச்சரடோடு ஒத்திசைவாக இணைந்து செல்கிறது. அதன் மூலம் அரசியலும் சுவையற்ற வரலாற்று விவரங்களும் வாழ்க்கையின் தெளிவான சித்திரமாக மாறிவிடுகின்றன. இப்புத்தகம் மனிதாபிமானியும் நுட்பமிக்க அரசியல்வாதியும் கவர்ச்சிகரமான நபருமாகிய ஆசிரியரின் ஆன்மிக உலகத்தை வெளிப்படுத்துகிறது. அவருக்குத் தன்னுடைய மக்கள் மற்றும் நாட்டின் நலன்கள் தன்னுடைய சொந்த மனச்சாட்சி மற்றும் கௌரவத்திலிருந்து பிரிக்கப்பட முடியாதவை, மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்து நிற்பவை.

சுயசரிதை 1936 ஏப்ரலில் வெளியாயிற்று. அப்புத்தகம் அரசியல்வாதிகள் மற்றும் ராஜியத் தலைவர்கள், இந்தியாவையும் பிரிட்டனையும் சேர்ந்த பொதுமக்கள் ஆகிய அனைவரின் கவனத்தை ஈர்த்தது. பிரிட்டனிலுள்ள பழமைவாதப் பத்திரிகைகள் கூட அதன் சிறப்புக்களைப் பாராட்டின. ''ஆசிரியருடைய மனப்பான்மையிலிருந்து நாம் எவ்வளவு அதிகமாக வேறுபட்டிருந்தாலும் இது படிக்கப்பட வேண்டிய புத்தகம்'' என்று லண்டன் *The Times* பத்திரிகை எழுதியது. 'இதைப் படிக்காவிட்டால் கடந்த பதினைந்து வருடகால இந்தியாவைப் பற்றி எத்தகைய அறிவும் அரைகுறையாகவே இருக்கும்'' என்று *The Economist* பத்திரிகை எழுதியது.

பிரிட்டனில் மிகப் பெரிய பதவிகளை வகித்தவர்கள் நேருவின் ஆற்றல் மிகுந்த அறிவின் தெளிவை—உதாரணமாக, ஐரோப்பியர்கள் புரிந்து கொள்ளவியலாத காந்தியின் சிந்தனை முறையிலிருந்து அது வேறுபட்டிருக்கும்—புரிந்து கொண்டார்கள். அவர் அரசியல் எதிர்துருவத்தில் இருப்பதைப் பற்றி வருத்தமடைந்தார்கள்.

வனே அல்ல; அது ஒரு ஆராய்ச்சி நூல். வாசகருடைய கவனத்தைத் தன்னை நோக்கித் திருப்புவதற்கு அப்புத்தகத்தில் எங்குமே அவர் முயற்சி செய்யவில்லை. மாற்றப்பட முடியாத உண்மைகளை எடுத்துக் கூறுகின்ற திருத்தூதராக அவர் தன்னைக் காட்டிக் கொள்ளவில்லை. அவரிடம் சந்தேகங்கள் உண்டு; அவர் தன்னோடு விவாதம் செய்கிறார்; தன்னுடைய தவறுகளை ஒளிவுமறைவின்றி ஒத்துக் கொள்கிறார்; தன்னுடைய முந்திய முடிவுகள் சிலவற்றைப் பற்றி விவாதிக்கிறார்; அவர் நேர்மையோடும் பிடிவாதத்தோடும் உண்மையைத் தேடுகிறார்.

அப்புத்தகத்தின் பக்கங்களில் டஜன் கணக்கானவர்களின் — நண்பர்கள், எதிரிகள் இருவருடைய — பெயர்களும் வருகின்றன; ஆனால் ஒரு தடவை கூட அவர் உணர்ச்சிப் பசப்பான அல்லது வெறுப்பைக் காட்டும் நடையை உபயோகிக்கவில்லை. அப்புத்தகம் முழுவதிலும் புறநிலையான தன்மை, சாமர்த்தியம், பெருந்தன்மை ஆகியவை அடிச்சரடாக இருக்கின்றன. அதே சமயம் போராட்டங்களில் தனக்கு மிகவும் நெருக்கமாக இருந்தவர்களை விமர்சிப்பதிலிருந்து — சில சமயங்களில் மிகக் கடுமையாகவும் எழுதுவதிலிருந்து — அவர் பின்வாங்கவில்லை. அது மட்டுமா? காந்தியைக்கூட அவர் விட்டுவைக்கவில்லை. ''இவர்களில் பலரிடம் நான் மரியாதை வைத்திருக்கிறேன். என் விமர்சனம் அந்த மரியாதையை அகற்றிவிடவில்லை. ஆனால் பொது வாழ்க்கையில் ஈடுபடுபவர்கள் ஒருவருக்கொருவரும் அவர்கள் சேவை செய்வதாகக் கூறும் பொதுமக்களிடமும் ஒளிவுமறைவில்லாமல் நடந்து கொள்ள வேண்டும் என்று நான் கருதி வந்திருக்கிறேன். மேலெழுந்தவாரியான மரியாதையும் சிரமத்தைக் கொடுக்கின்ற — சில சமயங்களில் வேதனை ஏற்படுத்துகின்ற — பிரச்சினைகளைத் தவிர்ப்பதும் உண்மையான பரஸ்பர புரிவை அடைவதற்கோ அல்லது நம் முன் நிற்கும் பிரச்சினைகளைப் புரிந்து கொள்வதற்கோ உதவி செய்வதில்லை. உண்மையான ஒத்துழைப்பு வேறுபாடுகளையும் அதே சமயத்தில் பொதுவான அம்சங்களையும் சரியாகப் புரிந்து கொள்வதை, எவ்வளவுதான் தொல்லையாக இருந்தாலும் உண்மைகளைச் சந்திப்பதை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். நான் இங்கே எழுதியிருப்பதில் எந்தத் தனிநபர் மீதும் வெறுப்போ அல்லது விரோதமோ கடுகளவுகூட இல்லை என்று நம்பு

கிறேன்'' என்று சுயசரிதையின் முதல் பதிப்பின் முன்னு ரையில் நேரு எழுதினார்.

இப்புத்தகம் எளிமையாகவும் தத்ரூபமான வர்ணனைக ளோடும் எழுதப்பட்டிருக்கிறது; மிகவும் சிக்கலான விஷயங் கள் கூட வாசகர்களைத் திணறச் செய்யும் முறையிலோ அல்லது அலங்காரமான சொற்களைப் பயன்படுத்தியோ எழுதப்படவில்லை. நேரு தனக்கு மிகப் பிரியமான கவிஞர்களை அடிக்கடி மேற்கோள் காட்டுகிறார். சில சமயங்களில் தன் சொந்தக் கவிதையையும் சேர்த்திருக்கிறார். இது வாசகருக்குத் தெரியாதிருக்கலாம். தன்னுணர்ச்சி நடை வாழ்க்கை வர்ண னையின் அடிச்சரடோடு ஒத்திசைவாக இணைந்து செல்கிறது. அதன் மூலம் அரசியலும் சுவையற்ற வரலாற்று விவரங் களும் வாழ்க்கையின் தெளிவான சித்திரமாக மாறிவிடுகின் றன. இப்புத்தகம் மனிதாபிமானியும் நுட்பமிக்க அரசியல் வாதியும் கவர்ச்சிகரமான நபருமாகிய ஆசிரியரின் ஆன்மிக உலகத்தை வெளிப்படுத்துகிறது. அவருக்குத் தன்னுடைய மக்கள் மற்றும் நாட்டின் நலன்கள் தன்னுடைய சொந்த மனச்சாட்சி மற்றும் கௌரவத்திலிருந்து பிரிக்கப்பட முடியா தவை, மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்து நிற்பவை.

சுயசரிதை 1936 ஏப்ரலில் வெளியாயிற்று. அப்புத்தகம் அரசியல்வாதிகள் மற்றும் ராஜியத் தலைவர்கள், இந்தியா வையும் பிரிட்டனையும் சேர்ந்த பொதுமக்கள் ஆகிய அனைவரின் கவனத்தை ஈர்த்தது. பிரிட்டனிலுள்ள பழமைவாதப் பத்திரி கைகள் கூட அதன் சிறப்புக்களைப் பாராட்டின. ''ஆசிரியரு டைய மனப்பான்மையிலிருந்து நாம் எவ்வளவு அதிகமாக வேறுபட்டிருந்தாலும் இது படிக்கப்பட வேண்டிய புத்தகம்'' என்று லண்டன் *The Times* பத்திரிகை எழுதியது. 'இதைப் படிக்காவிட்டால் கடந்த பதினைந்து வருடகால இந்தியாவைப் பற்றி எத்தகைய அறிவும் அரைகுறையாகவே இருக்கும்'' என்று *The Economist* பத்திரிகை எழுதியது.

பிரிட்டனில் மிகப் பெரிய பதவிகளை வகித்தவர்கள் நேரு வின் ஆற்றல் மிகுந்த அறிவின் தெளிவை—உதாரணமாக, ஐரோப்பியர்கள் புரிந்து கொள்ளவியலாத காந்தியின் சிந்தனை முறையிலிருந்து அது வேறுபட்டிருக்கும்—புரிந்து கொண்டார் கள். அவர் அரசியல் எதிர்துருவத்தில் இருப்பதைப் பற்றி வருத்தமடைந்தார்கள்.

''நம் காலத்தின் மிகச் சில மாமனிதர்களில் ஒருவருடைய அடிப்படையான சான்றுரை'' என்று பிரிட்டிஷ் லேபர் கட்சியின் இடதுசாரித் தலைவர்கள் அப்புத்தகத்தை வரவேற்ருர்கள்.

இந்திய தேசபக்தர்கள் **சுயசரிதையைப்** பெருமிதத்தோடு வரவேற்ருர்கள். நாட்டின் பிற்போக்காளர்கள் மற்றும் விட்டுக் கொடுப்பவர்களுடைய கொள்கைகளை அம்பலப்படுத்துவதில் நேருவின் புத்தகம் முக்கிய பங்கு வகிக்கும் என்று அவர்கள் கூறினுர்கள். இந்தியாவின் பூர்ஷ்வா மிதவாதப் பத்திரிகைகள் மிதவாதத்தைப் பற்றி நேருவின் விமர்சனங்கள் அருவருப்பானவை மட்டுமல்ல, போலியானவை என்று எழுதின. ஸாப்ரூ, ஜெயக்கர் ஆகியோரை போன்ற அரசியல் வாதிகள் நேருவின் **சுயசரிதையைப்** பற்றித் தங்களுக்கு அக்கறையில்லை என்பதை அழுத்திக் கூறும் நோக்கத்தோடு ''அது ஒரு தனிநபருடைய சொந்த வரலாறு'' என்று கூறினுர்கள். இவை தற்செயலானவை அல்ல.

எதிரிகளின் தாக்குதலை நேரு ஒதுக்கினுர். மிதவாதிகளின் சரணுகதி நடத்தையைப் பற்றி எழுதியிருந்த வாசகங்களில் அவர் எவ்விதமான திருத்தங்களையும் செய்யவில்லை. கையெழுத்துப் பிரதியில் புத்தகத்தைப் படித்த காந்தி அப்பகுதிகளைத் திருத்தி எழுதுமாறு நேருவைக் கேட்டுக் கொண்ட போதிலும் அவர் அவ்வாறு திருத்தவில்லை.

இரவீந்திரநாத் தாகூர் புத்தகத்தைப் பற்றி எழுதியவை தன் விமர்சனம் சரியானதே என்ற ஜவகர்லாலின் கருத்துக்கு ஆதரவளித்தது. ''அதிகமான விவரங்களைக் கொண்ட இப்புத்தகம் நெடுகிலும் மனிதநேயம் என்ற ஆழமான நீரோட்டம் செல்கிறது. அது விவரங்கள் என்ற முடிச்சைக் கடந்து ஒரு நபரிடம் நம்மைக் கொண்டுசெல்கிறது. அவர் தன்னுடைய செயல்களைக் காட்டிலும் மகத்தானவர், தன்னுடைய சூழலைக் காட்டிலும் உண்மையானவர்'' என்று தாகூர் எழுதினுர்.

நேருவின் **சுயசரிதை** பல நாடுகளில் பல முறை பதிப்பிக்கப்பட்டது. இந்தியாவின் சமீபகால வரலாற்றை ஆராய்வதற்கும் புரிந்துகொள்வதற்கும் முக்கியமான ஆதாரநூல் என்ற நிலையைக் காலப்போக்கில் அது அடைந்தது.

1935 செப்டெம்பர் 4ந் தேதியன்று அவர் மனைவி

ஆபத்தான நிலேயில் இருப்பதாகவும், அதனுல் அவருடைய சிறைத் தண்டனேயை ''நிறுத்திவைக்கவும்'' ஐரோப்பாவுக்குச் செல்ல அவரை அனுமதிக்கவும் அரசாங்கம் முடிவு செய்திருப் பதாக நேருவிடம் தெரிவிக்கப்பட்டது.

கமலா ஜெர்மனியில், ஷ்வார்ட்ஸ்வால்ட் என்ற இடத்தில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தாள். ஆனுல் மலேக் காற்ருே மருந்துகளோ இனிமேல் பயனில்லாத நிலேக்கு வந்து விட்டாள். அவள் மெதுவாகச் செத்துக் கொண்டிருந்தாள். அவள் உடலில் உயிரின் சிற்ருெளி கூட அநேகமாக இல்லே. ஜவகர்லாலும் இந்திராவும் அங்கே வந்ததும் அவள் உடல் நிலேயில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டது.

தாகூர் சாந்திநிகேதனத்திலிருந்து எழுதிய கடிதத்தில் இந்திராவை விட்டுப் பிரியும் பொழுது அதிகமான வேதனே யடைந்ததாக எழுதியிருந்தார். ''இந்திரா இங்கே எங்களுடைய சொத்தாக இருந்தாள், நான் அவளே நுணுக்கமாக கவனித் தேன். நீங்கள் அவளே வளர்த்திருக்கும் முறையைப் போற்றி னேன். அவளுடைய ஆசிரியர்கள் ஒரே குரலில் அவளேப் பாராட்டுகிருர்கள். அவள் மாணவர்களிடமும் மிகவும் செல்வாக்கோடிருந்தாள்.''

இந்திராவைப் பல்கலேக்கழகத்தில் சேர்க்க முயற்சி செய்யு மாறும் அதே சமயத்தில் சுயசரிதையை வெளியிட்டவர் களோடு அவசர விஷயங்களேப் பற்றிப் பேசுவதற்கும் லண்ட னுக்குப் போகுமாறு நேருவைக் கமலா வற்புறுத்தினுள்.

இந்த சமயத்தில் நேருவிற்குத் தெரியாமலேயே 1936ம் வருடத்துக்கு அவரைக் காங்கிரஸ் தலேவராகத் தேர்ந்தெடுத் திருப்பதாகத் தகவல் வந்தது. இந்தச் செய்தியைக் கேட்டு அவர் மகிழ்ச்சி அடையவில்லே; ஏனென்ருல் அவருடைய சுதந்திரம் நிபந்தனேக்குட்பட்டது; அவர் அரசியல் நடவடிக் கைகளில் ஈடுபடுவதற்கு அதிகாரிகள் அநேகமாக அநுமதிக்க மாட்டார்கள். மேலும் காங்கிரசுக்குள் இருந்த நிலேமையும் அவருக்கு உற்சாகமூட்டவில்லே. வலதுசாரி உறுப்பினர்கள் முக்கியமான எல்லா கட்சிப் பொறுப்புகளேயும் வகித்தார்கள். ஆனுல் கட்சியின் கீழ் மட்ட ஸ்தாபனங்களில் காங்கிரஸ் சோஷலிஸ்டுகள் என்ற ஒரு புதிய அணிச் சேர்க்கை செல் வாக்குப் பெற்றிருந்தபடியால் வலதுசாரிகளின் நிலேமை ஏற் கெனவே பலவீனமடைந்திருந்தது. அவர்கள் 1934 அக்டோ

பரிலேயே பம்பாயில் தங்களுடைய அகில இந்திய மாநாட்டை நடத்தியதோடு காங்கிரஸ் இயக்கத்துக்குள் வேலை செய்வதற்குத் தங்களுடைய சொந்தக் கட்சியையும் அமைத்திருந்தனர். இது சாராம்சத்தில் இந்திய தேசிய காங்கிரசுக்குள் அமைக்கப்பட்ட இடதுசாரி அணியாகும்.

காங்கிரஸ் சோஷலிஸ்டுகளின் அரசியல் திட்டம் நேருவின் கருத்துக்கள் பலவற்றோடு பொருந்தியிருந்தது. அவர்களுடைய ஆதரவை அவர் பெற முடியும் என்று தோன்றியது. ஆனால் முன்போலவே காங்கிரசில் பிளவு ஏற்படுவதை அவர் விரும்பவில்லை.

இந்திய அரசாங்க நிர்வாகத்தைப் பற்றிய புதிய சட்டம் 1935 ஆகஸ்டில் வெளியிடப்பட்டது. அது காங்கிரஸ்காரர்களுக்கிடையே உள் கட்சிப் போராட்டத்தைத் தொடங்கி வைத்தது. அந்தச் சட்டத்தின் ''கூட்டாட்சி அமைப்பு எத்தகைய உண்மையான முன்னேற்றமும் ஏற்பட முடியாதபடி உருவாக்கப்பட்டிருந்தது. இந்திய மக்களின் பிரதிநிதிகள் பிரிட்டிஷ்காரர்களின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட நிர்வாக அமைப்பில் குறுக்கிடுவதற்கோ அல்லது மாற்றியமைப்பதற்கோ சிறிதும் இடமில்லாதிருந்தது. இந்த நிலையை மாற்றவோ, தளர்த்தவோ பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தினால் மட்டுமே முடியும்'' என்று நேரு கருதினார்.

இடதுசாரி காங்கிரஸ்காரர்கள் புதிய சட்டத்தை பகிஷ்கரிப்பதை ஆதரித்தார்கள். ஆனால் வலதுசாரியினர் மாகாணங்களில் மந்திரி பதவிகளை வகிக்கத் தயாரானார்கள்.

காங்கிரசில் பிளவு ஏற்படக் கூடிய ஆபத்து தோன்றியிருப்பதை முன்னறிந்த காந்தி அதைத் தடுக்க ஜவகர்லால் நேருவினால் மட்டுமே முடியும் என்று முடிவு செய்தார். எனவே காங்கிரஸ் தலைவராக அவரை முன்மொழிந்தார். காந்தியை எதிர்ப்பதற்கு யாருக்கும் துணிவு கிடையாது. எனவே காங்கிரஸ் தலைவராக நேரு தேர்ந்தெடுக்கப்பட்டார். எல்லாம் முடிந்த பிறகு நேருவுக்கு விஷயம் தெரிவிக்கப்பட்டது...

லண்டனில் நேரு ஆச்சரியப்படும் விதத்தில் அவருக்கு ஆரவாரமான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. ஏராளமான பத்திரிகையாளர்கள் இந்திய தேசிய காங்கிரசின் தலைவரைச் சூழ்ந்து கொண்டு பேட்டியளிக்குமாறும் அறிக்கையளிக்குமாறும் அவரிடம் மன்றாடிக் கொண்டிருந்தார்கள்.

நேரு மாலை நேரங்களில் லண்டன் ஹோட்டல் அறைக்குத் திரும்பும் பொழுது ஹாரோவிலும் பல்கலைக்கழகத்திலும் அவ ரோடு படித்த பழைய மாணவர்களின் பெயர் குறித்த அட்டைகளை ஹோட்டல் ஊழியர் அவரிடம் கொடுப்பதுண்டு. அவர்களில் பலரும் அக்காலத்திலேயே ''மிக முக்கியமானவர் களாக'' இருந்தார்கள். அவர்களில் சிலர் அவரைச் சந்தித்த பொழுது ''அவருடைய பழைய பள்ளிக்கூடத்தின் சிறப்புமிக்க பழைய மாணவர்கள் பலரும் பலப்படுத்த உதவியிருக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை பலவீனப்படுத்த அவர் செய்கின்ற முயற்சிகளைப் பற்றி அவரைக் கிண்டல் செய்தார்கள்.'' நேரு வுக்கும் இவர்களுக்கும் பொதுவான அம்சம் ஒன்றுமில்லை. எனவே இயன்றவரை அவர்களைச் சந்திக்காமலிருப்பதற்கு நேரு முயற்சி செய்தார்.

லண்டனில் அவர் கிருஷ்ண மேனனைச் சந்தித்தார். மேனன் பிற்காலத்தில் நேருவுக்கு மிகவும் நெருக்கமான சகாவாக இருந்தார். மேனனின் பெரிய தலை, அடர்த்தி யான, சுருள் சுருளான தலைமுடி, நரம்புகள் புடைத்துக் கொண்டிருக்கும் கறுப்பு நிற முகம் ஆகியவை அவர் இந்தி யாவின் தெற்குக் கடலோரப் பகுதியைச் சேர்ந்தவர் என் பதை உடனே எடுத்துக் காட்டின. அவர் லண்டனில் இந்திய தேசபக்தர்களையும் இந்தியாவின் உண்மையான நண்பர் களையும் ஒன்று சேர்த்து இந்திய லீக் என்ற ஸ்தாபனத்தை ஏற்படுத்தியிருந்தார். அவர் உணர்ச்சிகரமான பிரசுரங்களை எழுதி வினியோகித்தார். இந்தியாவின் சுதந்திரத்தைக் கோரும் பொதுக்கூட்டங்களையும் பேரவைகளையும் சிறிதும் ஓய்வில்லாமல் நடத்திக் கொண்டிருந்தார்.

நவம்பர் கடைசியில் ஷ்வார்ட்ஸ்வால்டில் ஈரமான பனி விழுந்தது. கமலாவின் உடல்நலம் மறுபடியும் சீர்கேடடைந் தது. ஜவகர்லால் அவளை ஸ்விட்சர்லாந்துக்குக் கொண்டு போய் லொஸானுக்குப் பக்கத்தில் வைத்திருந்தார். அங்கே வெப்பமாகவும் உலர்ந்த பருவ நிலையும் இருந்தது. எனவே கமலாவின் உடல் நிலை சற்று முன்னேற்றமடைந்தது.

காங்கிரஸ் கட்சி மாநாடு 1936 ஏப்ரலில் லக்னௌவில் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. தன் மனைவியின்

நோய் காரணமாக ஜவகர்லால் தலைமைப் பதவியை மறுப்பதோ மாநாட்டுக்குப் போகாமலிருப்பதோ கமலாவுக்குப் பிடிக்கவில்லை. நேரு சிறிது தயங்கிய பிறகு இந்தியாவுக்குப் புறப்பட டிக்கெட் வாங்கினார். ஆனால் அவர் புறப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் டாக்டர்கள் அவர் தங்கியிருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். அவர் மனைவி உயிர் பிழைப்பாள் என்று நம்புவதற்கு அநேகமாக இடமில்லை யென்று அவர்கள் கருதினார்கள்.

ஜவகர்லாலும் இந்திராவும் கமலாவின் பக்கத்திலேயே இருந்தார்கள். கமலா கடைசிவரை சுய உணர்வோடிருந்துவிட்டு பிப்ரவரி 28ந் தேதியன்று வெள்ளிக் கிழமை காலையில் ஐந்து மணிக்கு அமைதியான முறையில் உயிர்நீத்தாள்.

நேருவின் அன்பு மிக்க மனைவி இறந்து விட்டாள். கடைசியில் ஒரு கிண்ணம் சாம்பல்தான் அவருக்கு மிஞ்சியது. அவர் கமலாவின் சாம்பலை அலகபாத்துக்கு எடுத்துச் சென்று கங்கை நீரில் கரைத்தார். கமலாவின் சாம்பலில் ஒரு சிறு பகுதியை அவர் தன் கடைசி நாட்கள் வரை வைத்திருந்தார். தன் மரணத்துக்குப் பிறகு தன் சாம்பலோடு அதைக் கலக்குமாறு கேட்டுக் கொண்டார்...

காங்கிரஸ் பிரமுகர்கள் தங்கள் தலைவர் எப்பொழுது வருவார் என்று பொறுமையில்லாமல் காத்துக் கொண்டிருந்தார்கள். நேரு இல்லாத காரணத்தால் அவர்கள் எந்த முடிவும் செய்யவில்லை. இத்தகைய ''செயல் இல்லாத'', ''சிந்தனை இல்லாத'' நிலைமைக்கு நேருதான் முடிவு கட்ட வேண்டும் என்று அவர்களில் ஒருவரான இராஜேந்திர பிரசாத் கூறினார். நேரு இந்தியாவுக்குத் திரும்பிய உடனே வேலையில் ஈடுபட்டார். காந்தி, இராஜேந்திர பிரசாத், அபுல் கலாம் ஆஜாத் மற்றும் இதர முக்கியமான காங்கிரஸ் தலைவர்களை சந்தித்துப் பேசினார்.

மாநாட்டுத் தயாரிப்பு வேலைகளில் ஈடுபட்டிருந்தபொழுது ஜவகர்லால் நாட்டின் அரசியல் நிலைமையைக் கவனமாக ஆராய்ந்தார். தன்னுடைய கருத்துக்கள் காங்கிரசின் முதிய தலைவர்கள் பலருக்குப் பிடிக்காது என்பதை அவர் கணக்கிலெடுத்துக் கொண்டார். காந்தியும் அவற்றை அங்கீகரிக்க மாட்டார் என்று கருதலாம். ஆனால் அவர் கூருணர்ச்சி உடைய அரசியல்வாதி, காங்கிரசின் சாதாரண உறுப்பினர்கள்

காங்கிரஸ் தலைமையின் மீது அதிருப்தியடைந்திருக்கிறார்கள் என்பதை அவர் தெளிவாகக் கண்டார். காங்கிரஸ் தலைமை முன்முயற்சியைக் கைவிட்டதும் மிகவும் மெதுவாகவும் அதிகமான ஜாக்கிரதை உணர்ச்சியோடும் இயங்கியதே அதற்குக் காரணம். நாட்டின் பொது அரசியல் வாழ்க்கையின் மீது விட்டுக் கொடுத்தல் மற்றும் பிற்போக்குவாதம் என்ற அடுக்கு படுகை படர்ந்திருந்தது. ஆனால் அதற்குக் கீழே ஆழமான நீரோட்டங்களும் புரட்சிகரமான போக்குகளும் நாட்டில் தோன்றிக்கொண்டிருப்பதை நேரு பார்த்தார். காங்கிரஸ் கட்சியிலும் ஆரோக்கியமான, புத்துயிரளிக்கும் நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. சட்ட மறுப்பு இயக்கக் காலகட்டத்திலும் பிரிட்டிஷ் சிறைகளிலும் அரசியல் போராட்ட அனுபவத்தைப் பெற்ற உழைக்கும் இந்தியாவின் பிரதிநிதிகளான தொழிலாளர்களும் விவசாயிகளும் அறிவுப் பகுதியினரும் காங்கிரஸ் புதிய திசை வழியைப் பின்பற்ற வேண்டும் என்று கருதத் தொடங்கியிருந்தார்கள்; அவர்கள் நேருவுக்கு நெருக்கமான, அவருக்கு புரிந்த சோஷலிஸ்ட் கருத்துக்களை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். இத்தகைய போக்குகளே இந்திய தேசிய காங்கிரசுக்குள் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி என்ற அமைப்பு ஏற்பட வழிவகுத்தன. அதில் சேர்ந்த எல்லோருமே உண்மையான சோஷலிஸ்டுகள் என்று சொல்ல முடியாது. அவர்களில் பலர் இடதுசாரி தேசிய சீர்திருத்தவாதிகளின் உணர்வு பூர்வமான பிரதிநிதிகளாகவும் இருந்தார்கள். எனினும் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளில் பலர் விஞ்ஞான சோஷலிசத் தத்துவத்தைப் படித்தபிறகு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர் என்பது உண்மையாகும்.

1935 ஏப்ரல் 12ந் தேதி முதல் 15ந் தேதி வரை லக்னோவில் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. ஏதோ முக்கியமான ஒன்றை, ஒவ்வொரு இந்தியருக்கும் மட்டுமல்லாமல் மொத்தமாக நாடு முழுமைக்குமே முக்கியத்துவம் உடைய ஏதோ ஒன்றை அந்த நகரம் எதிர்பார்த்தது.

எங்கும் அமைதி நிலவியது. ஒரே சீரான, அவசரமில்லாத குரல் ஒலித்தது. ஒலி பெருக்கிகள் அக்குரலைப் பலமடங்கு பெருக்கின.

''உலகத்தின் பிரச்சினைகளுக்கும் இந்தியாவின் பிரச்சினைகளுக்கும் தீர்வு காண்பதற்கு ஒரே திறவுகோல் சோஷலிசமே

என்று நான் நம்புகிறேன். இந்த வார்த்தையை நான் தெளிவில்லாத மனிதாபிமான அர்த்தத்தில் உபயோகிக்கவில்லை, ஸ்தூலமான விஞ்ஞானரீதியான, பொருளாதார அர்த்தத்தில் அதை உபயோகிக்கிறேன். ஆனால் சோஷலிசம் என்பது சாதாரண பொருளாதார சித்தாந்தத்தை விட பெரியது. அது ஒரு வாழ்க்கைத் தத்துவம். அந்த வகையில் நான் அதை விரும்புகிறேன். இந்திய மக்களுடைய வறுமை, பரந்த வேலையில்லாத் திண்டாட்டம், அவமதிக்கப்படுதல் மற்றும் அடிமைத்தனத்துக்கு முடிவு கட்டுவதற்கு சோஷலிசத்தைத் தவிர வேறு வழி எதுவும் எனக்குத் தெரியவில்லை. அதை நிறைவேற்ற நம்முடைய அரசியல் மற்றும் சமூக அமைப்பில் பரந்த புரட்சிகரமான மாற்றங்களை நாம் ஏற்படுத்த வேண்டும், நிலத்திலும் தொழில் துறையிலும் பணக்காரர்களின் ஆதிக்கத்துக்கும் இந்தியாவில் சுதேச சமஸ்தானங்கள் என்ற நிலப்பிரபுத்துவ, சர்வாதிகார அமைப்புக்கும் முடிவு கட்ட வேண்டும்.''

நேரு இவ்வாறு பேசியபொழுது பிரதிநிதிகள் பகுதியிலிருந்து உற்சாகமான முழக்கங்கள் கேட்டன. ஆனால் முக்கியமான விருந்தினர்கள், சொத்துடைமை வர்க்கங்களின் பிரதிநிதிகள், காலனியாதிக்கப் பத்திரிகைகளின் நிருபர்கள் உட்கார்ந்திருந்த பகுதியில் மௌனம் நிலவியது. காங்கிரசின் ''முதிய தலைவர்களிடமும்'' உற்சாகம் காணப்படவில்லை.

''காங்கிரசின் இன்றைய அமைப்பில் பெரும்பான்மையானவர்கள் இவ்வளவு அதிகமான முன்னேற்றத்துக்குத் தயாராக இருக்க மாட்டார்கள் என்பதை நான் உணர்கிறேன்... இந்த நாட்டில் சோஷலிசம் ஏற்பட வேண்டும் என்று நான் மிகவும் விரும்பிய போதிலும் காங்கிரசில் இந்தப் பிரச்சினையைப் பலவந்தப்படுத்தி அதன் மூலம் சுதந்திரத்துக்கான நம்முடைய போராட்டத்தில் கஷ்டங்களை ஏற்படுத்த நான் விரும்பவில்லை. சோஷலிஸ்ட் வழியை ஒத்துக் கொள்ளாவிட்டாலும் சுதந்திரத்துக்காகப் பாடுபடுகின்ற எல்லோருடனும் நான் மகிழ்ச்சியோடும் முழு பலத்தோடும் ஒத்துழைப்பேன்.''

நேரு கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த போதிலும் கட்சியில் அவருக்குப் போதுமான ஆதரவு இல்லை. ஆனால் அப்பொழுதே அவர் காந்தியோடு சமமாகக் கருதப்

படக் கூடிய தேசத் தலைவராக அங்கீகரிக்கப்பட்டிருந்தார். தொழிற்சங்கங்கள், விவசாயிகள், அகில இந்திய மாணவர் சம்மேளனம், நாட்டுப்பற்றுடைய அறிவுப் பகுதியினர் மற்றும் முற்போக்கு எழுத்தாளர்கள் மத்தியில் அவர் அதிகமான செல்வாக்குப் பெற்றிருந்தார். காங்கிரஸ் மாநாட்டில் அவர் காங்கிரஸ் கட்சித் தலைவராக மட்டும் பேசவில்லை, தேசத்தின் தலைவராகவும் பேசினர், அவருடைய உரை நாட்டு மக்களை நோக்கி நிகழ்த்தப்பட்டது என்பது எல்லோருக்கும் தெரியும்.

மாநாடு முடிந்த சில நாட்களுக்குப் பிறகு நேரு தொழிலாளர்கள் கோஷ்டியோடு பேசிக் கொண்டிருந்தார்.

''காங்கிரசில் உள்ள பழைய தலைமுறையினரோடு ஒத்துழைப்பதால் என்ன பலன் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று ஒரு தொழிலாளி நேருவைக் கேட்டார்.

''நம்மிடமுள்ள எல்லாச் சக்திகளையும் உபயோகித்துப் பலனடைவதற்கு நான் முயற்சி செய்கிறேன்... அதோடு நாட்டிலிருக்கும் பலமான தேசிய உணர்ச்சியை நாம் உபயோகிக்க வேண்டும்'' என்று சுதந்திர இயக்கத்தில் தேசிய முதலாளி வர்க்கத்தினருடைய பாத்திரத்தை நன்கு உணர்ந்தவராக நேரு பதிலளித்தார். காங்கிரஸ் தலைமை தேசிய முதலாளி வர்க்கத்தினருடைய நலன்களை எடுத்துரைத்தது.

காங்கிரசின் முரண்பாடுகளும் ஊசலாட்டங்களும் முதலாளி வர்க்கத்தினரின் வரையறைகளைப் பிரதிபலித்தன. காலனியாதிக்க எதிர்ப்புப் போராட்டத்தின் அன்றைய கட்டத்தில் இந்திய முதலாளி வர்க்கத்தினரின் பாத்திரம் ஒப்பு நோக்கில் பார்க்கும் போது முற்போக்கானது என்பதை உணரக் கூடிய அளவுக்கு அறிவுடைய அரசியல்வாதியாக நேரு இருந்தார்.

அவர் மார்க்சியத்தை முழுமையாக எக்காலத்திலும் ஏற்றுக் கொள்ளவில்லை. ''ஆக்ஸ்போர்டு என் உணர்வில் அதிகமாக இருக்கிறது. ஆம், அதிகமான அளவுக்கு நான் தனிமனிதவாதியே'' என்று அவர் கூறுவார். ''நான் கம்யூனிசத்துக்கு வெகு தூரத்தில் நிற்கிறேன். என்னுடைய வேர்கள் பகுதியளவுக்குப் பத்தொன்பதாம் நூற்றுண்டில்தான் இன்னும் இருப்பதாகச் சொல்லலாம். மனிதாபிமான மிதவாத மரபுகள் என் மீது அதிகமான தாக்கம் செலுத்தி

வந்திருப்பதால் நான் அதை விட்டு முழுமையாக வெளியே வர முடியவில்லை. பூர்ஷ்வா பின்னணி எங்கே சென்றாலும் என்னைத் தொடர்கிறது'' என்று நேரு சுயசரிதையில் எழுதினார்.

கம்யூனிஸ்டுகளுக்கு வரலாறு 1917ம் வருடத்திலிருந்து தான் ஆரம்பமாகிறது, தாய்நாட்டின் வரலாற்றையும் தேசிய மரபுகளையும் பற்றி அவர்கள் சூன்யவாத நிலையை மேற்கொள்கிறார்கள் என்று அவர் சில சமயங்களில் கம்யூனிஸ்டுகளைக் குறை கூறினார். கம்யூனிஸ்டுகளைப் பற்றி இத்தகைய கருத்து அன்றைய இந்தியாவில் பரவலாக இருந்தது. அது கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சியையும் ஓரளவுக்குப் பாதித்தது. ஆனால் கம்யூனிஸ்டுகளோடு எல்லா நேரங்களிலும் ஒத்த நிலை இல்லா விட்டாலும் அவர்களுடைய துணிவையும் தியாகத்தையும் நேரு போற்றினார்.

1936ம் வருடத்தின் கோடைகாலத்தில் மாகாண சட்ட மன்றங்களுக்கான தேர்தல் இயக்கம் உச்ச கட்டத்தை அடைந்தது. நேரு அதில் தீவிரமாக ஈடுபட்டார். அவருடைய சுறுசுறுப்பை எல்லோரும் வியந்து பாராட்டினார்கள். ஒவ்வொரு நாளும் தூங்குவதற்கு ஐந்து அல்லது ஆறு மணி நேரம் மட்டுமே அவருக்குக் கிடைக்கும். அந்த நான்கு மாதக்காலத்தில் 80,000 கிலோமீட்டர்கள் சுற்றுப்பயணம் செய்தார். ஒவ்வொரு நாளும் சராசரியாகப் பன்னிரண்டு பொதுக் கூட்டங்களில் பேசினார். ஒவ்வொரு பொதுக்கூட்டத்திலும் இருபதாயிரம் முதல் ஒரு லட்சம் வரை பொதுமக்கள் கலந்து கொண்டார்கள்.

இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்தபொழுது நாட்டையும் அதன் மக்களையும் பற்றி இதுவரை அறிந்திராத புதிய கூறுகளை அவர் கண்டார். வட பகுதிக்கும் தென் பகுதிக்கும், கிழக்குப் பகுதிக்கும் மேற்குப் பகுதிக்கும் இடையே அதிகமான வேறுபாடுகள் இருந்த போதிலும் இந்தியாவும் அதன் மக்களும் தனி மொத்தமாக இருந்தார்கள். இப்பொழுது கண்ட எல்லாவற்றையும் இவ்வளவு சிறப்பான வகையில் இதற்கு முன்னர் ஒருபோதும் புரிந்து கொள்ளவில்லை என்று அவர் நினைத்தார். புகழ்மிக்க அஜந்தாவிலும் எல்லோராவிலும் குகைச் சிற்பங்களையும் ஓவியங்களையும் பார்த்துப் பரவசமடைந்தார். சுற்றுப் பயணத்தின் போது கிராமப் பாதைகளில் சந்தித்த கிராம வாசிகளின் முகங்களை

அவர் உன்னிப்பாக கவனித்தார், எளிமையான விவசாயிகளின் அங்கங்களில் சிற்பங்களில் சித்தரிக்கப்பட்டிருக்கும் மூதாதையர் களோடு தொடர்புடைய பொதுக்கூறுகளைக் கண்டார்.

காங்கிரஸ் வேட்பாளர்களின் தேர்தல் இயக்கத்துக்காக அவர் நாடு முழுவதும் சுற்றிக்கொண்டிருந்த பொழுது பழமைவாத காங்கிரஸ் தலைவர்கள் காந்தியை நேருவுக்கு எதிராகத் திருப்புவதற்குத் தங்களாலியன்ற எல்லாவற்றையும் செய்துகொண்டிருந்தார்கள். எனினும் அவர்கள் இருவருக்குமிடையே இருந்த உறவை மாற்றுவதில் யாருமே வெற்றியடையவில்லை. அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் தன்னுடைய சீடரும் சகதோழருமான நேருவின் அரசியல் நேர்மையிலும் ஆழமான சொந்த நாணயத்திலும் காந்தி அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தார். தேசிய விடுதலை இயக்கத்தில் பங்கெடுத்த பல வேறுபட்ட— சில சமயங்களில் சமரசப்படுத்த முடியாதவை என்று மேல் தோற்றமளிக்கின்ற—சமூக சக்திகளை, சிறிது காலத்துக்கு மட்டுமாவது, சமநிலைப்படுத்துவதில் சாதுரியமும் ஆச்சரியப்படக் கூடிய திறமையும் காட்டினார் காந்தி.

பொதுக் கூட்டங்களில் பேசும் பொழுது சண்டைக்கு இழுக்கின்ற சவால் விடுகின்ற தோரணையில் பேச வேண்டாம் என்று காந்தி நேருவிடம் அறிவுரை கூறினார். ஆனால் அதே சமயத்தில் ''முதிய தலைவர்களின்'' தாக்குதல்களுக்கு எதிராக அவரை ஆதரித்தார். அது மட்டுமல்லாது, வரப்போகின்ற 1937ம் வருடத்துக்கும் காங்கிரஸ் தலைவர் பதவிக்கு நேருவை முன்மொழிந்தார். தேர்தல் இயக்கம் நடந்து கொண்டிருக்கும் பொழுது கட்சித் தலைவரை மாற்றுவது அர்த்தமற்ற செயல் என்று அவர் கருதினார்.

1937ல் ஆறு மாகாணங்களின் சட்ட மன்றங்களில் காங்கிரஸ் வேட்பாளர்கள் தனிப் பெரும்பான்மையைப் பெற்றனர். காங்கிரஸ் முதல் தடவையாக ஜனநாயக நிலச் செயல் திட்டத்தை முன்வைத்தது. நாட்டின் விவசாயிகள், தொழிலாளர்கள் மற்றும் அனைத்து இடதுசாரி சக்திகளின் வாக்குகள் காங்கிரசின் வெற்றியை உறுதியாக்கின.

மாகாணங்களில் காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவிகளை ஏற்றுக் கொள்வதைப் பற்றி காங்கிரஸ் கட்சியில் மறுபடியும் கூர்மையான விவாதங்கள் நடைபெற்றன. காங்கிரஸ் செயற்

குழு உறுப்பினர்கள் இதை மாகாணக் கமிட்டிகள் முடிவு செய்யுமாறு விட்டு விடலாம் என்றூர்கள். நேரு வேறு விதமாகக் கருதினுர். இதற்குப் பிறகு பல மாகாணங்களில் காங்கிரஸ்காரர்கள் மந்திரிகளாக நியமிக்கப்பட்டார்கள். நேரு வின் சகோதரி விஜயலட்சுமி ஐக்கிய மாகாண அரசாங் கத்தில் மந்திரியாகப் பதவியேற்றூர். இந்தியாவின் வரலாற்றில் முதல் தடவையாக ஒரு பெண் மந்திரியாகப் பதவியேற்றூர்.

நேரு எதிர்பார்த்ததைப் போலவே காங்கிரஸ்காரர்கள் மந்திரிகளானதால் மக்களுக்கு ஒரு பலனும் கிடைக்கவில்லை. ஆட்சியதிகாரம் முன்போலவே காலனியாதிக்கவாதிகளிடம் இருந்தது. தேர்தலுக்கு முன்பு அறிவித்த வாக்குறுதிகளைப் பகுதியளவுக்குக் கூட காங்கிரஸ்காரர்களால் நிறைவேற்ற முடியவில்லை.

சில மாதங்கள் முடிந்தபிறகு மந்திரி பதவிகளில் இருக்கும் காங்கிரஸ்காரர்களைப் பற்றி நேரு காந்திக்குப் பின்வருமாறு எழுதினுர்: ''பழைய அமைப்புக்கு மிக அதிகமாகத் தங்களைச் சரிப்படுத்திக் கொள்வதற்கும் அதை நியாயப்படுத்த முயற்சிப்பதற்கும் அவர்கள் பாடுபடுகிறூர்கள். இது மோசமானதாக இருந்தாலும் இதைக் கூட சகித்துக் கொள்ள முடியும். நாம் கடந்த காலத்தில் மிக அதிகமாகப் பாடுபட்டு மக்களுடைய இதயங்களில் வகித்துவருகின்ற உயர்ந்த இடங்களை இழந்து கொண்டிருப்பது இதைக் காட்டிலும் மோசமானதாகும். சாதாரண அரசியல்வாதிகளின் தரத்துக்கு நாம் வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கிறோம்...''

1937ம் வருடத்தின் கடைசியில் காங்கிரசில் பழமைவாத கோஷ்டியினருக்கும் இடதுசாரியினருக்குமிடையே தீவிரமான மோதல் காரணமாக கட்சிக்குள் நெருக்கடி உருவாகிக் கொண்டிருந்தது. இதைப் பற்றி காந்தி மிகவும் கவலையடைந்தார். கட்சித் தலைவர் என்ற முறையில் நேரு எடுத்த சில நடவடிக்கைகளைப் பற்றி காந்தி தன் அதிருப்தியைத் தெரிவித்தார். கட்சியில் பிளவு ஏற்படுவதை நேருவும் விரும்பவில்லை. எனவே நெருக்கடி ஏற்படுவதைத் தடுப்பதற்குத் தன்னுலியன்ற எல்லாவற்றையும் செய்தார். காங்கிரசுக்கு வேறு யாராவது தலைவராலுலும் கூட இப்போது பழமைவாதிகள் காங்கிரஸ் இயக்கத்தைப் பின்னுக்குத் தள்ள முடியாது என்ற எண்ணம் நேருவுக்கு ஆறுதலைக் கொடுத்தது.

## அத்தியாயம் பத்து

''சில காங்கிரஸ் உறுப்பினர்கள் இந்திய தேசிய காங்கிரசின் அடுத்த தலைவராக என் பெயரை முன்மொழிந்திருப்பதாக அறிகிறேன். இந்தத் தேர்தலில் ஈடுபடுவதற்கு நான் விரும்பவில்லை. போட்டியிலிருந்து என் பெயரை எடுத்துவிடுமாறு கேட்டுக்கொள்கிறேன். யாரும் தவறுக எனக்கு வாக்களித்துவிடாதிருப்பதற்காக பத்திரிகைகளில் இந்த விவரத்தை அறிவித்தால் நன்றி உடையவனுகை இருப்பேன்.

தங்கள் அன்புள்ள,
ஜவகர்லால் நேரு.''

*1938* ஜனவரியின் தொடக்கத்தில் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவருக்கு இந்தக் கடிதம் வந்தது.

இதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு கல்கத்தாவிலிருந்து வெளியிடப்படுகின்ற *The Modern Review* என்ற இதழில் ''ராஷ்டிரபதி'' என்ற தலைப்புக் கொண்ட கட்டுரை ஆசிரியர் பெயர் இல்லாமல் வெளியிடப்பட்டிருந்தது. கட்டுரையை எழுதியவர் நேருவை நிதானமான முறையில் பாராட்டியிருந்தார். இந்திய மக்களுக்கு நேருவின் சேவைகளை அவர் மறுக்கவில்லை. ஆனால் இந்திய தேசிய காங்கிரசின் தலைவர் பொறுப்புக்கு நேருவைத் தொடர்ச்சியாக மூன்ருவது வருடத்துக்குத் தேர்ந்தெடுப்பதை உறுதியாக ஆட்சேபித்தார். ஜவகர்லால் நேருவைப் போன்றவர்களிடம் எவ்வளவு நல்ல குணங்களும் திறமைகளும் இருந்தபோதிலும் அவர்கள் ஜனநாயகம் என்ற குறிக்கோளுக்கு ஆபத்தானவர்கள் என்று அந்தக் கட்டுரையில் எழுதப்பட்டிருந்தது. அதில் பின்வரும் வரிகள் காணப்பட்டன:

''சீசரிசம் எப்பொழுதும் கதவைத் தட்டிக் கொண்டிருக்கிறது. ஜவகர்லால் தன்னை ஒரு சீசராகக் கற்பனை செய்துகொள்ள மாட்டார் என்பது சாத்தியமா?..

''அவரை மூன்றாவது தடவையாகத் தேர்ந்தெடுப்பதன் மூலம் நாம் காங்கிரசைப் பலவீனப்படுத்தி ஒரு தனி மனிதனை உயர்த்திவிடுவோம். மக்கள் சீசரிசத்தைப் பற்றி நினைக்கத் தூண்டுவோம்...

''ஜவகர்லால் என்னதான் வீரமாகப் பேசினாலும் அவர் களைப்படைந்து சலித்துவிட்டார் என்பது வெளிப்படை...

''எதிர்காலத்தில் அவரிடமிருந்து சிறந்த சேவைகளை எதிர்பார்ப்பதற்கு நமக்கு உரிமையுண்டு. நாம் அதைக் கெடுத்து விடக் கூடாது. அதிகமாகப் புகழ்ந்து பேசி அவரையும் கெடுத்துவிடக் கூடாது... நமக்கு சீசர்கள் வேண்டாம்.''

இந்தக் கட்டுரை காங்கிரஸ் வட்டாரங்களில் அதிகமான சலசலப்பை ஏற்படுத்தியது. வலதுசாரிகள், குறிப்பாக நேரு ஒரு மார்க்சியவாதி என்று நினைத்து அவரிடம் வெறுப்புக் கொண்டிருந்தவர்கள் இந்தக் கட்டுரையைப் படித்து மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் இடதுசாரிகள் மத்தியில் அந்தக் கட்டுரையைப் பற்றி ஆத்திரமேற்பட்டது இயற்கையே. ஆனால் இரு தரப்பினருமே ''இந்தக் கட்டுரையின் ஆசிரியர் யார்?'' என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். *The Modern Review* பத்திரிகையின் ஆசிரியராலும் இந்தக் கேள்விக்குப் பதிலளிக்க முடியவில்லை. அக்கட்டுரை தபால் மூலமாக அவருக்கு வந்தது. தங்களில் யாரோ ஒருவர்தான் அந்தக் கட்டுரையை எழுதியிருக்க வேண்டும் என்று வலதுசாரிகள் சந்தேகித்தார்கள். பிரிட்டிஷ்காரர்களும் வலதுசாரிகளும் இந்தக் கட்டுரையில் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும் என்று காங்கிரஸ் இடதுசாரிகள் நினைத்தார்கள். எல்லோரிடமும் இப்படிப்பட்ட சந்தேகங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்த பொழுது நேரு அதைப் பற்றிச் சிறிது கூட அக்கறை காட்டவில்லை. அதற்குக் காரணமுண்டு. கட்டுரையை எழுதியவர் நேருவே.

அவர் இந்தத் தந்திரத்தை ஏன் கடைப்பிடித்தார்? தன்னைத் தாக்கி எழுதிய கட்டுரையின் மூலம் தான் காங்கிரஸ் தலைவராக நீடிப்பதற்குக் காங்கிரசில் சக்திகளின் சமநிலை எந்த அளவுக்கு ஆதரவளிக்கும் என்பதைக் கண்டு

பிடிக்க முடியும் என்று நம்பினாரா? தனக்குத் தேவையான விவரங்களைச் சேகரித்த பிறகு, காங்கிரசில் தன்னுடைய நிலை ஆட்டம் கொடுப்பதைப் புரிந்து கொண்டு மறுதேர்தலுக்கு நிற்க விரும்பவில்லை என்று பகிரங்கமாக அறிவித்தாரா? ஆனால் திரை மறைவில் செய்கின்ற தந்திரங்களை அவர் எப்பொழுதும் வெறுப்பவராயிற்றே? மற்ற அரசியல்வாதிகள் இத்தகைய தந்திரங்களைப் பயன்படுத்திப் பயனடையலாம். ஆனால் அவை தன்னுடைய தகுதிக்கு ஏற்றவையல்ல என்று கருதுவாரே?

அவர் கடந்த இரண்டு வருடங்காலம் காங்கிரஸ் தலைவராக இருந்தார். சில சமயங்களில் அந்தக் கடமைகள் எவ்வளவு சுமையாகத் தோன்றினாலும் அந்தச் சுமையைக் குறைத்துக் கொள்வதற்கோ அல்லது தன்னுடைய பொறுப்பில் ஒரு பகுதியை மற்றவர்களுடைய தோள்களுக்கு மாற்றி விடுவதற்கோ அவர் ஒரு போதும் முயற்சிக்கவில்லை. கடந்த சில வருடங்களில் காங்கிரசின் உறுப்பினர்கள் எண்ணிக்கை சுமார் பத்து மடங்காகப் பெருகி இப்பொழுது ஐம்பது லட்சத்தை எட்டிவிட்டது. இந்திய மக்களின் உண்மையான வெகுஜன அரசியல் ஸ்தாபனமாகக் காங்கிரஸ் மறுபிறவியெடுப்பதற்குத் தான் உதவி புரிந்ததைப் பற்றி நேரு மகிழ்ச்சியடைந்தார்.

ஆனால் காங்கிரசில் சேர்ந்திருந்த விவசாயிகள், தொழிலாளர்கள், கைவினைஞர்கள் மற்றும் மாணவர்கள் நாட்டின் அனைத்து முற்போக்கு சக்திகளாலும் அங்கீகரிக்கப்பட்ட தேர்தலுக்கு முந்திய காங்கிரஸ் செயல்திட்டத்தைக் கட்சியின் தலைவர்கள் நிறைவேற்ற வேண்டுமென்று கோரினார்கள். முழு சுதந்திரத்தை அடைவதை நோக்கமாகக் கொண்ட அதிகத் தீர்மானமான நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். நேரு காங்கிரசின் இடதுசாரி வட்டாரங்களின் கோரிக்கைகளை ஆதரித்து அவர்களுக்கு உதவி செய்ய முயற்சிக்கும் பொழுது காங்கிரஸ் தலைமையில் பெரும்பான்மையாக இருந்த வலதுசாரிகளின் எதிர்ப்பைச் சந்தித்தார். பெருஞ்செல்வர்களான முதலாளி வர்க்கம் முன்னர் செய்ததைப் போலவே சமரசம், சீர்திருத்தம் என்ற தந்திரத்தில் நம்பிக்கை வைத்தது. இடதுசாரி சக்திகளை பலப்படுத்த விரும்பாதபடியால் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டத்தில்

காங்கிரஸ் ஒற்றை தேசிய முன்னணியின் அமைப்பாக மாற்ற மடைவதைத் தடுத்தது. காங்கிரசின் வலதுசாரித் தலைமைக் கும் இடதுசாரி அணிகளுக்குமிடையே மோதல் வளர்ந்து கொண்டிருந்தது. நேரு எப்பொழுதும் போல இந்தியாவின் அடிப்படையான உள்நாட்டு அரசியல் பிரச்சினைகளைத் தீர்ப் பதற்கு ''எல்லா வகையான ஆதிக்க நலன்களையும் பாதுகாக் கின்ற ஏகாதிபத்திய அமைப்புக்கு முடிவு கட்ட வேண்டும், மேலும் ஆழமான, அடிப்படையான மாற்றங்கள் ஏற்பட வேண்டும்'' என்று கருதியும் பேசியும் வந்தார். இந்த நிலைமையில் அவருடைய கருத்துக்களையும் நடவடிக்கைகளையும் பற்றி காந்தி உள்பட காங்கிரஸ் தலைவர்களில் சிலர் தங்களுடைய அதிருப்தியைத் தெரிவித்தார்கள். காங்கிரஸ் செயற்குழுவின் வலதுசாரி உறுப்பினர்களான சர்தார் வல்லபாய் படேலும் மற்றும் சிலரும் நேரு இடதுசாரி அணியை ஆதரிப்பதை நிறுத்தாவிட்டால் பதவியிலிருந்து விலகிவிடுவோம் என்று பயமுறுத்திய சந்தர்ப்பங்களும் ஏற்பட்டிருந்தன.

நேரு காங்கிரசின் மற்ற தலைவர்களோடு நேரடியாக முறித்துக் கொள்ள விரும்பவில்லை. அத்தகைய நடவடிக்கை கட்சியை பலவீனப்படுத்தும் என்பதால் அந்த அளவுக்கு அவ்ரால் போக முடியவில்லை. மறுபக்கத்தில் அவரால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவும் இனிமேல் முடியவில்லை. ''நல்ல சண்டையைக் காட்டிலும் மோசமான சமாதானம் சிறந்தது'' என்ற சாதாரண பழமொழியை எவ்வளவு காலம் தொடர்ந்து கடைப்பிடிக்க முடியும்?

நேரு சிறிது காலத்துக்காவது காங்கிரஸ் தலைமையி லிருந்து வெளியேறுவது என்று கடைசியாக முடிவு செய்தார். தான் மறுபடியும் தேர்ந்தெடுக்கப்படுவதை எதிர்க்கின்ற கட்டு ரையை வெளியிட்டு அரசியல் சூழலைத் தயாரித்த பிறகு கட்சித் தோழர்களிடம் தன் முடிவை அறிவிக்க நினைத்தார். அதற்கான முயற்சியே அந்தக் கட்டுரை. காங்கிரஸ் இடது சாரி அணியின் தலைவர்களில் ஒருவரான சுபாஷ் சந்திர போஸ் காங்கிரஸ் தலைவராகத் தேர்த்தெடுக்கப்பட்டார்.

*1938 ஜனவரியில் நேருவின் தாயார் மூளையில் ஏற்பட்ட இரத்தப் பெருக்கினால் மரணமடைந்தார். 1935ம் வருடத்திலும்*

1936ம் வருடத்திலும் இரண்டு தடவை உயர் ரத்த அழுத்த தாக்குதல் ஏற்பட்ட பிறகு சொரூபராணி மறுபடியும் உண்மையில் உடல் நலமடையவில்லை. அநேகமாக நோய்ப்படுக்கையை விட்டுக் கீழே இறங்கவில்லை. மூன்றாவது பாதிப்பு அவளுடைய உயிருக்கு ஆபத்தாக இருந்தது. ஜவகர்லாலின் கரங்களில் சாய்ந்தபடியே அவள் மரணமடைந்தாள். பெண் மக்களான விஜயலட்சுமியும் கிருஷ்ணாவும் தாயார் மரண மடைவதற்குள் லக்னோவிலிருந்தும் பம்பாயிலிருந்தும் வந்து சேர்ந்தனர், தங்கள் அன்புத் தாயாருக்கு இறுதி விடை கொடுத்தனர்.

தாயார் மரணமடைந்த பிறகு என் கடந்த காலத்தோடிருந்த கடைசித் தொடர்பும் அறுந்து விட்டதென்று நேரு எழுதினார்...

1938 பிப்ரவரி 16ந் தேதியன்று வங்காள நகரமாகிய ஹரிபூரில் நடைபெற்ற காங்கிரசின் 51வது மாநாட்டில் நேரு கடந்த ஒரு வருட காலத்தில் நடைபெற்ற வேலையைப் பற்றி அறிக்கையளித்தார். முழு சுதந்திரம் அடைவதைப் பற்றி காங்கிரசின் உறுதியான நிலையை வலியுறுத்தியபொழுது அவர் பின்வருமாறு கூறினார்: ''இன்று நமக்கு முன்னால் இரண்டு அடிப்படைக் கடமைகள் இருக்கின்றன. ஏகாதிபத்தியத்துக்கு முடிவு கட்டுவதும் சுதேச சமஸ்தானங்களிலும் நம்முடைய நில உடைமை முறையிலும் உள்ள நிலப்பிரபுத்துவ எச்சங்களுக்கு முடிவு கட்டுவதும் அக்கடமைகளாகும்.'' சர்வதேச விவகாரங்களில் இந்தியா வகிக்க வேண்டிய பாத்திரத்தைப் பற்றியும் சிந்திக்குமாறு அவர் தன்னுடைய நாட்டு மக்களைக் கேட்டுக் கொண்டார்.

மாநாடு முடிவடைந்தவுடன் ஐரோப்பாவுக்குப் போக உத்தேசிப்பதை நேரு தன் குடும்பத்தினரிடமும் நண்பர்களிடமும் தெரிவித்தார். ''களைத்துப் போய் சலித்த தன் அறிவுக்குப் புதுக் கிளர்ச்சியைக்'' கொடுப்பது அவசியமாகி விட்டதாகக் கூறினார். ஆக்ஸ்போர்டில் படித்துக் கொண்டிருந்த இந்திராவைப் பார்க்க வேண்டுமென்றும் விரும்பினார். ஆனால் அவர் உத்தேசித்த பிரயாணத்தின் முக்கிய நோக்கம் வேறு. ஐரோப்பாவில் அக்காலத்திலேயே ஜனநாயக சக்தி

கள் பாசிசத்தோடு சண்டை போட்டுக்கொண்டிருந்தன. இந்தியாவின் தலைவிதியும் உலகத்தின் எதிர்காலமும் இந்த சண்டையின் முடிவைப் பொறுத்திருக்கிறது என்று மற்ற காங்கிரஸ் தலைவர்களைக் காட்டிலும் மிகத் தெளிவாக நேரு புரிந்து கொண்டிருந்தார்.

லண்டனிலிருந்த அவருடைய நெருங்கிய நண்பரான கிருஷ்ண மேனனுக்கு எழுதிய கடிதத்தில் இப்பயணத்தில் ஸ்பெயின், பிரிட்டன், பிரான்ஸ், ஆஸ்திரியா, செக்கோஸ்லொவாக்கியா, ஹங்கேரி, முடியுமானால் துருக்கி மற்றும் ஸ்காண்டினேவிய நாடுகளுக்கும் போக விரும்புவதாகக் குறிப்பிட்டிருந்தார். இந்தியாவுக்குத் திரும்புவதற்கு முன்பாக சோவியத் யூனியனுக்கும் போய்வர விரும்பினார்.

1938 ஜூன் 2ந் தேதியன்று நேரு ஐரோப்பாவுக்குக் கப்பலில் புறப்பட்டார். ஜூன் 14ந் தேதியன்று காலையில் ஜெனோவாவை அடைந்தார். அங்கிருந்து விமானத்தில் மர்சேலுக்குச் சென்றார். அங்கே ஸ்பெயினுக்கு வருகை புரியுமாறு ஸ்பானிஷ் குடியரசு அரசாங்கத்தின் அழைப்பிதழ் அவரிடம் கொடுக்கப்பட்டது. விசாவைப் பெறுவதற்காக ஒரு நாள் முழுவதும் பாடுபட்டும் பயனில்லை. அது மிகவும் சிக்கலான விவகாரமாகிவிட்டது. பிரெஞ்சு அதிகாரிகள் ஒவ்வொரு அற்பமான விஷயத்திலும் குற்றம் கண்டுபிடித்தார்கள். முதலில் நேரு கொடுத்த புகைப்படங்களின் எண்ணிக்கை பொருத்தமில்லை என்றார்கள். அதன் பிறகு ''உடனடியாகப் புகைப்படம்'' எடுத்துத் தருபவரைத் தேடி அவர் நகர் முழுவதும் அலைந்தார். பிறகு அவருடைய வெளியேறும் அநுமதிச் சீட்டு ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறது, பிரெஞ்சு மொழியில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்றார்கள். நேரு உடனே பிரிட்டிஷ் தூதரகத்துக்கு ஓடினார். இப்படியே இரவுவரை நடைபெற்றது.

தனக்கு இவ்வளவு தொல்லைகள் கொடுப்பது ஏன் என்பது நேருவுக்குத் தெரியும். அவருடைய பயணச் சான்றிதழ்களைச் சரிபார்ப்பது சுலபமாக முடிந்திருந்தால் அவரே மிகவும் அதிகமாக ஆச்சரியமடைந்திருப்பார். மக்கள் முன்னணி அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் அவர் ஸ்பெயினுக்குப் போகிறார் என்ற சாதாரண விவரம் பிரெஞ்சு அதிகாரிகளின் எதிர்ப்பைத் தூண்டிவிட்டது. வீரமிக்க ஸ்பானிய மக்கள் இரு

பத்தைந்து மாதங்களாக பாசிஸ்ட் கலகக்காரர்களையும் ஸ்பெயினில் தலையிட்டிருக்கும் இத்தாலிய மற்றும் ஜெர்மானியப் படைகளையும் எதிர்த்துப் போர் செய்து கொண்டிருந்தார்கள். உலக முழுவதிலுமுள்ள முற்போக்கு, ஜனநாயக சக்திகளின் அனுதாபமும் உதவியும் அவர்களுக்குக் கிடைத்தன. உலக முதலாளி வர்க்கம், முதலாவதாக பிரிட்டிஷ் முதலாளி வர்க்கம் ''தலையிடாமை'' என்று சொல்லப்பட்ட கொள்கையைக் கடைப்பிடித்தது. அது உண்மையில் ஸ்பானிஷ் குடியரசின் மீது அரசியல், பொருளாதார் முற்றுகையை ஏற்படுத்தி கலகக்காரர்களும் அவர்களை ஆதரிப்பவர்களும் குடியரசுக்கு எதிரான ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளைச் செய்வதை சுலபமாக்கியது.

மறு நாள் அதிகாலையில் நேரு ஒரு பழைய விமானத்தில் பார்சிலோனுவுக்குப் பறந்து சென்றார். பார்சிலோனு விமான நிலையத்தில் அவரை வரவேற்க வந்த அரசாங்கப் பிரதிநிதிகளைச் சந்திக்கத் தவறியதால், ஒரு பஸ்ஸில் ஏறி நகரத்தை அடைந்தார்.

பார்சிலோனுவில் மெஜஸ்டிக் ஹோட்டல் வசதியானது என்று மர்சேலில் ஸ்பானிஷ் கன்சல் கூறியிருந்தார். நேரு இப்பொழுது அந்த ஹோட்டலைத் தேடிக் கண்டுபிடித்தார். பிறகு ஒரு ஹோட்டல் ஊழியரின் உதவியோடு வெளிநாட்டு அமைச்சரகத்தின் பிரதிநிதியைச் சந்தித்தார். பத்து நிமிடங்களுக்குப் பிறகு அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்ட வழிகாட்டியான இராணுவ உடையணிந்த ஒரு அழகிய ஸ்பானிஷ் பெண்ணேடு உரையாடிக் கொண்டிருந்தார்.

பார்சிலோனு அதிகாரிகள் நேருவை கௌரவிப்பதற்காக ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள் (ரொட்டி, வெண்ணெய், காய்கறிகள் மற்றும் சில கோப்பை கடுங்காப்பியும் கொடுக்கப்பட்ட எளிய விருந்து அது). நகரத்தில் இறைச்சி, பால், ரொட்டிக்குப் பற்றுக்குறை ஏற்பட்டிருக்கிறது, இவை முதலில் பார்சிலோனுவைப் பாதுகாத்துச் சண்டை போடுகின்ற குடியரசு துருப்புகளுக்கு அனுப்பப்படும், மக்கள் முன்னணி அரசாங்கம் ஏற்படுத்தியிருக்கும் எண்ணற்ற பராமரிப்பு விடுதிகளிலுள்ள குழந்தைகளுக்குக் கொடுக்கப்படும் என்று ஜவகர்லாலிடம் மன்னிப்புக் கோரும் முறையில் ஸ்பானிஷ் தோழர்கள் விளக்கமளித்தார்கள்.

இப்பராமரிப்பு விடுதிகளைத் தவிர குடியரசுப் படைவீரர் களால் அமைக்கப்பட்ட குழந்தைகள் உணவு நிலையங்களும் அங்கே இருந்தன. அப்படி ஒரு உணவு நிலையத்தின் திறப்பு விழாவில் நேரு கலந்து கொண்டார். பிராங்கோவின் துருப்பு களைப் பார்சிலோனுவின் எல்லைகளில் தடுத்து விரட்டிய தளபதி என்ரிகே லிஸ்டரின் வீரப் படையின் உதவியுடன் அந்த உணவு நிலையம் நடைபெற்றது.

நேருவுடன் சேர்ந்து கொள்வதற்காகக் கிருஷ்ண மேனன் லண்டனிலிருந்து விமானத்தில் வந்தார். ஜூன் 16ந் தேதி காலையில் நேரு, கிருஷ்ண மேனன், ஒரு மொழிபெயர்ப்பாளர், அவர்களுடைய கார் தடையில்லாமல் போவதற்கு உதவியாக குடியரசுத் தரப்பைச் சேர்ந்த அதிகாரி ஆகியோர் தளபதி லிஸ்டருடைய இராணுவத்தின் முன்னணிக்குச் சென்றார்கள். போர்முனை ஓரளவுக்கு அமைதியாகவே இருந்தது. தளபதி லிஸ்டர் விருந்தினர்களோடு சில மணி நேரம் இருக்க முடிந்தது. அவர் கலிஸியாவைச் சேர்ந்தவர், கட்டிடம் கட்டும் தொழிலாளியாக இருந்தவர். புரட்சியின் ஆரம்ப நாட்களில் குடியரசு இராணுவத்தில் சாதாரணப் படைவீரராகச் சேர்ந் தவர், இப்பொழுது குடியரசின் மிகச் சிறப்பான இராணுவ தளகர்த்தர்களில் ஒருவரானுர். அவருடைய போர்த் தந்திரங் கள் பிராங்கோவின் இராணுவத்துக்கு ஆலோசகர்களாக இருந்த ஜெர்மன் மற்றும் இத்தாலிய அதிகாரிகளுக்குத் திகைப்பைக் கொடுத்தன.

அந்தப் பிரபலமான தளபதியைப் பார்த்தவுடனே நேரு வுக்கு அவரை மிகவும் பிடித்துவிட்டது. அவருடைய வட்ட மான முகத்தில் கறு நிறக் கண்கள் குறும்புத்தனமாகச் சிமிட்டின. அவர் செம்பு நிறத் தலைமுடியை அழுத்தமாகப் பின்னுல் வாரிவிட்டிருந்தார். உடல் சற்றுத் தடித்த ஓட்டப் பந்தய வீரனைப் போல அவர் தோன்றினுர். மொத்தத்தில் ஆரோக்கியமான தோற்றம். இவை அனைத்துமே அவருடைய தனித்தகுதிகளை நேருவுக்கு எடுத்துக் கூறின. இராணுவங் களில் நெடுங்காலம் பணியாற்றிய போர்வீரர்கள் குறுகிய பார்வையைக் கொண்டவர்களாக இருப்பார்கள். பிரிட்டிஷ் இராணுவத்தில் அப்படிப்பட்ட அதிகாரிகள் அதிகம். நேரு அவர்களோடு பல சந்தர்ப்பங்களில் மோதியிருக்கிறுர். லிஸ்டர் அப்படிப்பட்டவர் அல்ல. அவர் தெளிவான முறையில், நம்பக்

கூடிய விதத்தில் பேசினர். சில சமயங்களில் சற்று அதிகமான தீர்மானத்தோடு பேசுவதாகக்கூட நேரு நினைத்தார். அடிக்கடி நகைச் சுவையாகப் பேசி அவற்றைக் கேட்டுக் கொண்டிருப்பவர்கள் சிரிக்கும் பொழுது அவரும் குலுங்கக் குலுங்கச் சிரிப்பார். அந்த நேரத்தில் அவருடைய முகம் உண்மையிலேயே இளமையாகத் தோன்றும். தன்னுடைய படைவீரர்களிடமும் அதிகாரிகளிடமும் லிஸ்டர் நடந்து கொண்ட முறையை நேரு ரசித்தார். கவனமாக, சிடுசிடுப்பு இல்லாமல்—நெருக்கமானவர் என்று நினைத்து விடாதபடி—கண்டிப்போடு அவர் நடந்துகொண்டார். படைவீரர்கள் தளபதி லிஸ்டரைக் கடவுளைப் போல வணங்கினர்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவருடைய படையில் இரும்பைப் போன்ற கட்டுப்பாடு ஆட்சி செலுத்தியது. என்ரிகே லிஸ்டரைப் போன்றவர்கள் இருந்த காரணத்தால் குடியரசுத் தரப்பினர் எல்லாவிதமான ஆயுதங்களையும் கொண்ட, இராணுவ நடவடிக்கைகளில் நல்ல அனுபவமுடைய ஜெர்மன்-இத்தாலிய அதிரடிப் படைகளால் பலப்படுத்தப்பட்ட பிராங்கோவின் இராணுவத்தை எதிர்த்துச் சண்டை போடக் கூடிய மக்கள் இராணுவத்தை மிகக் குறுகிய காலத்திலேயே உருவாக்க முடிந்ததில் ஆச்சரியமில்லை.

ஆங்கிலேயர்களையும் அமெரிக்கர்களையும் கொண்டு அமைக்கப்பட்டிருந்த சர்வதேசத் தொண்டர் படைப் பிரிவினரைச் சந்திப்பதற்கு விருந்தினர்களை அழைத்துச் சென்றார்கள். ஆயிரக்கணக்கான வெளிநாட்டுத் தொண்டர்கள் ஸ்பெயினில் குடியரசை ஆதரித்து யுத்தத்தில் ஈடுபட்டிருப்பது ஜவகர்லால் நேருவுக்குத் தெரியும். ஸ்பானியக் குடியரசுக்கு உதவி செய்வதற்காகப் பல நாடுகளிலும் கமிட்டிகள் அமைக்கப்பட்டிருந்தன. லண்டனில் இப்படிப்பட்ட கமிட்டி ஒன்றில் நேருவின் மகள் இந்திரா சேவை செய்துவந்தாள். ஸ்பானிஷ் மண்ணில் பாசிசத்துக்கு முதல் அடி கொடுப்பதற்காக ஆயுதங்களைத் தாங்கிப் போர் புரியும் தொண்டர்களைச் சேர்த்துக் கொண்டிருந்தாள். இந்திராவுக்கு நெருங்கிய நண்பரான பெரோஸ் காந்தி தொண்டராகப் பதிவு செய்து கொண்டார். ஆங்கில ரகசிய இலாகாவின் தந்திரங்களால் அவருடைய பாஸ்போர்ட் ரத்துச் செய்யப்பட்டது. அதன் விளைவாக அவர் ஸ்பெயினுக்குப் போக முடியவில்லை.

சர்வதேசத் தொண்டர் படையைப் பார்த்ததும் அதன் படைவீரர்களோடு உரையாடியதும் நேருவின் மனதில் ஆழ மாகப் பதிந்தது. அவர்கள் தங்கள் சொந்த நாடுகளில் அமைதியான வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தவர்கள். அவர்கள் தம் பெயர்களை மாற்றிக் கொண்டு வீடுகளையும் குடும்பங்களையும் விருப்பமான வேலையையும் துறந்து இரக சியமாக நாட்டை விட்டு வெளியேறி ஒவ்வொரு மணியிலும் மரணத்தைச் சந்திப்பதற்காக ஸ்பெயினுக்கு வந்திருக்கிறார் கள். அவர்கள் மரணமடைந்தால் அவர்கள் உறவினர்களோ, நண்பர்களோ தங்களது தகப்பனார், கணவர், சகோதரர், மகன் அல்லது நண்பன் எங்கே புதைக்கப்பட்டிருக்கிறார் என் பதை எக்காலத்திலும் தெரிந்து கொள்ள முடியாது என் பதைத் தெளிவாகப் புரிந்து கொண்ட பிறகு வந்திருக் கிறார்கள். அவர்களுடைய வீரமும் பெருந்தன்மையும் நேருவைக் கவர்ந்தன.

படைப்பிரிவின் தலைமை நிலையத்தில் நேருவுக்கும் அவரு டன் கூட இருந்தவர்களுக்கும் எளிமையான உணவளிக்கப் பட்டது. ஒரு ஸ்பானிய அதிகாரி இந்தியாவின் சுதந்திரத் துக்கு வாழ்த்துக் கூறினார். இதைக் கேட்ட நேரு மனநெகிழ்ச்சி யடைந்தார். தம் நன்றியைத் தெரிவிப்பதற்கு வார்த் தைகளுக்குத் திணறினார். குடியரசின் வெற்றிக்கு வாழ்த்துக் கூறினார்.

அவர்கள் இரவில் வெகு நேரமான பிறகு பார்சிலோனா வுக்குத் திரும்பினார்கள். அன்றிரவில் எதிரி விமானங்கள் பார்சிலோனா மீது குண்டு மழை பொழிந்தன. எவ்வளவு முயற்சி செய்தும் நேருவினால் தூங்க முடியவில்லை. மறுநாள் காலையில் குடியரசின் வெளிநாட்டு மந்திரி ஜூலியோ அல்வா ரெஸ் டெல் வாயோ அவரை சந்திக்கத் தயார் என்று தெரிவிக்கப்பட்டது.

அவர்களுக்கிடையே உரையாடல் அதிக நேரம் நடை பெற்றது. மந்திரி ஸ்பெயினின் நிலைமையைப் பற்றி நேரு விடம் எடுத்துக் கூறினார். குடியரசு அரசாங்கத்துக்கு முன்னா லிருந்த நெருக்கடிகளை அவர் மறைக்கவில்லை. புதிய இராணு வம் வீரத்தோடு போர் புரிந்தது. ஆனால் அவர்களிடம் அனுபவம் நிறைந்த தளபதிகள் அநேகமாக இல்லை. அவர் களுடைய பல தோல்விகளுக்கும் பின்வாங்குதல்களுக்கும் எதிரி

யிடம் மிகப் பெரிய விமானப் படையும் இராணுவ தள வாடங்களும் பெரிய பீரங்கிகளும் இருந்தது ஒரு காரண மென்றாலும் பரந்த நடவடிக்கைகளில் குடியரசுத் தளபதி களின் அனுபவமின்மையும் குடியரசின் இராணுவத்திலிருந்த பழைய அதிகாரிகள் திட்டமிட்ட வகையில் செய்யும் சீர் குலைவுகளும் காரணமாக இருந்தன. இந்தச் சீர்குலைப்பு நட வடிக்கை அனுபவமின்மையைக் காட்டிலும் ஆபத்தானதாக இருந்தது. ஆனால் சந்தேகத்துக்குரிய பழைய அதிகாரிகளின் பதவிகளுக்குப் புதிய அதிகாரிகள் படிப்படியாக நியமிக்கப் பட்டு வருவதால் அந்த ஆபத்து குறைந்து கொண்டிருக் கிறது. அவர் இராணுவத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை; வெடிகுண்டுகள் போதிய அளவில். கிடைக்கவில்லையே என்று, உணவு நிலைமைப் பற்றி இன்னும் அதிகமாகக் கவலைப்படு வதாகக் கூறினார். உணவும் வெடிகுண்டுகளும் கிடைப்பது பிரிட்டன் மற்றும் பிரான்சின் கொள்கையைப் பொறுத் திருந்தது; அந்த அரசாங்கங்கள் ''தலையிடாமைக் கொள்கை யைக்'' கடைப்பிடிப்பதாக வெளியில் சொல்லிக் கொண்டா லும் உண்மையில் பிராங்கோவுக்கு மறைமுகமாக உதவி செய்து குடியரசின் குரல்வளையை நெறித்தன.

ஸ்பானிய வெளிநாட்டு மந்திரியின் கருத்தை நேரு ஒத்துக் கொண்டார். உரையாடலில் தன் பங்குக்கு இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி எடுத்துக் கூறி னார். பாசிசத்தை எதிர்த்து யுத்தம் புரிகின்ற குடியரசுவாதி களுக்கு இந்தியாவின் அனுதாபத்தைக் காட்டும் வகையில் அமைச்சரிடம் காங்கிரஸ் கொடியைக் கொடுத்தார். ஸ்பெயி னுக்கு உணவும் மருந்துப் பொருள்களும் தொடர்ச்சியாக அனுப்ப ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார்.

அவர் ஸ்பெயினை விட்டுப் புறப்படுவதற்கு முன்னர் இன் னொரு முக்கியமான நபரைச் சந்தித்தார். இந்தியாவிலும் ஸ்பெயினிலும் அந்த நாட்டின் முதல் பெண் கம்யூனிஸ்டான டாலோரெஸ் இபார்ரூரியைப் பற்றி அவர் அதிகமாகக் கேள் விப்பட்டிருந்தார். வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருந்த ஒரு சாதாரணப் பெண் புரட்சிகரமான நாட்டின் அங்கீகாரம் பெற்ற தலைவராக மாறியிருந்தாள். அவளை நண்பர்கள் அன் போடும் எதிரிகள் ஆத்திரத்தோடும் ''உணர்ச்சிப் பிழம்பு'' *(La Passionaria)* என்று அழைத்தார்கள். அவளுடைய உணர்ச்

சிகரமான உரைகள் நாடு முழுவதும் பிரபலமடைந் திருந்தன. ''சுதந்திரத்துக்காகப் போராடுகின்ற மக்களின் மீது யாருமே கடைசித் தோல்வியை ஏற்படுத்த முடியாது. ஸ்பெயினை அழிவுக் குவியலாக மாற்றி விடலாம்; ஆனால் ஸ்பானிஷ்காரர்களை ஒருபோதும் அடிமைகளாக மாற்ற முடியாது.'' இதைக் குடியரசுவாதிகள் பெருமையோடு திரும்பத் திரும்பச் சொன்னார்கள். இந்த வாசகத்தை நேருவிடம் மொழிபெயர்த்துக் கூறினார்கள்.

நேரு பிற்காலத்தில் பின்வருமாறு எழுதினார்: ''அந்தப் பெண்மணி உடல் நலமில்லாதிருந்தாள். அவள் வசித்த சிறிய அறைக்கு நாங்கள் சென்றோம். நாங்கள் சுமார் ஒரு மணி நேரம் அங்கே இருந்திருப்போம். மொழிபெயர்ப்பாளருடைய உதவியோடுதான் பேசிக்கொண்டிருந்தோம். அவளிடமிருந்த அசாதாரணமான உயிர்க்களை என்னைச் சூழ்ந்தது. நான் இதுவரை சந்தித்தவர்களில் இவள் மிகவும் குறிப்பிடத்தக்க பெண்மணி என்று உணர்ந்தேன். அவள் பாஸ்க் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு சுரங்கத் தொழிலாளியின் மகள். நடுத்தர வயது, குடும்பப் பாங்கான தோற்றம், அவளுடைய குழந்தைகள் பெரியவர்களாக இருந்தார்கள். அவள் முகம் இனிமையாகவும் நட்புணர்ச்சியோடும் இருந்தது. அது ஒரு அழகிய சிரிப்புடன் கூடிய மகிழ்ச்சியான பெண்மணியின் முகம். சாதாரண நேரங்களில் அமைதியான, ஆனால் மேற்பரப்புக்குக் கீழே கொந்தளிப்புகள் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைச் சூசகமாகக் காட்டுகின்ற முகம். அவள் பேசத் தொடங்கினாள். உணர்ச்சிகரமான சொற்கள் ஒன்றின் மீதொன்று மோதிக் கொண்டு வெளியே வந்தன. அவள் இதயத்தில் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு அவளுடைய முகத்தை ஒளிமயமாக்கியது. அவளுடைய அழகான கண்களின் பிரகாசம் உங்களைப் பரவசப்படுத்தும். அந்தச் சிறிய அறையில் அவள் ஸ்பானிஷ் மொழியில் பேசிக் கொண்டிருந்தவற்றில் பாதி தான் எனக்குப் புரிந்தது. ஆனால் அந்த மொழியிலிருந்த இசை நயம் என் இதயத்தில் நிறைந்தது. மாறிக் கொண்டிருந்த முகபாவங்களும் கண்களும் அர்த்தங்களோடு நிறைந் திருந்தன. அந்தப் பெண் ஸ்பானிஷ் மக்கள் மீது கொண்டிருந்த சக்தியை நான் அப்பொழுது புரிந்துகொண்டேன். நான் எதைக் கண்டும் சுலபமாக வியப்பதில்லை. அப்படிப்பட்ட

நானே அவளைக் கண்டு வியந்தேன் என்றால் சொந்த நாட்டு மக்களின் பெருந்திரளான கூட்டத்தில் அவள் பேசும்பொழுது எவ்வளவு வன்மையான தாக்கம் ஏற்படும் என்று ஆச்சரிய மடைந்தேன்.''

*1939* ஜனவரியின் கடைசி நாட்களில் பிராங்கோவின் துருப்புகள் பார்சிலோனாவுக்குள் நுழைந்தன. இரண்டு மாதங் களுக்குப் பிறகு தலைநகரமான மாட்ரிட் வீழ்ச்சியடைந்தது. குடியரசுவாதிகள் முறியடிக்கப்பட்டதை ஒரு தனிப்பட்ட வருத்தமாக நேரு கருதினார். அவர் தன்னுடைய வாழ்க் கையில் சந்தித்த மக்களும் சம்பவங்களும் ஏராளம். ஆனால் அவர் தன் வாழ்க்கை முழுவதிலும் ஸ்பெயினில் கழித்த ஐந்து நாட்களை அடிக்கடி நினைத்துக்கொண்டார். அங்கே யிருந்த வறுமைக்கும் அழிவுக்கும் எந்த நேரத்திலும் அழிவு ஏற்படக் கூடுமென்ற அச்சத்துக்கும் நடுவே ஐரோப்பாவில் வேறு எந்த இடத்திலும் கிடைக்காத மன அமைதி அவருக்குக் கிடைத்தது. அங்கே ஒரு விளக்கு, துணிவு, உறுதி, உயர்வான லட்சியத்திற்கேற்ற ஏதாவது ஒன்றை செய்ய வேண்டும் என்ற ஆர்வ விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

*1938* ஜூன் *23*ந் தேதியன்று நேரு லண்டனுக்கு வந்தார்.

அவர் சென்ற தடவை லண்டனுக்கு வந்தபொழுது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதிகளோடு எவ்வகையான சந்திப்பையும் தவிர்த்தார். ஆனால் அப்படி மறுப்பதற்கு இப்பொழுது அவர் உத்தேசிக்கவில்லை. ஆனால் முன்முயற்சியை அவர்கள்தான் செய்ய வேண்டும். உலகத்தில் அரசியல் நெருக் கடி ஏற்படப் போகிறது, அதில் உலகத்தின் எல்லா வல்லரசு களும் ஈடுபடப் போவதால் அந்த நெருக்கடி உலகரீதியான தன்மையைப் பெறும் என்பதில் நேருவுக்குச் சந்தேகமில்லை. இனி வரப்போகின்ற சம்பவங்களில் இந்தியா எத்தகைய இடத்தைப் பெற வேண்டும் என்று பிரிட்டிஷ்காரர்கள் உத்தே சிக்கிறார்கள் என்பதைப் பற்றி அவர் கவலையடைந்தார். அப்பொழுது லண்டனுக்கு வந்திருந்த இந்திய வைசிராய் லின்லித்கோ பிரபுவிடமிருந்து அழைப்பு வந்ததும் நேரு உடனே அவரைச் சந்திக்க முடிவு செய்தார்.

அவர்கள் நெடுநேரம் உரையாடினார்கள். அதிலும் திறந்த மனதோடு உரையாடினார்கள் என்பது நேருவின் கடிதங்களி

லிருந்து தெரிகிறது. ஐரோப்பாவில் சமீபத்தில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றி அவர்கள் விவாதித்தார்கள், உடனடி யாக கவனிக்கப்பட வேண்டிய அளவுக்கு முக்கியமான இந்தி யாவின் உள்நாட்டுப் பிரச்சினைகளையும் பிரிட்டிஷ்-இந்திய உறவுகளின் நிலைமையையும் பற்றி பேசினார்கள்.

''இந்தியாவுக்குப் பிரிட்டிஷ் டொமினியன் அந்தஸ்து கொடுத்தால் சம்மதிப்பீர்களா?'' என்று லின்லித்கோ திடீ ரென்று நேரடியாகக் கேட்டார்.

இந்தக் கேள்விக்கு நேரு சுருக்கமான முறையில் பதிலளிக்க வில்லை. இந்தியர்களுக்கு முழு பொருளாதார சுதந்திரமும் லண்டனிலிருந்து விடுபட்டு சுதந்திரமான முறையில் பொரு ளாதார அமைப்பை உருவாக்கிக்கொள்ளும் அதிகாரமும் இல்லாவிட்டால் அரசியல் சுதந்திரம் என்பது மிகவும் அர்த்த மில்லாததாகும் என்று நேரு கூறினார். ''டொமினியன் அந்தஸ்து என்பது கொள்கையளவில் பொருளாதார சுதந் திரத்தைக் குறிக்கும், ஆனால் பொருளாதார ரீதியில் பிரிட்ட னிடம் இந்தியாவின் கொத்தடிமைத்தனத்தின் கடந்த கால வரலாற்றைப் பார்த்தால் அந்தப் பொருளாதார சுதந்திரம் இந்தியாவுக்குத் தரப்படுமா என்பது சந்தேகமே. இந்தியா வுக்கு உண்மையிலேயே டொமினியன் அந்தஸ்தைக் கொடுப் பதாக இருந்தால் எங்களுடைய கருத்து மற்ற பல சந்தர்ப் பங்களைப் பொறுத்திருக்கும். அது திருப்திகரமான தீர்வு என்றோ அல்லது பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் உள்ள தகராறுக்கு முடிவு கட்டுவதாகவோ நிச்சயமாகக் கருத மாட் டோம். இந்திய மக்களின் சுதந்திர தாகம் மிக ஆழமானது, மிகவும் பரவலாக இருப்பது. சில சூழ்நிலைகளின் காரண மாக இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்துக் கொடுப்பதைக் காங்கிரஸ் ஒத்துக் கொள்ளலாம். எங்களுடைய நிலையைப் பலப்படுத்திக்கொள்ளவும் கடைசியில் இறுதி லட்சியத்தை அடைவதற்கும் உதவுகின்ற முதல் படியாகத்தான் நாங்கள் அதைக் கருதுவோம். ஆனால் மேலும் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் எப்பொழுதும் எங்களிடமிருக்கும். அது தீர்க்கப்படுகின்ற வரையிலும் போராட்டம் என்ற உளவியல் மனோபாவம் நீடிக்கும்'' என்றார்.

அவர் பேச்சை லின்லித்கோ பிரபு வெறுப்போடு கேட்டுக் கொண்டிருந்தார்.

தனித்து நிற்பது அல்லது குறுகிய தேசியவாதம் என்ற அடிப்படையில் நாங்கள் சுதந்திரத்தைப் பற்றி நினைக்கவில்லை என்று நேரு விளக்கினர். பிரிட்டனேடு மிகவும் நெருக்கமான உறவுகளை வைத்துக் கொள்வதற்குத் தயாராக இருக்கிறேம். ஆனல் இவை சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். இந்த நிலைமை ஏற்பட வேண்டுமென்றல் இந்திய மக்கள் தங்களுடைய தலைவிதியைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்வதற்கும் தமக்கென்று சொந்தமான அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கிக் கொள்வதற்கும் முழு சுதந்திரம் உடையவர்கள் என்பதை பிரிட்டன் உணர வேண்டும், அறிவிக்க வேண்டும். அதற்குரிய ஜனநாயக ரீதியான ஒரே ஒரு வழி காங்கிரஸ் கோருகின்ற அரசியல் நிர்ணய சபையாகத்தான் இருக்க முடியும். இந்திய தேசபக்தன் என்ற முறையில் இந்திய மக்களின் பலத்தை அதிகப்படுத்துவதைப் பற்றியே நான் சிந்திக்க முடியும்; ஏனென்றல் அவர்களுடைய முன்னேற்றத்துக்கும் சுதந்திரத்துக்கும் அது ஒன்றுதான் உத்தரவாதம். ஆனல் உலக சமாதானத்திலும் ஒத்துழைப்பிலும், இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் நட்பு ரீதியான உறவுகள் வளர்ச்சியடைவதிலும் மிகவும் அக்கறை கொண்டவன் என்ற முறையில் எல்லோரையும் பயமுறுத்திக் கொண்டிருக்கும் மாபெரும் உலக நெருக்கடியை மனதில் கொண்டு பார்க்கும் பொழுது இந்தியப் பிரச்சினைக்கு உண்மையான தீர்வைக் கொண்டுவரக் கூடிய ஒரே நடவடிக்கையைச் செய்யக் கூடிய அளவுக்கு பிரிட்டிஷ் ராஜியவாதிகள் மதிநுட்பமும் தொலைநோக்கும் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர்.

வைசிராய் ஓரளவுக்குக் குழப்பமடைந்தது போலத் தோற்றமளிப்பதை ஜவகர்லால் கவனிக்கத் தவறவில்லை. அவருடைய கேள்விக்கு வேறுவிதமான பதிலை எதிர்பார்த்திருப்பார் என்று தோன்றியது. 1935ம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தை ரத்துச் செய்ய வேண்டும், அரசியல் நிர்ணய சபையைக் கூட்ட வேண்டும் என்பதை நான் ஒத்துக் கொள்வதாக இருந்தால் உடனே வைசிராய் பதவியிலிருந்து விலக வேண்டும், இந்தக் கருத்துக்கு ஆதரவாக பிரிட்டனில் ஒரு சிறு கோஷ்டிக்குத் தலைமை தாங்குவதைத் தவிர தான் செய்யக் கூடியது ஒன்றுமில்லை என்று வைசிராய் மெதுவாகக் கூறினர்.

மற்றவை எப்படியிருந்தாலும் பிரிட்டிஷ் அரசாங்கம் இதை ஒத்துக் கொள்ளுமாறு செய்வதற்குத் தனக்கு ஒரு வழியும் கிடையாது என்று அவர் கூறினர்.

நேரு வைசிராய்க்கு நன்றி தெரிவித்துவிட்டு எழுந்து கதவை நோக்கி நடந்தார். நம் இருவரையும் அகன்ற இடைவெளி பிரிக்கிறது, நாம் எதிர்முனைகளில் நின்று கொண்டு ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான் என்று நேரு வாயிலைக் கடக்கும் பொழுது லின்லித்கோ பிரபு கூறினர்.

பிரிட்டிஷ் மந்திரி சபையின் இதர உறுப்பினர்களைச் சந்தித்தபொழுது வைசிராய் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் எவ்வளவு உண்மையானவை என்பதை நேரு உணர்ந்தார். அப்பொழுது பிரிட்டனில் பதவியிலிருந்த அரசாங்கம் ஆச்சரியப்படும் அளவுக்குப் பிற்போக்குதனமும் தன்னைத்தானே பாராட்டிக்கொள்ளும் தன்மையும் கொண்டது, மேலும் புத்திசாலித்தனமும் கிடையாது என்ற முடிவுக்கு நேரு வந்தார்.

ஜூலை 17ந் தேதியன்று ஸ்பானியக் குடியரசுக்கும் சீனாவுக்கும் ஒருமைப்பாட்டைக் காட்டுவதற்காக பிரிட்டனின் ஜனநாயக சக்திகள் லண்டனில் டிரபால்கர் சதுக்கத்தில் ஒரு மாபெரும் பொதுக் கூட்டத்தை நடத்தினர்கள். அங்கே ஜவகர்லால் சுருக்கமாகப் பேசினர்.

''பிரிட்டிஷ் தொழிலாளர்களுக்கும் ஜனநாயகவாதிகளுக்கும் குறிப்பாக ஸ்பானிஷ் மக்களுக்கும் இந்திய தேசிய காங்கிரஸ் மற்றும் இந்திய மக்களின் வாழ்த்துக்களையும் என்னுடைய வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.... ஸ்பெயினுக்கோ அல்லது சீனுவுக்கோ இந்தியா செய்யக் கூடிய பேருதவி தன்னை நசுக்கிக் கொண்டிருக்கும் பாசிசத்தை எதிர்த்து இன்னும் அதிகமான தீவிரத்தோடு போராடுவதே... இந்த நாடுகளின் போராட்டத்திலிருந்து நாங்கள் படிப்பினைகளைப் பெற்றிருக்கிறோம். இந்தியாவின் மீது முழு ஆதிக்கத்துக்காக நிற்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு நாங்கள் சமரசம் செய்து கொள்ள மாட்டோம்... உங்கள் நாட்டில் ஜனநாயகம் இருந்தாலும் உங்கள் அரசாங்கம் மென்மேலும் பாசிஸ்ட் ஆதரவுக்கு மாறிக் கொண்டிருக்கிறது. நீங்கள் பாசிசத்துக்கு எதிர்ப்புக் காட்டும்பொழுது உங்கள் அரசாங்கத்தின் பின்னணியை, உங்கள் சாம்ராஜ்யத்திலிருக்கும்

அடிமை நாடுகளை நிர்வாகம் செய்வதனுல் உங்கள் தலைவர்களுக்குக் கிடைத்திருக்கும் பயிற்சிகளை நீங்கள் மறக்கக் கூடாது'' என்ருர்.

1938 ஜூலை—செப்டெம்பர் மாதங்களில் நேரு பாரிஸ், பிராக் (சாதாரணப் பயணி என்ற முறையில் செக்கோஸ்லொவாக்கியாவுக்குப் போகும் வழியில் மியூனிச்சில் இரண்டு நாட்களைக் கழித்தபொழுது ஹிட்லரின் அதிகாரிகள் யாரையும் சந்திக்க மாட்டேன் என்று உறுதியாக மறுத்தார்), புடாபெஸ்ட், ஜினீவா ஆகிய நகரங்களுக்கும் இரண்டாம் தடவையாக பாரிசுக்கும் லண்டனுக்கும் சென்ருர். யுத்தம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது என்ற அதிகக் கவலையைத் தருகின்ற வகையில் அவருக்கேற்பட்ட எண்ணங்களுக்கு எல்லா இடங்களிலும் நிரூபணங்களைக் கண்டார். நெருப்பைக் கக்கப் போகின்ற எரிமலையை ஐரோப்பா அவருக்கு நினைவுபடுத்தியது.

செப்டெம்பர் மாதக் கடைசியில் பிரிட்டனின் பிரதமரான சேம்பெர்லெனும் பிரான்சின் பிரதமரான டலாடியரும் ஹிட்லர் மற்றும் முஸ்ஸோலினியோடு பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்கு மியூனிச்சுக்குச் சென்ருர்கள். பாசிஸ்ட் ஆக்கிரமிப்பாளர்களிடம் மேற்கத்திய தலைவர்கள் கடைப்பிடித்த ''சமாதானப்படுத்தும்'' கொள்கையின் சிகரமே மியூனிச் ஒப்பந்தம் என்ற கேவலமான சரணுகதி. அதன்படி ஹிட்லர் ஜெர்மனி செக்கோஸ்லொவாக்கியாவை விழுங்குவது அனுமதிக்கப்பட்டது. அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட பிறகு சேம்பெர்லென் (''ஹிட்லரின் கடிதத்தைக் கொண்டுவந்த சிறுவன்'' என்று நேரு அவரைப் பற்றிக் குறிப்பிட்டார்) ''இனி ஒரு தலைமுறைக் காலம் முழுவதும் யுத்தம் ஏற்படாதென்று'' அறியாமையில் பிறந்த ஆணவத்தோடு அறிவித்தார். பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத்தின் மிகவும் பிற்போக்கான பகுதி கிளைவ்டென் என்ற இடத்திலுள்ள ஆஸ்டார் பிரபுவின் மாளிகையில் இதைக் கொண்டாடினுர்கள். மியூனிச் சரணுகதிக்குப் பிறகு, ஜெர்மனியின் எல்லை பிராக் நகரத்திலிருந்து நாற்பது கிலோமீட்டர் தூரத்தில் இருந்தபொழுது, ''கிளைவ்டென் கும்பல்'' தாங்கள் மிகவும் வெறுக்கின்ற சோவியத் யூனியன் மீது ஹிட்லர் படையெடுப்பார் என்று கொண்டாட்டம் நடத்திஞர்கள்.

செப்டெம்பர் 30ந் தேதியன்று *The Daily Worker* பத்திரிகையின் நிருபருக்குப் பேட்டியளித்த பொழுது மியூனிச் ஒப்பந்தத்தைப் பற்றி நேரு ஆவேசத்தோடு பேசினர். ''எந்த விலை கொடுத்தாகிலும் சமாதானத்தை அடைவது. மற்றவர் களின் இரத்தமும் துன்பமும், ஜனநாயகத்தை அவமதித்தல், நட்பு அரசுகளாக இருக்கும் நாடுகளைக் கூறு போடுதல்— இவை விலையாகக் கொடுக்கப்பட்டன. அதற்குப் பிறகும் கூட சமாதானம் ஏற்படுமா? இல்லை. தொடர்ந்து மோதலும் கொள்ளையும் வன்முறையின் ஆட்சியும், கடைசியில் யுத்த முமே ஏற்படும்.''

இந்த சமயத்தில், ஐரோப்பாவின் தலைநகரங்களில் எல்லா வற்றையும் பார்த்த பிறகு ஐரோப்பாவில் பாசிசம் மற்றும் ஜனநாயக விரோத சக்திகளின் முன்னேற்றத்தைத் தடுக்கக் கூடிய பலம் பொருந்திய ஒரே சக்தி சோவியத் யூனியனே என்பதை அவர் முன்னெப்போதுமில்லாத அளவுக்கு உறுதி யாக நம்பினர். அவர் தன்னை நண்பனுக மாஸ்கோவில் வர வேற்பார்கள் என்ற நம்பிக்கையோடு மாஸ்கோவுக்குப் போக உத்தேசித்து தயாரிப்புகளைச் செய்து கொண்டிருந்த நேரத்தில் இந்திரா நோய் வாய்ப்பட்டாள். அதனுல் மாஸ்கோ பயணத் தைக் கைவிட்டார். ''நீங்கள் இப்பொழுது மாஸ்கோவுக்குச் செல்ல இயலாது என்பதை அறிய நான் மிகவும் வருந்து கிறேன். ஏனென்ருல் இந்தப் பயணத்தை எவ்வளவு மகிழ்ச்சி யோடு எதிர்பார்த்தீர்கள் என்பது எனக்குத் தெரியும். இப்பொ ழுது சூழ்நிலை காரணமாக இப்பயணத்தைத் தள்ளி வைத்தாலும் எதிர்காலத்தில் ஏதாவதொரு சமயத்தில் சோவியத் யூனிய னுக்கு வருகை தருவீர்கள் என்று நம்புகிறேன்'' என்று பிரிட்டனிலிருந்த சோவியத் தூதர் நேருவுக்கு எழுதிய கடி தத்தில் குறிப்பிட்டார்.

1938 நவம்பரில் ஐரோப்பாவில் ஐந்து மாதங்களைக் கழித்த பிறகு நேரு இந்திராவுடன் இந்தியாவுக்குத் திரும் பினர்.

பம்பாயில் அவர் வந்திறங்கியதும் முதல் வேலையாக ஸ்பானிஷ் குடியரசுக்கு உணவுப் பொருள்களைச் சேகரித்து அனுப்புகின்ற பணியில் ஈடுபட்டார். ஸ்பானிஷ் வெளிநாட்டு அமைச்சர் ஜூலியோ அல்வாரெஸ் டெல் வாயோவுக்கு 1938 நவம்பர் 21ந் தேதியன்று எழுதிய கடிதத்தில் நேரு

பின்வருமாறு குறிப்பிட்டார்: ''நான் நான்கு நாட்களுக்கு முன்னர்தான் இந்தியாவுக்குத் திரும்பினேன். ஸ்பெயினுக்கு உணவுப் பொருள்கள் அனுப்பி வைப்பதற்கு உடனடியான நடவடிக்கைகளைச் செய்திருக்கிறேன் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்பெயின் உதவிக் கமிட்டி என்ற பெயரில் ஒரு செல்வாக்குள்ள கமிட்டியை பம்பாயில் அமைத் திருக்கிறோம்... இந்தக் கமிட்டிக்கு நான் தலைவராக இருக் கிறேன்.'' குறுகிய காலத்திற்குள் இந்தியாவிலிருந்து கோதுமை, அரிசி, சீனி, காபி, தேயிலை மற்றும் பருத்தி, சணல் பொதி கள் ஸ்பெயின் குடியரசுவாதிகளுக்கு அனுப்பப்பட்டன. நேரு வின் முன்முயற்சியின் பேரில் ஜப்பானிய இராணுவவெறியர் களுக்கு எதிராகப் போர்புரிந்து கொண்டிருக்கும் சீன மக் களுக்கு உதவி செய்வதற்காக ஓர் இந்திய மருத்துவக் குழு வைப் போதிய கருவிகளோடும் மருந்துகளோடும் காங்கிரஸ் அனுப்பியது.

சீனாவிலிருந்து திருமதி ஸூன் சின்லின் எழுதிய கடிதத்தில் நேருவை ''சீனாவின் மாபெரும் நண்பர்'' என்று வர்ணித்தார். ''உங்களுடைய அனுதாபத்தையும் ஆதர வையும் காட்டுகின்ற நடவடிக்கைகளைப் பற்றி நாங்கள் நன்றி யோடும் உற்சாகத்தோடும் தெரிந்து கொண்டோம். எங் களுடைய பாராட்டையும் தோழமையையும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறோம்.'' இந்திய தேசிய காங்கிரஸ் நட்பு நிறைந்த சீன நாட்டுக்கு எப்பொழுதும் உதவி செய் யும், சீனா வெற்றியடையும் என்று தான் நம்புவதாகவும் நேரு பதில் எழுதினார்.

ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்துப் போர் புரிந்து கொண்டிருந்த சீன தேசபக்தர்களின் முக்கிய தள மாகிய விடுதலைப் பிரதேசத்தின் தலைநகரமான ஏனானி லிருந்து 1939ம் வருடத்தின் கோடைகாலத்தில் அலகபாத் துக்கு ஒரு கடிதம் வந்தது. ''இந்திய மருத்துவக் குழுவினர் இங்கே தங்கள் பணியைத் தொடங்கிவிட்டார்கள், 8வது படையின் எல்லா உறுப்பினர்களும் அவர்களை அன்போடு வரவேற்றார்கள் என்பதை உங்களிடம் தெரிவிக்க விரும்பு கிறோம்... அவர்களிடம் எங்களுடைய துன்பங்களைப் பகிர்ந்து கொள்ளும் தோழமை உணர்ச்சி இருக்கிறது. அவர்களோடு பழகிய எல்லோருடைய மனதிலும் அது ஆழமாகப் பதிந்திருக்

கிறது.* நீங்கள் அனுப்பிய மருத்துவ மற்றும் பொருளாயத உதவிகளுக்கு மாபெரும் இந்திய மக்களுக்கும் இந்திய தேசிய காங்கிரசுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். எதிர்காலத்தில் இந்திய தேசிய காங்கிரசும் இந்திய மக்களும் எமக்குத் தொடர்ந்து உதவி செய்வார்கள்.., ஜப்பானிய ஏகாதிபத்தியவாதிகளை நாம் ஒன்றாகச் சேர்ந்து விரட்டுவோம் என்று நம்புகிறோம். கடைசியாக—ஆனால் சிறிதும் குறையாத அளவில் முக்கியமாக—எமது நன்றியையும் மனப்பூர்வமான வாழ்த்துக்களையும் நீங்கள் ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டு கிறோம்.'' இக்கடிதத்தின் கீழ் மாசேதுங் கையொப்பமிட் டிருந்தார்.

இதற்கு இருபது ஆண்டுகளுக்குப் பிறகு சீனாவின் மாவோ யிஸ்ட் தலைவர்கள் இந்தியாவோடு நல்ல அண்டை நாடு, நட்புறவை வளர்க்கும் கொள்கையைக் கைவிட்டு சீனப் பிர தேசத்தை இந்தியா ''சேர்த்துக் கொண்டிருப்பதாகப்'' பொய்யான முறையில் குற்றம் சாட்டுவார்கள், இந்திய-சீன எல்லையில் சண்டைகளைத் தூண்டுவார்கள் என்று அப்பொழுது யாராவது எதிர்பார்த்திருக்க முடியுமா? 1962ம் வருடத்தின் இலையுதிர் காலத்தில் ''தற்காப்பு நடவடிக்கை'' என்ற போர் வையில் சீனத் துருப்புகள் இந்தியா மீது படையெடுத்து நாட்டின் வட பகுதியிலும் வட கிழக்குப் பகுதியிலும் விரிவான பிரதேசத்தைப் பிடிக்கும் என்று அப்பொழுது யாராவது எதிர்பார்த்திருக்க முடியுமா?

இந்தியாவிலிருந்து வெளியே சென்றிருந்த மாதங்களுக்கு அவசரமான முறையில் ஈடு செய்வதைப் போல நேரு காங்

---

* சீன கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டியில் கம்யூனிஸ்ட் அகிலத்தின் இராணுவ ஆலோசகராக இருந்த ஜெர்மன் கம்யூனிஸ்டான ஓட்டோ பிராவுன் ''சீனக் குறிப்புகள்'' என்ற தமது புத்தகத்தில் பின்வருமாறு எழுதினார்: ''இந்தியா சீனாவுக்கு அனுப்பிய டாக்டர்கள் கம்யூனிஸ்டுகளாக இல்லாவிட்டாலும் முற் போக்கானவர்களாக இருந்தார்கள். அவர்கள் எந்த நேரத்திலும் உதவி செய்வ தற்குத் தயாராக இருந்தார்கள். மாசேதுங் அவர்களுக்கு உரிய வசதிகளைக் கொடுக்கவில்லை என்று எனக்குத் தோன்றியது. யாருமே அவர்களைப் பற்றி அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. தங்களுடைய தேவைகளுக்கு அவர்களே ஏற்பாடு செய்து கொண்டார்கள்...''

கிரஸ் நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட்டார். அவருடைய முயற்சிகளினுல் 1938 டிசம்பரில் தேசிய திட்டக் கமிட்டி அமைக்கப்பட்டது. அவர் அந்தக் கமிட்டியின் தலைவராக நியமிக்கப்பட்டார்.

டிசம்பர் 17ந் தேதியன்று அந்தக் கமிட்டியின் முதல் கூட்டம் பம்பாயில் நடைபெற்றது. தேசியப் பொருளாதார வளர்ச்சிக்கு எல்லா அம்சங்களையும் தழுவிய விரிவான திட்டத்தைத் தயாரிப்பதற்கு இந்தக் கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது; ஆனுல் இந்தப் புதிய ஸ்தாபனத்திற்கு சுதந்திர இயக்கத்தோடு நெருக்கமான பிணைப்புகள் இல்லாதிருக்க முடியும் என்று நான் கருதவில்லை என்று அக்கூட்டத்தில் நேரு கூறினுர். ''விரிவான திட்டமிடுதல் என்பதே சுதந்திரமான தேசிய அரசாங்கத்தின் கீழ் மட்டுமே செய்யப்பட முடியும் என்பது வெளிப்படை; ஏனென்றல் அத்தகைய அரசாங்கம்தான் சமூக, பொருளாதார அமைப்பில் அடிப்படையான மாற்றங்களைச் செய்வதற்குத் தேவையான பலத்தையும் பொதுமக்களுடைய ஆதரவையும் பெற்றிருக்கும் என்று கூறினுர். எனவே தேசிய சுதந்திரத்தைப் பெறுவதும் அந்நிய அதிகாரத்தை அகற்றுவதும் திட்டமிடுதலுக்கு முக்கியமான முன்நிபந்தனைகளாகும்.'' நேரு கூறிய ஆலோசனைகள் கற்பனுவாதத் தன்மை கொண்டவை என்று சில அவநம்பிக்கைவாதிகள் கூறினுர்கள். எனவே அவர்களுக்குப் பதிலளிக்கின்ற முறையில் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளையும் பற்றி முழுமையான புள்ளிவிவரங்களைச் சேகரிக்க வேண்டும், அவற்றை முற்றுகப் பகுப்பாய்வு செய்ய வேண்டும், எதிர்கால சுதந்திர இந்தியாவில் பல்வேறு தொழில் துறை பிரிவுகளின் வளர்ச்சிக்கு அவசியமான சிபாரிசுகளைச் செய்ய வேண்டும் என்று நேரு வற்புறுத்தினுர்.

பலம் மிகுந்த, பொருளாதார ரீதியில் வளர்ச்சியடைந்த அரசாக எதிர்காலத்தில் இந்தியாவைக் கற்பனை செய்யும் பொழுது சிறுதரமான, ''விவசாயக்'' கைத்தொழில்களை ஆதரித்த காந்தியிடமிருந்து அவர் வேறுபட்டார். பொருளாதார சுதந்திரம் இல்லாத அரசியல் சுதந்திரம் அர்த்தமில்லாதது, சோவியத் யூனியனில் நடைபெற்றதைப் போல மிகவும் குறுகிய காலத்தில் நாட்டில் திட்டமிட்ட தொழில்மயமாக்குவதை ஏற்படுத்தாவிட்டால் பொருளாதார சுதந்

திரத்தை அடைய முடியாது என்று நேரு கருதினர். அவர் தன்னுடைய கருத்தை நிறுவுவதில் வெற்றியடைந்தார். தேசிய திட்டக் கமிட்டியின் வெளியீடுகளில் அக்கருத்து பிரதிபலிக்கப்பட்டது.

இந்திய தேசிய காங்கிரசின் வருடாந்தர மாநாட்டுக்குப் பிரதிநிதிகள் தேர்தல் 1939 ஜனவரியில் நடைபெறவிருந் தது. அதே சமயத்தில் காங்கிரஸ்காரர்கள் கட்சிக்குப் புதிய தலைவரையும் தேர்ந்தெடுக்க வேண்டும். சுபாஷ் சந்திர போஸ் இடதுசாரி அணியின் ஆதரவைப் பெற்று இரண்டாம் தடவை யாகக் காங்கிரஸ் தலைமைப் பதவிக்குப் போட்டியிட்டார். தேர்தலுக்கு முன்பு நடைபெற்ற கூட்டங்களில் பேசும் பொழுது பிரிட்டனுக்கு இறுதி எச்சரிக்கையைத் தெரிவிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது என்று அவர் கூறினர். பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுப் பதற்குத் தேதியை அறிவிக்க வேண்டும். இல்லையேல் எல்லா இந்தியர்களும் அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்துத் தீர்மான மான போராட்டத்தில் ஈடுபட வேண்டும் என்றார். படேல் தலைமையில் காந்தி ஆதரவாளர்கள் போஸ் மறுபடியும் தலை வராகத் தேர்ந்தெடுக்கப்படுவதை எதிர்த்தார்கள். போசுக்கும் தங்களுக்குமிடையே ''அடிப்படையான வேறுபாடுகள்'' இருப் பதாகக் கூறினர்கள். மக்கள் அஹிம்சை வழியில் போராடு வதற்கு இன்னும் தயாராகவில்லை என்பதால் நாட்டில் வெகுஜனப் போராட்டத்தை நடத்த முடியாது என்று அவர் கள் கூறினர்கள். காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான மௌலான அபுல் கலாம் ஆஜாத் போட்டியிட மறுத்தபடியால் வலதுசாரியினர் ஆந்திர மாகாணத்தைச் சேர்ந்தவரும் காந்தி யின் தீவிர ஆதரவாளருமான பட்டாபி சீத்தாராமைய் யாவைத் தேர்தலில் நிறுத்தினர்கள்.

1939 ஜனவரி 29ந் தேதியன்று நடைபெற்ற தேர்தல் களில் போஸ் மறுபடியும் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக் கப்பட்டார். பட்டாபி சீத்தாராமையாவைக் காட்டிலும் அவர் 203 வாக்குகள் அதிகமாகப் பெற்றிருந்தார்.

தேர்தல் முடிவு ஜவகர்லாலுக்கு வேதனையைக் கொடுத் தது. போசும் அவரும் நண்பர்கள். போசின் விமர்சன அறிவையும் இந்திய சுதந்திரத்தில் அவருடைய முழுமையான ஈடுபாட்டையும் (சில சமயங்களில் அது வெறியாகக் கூட

வெளிப்பட்டது) அவர் மதித்தார். ஆனால் போசிடம் வேறு குணங்களும்—தீவிரமான ஆசை, மற்றவர்களின் கருத்துக் களைச் சிந்திக்க மறுப்பது, திடீர் முடிவுகள், பிடிவாதம்— இருப்பது அவருக்குத் தெரியும். கட்சியிலுள்ள மற்றவர்களைப் பற்றி போஸ் அலட்சியமாகப் பேசுவது நேருவுக்குப் பிடிக் காது. அவசரப்பட்டு முடிவுக்கு வராதீர்கள் என்று அவர் போசிடம் அடிக்கடி வற்புறுத்துவார்.

காங்கிரஸ் தலைவர்கள் தம்முடைய காலந்தாழ்த்தும் தந்தி ரத்தைக் கைவிட வேண்டும், பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தீர்மானமான, முரணில்லாத முறைகளில் எதிர்த்துப் போராட வேண்டும் என்று போஸ் கூறுவதை நேரு ஒத்துக் கொண்டார். ஆனால் சில காங்கிரஸ் தலைவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு இரகசிய ஒப்பந்தங்களைச் செய்து கொண் டிருக்கிறார்கள் என்பது வரை போஸ் ஆதாரமற்று குற்றம் சாட்டும் பொழுது அவர் உண்மையில் திகைப்பும் கவலையும் அடைந்தார்.

காங்கிரஸ் உறுப்பினர்கள் ஒற்றுமையோடிருக்கின்ற வரையிலும் காங்கிரஸ் அதிகமான பலமுள்ள அரசியல் ஸ்தாப னமாக இருக்கும். ஜவகர்லாலும் மற்ற காங்கிரஸ் தலைவர் களும் தங்கள் அறிவையும் பொறுமையையும் அடக்கத்தையும் சாதுரியத்தையும் மிக அதிகமாகச் செலவிட்டுக் கட்சியின் ஒற்றுமையைப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். இப்பொழுது போசைப் போன்ற ஒருவரிடம் கட்சியின் தலைமைப் பொறுப் பைக் கொடுத்ததன் விளைவாக விரைவாகவோ அல்லது தாமதமாகவோ கட்சியில் பிளவு ஏற்படப் போகிறது, அதன் விளைவாக இந்தியாவின் விடுதலை இயக்கம் பலவீனமடையப் போகிறதென்று தோன்றியது.

போசைக் காங்கிரஸ் தலைவராக மறுபடியும் தேர்ந்தெடுத் ததன் மூலம் காங்கிரஸ் தவறு செய்துவிட்டதென்று 1939 பிப்ரவரி 22ந் தேதியன்று ஜவகர்லால் ஒரு பேட்டியில் கூறினார். அன்றைய தினத்தில் காங்கிரஸ் செயற்குழு விலிருந்து பதினைந்து உறுப்பினர்களில் பன்னிரண்டு பேர் பதவி விலகினார்கள். ''கருத்து வேறுபாடுகள்'' இருப்பதால் தாங் கள் போசுடன் ஒத்துழைக்க இயலவில்லை என்றும் அவர் முன்வைக்கும் அரசியல் பாதைக்குத் தாங்கள் பொறுப்பேற்றுக் கொள்ள முடியாதென்றும் அவர்கள் கூறினார்கள். படேல்,

இராஜேந்திர பிரசாத் மற்றும் இதர காங்கிரஸ் தலைவர்களோடு சேர்ந்து நேருவும் பதவி விலகினார். பதவியிலிருந்து விலகிய ''பன்னிருவர் கோஷ்டிக்கும்'' தனக்கும் தீவிரமான வேறுபாடுகள் இருக்கின்றன, இவை தீர்க்கப்படுகின்ற வரை செயற்குழுவுக்குத் திரும்ப மாட்டேன் என்று நேரு வலியுறுத்தினார்.

போசின் ஆதரவாளர்கள் பதவிகளிலிருந்து விலகிய காங்கிரஸ்காரர்களைத் தாக்கிப் பேசுவதற்குத் தாமதிக்கவில்லை. அவர்களுடைய நடவடிக்கைகளின் மூலம் இடதுசாரி அணியினர் தனிமைப்படுமாறு செய்துவிட்டார்கள் என்று குற்றம் சாட்டினார்கள். போஸ் தன் உடல்நலக் குறைவைக் காரணம் காட்டி ''பன்னிருவரது'' பதவி விலகலைப் பற்றி முடிவு செய்வதைத் தள்ளிவைத்தார்.

டில்லியின் தென்கிழக்குத் திசையில் உள்ள திரிபுரா என்ற சுதேச சமஸ்தானத்தில் மார்ச் 10ந் தேதியன்று காங்கிரஸ் மாநாடு தொடங்கியது. போசுக்கு இன்னும் உடல் நலமில்லாதிருந்தபடியால், அவர் இல்லாமலேயே ஊர்வலம் நடைபெற்றது.

நேரு எதிர்பார்த்தது போலவே மாநாட்டில் போசை ஆதரிப்பவர்களுக்கும் எதிர்ப்பவர்களுக்குமிடையே ஆத்திரமான வாய்ச்சண்டைகள் ஏற்பட்டன, சில சமயங்களில் அவை தெருச் சண்டைகளின் தரத்துக்குக் கீழே இறங்கின. போஸ் ஒரே ஒரு அமர்வில் மட்டுமே கலந்து கொண்டார். தலைவர்கள் உட்காருவதற்காக அமைக்கப்பட்டிருந்த மேடையில் அவருக்குப் படுக்கை அமைக்கப்பட்டிருந்தது. உறவினர்களும் நண்பர்களும் சூழ்ந்திருக்க அவர் படுத்தபடியே சுருக்கமாக உரையாற்றினார். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இறுதி எச்சரிக்கை விட வேண்டும் என்று வற்புறுத்தினார்.

நேரு இந்த உபாயத்தை எதிர்த்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இனி இந்தியாவில் அதிக நாட்களுக்கு இருக்க முடியாதென்றாலும் வார்த்தை எச்சரிக்கைகளுக்கும் வெறும் பயமுறுத்தல்களுக்கும் அச்சமடைகின்ற வகையில் அது பலவீனமாக இருக்கவில்லை என்று கூறினார்.

தேசியக் கோரிக்கைகளைப் பற்றி நேரு முன்வைத்த தீர்மானம் பெரும்பான்மையான வாக்குகளால் நிறைவேற்றப்பட்டது. இந்தியா பரிபூரண சுதந்திரம் அடைவதும் வெளி

யாருடைய தலையீடு இல்லாமல் மக்கள் தேர்ந்தெடுக்கும் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதும் அந்த சபையினுல் தயாரிக்கப்படும் ஜனநாயக அரசியலமைப்புச் சட்டத்தை அங்கீ கரிப்பதும் இந்திய தேசிய காங்கிரசின் அடிப்படையான நோக்கங்கள் என்று அந்தத் தீர்மானம் உறுதிப்படுத்தியது. காலனியாதிக்கவாதிகளுக்கு எதிராகக் கடைசிப் போருக்குத் தயாராகும்படிப் பொதுவாக மக்களையும் குறிப்பாகக் காங் கிரஸ் அமைப்புக்களையும் காங்கிரஸ் மாகாண அரசாங்கங் களையும் தீர்மானம் அறைகூவியது.

நெருங்கிக் கொண்டிருக்கும் உலக யுத்தத்தைப் பற்றி இந்தியா எத்தகைய அணுகுமுறையைக் கடைப்பிடிக்க வேண் டும் என்பதைப் பற்றி விவாதிக்கும் பொழுதும் தகராறுகள் ஏற்பட்டன. எந்தச் சூழ்நிலைமையிலும்—அதனுல் சுதந்திரம் கிடைத்தாலும் கூட—இந்தியர்கள் யுத்தத்தில் கலந்துகொள்ளக் கூடாது என்பது காந்தியின் கருத்து. பிரிட்டிஷ் அரசாங் கம் இந்தியாவை சுதந்திர நாடாக அங்கீகரிக்க மறுத்தால் மட்டுமே பாசிசத்துக்கு எதிரான யுத்தத்தில் இந்தியர்கள் பிரிட்டனை ஆதரிக்கக் கூடாது என்று நேருவும் ஆஜாதும் கூறினுர்கள். சுதந்திரமான இந்திய நாடுதான் அத்தகைய யுத்தத்தில் பங்குகொள்ள முடியும். இந்தியாவின் பெருந் திரளான மக்கள் பிரிட்டனேடு கடந்த காலத்தில் ஏற்பட் டிருந்த உறவுகளின் கசப்பான பாரம்பரியத்தின் மீது வெற்றி கொள்ள முடியும், மாபெரும் செல்வ வளங்களைத் திரட்டிக் கொண்டு உற்சாகத்தோடு யுத்தத்தில் கலந்து கொள்ள முடி யும் என்று நேரு வற்புறுத்தினுர். இதைப் பற்றிக் கட்சித் தலைமையில் கருத்து வேறுபாடுகள் நிலவிய காரணத்தால் இந்தப் பிரச்சினையில் ஸ்தூலமான எந்த முடிவும் எடுக்கப்படவில்லை.

இந்திய தேசிய காங்கிரசின் தலைமையான கமிட்டிகளின் உறுப்பினர்களை முடிவு செய்யாமல் மாநாடு நிறைவு பெற்றது ஒரு வேளை இதுதான் முதல் தடவையாக இருக்கும். நேரு சோர்வடைந்தார். போசை ஆதரிப்பவர்களுக்கும் காந்தியை ஆதரிப்பவர்களுக்குமிடையே ஏதாவதொரு உடன்பாட்டை ஏற்படுத்துவதற்கு அவர் செய்த முயற்சிகள் வெற்றியடைய வில்லை. காங்கிரஸ் தலைவரின் அதிகாரத்தை அரித்தழிப்பதற்கு நேரு எல்லா வகையிலும் முயற்சிக்கிறுர் என்று போஸ் குற்றம் சாட்டுவதைப் பற்றியும் அவர் கேள்விப்பட்டார்.

நேரு அவரைச் சந்தித்து விளக்கம் கேட்டார். நீண்ட நேரம் உரையாடல் நடைபெற்றது. ஆனால் பலன் ஏற்பட வில்லையே என்று நேரு வருத்தமடைந்தார். பலவிதமான அவதூறுகளும் கற்பனைகளும் போசின் மனதில் வேரூன்றி யிருந்தன, நேருவைப் பற்றித் தமக்கேற்பட்டிருந்த அர்த்தமற்ற சந்தேகங்களை நீக்கிக் கொள்ள அவரால் முடியவில்லை என்பது தெளிவாயிற்று.

காங்கிரஸ் செயற்குழுவின் உறுப்பினர்கள் பிரச்சினையை தீர்ப்பதற்காக காங்கிரஸ் தலைவர்கள் ஏப்ரல் கடைசியில் கல்கத்தாவில் கூடினார்கள். போசுக்கும் காந்திக்கும் சமரசம் ஏற்படுத்துவதற்கு நேரு கடைசியாக ஒரு முயற்சியைச் செய் தார். ஆனால் அந்த முயற்சியும் தோல்வியடைந்தது. காங் கிரஸ் தலைவர் பதவியிலிருந்தும் செயற்குழுவின் உறுப்பினர் பொறுப்பிலிருந்தும் விலகிக் கொள்வதாக போஸ் அறிவித்தார்.

அவருக்குப் பதிலாகத் தலைவர் பொறுப்பை யார் வகிப் பது என்பதைப் பற்றி நீண்ட விவாதங்கள் நடத்திய பிறகு காங்கிரஸ் தலைவர்கள் இராஜேந்திர பிரசாத்தை முடிவு செய்தார்கள். நேரு, ஆஜாத், படேல் உட்பட சில பெயர்கள் முதலில் சொல்லப்பட்டன. ஆனால் நேரு தலைவர் பொறுப்பை ஏற்றுக் கொள்ள முடியாதென்று உறுதியாக மறுத்தார். ஆஜாத் தனக்கு உடல் நலமில்லை என்று கூறிவிட்டார். படேல் பெயரைக் கூறிய பொழுது தீவிரமான எதிர்ப்பு ஏற்பட்டது. அவர் உணர்ச்சியற்றவர், அன்புணர்ச்சி இல்லா தவர், அதிகார வெறி கொண்டவர் என்று பலர் அவரைப் பற்றிக் கருதினார்கள்.

பிரசாத் காங்கிரஸ் செயற்குழுவை அமைப்பதில் ஈடுபட் டிருந்த பொழுது நேரு அதில் உறுப்பினராக இருக்க மறுத் தார். காங்கிரஸ் தலைமையில் சிறிது காலத்துக்காவது இல்லா திருப்பது தனக்கும் பொதுவாக மற்ற எல்லா விவகாரங் களுக்கும் அவசியம் என்று கருதுவதாக விளக்கினார். காங்கி ரஸ் தலைவர்களுக்கிடையே ஏற்பட்ட சூழ்ச்சிகளும் தகராறு களும்—அவை அதிகரித்ததில் போசின் பங்கு இல்லை என்று சொல்ல முடியாது—நேருவுக்கு மனச் சோர்வைக் கொடுத் தன. அவர்களுக்கிடையே அடிப்படையான பிரச்சினைகளில் வேறுபாடுகள் இருக்க முடியும், ஆனால் ஒரு அரசியல் பாதையை வகுப்பதில் தனிப்பட்ட விருப்பு, வெறுப்பு

களை நுழைப்பது அரசியல்வாதிகளுக்கு அழகல்ல என்று நேரு கருதினார். காங்கிரசில் சாதாரண உறுப்பினராக இருந்தால், பல்வேறு கோஷ்டியினரின் பிரதிநிதிகளோடு பேசிப் பொது உடன்பாட்டை உருவாக்க முடியும், அவர்களுடைய வேறு பாடுகளைத் தீர்த்து கட்சியில் ஒற்றுமையை ஏற்படுத்த உதவ முடியும் என்று அவர் கூறினார்.

இரண்டாவது உலக யுத்தம் தொடங்கிய பொழுது நேரு, குவோமின்டாங் தலைவர்களின் அழைப்பின் பேரில் சீனாவின் தென்மேற்குப் பகுதியில் யாங்டிசி நதியின் மீது அமைந்திருக்கும் சுங்கிங் துறைமுக நகரத்தில் இருந்தார்.

இப்பொழுது அங்கே போகலாமா என்று அவர் மிகவும் தயங்கினார். அவருடைய நண்பர்களில் ஒருசிலர் பிரயாணத் தைத் தள்ளிப் போடுமாறு கூட ஆலோசனை கூறினார்கள். எந்த நேரத்திலும் ஐரோப்பாவில் யுத்தம் வெடிக்கலாம், அந்த யுத்த நெருப்பு இந்தியத் துணைக் கண்டத்தையும் பற்றிக் கொள்வது தவிர்க்க முடியாதது, அப்படிப்பட்ட நிலைமையில் இந்தியாவில் தான் இருப்பது அவசியம் என்று சிந்தித்தபடியால் அந்தப் பயணத்துக்குச் சரியான நேரத்தைத் தேர்ந்தெடுக்கவில்லை என்று நேருவும் நினைத்தார். ஆனால் சீனாவில் என்ன நடைபெறுகிறது என்று பார்க்க வேண்டும் என்ற ஆசை அதிகமாக இருந்தது. மேலும் அவர் குவோ மின்டாங் கட்சியுடனும் ஜப்பானியர்களுக்கு எதிரான போராட் டத்தில் அவர்களோடு ஒத்துழைக்க முன்வந்த சீனக் கம்யூ னிஸ்டுகளோடும் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டு மென்று விரும்பினார்.

சியாங்கேஷேக் மற்றும் இதர குவோமின்டாங் கட்சித் தலைவர்களோடு நடத்திய பேச்சுவார்த்தைகளில் இந்தியாவுக் கும் சீனாவுக்கும் நெருக்கமான ஒத்துழைப்பு அவசியம் என்ற கருத்தை அவர் வளர்த்துக் கொண்டார். எதிர்கால இந்திய-சீன உறவுகளைப் பற்றித் தன்னுடைய கருத்துக்களைக் குவோ மின்டாங் தலைவர்களும் அங்கீகரிப்பதாக அவருக்குத் தோன்றி யது. ஆனால், என்னுடைய அபிப்பிராயத்தில் முழு சுதந் திரத்துக்கும் டொமினியன் அந்தஸ்துக்கும் மிகவும் சிறிய வேறுபாடுதான் இருக்கிறது, எனவே பிரிட்டிஷ் அரசாங்கம்

இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தைக் கொடுக்க முன்வந்தால் இந்தியர்கள் அதை மறுத்துவிடக் கூடாது என்று சியாங்கேஷேக் சிபாரிசு செய்தபொழுது அந்த எண்ணம் ஓரளவுக்கு சேதமடைந்தது. குவோமின்டாங் கட்சியில் நிலவுகின்ற விசேஷமான ஜனநாயகத்தைப் பற்றி சியாங் கேஷேக் ஆர்ப்பாட்டமாகப் பேசிய பொழுது நேரு தம்முடைய சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டார். அவர் கலந்து கொண்ட சில கூட்டங்களிலும் பேரவைகளிலும் இருந்த சூழ்நிலையை அவர் உடனே நினைத்துப் பார்த்தார். சியாங் கேஷேக்கின் பெயரை உச்சரித்தவுடன் யாரோ உத்தரவிட்டதைப் போல அங்கேயிருந்த எல்லோருமே எழுந்து நின்றார்கள். அவர்கள் இப்படி அடிக்கடி நிற்க வேண்டியிருந்தது. அது ஒரு வேடிக்கையான காட்சி என்று நேரு நினைத்தார்.

குவோமின்டாங் தலைவர்களோடு பேச்சு வார்த்தைகள் நடத்திய பிறகு சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களைச் சந்திப்பதற்காக சீனாவின் வடமேற்குப் பகுதிக்குப் பிரயாணம் செய்வது நேருவின் திட்டம். ஆனால் ஹிட்லர் போலந்தின் மீது படையெடுத்திருப்பதன் தொடர்பான விவாதங்களுக்காக உடனே இந்தியாவுக்குத் திரும்புமாறு காங்கிரஸ் தலைவர் இராஜேந்திர பிரசாத்திடமிருந்து நேருவுக்குத் தந்திவந்தது.

அவர் 1939 செப்டெம்பர் 9ந் தேதியன்று இந்தியாவுக்கு வந்தார். உடனே காங்கிரஸ் செயற்குழுவின் அவசரக் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

செப்டெம்பர் முதல் தேதியன்று ஹிட்லரின் துருப்புகள் போலந்தின் மீது படையெடுத்தன. பிரிட்டனும் பிரான்சும் போலந்துடன் செய்துகொண்ட நட்புறவு ஒப்பந்தத்தின்படி அந்த இரு நாடுகளும் உடனடியாகப் போலந்தின் உதவிக்குப் போயிருக்க வேண்டும். ஆனால் ஹிட்லருடன் மறுபடியும் பேரம் செய்து கொள்ளலாம் என்ற நோக்கத்தில் ''சமாதானப்படுத்துபவர்கள்'' தாமதித்தார்கள். தங்களோடு பேச்சுவார்த்தை நடத்தும் உத்தேசம் பாசிஸ்ட் ஜெர்மனிக்குக் கிடையாது, ஹிட்லரின் ஆக்கிரமிப்புத் திட்டங்கள் தங்களுக்கும் ஆபத்தானவை என்று கடைசியாகப் புரிந்து கொண்ட பிறகு செப்டெம்பர் 3ந் தேதியன்று பிரிட்டிஷ், பிரெஞ்சு அரசாங்கங்கள் ஜெர்மனிக்கு எதிராக யுத்தத்தை அறிவித்தன.



நேரு மகள்
இந்திராவுடன்
லண்டனில் *(1938)*



ஸ்பானிஷ் குடியரசை ஆதரித்து லண்டன் டிரஃபால்கர் சதுக்கத்தில் நடைபெற்ற கூட்டத்தில் *(1938)*



ருவும் என்.கே. ரேரிஹும் குலு பள்ளத்தாக்கில் (1942)



காந்திஜியுடன் உரையாடல் (டில்லி, *1945*)



செங்கோட்டைக்கு எதிரே உள்ள சதுக்கத்தில் பொதுக்கூட்டம்

சுபாஷ் சந்திர போஸ்





நருவும் காந்திஜியும்



வல்லபாய் படேல்



நேருவும் அபுல் கலாம் ஆஜாதும்



ந்திய யூனியனின் அரசியலமைப்புச் சட்டப் புத்தகத்தில்
ரு கையொப்பமிடுதல்



ருவும் ஹோசிமின்னும் (டில்லி, 1954, நவம்பர்)



அங்கோருக்குப் பக்கத்திலுள்ள ஆலயத்தில். கம்போடியா *(1954)*



;வும் இந்திரா காந்தியும் சோவியத் தொழிற்சாலையில் (ஜூன் 1955)



ாய் உருக்குத் தொழிற்சாலையில் திறந்த அடுப்பு உலைக்கு முன்னால்



நேருவும் லியனீத் பிரேஷ்னெவும் (டில்லி, 1961, டிசம்பர்)



நேருவும் யூரி ககாரினும் (டில்லி, 1961)

நேருவும் நாஸரும்





வகர்லால் நேருவும் இந்திரா காந்தியும்



சேவாகிராம ஆசிரமத்தில் காந்திஜி



அந்நியத் துணி பகிஷ்கரிப்பு இயக்கத்தை ஒட்டி கைத்தறிக்குப் புத்துயிரூட்டுதல்

பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் சேம்பெர்லென் இதை அறிவித்த சில மணி நேரத்தில் வைசிராய் லின்லித்கோ பிரபு காங்கிரஸ் தலைவர்களையோ, இந்திய நாடாளுமன் றத்தின் உறுப்பினர்களையோ அல்லது மாகாண அரசாங் கங்களையோ கலந்து ஆலோசிக்காமல் இந்தியாவும் ஜெர் மனிக்கு எதிராக யுத்தம் செய்யும் என்று அறிவித்தார்.

காங்கிரஸ் செயற்குழுவின் உறுப்பினர்கள் யுத்தத்தைப் பற்றி காங்கிரசின் அணுகுமுறையை முடிவு செய்வதற்காக பம்பாய் மாகாணத்தில் வார்தா நகரத்தில் கூடினார்கள். இந்தியா யுத்தத்தில் கலந்து கொள்ளக் கூடாது என்று காங்கிரசை நம்பவைப்பதற்கு காந்தி மறுபடியும் முயற்சி செய்தார். ''ஒரு காரியத்துக்கு அஹிம்சையைப் பயன்படுத் தும் பொழுது அது மிகமிக மெதுவாகவே பலன் கொடுக் கிறது என்பது எனக்குத் தெரியும். ஆனால் பொது இலட் சியத்தை அடைவதற்கு அது மிக உறுதியான வழியே என் பதை அனுபவம் எனக்கு போதித்திருக்கிறது. ஆனால் ஆயுதங் களைத் தாங்கிச் சண்டை போடுவது இந்தியாவுக்கோ அல்லது உலக முழுமைக்குமோ சுதந்திரத்தைக் கொடுக்காது. நியா யத்தை நிலைநிறுத்துவதற்காகக் கூட வன்முறையைப் பயன் படுத்துகின்ற காலம் அநேகமாக முடிந்து விட்டது.'' சமா தானவாதம் அவரை வெகு தூரம் இழுத்துச் சென்றது. ஹிட்லர் ஜெர்மனியை எதிர்த்து யுத்தம் செய்ய வேண்டாம், ''ஆன்மிக பலத்தைக்'' கொண்டு அதை எதிர்த்து நில்லுங் கள் என்று பிரிட்டிஷ் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். அழைப்பின் பேரில் கூட்டத்தில் கலந்து கொண்ட போஸ் பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராக உடனே சட்ட மறுப்புப் போராட்டம் தொடங்க வேண்டும் என்றார். நேரு இருவரி டமிருந்தும் மாறுபட்ட கருத்தைக் கூறினார். இந்தியர்கள் பாசிசத்தை எதிர்த்து யுத்தத்தில் ஈடுபட வேண்டும், ஆனால் ஏகாதிபத்தியம் தங்களைப் பயன்படுத்திக் கொள்ள அனு மதிக்கக் கூடாது, இந்தியாவுக்கு வெளியிலுள்ள ஆட்சியதி காரத்தால் சுமத்தப்படும் யுத்தப் பொறுப்பை இந்தியா ஏற்றுக்கொள்ள முடியாது, இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுக் கப்பட்டால்தான் பாசிசத்துக்கு எதிரான யுத்தத்தில் இந்தியா பிரிட்டனுக்கு உதவி செய்ய முடியும் என்று நேரு கூறினார்.

செயற்குழுவில் நேருவின் கருத்து அங்கீகரிக்கப்பட்டது.

இந்திய தேசிய காங்கிரஸ் பாசிஸ்ட் ஆக்கிரமிப்பையும்· நாகரிக உலகத்தில் நடத்தையைப் பற்றிய கோட்பாடுகள் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட அளவுகோல்களை அது மீறியிருப்பதையும் கண்டிக்கிறது. இந்திய மக்கள் பல வருடங்களாக உறுதியாக எதிர்த்துப் போராடி வருகின்ற ஏகாதிபத்தியம் பலமடைந்திருப்பதைத்தான் பாசிசத்திலும் நாஜிசத்திலும் பார்க்கிறது, அவற்றை எதிர்த்து யுத்தம் செய்கின்ற முடிவை இந்தியாவின் மீது சுமத்துவதற்கு எந்த அந்நிய அரசுக்கும் உரிமை கிடையாது என்று நேருவால் தயாரிக்கப்பட்ட தீர்மானத்தை செப்டெம்பர் 14ந் தேதியன்று செயற்குழு நிறைவேற்றியது. தங்களுடைய பலத்தை ஏகாதிபத்திய நோக்கங்களுக்குப் பயன்படுத்துவதை இந்தியர்கள் அனுமதிக்க முடியாது, கிரேட் பிரிட்டன் ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்கும் அதை விஸ்தரிப்பதற்கும் போராடுகிறது என்றால் அது உடனடியாகத் தன்னுடைய சொந்த உடைமைகளில் ஏகாதிபத்தியத்துக்கு முடிவு கட்ட வேண்டும், இந்தியாவில் முழு ஜனநாயகம் ஏற்படுவதற்கு உதவி செய்ய வேண்டும், அப்பொழுதுதான் இந்திய மக்கள்—வெளியிலிருந்து எவ்விதமான தலையீடும் இல்லாமல்—அரசியல் நிர்ணய சபையின் மூலம் தங்களுடைய சொந்த அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரித்து சுயநிர்ணய உரிமையையும் சுதந்திரமாகத் தங்களுடைய கொள்கையை முடிவுசெய்கின்ற உரிமையையும் பெற முடியும் என்று அத்தீர்மானம் கூறியது. ஒரு சுதந்திரமான, ஜனநாயக இந்தியா ஆக்கிரமிப்புக்கு எதிராகப் பரஸ்பர பாதுகாப்புக்காகவும் பொருளாதார ஒத்துழைப்புக்காகவும் மற்ற சுதந்திர நாடுகளோடு மகிழ்ச்சியோடு இணைந்து பாடுபடும். சுதந்திரம் மற்றும் ஜனநாயகத்தை உண்மையிலேயே அடிப்படையாகக் கொண்ட, மொத்த உலகத்தின் அறிவுவளத்தையும் செல்வ வளங்களையும் மனிதகுலத்தின் முன்னேற்றத்துக்கும் நல்வாழ்க்கைக்கும் உபயோகப்படுத்துகின்ற உலக அமைப்பை உருவாக்குவதில் உதவி செய்வதற்கு இந்தியா தயாராக இருக்கிறது. ஜனநாயகம், ஏகாதிபத்தியம், எதிர்காலத்தில் ஏற்படப்போகும் புதிய அமைப்பு ஆகியவற்றின் தொடர்பாகத் தன்னுடைய நோக்கங்கள் யாவை என்பதையும் குறிப்பாக இந்தியாவைப் பொறுத்தவரை இந்த நோக்கங்கள் எவ்விதம் பின்பற்றப்படும், இன்றைய கட்டத்தில் அமுல்நடத்தப்படும் என்

பதையும் பிரிட்டிஷ் அரசாங்கம் பகிரங்கமாக அறிவிக்க வேண்டும் என்று காங்கிரஸ் வற்புறுத்தியது. தீர்மானத்தின் கடைசியில் இந்திய மக்கள் எல்லா விதமான உள்நாட்டு மோதல்களையும் விவாதங்களையும் நிறுத்திவிட வேண்டும் என்றும் மிகவும் ஆபத்தான இந்த சமயத்தில் தம் இலட்சியங்களை உணர்ந்து விரிவான சுதந்திரத்தை அடைந்த உலகத்தில் இந்தியாவின் சுதந்திரத்தைச் சாதிக்கும் உறுதியில் ஒன்றுபட்டு தேசம் என்ற ஒற்றுமையைக் காத்துத் தயாராக இருக்குமாறு வற்புறுத்தப்பட்டிருந்தது.

ஜவகர்லால் தயாரித்த தீர்மானம் காந்தியைக் கூடக் கவர்ந்தது. அதில் சொல்லப்பட்டிருந்த பல பிரேரணைகளை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றபோதிலும் அது எழுதப்பட்டிருந்த துல்லியமான, தர்க்கரீதியான, உணர்ச்சிகரமான முறையை அவர் பாராட்டத் தவறவில்லை. ஒரு கலைஞர், தீவிரமான தேசபக்தர், மனிதாபிமானியும் சர்வதேசியவாதியுமான ஒருவர் அந்தத் தீர்மானத்தைத் தயாரித்திருக்கிறார் என்று காந்தி பெருமையோடு கூறினார்.

இதற்கிடையில் இந்தியாவின் மீது தன் பிடியைப் பலப்படுத்திக் கொள்வதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னாலியன்ற எல்லாவற்றையும் செய்து கொண்டிருந்தது. முதல் உலக யுத்தத்தின் போது செய்ததைப் போல இப்பொழுதும் இந்தியாவின் மனித மற்றும் பொருளாயத செல்வ வளங்களை விரிவான அளவில் உபயோகிப்பதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் திட்டமிட்டது. அதற்கு பலாத்காரத்தின் மூலமாக இந்தியாவைக் காலனியாதிக்க நுகத்தடியின் கீழ் வைத்திருக்க வேண்டும். 1935ம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்துக்குத் ''துணையாக'' ''நாட்டிற்குள் அமைதி மற்றும் ஒழுங்கைப் பாதுகாக்க உதவியாக'' வைசிராய்க்கும் மாகாண கவர்னர்களுக்கும் விசேஷ அதிகாரங்களைக் கொடுக்கும் சட்டத்தைப் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் நிறைவேற்றியது. ''இந்தியாவின் பாதுகாப்பைப்'' பற்றியும் ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. ''இந்தியாவின் பாதுகாப்புக்கும் ஆபத்தேற்படுத்துவதாகக்'' கருதப்படுகின்ற எவ்விதமான நடவடிக்கையைச் செய்பவர்கள் மீதும் இந்தச் சட்டத்தின் மூலம் அதிகாரிகள் கடுமையாக நடவடிக்கை எடுக்கலாம்.

இதைத் தொடர்ந்து சென்னையில் பெருந்திரளான மக்கள்

ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. இந்தியாவில் தேசிய அரசாங்கத்திடம் ஆட்சியை ஒப்படைக்கக் கோரி பம்பாயில் 90,000 தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தார்கள். யுத்தம் முடிவடைந்த பிறகு இந்தியாவுக்குப் புதிய அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரிப்பதற்காக எல்லா அரசியல் கட்சிகள், மதப் பிரிவுகள், சுதேச மன்னர்கள் ஆகியோரது பிரதிநிதிகளைக் கொண்ட மாநாடு நடத்தப்படும் என்று தெளிவில்லாத வாக்குறுதிகளைப் பிரிட்டிஷ்காரர்கள் கூறினார்கள். ஜெர்மனிக்கு எதிராக பிரிட்டன் நடத்துகின்ற யுத்தத்தின் நோக்கங்களைப் பற்றி ஒரு வார்த்தை கூட இடம் பெறவில்லை.

செப்டெம்பர் மாதக் கடைசியில் வைசிராய் லின்லித்கோ பிரபு ''முழுமையாகவும் திறந்த உள்ளத்தோடும் கருத்துப் பரிமாற்றத்துக்காக'' முக்கியமான எல்லா இந்திய அரசியல் வாதிகளையும் அழைத்தார். நேரு தனக்கே உரிய உணர்ச்சி வசத்தோடு சென்ற செயற்குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தின் சாராம்சத்தை எடுத்துக் கூறிக் கொண்டிருக்கும் பொழுது வைசிராய் இடைமறித்துப் பேசினார்.

''மிஸ்டர் நேரு, கொஞ்சம் மெதுவாகப் பேசுங்கள்'' என்று கிண்டலாகக் கூறினார். ''என்னுடைய ஆங்கிலோ-சாக்சனிய மூளை மெதுவாகத்தான் புரிந்து கொள்ளக் கூடியது. உங்களுடைய வேகமான சிந்தனையோடு அது போட்டிபோட முடியாது'' என்றார்.

''முழுமையாகவும் திறந்த உள்ளத்தோடும்'' நடைபெற்ற கருத்துப் பரிமாற்றத்தினால் ஒரு பலனும் ஏற்படவில்லை.

1940 மார்ச்சில் காங்கிரஸ், முஸ்லிம் லீக் மாநாடுகள் ஒரே சமயத்தில் இராம்காரிலும் லாகூரிலும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னர் காந்தி முஸ்லிம் லீகின் தலைவரான ஜின்னாவோடு பேச்சு வார்த்தைகளை நடத்தினார். இந்திய தேசத்தை ஒன்றுபடுத்தும் நோக்கத்தோடு இரு கட்சிகளுக்கிடையிலும் ஒத்துழைப்பின் அவசியத்தை ஜின்னாவுக்குப் புரியவைப்பதற்கு காந்தி அரும்பாடுபட்டார். லண்டன் தையற்காரர்களால் தைக்கப்பட்ட அழகான சூட் அணிந்து வலது கண்ணில் ஒற்றைக் கண்ணாடியோடு தோற்றமளித்த ஜின்னா காந்தியிடம், இந்திய தேசம்

என்று நீங்கள் சொல்லும் பொழுது எதைப் பற்றிப் பேசுகிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை, ஏனென்றால் அப்படி ஒன்று இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை என்று உணர்ச்சியில்லாமல் கூறினர்.

இந்தியத் துணைக்கண்டத்தில் தனியாக ஒரு முஸ்லிம் அரசை ஏற்படுத்துவதற்கு பிரிட்டிஷ்காரர்கள் தூண்டுதலோடு ஒரு சாமர்த்தியமான திட்டம் முன்வைக்கப்பட்டது. அதற்கு பாகிஸ்தான் என்று பெயர் வைப்பதென்று முடிவு செய்யப் பட்டது. இனி பாகிஸ்தானை ஏற்படுத்தப் போராடுவதே எங்கள் முக்கிய நோக்கம் என்று லாகூரில் முஸ்லிம் லீக் அறிவித்தது.

முஸ்லிம் காங்கிரஸ்காரரும் இந்து-முஸ்லிம் ஒற்றுமையை உறுதியாக ஆதரிப்பவருமான ஆஜாதுக்கு எழுதிய கடிதத்தில் அகண்ட இஸ்லாமியம் என்ற கருத்துக்குப் புத்துயிர் கொடுத்தது முஸ்லிம் லீக் மட்டுமல்ல, பிரிட்டிஷ் அரசாங்கமும்தான் என்று நேரு எழுதினர். ''1914ம் வருடத்திலும் அதற்குப் பிறகும் அகண்ட இஸ்லாமியம் என்ற கருத்து ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்தியாக இருந்தது. ஆனல் இன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஆதரிப்பதற்கு இந்தக் கருத்து உபயோகிக்கப்படுகிறது. இது இந்தியாவின் தேசிய ஒற்றுமையை ஓரளவுக்கு உடைக்கிறது.'' அகண்ட இஸ்லாமியம் என்ற கருத்து இந்தப் புதிய கட்டத்தில். திட்டவட்டமான ஏகாதிபத்திய ஆதரவுத் தன்மையைக் கொண்டிருப்பதை அவர் மேலும் வலியுறுத்தினர்.

மார்ச் மாதத்தில் இராம்காரில் நடை பெற்ற காங்கிரஸ் மாநாடு செயற்குழுவின் செப்டெம்பர் தீர்மானத்தை அங்கீகரித்தது. மக்களுக்குப் பொறுப்பான தேசிய அரசாங்கம் ஏற்படுத்தப்படவில்லை என்றால் சட்ட மறுப்புப் போராட்டத்தைத் தொடங்குவதென்று முடிவு செய்தது. இந்தியாவைப் பிரிப்பதற்கு அல்லது அதன் தேசிய ஒற்றுமையை அழிப்பதற்குச் செய்யப்படும் எந்த முயற்சியையும் காங்கிரஸ் உறுதியாக எதிர்க்கும் என்று தீர்மானம் சுட்டிக்காட்டியது. தனிநபர், கோஷ்டியினர் ஆகிய இரு தரப்பினருடைய முழுமையான வளர்ச்சிக்கும் வாய்ப்புக்களையும் அதிக முழுமையான சுதந்திரத்தையும் உத்தரவாதம் செய்கின்ற அரசியலமைப்புச் சட்டமே எப்பொழுதும் காங்கிரசின் நோக்கமாக இருந்து வந்

திருக்கிறது. அந்த அரசியலமைப்பில் சமூக அநீதிகள் மறைந்து இன்னும் அதிக நியாயமான சமூக அமைப்பு ஏற்படும்.

இந்த மாநாட்டில் காங்கிரஸ் தலைவராக ஆஜாத் தேர்ந் தெடுக்கப்பட்டார். அவர் காங்கிரஸ் செயற்குழுவை அமைத்த பொழுது கட்சியின் வெளிநாட்டுக் கொள்கையை மேலும் வளர்ப்பது மிகவும் முக்கியமானதென்று கருதினார். அப் படிப்பட்ட கொள்கையை உருவாக்குவதற்கும் அமுல்நடத் துவதற்கும் காங்கிரஸ்காரர்களில் யார் தகுதி உடையவர் என்ற பிரச்சினையைப் பற்றிச் சிந்திப்பதில் அவர் அதிகமான நேரத்தை வீணாக்கவில்லை. சர்வதேச விவகாரங்களைப் பற்றி நேருவைக் காட்டிலும் அதிகமான அறிவும் அனுபவமும் உடைய மற்ற அரசியல்வாதிகளை அவரால் கற்பனை செய்யக் கூட முடியவில்லை. இப்பொழுது செயற்குழுவில் சேருவதற்கு ஜவகர்லால் நேரு மறுக்கவில்லை. ஆஜாதிடம் அவருக்கு உண் மையான பிரியமிருந்ததும் அவருடைய மனிதாபிமானத் தையும் தேசிய விடுதலையில் அவரது ஈடுபாட்டையும் மதித்தது மட்டும் அதற்குக் காரணமல்ல. உலக யுத்தம் இந்தியாவில் முக்கியமான மாற்றங்களை ஏற்படுத்தப் போகிறது என்பதை வேறு எந்தத் தலைவரையும் காட்டிலும் நேரு இன்னும் சிறப்பான முறையில் புரிந்து கொண்டிருந்தார். யுத்தத்தின் முதல் கட்டத்தின் போது காலனி நாடுகளைப் பற்றி பிரிட்டிஷ் அரசாங்கம் கடைப்பிடிக்கும் பிற்போக்குத்தனமான கொள்கை சாம்ராஜ்யத்தில் அழிவுப் போக்குகளைப் பலப்படுத்துகிறது என்பதை அப்பொழுதே அவர் தெளிவாகக் கண்டார். கால் நூற்றாண்டுக்கு முன்பு நடந்ததைப் போன்றே, உலகத்தில் ஏற்படும் கொந்தளிப்புகள் இந்திய மக்களையும் பாதிக்கும், அவர்களுடைய தேசிய உணர்வை பெரிதும் வளர்க்கும்.

1940 மே 10ந் தேதியன்று பாசிஸ்ட் ஜெர்மனி பிரான்ஸ், பெல்ஜியம் மற்றும் ஹாலந்தின் மீது படையெடுத்த தினத் தன்று பிரிட்டனில் சேம்பெர்லென் அரசாங்கம் தோல்வி யடைந்தது. அரசர் புதிய மந்திரி சபையை அமைக்குமாறு வின்ஸ்டன் சர்ச்சிலைக் கேட்டுக் கொண்டார். கன்சர்வேடிவ் கட்சி, லிபரல் கட்சி மற்றும் லேபர் கட்சியின் பிரதிநிதி களடங்கிய கூட்டு மந்திரி சபையை அவர் அமைத்தார். யுத்தத்தின் முற்பொழுதில் லேபர் கட்சியின் உறுப்பினர்கள் இந்தியர்களின் சுதந்திரக் கோரிக்கைக்கு அனுதாபம் காட்டு

வதைப் போலத் தோன்றியது. எனவே லேபர் கட்சியின் தலைவரான கிளெமென்ட் அட்லி முக்கியமான பொறுப்பை (Lord Privy Seal) ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்தவுடன் புதிய பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு உடன்பாட்டுக்கு வர முடியுமென்று சில காங்கிரஸ்காரர்கள் நம்பத் தொடங்கினார்கள். ஜவகர்லால் அப்படி நினைக்கவில்லை. இந்தியாவை இழந்துவிட்டால் பிரிட்டன் ஒரு வல்லரசாக இருக்க முடியாது என்று வின்ஸ்டன் சர்ச்சில் பல முறை சொல்லியிருப்பதை அவர் சிறிதும் மறக்கவில்லை.

காங்கிரஸ் செயற்குழு ஜூலை மாதத்தில் பூனாவில் கூடியது. யுத்தம் முடிந்தவுடன் இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுக்கத் தயாராக இருப்பதாகவும் மக்களுக்குப் பொறுப்பான தேசிய அரசாங்கம் ஏற்படுவதைத் தடுக்கப் போவதில்லை என்றும் பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்தால் காங்கிரஸ் யுத்தத்தில் பிரிட்டனுக்கு உதவி செய்யத் தயாராக இருக்கிறது என்றும் வற்புறுத்துகின்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

காங்கிரஸ் செயற்குழுத் தீர்மானத்துக்கு சர்ச்சில் அரசாங்கத்தின் எதிர்மறையான பதிலை 1940 ஆகஸ்ட் 8ந் தேதியன்று வைசிராய் வெளியிட்டார். பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஒரு வேளை உடன்பாட்டுக்கு வர முடியும் என்ற கடைசி நம்பிக்கைகளும் மறைந்தன. காங்கிரசுக்கு அற்பமான சலுகைகளைத் தருவதற்குக் கூட பிரிட்டிஷ்காரர்கள் மறுத்தனர். ஏகாதிபத்தியத்தின் கூர்மையான நகங்கள் தொடர்ந்து இந்தியாவின் உடம்பை இன்னும் ஆழமாகக் கிழிக்கும் என்பதை இந்தப் பதில் காட்டுகிறதென்று நேரு கூறினார்.

இனிமேல் போராட்டத்தைத் தாமதப்படுத்த முடியாது. காங்கிரஸ் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கியது. நாட்டில் பரவலான கலவரங்கள் ஏற்படுமோ என்று காந்தி அஞ்சினார். எனவே அக்டோபர் 13ந் தேதியன்று வார்தாவில் நடைபெற்ற செயற்குழு காந்தியின் வற்புறுத்தல் காரணமாக, தனிநபர் சத்யாக்ரஹத்தோடு போராட்டத்தை நிறுத்திக் கொள்வதென்று முடிவு செய்தது. காந்தியின் சீடர்களில் முக்கியமானவரும் காந்தியின் உணர்ச்சியோடு ஒன்றியவருமான வினோபா பாவே முதல் சத்யாக்ரஹியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். செயற்குழுக் கூட்டம் முடிவடைந்து சில நாட்களுக்குப் பிறகு நாற்பத்தைந்து வயதான வினோபா,

வார்தாவுக்குப் பக்கத்திலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் யுத்தத்தை எதிர்த்து உணர்ச்சிகரமாகச் சொற்பொழிவாற்றினர். கூட்டம் முடிந்ததும் அவர் கைது செய்யப்பட்டார். காங்கிரஸ் தலைவர்களும் தீவிர உறுப்பினர்களும் பல்வேறு இடங்களில் சத்யாக்ரஹத்தைத் தொடங்கினர்கள்.

ஜவகர்லால் நவம்பர் மாதத் தொடக்கத்தில் சொந்த அலகபாத்தில் சத்யாக்ரஹம் செய்ய முடிவு செய்திருந்தார். ஊருக்குத் திரும்பும் வழியில் அவர் கோரக்பூருக்குச் சென்று விவசாயிகளைச் சந்தித்தார், அவர்கள் மத்தியில் சொற்பொழி வாற்றினர். அவர்களுடைய வேகத்தைப் பார்த்து மகிழ்ச்சி யடைந்தார். நாடு சுதந்திரமடைவது இனி தவிர்க்க முடியாதது என்ற நம்பிக்கை விவசாயிகளிடம் ஏற்பட்டிருந்தபடியால் தங்கள் துன்பங்களை யாராவது குறைக்க மாட்டார்களா என்று செயலற்ற முறையில் அவர்கள் இப்பொழுது காத்துக்கொண்டிருக்கவில்லை, வெளிநாட்டு மற்றும் உள்நாட்டு ஒடுக்குமுறைக்காரர்களை எதிர்த்துப் போராடத் தயாராகிவிட்டார்கள்.

நேரு அலகபாத்துக்குப் போய்ச் சேரவில்லை. அரசாங்க எதிர்ப்புப் பிரச்சாரம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு அக்டோபர் 30ந் தேதியன்று கோரக்பூர் ரயில் நிலையத்தில் கைது செய்யப்பட்டார்.

நீதிமன்ற விசாரணையின்போது நீதிபதியும் குற்றம் சாட்டப்பட்டவரும் தங்கள் இடங்களை மாற்றிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. நேரு தன் மீது குற்றமில்லை என்று வாதாடவில்லை. ''நீங்கள் விசாரணை செய்வதும் தீர்ப்பு வழங்கித் தண்டிக்கப் போவதும் லட்சோபலட்சக் கணக்கான இந்திய மக்களையே தவிர, என்னையல்ல. அகம்பாவமான சாம்ராஜ்யத்துக்குக் கூட அது மிகப் பெரிய வேலையே'' என்று நேரு நீதிபதியை நோக்கிக் கூறினர்.

அவருக்கு நான்கு வருட சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு டெராடுன் சிறைக்கு அனுப்பப்பட்டார். 1940க்குள் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை மீறியதாக இந்தியா முழுவதும் 30,000 நபர்கள்—அநேகமாகக் காங்கிரஸ் தலைவர்கள், தீவிர உறுப்பினர்கள் எல்லோருமே—கைது செய்யப்பட்டார்கள். காந்தி இந்தத் தடவை சத்யாக்ரஹத்தைத் தனிநபர் சட்ட மறுப்புப் போராட்டம் என்ற குறுகிய எல்லைக்குள்

கட்டுப்படுத்திவிட்டார். தலைவர்களும் கிடையாது. எனவே சத்யாக்ரஹம் பரவலாக நடைபெறவில்லை.

சுதந்திரமான வாழ்க்கையிலிருந்து—அந்த வாழ்க்கை ஆபத்தானதாகவும் மிக வேகமானதாகவும் ஆனால் சுவாரசியமானதாகவும் சம்பவங்களும் மக்களும் நிறைந்திருந்தாலும் கூட—ஒடுக்குமுறையான, ஒரேவிதமான, மனதை வருத்துகின்ற சிறை வாழ்க்கைக்கு மாறுவது சுலபமான காரியமல்ல. அது அவருடைய எட்டாவது சிறை அனுபவமாக இருந்தாலும் அது சுலபமான காரியமல்ல. முதலில் வரும் சில வாரங்களிலேயே சிறைக் கைதிக்கு எதைப் பற்றியுமே ஆர்வமில்லாத நிலை ஏற்பட்டு விடும். அதற்கு இடங்கொடுக்கக் கூடாது, இடம் கொடுத்துவிட்டால் அந்த நபரின் தசைநார்கள் பலவீனமடையும், சித்தம் சோர்வடையும், அறிவு மந்தமாகும்.

நேரு எப்பொழுதும் போல நடந்து கொண்டார். அவர் சிறையில் ஒவ்வொரு நாளும் காலையில் கடுமையான உடற் பயிற்சிகளைச் செய்வார். மணிக்கணக்காகக் கட்டாந்தரையைத் தோண்டித் தோட்டம் போடுவார். அந்தத் தரையில் காய்கறிச்செடிகளை அல்லது பூச்செடிகளை வளர்க்கப் பாடுபடுவார். மழைக் காலத்தில் இராட்டையில் நூல் நூற்பார். மாலை நேரங்களில் புத்தகங்களைப் படித்து அவற்றிலிருந்து குறிப்புகளை எழுதுவார்.

பாசிஸ்ட் ஜெர்மனி துரோகத்தனமான முறையில் சோவியத் யூனியன் மீது படையெடுத்த செய்தி 1941 ஜூன் கடைசியில்தான் சிறைகளுக்குக் கிடைத்தது. இதைக் கேட்டதும் ஜவகர்லால் மிகவும் கவலையடைந்தார். ஹிட்லரின் ஆக்கிரமிப்புப் படைகளை எதிர்த்து சோவியத் மக்கள் நடத்திக் கொண்டிருந்த வீரஞ்செறிந்த யுத்தத்தை அவர் மிகவும் அக்கறையோடு கவனித்து வந்தார், அவர்கள் வெற்றியடைய வேண்டும் என்று இதயபூர்வமாக விரும்பினார். யுத்தத்தில் சோவியத் யூனியன் இழுக்கப்பட்டிருப்பது அதன் தன்மையைத் தீவிரமாக மாற்றிவிட்டது என்பதைப் புரிந்து கொண்டார். ஏகாதிபத்திய கோஷ்டிகள் தமது முரண்பாடுகளை ஆயுதபலத்தைக் கொண்டு தீர்ப்பதற்கு முயற்சிக்கும் உக்கிரமான சண்டை என்ற நிலையிலிருந்து யுத்தம் கடைசியாக மாறிவிட்டது. அது உண்மையான பாசிஸ்ட் எதிர்ப்பு,

விடுதலை மற்றும் நியாயமான குறிக்கோள்களுக்காக நடை பெறுகின்ற யுத்தமாக மாறிவிட்டது. இந்தியாவில் நேர்மை யான உள்ளங்களைக் கொண்ட எல்லோரும் சோவியத் யூனிய னுக்கு ஆதரவாக இருந்தார்கள். பாசிசத்தை அழிக்கக் கூடிய ஒரே சக்தி சோவியத் யூனியன்தான் என்று அவர்கள் கருதி ஞர்கள். தாகூர் மரணப் படுக்கையிலிருந்த பொழுது கூட, ஜெர்மன்-சோவியத் போர்முனைச் செய்திகளைப் பற்றியே கடைசி வரை கேட்டுக் கொண்டிருந்தார். ''ருஷ்யா வெற்றிய டைந்து விட்டால் எல்லோரையும் காட்டிலும் நான் அதிக மான மகிழ்ச்சி அடைவேன்'' என்று அவர் திரும்பத் திரும்பக் கூறினுர் என்பதை இதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு தாகூரின் உறவினர்களிடமிருந்து நேரு தெரிந்து கொண்டார்.

1941 டிசம்பர் 4ந் தேதியன்று நேருவும் மற்ற காங் கிரஸ்காரர்களும் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார் கள். ஜப்பானேடு யுத்தம் ஏற்படப்போவதால் அந்த யுத்தத் தில் காங்கிரஸ்காரர்களின் ஆதரவைப் பெறுவதற்காக அர சாங்கம் தண்டனைக்காலம் முடிவதற்குள் காங்கிரஸ் தலைவர் களை விடுதலை செய்தது. அதற்கு முன்பே ஜப்பான் இந்தோ-சீனவைப் பிடித்துவிட்டது. அடுத்தபடியாக பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடு மற்றும் ஹாலந்தின் காலனிகளை ஜப்பான் கைப்பற்றக் கூடிய ஆபத்து ஏற்பட்டிருந்தது.

1941 டிசம்பர் 7ந் தேதியன்று பெர்ள் ஹார்பர் துறை முகத்திலிருந்த அமெரிக்கப் போர்க் கப்பல்களைத் திடீர் விமானத் தாக்குதலில் ஜப்பான் அழித்தது. 1942 பிப்ரவரி 15ந் தேதியன்று ஜப்பானியப் படைகளிடம் சிங்கப்பூர் வீழ்ச்சி யடைந்தது. மார்ச் 8ந் தேதியன்று பர்மாவின் தலைநகர மான ரங்கூனைப் பிடித்து விட்டார்கள். அவர்கள் ஹாங்காங் கைக் கைப்பற்றினுர்கள், இந்தோனேஷியாவிலும் நியுகினியா தீவுகளிலும் ஜப்பானியப் படைகள் இறங்கின. வங்காள விரிகுடாவில் ஜப்பானியப் போர்க் கப்பல்கள் மென்மேலும் அதிகமாகக் காணப்பட்டன. உலக யுத்தம் இப்பொழுது இந்தியாவின் எல்லைகளுக்கு வந்துவிட்டது.

யுத்தத்தில் இந்தியர்களின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு பிரிட்டிஷ்காரர்கள் விடாப்பிடியாக முயற்சி செய்தார்கள். தாக்குதல்களுக்கு ஆளாகித் தங்கள் சுதந்திரத்துக்காகப் போர் புரிந்து கொண்டிருக்கும் மக்களினங்களிடம் காங்கிரஸ்காரர்

கள் தமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்; ஆனால் பர்தோலியில் நடைபெற்ற மாநாட்டில் தங்களுடைய பழைய நிலையைத்தான் உறுதிப்படுத்தினார்கள். சர்ச்சில் இந்தியாவிடமிருந்து வேறு எந்த பதிலை எதிர்பார்க்க முடியும்? 1941 ஆகஸ்டில் அமெரிக்க ஜனாதிபதி பிராங்க்ளின் ரூஸ்வெல்ட்டும் சர்ச்சிலும் அட்லாண்டிக் சாசனத்தில் கையெழுத்திட்டார்கள். உலக மக்களினங்கள் தாங்கள் வாழவிரும்பும் அரசாங்க முறையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையை அமெரிக்காவும் கிரேட் பிரிட்டனும் மதிப்பதாகவும் அரசுரிமையும் சுயநிர்வாகமும் பலாத்காரமாகப் பறிக்கப்பட்டிருக்கும் நாடுகளுக்கு அவை திரும்பக் கொடுக்கப்படுவதைக் காண விரும்புவதாகவும் அந்தச் சாசனத்தில் கூறப்பட்டிருந்தது. ஆனால் இந்தச் சாசனத்துக்கும் இந்தியாவுக்கும் சம்பந்தம் கிடையாதென்று செப்டெம்பர் மாதத்தில் சர்ச்சில் தெரிவித்தார்.

ஜப்பானிய இராணுவ வெற்றிகள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அழிக்கப்படும் என்று பயமுறுத்தியபடியால் ஆங்கில-இந்திய உறவுகளில் ஏற்பட்டிருந்த நெருக்கடியைப் போக்குவதற்கு இன்னும் ஒரு முயற்சியைச் செய்யுமாறு சர்ச்சிலை அவை நிர்ப்பந்தித்தன. பிரபலமான பிரிட்டிஷ் ராஜியவாதியும் சோவியத் யூனியனுக்கு பிரிட்டனின் முன்னாள் தூதருமான ஸ்டாஃபோர்டு கிரிப்ஸ் இந்தியாவிலிருக்கும் எல்லா அரசியல் கட்சிகள் மற்றும் மதப் பிரிவுகளின் தலைவர்களோடும் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக இந்தியாவுக்குச் செல்வார் என்று ரங்கூன் வீழ்ச்சியடைந்த மூன்று நாட்களுக்குப் பிறகு சர்ச்சில் நாடாளுமன்றத்தில் அறிவித்தார்.

மார்ச் 22ந் தேதியன்று கிரிப்ஸ் டில்லிக்கு வந்து சேர்ந்தார். அவர் ''பிரகடனம்'' என்ற ஆர்ப்பாட்டமான பெயரில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரேரேபணைகளைக் கொண்டு வந்தார். இவை இந்தியாவின் எதிர்கால அந்தஸ்தைப் பற்றியே முக்கியமாக எடுத்துக் கூறின. உலக யுத்தம் முடிவடைந்த பிறகு ''அரசரிடம் பொதுவான விசுவாசத்தால் யுனைட்டெட் கிங்டம் மற்றும் இதர டொமினியன்களோடு இணைக்கப்பட்ட டொமினியன் என்ற முறையில் ஒரு புதிய இந்திய யூனியனை'' உருவாக்குவதாக பிரிட்டிஷ் அரசாங்கம் வாக்குறுதியளித்தது.

கிரிப்ஸ் இந்த நகல் ''பிரகடனத்தை'' காங்கிரஸ் தலைவர்

களிடம் கொடுத்தார். அந்த வாசகத்தில் எந்தத் திருத்தமும் செய்ய முடியாது, அதை அப்படியே அங்கீகரிக்க வேண்டும் அல்லது நிராகரிக்க வேண்டும் என்று கூறினர்.

மார்ச் 29ந் தேதியிலிருந்து ஏப்ரல் 11 முடிய காங்கிரஸ் செயற்குழு சர்ச்சிலின் பிரேரணைகளை விவாதித்தது. ஏப்ரல் 2ந் தேதியிலிருந்து காங்கிரஸ் தலைவரான ஆஜாத் நாள் தோறும் மாலைநேரத்தில் கிரிப்சுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். பெரும்பான்மையான சந்தர்ப்பங்களில் நேருவும் இப்பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்டார். கிரிப்ஸ் கொணர்ந்த பிரேரேபணைகள் நேருவுக்கு மனச் சோர்வை ஏற்படுத்தின. ''நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருந்த காரணத்தால் ஸர் ஸ்டாஃபோர்டு கிரிப்சிடமிருந்து இன்னும் உருப்படியான பிரேரணைகளை நான் எதிர்பார்த்ததுதான் என்னுடைய ஏமாற்றத்துக்கு முக்கியமான காரணம்'' என்று நேரு பிற்காலத்தில் விளக்கினர். ''அந்தப் பிரேரணைகளில் பல குற்றங்குறைகள் இருந்தன, சுயநிர்ணயத்தை அங்கீகரித்ததும் கூட இந்தியாவின் எதிர்காலத்துக்கு ஆபத்தேற்படுத்துகின்ற வகையில் விலங்கிடப்பட்டுக் குறுக்கப்பட்டிருந்தது.'' இந்தப் ''பிரகடனம்'' பெரும்பாலான காங்கிரஸ் தலைவர்களிடம் இதேவிதமான சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் ஏற்படுத்தின.

ஏப்ரல் 11ந் தேதியன்று கிரிப்ஸ் சர்ச்சிலுக்கு அனுப்பிய தந்தியில் உடன்பாடு ஏற்பட முடியுமென்ற நம்பிக்கை சிறிது கூட இல்லாததால் பிரிட்டனுக்குத் திரும்புவதாகத் தெரிவித்தார். அதே தினத்தன்று, பிரிட்டிஷ் பிரேரணைகளை நிராகரிக்கின்ற தீர்மானத்தைக் காங்கிரஸ் செயற்குழு வெளியிட்டது. முஸ்லிம் லீக் உள்பட இந்தியாவின் மற்ற அரசியல் கட்சிகளும் கோஷ்டிகளும் இதே மாதிரியாகக் கூறிவிட்டன.

பிரிட்டிஷ் பிரேரேபணைகளைப் பற்றி காங்கிரஸ் தலைவர்களிடம் ஏற்பட்டிருந்த கருத்து ஒற்றுமை, ஜப்பாஞேடு யுத்தம் நடைபெறவிருந்த நிலைமைகளில் காங்கிரசின் செயல் தந்திரம் சம்பந்தமாக காந்தியோடு தனக்கிருந்த கருத்து வேற்றுமைகளைப் படிப்படியாக அகற்ற முடியும் என்ற ஓரளவு நம்பிக்கையை ஜவ்கர்லாலிடம் ஏற்படுத்தியது.

ஜப்பானிய இராணுவம் இந்தியாவில் வந்திறங்குமாஞல் இந்தியர்கள் அஹிம்சை என்னும் செயல்தந்திரத்திலிருந்து

ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிராக கொரில்லாப் போர் முறை என்ற செயல்தந்திரத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று ஜவகர்லால் கருதினர். அமைதியான பகிஷ்காரத்தால் முன்னேறிக் கொண்டிருக்கும் எதிரியைத் தடுத்து நிறுத்த முடியாது என்பதை அவர் நன்ருக அறிந்திருந்தபடியால் ஜப்பானியர்களே எதிர்க்குமாறு ஆஜாதின் ஆதரவோடு நாட்டு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். ''நான் யுத்தத்தை மிக அதிகமாக வெறுத்தேன். ஆனல் ஜப்பானியர்கள் இந்தியாவின் மேல் படையெடுக்கக் கூடுமென்ற நிலைமையைக் கண்டு நான் சிறிதும் அஞ்சவில்லை'' என்று அவர் பிற்காலத்தில் கூறினர். ''யுத்தம் எவ்வளவு அருவருக்கத் தக்கதாக இருந்தாலும் இந்தியாவுக்கு யுத்தம் வந்ததைப் பற்றி ஒரு அர்த்தத்தில் மகிழ்ச்சியடைந்தேன் என்று கூடச் சொல்ல வேண்டும். கோடிக் கணக்கான இந்திய மக்கள் மகத்தான உலுக்கலுக்கு உட்பட வேண்டும் என்று விரும்பினேன். அப்பொழுது தான் பிரிட்டன் அவர்கள் மீது சுமத்தியிருக்கும் சுடுகாட்டு அமைதியிலிருந்து அவர்களே வெளியே கொண்டு வர முடியும். அப்பொழுதுதான் அவர்கள் இன்றைய யதார்த்தத்தைச் சந்திக்கும்படி, கடந்த காலத்தை விட்டு வெளியே வரும்படி நிர்ப்பந்திக்கப்படுவார்கள்.''

காந்தி எதிர்பாராத வகையில் நேருவின் கருத்துக்களைத் தீவிரமாகக் குறைகூறினர். இவை தவருனவை என்று கருதுவதாக நேருவுக்குக் கடிதம் எழுதினர். ஜவகர்லாலின் கொள்கையைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளுமானல் காங்கிரஸ் செயற்குழுவின் அமைப்பு மாற்றப்பட வேண்டும் என்று அவர் எச்சரிக்கை செய்தார். நேரு தன்னுடைய சொற்பொழிவுகளில் கொரில்லாப் போராட்டத்தைப் பற்றிப் பேசக் கூடாதென்று அழுத்தமாக வற்புறுத்தினர்.

காந்தி ஜவகர்லாலிடமும் மற்ற காங்கிரஸ் தலைவர்களிடமும் தன்னுடைய கருத்துக்களை விளக்கினர். ஜப்பான் கிரேட் பிரிட்டனேடு யுத்தம் செய்துகொண்டிருக்கிறது, இந்திய மக்களோடு யுத்தம் செய்யவில்லை; இந்தியாவைத் தங்களால் பாதுகாக்க முடியவில்லை என்பதை உணர்ந்து பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை விட்டு வெளியேறப் போவது உறுதி; அப்பொழுது ஜப்பானிடமிருந்து அல்லது ஆக்கிரமிப்புச் செய்கின்ற வேறு நாட்டிடமிருந்து இந்தியா தன்னைப்

பாதுகாத்துக் கொள்ளும்; ஆனால் சுதந்திர இந்தியா முதல் காரியமாக உங்கள் மீது எங்களுக்கு எவ்விதமான பகைமையும் கிடையாதென்று ஜப்பானையும் மற்ற நாடுகளையும் நம்பச் செய்கின்ற முயற்சியில் ஈடுபடும். ஜப்பானியர்கள் இந்தியா வைத் தாக்கினால், பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை விட்டுப் போகவில்லை என்றால், இந்திய மக்கள் ஜப்பானியர்களுக்கு எதிராக ''அஹிம்சாபூர்வமான ஒத்துழையாமை'' முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும், பிரிட்டிஷ் துருப்புகளின் நடவடிக் கைகளுக்குக் குந்தகமேற்படுத்தக் கூடாது.

நேருவும் ஆஜாதும் காந்தியையும் அவரை ஆதரித்த படேலையும் உறுதியாக எதிர்த்தார்கள். ஆக்கிரமிக்கும் எந்த நாட்டையும் இந்திய மக்கள் தங்களிடமுள்ள எல்லாச் சாதனங்களையும் உபயோகித்து எதிர்க்க வேண்டும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளைப் போலவே ஜப்பானிய இராணுவ வெறியர்களும் இந்தியர்களுக்கு விரோதமானவர்களே என்று கூறினார்கள். ஜப்பானியர்கள் இந்தியாவுக்கு வந்துவிட்டால் இந்தியர்கள் நெடுங்காலமாக எதிர்பார்க்கும் சுதந்திரம் அவர் களுக்குக் கிடைக்காது என்பதோடு இன்னும் அதிகக் காட்டு மிராண்டித்தனமும் துரோகத் தன்மையும் கொண்ட புதிய ஒடுக்குமுறையாளர்களைக் கொண்டு வருவதும் சாத்தியம்.

இந்தக் கட்டத்தில் பெர்லின் வானொலியில் போஸ் நிகழ்த்திய உரையினால் ஏற்பட்ட கசப்பான உணர்ச்சியை நேருவினால் அகற்ற முடியவில்லை. 1941 ஜனவரியில் போஸ் தன் வீட்டிலிருந்து இரகசியமான முறையில் தப்பிச் சென்று விட்டார். பல மாதங்களாக அவரைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை. 1942 மார்ச்சில் பெர்லின் வானொலியில் அவருடைய பழக்கமான குரல் ஒலித்தது. பிரிட்டனின் எல்லா எதிரி களும், குறிப்பாக அச்சு நாடுகளும் இந்தியாவுக்கு நண்பர் களே; தெற்கு ஆசியாவிலும் தென்கிழக்கு ஆசியாவிலும் பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்து ஜப்பானியர்களின் படையெடுப்பை இந்திய மக்கள் ஆதரிக்க வேண்டும் என்று கூறினார். பிரிட்டிஷ் நுகத்தடியிலிருந்து இந்தியர்களை விடுதலை செய்வதற்கு வருகின்ற ஜப்பானியர்களை இந்தியர்கள் வர வேற்க வேண்டும் என்று டோக்கியோ வானொலி பிரச்சாரம் செய்து கொண்டிருந்தது. பாசிஸ்ட் ஜெர்மனியின் தலைநகரத்

திலிருந்து ஒலிபரப்பப்பட்ட போசின் உரை அதிலிருந்து சிறிதும் வேறுபட்டிருக்கவில்லை.

போசின் தேசபக்தியை நேரு சந்தேகிக்கவில்லை. ஆனால் ஜெர்மானிய பாசிசமும் ஜப்பானிய இராணுவவெறியும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைப் போலவே இந்தியாவுக்கு ஆபத்தானவை என்பதை ஏன் போஸ் புரிந்து கொள்ள வில்லை? இந்தச் சிறந்த மனிதர் பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராகக் கொண்டிருக்கும் குருட்டுத்தனமான வெறுப்பு இன்னும் எத்தகைய வீர சாகசங்களுக்கு அவரை இட்டுச் செல்லுமோ?

...1942 மார்ச்சில் நேரு குடும்பத்தில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி—இந்திராவின் திருமணம்—நடைபெற்றது. இந்திராவும் பெரோஸ் காந்தியும் 1941ம் வருடக் கோடை காலத்தில் இந்தியாவுக்குத் திரும்பிய உடனே திருமணம் செய்து கொள்ள நினைத்திருந்தார்கள். ஆனால் அப்பொழுது, ஜவகர்லால் சிறையிலிருந்தார். எனவே தகப்பனாரிடம் அதிகமான பாசம் வைத்திருந்த இந்திரா திருமணத்தைத் தள்ளிவைத்தாள். நல்ல வேளையாக அவர்கள் நீண்டகாலம் காத்திருக்க வேண்டிய அவசியமில்லாது போய்விட்டது. 1941 டிசம்பரில் ஜவகர்லால் விடுதலை செய்யப்பட்டார். அவருக்கு பெரோசை நெடுங்காலமாகத் தெரியும். எனவே அவர்கள் திருமணத்தைப் பற்றி அவருக்கு ஆட்சேபணையில்லை. ஆனால் எதிர்பாராத தடை ஏற்பட்டது. இந்திராவுக்கும் பெரோசுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது என்று அறிவித்த உடனே மதப்பற்றுடைய இந்துக்களிடமிருந்து ஆட்சேபணைகளும் எதிர்ப்புக்களும் பயமுறுத்தல் கடிதங்களும் வந்தன. மணமக்கள் வெவ்வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் என்பதே இவற்றுக்குக் காரணம். நேரு குடும்பத்தினர் இந்துக்கள், பெரோஸ் பார்சி மதத்தைச் சேர்ந்தவர். ஒவ்வொரு நாளும் மதப்பற்றுடைய இந்துக்களிடமிருந்து நூற்றுக் கணக்கான எதிர்ப்புக் கடிதங்கள் நேருவுக்கு வந்தன. இந்திரா மிகவும் வேதனையடைந்தாள். இந்தியா முழுவதுமே என் திருமணத்துக்கு எதிராகத் திரண்டிருப்பது போல சில சமயங்களில் எனக்குத் தோன்றுகிறது என்று அவள் நேருவிடம் கூறினாள்.

இப்பொழுது மகாத்மா காந்தியின் பெருந்தன்மையை

ஜவகர்லால் புரிந்து கொள்ள மறுபடியும் சந்தர்ப்பம் கிடைத்தது. அவர்களுக்கிடையே அடிக்கடி வேறுபாடுகள் ஏற்பட்டிருந்த போதிலும் காந்தி எப்பொழுதும் போலவே நேரு குடும்பத்தைப் பரிவோடு பேணிக்காத்து வந்தார். இந்தச் சிக்கல்களைப் பற்றித் தெரிந்து கொண்டவுடன் காந்தி அவர்களை ஆதரித்து உடனே அறிக்கை வெளியிட்டார். பல பத்திரிகைகள் அதை வெளியிட்டன. ''இந்தத் திருமண நிச்சயதார்த்தத்தைப் பற்றி என்னுடைய கருத்தை வெளியிடுமாறு கேட்டுக்கொள்ளும் அவதூறுன, அருவருப்பு நிறைந்த கடிதங்கள் ஏராளமாக எனக்கு வந்திருக்கின்றன. தனிப்பட்ட முறையில் பெரோசைப் பற்றி யாருக்குமே ஆட்சேபணையில்லை, அவர் பார்சி மதத்தைச் சேர்ந்தவர் என்பதுதான் அவர் செய்திருக்கும் ஒரே ''குற்றம்''. பெரோஸ் பல வருடங்களாக நேரு குடும்பத்தின் நெருங்கிய நண்பராக இருந்துவருகிறுர். ஐரோப்பாவில் கமலா நோய்வாய்ப்பட்டபொழுது அவர் இந்திராவை நன்கு கவனித்துக் கொண்டார். அவர்களுக்கிடையே அன்பு வளர்ந்தது இயற்கையே. அவர்களுடைய திருமணத்தை எதிர்ப்பது ஈவிரக்கமில்லாத செயல்'' என்று காந்தி இடித்துக் கூறினுர்.

காந்தியின் தலையீட்டுக்குப் பிறகு அருவிபோல வந்து கொண்டிருந்த ஆட்சேபக் கடிதங்கள் நின்றன. 1942 மார்ச் 26ந் தேதியன்று ஆனந்த பவனத்தில் அவர்களுடைய திருமணம் நடைபெற்றது.

நேரு உடலிலும் உள்ளத்திலும் களைத்துப் போயிருந்தார். மே மாதத்தின் முற்பாதியைத் தங்களோடு குலு பள்ளத்தாக்கில் கழிக்குமாறு இந்திரா வற்புறுத்தியபொழுது அவர் அதற்கு இசைந்தார்.

வடக்கு பஞ்சாபிலிருக்கும் குலு பள்ளத்தாக்கு பியாஸ் நதியின் ஓரமாகப் பல கிலோமீட்டர் தூரம் நீண்டிருக்கிறது. வெள்ளிப் பனி மூடிய உயரமான மலைச் சிகரங்கள் அதைச் சூழ்ந்திருக்கின்றன. காடுகள், பழத்தோட்டங்கள், நெல் வயல்கள் ஆகியவை கலந்திருக்கும் அந்தப் பசுமையான பள்ளத்தாக்கு இந்தியாவிலேயே மிக அழகான இடங்களில் ஒன்ருகும். ஆனுல் கண்கவர் அழகினுலும் இதமான பருவ நிலையினுலும் மட்டுமே அது புகழடைந்துவிடவில்லை. இந்திய மக்களின் தலைசிறந்த காப்பியமான **மகாபாரதம்** அங்கேதான் எழுதப்

பட்டதாகச் சொல்கிருர்கள்: அறிவு மிகுந்த வியாசர் இந்தச் சூழலில் பனை ஓலைகளில் சுமார் ஒரு லட்சம் பாடல்களில் இந்தக் காவியத்தைப் புனைந்தார் என்று சொல்லப்படுகிறது.

நகர் என்ற பெயருடைய சிறு கிராமத்தில் மலைக்குப் பக்கத்தில் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட இரண்டு மாடி வீடு இருக்கிறது. அந்த வீட்டின் உடைமையாளரை அந்த கிராமவாசிகள் மரியாதையோடு ''குரு'' என்று சொல்லி வருகிருர்கள். ருஷ்யாவைச் சேர்ந்த அந்த ஓவியர் தன் குடும்பத்தோடு இமயமலையின் அடிவாரத்திலுள்ள அந்த கிராமத்தில் தங்கி விட்டார். அவரைப் பற்றிச் சொல்லப்படுகின்ற கதைகளை—கட்டுக்கதைகளையும் கூட—நேரு அறிவார். மத்திய ஆசியாவில் அவருடைய ஆச்சரியகரமான, ஆபத்துமிக்க பிரயாணங்களைப் பற்றி அவர் படித்திருக்கிருர்.

ரேரிஹ் குடும்பத்தின் விருந்தினராக நேரு ஒரு வார காலம் அங்கே தங்கியிருந்தார். நிக்கலாய் கான்ஸ்டான்டினவிச்சுடனும் அவருடைய ஒல்லியான, அழகான மனைவி யெலெஞ இவானவ்ஞவுடனும் நெடு நேரம் உரையாடிப் பொழுதுபோக்கிஞர். இமயமலையின் அழகையும் கம்பீரத்தையும் சித்தரிக்கும் ரேரிஹின் ஓவியங்களை ரசித்துப் பார்த்தார். அவருடைய மகன் ஸ்வெடோஸ்லாவ் ரேரிஹ் ஜவகர்லாலின் உருவப்படத்தை வரைய விரும்பிஞர். நேரு அவருக்கு முன்ஞல் உட்கார்ந்து உதவி செய்தார். மாலை நேரங்களில் அவர்களோடு வாஞெலிப் பெட்டிக்கு முன்ஞல் உட்கார்ந்திருக்கும் பொழுது வெகு தூரத்துக்கு அப்பால் ஹிட்லரின் எண்ணற்ற படைகளை எதிர்த்துப் போர் புரிகின்ற, துன்பத்தை அனுபவிக்கும் ருஷ்யாவின் ஒலிபரப்பை (மற்ற அலைகளிலிருந்து வரும் சத்தம் அதை மூழ்கடித்து விடுவதும் உண்டு) அவர்கள் கவலையோடு கேட்பதை கவனித்தார்.

ரேரிஹின் இல்லத்தில் அக்கறையோடு விருந்தளிப்பவர்களும் இந்திராவும் நேரு உண்மையிலேயே ஓய்வெடுப்பதற்குத் தங்களாலியன்ற எல்லாவற்றையும் செய்தார்கள். எனினும் அவரால் ஒரு கணம் கூட தன்னுடைய தீவிரமான சிந்தனையை நிறுத்த முடியவில்லை. காந்திக்கும் தனக்குமிடையே நடைபெற்ற விவாதங்களைப் பற்றியே அவர் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டிருந்தார், தன்னுடைய வாதங்களில் அல்லது மகாத்மாவின் வாதங்களில் உள்ள குறைகளைக்

கண்டுபிடிக்க முயற்சி செய்தார். எனவே அவர் தூங்குவதற்கு நெடு நேரமாகும். காலையில் உணவருந்த வரும் பொழுது அவர் சரியாகத் தூங்கவில்லை என்பது தெரியும். அந்த முதிய கலைஞரின் நேசம் நிறைந்த விழிகள் தன்னைப் புரிந்து கொண்டது போல உற்றுப் பார்ப்பதை நேரு கவனிப்பார்.

1942 மே 20ந் தேதியன்று நிக்கலாய் ரேரிஹ் தன்னுடைய நாட்குறிப்பில் பின்வருமாறு எழுதினார்: ''நேருவும் அவருடைய மகளும் ஒரு வாரகாலமாக எங்களோடிருக்கிறார்கள். மிகச் சிறந்த, மிகவும் குறிப்பிடத்தக்க மனிதர். மக்கள் அவரிடம் ஈர்க்கப்படுகிறார்கள். ஒவ்வொரு நாளும் யாரை யாவது அவர் உற்சாகப்படுத்துகிறார். அவர் அதிகமாகக் களைப்படைந்து கொண்டிருக்கிறார். சில நாட்களில் காலை நான்கு மணிவரை வேலை செய்கிறார். இந்திய-ருஷ்ய கலாச்சார சங்கம் தொடங்குவதைப் பற்றிப் பேசினோம். ஆக்க பூர்வமான, உணர்வு பூர்வமான ஒத்துழைப்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய நேரம் இது. பண்டிட்ஜியின் அருகில் இருப்பது உன்னதமானது. அவர் ஒரு பெரிய மனிதர், இந்தியாவின் நம்பிக்கை மட்டுமல்ல மிகவும் கௌரவமான, நல்ல மனிதர் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

''நற்பண்புகள் நல்ல இதயம் படைத்தவரைத் தேடி வருகின்றன. மக்கள் நீதியைப் பற்றிக் கனவு காண்கிறார்கள். அது நல்ல மனிதரிடம் இருக்கும் என்று நம்புகிறார்கள். 'நேரு வாழ்க!' என்று மக்கள் முழங்கும் பொழுது உடல் சிலிர்க்கிறது. அவருடைய அறிவுரையைக் கேட்பதற்காக மக்கள் அவரிடம் வருகிறார்கள். இச்சிறப்பான தலைவர் ஒவ்வொருவரிடமும் ஒரு உற்சாகமான வார்த்தையைக் கூறுகிறார். அவர் ஒற்றுமையைப் பற்றி, பொறுத்திருப்பதைப் பற்றி, ஒளிமயமான எதிர்காலத்தைப் பற்றிப் பேசுகிறார்.

''இன்றைய நெருக்கடியான நேரங்களில் மக்கள் நல்ல மனிதரை, நாட்டுக்காகத் துன்பங்களை அனுபவிக்கும் மனிதரைச் சிறப்பாகப் போற்றுகிறார்கள். பண்டித நேரு இங்கே வந்திருந்தபொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியான நினைவுகளை இங்கே வசிக்கின்ற எல்லோருமே நெடுங்காலம் வரை நினைத்துக் கொண்டிருப்போம்.'' ''சிவம், சத்தியம், சுந்தரம்''

என்ற பழமையான இந்திய மந்திரத்தோடு இந்தக் குறிப்பு முடிவடைகிறது.

மே மாதக் கடைசியில் நாகபுரிக்கு அருகே உள்ள சேவாகிராம ஆசிரமத்தில் காந்தியும் நேருவும் சந்தித்தார்கள். தன்னுடைய கருத்துக்களுக்காக ஜவகர்லால் போராடிய பொழுது, அவை சரியானவை என்று என்னை ஏற்றுக் கொள்ளச் செய்ய முயற்சித்த பொழுது அவர் காட்டிய உணர்ச்சியை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை என்று காந்தி புன்சிரிப்போடு கூறினார். அவர் ஜவகர்லால் கூறியவற்றை அனுதாபத்தோடு கேட்டார். காந்தியின் ஆதரவு கிடைக்கும் என்ற நம்பிக்கை ஓரிரு தடவைகளில் ஜவகர்லாலின் மூளையில் பளிச்சிட்டது. பிறகு காந்தி பேசத் தொடங்கினார். அவர் முதலில் கூறிய சில வாக்கியங்களைக் கேட்ட உடனேயே இம்முறையும் அவர் களுக்கிடையே உடன்பாடு ஏற்படாது என்பது தெளிவா யிற்று.

அரசாங்கத்தோடு உடன்பாட்டுக்கு வர முடியும் என்று மகாத்மா தொடர்ந்து நம்பினார். பிரிட்டிஷ்காரர்கள் மீது தாக்கத்தை ஏற்படுத்துவதற்கு சத்யாக்ரஹத்தைத் தவிரவேறு எந்த வழியைப் பற்றியும் அவர் கேட்பதற்குத் தயாராயில்லை.

ஆனால் செயற்குழுக் கூட்டத்தின் போது மகாத்மாவின் அணுகுமுறைகளில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதை கவ னித்த ஜவகர்லால் ஓரளவுக்கு ஆச்சரியமடைந்தார். மற்றவை எப்படியிருப்பினும் பிரிட்டிஷ்காரர்களுக்குப் பாதகமான நிலை மைகள் ஏற்படுமானால் அவர்கள் காங்கிரசுக்குச் சில சலுகை களைக் கொடுப்பார்கள் என்று காந்தி முன்பு கருதியது தற் பொழுது அவ்வளவு உறுதியாக இருக்கவில்லை.

சில வாரங்களாக விவாதித்த பிறகு காங்கிரஸ் தலைவர் கள் ஒரு தீர்மானத்தைத் தயாரித்தார்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உடனே முடிவு வேண்டுமென்றும் இது மறுக்கப்படுமானால் காங்கிரஸ் வெகுஜன அளவில் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்குமென்றும் தீர்மானம் அறி வித்தது. சீனா மற்றும் ருஷ்யாவின் சுதந்திரம் விலை மதிப் பற்றது, பாதுகாக்கப்பட வேண்டியது, இந்த நாடுகளின் பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிப்பது அல்லது ஐக்கிய நாடு

களின் தற்காப்புச் சக்தியைப் பலவீனப்படுத்துவது காங்கிர சின் விருப்பமல்ல என்று நகல் தீர்மானம் எடுத்துக் கூறியது. இத்தீர்மானத்தின் முக்கியத்துவத்தின் காரணமாக இதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அங்கீகாரத்துக்கு வைப்ப தென்று செயற்குழு முடிவு செய்தது. 1942 ஆகஸ்ட் 7ந் தேதியன்று பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி யின் கூட்டத்தை நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது. காங்கிரஸ்காரர்களின் நடவடிக்கைகளைப் பற்றிப் பத்திரிகை யில் சுருக்கமாகக் கட்டுரை எழுதிய ஒரு கட்டுரையாளர் **இந்தியாவை விட்டு வெளியேறு!** என்று தலைப்புக் கொடுத் தார். அதன் பிறகு இத்தீர்மானத்துக்கு அந்தப் பெயரே நிலைத்து விட்டது.

நேரு இந்திராவையும் பெரோஸையும் (அவர் மகளும் மருமகனும் அலகபாத் காங்கிரஸ் கிளையில் சேவை செய்து எல்லோராலும் பாராட்டப்பட்டிருந்தார்கள்) கூட்டிக் கொண்டு பம்பாய்க்கு வந்து சகோதரி கிருஷ்ணுவின் வீட்டில் தங்கினுர். ஜவகர்லால் அங்கே வந்தவுடன் அந்தக் குடும்பத்தின் அமைதி யான, நிதானமான வாழ்க்கை போய்விட்டது. எப்பொழுது பார்த்தாலும் தொலைபேசியின் மணி ஒலித்தது. வீட்டின் வரவேற்பு அறையிலும் வராந்தாவிலும் நேருவைப் பார்க்க வந்தவர்கள் எப்பொழுதும் கூட்டமாக இருந்தார்கள். எத்தனை விருந்தினர்கள் வரப் போகிறுர்கள் என்று முன்னரே தெரிவித் தால் அவர்களுக்கு உணவளிப்பதில் சிரமம் இருக்காதே என்று கிருஷ்ணு தன் சகோதரரிடம் கோபித்துக் கொண்டாள்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் இரண்டு நாட்கள் நடைபெற்றது. ஆகஸ்ட் 8ந் தேதி மாலையில் தீர்மானத்தின் மீது வாக்கெடுக்கப்பட்டது. ''இந்தியாவை விட்டு வெளியேறு'' என்ற தீர்மானம் மிகவும் அதிகமான பெரும்பான்மையோடு நிறைவேற்றப்பட்டது.

காங்கிரஸ் தலைவர்கள் அனைவரையும் ஒரே முயற்சியில் கூண்டோடு கைது செய்வதற்கு அரசாங்கம் திட்டம் தீட்டி யிருக்கிறது என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இரகசியப் போலீஸ் இலாகாவைச் சேர்ந்த நம்பகமான நபர்களிடம் நேருவும் ஆஜாதும் பம்பாய்க்கு வருவதற்குச் சிறிது காலத் துக்கு முன்பு தெரிந்து கொண்டனர். காங்கிரஸ் தலைவர்கள் அனைவரையும் கைது செய்து தென் ஆப்பிரிக்காவுக்கு நாடு

கடத்த அரசாங்கம் நினைத்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் தென் ஆப்பிரிக்க அதிகாரிகளோடு உடன்பாட்டுக்கு வர முடியவில்லை, எனவே காங்கிரஸ் தலைவர்கள் இந்தியாவிலேயே சிறை வைக்கப்படுவார்கள் என்ற திட்டவட்டமான தகவல் சில நாட்களுக்குப் பிறகு காங்கிரஸ்காரர்களுக்குக் கிடைத்தது. முஸ்லிம் லீக் கட்சியின் முன்னாள் தலைவரும் பிரிட்டிஷ்காரர்களின் விசுவாசமான நண்பருமான ஆகா கானுக்குச் சொந்தமான மாளிகையில் (பூனாவில் இருப்பது) காந்தியைச் சிறை வைக்க உத்தேசிக்கப்பட்டது. மற்ற காங்கிரஸ் தலைவர்களைச் சிறைவைக்க பம்பாயிலிருந்து முந்நூறு கிலோமீட்டர் தொலைவிலுள்ள அகமதுநகர் கோட்டைச் சிறை தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஆகஸ்ட் 9ந் தேதி காலையில் 5 மணிக்கு நேருவைக் கைது செய்வதற்குப் போலீஸ்காரர்கள் வந்தார்கள். ஜவகர்லால் அவசரப்படாமல் தன்னுடைய காரியங்களை முடித்து விட்டு காலைச் சிற்றுண்டி சாப்பிடுவதற்கு உட்கார்ந்தார். போலீஸ் அதிகாரி பரபரப்போடு ஏதோ சொல்ல முயற்சி செய்த பொழுது சிற்றுண்டி அருந்தாமல் நான் எங்கும் புறப்படப் போவதில்லை என்று நேரு உறுதியாக ஆனால் மரியாதையாகக் கூறினார். பிறகு தனக்கு மிகவும் பிடித்தமான சிற்றுண்டியான கார்ன்ஃபிளேக்சைத் தயாரித்ததற்காகக் கிருஷ்ணாவுக்கு அன்போடு நன்றி சொல்லிவிட்டு வெளியே காத்துக் கொண்டிருந்த போலீஸ் காரை நோக்கி நடந்தார்.

பம்பாய் விக்டோரியா ரயில் நிலையத்துக்குச் செல்லும் எல்லாப் பாதைகளையும் போலீஸ்காரர்கள் அடைத்துக் கொண்டு நின்றார்கள். கைது செய்யப்பட்ட காங்கிரஸ் தலைவர்களைக் கொண்டு வரும் போலீஸ் வண்டிகளை மட்டும் அனுமதித்தார்கள். ஒரு ரயில் வண்டி புறப்படத் தயாராக நின்று கொண்டிருந்தது. காந்தியும் நேருவும்தான் கடைசியாக இரயில் நிலையத்துக்குக் கொண்டு வரப்பட்டார்கள் (காங்கிரஸ் தலைவர்கள் அனைவரையும் அரசாங்கம் உண்மையாகவே கைது செய்யும் என்று கடைசி நிமிடம் வரையிலும் காந்தி நம்பவில்லை). ஜவகர்லால் வண்டிக்குள் ஏறியதும் இரயில் புறப்பட்டது. அன்று பிற்பகல் 4 மணிக்குள் காங்கிரஸ் செயற்குழுவின் பன்னிரண்டு உறுப்பினர்கள் அகமதுநகர் கோட்டைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். நேரு அந்தச் சிறையில் 1040 நாட்களைக் கழித்தார்.

## அத்தியாயம் பதினொன்று

பதினாறும் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் முகலாய சக்கரவர்த்தியான அக்பர் வட இந்தியாவை வெற்றி கொண்ட பிறகு, மத்திய இந்தியாவின் மன்னர்களுடைய எதிர்ப்பை நசுக்கிய பிறகு தன் துருப்புகளோடு அகமதுநகர் கோட்டைச் சுவர்களுக்கு அருகில் வந்தார். அந்தக் கோட்டையில் வசித்த ஆண்கள், பெண்கள், இளைஞர்கள் உட்பட எல்லோரும் கோட்டையைப் பாதுகாப்பதற்காகத் தங்கள் உயிரைப் பற்றிக் கவலைப்படாமல் வீரமாக, உறுதியாகப் போர் புரிந்தது அக்பருக்குத் திகைப்பைக் கொடுத்தது. அவர் வீரத்தையும் மன உறுதியையும் மதிப்பவர். அவர்களுக்குத் தலைமை தாங்கியது ஒரு பெண்—அகமதுநகரின் அரசியான சாந்த் பீபி—என்று அறிந்த பொழுது அக்பர் அவர்களோடு கௌரவமான முறையில் சமாதானம் செய்துகொண்டார். அந்தக் கோட்டையின் கனமான கற்சுவர்கள் பல எதிரிகளைத் தடுத்து நிறுத்தியிருக்கின்றன.

இந்தக் கோட்டையை சிறைச் சாலையாகப் பயன்படுத்தலாம் என்ற எண்ணம் முதலில் யாருக்கு ஏற்பட்டது என்று சொல்வது கடினமே. ஆனால் முதல் உலக யுத்தத்தின்போது பிரிட்டிஷ்காரர்கள் இங்கே சில கைதிகளை—அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதை மறைப்பது பல காரணங்களினால் அவசியமாக இருந்தது—ரகசியமாக வைத்திருந்தார்கள். அந்தக் கோட்டையின் கவிகை மாடங்களில் அந்தக் கைதிகள் சிறை வைக்கப்பட்டிருந்தார்கள். கூரைக்குக் கீழே இருந்த குறுகலான சன்னல்கள் செங்கற்களால் அடைக்கப்பட்டன. இந்தக் கவிகை மாடங்களின் வழியாகச் சென்றால் உட்புறத்தில் ஒரு திறந்த வெளிக்கு வரலாம். அந்தத் திறந்த வெளியில்

ஒரு சுவரிலிருந்து அடுத்த சுவர் ஐம்பது மீட்டர் தூரம் இருக்கும். அந்தக் கட்டாந்தரையில் ஒரு மூலையில் கிழடாகிப் போன ஒரு குட்டையான மரம் இருந்தது. அதன் இலைகள் எப்பொழுதோ உதிர்ந்து விட்டன.

அந்தக் காட்சியைப் பார்த்தாலே யாருக்கும் அதிகமான சோர்வு ஏற்படும். ஜவகர்லால் அதற்கு விதிவிலக்காக இருந் தார். சிறைக் கைதிகள் தங்கள் புதிய இருப்பிடத்தை நன்கு பார்ப்பதற்கு முன்பே அவர் அந்த முற்றத்தில் தோட் டம் போடலாம் என்று பேசிக் கொண்டிருந்தார். ஆங்கிலக் காவல் அதிகாரியிடம் விதைகள் வேண்டும் என்று கேட்ட பொழுது அவர் வியப்படைந்தார். ஒவ்வொரு நாளும் காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு சிறைக்கைதிகள் அனைவரும் ஜவகர் லாலின் தலைமையில் அந்தக் கட்டாந்தரையைக் கவனமாகத் தோண்டினார்கள். எப்பொழுதுமே அவநம்பிக்கை உடைய வரான வல்லபாய் படேல் முதலில் அவர்களுடைய முயற்சி களை அக்கறையில்லாமல் பார்த்துக் கொண்டிருந்தார். எனினும் சில நாட்களுக்குப் பிறகு அவரும் அவர்களோடு சேர்ந்து கொண்டார்.

காலையில் எட்டு மணிக்குச் சிற்றுண்டி கொடுக்கப்படும். வெப்பமான பகற்பொழுதில் அவர்கள் பேசுவதற்கும் விவாதிப் பதற்கும் ஆஜாதின் அறையில் கூடுவார்கள். வெப்பம் தணிந்த பிறகு அவர்கள் வெளியே சென்று தோட்ட வேலை செய்தார்கள். இரவு எட்டு மணிக்கு ஆங்கில சமையற்காரர் (சிறை ஊழியர்கள் எல்லோருமே ஆங்கிலேயர்கள், அந்தக் கோட்டைக்குள் இந்தியர்கள் அனுமதிக்கப்பட வில்லை) உணவு கொண்டுவருவார். அவருடைய சமையல் மோசமாகவே இருக்கும், உணவின் தரத்தைப் பற்றி அவர்கள் மிகவும் வேடிக்கையாகப் பேசிக்கொள்வார்கள். இரவு பத்து மணி வரை அவர்கள் மறுபடியும் பேசிக் கொண்டிருப்பார்கள். எதிர்காலத்தைப் பற்றித் திட்டங்கள், வெளியே என்ன நடக் கிறது என்று ஊகிக்கின்ற முயற்சிகளில் ஈடுபட்டிருப்பார்கள். அவர்கள் கடிதங்களைப் பெற அனுமதி இல்லை, செய்தித்தாள் கள் கொடுக்கப்படவில்லை. சிறை அதிகாரிகளும் அவர்களிடம் ஒன்றும் தெரிவிக்க மாட்டார்கள்.

சிறையில் அடைக்கப்பட்டு ஒரு மாதமான பிறகு அவர் கள் கடிதங்கள் எழுதுவதற்கு அதிகாரிகள் அனுமதியளித்தார்

கள். சீக்கிரத்தில் தன் சகோதரரிடமிருந்து கிருஷ்ணுவுக்கு ஒரு கடிதம் வந்தது. ''இந்தியாவில் எங்கோ ஒரு இடத்தி லிருந்து—ஆனுல் அலகபாத் ஆனந்த பவனம் அல்ல'' என்று கடித உறையின் மீது எழுதப்பட்டிருந்தது. அப்பொழுதுதான் ஜவகர்லால் இந்தியாவில் சிறைவைக்கப்பட்டிருக்கிறுர், மற்ற வர்கள் சொல்லிக் கொண்டிருப்பதைப் போல இந்தியாவில் எல்லேகளுக்கு வெளியே அல்ல என்று அவள் புரிந்து கொண் டாள்.

சிறை அதிகாரி அவர்களிடம் *The Times of India* பத்திரி கையைக் கொண்டு வந்து கொடுத்தார். நாங்கள் கைதான பிறகு நாட்டில் என்ன நடந்ததென்று தெரிந்து கொள்ள வேண்டும், எனவே முந்திய இதழ்களேக் கொண்டுவாருங்கள் என்று ஆஜாத் அவரிடம் கூறினுர்...

பம்பாய் ரயில் நிலேயத்தை விட்டு இரயில் வண்டி புறப் படுவதற்கு முன்பே தெருக்களில் மக்கள் பரபரப்போடு கூட் டம் கூட்டமாகச் சேர்ந்து விட்டார்கள். அவர்கள் இரயில் நிலேயத்தைச் சூழ்ந்து கொண்டார்கள். இரயில் வண்டி போய் விட்டது என்று தெரிந்து கொண்ட பிறகு பக்கத்திலுள்ள போலீஸ் நிலேயங்களேத் தாக்குவதற்கு ஓடினுர்கள். தொழி லாளர்கள் வேலே நிறுத்தம் செய்தார்கள், கடைகள் மூடப் பட்டன; ஐக்கிய மாகாணம், வங்காளம், பீகார் மற்றும் இதர பிரதேசங்களில் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குக் கலவரங்கள் நடைபெற்றன, காங்கிரஸ் தலேவர்களேக் கைது செய்ததன் விளேவாக எல்லா இடங்களிலும் பெருந்திரளான மக்கள் ஏகாதிபத்திய எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களே நடத்தி ஞர்கள். சில பத்திரிகையாளர்கள் இதை ''ஆகஸ்ட் புரட்சி'' என்று எழுதினுர்கள். ஆனுல் இந்தியாவில் புரட்சி ஏற்பட வில்லே. அந்த நேரத்தில் புரட்சி ஏற்படவும் முடியாது என்பது உண்மையே. அதிகாரிகள் எல்லா நடவடிக்கைகளுக் கும் தயாராக இருந்தார்கள். காலனி அரசாங்கத் துருப்புகள் இந்தியாவுக்கு வேகமாக அனுப்பிவைக்கப்பட்ட பிரிட்டிஷ் இராணுவப் பிரிவுகளின் உதவியோடு நகரங்களிலும் கிராமங் களிலும் சரியானபடி ஏற்பாடு செய்யப்படாமல், ஒருங் கிணேப்பு இல்லாமல் ஏற்பட்ட கலவரங்களேக் குரூரமான முறையில் ஒடுக்கின. பொது மக்களேத் தண்டிப்பதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளில் விமானங்களும் பயன்படுத்

தப்பட்டன. இந்த விசித்திரமான ''பறவைகளைப்'' பார்ப்பதற்கு நிராயுதபாணியான மக்கள் கூட்டமாகத் திரண்ட பொழுது ஆகாயத்திலிருந்து அவர்கள் மீது குண்டுகள் வீசப்பட்டன. அறுபதாயிரத்துக்கும் அதிகமானவர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாகவும் சுமார் ஆயிரம் பேர்கள் கொல்லப்பட்டதாகவும் பிரிட்டிஷ் அரசாங்கம் தெரிவித்தது. அரசாங்கப் புள்ளிவிவரங்கள் குறைவான எண்ணிக்கையைக் கூறின என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்தத் தடவை காலனியாதிக்கவாதிகள் அளவுக்கு மீறிப் போய்விட்டதையும் அவை எடுத்துக்காட்டின....

சிறையிலிருந்த தலைவர்களின் கோபமும் கசப்புணர்ச்சியும் ஓரளவுக்குக் குறைந்த பிறகு அவர்களுக்கிடையே சூடான விவாதங்கள் நடைபெற்றன. நேருவும் ஆஜாதும் ஒரு தரப்பிலும் அஹிம்சையை உறுதியாக ஆதரிப்பவர்கள் மறு தரப்பிலும் வாதம் புரிவார்கள். இந்தியர்கள் ஸ்தாபனரீதியாகத் திரட்டப்பட்டிருந்தால், தெருக்களில் ஆர்ப்பாட்டம் செய்தவர்கள் வன்முறை நடவடிக்கைகளில் ஈடுபடாது தடுக்கப்பட்டிருந்தால், ஆகஸ்ட் சம்பவங்களின் முடிவு வேறுவிதமாக இருந்திருக்கக் கூடும் என்று காந்தியின் ஆதரவாளர்கள் வற்புறுத்தினார்கள். அவர்கள் அனைவருமே செயற்குழுவின் உறுப்பினர்கள்; அவர்கள் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தைப் பெருந்திரளான அளவில் நடத்துவதற்குத் தயாராவதைப் பற்றி மிக அதிகமாகப் பேசியபோதிலும் உருப்படியாக ஒன்றுமே செய்யவில்லை என்பதை நேரு அவர்களிடம் நினைவூட்டினார். ஜப்பானிய பயமுறுத்தல் இருப்பதன் காரணமாகக் காலனியாதிக்கவாதிகள் காங்கிரஸ் மற்றும் இதர அரசியல் கட்சிகளுக்கு எதிராக அடக்குமுறையை உபயோகிக்க மாட்டார்கள் என்பது காந்தியின் கருத்து. ஆனால் அது தவறு என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது.

மக்களிடம் தானாகவே ஏற்பட்ட, ஸ்தாபனமில்லாத ஆர்ப்பாட்டங்களும் திடீர் எழுச்சிகளும் தங்களைக் காட்டிலும் மிகவும் அதிகமான பலத்தைக் கொண்ட இராணுவப் படைகளோடு பயங்கரமான மோதல்களில் முடிவடைந்தன. இவை மக்களுடைய உணர்ச்சிகளின் தீவிரத்தை எடுத்துக்காட்டின என்று இத்தகைய விவாதங்களில் ஒன்றில் நேரு கூறினார். அவர்களுடைய தலைவர்கள் கைது செய்யப்படுவதற்கு முன்பே

இந்த உணர்ச்சிகள் இருந்தன, ஆனால் தலைவர்கள் கைது செய்யப்பட்டதும் அதன் பிறகு அடிக்கடி நடைபெற்ற துப்பாக்கிப்' பிரயோகங்களும் மக்களுக்கு ஆத்திரமூட்டின. அந்த வேகத்தில் சிலர் மட்டுமே சிந்திக்க முடியும். அந்த மக்கள் சவாலுக்குத் தயாராக இருக்கவில்லை, அதற்குரிய நேரத்தைத் தேர்ந்தெடுக்கவும் இல்லை. அவர்கள் தங்களையறி யாமலேயே அதில் சிக்கிக் கொண்டார்கள். அதற்கு அவர் களுடைய உடனடியான எதிர்ச்செயல்—எவ்வளவு சிந்தனை யில்லாததாகவும் தவறான திசையில் செலுத்தப்பட்டதாகவும் இருந்தபோதிலும்—இந்திய சுதந்திரத்தின்பால் அவர்களுடைய பற்றையும் அந்நிய ஆதிக்கத்தின் மீது அவர்களுடைய வெறுப் பையும் காட்டுகிறது என்றார்.

ஆஜாதும் சையது மகமுதுவும் நேரு சொல்வதை ஏற்றுக் கொள்ளும் குறிகளோடு கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் மற்றவர்கள் நேருவின் கருத்துக்களை அங்கீகரிக்கவில்லை, அவற்றை மறுத்துக் கூறவும் இல்லை. நேரு பேசி முடித்த பிறகு அவர் சொன்ன கருத்துக்களைப் பற்றி சிந்திப்பதைப் போல அவர்கள் மௌனமாக இருந்தார்கள். நேருவைக் கேலி செய்வது, சில சமயங்களில் குத்தலாகவே பேசுவது படேலின் வழக்கம். அன்று அவரும் தன்னுடைய சந்தர்ப்பம் அறியாத, மனதை உறுத்தக் கூடிய ஏளனப் பேச்சை நிறுத்தி மௌனமாக இருந்தார். அன்றிரவில் மேலும் விவாதங்கள் நடைபெறவில்லை. சுமார் பத்து மணிக்கு அவர்கள் தங்களு டைய அறைகளுக்குப் பிரிந்து சென்றார்கள்.

பல மாதங்கள் வரை அவர்களுக்குச் செய்திகளைத் தெரி விக்கக் கூடிய ஒரே தோற்றுவாயாக *The Times of India* பத்திரிகை மட்டுமே இருந்தது. அவர்கள் உறவினர்களைச் சந்திக்க முடியாது. அவர்களுக்கு வரும் கடிதங்களில் அரசியல் தொடர்பான குறிப்புகள் என்று தாங்கள் கருதும் வாசகங் களை சிறை அதிகாரிகள் கறுப்புமையினால் கவனமாக அடித்து விடுவார்கள்.

சோவியத் இராணுவம் 1943ம் வருடத்தில் ஸ்டாலின் கிராதிலும் குர்ஸ்கிலும் அடைந்த மகத்தான வெற்றிகளைப் பற்றி நேரு அப்பத்திரிகையிலிருந்து தெரிந்து கொண்டார். இவ்வெற்றிகள் இரண்டாம் உலக யுத்தத்தின் முடிவை முன் கூட்டியே நிர்ணயித்துவிட்டன. யுத்தம் முடிவடைந்த பிறகு

ஜனநாயகக் கோட்பாடுகளின் அடிப்படையில் உலகத்தைத் திருத்தியமைப்பதற்காக சோவியத் அரசு தொடர்ச்சியாகவும் விடாப்பிடியாகவும் போராடியதைப் பற்றி, குறிப்பாக தங்களுடைய அரசு அமைப்பைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ளும் உரிமையை விடுதலையடைந்த நாடுகளுக்குக் கொடுக்க வேண்டிய் அவசியத்தை எடுத்துக் கூறியதைப் பற்றி அவர் மேலும் மகிழ்ச்சி அடைந்தார்.

பாசிசத்துக்கு எதிராக நடைபெற்ற யுத்தத்தில் கோடிக் கணக்கான மக்கள் தங்கள் உயிர்களை அர்ப்பணித்தார்கள். சமாதானம், சுதந்திரம், மனிதகுல முன்னேற்றம் என்ற மிகவும் உன்னதமான இலட்சியங்களுக்காக அவர்கள் மிக அதிகமான தியாகங்களைச் செய்தார்கள். ஆனால் முப்பத்தைந்து இலட்சம் இந்தியர்கள் போர்க்களத்தில் துப்பாக்கி குண்டுகளுக்கும் வெடிகுண்டுகளுக்கும் மடியாது, நகரங்களிலும் கிராமங்களிலும், தங்களுடைய வீடுகளிலும் தெருக்களிலும் பட்டினியால் செத்தார்கள் என்றால் அந்த பயங்கரமான, பொருளற்ற சோக நாடகத்துக்கு ஏதேனும் நியாயமுண்டா?

1943ம் வருடத்தின் கடைசி மாதங்களில் வங்காளத்திலும் இந்தியாவின் கிழக்கு மற்றும் தெற்குப் பிரதேசங்களிலும் ஏற்பட்ட பஞ்சத்தைப் பற்றி ஏதாவதொரு சிறு குறிப்பு கூட வெளிவராமல் தடுப்பதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் ஒவ்வொரு வழியிலும் முயற்சி செய்தது. ஆனால் இந்தியர்களுக்கு ஏற்பட்ட அந்தப் பேராபத்து மிகவும் பிரம்மாண்டமான அளவைக் கொண்டிருந்தபடியால் அதைப் பற்றிய செய்திகள் இந்திய மற்றும் உலகப் பத்திரிகைகளில் சிறிது சிறிதாக வெளிவந்தன. நேரு அளவில்லாத கோபமும் ஆத்திரமும் அடைந்தார். அந்தப் பஞ்சத்துக்குக் காலனியாதிக்க அரசாங்கமே முற்றிலும் பொறுப்பு என்று அவர் முழங்கினார். யுத்த நிலைமைகள், அதிகாரிகளின் கவனக்குறைவு, அவர்களிடம் சிறிதும் தொலைநோக்கு இல்லாமை ஆகியவற்றின் நேரடியான விளைவுதான் இந்தப் பஞ்சம் என்றார்.

போர்முனைக்கு மிக அருகேயுள்ள பிரதேசங்களில், ஆக்கிரமிப்பாளர்கள் இறங்கக் கூடிய பகுதிகளில் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவைப் பாதுகாப்பதும். ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்கள் விரட்டுவதும் இந்திய அரசாங்கத்தின்

பொறுப்பு. அந்தப் பொறுப்பை நிறைவேற்றுகின்ற முறையா இது என்று அவர் ஆத்திரமடைந்தார்.

1944 ஏப்ரலில் நேரு ஒரு புதிய புத்தகத்தை எழுதத் தொடங்கினுர். முன்பு எழுதிய **சுயசரிதைக்குத்** தொடர்ச்சி என்ற முறையில்தான் அவர் முதலில் அதைப் பற்றி நினைத்தார். அல்மோரா சிறைச் சாலையிலிருந்து விடுதலை அடைந்ததும் ஐரோப்பாவில் நோய்ப் படுக்கையிலிருந்த கமலாவைப் பார்க்க விரைந்தோடிய 1935 செப்டெம்பருக்குப் பிறகு நடைபெற்ற சம்பவங்களை விவரிக்கின்ற சில அத்தியாயங்களை அவர் முன்பே எழுதியிருந்தார்.

கமலா உயிர் வாழ்ந்த கடைசி நாட்களைப் பற்றி அவர் எழுதினுர். அவருக்கு ஏற்பட்ட எல்லா வேதனைகளையும் எட்டு வருடங்களுக்குப் பிறகு மறுபடியும் உணர்ந்தார். அவை இன்னும் மறையவில்லை என்பதை வருத்தத்தோடு புரிந்து கொண்டார். தன் மனைவியின் நினைவுக்கு அஞ்சலியாக மிகவும் அதிகமான சோக உணர்ச்சியைக் கொண்ட, கலை நோக்கின்படி பார்க்கும் பொழுது மிகவும் சிறந்த வாக்கியங்களை எழுதிய பிறகு மேலும் தொடர்ந்து எழுதினுல் தான் மிகவும் நேசித்த மனைவியின் உருவம் பின்னுக்குத் தள்ளப்பட்டு விடுமோ என்று அஞ்சியவரைப் போல அவர் சிறிது காலத்துக்கு எழுதுவதை நிறுத்திவிட்டார். அவர் மிகவும் உணர்ச்சிகரமாக நேசித்த மிகவும் நெருக்கமான இந்திய அன்னையைப் பற்றிப் பேச வேண்டிய அவசியம் ஏற்பட்ட பொழுதுதான் மறுபடியும் புத்தகத்துக்குத் திரும்பினுர்.

அவருடன் சிறையிலிருந்த நண்பர்கள் அவருடைய திட்டத்தை அங்கீகரித்ததோடு மட்டுமல்லாமல் உதவியளிக்கவும் முன்வந்தார்கள். ஆஜாத், கோவிந்த வல்லப பந்த் மற்றும் இதர காங்கிரஸ்காரர்களின் தலைசிறந்த புலமையும் நினைவாற்றலும் அந்தப் புத்தகத்தை எழுதி முடிப்பதில் அவருக்கு மிகவும் உதவியாக இருந்தன. மிக முக்கியமான, மிகச் சிறப்பான முறையில் அவர் எழுதிய புத்தகம் அது. அவர் மிகவும் குறுகிய காலமான ஐந்து மாதங்களில் அதை எழுதி முடித்தார். அப்புத்தகத்துக்குத் துல்லியமான, அனைத்தையும் தழுவிய முறையில் **இந்திய தரிசனம்** என்று பெயர் கொடுத்தார்.

ஜவகர்லால் தன் திட்டத்தை மாற்றிக் கொண்டு தன்னுடைய நாட்டின் கடந்த காலத்தைப் பற்றி எழுத முடிவு செய்தார். இந்தியாவின் பலம் எங்கே இருக்கிறது, பலவீனங்கள் எங்கே இருக்கின்றன என்பதைத் தனக்கு விளக்குவதோடு தன்னுடைய நாட்டு மக்களுக்கு எடுத்துக் காட்ட, இந்தியாவின் அழியாத உயிராற்றல், மாபெருஞ்சிறப்பு, அறிவாற்றலின் இரகசியத்தை வெளிப்படுத்த, தேக்கம், சரிவு வீழ்ச்சி, பின்தங்கல் அவ்வப்பொழுது ஏற்பட்ட காரணங்களைப் புரிந்து கொள்வதற்குரிய திறவுகோலைக் கண்டுபிடிக்க முடிவு செய்தார். அவர் இந்தியாவின் வரலாற்றை எழுதுவதற்கு முயற்சிக்கவில்லை. கடந்த காலத்தில் இந்திய வரலாற்றின் முக்கிய கட்டங்களைப் பற்றி தன் மகளுக்கு எழுதிய கடிதங்களில் குறிப்பிட்டிருக்கிறார், கடந்த பத்தாண்டுகளில் நடைபெற்ற சம்பவங்களைப் பற்றித் தன்னுடைய **சுயசரிதை**யில் எழுதியிருக்கிறார்.

முன்னர் ஒரு சமயத்தில் நீட்ஷேயின் கருத்தை அவர் எப்பொழுதோ படித்தார். ''கடந்த நூற்றாண்டுகளின் அறிவு மட்டுமல்ல, பைத்தியக்காரத்தனமும் நம்மிடம் வெளிப்படுகின்றன. வாரிசாக இருப்பது ஆபத்தானதே.'' அந்த ஜெர்மானியத் தத்துவஞானி மிகவும் பிரபலமடைந்து கொண்டிருந்த நேரம் அது. ஆனால் நேரு அவரை வழிபடும் கூட்டத்தோடு சேரவில்லை. நீட்ஷேயின் ''மாமனிதனைப்'' பற்றிய கருத்தை அவர் ஜாக்கிரதையாகவே அணுகினார். பிற்காலத்தில் நீட்ஷேயின் தத்துவஞானம் பாசிசத்தின் இனவெறி மற்றும் மனித வெறுப்புத் தத்துவங்களில் தன் அருவருப்பான, பயங்கரமான மறுபிறவியை அடைந்ததைப் பார்த்த பொழுது நீட்ஷேயின் தத்துவஞானத்துக்கு விரோதமான அவருடைய அணுகுமுறை இன்னும் உறுதியடைந்தது.

அந்தக் கருத்து மூதுரை போல அமைந்திருந்தபடியால் நேருவின் மனதில் அது நிலைத்துவிட்டது. ஆனால் அதிலடங்கியிருந்த எச்சரிக்கையோடு மோதிக் கொள்ள வேண்டுமென்ற பலமான ஆசை அவருக்கு ஏற்பட்டதுண்டு. நான் எதற்கு வாரிசு என்று அவர் தன்னையே கேட்டுக் கொண்டார். கடந்த பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதகுலம் அடைந்திருக்கும் எல்லாவற்றுக்கும், அது சிந்தித்த, உணர்ந்த, வேதனைப்பட்ட, ஆனந்தமடைந்த எல்லாவற்றுக்கும், அதன்

வெற்றிக் கூச்சல்களுக்கும் தோல்வியின் கசப்பான முனகல் களுக்கும், எப்பொழுதோ நெடுங்காலத்துக்கு முன்பு தொடங்கி இன்னும் தொடர்ந்து நடைபெறுகின்ற, என்னிடம் வா என்று மனிதனை அழைக்கின்ற அந்த ஆச்சரியமிக்க வீரசாக சத்துக்கு நான் வாரிசு என்று அவர் தனது வயது, அனுபவம் தந்த உறுதியோடு பதிலளித்தார். மற்ற எல்லா மக்களுடன் சேர்ந்த நான் இவையனைத்தின், இன்னும் பலவற்றின் வாரி சாக இருக்கிறேன்.

கடந்தகாலத்தில் இந்தியாவின் அறிவுச் செல்வத்தைப் பற்றி, வற்றாத ஆன்மிக பாரம்பரியத்தைப் பற்றி, இந்திய மக்கள் அதை அறிவு பூர்வமான, நியாயமான முறையில் நிகழ்காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் உபயோகிக்க வேண்டிய ஜீவாதாரமான அவசியத்தைப் பற்றி அவர் எழுதினார்.

இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் சிந்து வெளிப் பள்ளத்தாக்கில் சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பழமையான பொருட்கள் அங்கே ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கும் முந்திய பழங்காலத்தில் பாரசீகம், மெசபொடேமியா, சீனா மற்றும் எகிப்திய நாகரிகங்களுக்குத் தரத்தில் சிறிதும் குறைந்திராத—சில அம்சங்களில் அவற்றைக் காட்டிலும் உயர்ந்த—மிகவும் வளர்ச்சியடைந்த நாகரிகம் நிலவியதை எடுத்துக்காட்டுவதைப் பற்றி எழுதினார். சமூகக் கொந்தளிப்புகளோ அல்லது எண் ணற்ற வெற்றியாளர்கள்—பாரசீகர்கள் அல்லது கிரேக்கர் கள்—அடிக்கடி படையெடுத்ததோ, வளம் நிறைந்த, தற்சிந் தனையான இந்தியக் கலாச்சாரம் தோன்றுவதையும் வளர்ச்சி அடைவதையும், அந்தக் கலாச்சாரம் ஆசியாவின் மக்களினங் களின் மீது மாபெரும் தாக்கத்தைக் கொண்டிருப்பதையும் தடுக்க முடியவில்லை. பண்டைக்காலத்தில் இந்திய விஞ்ஞானி கள் கணிதம், வானவியல், மருத்துவம் மற்றும் உலோகத் தொழிலில் புதிய கண்டுபிடிப்புகளின் மூலம் உலக விஞ்ஞா னத்தைச் செழுமைப்படுத்தினார்கள். திறமையும் கடுமையான உழைப்பும் கொண்ட மக்கள்தான் சமஸ்கிருதத்தைப் போன்ற சொல்வளமுடைய, நெகிழ்ச்சியான மொழியைப் படைத் திருக்க முடியும். சமஸ்கிருத இலக்கணம் மனிதனுடைய அறிவின் மாபெரும் சாதனைகளில் ஒன்று என்று பிரபலமான சோவியத் அறிஞரான பேராசிரியர் எஃப். ஐ. ஷ்செர்பாட்ஸ்கி கூறியிருப்பதை நேரு திருப்தியோடு மேற்கோள் காட்டினார்.

இந்தியாவின் கடந்தகாலம் என்ற திருக்கு மறுக்கான பாதையில் நேரு கவர்ச்சிகரமான, சுவாரசியமான முறையில் வாசகரைத் திறமையோடு வழிநடத்திச் செல்கிறார். மிகவும் சிக்கலான, முரண்பாடான சம்பவங்களை எளிமையான முறையில் விவரிக்கிறார், இந்தியாவின் தலைசிறந்த மேதைகளை, ''சிந்தனைக்கும் செயலுக்கும் தலைமை வகித்த'' புத்தர், மஹாவீரர், காளிதாஸர், இராமகிருஷ்ணர், திலகர், கோக்கலே, காந்தி, தாகூர் மற்றும் பலரைப் பற்றி அற்புதமான பேனு ஓவியங்களைத் தீட்டுகிறார்.

சுதந்திர வேட்கையும் அந்நிய ஆதிக்கத்துக்கு அடிபணிய மறுப்பதும் இந்திய வரலாற்றில் எக்காலத்திலும் இருந்திருப்பதையே முக்கியமான அம்சமாக அவரும் அவரோடு சேர்ந்து வாசகரும் காண்கிறார்கள். இந்திய வரலாற்றில் மிகத் துன்பமான, நெருக்கடியான காலனியாட்சிக் காலத்திலும் சுதந்திர வேட்கை ஒருபோதும் பலவீனமடைய வில்லை.

இந்திய தரிசனம் என்ற புத்தகத்தை எழுதுகின்றபொழுது சமீபத்திய பத்தாண்டுகளில் நடைபெற்ற, அவர் நேரில் பார்த்த, பங்கெடுத்த சம்பவங்களை நோக்கி மறுபடியும் திரும்பினார். இவற்றைப் பற்றி சுயசரிதையில் அவர் முன்பே எழுதியிருக்கிறார். அந்தப் புத்தகத்தை எழுதி பத்து வருடங்களுக்குப் பிறகு, இந்திய சுதந்திரத்துக்காகப் போராடியவர்கள் கடந்து வந்த நீண்ட, வளைந்து வளைந்து செல்கின்ற பாதையை மறுபடியும் ஆராய வேண்டிய அவசியத்தை உணர்ந்தார். சுதந்திர இயக்கத்தின் வெற்றிகளுக்கும் தோல்விகளுக்கும் காரணத்தை நிகழ்கால நோக்கிலிருந்து ஆராய விரும்பினார். சுதந்திரமடையப் போகும் நேரம் இதற்கு முன்னர் இவ்வளவு பக்கத்தில் வந்ததில்லை என்ற நம்பிக்கை நிறைந்த முடிவுக்கு வருகிறார். சுதந்திரம் கிடைத்ததும் இந்திய மக்கள் ''தங்கள் பாரம்பரியத்தில் பெருமையோடு மற்ற மக்களினங்களையும் நாடுகளையும் தங்கள் அறிவையும் இதயங்களையும் திறந்து வரவேற்பார்கள். இந்தப் பரந்த, கவர்ச்சி நிறைந்த உலகத்தில் அவர்கள் குடிமக்களாகி தங்களுடைய மூதாதையர்கள் முன்னோடிகளாகத் தொடங்கி வைத்த இந்தப் பழமையான தேடலில் மற்றவர்களோடு சேர்ந்து அணிவகுத்துச் செல்வார்கள்'' என்று அவர் எழுதினார்.

1944 ஏப்ரலில் பத்திரிகைகள் காந்தியின் உடல்நிலை சீர்கேடடைந்திருப்பதாக எழுதின. அவர் இன்னும் ஆகா கான் அரண்மனையில்தான் சிறைவைக்கப்பட்டிருந்தார். அவரோடு அறுபத்திரண்டு வருட காலம் ஆனந்தமான வாழ்க்கை நடத்திய கஸ்தூரிபா இரண்டு மாதங்களுக்கு முன்பு இறந்து விட்டார். 1943ம் வருடத்தின் வசந்த காலத்தின் போது காந்தி மூன்று வார காலம் உண்ணாவிரதமிருந்த பொழுது அவர் அநேகமாகப் பிழைக்க மாட்டார் என்று அதிகாரிகள் நினைத்தார்கள். அவர் உடல்தகனத்துக்காக சந்தனக் கட்டைகள் கொண்டு வரப்பட்டன. அந்த உண்ணாவிரதம் அவர் உடல் நலத்தைத் தீவிரமாக பாதித்துவிட்டது. எழுபத்து நான்கு வயதான காந்தியை மருத்துவ சோதனை செய்த டாக்டர் அவர் இரத்தக் குறைவு, அடிக்கடி மாறும் இரத்த அழுத்தம் மற்றும் சில நோய்களினால் பாதிக்கப்பட்டிருக்கிறார், அதிக நாட்கள் உயிரோடிருக்க மாட்டார் என்று வைசிராய்க்கு அறிக்கையளித்தார். 1943 அக்டோபரில் லின் லித்கோ பிரபுவுக்குப் பதிலாக புதிய வைசிராயாக வேவல் பிரபு பதவியேற்றிருந்தார். தான் பதவிக்கு வந்த சில மாதங்களுக்குள்ளாகவே காந்தியைப் போன்ற ஒரு மாபெரும் தலைவர் மரணமடைந்தால் தனக்குக் கெட்ட பெயர் ஏற்படும் என்று கருதியதால் அவரை விடுதலை செய்யுமாறு உத்தர விட்டார்.

1945ம் வருடத்தின் வசந்த காலத்தின் போது இரண்டாம் உலக யுத்தம் அதன் இறுதிக் கட்டங்களை நெருங்கிக் கொண்டிருந்தது. ஐரோப்பாவில் ஜெர்மன் பாசிசத்தின் கடைசிக் கோட்டைகள் சோவியத் இராணுவத்தின் சக்திமிகுந்த தாக்குதல்களால் நொறுங்கிக் கொண்டிருந்தன. சோவியத் யூனியன், அமெரிக்கா, கிரேட்பிரிட்டன் ஆகிய மூன்று அரசுகளின் மாநாடு கிரிமியாவில் நடைபெற்றது. அங்கே சோவியத் அரசாங்கம் நேச நாடு என்ற கடமைக்கிணங்க ஜப்பானுக்கு எதிராக இராணுவ நடவடிக்கைகளைத் தொடங்குவதாக வாக்குறுதியளித்தது. பசிபிக் தீவுகள் மீது அமெரிக்கத் துருப்புகளும் பர்மா மீது பிரிட்டிஷ் துருப்புகளும் நடத்திய தாக்குதல்களினால் தெற்கு ஆசியாவிலும் தென்கிழக்கு ஆசியாவிலும் இராணுவ நிலைமை நேச நாடுகளுக்குச் சாதகமான முறையில் மாறிவிட்டது. இந்தப் பிரதேசத்தில் நேச நாட்டுத்

துருப்புகளுக்குத் தலைமைத் தளபதியாக இருந்த மவுண்ட் பேட்டன் பிரபு ஜப்பானிலிருந்து இந்தியாவுக்கு ஏற்பட்ட ஆபத்து அநேகமாகத் தீர்ந்து விட்டது என்று சர்ச்சிலுக்கு அறிக்கையளித்தார்.

1942 ஆகஸ்ட் முதல் சிறைவைக்கப்பட்டிருந்த காங் கிரஸ் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஏற்பட்டது. பாசிசம் மற்றும் இராணுவ வெறியின் மீது வெற்றி நெருங்கி வந்து விட்டது. காங்கிரஸ் மூர்க்கத்தனமான எதிர்ப்புக் கொள்கையைக் கடைப்பிடித்து கலகங்களையும் கலவரங்களையும் தூண்டிவிடு கிறது, இந்தியா மீது ஜப்பான் படையெடுக்கக் கூடிய ஆபத்தேற்பட்டிருக்கும் சமயத்தில் இவை மொத்த யுத்த முயற்சியையுமே சீர்குலைக்கின்றன என்று காங்கிரசுக்கு எதி ராகச் சர்ச்சில் கூறிய குற்றச்சாட்டு மிகவும் கேலிக்குரியதாகி விட்டது.

மே 28ந் தேதியன்று ஜவகர்லாலும் அவருடைய தோழர் களும் அகமதுநகர் கோட்டையிலிருந்து சாதாரண மாகாண சிறைச்சாலைகளுக்கு மாற்றப்பட்டார்கள். ஜூன் 15ந் தேதிக் குள் இந்திய தேசிய காங்கிரஸ் தலைவர்கள் எல்லோரும் விடுதலை செய்யப்பட்டார்கள்.

''இந்தியா மாறிவிட்டது; மேற்பரப்பு அமைதியாகத் தோன்றுகிறது, ஆனால் அதற்குக் கீழே சந்தேகங்களும் கேள்வி களும், எண்ணக்குலைவும் கோபமும் அடக்கிவைக்கப்பட்ட உணர்ச்சியும் இருக்கிறது'' என்று 1945ம் வருடத்தின் கோடை காலத்தின் போது நேரு எழுதினார். ''காங்கிரஸ் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டதும் மேலும் மாற்றங்கள் ஏற்பட்டன. மேற்பரப்பில் விரிசல்கள் தோன்றத் தொடங் கின. நாடு முழுவதும் கொந்தளிப்பு வேகமாகப் பரவியது. மூன்று வருடகால அடக்குமுறைக்குப் பிறகு மக்கள் கூட்டை உடைத்து வெளியே வந்து கொண்டிருந்தார்கள். இப்படிப் பட்ட கூட்டங்களை, இப்படிப்பட்ட சுதந்திர வெறியை இதற்கு முன்பு ஒருபோதும் பார்க்கவில்லை'' என்று நேரு கூறினார்.

நாட்டிலிருந்த நிலைமை சூடாகிக்கொண்டிருந்தது. ஆயுதத் தளவாடங்களின் உற்பத்தி குறைக்கப்பட்டதும் நிலக்கரி, பஞ் சாலை மற்றும் உலோகத் தொழில்களில் ஏராளமான தொழி

லாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டார்கள். மோசமான அறுவடை காரணமாக உண்வுப் பற்றுக்குறை ஏற்பட்டிருந்தது. அவசியமான பொருள்களின் விலைகள் பன்மடங்கு அதிகரித்தன. பம்பாய், கல்கத்தா மற்றும் சென்னையில் பிரிட்டிஷ் எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்கள் மறுபடியும் வெடிப்பதற்கு இவை அனைத்தும் காரணமாக இருந்தன.

தங்களுடைய வாழ்க்கை மற்றும் வேலை நிலைமைகளில் முன்னேற்றங்களுக்கான பொருளாதாரக் கோரிக்கைகளோடு சேர்த்து உடனடியாக சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டுமென்றும் இந்தியர்கள் கோரினார்கள்.

பிரிட்டிஷ் அரசாங்கம் கலவரமடைந்தது. ஆலோசனைகளுக்காக லண்டனுக்கு வருமாறு வைசிராயைக் கூப்பிட்டது. அவர் இந்தியாவுக்குத் திரும்பியதும் காங்கிரஸ், முஸ்லிம் லீக் மற்றும் இதர அரசியல் கட்சிகளின் தலைவர்கள் மாநாட்டை சிம்லாவில் கூட்டினார்.

மாநாடு தொடங்குவதற்கு முன்னர் காங்கிரஸ் தலைவரான அபுல் கலாம் ஆஜாதை வைசிராய் சந்தித்தார். தான் போர் வீரனாக இருந்தாலும் மேன்மையான தத்துவக் கருத்துக்கள் தனக்குத் தெரியும் என்று காட்டிக் கொள்வதற்காக வைசிராய் கான்ட்டிலிருந்து மேற்கோள்களை ஒப்பித்தார் என்றாலும் அவரிடம் அரசியல் சாதுரியம் இல்லை. யுத்தம் இன்னும் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது, ஜப்பான் மிகவும் பலமான எதிரி, எனவே இந்தியாவில் இப்பொழுது தீவிரமான அரசியல் சட்ட மாற்றங்களைச் செய்ய முடியாது என்று அவர் ஆஜாதிடம் பச்சையாகச் சொன்னார். இத்தகைய நிலைமைகளில் தீவிரமான எந்த நடவடிக்கைகளுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இல்லை, யுத்தம் முடிவடைந்த பிறகுதான் அவை சாத்தியம், ஆனால் மாற்றங்களுக்கான அடிப்படைகளை இப்பொழுதே உருவாக்க முடியும் என்று தாங்கள் கருதுவதாக அவர் கூறினார். வைசிராயின் தலைமையின் கீழ் நிர்வாகக் கவுன்சில் மாற்றியமைக்கப்படும். அதில் இந்தியர்கள் மட்டுமே உறுப்பினர்களாக நியமிக்கப்படுவார்கள். இந்தக் கவுன்சிலின் ஆலோசனைப்படி நடந்து கொள்ளக் கூடிய ஒரு நிலைமையை ஏற்படுத்துவதற்கு வைசிராய் முயற்சிப்பார். காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே உடன்பாடு ஏற்படுவது அவசியமென்றும் அவர் வற்புறுத்திக் கூறினார்.

முஸ்லிம் லீக் கட்சியுடன் ஏதாவதொரு வகையான உடன்பாடு ஏற்படுவது சந்தேகமே என்று ஆஜாத் கூறினார். பிரிட்டிஷ் அரசாங்கம் முஸ்லிம் லீகின் பிரிவினைக் கொள்கையை நிச்சயமாக ஆதரிக்கும் என்று அக்கட்சியின் தலைவர்கள் நம்புகிறார்கள்; காங்கிரசோடு ஒத்துழைக்க ஜின்னா மறுப்பது அதை நிரூபிக்கிறது என்று சுட்டிக் காட்டினார். இந்தப் பிரச்சினையில் பிரிட்டிஷ் அரசாங்கம் நடுநிலையை வகித்து வந்திருக்கிறது, எதிர்காலத்திலும் நடுநிலைமையாகவே இருக்கும் என்று வைசிராய் அவரிடம் உறுதியளித்தார்.

ஜூன் 24ந் தேதியன்று நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில் நேரு கலந்து கொண்டார். வைசிராயுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளைப் பற்றி ஆஜாத் எடுத்துக் கூறினார். மாநாட்டில் கலந்துகொள்வதென்றும் சில கேள்விகளுக்கு வைசிராயிடமிருந்து தெளிவான பதில்களைக் கோருவதென்றும் காங்கிரஸ்காரர்கள் முடிவு செய்தார்கள். நிர்வாகக் கவுன்சில் நடைமுறையில் தேசிய அரசாங்கத்தைப் போல இருக்குமென்றால் அதன் முடிவுகள் வைசிராயைக் கட்டுப்படுத்துமா அல்லது அவருக்கு ரத்து அதிகாரம் உண்டா? ''மக்களிடமிருந்து உயரமான மதிற்சுவரினால் பிரித்துவைக்கப்பட்டிருக்கும்'' இராணுவத்தோடு காங்கிரஸ் தலைவர்கள் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியுமா? இறுதியாக, ஜப்பானுடனை யுத்தத்தில் இந்தியா தொடர்ந்து பங்கெடுக்கும் பிரச்சினையை இறுதியாகத் தீர்க்கும் உரிமை இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய சட்ட மன்றத்துக்குத் தரப்படுமா?

மறுநாள் சிம்லா மாநாடு தொடங்கியது. அதில் கலந்து கொள்பவர்களுக்கிடையே இருக்கும் தீவிரமான கருத்து வேற்றுமைகள் முதற்கூட்டத்திலேயே வெளிப்பட்டன. வேவல் பிரபுவும் அவருடைய ஆலோசகர்களும் காங்கிரஸ் பிரதிநிதிகளின் கேள்விகளுக்குத் தெளிவற்ற பதில்களைக் கண்டுபிடிக்க முயற்சி செய்து கொண்டிருந்த பொழுது நிர்வாகக் கவுன்சிலில் முஸ்லிம் பிரதிநிதிகளை நியமனம் செய்யும் உரிமை முஸ்லிம் லீகுக்கு மட்டுமே இருக்க வேண்டும் என்று ஜின்னா கோரினார். நேருவும் காந்தியும் இந்தக் கோரிக்கையைத் தீர்மானமான முறையில் மறுத்தார்கள். அதை ஏற்றுக் கொண்டால் காங்கிரஸ் கட்சியின் தலைவரும் உண்மையான

தேசபக்தருமான ஆஜாத் உள்பட முஸ்லிம் காங்கிரஸ் காரர்கள் அரசாங்கத்தில் இடம் பெற முடியாமற்போய் விடும்.

ஜின்னுவின் எதிர்ப்பினுல் மாநாட்டில் உடன்பாடு ஏற்பட முடியாமற்போய்விட்டது. இந்தத் தடவை காலனியாதிக்க வாதிகளின் சூழ்ச்சிகளைக் காட்டிலும் உள்நாட்டு மத வேறு பாடுகளே மாநாடு தோல்வியடையக் காரணம் என்று நேரு வேதனையோடு உணர்ந்தார். மாநாட்டு மேசையில் எதிரெதிராக அமர்ந்திருந்த காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீக் தலைவர்களுக்கிடையே, இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே தீவிரமான தகராறுகள் ஏற்பட்ட பொழுது பிரிட்டிஷ்காரர்கள் அதை எவ்வளவு மகிழ்ச்சியோடு ரசித்துக் கொண்டிருந்தார்கள் என்பதை நினைத்த பொழுது அவருடைய வேதனை மேலும் அதிகரித்தது. ஒரு காலத்தில் மதங்களுக்கிடையே சமரச உணர்ச்சியோடும் முழு ஒற்றுமையோடும் வாழ்ந்த ஒரே தேசத்தின் பிரதிநிதிகளா இவர்கள் என்று நேரு நினைத்தார்.

சிம்லா மாநாடு நடைபெற்றுக்கொண்டிருந்த பொழுது பிரிட்டனில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. அதில் கன்சர்வேடிவ் கட்சி படுதோல்வி அடைந்தது, வெற்றிபெற்ற லேபர் கட்சியின் தலைவரான கிளெமென்ட் அட்லி பிரதம மந்திரியானுர்.

புதிய பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவைப் பற்றித் தன்னுடைய கொள்கையை அறிவிக்கும் என்று காங்கிரஸ் தலைவர்கள் பொறுமையில்லாமல் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆஜாத் அட்லிக்குப் பாராட்டுத் தந்தி அனுப்பினுர். லேபர் கட்சி அரசாங்கம் இந்தியாவுக்குச் சுயநிர்வாகம் கொடுக்கும் என்று காங்கிரஸ் நம்புவதாகத் தந்தியில் குறிப்பிட்டிருந்தார் (லேபர் கட்சி எதிர்க் கட்சியாக இருந்த பொழுது அப்படி அடிக்கடி கூறினுர்கள்). லண்டன் அரசாங்கத்தில் தீவிரமான கொள்கை மாற்றங்கள் சாத்தியமா என்று நேரு சந்தேகித்தார். எனவே இப்படித் தந்தி அனுப்புவதை அவர் எதிர்த்தார், தந்தி அனுப்ப வேண்டாம் என்று ஆஜாதின் மனதை மாற்ற முயற்சி செய்தார். அட்லியிடமிருந்து வந்த பதில் அவருடைய சந்தேகங்களைப் போக்கவில்லை, இந்தியப் பிரச்சினைக்கு சரியான தீர்வுக்காக லேபர் கட்சி எல்லா

முயற்சிகளையும் செய்யும் என்று அட்லி தன் பதிலில் தெளி வற்ற முறையில் தெரிவித்திருந்தார்.

பிறகு, ஆகஸ்ட் 15ந் தேதியன்று இந்தியாவுக்கு ''முழு சுயநிர்வாகம்'' கொடுப்பதற்கு உதவி செய்யப் போவதாக அட்லி அரசாங்கம் அறிவித்தது. ஒரு மாதத்துக்குப் பிறகு இந்தியாவில் மத்திய மற்றும் மாநில சட்ட மன்றங்களுக்கு 1945 நவம்பர் முதல் 1946 ஏப்ரல் மாதத்துக்குள் தேர்தல் கள் நடைபெறும் என்று அறிவிக்கும் ஆவணத்தை வெளி யிட்டது. தேர்தல்கள் முடிந்த பிறகு இந்தியாவுக்குப் புதிய அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரிப்பதற்காக அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படும். இரண்டு சந்தர்ப்பங்களிலுமே பிரிட்டிஷ்காரர்கள் ''சுதந்திரம்'' என்ற வார்த்தையைக் குறிப்பிடாதபடி கவனமாக நடந்துகொண்டார்கள். இதைக் கண்டு இந்தியத் தலைவர்கள் எச்சரிக்கை அடைந்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரேரணைகள் ''தெளிவில்லாதிருக் கின்றன, இந்திய மக்களின் கோரிக்கைகளுக்கு அவை பொருந்தி வரவில்லை'' என்று நேரு கூறினார்.

லேபர் கட்சி மந்திரிசபையின் சமரச முடிவுகள் இந்தி யாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்தைத் தொடர்ந்து நீடிக்கச் செய் வதற்கு அவகாசம் பெறுவதற்காகச் செய்யப்பட்டவை என்று தெரிந்ததும் இந்தியர்கள் அதிருப்தி அடைந்தார்கள். வெகு சீக்கிரத்தில் பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராக பிரம்மாண்ட மான ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. ஜப்பான் சரணடைந்த சில வாரங்களுக்குப் பிறகு இந்திய தேசிய இராணுவம் என்று சொல்லப்பட்ட படையைச் சேர்ந்த மூன்று அதிகாரி கள் மீது அரசாங்கம் நடத்திய நீதிமன்ற விசாரணை இதற்கு நேரடியான காரணமாக இருந்தது.

இதற்கிடையே நேருவும் மற்ற காங்கிரஸ் தலைவர்களும் இந்திய தேசிய இராணுவம் அமைக்கப்பட்ட சந்தர்ப்பங் களைப் பற்றியும் அதை நிறுவிய தங்களுடைய முன்னாள் தோழரான சுபாஷ் சந்திர போசுக்கு ஏற்பட்ட சோகமான முடிவைப் பற்றியும் தெரிந்து கொண்டார்கள்.

1943ம் வருடத்தில் பிரிட்டிஷ் இராணுவத்தைச் சேர்ந்த சுமார் இருபதாயிரம் இந்தியத் துருப்புகள், மலாயாவிலும் சிங்கப்பூரிலும் யுத்தத்தில் ஈடுபட்டவர்கள் ஜப்பானியர்களால் யுத்தக் கைதிகளாகப் பிடிக்கப்பட்டு பர்மாவிலும் மலாயா

விலும் சிறை முகாம்களில் வைக்கப்பட்டிருந்தார்கள். ''சுதந்திர இந்தியாவின் தற்காலிக அரசாங்கத்தின்'' தலைவராகத் தன்னை அறிவித்துக் கொண்ட போஸ் அவர்களைக் கொண்டு ஒரு இராணுவத்தை அமைத்தார். பிரிட்டிஷ்காரர்களிடமிருந்து இந்தியாவை விடுதலை செய்வது அந்த இராணுவத்தின் நோக்கம் என்று அவர் கூறினார்.. இந்தியாவின் சுதந்திரத்துக்காகப் போராடுவோம் என்று போஸ் உணர்ச்சிகரமாக அறைகூவியதன் விளைவாக ஏராளமான இந்துக்களும் முஸ்லிம்களும் சீக்கியர்களும் தங்கள் மத வேறுபாடுகளை மறந்து அவருடைய இராணுவத்தில் சேர்ந்தார்கள். இந்திய தேசிய இராணுவம் பிரிட்டிஷ்காரர்களை முறியடிப்பதற்கு ஜப்பானியர்கள் உதவி செய்வார்கள், பிறகு இந்தியாவின் எதிர்காலத்தை இந்திய மக்களே முடிவு செய்து கொள்ளும் வகையில் இந்தியாவை விட்டு வெளியேறுவார்கள் என்று போஸ் மனப்பூர்வமாக நம்பினார். போசின் மன உறுதியும் நம்பிக்கையும் இந்திய வீரர்களுக்கு எழுச்சியூட்டியது. 1944ம் வருடத்தின் தொடக்கத்தில் இந்திய தேசிய இராணுவத்தின் பிரிவுகள் இந்தியாவின் கிழக்கு எல்லைப் பகுதியிலுள்ள அஸ்ஸாம் மலைகளில் பிரிட்டிஷ் படைகளை எதிர்த்துப் போர் புரிந்தன. அவர்கள் தோல்வியடைந்தார்கள், ஏராளமானவர்கள் கைதிகளாகப் பிடிக்கப்பட்டார்கள். போஸ் 1945 ஆகஸ்டில் ஒரு விமான விபத்தில் மரணமடைந்தார்.

போஸ் மரணமடைந்த செய்தியைக் கேட்டு ஜவகர்லால் துயரமடைந்தார். போசுடன் அவருடைய கருத்து வேறுபாடுகளும் பரஸ்பரத் தகராறுகளும் இப்பொழுது அற்பமானவையாகத் தோன்றின. அவருடைய குழந்தை மனோபாவத்தையும் ஆன்மிகக் கூருணர்ச்சியையும் மகத்தான தேசபக்தியையும் பற்றி அவர் நினைத்தார். போசின் கருத்துக்கள் தவறானவையாக இருந்திருக்கலாம், ஆனால் அவருடைய நடவடிக்கைகளுக்குக் களங்கம் மட்டும் கற்பிக்க முடியாது என்று நேரு ஆணித்தரமாகக் கூறினார். ஆஜாதும் காந்தியும் நேருவின் கருத்துக்களை ஆதரித்தார்கள். மகாத்மா போசைப் பற்றி ஒரு நீண்ட கட்டுரை எழுதினார். ''தியாகத்தைப் பற்றி இந்திய மக்களுக்கு பாடம் போதித்தவர்'' போஸ் என்று அவர் பாராட்டினார்.

‘‘இந்தியாவின் அரசர்-சக்கரவர்த்திக்கு எதிராக யுத்தம் செய்ததாகக்’’ குற்றம் சாட்டப்பட்ட இந்திய தேசிய இராணுவத்தின் அதிகாரிகளை ஆதரித்து நீதி விசாரணையில் காங்கிரஸ் வாதாடும் என்று 1945 நவம்பரில் காங்கிரஸ் தலைவர்கள் அறிவித்தார்கள்.

விசாரணையில் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு ஆதரவாக வாதாடுவதற்காக நேரு பல வருடங்களுக்குப் பிறகு முதல் தடவையாக வழக்குரைஞரின் கறுப்பு அங்கியை அணிந்து கொண்டார். அந்த இளைஞர்கள் செய்த தவறுகள் எப்படியிருந்தாலும் அவர்களுடைய தேசபக்தியே அவ்வாறு செய்யத் தூண்டியது என்று அவர் நீதி மன்றத்தில் வாதாடினார்.

வழக்கு விசாரணை நடைபெற்றுக் கொண்டிருந்த பொழுது கல்கத்தாவில் பெருந்திரளான மக்கள் அரசாங்கத்தைக் கண்டித்து ஆர்ப்பாட்டங்கள் நடத்தினார்கள். இவற்றில் மாணவர்கள், கைவினைஞர்கள், அலுவலக ஊழியர்கள், சிறு வர்த்தகர்கள் கலந்து கொண்டு இந்திய தேசிய இராணுவத்தின் எல்லா அதிகாரிகளையும் போர்வீரர்களையும் விடுதலை செய்யுமாறு கோரினார்கள். பம்பாய், சென்னை மற்றும் இதர நகரங்களிலும் பெரிய அளவில் ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. குற்றம் சாட்டப்பட்ட எல்லோருக்கும் மரண தண்டனை கொடுப்பதென்று நீதிபதிகள் முதலில் நினைத்திருந்தார்கள். ஆனால் நாட்டில் நடைபெற்ற சம்பவங்கள் அந்த முடிவை மாற்றின. அதற்குப் பதிலாக அவர்கள் எல்லோரும் இந்தியாவிலிருந்து ஆயுள் முழுவதும் சிறை குடியிருப்புக்கு அனுப்பப்பட்டனர். பிறகு வைசிராய் அவர்களுக்கு மன்னிப்பளித்து ஆணை வெளியிட்டார்.

கலவரங்கள் நின்றுவிடவில்லை. வேலைநிறுத்தங்கள் அதிகரித்துக்கொண்டிருந்தன. தொழிற்சாலைகளிலும் பட்டறைகளிலும் அவை மென்மேலும் அரசியல் தன்மையை, காலனியாதிக்க எதிர்ப்புத் தன்மையைப் பெற்றன. ‘‘இந்தியாவை விட்டு வெளியேறு!’’ என்ற கோஷம் எங்கும் முழங்கியது. பஞ்சாப், பீகார், ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த விவசாயிகள் நிலச்சுவாந்தார்கள் மற்றும் லேவாதேவிக்காரர்களின் எதேச்சாதிகார ஆட்சிக்கு எதிராகப் போராட்டத்தை நடத்தினார்கள்.

1946 பிப்ரவரி 18ந் தேதியன்று காலையில் இராயல் இந்தியக் கடற்படையைச் சேர்ந்த கடற்படைவீரர்கள் பம்பா

யில் கலகம் செய்தார்கள். சீக்கிரத்தில் கராச்சி, சென்னை மற்றும் கல்கத்தா துறைமுகங்களிலிருந்த கப்பல்களின் மாலுமிகள் அதற்கு ஆதரவு தெரிவித்தார்கள். கலகம் செய்தவர்கள் பிரிட்டிஷ் அதிகாரிகள் தங்களை அவமதிப்பதையும் இகழ்ச்சி செய்வதையும் நிறுத்த வேண்டுமெனக் கோரினார்கள். கப்பல்களில் பறந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் கொடிகளைக் கீழே இறக்கிவிட்டு காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீக் கொடிகளைப் பறக்க விட்டார்கள். சில கப்பல்களில் செங்கொடிகளும் ஏற்றப்பட்டன.

கடற்படையில் ஏற்பட்டிருக்கும் கலகத்தைப் பற்றி வைசிராய் அனுப்பிய அவசரத் தந்தி லண்டனில் பீதியை ஏற்படுத்தியது. இந்திய ராணுவத்தின் விசுவாசத்தைப் பற்றி அதிகார பூர்வமான அரசியல்வாதிகள் அது வரையிலும் தீவிரமான சந்தேகங்களை வெளியிட்டதில்லை. இதற்கு என்ன பதில் நடவடிக்கை எடுப்பது என்று அவர்கள் பரபரப்பாக முயற்சி செய்து கொண்டிருந்தார்கள். மந்திரி சபையில் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் பொறுப்பு வகிக்கின்ற பெத்திக் லாரென்ஸ் பிரபுவின் தலைமையில் ஒரு அரசாங்க தூதுக்குழு இந்தியாவுக்கு அனுப்பப்படும், தூதுக்குழுவினர் இந்தியாவின் எதிர்கால அரசு அமைப்பைப் பற்றி அரசியல் கட்சிகளின் தலைவர்களோடு பேச்சு வார்த்தைகள் நடத்துவார்கள் என்று பிப்ரவரி 19ந் தேதியன்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் அறிவிக்கப்பட்டது. அதே சமயத்தில் இந்தியாவுக்கு கூடுதல் பிரிட்டிஷ் துருப்புகளை அனுப்புவதென்றும் பிரிட்டிஷ் அதிகாரிகளையும் கடற்படைவீரர்களையும் அனுப்பி இராயல் இந்தியக் கடற்படையைப் பலப்படுத்துவதென்றும் அட்லி மந்திரி சபை அவசரமாக முடிவு செய்தது.

காங்கிரஸ் தலைவர்கள் மிகவும் எக்கச்சக்கமான நிலைமையில் சிக்கி விட்டார்கள். கலகம் செய்த கடற்படைவீரர்கள் காங்கிரஸ் உதவி புரிய வேண்டுமென்று கேட்டார்கள், ஆனால் அவர்களுடைய நடவடிக்கைகளுக்குப் பகிரங்கமாக அங்கீகாரம் கொடுப்பதும் ஆதரவளிப்பதும் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தைகளை நிராகரிப்பதாகக் கருதப்படும். அது தவிர்க்க முடியாத வகையில் இந்தியர்களுக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கும் இடையே ஆயுதந்தாங்கிய மோதல்களை ஏற்படுத்தும். அது மறுபடியும் வன்முறைக்கு வழிவகுக்

கும், உயிர்கள் பலியாகும், துன்பங்கள் அதிகரிக்கும்... படேல் பம்பாய்க்கு விரைந்து சென்று கலகம் செய்த வீரர்களைச் சந்தித்தார். கடற்படையில் நிலவும் இன வேற்றுமையை அவர்கள் எதிர்த்தது நியாயமானதே என்று கூறி எதிர் காலத்தில் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமானால் காங்கிரஸ் அவர்களைப் பாதுகாக்கும் என்று உறுதியளித்தார். ஆனால் கடற்படையில் கலவரங்களை நிறுத்த வேண்டும், சமாதான பூர்வமான வழிகளில் இந்தியா சுதந்திரம் அடைவதற் காகக் காங்கிரஸ் செய்துகொண்டிருக்கும் முயற்சிகளை அவை அழித்துவிடும் என்று அவர் வற்புறுத்தினார். முஸ்லிம் லீக் தலைவர்களும் ஆதரவு கொடுக்க மறுத்தார்கள். பிப்ரவரி 23ந் தேதியன்று கடற்படைவீரர்கள் தங்களுடைய கப்பல் களில் கறுப்புக் கொடிகளை ஏற்றினார்கள், போராட்டம் முடிந்து விட்டது என்று அறிவித்தார்கள்.

1946 மார்ச் மாதத்தின் கடைசி வாரத்தில் பெத்திக் லாரென்ஸ் தூதுக்குழு இந்தியாவுக்கு வந்தது. சில தினங்களுக் குப் பிறகு மத்திய மற்றும் மாகாண சட்ட மன்றங்களுக்கு 1945ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் நடைபெற்ற தேர் தல்களின் முடிவுகள் அறிவிக்கப்பட்டன. எல்லா மாகாணங் களிலும் இந்துக்கள் தொகுதிகளில் வாக்குகளில் தனிப் பெரும் பான்மை பெற்று காங்கிரஸ் மாபெரும் வெற்றியடைந்தது. நாட்டில் மக்களிடம் அதிகமான ஆதரவைப் பெற்ற, செல் வாக்கு அதிகமுள்ள அரசியல் கட்சியாகத் தொடர்ந்து காங் கிரஸ் இருப்பது நிரூபிக்கப்பட்டது.

தேர்தல்களில் காங்கிரசுக்குக் கிடைத்த வெற்றியைக் கண்டு ஜவகர்லால் மகிழ்ச்சியும் உற்சாகமும் அடைந்தார். இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுக்க பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இருந்தால்தான் இரு நாடுகளுக்குமிடையே உள்ள சிக்கலான பிரச்சினைகளைத் தீர்க்க முடியும் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இந்தியா எடுத்துக் காட்டுவதற்கு இதுதான் சரியான நேரம் என்று நேரு கருதினார். காங்கிரஸ் தலைவரான ஆஜாத்திடம் இந்தத் தீவிரம் சற்றுக் குறைவாகவே இருந்தது. இந்திய நிலைமையைப் பற்றி அட்லி சமீபத்தில் வெளியிட்ட அறிக்கை, குறிப்பாக ''பழைய முறைகளைப் பிடிவாதமாகக் கையாள முயற்சிப்பது தீர்வுக்கு வழி வகுக்காது, முட்டுக் கட்டையைத்தான் ஏற்படுத்தும்'' என்று பிரதம மந்திரி

குறிப்பிட்டது அவர் மீது அதிகமான தாக்கத்தை ஏற்படுத்தி யிருந்தது. ஆனுல் நேருவும் ஆஜாதும் மற்ற காங்கிரஸ் தலைவர்களுமே நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி காங்கிர சுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே தீவிரமான கருத்து வேறுபாடுகள் தொடர்வதைப் பற்றிக் கவலை அடைந்திருந் தார்கள். தேர்தல் களத்தில் ஜின்ஞு ஒவ்வொரு பொதுக் கூட்டத்திலும் இந்திய முஸ்லிம்களின் எதிரி பிரிட்டிஷ் அர சாங்கம் அல்ல, காங்கிரஸ் கட்சியே என்று வற்புறுத்திக் கூறி ஞர். காங்கிரஸ் கட்சி இந்துக்களின் நலன்களை மட்டுமே ஆதரிப்பதாக அவர் கூறிஞர்.

ஜின்ஞு அவருடைய நண்பர்களுக்கும் கூட ஒரு புதிரா கவே இருந்தார். ஜின்ஞுவுடன் வெளிப்படையாக கருத்தொற் றுமை உள்ள கடற்படை அமைச்சரான ஏ.வி. அலெக் சாந்தார் பிரிவினையைத் தீவிரமாக ஆதரிப்பவர். அவர் ஜின் ஞுவுடன் பேச்சுவார்த்தை நடத்திய பிறகு, நேரடியான கேள்விகளுக்கு நேர்டியாக பதில் கூறுவதை இந்த அளவுக்கு மிகவும் கவனமாகத் தவிர்க்கின்ற ஒரு மனிதரை நான் இதற்கு முன்பு சந்தித்ததில்லை என்று தன்னுடைய நாட் குறிப்பில் எழுதிஞர். பாகிஸ்தான் எப்படி அமைக்கப்படும், அதன் அரசு அமைப்பு எப்படி இருக்கும் என்று அலெக் சாந்தர் ஜின்ஞுவைக் கேட்டபொழுது புரிந்து கொள்ளக் கூடிய முறையில் அவரால் பதிலளிக்க முடியவில்லை. இது அலெக்சாந்தருக்கு மிகவும் வியப்பைக் கொடுத்தது. முஸ்லிம் லீகின் பிரிட்டிஷ் ஆதரவாளர்கள், அதன் தலைவரின் பிரிவினை வாதக் கருத்துக்களை ஊக்குவிப்பவர்களுக்கே ஜின்ஞுவோடு பேச்சுவார்த்தை நடத்துவது சிரமமாக இருந்தால் ஜின்ஞு தன்னுடைய எதிரிகள் என்று கருதிய காங்கிரஸ்காரர்களுக்கு அது ஒப்பிடவும் முடியாத அளவுக்குக் கஷ்டமான காரிய மாகவே இருந்திருக்கும். ஆனுல் நாட்டின் பிரிவினையைத் தடுப்பதற்காக முஸ்லிம் லீகுடன் ஏதாவதொரு வகையான உடன்பாட்டுக்கு வர முடியும் என்ற கடைசி நம்பிக்கையைக் காங்கிரஸ்காரர்கள் இன்னும் இழந்து விடவில்லை.

பெத்திக் லாரென்ஸ் தூதுக்குழுவினர் மற்றும் வைசி ராய்க்கும் காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீக் தலைவர்களுக்கு மிடையே பேச்சுவார்த்தைகள் சிம்லாவில் மே 5ந் தேதியன்று தொடங்கின. இதற்கு முந்திய ஆறு வாரங்களின் போது

தூதுக்குழுவின் உறுப்பினர்கள் நாட்டின் அரசியல் நிலைமையைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக முக்கியமான அரசியல் கட்சிகள் மற்றும் கோஷ்டிகளின் பிரதிநிதிகளைத் தனித் தனியாகச் சந்தித்துப் பேசினார்கள்.

காங்கிரஸ் தூதுக்குழுவுக்கு ஆஜாத் தலைமை தாங்கினார். நேருவும் படேலும் அப்துல் கபார் கானும் உறுப்பினர்களாக இருந்தார்கள். முஸ்லிம் லீகின் பிரதிநிதிகளாக ஜின்னா, லியாக்கத் அலி கான் (பிற்காலத்தில் பாகிஸ்தான் பிரதம மந்திரியாக இருந்தார்) மற்றும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தையும் ஐக்கிய மாகாணத்தையும் சேர்ந்த இரண்டு முஸ்லிம்கள் கலந்துகொண்டார்கள்.

முஸ்லிம் லீகின் பிரதிநிதிகள் காங்கிரஸ்காரர்களை மதிப்பதில்லை என்று எடுத்துக் காட்ட முயற்சி செய்வதைப் போல ஓரளவுக்கு நாடகமாடுகிறார்கள் என்பதை நேரு கவனிக்கத் தவறவில்லை. கூட்டம் ஆரம்பமாவதற்கு முன்பு ஜின்னா பிரிட்டிஷ் பிரதிநிதிகளை மரியாதைக்காக சிரிப்போடு வரவேற்றார், நேருவையும் படேலையும் பார்த்து உணர்ச்சியற்ற முறையில் முகமன் கூறினார். முஸ்லிம் காங்கிரஸ்காரர்களான ஆஜாதையும் அப்துல் கபார் கானையும் பார்க்காதது போல நடந்துகொண்டார்.

''இந்தியாவில் முழு சுயநிர்வாகத்தை சீக்கிரமாக ஏற்படுத்துவதுதான் இந்த தூதுக்குழுவின் நோக்கம்'' என்று பிரிட்டிஷ்காரர்கள் ஆரவாரமான முறைமையோடு அறிவித்தார்கள். ஆனால் அவர்கள் தெரிவித்த பிரேரணைகள் உண்மையில் 1942ல் சர்ச்சில் அரசாங்கம் இந்தியாவின் மீது திணிக்க விரும்பிய ''பிரகடனத்தைப்'' போன்றுதான் இருந்தன.

தூதுக்குழுவின் பிரேரணைகளை விவாதிப்பதற்கும் காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீகின் நிலைகளை விளக்குவதற்கும் ஏழு நாட்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. ''இந்துக்கள் பெரும்பான்மையாக இருக்கும் அரசாங்கத்தை ஏற்படுத்தக் கூடிய எந்த அரசியலமைப்புச் சட்டத்தையும் முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்ள முடியாது'', முஸ்லிம்கள் பெரும்பான்மையாக இருக்கும் மாகாணங்களைச் சேர்த்து ஒரு தனி அரசு அமைக்கப்பட வேண்டும் என்று ஜின்னா கோரினார். இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில் கூட்டாட்சி அரசியல

மைப்புச் சட்டம் ஒன்றுதான் வெற்றிபெற முடியும் என்று காந்தி கூறியிருப்பதை ஆஜாதும் நேருவும் எடுத்துக் கூறினார்கள். நாட்டின் ஜனத்தொகையில் மிகப் பெரிய பகுதியினராக இந்துக்கள் இருப்பதால் அப்படிப்பட்ட மத்திய அரசாங்கத்தில் அவர்கள் இயற்கையாகவே பெரும்பான்மையைக் கொண்டிருப்பார்கள், இத்தகைய மத்திய அரசாங்கத்திடம் எங்களுக்கு நம்பிக்கை இல்லை, முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்களில் அந்த மத்திய அரசாங்கம் தலையிடக் கூடும் என்று லீகின் பிரதிநிதிகள் கூறினார்கள். இத்தகைய அச்சங்களைப் போக்குவதற்காக, உள்நாட்டு விவகாரங்களில் அந்த மாகாணங்களுக்கு முழு சுதந்திரம் கொடுப்பதற்கும் மத்திய அரசு அமைப்புக்களில் அவர்களுடைய பங்கு பற்றி உத்தரவாதமளிப்பதற்கும் தயாராக இருப்பதாகக் காங்கிரஸ் தலைவர்கள் கூறினார்கள். ஆனால் ஜின்னா அவர்களுடைய வாதங்களைக் கேட்கவில்லை.

பிரிட்டிஷ் தூதுக்குழுவின் உறுப்பினர்கள் தங்களோடு கலந்தாலோசித்த பிறகு, காங்கிரஸ் கட்சி அரசாங்கத்துக்குத் தலைமை வகிக்க உத்தேசிக்கிறது மற்றும் இந்தியாவில் பிரிட்டிஷ் செல்வாக்கை ஒழிப்பதற்குத் தன்னாலியன்ற எல்லாவற்றையும் செய்யும் என்று ஏகமனதாக முடிவு செய்தார்கள். மற்ற உறுப்பினர்கள் சிந்தனையில் மூழ்கியிருந்தபொழுது அலெக்சாந்தர் தனியாக ஒரு முடிவுக்கு வந்தது அவர்களுக்கு வியப்பைக் கொடுத்தது. பேச்சுவார்த்தைகள் முழுவதிலுமே அவர் கவலையோடு மௌனமாக உட்கார்ந்திருந்தார். ஆனால் திடீரென்று எழுந்து நின்று போர்வீரர்களுக்குரிய அதிகார தோரணையில் ''டன்கர்க் ஏற்பட்டபொழுது பிரிட்டன் பீதியடையவில்லை; இப்பொழுதும் பீதி அடையப் போவதில்லை'' என்று கூறினார். தூதுக்குழுவின் உறுப்பினர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அலெக்சாந்தர் சொன்ன கருத்தைப் பற்றி யாரும் பேச விரும்பவில்லை. 1940 கோடைகாலத்தில் பிரெஞ்சுக் கடற்கரையில் பிரிட்டிஷ் இராணுவம் படு தோல்வியடைந்த பிறகு அவசரமாக அந்த இடத்திலிருந்து பின்வாங்கினார்கள், அதாவது முன்னேறிக் கொண்டிருக்கும் ஜெர்மானியர்களிடம் பீதியடைந்து தப்பி ஓடினார்கள் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

பேச்சுவார்த்தைகள் நடைபெற்ற ஏழு நாட்களிலுமே,

நாம் இங்கே வந்திருக்கும் முக்கியமான நோக்கம் வேறு, ஆனால் அதைப் பேசாமல் புரிந்து கொள்ள முடியாத சிபாரிசு களை, புதிர்களைப் போன்ற சூத்திரங்களை விவாதிக்கும் புதை மணலுக்குள் நன்றாகச் சிக்கிவிட்டோம் என்ற உணர்ச்சி ஒரு தடவை கூட நேருவிடம் ஏற்படாதிருக்கவில்லை. அடிப்படைப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு ஒரு அரசியல் இயந்திரத்தை உருவாக்குவதைப் பற்றியும் அதன் அமைப்பைப் பற்றியும் சொல்லப்பட்ட வாதங்களின் வேகத்தில் சில உறுப்பினர்கள் அந்த அடிப்படைப் பிரச்சினை என்ன என்பதைக் கூட மறந்து விட்டார்கள் என்று சில சமயங்களில் அவருக்குத் தோன் றியது.

சிம்லாவில் நடைபெற்ற இரண்டாவது மாநாட்டினால்— ஒரு வருடத்துக்கு முன்னர் நடைபெற்ற முதல் மாநாட் டைப் போல—எத்தகைய பலனும் ஏற்படவில்லை. ஆனால் பிரிட்டிஷ்காரர்கள் அதைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வில்லை. இந்தியாவின் மிகவும் சக்திவாய்ந்த இரண்டு அரசியல் கட்சிகளுக்கிடையே தகராறுகள் நீடிப்பது காலனியாதிக்கவாதி களுக்குச் சாதகமாக இருந்தது, ''மக்களைப் பிரித்தாளுகின்ற'' பழைய கொள்கையை அவர்கள் தொடர்ந்து கடைப்பிடிக்க உதவியது. இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே தகராறு களை ரகசியமாகத் தூண்டிவிட்ட பிரிட்டிஷ் ஆட்சியாளர் கள் இப்பொழுது இந்தியாவில் ''வன்முறை, குழப்பம், உள் நாட்டுப் போரைக் கூட'' ஏற்படுத்தக் கூடிய மத, ஜாதி வேற்றுமைகள்தான் இந்தியாவின் சுதந்திரத்துக்கு எதிராக உள்ள ஒரே தடை என்று சிறிதும் சங்கடமில்லாமல் வலி யுறுத்தினார்கள்.

மே மாதம் 16ந் தேதியன்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி பெத்திக் லாரென்ஸ் தூதுக்குழுவின் பலனாகத் தயாரிக்கப்பட்ட புதிய அரசியலமைப்புச் சட்டப் பிரேரணைகளை ஆங்கில நாடாளு மன்றத்தில் அறிவித்தார். ''பிரிட்டிஷ் இந்தியாவையும் சுதேச சமஸ்தானங்களையும் கொண்ட இந்திய யூனியனை ஏற்படுத்துவதை'' பிரிட்டிஷ் அரசாங்கம் ''சிபாரிசு செய்தது''. இந்த யூனியன் வெளிநாட்டு விவகாரங்கள், பாதுகாப்பு, போக்குவரத்து ஆகியவற்றைக் கவனிக்கும்; அதற்குத் தேவை யான நிதியை வரிகள் மூலம் பெற்றுக் கொள்ளும் அதிகாரம் அதற்கு உண்டு. மற்ற எல்லா இலாகாக்களையும் மாகாண

அரசாங்கங்களும் சுதேச சமஸ்தானங்களும் கவனித்துக் கொள்ளும், அவை விரிவான சுயாட்சி அதிகாரத்தைப் பெறும். இந்திய மாகாணங்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படும்: இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள மாகாணங்கள் (சென்னை, பம்பாய், ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம், ஒரிஸ்ஸா மற்றும் பீகார்), முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள வடமேற்கு மற்றும் வடகிழக்கு மாகாணங்கள். இந்தப் பிரிவுகள் ஒவ்வொன்றுக்கும் தனியான அரசாங்கம் ஏற்படுத்தப்படும், அவை தமக்குத் தனியான அரசியல் சட்டங்களைத் தயாரித்துக் கொள்ளும். இந்திய மாகாணங்களை இப்படிச் சேர்த்ததன் பலனாக ஒன்றுபட்ட இந்தியா என்ற வெளிமுகப்புக்குப் பின்புறத்தில் பாகிஸ்தான் கொல்லைப்புற வழியாக உள்ளே வர முடிந்தது என்று வரலாற்றாசிரியரான எம். பிரெச்செர் பிற்காலத்தில் கூறினார். இந்து, முஸ்லிம் மற்றும் சீக்கியர்களின் தனித் தொகுதிகளின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட அரசியல் நிர்ணய சபை இந்திய யூனியனுடைய அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரிக்கும். வைசிராயின் நிர்வாகக் கவுன்சிலைத் திருத்தியமைப்பதன் மூலம் ''முக்கியமான எல்லா அரசியல் கட்சிகளின் ஆதரவையும் கொண்ட'' இடைக்கால அரசாங்கம் ஏற்படுத்தப்படுமென்றும் சொல்லப்பட்டது.

மே மாதக் கடைசியில் பிரிட்டிஷ் பிரேரேபணைகளைப் பற்றி காங்கிரஸ் வெளியிட்ட அறிக்கையில் இவற்றைப் பற்றி இறுதி மதிப்பீட்டைக் கூறுவதைத் தவிர்க்க விரும்புவதாகக் கூறப்பட்டிருந்தது. எனினும் அந்தப் பிரேரணைகளில் ''கட்டுப்பாடுகளும் ஒதுக்கீடுகளும் பாதுகாப்புகளும் ஒரு நலனுக்கு எதிராக மற்றொரு நலனை சமநிலைக்காக வைப்பதும் காட்டைப் போல ஏராளமாக இருப்பதால் ஒரு சுயேச்சையான, சுதந்திரமான இந்தியாவைப் பற்றிய தெளிவான முழுச் சித்திரத்தைக் கற்பனை செய்வது கடினமாக இருக்கிறது'' என்று குறிப்பிடப்பட்டது. காங்கிரஸ் செயற்குழுவில் இந்தத் தீர்மானத்தை விவாதிக்கும்பொழுது மாறுபட்ட கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. பிரிட்டிஷ் திட்டம் ''துயரத்தால் நிறைந்த இந்த நாட்டைத் துயரமும் வேதனையும் இல்லாத நாடாக மாற்றுவதற்கு உறுதியளிக்கிறது'' என்று காந்தி கூறினார். இந்தியாவுக்கு இயன்ற அளவுக்கு சீக்கிரமாக சுதந்திரம்

கொடுக்க வேண்டும் என்று திரும்பத்திரும்ப பிரகடனம் செய்த அட்லி அரசாங்கத்தின் நல்லெண்ணங்களைப் பற்றி நேரு எப்பொழுதுமே சந்தேகித்தார். செயற்குழுவில் பிரதான மாக இவர்கள் இருவருக்குமிடையே விவாதம் நடைபெற் றது. காங்கிரசில் மிக அதிகமான செல்வாக்குள்ள இரண்டு தலைவர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டிருந் ததனால் அதிகாரபூர்வமான அறிக்கை சில விஷயங்களை மழுப் பியது.

முஸ்லிம் லீக் தலைவர்கள் பிரேரணைகளை ஏற்றுக் கொண் டார்கள். அரசுரிமையுள்ள பாகிஸ்தானை ஏற்படுத்துவதற்கு அவை தடையல்ல என்று கூறினார்கள்.

1946 ஜூலை 7ந் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் காங்கிரஸ் தலைவரான ஆஜாத் மே மாதத்தில் தெரிவிக்கப்பட்ட பிரேரணைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறினார். காங்கிரஸ் மாபெரும் வெற்றி அடைந்துவிட்டது, சுதந்திரம் கண்ணுக்குத் தெரிகிறது, வன் முறையும் இரத்தப் பெருக்கும் இல்லாமல் சுதந்திரத்தை அடையப் போகிறோம் என்றார். அஹிம்சை முறைக் கிளர்ச்சி கள் மற்றும் பேச்சுவார்த்தைகளின் மூலமாகவே இந்தியாவின் தேசியக் கோரிக்கையை பிரிட்டிஷ்காரர்கள் ஏற்றுக்கொள்ளு மாறு செய்தது உலக வரலாற்றில் ஒரு புதுமை என்று கூறினார். நாற்பது கோடி மக்களைக் கொண்ட ஒரு நாடு இராணுவ நடவடிக்கை இல்லாமல், விவாதம் மற்றும் உடன் பாட்டின் மூலம் சுதந்திரமடையப் போகிறது—இந்த ஒன்றே நமது வெற்றியைக் குறைத்து மதிப்பிடுவது பைத்தியக்காரத் தனம் என்பதைக் காட்டுகிறது என்றார். தன்னுடைய நண் பரின் பேச்சைக் கேட்டபொழுது அதில் காந்தியின் அறிமுக மான வாதம் அடங்கியிருப்பதை நேரு உணர்ந்தார். இக்கூட் டத்தில் போராட்டத்தை விட சமரச தந்திரத்தை அதிகம் விரும்பிய மகாத்மாவின் அபிப்பிராயம் தீர்மானமானதாக இருந்தது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தைத் தயாரிக்க மே மாதப் பிரேரணைகளை ஒரு அடிப்படையாக ஏற்றுக் கொள்வதற்கு ஆதரவாகக் காங்கிரஸ் கமிட்டியின் பெரும் பான்மையான உறுப்பினர்கள் வாக்களித்தார்கள்.

கட்சிக்குப் புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டி யிருந்தது. கடந்த ஏழு வருடங்களாகக் காங்கிரசின் தலைவராக

இருந்த ஆஜாத் தலைவர் பதவிக்கு நேருவின் பெயரை முன் மொழிந்தார். பல காங்கிரஸ்காரரர்கள் அதை ஆதரித்தார் கள். காந்தி அதை எதிர்க்கவில்லை. கட்சியின் மிக உயர்ந்த பதவிக்கு வர வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்த படே லுக்கு அவர் முதலில் ஓரளவுக்கு சாதகமாக இருந்தார்.

ஜூலை 10ந் தேதியன்று காங்கிரஸ் கட்சியின் தலைவர் என்ற முறையில் நேரு பத்திரிகையாளர்களிடம் பேசினார். ''சுதந்திரத்தைப்'' பற்றி முஸ்லிம் லீக் மற்றும் வைசிராய் புரிந்துகொண்டிருப்பதிலிருந்து காங்கிரஸ் வேறு விதமான தெளிவைக் கொண்டிருக்கிறதென்று அவர் கூறினார். அந்நிய செல்வாக்கிலிருந்து முழுமையாக விடுதலை அடைவதே சுதந் திரம் என்று காங்கிரஸ் கருதுகிறது. அதில் பிரிட்டனோடு உறவுகளை முறித்துக் கொள்வது கூட சாத்தியமே. இந்தியக் குடியரசை ஏற்படுத்துவதற்கு நாங்கள் விரும்புகிறோம் என்றார்.

இந்தத் தீர்மானத்தைக் காங்கிரஸ் நிறைவேற்றியிருப் பதால் இடைக்கால அரசாங்கத்தின் அமைப்பு உள்பட இத் திட்டத்தின் எல்லா அம்சங்களையும் காங்கிரஸ் ஏற்றுக் கொண்ட தாகக் கூறலாமா என்று கேள்வி கேட்கப்பட்டது.

எந்த உடன்பாட்டாலும் கட்டுப்படுத்தப்படாமல் காங் கிரஸ் அரசியல் நிர்ணய சபைக்கு வருகிறது. சந்தர்ப்பங் கள் ஏற்படும்பொழுது அவற்றை உரிய முறையில் சந்திக்கும் என்று நேரு பதிலளித்தார்.

பிரிட்டிஷ் மந்திரி சபையின் திட்டத்தைத் திருத்திய மைக்க முடியும் என்பது உங்கள் கருத்தா என்று நிருபர்கள் கேட்டபொழுது, அரசியல் நிர்ணய சபையில் கலந்து கொள் வதற்கு மட்டுமே காங்கிரஸ் ஒத்துக் கொண்டிருக்கிறது,* தனக்குச் சரியாகத் தோன்றும் விதத்தில் திட்டத்தை மாற்றவோ, திருத்தவோ தனக்கு உரிமை உண்டு என்று காங்கிரஸ் கருதுகிறது என்று நேரு உறுதியாக பதிலளித்தார்.

ஜவகர்லால் கூறியதைப் படித்ததும் ஜின்னு முஸ்லிம் லீகின் கவுன்சிலைக் கூட்டி இதற்கு முன்னர் எடுக்கப்பட்ட முடிவை ரத்துச்செய்கின்ற தீர்மானத்தை நிறைவேற்றினார்.

---

* அரசியல் நிர்ணய சபைக்கு 1946ஆம் ஆண்டு ஜூன் மாதம் நடைபெற்று முடிந்த தேர்தல்களில் முஸ்லீம் லீக்கை விட இந்திய தேசிய காங்கிரஸ் கிட்டத் தட்ட 3 மடங்கு அதிக வாக்குகளைப் பெற்றது.

எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட மே மாதப் பிரேரணை களை மாற்ற அரசியல் நிர்ணய சபைக்கு அதிகாரம் இருப்பதாகக் காங்கிரஸ் தலைவர் கூறுகிறார். அரசியல் நிர்ணய சபையில் காங்கிரசுக்குப் பெரும்பான்மை இருக்கிறது. அப்படியானால் சிறுபான்மையினரான முஸ்லிம்கள் மீது இந்துக்களின் சர்வாதிகாரம் மறுபடியும் ஏற்படக்கூடிய ஆபத்து இருக்கிறது. எனவே அரசுரிமையுள்ள பாகிஸ்தானை ஏற்படுத்துவதே இந்திய முஸ்லிம்கள் ஒத்துக் கொள்ளக் கூடிய ஒரே பாதை. இனி காங்கிரஸ்காரர்களோடு எவ்விதமான பேச்சுவார்த்தையிலும் தான் ஈடுபட முடியாதென்று அவர் திட்டவட்டமாகக் கூறினார். 1946 ஆகஸ்ட் 16ஐ பாகிஸ்தானுக்கான நேரடி நடவடிக்கை தினம் என்று அறிவித்து எல்லா முஸ்லிம்களும் அன்று நேரடி நடவடிக்கையில் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

முஸ்லிம் லீக் தலைவர் ஜின்னாவின் செயல்தந்திர முறைகளைப் பற்றி மிகவும் சிறிதளவே தெரிந்தவருக்கு கூட ஒரு விஷயம் தெளிவாகப் புரிந்திருக்கும். இந்தியாவின் அரசியல் நிலைமையைச் சிக்கலாக்குவதற்கு அவர் எந்தச் சாக்கையும் பயன்படுத்துவார், அதன் மூலம் தனக்குச் சில சாதகங்களை அடைவார். லீக் கவுன்சில் கூட்டம் பெரும்பான்மையான உறுப்பினர்களின் வற்புறுத்தலின் பேரில் மே மாதப் பிரேரணைகளை ஏற்றுக் கொண்டு தீர்மானம் நிறைவேற்றிய பிறகு அவர் ஒரு நிருபரிடம் ''நான் கைகளைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருப்பேன் என்று உண்மையாகவே நினைக்கிறீர்களா?'' என்று பொருள்பொதிந்த முறையில் கேட்டார். இப்பொழுது அவர் பிரிட்டிஷ்காரர்களின் அங்கீகாரத்தோடு நடவடிக்கையில் இறங்கினார். அதே சமயம் நேரு நன்கு சிந்திக்காமல் பேசுவதும் தவறான காரியங்களைச் செய்வதும் இந்தியாவைப் பிளவுபடுத்திவிடும் என்று சில காங்கிரஸ்காரர்கள் அவரைக் குற்றம் சாட்டினார்கள். இவர்கள் நேருவை அவ்வளவாக விரும்பாதவர்கள். காங்கிரஸ் தலைமைப் பதவி கிடைக்காததனால் படேல் நேருவுக்கு எதிராகத் திரும்பியிருந்தார். அவர் மிகவும் கோபமடைந்தார். ஜவகர்லாலின் நடத்தை ''வெகுளித்தனமாக, குழந்தைத்தனமாக'', சில சமயங்களில் ''விவேகமற்றதாக'' இருக்கிறது என்று அவர் எழுதிய கடிதங்களில் ஒன்றில் குறிப்பிட்டார்.

நேருவினுல் சக ஊழியர்களுக்கு அதிகமான தொல்லைகள் ஏற்படுகின்றன, அவர் காங்கிரஸ் தலைமையை மிகவும் இக்கட்டான நிலைமையில் அடிக்கடி வைத்து விடுகிருர் என்று எந்த ஆதாரமும் இல்லாமல் கூறினர்.

வைசிராய் ஆகஸ்ட் மாதத் தொடக்கத்தில் நேருவை இடைக்கால அரசாங்கத்தை அமைக்குமாறு கேட்டுக் கொண்டார். அரசாங்கத்தில் பதினுலு இடங்களில் ஆறு காங்கிரசுக்குத் தரப்படும். அதே சமயத்தில் ஜின்னுவுக்கு ஐந்து இடங்களைக் கொடுத்தார்.

இடைக்கால அரசாங்கத்தை பிரிட்டன் வைசிராயின் தலைமையில் இருந்த வழக்கமான, பணிவு நிறைந்த நிர்வாகக் கவுன்சிலாகவே கருதிய போதிலும் அரசாங்கத்தில் காங்கிரஸ் பங்கெடுப்பது இந்தியாவுக்கு முழு சுதந்திரம் சீக்கிரமாகக் கிடைக்க உதவும் என்று காங்கிரஸ் தலைவர்கள் முடிவுசெய்து வைசிராயின் பிரேரணையை ஏற்றுக் கொண்டார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் யுத்தத்தில் நாசமடைந்து காலனிகளில் நடை பெறும் விடுதலை இயக்கப் போராட்டங்களினுல் பலவீனமடைந்திருக்கிறது. இந்தியாவில் அது குறைவான காலத்துக்கே நீடிக்க முடியும் என்பதை காங்கிரஸ்காரர்கள் நன்கு புரிந்து கொண்டிருந்தார்கள். ஒன்றுபட்ட இந்தியா அரசியல் மற்றும் பொருளாதாரத் துறைகளில் மிகவும் பலமுடையதாக இருக்கும். அத்தகைய இந்தியாவைப் பாதுகாப்பதில் பிரிட்டிஷ்காரர்களுக்கு அக்கறை கிடையாது என்பதையும் காங்கிரஸ்காரர்கள் தெளிவாகப் புரிந்து கொண்டிருந்தார்கள். காலனியாதிக்கவாதிகள் இந்தியாவைப் பிரிவினை செய்வதற்கு இந்தியர்களின் பலவீனங்களை, குறிப்பாக மத மற்றும் ஜாதி வேற்றுமைகளை உபயோகிப்பார்கள் என்பது நிச்சயம். அதன் மூலம் இந்தியாவை முடிந்த அளவு நீண்ட காலத்துக்குத் தங்களுடைய செல்வாக்கின் கீழ் வைத்திருக்க முயற்சி செய்வார்கள். இடைக்கால அரசாங்கத்தில் பங்கெடுத்தால் லண்டனின் சூழ்ச்சி மிக்க அரசியல்வாதிகளின் திட்டங்கள் அமுலாக்கப்படுவதைத் தடுப்பதற்குக் கூடுதலான வாய்ப்புக்கள் ஏற்படும் என்று காங்கிரஸ்காரர்கள் கருதினர்கள்.

நேரு காங்கிரஸ் முடிவை வைசிராய்க்குத் தெரிவித்தார். பிறகு கூட்டு அரசாங்கம் அமைக்கலாம் என்று ஜின்னுவிடம்

ஆலோசனை கூறினார். ஆனால் அவர் காங்கிரஸ்காரர்களோடு ஒத்துழைப்பைப் பற்றிக் கேட்கக் கூட விரும்பவில்லை. முஸ்லிம்கள் உருவிய வாளோடு தயாராக இருப்பார்கள் என்று பயமுறுத்துகின்ற பாணியில் கூறிவிட்டு தன்னுடைய பிரிவினை நடவடிக்கைகளைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். ஜின்னாவின் வார்த்தைகள் வெறும் பயமுறுத்தல் அல்ல என்பது சீக்கிரத்திலேயே தெளிவாயிற்று.

1946 ஆகஸ்ட் 16ந் தேதியன்று காலையில் கல்கத்தாவில் வசிக்கும் அறுபது லட்சம் மக்கள் வழக்கம் போல எழுந்து தங்கள் அன்றாட வேலைகளையும் கவலைகளையும் கவனிக்கத் தொடங்கினார்கள். கங்கையின் கிளை நதியான ஹுக்ளியில் இந்த மாபெரும் துறைமுக நகரம் அமைந்திருக்கிறது.

ஒரு காலத்தில் காட்டில் மறைந்திருந்த இரண்டு சிறு கிராமங்களின் இடத்தில் தோன்றி வளர்ச்சியடைந்திருக்கிறது. பதினேழாம் நூற்றாண்டின் கடைசியில் அங்கே மண்சுவர்களை யும் ஓலைக் கூரைகளையும் கொண்ட வீடுகளைக் கட்டிய பிரிட்டிஷ் வர்த்தகர்கள் அந்தச் சிறிய வர்த்தக நிலையம் சணல் மற்றும் பஞ்சாலைகள், காகிதம் தயாரிக்கும் தொழிற்சாலை கள், சர்க்கரை ஆலைகள் மற்றும் செங்கல் தொழிற்சாலை களைக் கொண்டு ஐரோப்பிய பாணியில் மாபெரும் நகரமாக வளர்ச்சியடையும் என்று எதிர்பார்த்திருக்க முடியாது. இதற்கு ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு பிறகு அந்த வர்த்தகர் களின் வழிவந்தவர்கள் இந்தியாவின் தலைநகரத்தை—ஒரு சில பத்தாண்டுகள் மட்டும் என்றாலும்—இங்கே மாற்றினார்கள். 1911ம் வருடத்தில் கல்கத்தா பாட்டாளி வர்க்கத்தின் ஸ்தா பனரீதியான புரட்சிகர நடவடிக்கைகளைக் கண்டு காலனி யாதிக்கவாதிகள் பீதியடைந்து எல்லா அரசாங்கச் செயலகங் களையும் டில்லிக்கு மாற்றினார்கள்.

மாபெரும் இலக்கிய மேதையான தாகூரும் ஆங்கில நாவலாசிரியரான வில்லியம் தாக்கரேயும் பிறந்த கல்கத் தாவில் இந்துக்களும் முஸ்லிம்களும் வங்காளி என்ற பொதுப் பெயரைத் தாங்கி அடுத்தடுத்த வீடுகளில் நண்பர்களாக வசித்தார்கள். வங்காளிகள் சுறுசுறுப்பானவர்கள், தத்துவரீதி யான விவாதங்களை விரும்புபவர்கள். அநீதி எந்த வடிவத்தில் வந்தாலும் அதைத் தீவிரமாக எதிர்ப்பார்கள். ஆகஸ்ட் 16ந் தேதியன்று காலையில் முஸ்லிம் லீகின் அறைகூவலுக்

கிணங்க ஆர்ப்பாட்டங்கள் தொடங்கின. காங்கிரஸ் கட்சி இடைக்கால அரசாங்கம் அமைத்ததைக் கண்டித்து ஆர்ப்பாட்டக்காரர்கள் கோஷம் போட்டார்கள். எந்த காங்கிரஸ் காரர்களின் துரோகத்தைப் பற்றி லீக் தலைவர்கள் பேசினார்களோ, இன்று யாருடைய பெயர்களைச் சொல்லி ''ஒழிக'' என்று அவர்கள் கூச்சல் போடுகிறார்களோ அந்தக் காங்கிரஸ் காரர்கள் நேற்றுவரை ஜின்னாவுடன் எல்லா வேறுபாடுகளையும் தீர்த்துக் கொள்ளவும் அவரோடு ஒத்துழைப்பதைப் பற்றி உடன்பாட்டுக்கு வருவதற்கும் முயற்சித்தார்கள் என்பது ஆர்ப்பாட்டக்காரர்களில் பெரும்பான்மையோருக்குத் தெரியாது.

தெருக்களில் வழக்கமான எண்ணிக்கையில் போலீஸ்காரர்கள் இருந்தார்கள். இந்த சந்தர்ப்பத்தை ஒட்டி அதிகமான போலீஸ் பாதுகாப்பு இல்லை; இப்படிப்பட்ட ஆர்ப்பாட்டங்களின் போது தெருக்களில் இராணுவ வீரர்களும் நிறுத்தி வைக்கப்படுவது வழக்கம். அன்று அவர்களும் இல்லை. இது யாருக்கும் வியப்பைத் தரவில்லை. ஊர்வலம் சில பகுதிகளின் வழியாகச் சென்ற பொழுது யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஊர்வலத்தினர் பெருங் கூச்சலிட்டுக் கொண்டு சென்றதால் வழியில் இந்துக்களுக்குச் சொந்தமான கடைகளின் கண்ணாடி ஜன்னல்கள் உடைக்கப்படும் சத்தம் யாருக்கும் கேட்கவில்லை. கடைச் சொந்தக்காரர்கள் ஆத்திரமடைந்து காலிகளைத் திட்டிக்கொண்டு தெருக்களில் ஓடிவந்தார்கள். அதிகாரிகளால் கூலி கொடுத்துக் கொண்டுவரப்பட்ட காலிகள் ஆர்ப்பாட்டக்காரர்களோடு சேர்ந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் இந்த சந்தர்ப்பத்தைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பயங்கரமான வெறிக்கூச்சலோடு இந்துக்கள் மீது பாய்ந்து அவர்களைத் தாக்கினார்கள். இந்து மகாசபை பாசிஸ்ட் பாணியில் அடியாட்களைத் திரட்டி வைத்திருந்தது. அவர்கள் இதற்குப் பதில் நடவடிக்கையாக முஸ்லிம்களின் வீடுகளை நோக்கிப் பாய்ந்தார்கள். இரத்தக்களறியான வெறியாட்டம் நான்கு நாட்கள் நடைபெற்றது. அதன் விளைவுகள் பயங்கரமாக இருந்தன. ஆயிரக் கணக்கானவர்கள் கொல்லப்பட்டார்கள், பல்லாயிரக் கணக்கானவர்கள் காயமடைந்தார்கள். வீடுகள் நொறுக்கப்பட்டன, கடைகள் கொள்ளையடிக்கப்பட்டன. இந்தப்

பயங்கரமான வெறியாட்டத்தையும் படுகொலையையும் தடுப்பதற்கு வங்காளத்தின் பிரிட்டிஷ் கவர்னர் தன்னுடைய சுண்டு விரலைக் கூட அசைக்கவில்லை. இந்துக்களுக்கும் முஸ்லிம் களுக்குமிடையே இதைப் போன்ற மோதல்கள் பீகார், பம் பாய் மற்றும் மேற்கு வங்காளத்தில் நடை பெற்றன.

கல்கத்தாவில் நடைபெற்ற சோக நிகழ்ச்சிகளைப் பற்றி நேரு மிகவும் வேதனை அடைந்தார், ''முட்டாள்தனமான சகோதரப் படுகொலை'' என்று அதைப் பற்றிக் கூறினார். இந்தக் காலிகளுக்கும் கொலைகாரர்களுக்கும் ஆதரவளித்தது யார், இந்திய நாட்டின் ஒற்றுமைக்கு இவ்வளவு பலமான அடி கொடுத்தது யார் என்பது அவருக்குத் தெரியாத இரகசியமல்ல. தன்னுடைய இதயத்தில் நிறைந்திருந்த ஆத் திரத்தையும் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டு மென்னும் உறுதியையும் கொட்டி அவர் வைசிராய்க்குக் கடிதம் எழுதினார். ''எங்களுடைய நண்பர்களும் உறவினர் களும் இப்படி பயங்கரமாகக் கொலை செய்யப்பட்டிருக்கிறார் கள். எங்களுடைய குழந்தைகள், நாங்கள் மிகவும் நேசிக்கும் சிறுவர்கள் எந்த நேரத்திலும் கொலையாளியின் கத்திக்குப் பலியாகிவிடலாம். இந்த பயங்கரமான யதார்த்தம் எங் களுக்கு முன்னாலிருக்கிறது. இதை எதிர்கொள்ள நேரிடுவது இயற்கையே. ஆனால் நாங்கள் படுகொலையோடு கைகுலுக்கி நட்புக் கொள்ள மாட்டோம். அது நாட்டின் கொள்கையை நிர்ணயிக்க அனுமதிக்க மாட்டோம். இந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள் மற்றும் இதரர்களோடு நாங்கள் தொடர்ந்து விவாதிப்போம், நேசம் நிறைந்த ஒத்துழைப்புப் பாதைக்கு அவர்களை வென்றெடுக்க முயற்சிப்போம். ஏனென்றால் இந்தி யாவின் முன்னேற்றத்துக்கு அதைத் தவிர வேறு பாதை கிடையாது.'' அவர் அரசாங்கத்தில் சேருமாறு ஜின்னாவை மறுபடியும் கேட்டுக் கொண்டார். ஜின்னா மறுத்த பிறகு ''முஸ்லிம் லீக் வருவதற்காகக் கதவு எப்பொழுதும் திறந்து வைக்கப்பட்டிருக்கும்'' என்று பகிரங்கமாக அறிவித்தார்.

ஆகஸ்ட் 24ந் தேதியன்று இடைக்கால அரசாங்கத்தின் அமைச்சர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட்டன. வைசிராய் வேவல் பிரபு அதன் தலைவர். ஜவகர்லால் நேரு துணைப் பிரதமர் பொறுப்பையும் வெளிநாட்டிலாகா மற்றும் காமன் வெல்த் இலாகாவின் பொறுப்பையும் வகித்தார். காங்கிரஸ்

காரர்களான படேல், இராஜேந்திர பிரசாத், சரத் சந்திர போஸ் (சுபாஷ் சந்திர போசின் மூத்த சகோதரர்), இராஜ கோபாலாச்சாரியார் மற்றும் ஆசப் அலி ஆகியோர் மற்ற பதவிகளை வகித்தார்கள்; அரிஜனங்களின் பிரதிநிதியாக ஜகஜீவன் ராம்; இந்தியக் கிறிஸ்துவர்களின் பிரதிநிதியாக ஜான் மத்தாய்; சீக்கியர்களின் சார்பில் சர்தார் பல்தேவ் சிங்; பார்சிக்களின் சார்பில் சி. எச். பாபா; இவர்களைத் தவிர முஸ்லிம் லீக் உறுப்பினர்களாக இல்லாத இரண்டு முஸ்லிம்கள்—ஷாபத் அகமது கான் மற்றும் அலி ஸஹீர்—அரசாங்கத்தில் இடம் பெற்றனர்.

இடைக்கால அரசாங்கம் செப்டெம்பர் 2ந் தேதியன்று பொறுப்பேற்றது. 7ந் தேதியன்று ஜவகர்லால் வானொலியில் நிகழ்த்திய உணர்ச்சி மிக்க உரையை இந்திய மக்கள் மிகவும் ஆர்வத்தோடு கேட்டார்கள். ''நண்பர்களே, தோழர்களே! இந்தியா நீடு வாழ்க!'' என்று கூறி நேரு பேச்சைத் தொடங்கினார். ''ஆறு நாட்களுக்கு முன்பு நானும் எனது சகாக்களும் அரசாங்கத்தில் முக்கியமான பொறுப்புகளை ஏற்றுக் கொண்டோம். நம்முடைய நாட்டில் ஒரு புதிய அரசாங்கம் ஏற்பட்டிருக்கிறது. இதை இடைக்கால அல்லது தற்காலிக அரசாங்கம் என்று கூறுகிறோம். முழு சுதந்திரத்தை நோக்கி நாம் செல்லும் பயணத்தில் இது ஒரு மைல்கல். இந்தியாவின் மூலை முடுக்குகள் எல்லாவற்றிலுமிருந்தும் உலகத்தின் எல்லாப் பகுதிகளிலுமிருந்தும் பல ஆயிரக்கணக்கான வாழ்த்துச் செய்திகள் எமக்கு வந்திருக்கின்றன. இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சியை நீங்கள் கொண்டாட வேண்டுமென்று நாங்கள் கூறவில்லை. மக்களின் உற்சாகத்தைக் கட்டுப் படுத்துவதற்குக் கூட நாங்கள் முயற்சி செய்தோம். ஏனென்றால் நம்முடைய பயணம் இன்னும் தொடர்கிறது, நம்முடைய இலட்சியத்தை நாம் இன்னும் அடையவில்லை என்பதை மக்கள் புரிந்துகொள்ள வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்.

''நாம் விரைவில் முழு சுதந்திரத்தை அடைவோம் என்ற நம்பிக்கையோடு இந்த அரசாங்கத்தில் நாங்கள் சேர்ந்திருக்கிறோம். நம்முடைய உள்நாட்டுக் கொள்கையிலும் வெளிநாட்டுக் கொள்கையிலும் முழு நடவடிக்கைச் சுதந்திரத்தைப் படிப்படியாக அடைவதற்குப் பாடுபட நாங்கள் உத்தேசிக்

கிறோம். நாம் சர்வதேச மாநாடுகளில் கலந்துகொள்வோம்; வேறு எந்த நாட்டினுடைய துணைக்கோளாகவும் இல்லாமல் சுதந்திரமான நாடு என்ற முறையில் நம்முடைய கொள்கையை அங்கே பின்பற்றுவோம். மற்ற நாடுகளோடு நெருக்கமான, நேரடியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளவும் பொதுவான சமாதானம் மற்றும் சுதந்திரத்தை பலப்படுத்த அவர்களோடு சேர்ந்து பாடுபடவும் உத்தேசிக்கிறோம்.

''ஒருவருக்கொருவர் எதிரான கோஷ்டிகள் பின்பற்றுகின்ற வன்முறைக் கொள்கை கடந்த காலத்தில் உலக யுத்தங்களை ஏற்படுத்தியிருக்கிறது. அது மறுபடியும் பேராபத்துக்களை ஏற்படுத்த முடியும். அத்தகைய கொள்கையிலிருந்து இயன்ற அளவுக்கு ஒதுங்கி நிற்க நாம் விரும்புகிறோம். காலனி மற்றும் சார்ந்துள்ள நாடுகள், தேசிய இனங்களின் விடுதலையில், எல்லா இனங்களுக்கும் சம வாய்ப்புக்கள் தத்துவ ரீதியிலும் நடைமுறையிலும் அங்கீகரிக்கப்படுவதில் நாம் குறிப்பான அக்கறை கொண்டிருக்கிறோம்.''

இந்தியா முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது, பழைய அமைப்பு அழிந்துகொண்டிருக்கிறது. சம்பவங்களைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களாகவே, மற்றவர்களின் விளையாட்டுப் பொருள்களாகவே நாம் நெடுங்காலமாக இருந்து விட்டோம், இப்பொழுது முன்முயற்சி நம்மிடமே வந்துவிட்டது; நாம் நம்முடைய சொந்த வரலாற்றைப் படைப்போம் என்று அவர் முடிவுரையில் கூறினார். இந்தியாவை உலக நாடுகளில் மாபெரும் நாடாக, சமாதானம், முன்னேற்றம் என்ற துறைகளில் முன்னணியில் நிற்கின்ற நாடாக மாற்றுகின்ற மகத்தான பணியில் எல்லா இந்தியர்களும் ஒன்று சேர்ந்து பாடுபட வேண்டும் என்று அவர் கூறினார்.

இந்தப் பேச்சு சாராம்சத்தில் புதிய இந்தியாவின் முதல் வெளிநாட்டுக் கொள்கைப் பிரகடனமாகும்.

இன்று சுதந்திர இந்தியா தோன்றி முப்பத்தேழு வருடங்களாகி விட்டன. இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை ஆசியாவிலும் உலக முழுவதிலும் சர்வதேச நிலைமையை அபிவிருத்தி செய்வதில் முக்கியமான தாக்கத்தை ஏற்படுத்தி சமாதான சக்திகளிடம் உரிய அங்கீகாரத்தைப் பெற்றிருக்கிறது. இந்தக் கொள்கையை ஜவகர்லால் நேரு தொடங்கி

வைத்தார் என்பதை நாம் ஒரு போதும் மறக்கக்கூடாது. நேருவின் சொற்பொழிவுக்கு ஆறு மாதங்களுக்கு முன்னர், பிரிட்டனின் முன்னுள் பிரதமரான சர்ச்சில் புல்டன் என்ற சிறிய அமெரிக்க நகரத்தில், அமெரிக்க ஜனுதிபதி ட்ரூமன் பக்கத்தில் அமர்ந்திருக்க, அவருடைய அங்கீகாரத்தோடு மிக வும் கேவலமாகக் கருதப்படுகின்ற சொற்பொழிவை நிகழ்த் தினுர் என்பதை மறக்க முடியாது; அந்தச் சொற்பொழிவில் அவர் தெரிவித்த ஆக்கிரமிப்புக் கொள்கைகளான ''தாக்குக் காட்டி வைத்திருத்தல்'', ''பின்னே தள்ளுவோம்'', ''பிரம் மாண்டமான எதிர்த்தாக்குதல்'' ஆகியவையும் பைத்தியக் காரத்தனமான ஆயுதப் போட்டியும் மற்றும் அதன் ''ஸ்தல யுத்தங்களும்'' (உலகத்தை அணு ஆயுதப் பேராபத்தில் சிக்க வைப்பதற்கு இவற்றில் ஏதாவதொன்று போதும்) உலகத்தில் கெடுபிடிப் போர் தொடங்கி விட்டதென்று அறி வித்தன. 1946ம் வருடத்தில் ஏகாதிபத்தியவாதிகள் சோவியத் யூனியனுக்கும் மத்திய மற்றும் தென்கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் எதிராக, தேசிய ஜனநாயகப் புரட்சிகள் வெற்றி யடைந்த அல்லது வெற்றி அடையும் தறுவாயிலிருந்த சீனு, கொரியா, வியத்நாம் ஆகிய நாடுகளுக்கு எதிராக, ஒடுக்கப்பட்ட மக்களினங்களின் தேசிய விடுதலை இயக்கங் களுக்கு எதிராக ஒரு ஆங்கில-அமெரிக்க அரசியல் இரா ணுவக் கூட்டணியை உருவாக்குவதற்குத் தீவிரமான வேகத் தில் திட்டங்களைத் தயாரித்துக் கொண்டிருந்தார்கள்.

அது கடினமான, ஆபத்துக்கள் நிறைந்த காலம். காலனி யாதிக்கத்திலிருந்து இன்னும் விடுதலை அடையாத நாட்டின் அரசியல்வாதி தன்னுடைய முந்திய முற்போக்கான, ஜனநா யகக் கருத்துக்களைக் கைவிடாமலிருப்பதற்கே அந்தக் காலத் தில் துணிவு வேண்டும். ஆனுல் நேரு அவற்றைத் தெளிவாக, உரத்த குரலில் உலக முழுமைக்கும் தெரிவித்தார். செப் டெம்பர் 7ந் தேதியன்று நேரு நிகழ்த்திய உரையில் இந் தியா இராணுவக் கூட்டணிகளில் சேர மறுப்பது தெளிவாக ஒலித்தது. யுத்தத்தைத் தடுப்பதற்கும் சமாதானத்தைப் பாது காப்பதற்கும், காலனியாதிக்கத்துக்கும் ஏகாதிபத்தியத்துக்கும் எதிராகத் தொடர்ந்து போராடுமாறு நேரு அறைகூவியது சர்வதேச உறவுகளை நடத்துவதில் புதிய கோட்பாடுகளை வகுத்துரைத்தது. இந்தக் கோட்பாடுகள் விரைவில் ''ஆக்க

பூர்வமான நடுநிலை'' என்ற கொள்கையின் அடிப்படையாக மாறின. 1950க்களின் நடுப்பகுதியிலிருந்து இதை ''கூட்டுச் சேராக் கொள்கை'' என்று கூறுகிறார்கள்.

நேரு தன்னுடைய சொற்பொழிவில் ''நவீன உலகத்தின் மகத்தான நாடாகிய'' சோவியத் யூனியனுக்கு வாழ்த்துக் கூறினார். 1946 செப்டெம்பர் கடைசியில் சோவியத் யூனியனுடைய வெளிநாட்டு விவகார அமைச்சரான வி. எம். மொலட்டோவ் பாரிஸ் சமாதான மாநாட்டுக்கு சோவியத் தூதுக் குழுவின் தலைவராக வந்த பொழுது நேருவின் செய்தி அவரிடம் கொடுக்கப்பட்டது. அதில் சோவியத் யூனியனோடு நட்புறவுகளை வளர்த்துக்கொள்ளவும் ராஜிய மற்றும் இதர பிரதிநிதிகளைப் பரிமாற்றிக்கொள்ளவும் இந்தியர்கள் மனப்பூர்வமாக விரும்புகிறார்கள் என்றும் இந்தியாவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே ஒத்துழைப்பு இரு நாடுகளுக்கும் நன்மையைத் தருவதாக இருக்குமென்றும் உலகத்தில் சமாதானம் மற்றும் முன்னேற்றத்தை ஊக்குவிக்குமென்றும் நம்புவதாக நேரு எழுதியிருந்தார்.

ஒடுக்கப்பட்ட மக்களினங்கள் தேசிய சுதந்திரத்துக்காக நடத்துகின்ற நியாயமான போராட்டத்துக்கு ஆதரவு கொடுக்கும் லெனினிய கோட்பாடுகளுக்கு விசுவாசமான முறையில் சோவியத் யூனியன் இந்தியாவுடன் சமத்துவம் மற்றும் பரஸ்பர மரியாதை என்ற அடிப்படையில் விதிவிலக்குகளோ கட்டுப்பாடுகளோ இல்லாமல் உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள முடிவு செய்தது. அதன் மூலம் காலனியாதிக்க நுகத்தடியிலிருந்து முழு விடுதலை அடைவதற்கும் அரசுரிமை பெற்ற அரசாக வளர்ச்சியடைவதற்கும் போராடிக் கொண்டிருந்த இந்திய நாட்டுக்கு மிகவும் அவசியமான ஆதரவை சோவியத் யூனியன் கொடுத்தது. இரு நாடுகளுக்குமிடையே ராஜிய உறவுகள் நிறுவப்பட்டிருப்பதாக 1947 ஏப்ரல் 13ந் தேதியன்று மாஸ்கோவிலும் டில்லியிலும் அறிவிக்கப்பட்டது.

இதற்கு முன்பாகவே அதிகார பூர்வமான இந்திய மற்றும் சோவியத் பிரதிநிதிகளுக்கிடையே தொடர்புகள் ஏற்பட்டிருந்தன. 1945 ஏப்ரலில் சான்பிரான்சிஸ்கோவில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் மாநாட்டில் கலந்துகொண்ட சோவியத் தூதுக்குழு இந்திய தூதுக்குழுவினருக்கு அன்பான வரவேற்புக்

கூறியது.* ''இந்தியாவிலிருந்து ஒரு தூதுக்குழு வந்திருக்கிறது, ஆனால் இந்தியா இன்னும் சுதந்திரம் அடையவில்லை'' என்று சோவியத் தூதுக்குழுவின் தலைவரான வி. எம். மொலட்டோவ் கூறினார். ''சுதந்திர இந்தியாவின் குரலை எல்லோரும் கேட்கின்ற காலம் விரைவில் வரப்போகிறது என்பது நமக்குத் தெரிந்ததே'' என்று அவர் தொடர்ந்து கூறினார். தாங்கள் விரும்புகின்ற அரசியல் முறையை முடிவு செய்யும் உரிமை விடுதலையடைந்த நாடுகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்று சோவியத் அரசாங்கம் விரும்புவதை சோவியத் பிரதிநிதிகள் மறுபடியும் வலியுறுத்தினார்கள். மாநாட்டு நடவடிக்கைகளைத் தொடர்ந்து கவனித்து வந்த நேருவுக்கு இவை அதிகமான திருப்தியைக் கொடுத்தன.

ஐக்கிய நாடுகளின் பொதுச் சபையின் இரண்டாவது கூட்டம் 1946ம் வருடத்தின் இலையுதிர்காலத்தில் நடைபெற்ற பொழுது பாதுகாப்புக் கவுன்சிலில் வல்லரசுகள் ஏகமனதான அபிப்பிராயம் கொண்டிருக்க வேண்டும், கிரீசிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வெளியேற வேண்டும் என்ற பிரச்சினைகளில் சோவியத் தூதுக்குழுவும் இந்திய தூதுக்குழுவும் நெருக்கமான நிலைகளை எடுத்தன. ஆசிய வமிசாவழியைச் சேர்ந்த மக்கள் மீது வேறுபாடான கொள்கையைக் கடைப்பிடிப்பதற்காக தென்னாப்பிரிக்க அரசாங்கத்தைக் கண்டனம் செய்ய வேண்டும் என்று இந்தியா கோரிய பொழுது சோவியத் யூனியன் அதை ஆதரித்தது. ஐக்கிய நாடுகள் சபையில் சோவியத், இந்தியப் பிரதிநிதிகளுக்கிடையே உருவான ஒத்துழைப்பு மேற்கு நாடுகளின் பிரதிநிதிகளுக்கு ஆத்திரமூட்டியது. பிற்காலத்தில் அமெரிக்காவின் அரசு இலாகா (வெளிநாட்டிலாகா) செயலாளரும் கெடுபிடிப் போரைத் திட்டமிட்டவர்களில் ஒருவருமான ஜான் பாஸ்டர் டல்லஸ் அப்பொழுது ஐ. நா. சபையின் பொறுப்பாளர் குழுவில் அமெரிக்கப் பிரதிநிதியாக இருந்தார். சோவியத் கம்யூனிசம் இந்தியாவில் இடைக்கால அரசாங்கத்தின் மூலமாக அதிகமான தாக்கம் செலுத்துவதாக அவர் கூறினார்.

---

* சான்பிரான்சிஸ்கோ மாநாட்டுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் அனுப்பிய இந்திய தூதுக்குழுவினரோடு காங்கிரசின் சார்பில் இரண்டு பிரதிநிதிகளையும் நேரு அனுப்பியிருந்தார். அவருடைய சகோதரியான விஜயலட்சுமி பண்டிட்டும் பி. சிவராவும் இப்படிக் கலந்து கொண்டனர்.

ஏகாதிபத்திய அரசியல்வாதிகள் வெறுப்போடு கூறிய குற்றச் சாட்டுகளை நேரு பொருட்படுத்தவில்லை. பிரிட்டிஷ் அரசியல்வாதிகளுக்கு உரிய மரபுப்படி சோவியத் எதிர்ப்புக் கொள்கையைக் கடைப்பிடித்த பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய-சோவியத் உறவுகளை வளர்க்கும் பாதையில் எண்ணற்ற தடைகளை ஏற்படுத்தியது. நேரு பிடிவாதத்தோடு படிப்படியாக இந்தத் தடைகளைச் சமாளித்தார். இந்தியாவின் ஜீவாதார மான நலன்கள் நிறைவேறுவதற்கு சோவியத் யூனியனோடு ஒத்துழைப்பது அவசியம் என்று நேரு உறுதியாக முடிவு செய்து தன் சகோதரி விஜயலட்சுமி பண்டிட்டை சோவியத் யூனியனுக்கு இந்தியாவின் தூதராக நியமித்தார். மாஸ்கோவில் இந்திய தூதரகத்தைத் தொடங்குவதற்குச் சென்ற இந்திய ராஜியவாதிகளிடம், அந்நிய ஆட்சியினால் இந்தியாவிடமிருந்து பிரிந்து வைக்கப்பட்ட ஒரு நட்பு நாட்டுக்கு நீங்கள் போகிறீர்கள், நாம் இழந்து விட்ட காலத்தை நீங்கள் ஈடு செய்ய வேண்டும் என்று நேரு கூறினார். சோவியத் யூனியனும் இந்தியாவும் பக்கத்து நாடுகள், இரண்டு நாடுகளுக்குமிடையே பொதுவான அம்சங்கள் அதிகம், எனவே சோவியத் யூனியனோடு தொடர்புகளைப் பலப்படுத்த வேண்டும். இரு நாடுகளுக்கிடையிலும் நலன்களில் போட்டி இல்லை, இனியும் அத்தகைய போட்டி ஏற்பட முடியாது என்று கூறினார்.

இந்தியாவில் ஆட்சியதிகாரத்தை தேசிய அரசாங்கத்திடம் 1948 ஜூன் 30க்கு முன்னால் ஒப்படைப்பதென்று மந்திரிசபை முடிவு செய்திருப்பதாகப் பிரதம மந்திரி அட்லி ஆங்கில நாடாளுமன்றத்தில் 1947 பிப்ரவரி 20ந் தேதியன்று கூறினார். வேவல் வைசிராய் ''பதவியிலிருந்து விலகிக் கொள்வதாகவும்'' அவருக்குப் பதிலாக மவுண்ட்பேட்டன் பிரபு பதவியேற்பார் என்றும் அறிவித்தார்.

வேவலைப் போன்று நேரடியான, ராஜாங்கத் தந்திரங்களில் தேர்ச்சியில்லாமல் அதன் காரணமாகத் தடைகளைப் பற்றிக் கவலைப்படாமல் போர்வீரருடைய பாணியில் அடிக்கடி நடந்து கொள்கின்ற மனிதர் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இனிமேல் பொருத்தமான பிரதிநிதியாக இருக்க முடியவில்லை. இந்தியாவில் தங்களுடைய நிலை ஒவ்வொரு நாளும் அதிகமாக பலவீனமடைந்து வருவதை அவர்கள் உணர்ந்து கொண்டார்

கள். நாட்டில் தேசிய இயக்கத்தின் பலத்தை அரித்தழிக்கவும் பிரிட்டிஷ் செல்வாக்கைப் பாதுகாப்பதற்கும் அதிகார வட்டா ரங்களுக்கு வேறு வகையான நபர் தேவைப்பட்டார். அவர் திறமை மிக்கவராக, சூழ்ச்சி உடையவராக, சாதுரியமான வராக இருக்க வேண்டும். மவுண்ட்பேட்டன் பிரபுவிடம் இந்தத் திறமைகள் அனைத்தும் இருப்பதாக அவர்கள் கரு தினர்கள். இவற்றைத் தவிர வேறு சில உபயோகமான தகுதிகளும் அவரிடமிருந்தன. அவர் அரச குடும்பத்துக்கு உறவினர் என்பது சற்றும் குறையாத முக்கியத்துவத்தைக் கொண்ட தகுதியாகும். எனவே லண்டன் அரசியல்வாதி கள் அவரைத் தேர்ந்தெடுத்தார்கள்.

மவுண்ட்பேட்டன் மார்ச் 22ந் தேதியன்று டில்லிக்கு வந்தார். இரண்டு நாட்களுக்குப் பிறகு பதவிப் பிரமாணம் நடைபெற்றது. புது வைசிராய் முதல் சில வாரங்களிலேயே இந்தியாவின் முக்கியமான அரசியல் தலைவர்கள் எல்லோ ரையும் சந்தித்துவிட வேண்டுமென்று சுறுசுறுப்பாக வேலை களைத் தொடங்கினர். முதலில் நேருவைச் சந்தித்தார்.

இதற்கு ஒரு வருடத்துக்கு முன்பு அவர்களிருவரும் சந்தித்த துண்டு. சிங்கப்பூரிலும் மலாயாவிலுமுள்ள இந்தியர்களைச் சந்திப்பதற்காகவும் அங்கே பிரிட்டிஷ்காரர்கள் யுத்தக் கைதி களாக வைத்திருத்த இந்திய தேசிய இராணுவத்தைச் சேர்ந்த வீரர்களைப் பார்ப்பதற்கும் நேரு அங்கே சென்றார். மவுண்ட் பேட்டன் அப்பொழுது தென்கிழக்காசியாவில் நேசநாட்டுப் படைகளின் தலைமைத் தளபதியாக இருந்தார். அவருடைய தலைமைச் செயலகம் சிங்கப்பூரில் இருந்தது. அவர் நேருவை அன்போடு வரவேற்றார். தலை சிறந்த ராஜியவாதி, சீக்கிரத் தில் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை வகிக்கப் போகிறார் என்று அவர் தன்னுடைய அதிகாரிகளிடம் நேருவை அறி முகப்படுத்தினர். அவர்கள் இருவரும் சிங்கப்பூர் தெருக் களில் திறந்த காரில் பவனி வந்தார்கள். அது நேருவின் செல்வாக்கை அதிகப்படுத்தப் பயன்படும் என்று ஒரு அதிகாரி மவுண்ட்பேட்டனிடம் கூறியபொழுது அவர் அதிகாரியைக் கண்டிப்பதைப் போலப் பார்த்துவிட்டு, ''முட்டாள்! அது என் செல்வாக்கைத்தான் உயர்த்தும்'' என்றார்.

அவர் நேருவைத் தன்னுடைய ஆடம்பரமான, நாகரிக நயத்தோடு அலங்கரிக்கப்பட்ட மாளிகைக்குக் கூட்டிச்

சென்று விருந்தளித்தார். அவரும் அவர் மனைவி எட்வினாவும் நேருவின் மனதைக் கவரும் நோக்கத்தோடு நடந்துகொண்டார்கள். வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்த பொழுது (இருபது வயது நிரம்பிய மவுண்ட்பேட்டன் அவருடைய பரிவாரத்தில் ஒருவராக வந்திருந்தார்) அவர்களிருவருக்கும் டில்லியில் திருமணம் நிச்சயமாயிற்று. அவர்களிருவரும் அந்த நகரத்தைப் பற்றி நினைவு கூர்ந்தார்கள். அவர்களுடைய உணர்ச்சிமயமான உரைகளை நாகரிகமான புன்சிரிப்போடு நேரு கேட்டுக் கொண்டிருந்தார். வேல்ஸ் இளவரசரின் வருகைக்கு எதிராகத் தானும் மற்ற காங்கிரஸ் தோழர்களும் இயக்கம் நடத்திய அந்த மறக்க முடியாத 1921ம் வருடத்தின் இலையுதிர் காலத்தைப் பற்றி அவர்களிடம் எடுத்துக் கூற வேண்டும் என்ற துடிப்பு நேருவுக்கு ஏற்பட்டது.

இப்பொழுது டில்லியில் புதிய வைசிராய் இந்தியாவின் இடைக்கால அரசாங்கத்தின் துணைப் பிரதமர் மற்றும் வெளி நாட்டிலாகா அமைச்சரை ஒரு பழைய நண்பர் என்ற முறையில் அன்போடு வரவேற்றார். லேசாகக் குனிந்து நேருவை வரவேற்ற மவுண்ட்பேட்டன் சற்று உணர்ச்சியோடு ''மிஸ்டர் நேரு! பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை முடித்து வைக்க வந்திருக்கும் கடைசி வைசிராய் என்று என்னைக் கருதக் கூடாது, புதிய இந்தியாவுக்கு வழி வகுக்க வந்திருக்கும் முதல் வைசிராய் என்று நீங்கள் கருத வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்றார்.

நேருவின் கண்களில் குறும்புத் தனம் தோன்றி மறைந்தது. வைசிராய் ஆபத்தான இனிமை நிறைந்தவர் என்று எல்லோரும் ஏன் சொல்கிறார்கள் என்று எனக்கு இப்பொழுது புரிய ஆரம்பித்திருக்கிறது என்று அவர் மவுண்ட்பேட்டனுக்குப் பதிலளித்தார்.

தனக்குத் தேவையான எல்லா விவரங்களையும் மிக விரைவாகச் சேகரிப்பதில் மவுண்ட்பேட்டனின் தனித்திறமையை மறுப்பது கடினமே. காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே தகராறுகள் தொடர்ந்து கொண்டிருப்பதால் நாட்டில் ஏற்பட்டிருக்கும் சிக்கலான நிலைமை பிரிட்டிஷ் அரசியல்வாதிகளின் திட்டங்களுக்கு முற்றிலும் பொருத்தமானதே என்று அவர் சீக்கிரமாக முடிவு செய்தார்.

இடைக்கால அரசாங்கத்தில் முஸ்லிம் லீக் பங்கெடுப்

பதற்குக் கடைசியாக, 1946 செப்டெம்பரில் ஜின்னு ஒத்துக் கொண்டார். ஆனல் புதிதாக நியமிக்கப்பட்ட முஸ்லிம் லீக் அமைச்சர்கள் நேருவினல் கூட்டப்படும் கூட்டங்களுக்கு வர மறுத்தார்கள். வைசிராய் கூட்டத்தைக் கூட்டினல் மட்டுமே காங்கிரஸ்காரர்களோடு சேர்ந்து வந்தார்கள். நிதி அமைச்சர் என்ற முறையில் முக்கியமான பொறுப்பை வகித்த லியாக்கத் அலி கான் அநேகமாக காங்கிரஸ்காரர்கள் முன்வைத்த ஒவ்வொரு பிரேரணைக்குமே முட்டுக்கட்டை போட்டார். நேருவுக்கும் அவருடைய தோழர்களுக்கும் இது முற்றிலும் நியாயமான ஆத்திரத்தை ஏற்படுத்தியது. உள்நாட்டிலாகா அமைச்சராக இருந்த படேல் மிகவும் குறிப்பிடத்தக்க விதத்தில் ஆத்திர மடைந்தார். ஏனென்றல் லியாக்கத் அலி கானின் அங்கீகாரம் இல்லாமல் அவரால் தனக்குக் கீழேயிருந்த பல பதவிகளில் ஒன்றில் கூட, மிகவும் கீழ்த்தரமான சிப்பந்தியைக் கூட நியமிக்க முடியாது. அரசியல் நிர்ணய சபை பகிஷ்காரத்தை முஸ்லிம் லீக் தொடர்ந்து கடைப்பிடித்தது, தன் பிரிவினை நடவடிக்கைகளை ஒரு விநாடி கூட நிறுத்தவில்லை. இந்துக் களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே மோதல்களை இரகசியமாக வும் பகிரங்கமாகவும் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது. பிரிட் டிஷ் இரகசிய உளவு இலாகாவைச் சேர்ந்தவர்கள் பிரிவினை வாதிகளுக்குச் சுறுசுறுப்பாக உதவி செய்தார்கள். நாட்டின் வடமேற்குப் பகுதிகளில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையே இரத்தக்களறியான மோதல்களை மறுபடியும் ஏற் படுத்துவதில் வெற்றியடைந்தார்கள். இராவல்பிண்டி வட்டா ரத்தில் மட்டும் நாலாயிரம் பேர்கள் கொல்லப்பட்டார்கள். லாகூர், ஜீலம், அமிருதசரஸ் பகுதிகளில் பலர் கொல்லப் பட்டார்கள் அல்லது காயமடைந்தார்கள்.

காங்கிரஸ் தலைவர்களை சந்திக்கும் பொழுது மவுண்ட் பேட்டன் துயரமும் அனுதாபமும் சொட்ட நடந்துகொண் டார். இரத்தக் களறியை நிறுத்துவதற்கும் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே மறுபடியும் ஒற்றுமையை உண்டாக்கு வதற்கும் எல்லா முயற்சிகளையும் செய்வேன் என்று சபதம் செய்தார். ஆனல் வைசிராய் வெட்கமில்லாத முறையில் பொய் பேசினர். அவருடைய ஆலோசகர்கள் இந்தியாவை இரண்டு அரசுகளாகப் பிரிக்கின்ற திட்டத்தை முன்பே தயா ரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். இடைக்கால அரசாங்

கத்தில் முஸ்லிம் லீகின் சார்பில் பதவி வகித்த அமைச்சர் களின் முட்டுக்கட்டைகளால் காங்கிரஸ் அமைச்சர்களிடம் ஏற்பட்டிருந்த அதிருப்தியை மவுண்ட்பேட்டன் திறமையாகப் பயன்படுத்திக் கொண்டார். இந்தியாவில் பிரிவினையைத் தவிர்க்க முடியாது என்ற கருத்தைக் காங்கிரஸ் தலைவர்களின் மனதில் மெதுவாக ஏற்றிக் கொண்டிருந்தார்.

முதலில் படேலைத் தன் பக்கத்துக்கு இழுப்பதில் வைசி ராய் வெற்றியடைந்தார். முஸ்லிம் லீகின் தொந்தரவு ஒழியு மென்றால் அதற்காக இந்தியாவின் ஒரு பகுதியை தியாகம் செய்யத் தயாராக இருப்பதாக படேல் தன் செல்வாக்குக்கு உட்பட்ட காங்கிரஸ்காரர்களிடம் கூறி அவர்கள் மனதை மாற்ற முயற்சி செய்து கொண்டிருந்தார். நமக்குப் பிடிக் கிறதோ, இல்லையோ, இந்தியாவில் இரண்டு தேசிய இனங் கள் இருக்கின்றன, இந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒரே நாட்டில் இணைத்துவைக்க முடியாது என்று நான் இப்பொ ழுது உறுதியாகக் கருதுகிறேன் என்றார். இரண்டு சகோதரர் கள் ஒன்றாக வசிக்க முடியவில்லை என்றால் அவர்கள் பிரிந்து விடுகிறார்கள். தங்கள் பங்குகளைப் பெற்றுக்கொண்டு பிரிந்து சென்ற பிறகு அவர்கள் மறுபடியும் நண்பர்களாகப் பழகு கிறார்கள். அவர்கள் சேர்ந்திருந்தால் தினந்தோறும் சண்டை போட்டுக் கொண்டு இருப்பார்கள். சுத்தமான முறையில் ஒரு சண்டையோடு பிரிந்து விடுவோம், தினமும் சண்டை போட்டுக்கொண்டிருக்க வேண்டாம் என்று அவர் கருதினார்.

படேல் ஒரு வாதாங்கொட்டை மாதிரியானவர். வெளியே கனமான மேல் தோடு, ஆனால் உள்ளே மென் மையான பருப்பு இருக்கிறது என்று மவுண்ட்பேட்டன் அவ ரைப் பற்றிக் கூறினார். அதிகமான முயற்சி இல்லாமல் அவரைத் தன் பக்கத்துக்கு இழுத்துக் கொண்ட வைசிராய் மற்ற காங்கிரஸ் தலைவர்களின், முதலில் காந்தி, நேருவின் மனங்களை மாற்றும் முயற்சிகளில் ஈடுபட்டார்.

வைசிராயின் அழைப்பின் பேரில் மார்ச் 31ந் தேதியன்று காந்தி டில்லிக்கு வந்தார். படேல் மற்றும் அவரைச் சுற்றி இருப்பவர்களின் கருத்துக்கள் ஆஜாதுக்கு வேதனையைக் கொடுத்திருந்தன. எனவே மவுண்ட்பேட்டனோடு தன் முதல் சந்திப்புக்கு முன்னர் காந்தி ஆஜாதிடம் பேசி அமைதிப் படுத்தினார். காங்கிரஸ் பிரிவினையை ஏற்றுக்கொள்ள விரும்

பினல் என் பிரேதத்தின் மீதுதான் அதைச் செய்ய வேண்டும், நான் உயிரோடிருக்கும் வரை ஒருபோதும் பிரிவினையை ஒத்துக்கொள்ள மாட்டேன் என்றார்.

வைசிராய்க்கும் காந்திக்கும் மூன்று நாட்கள் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. ஒவ்வொரு நாளும் வைசிரா யின் அரண்மனையிலிருந்து காந்தி திரும்பும்பொழுது படேல் விடாக்கண்டனைப் பின்தொடர்ந்து வருவார்.

ஆஜாத் காந்தியை மறுபடியும் சந்தித்த பொழுது அவர் கருத்துக்களில் ஏற்பட்டிருந்த மாற்றம் அவரை உலுக்கிவிட் டது. பிரிவினை தவிர்க்க முடியாதது என்று தோன்றக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது; அது எந்த வடிவத்தில் நடை பெறப் போகிறது என்பது மட்டும்தான் ஒரே பிரச்சினை என்று காந்தி தளர்ச்சியோடு கூறினார்.

நாட்டில் மிகப் பெரிய அளவில் தீப்பிடிக்கப் போகிறது என்று காந்தியை பயமுறுத்துகின்ற முறையில் மவுண்ட்பேட் டன் கூறிய வாதங்களினால் மகாத்மாவின் மனம் மாறியதா? அல்லது ஜின்னாவின் ''இரண்டு தேசீய இனங்கள்'' என்ற தத்துவத்தை இப்பொழுது திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்த படேலின் பலமான வற்புறுத்தல் அதற்குக் காரணமா? இரண்டு பேருடைய தாக்கத்தையும் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ மதிப்பிடுவது தவறாகும். ஆனால் கல்கத்தா வில் நடைபெற்ற படுகொலை மற்றும் மார்ச் மாத சம்பவங் களுக்குப் பிறகு காந்தி ஒரு ஆன்மிக நெருக்கடிக்கு ஆளாகி யிருந்தார் என்பதே அவருடைய கருத்தோட்டத்தில் ஏற் பட்ட மாற்றத்துக்கு முக்கியமான காரணம். நாட்டு மக்கள் அஹிம்சைக் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்று காந்தி அரும்பாடுபட்டிருக்கிறார்; முக்கியமான எல்லாப் பிரச்சினை களையும் தீர்ப்பதற்கு அது ஒன்றுதான் வழி என்று அவர் நம்பினார். அந்த அஹிம்சைக் கருத்து கல்கத்தாவிலும் லாகூ ரிலும் இராவல்பிண்டியிலும் வீழ்ச்சியடைந்துவிட்டது. ஆனால் காந்தி இதை மட்டும்தான் ஒத்துக்கொள்ளவில்லை. சில வாரங்களுக்குப் பிறகு பேசும்பொழுது அஹிம்சையைப் பரப் புவதில் தோல்வியடைந்துவிட்டோம், ஆனால் அந்தக் கருத் துக்காக நான் தொடர்ந்து போராடுவேன் என்று காந்தி கூறினார். கடந்த முப்பது வருடங்களாக நாம் பேசி வந்த அஹிம்சை பலவீனமடைந்தவர்களின் அஹிம்சை,

இன்று மாறியுள்ள சூழ்நிலைமையில் அத்தகைய அஹிம்சைக்கு மேலும் அதிகமான பாத்திரம் கிடையாது என்று கூறினார். பலம் நிறைந்தவர்களின் அஹிம்சையைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு இந்தியாவுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

மிக முந்திய காலமான 1944ம் வருடத்திலேயே, நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி ஆழமாகச் சிந்தித்த நேரு இந்தியாவின் மீது திணிக்கப்பட்ட ஒவ்வொரு பிரிவினையும் நவீன உலகத்தில் எந்த இடமும் இல்லாத ஏதாவதொரு மத்தியகாலக் கருத்துக்குத் திரும்புவதாகத்தான் இருந்திருக் கும் என்று எழுதினார். அவர் இந்தியாவின் ஒற்றுமையை உறுதியாக ஆதரித்தவர் என்ற முறையில் மாகாணங்களுக்கும் சுதேச சமஸ்தானங்களுக்கும் மிகவும் அதிகமான சுயாட்சியைத் தருகின்ற, அதே சமயத்தில் பலமான மத்தியத் தொடர்பைப் பாதுகாக்கின்ற சுதந்திரத்தின் வடிவத்தைக் கண்டுபிடிப்பது அவசியமானது, அதைக் கண்டுபிடிப்பதும் சர்த்தியமே என்று கருதினார். சோவியத் யூனியனில் இருப்பதைப் போல பெரிய மாகாணங்கள் அல்லது சமஸ்தானங்களுக்குள் சுயாட்சி அதி காரத்தைக் கொண்ட பிராந்தியங்கள் இருக்கலாம். இதைத் தவிர, சிறுபான்மையினர் உரிமைகள் சம்பந்தமாகக் கற்பனை செய்யக் கூடிய எல்லா விதமான பாதுகாப்புகளும் அரசியல மைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டும். ஆனால் அப்பொ ழுதும் கூட நிர்ணயிக்கப்பட முடியாத பல்வேறு கூறுகள் மற்றும் சக்திகளின் — இவற்றில் மிகவும் முக்கியமானது பிரிட்டிஷ் கொள்கை (அழுத்தம் ஆசிரியர்களுடையது) — தாக்கத்தில் எதிர்காலம் எப்படியிருக்கும் என்று ஊகிக்க முடியாது என்று கவலை நிறைந்த சிந்தனைகளில் மூழ்கியவராக நேரு எழுதினார்.

1947 மே மாதம் 10ந் தேதியன்று சிம்லாவில், இந்தி யாவின் எதிர்கால அரசு அமைப்பு சம்பந்தமான நகல் திட்டத்தை மவுண்ட்பேட்டன் நேருவிடம் விளக்கினார். இத் திட்டத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அங்கீகாரத்துக்காக சமர்ப்பிக்கப் போவதாக வைசிராய் தெரிவித்தார்.

இரவு இரண்டு மணிக்கு நேரு ஹோட்டலுக்குத் திரும் பினார். தனக்கு மிகவும் நெருங்கிய நண்பரும் ஆலோச கருமான கிருஷ்ண மேனன் தங்கியிருந்த அறைக்கு உடனே சென்றார். நேருவுக்கு ஒரே ஆத்திரம். அந்த வேகத்தில் அவ

ரால் ஒரு வார்த்தை கூட சிறிது நேரம் வரை பேச ʼமுடிய வில்லை. மவுண்ட்பேட்டன் உண்மையிலேயே இந்தியாவைப் பிரிவினை செய்கின்ற திட்டத்தைக் கூறியிருக்கிறார். மாகாணங் களுக்கு அதிகமான அதிகாரம் கொடுக்கப்படும்; மத்தியில் பலவீனமான மத்திய அரசாங்கம் இருக்கும். இந்த மாகாணங் கள் ஒன்றோடொன்று சேருகின்ற பிரச்சினையைப் பிரிட்டிஷ் காரர்கள் இந்தியாவிலிருந்து வெளியேறிய பிறகு ஒவ்வொரு மாகாண அரசாங்கமும் முடிவு செய்யும்.

இந்தத் திட்டத்தை இந்தியா சிறிது கூட ஒத்துக் கொள்ள முடியாது என்று மறுநாள் காலையில் நேரு வைசி ராய்க்கு எழுதினார். மவுண்ட்பேட்டன் மற்றும் அவரைச் சுற்றியிருப்பவர்களின் உத்தேசங்களைப் புரிந்துகொண்ட நேரு இந்தத் திட்டத்தை அமுல் நடத்தினால் இந்தியா துண்டு துண் டாகப் பிரிந்துவிடும், அதன் விளைவாக உள்நாட்டில் மோதல் களும் கலகங்களும் வன்முறையும் ஏற்படும், மத்திய அரசாங் கத்தின் அதிகாரத்தை இது மேலும் அழிக்கும், இராணுவம், போலீஸ் மற்றும் அரசு இலாகாக்களைப் பலவீனப்படுத்தும் என்று சுட்டிக் காட்டினார்.

நேருவின் கடுகடுப்பான கடிதத்தைப் படித்துத் திகைப் படைந்ததைப் போல மவுண்ட்பேட்டன் நடித்தார், திட்டத் தைத் ''திருத்தியமைக்க'' ஒத்துக் கொண்டார். பலம் நிறைந்த, ஒன்றுபட்ட இந்தியாவை நிர்மாணிக்க நான் உண்மையிலேயே விரும்புகிறேன் என்று நேருவிடமும் மற்ற காங்கிரஸ் தலைவர்களிடமும் உறுதியளித்தார். ஆனால் இந்தி யாவைப் பிரிவினை செய்வதற்கு அவசரமான தயாரிப்புகளை அவர் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். இந்தியாவைப் பிரிவினை செய்ய வேண்டும், அதை பலவீனப்படுத்த வேண் டும், அதன் மூலம் இந்தியாவின் உள்நாட்டு விவகாரங்களில் பிரிட்டன் தலையிடக் கூடிய சாத்தியத்தை ஏற்படுத்த வேண் டும் என்ற உறுதியில் வைசிராய் எந்தக் காரியத்தைச் செய் வதற்கும் தயங்கவில்லை. ஒரு சுதேச சமஸ்தானத்தின் பிரதம மந்திரியின் மீது வைசிராய் தன்னுடைய திட்டத்தை எப்படித் திணித்தார் என்பதைப் பின்வரும் சம்பவத்தில் காணலாம். வைசிராயின் திட்டத்தைப் பற்றி அந்த சமஸ்தானத்தின் மகாராஜா இன்னும் முடிவு செய்யவில்லை என்று சமஸ் தானத்தின் பிரதம மந்திரி வைசிராயிடம் கூறினார். வைசிராய்

தன் மேசையில் காகிதங்கள் பறக்காமலிருப்பதற்காக வைக்கப் பட்டிருக்கும் கண்ணாடிக் குண்டைக் கையில் எடுத்தார். வெகு நேரம் வரை அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். உன் மகாராஜா திட்டத்தை ஒத்துக் கொள்வதென்று இதே சமயத்தில் முடிவு செய்துவிட்டார் என்று வைசிராய் திகைப் படைந்துபோன பிரதம மந்திரியிடம் தெரிவித்தார். வைசி ராயின் செய்தி இலாகாவின் தலைவராக இருந்த ஆலன் காம்பெல் ஜான்சன் பிற்காலத்தில் இந்த சம்பவத்தை விவ ரித்தார்.

வைசிராய் லண்டனுக்குப் போவதற்குச் சிறிது காலத் துக்கு முன்பு ஆஜாத் அவரைச் சந்தித்து அந்தத் திட்டத்தை அமுலாக்குவதைத் தள்ளி வைக்குமாறு கேட்டுக்கொண் டார். எந்தப் பிரிவினையும் இல்லாத நேரத்திலேயே கல்கத்தா, பீகார், பம்பாய் மற்றும் பஞ்சாபில் கலகங்கள் ஏற்பட்டன. இந்துக்கள் முஸ்லிம்களையும் முஸ்லிம்கள் இந்துக்களையும் தாக் கினார்கள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் நாட்டைப் பிரிவினை செய்தால் நாட்டின் இரு பகுதிகளிலும் இரத்த ஆறுகள் ஓடும், இந்தப் படுகொலைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கமே பொறுப்பு என்று அவர் எச்சரித்தார்.

அந்த ஒரு பிரச்சினை சம்பந்தமாக நான் முழு உறுதி கொடுக்கத் தயாராக இருக்கிறேன், நாட்டில் எங்கும் இரத்தப் பெருக்கோ, கலகமோ ஏற்படாதபடி நான் கவனிப்பேன் என்று மவுண்ட்பேட்டன் ஒரு கணம் கூடத் தாமதிக்காமல் ஆஜாதிடம் பதிலளித்தார். நான் சிவிலியன் அல்ல, போர் வீரன் என்று அவர் இறுமாப்போடு கூறினார். பிரிவினையைக் கோட்பாட்டளவில் ஒத்துக்கொண்டால் நாட்டின் எந்தப் பகு தியிலும் மதக் கலவரங்கள் ஏற்படாமல் கவனிக்குமாறு நான் உத்தரவு போடுவேன். மிகக் கடுமையான நடவடிக்கைகளின் மூலம் விஷமத்தனத்தை முளையிலேயே கிள்ளிவிடுவேன், ஆயுதந் தாங்கிய போலீஸ் மட்டுமல்ல, இராணுவத்தையும் விமானப் படையையும் பயன்படுத்துவேன், யாராவது கலவரத்தைத் தொடங்கினால் டாங்குகளையும் விமானங்களையும் பயன்படுத்தி நசுக்கிவிடுவேன் என்றார்.

இந்தப் பிரகடனம் ஆஜாதுக்கும் நேருவுக்கும் அவர்களை ஆதரித்த காங்கிரஸ்காரர்களுக்கும் ஆறுதலைக் கொடுக்கவில்லை. இந்தியாவைத் தன்னுடைய செல்வாக்கின் கீழ் வைத்திருப்

பதற்குப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எதையும் செய்யத் தயங்காது என்ற மனச் சோர்வான கருத்துக்கு அது இட்டுச் சென்றது. சுதந்திரத்தை அடைவதற்கு இந்தியர்கள் இன்னும் ''தயாராகவில்லை'' என்று உலகத்துக்கு எடுத்துக் காட்டுவதற்கு ஒரு சாக்காக, ''சட்டத்தையும் ஒழுங்கையும் மறுபடியும் ஏற்படுத்தவும் அமுல் நடத்துவதற்காகவும்'' நாட்டிற்குள் கூடுதலான இராணுவப் பிரிவுகளைக் கொண்டுவருவதற்காக இந்தியாவை உள்நாட்டுச் சண்டையில் மூழ்க வைப்பதற்குக் கூட பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தயாராக இருக்கிறார்கள். அப்படிப்பட்ட வளர்ச்சி ஏற்படாது என்று காங்கிரஸ் தலைவர்களால் ஒதுக்க முடியவில்லை.

அட்லி மந்திரிசபை மவுண்ட்பேட்டன் ''திருத்தியமைத்த'' திட்டத்தை அங்கீகரித்தது. வைசிராய் மே மாதக் கடைசியில் டில்லிக்குத் திரும்பினார். ஜூன் 3ந் தேதியன்று பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு பிரகடனத்தை வெளியிட்டது. ஜூலை 18ந் தேதியன்று ஆங்கில நாடாளுமன்றம் அதை அங்கீகரித்த பிறகு அது இந்திய சுதந்திரச் சட்டம் என்ற பெயரைப் பெற்றது.

இந்தியா மதத்தின் அடிப்படையில் இந்துஸ்தான் (இந்துக்களின் அரசு), பாகிஸ்தான் (முஸ்லிம்களின் அரசு) ஆகிய இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்படும். வங்காளத்தையும் பஞ்சாபையும் பிரிவினை செய்வதைப் பற்றி அந்த மாகாணங்களின் சட்டமன்றங்கள் முடிவு செய்யும். இச்சட்ட மன்றங்களின் உறுப்பினர்கள் இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள மாவட்டங்களின் பிரதிநிதிகள், முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள மாவட்டங்களின் பிரதிநிதிகள் என்ற அடிப்படை இரண்டு கோஷ்டிகளாகப் பிரிக்கப்படுவார்கள். இரு மாகாணங்களையும் பாகிஸ்தானில் சேர்ப்பதா அல்லது அவற்றை இரண்டாகப் பிரித்து இரு அரசுகளோடும் சேர்ப்பதா என்பதை இரு கோஷ்டிகளும் தனி வாக்கெடுப்பின் மூலம் முடிவு செய்யும். ஒரு கோஷ்டி பிரிவினைக்கு ஆதரவாக வாக்களித்தாலும் கூட மாகாணங்கள் பிரிவினை செய்யப்படும். ''தகராறுக்குட்பட்டிருப்பதாகச்'' சொல்லப்படுகின்ற வடமேற்கு மற்றும் வடகிழக்குப் பிரதேசங்களில் வசிப்பவர்கள் இந்துஸ்தானத்தில் அல்லது பாகிஸ்தானில் சேருவதைப் பற்றி பொது வாக்கெடுப்பின் மூலம் முடிவு செய்ய வேண்டும்

(1935ஆம் ஆண்டு சட்டத்தால் நிலைநாட்டப்பட்டபடி மக்கள் தொகையில் 20 சதவிகிதத்திற்கும் குறைவானவர்கள்தான் இந்த வாக்கெடுப்பில் கலந்து கொள்ள முடியும்). இந்த நடவடிக்கைகள் முடிந்த பிறகு அரசியல் நிர்ணய சபை இந்துஸ்தான் மற்றும் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபை களாகப் பிரிக்கப்படும். பிரிவினைக்குப் பிறகு ஏற்படும் அரசு கள் டொமினியன் அந்தஸ்தைக் கொண்டிருக்கும். சுதேச சமஸ்தானங்களின் நிலை முடிவு செய்யப்படவில்லை. இரண்டு டொமினியன்களில் ஏதாவதொன்றில் சேருவதைப் பற்றி அல்லது ''பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு தங்களுடைய பழைய உறவுகளைப் பாதுகாப்பதைப்'' பற்றி, அதாவது பிரிட்டிஷ் காலனிகளாக நீடிப்பதைப் பற்றி சமஸ்தானங்களே முடிவு செய்துகொள்ளும்.

ஆட்சியதிகாரத்தை ஒப்படைக்கின்ற தேதியை 1948 ஜூனிலிருந்து 1947 ஆகஸ்ட் 15க்கு முன்கூட்டி நிர்ணயிக்க வேண்டும் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் ஒத்துக் கொள்ளுமாறு செய்வதிலும் மவுண்ட்பேட்டன் வெற்றியடைந்தார். இல்லையென்றால் இந்தியர்களுக்காக நான் தயாரித்திருக்கும் வெடிகுண்டு ''என் கைகளிலேயே வெடித்துவிடும்'' என்று ஆரவாரமாக, ஓரளவுக்கு இறுமாப்போடு மவுண்ட்பேட்டன் கூறினார்.

முஸ்லிம் லீக் தலைவர்கள் மவுண்ட்பேட்டன் திட்டத்தை அநேகமாக ஏகமனதாக அங்கீகரித்தார்கள், காங்கிரசோடு எந்த வழியிலும் ஒத்துழைப்பதற்கு முற்றிலும் மறுத்தார்கள். ஜின்னா விடாப்பிடியாகக் கேட்டுக் கொண்டிருந்த எல்லாமே கடைசியில் அவருக்குக் கிடைத்துவிட்டது. எனினும் உணர்ச்சி வேகத்தில் அவர் பாகிஸ்தானின் இரண்டு பகுதிகளையும் இணைக்கின்ற வகையில் 800 மைல் நீளத்துக்கு இடைவழி நிலம் வேண்டுமென்று கோரினார். ஆனால் நிதானமடைந்த பிறகு இது மிகவும் அதீதமான கோரிக்கை (இதற்கு மேல் சொல்லத் தேவையில்லை) என்பதை உணர்ந்து அதைக் கைவிட்டார்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் ஜூன் 14ந் தேதியன்று தொடங்கியது. இந்திய வரலாற்றில் மிக முக்கிய மான நிகழ்ச்சிகளின் வளர்ச்சியில் தன்னால் தாக்கம் செலுத்த முடியாத ஆதரவற்ற நிலையை சிறையிலிருந்து வெளியே

# அத்தியாயம் பன்னிரண்டு

17, யார்க் சாலையில் அமைந்திருக்கும் இந்தியப் பிரத மருடைய தற்காலிக இருப்பிடத்தில் மாடி அறையில் நள்ளிரவு முடிந்து நெடு நேரமாகிய பிறகும் மேசை விளக்கின் மங்கிய ஒளி தெரிகிறது. அந்த அறையில் நேரு பைல்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

காலை ஆறு மணிக்கு அவர் அகன்ற வராந்தாவுக்கு வருகிறார். ஆனால் அங்கே வீசுகின்ற காற்று புத்துணர்வூட்டு வதாக இல்லை. அந்தக் குறுகிய கோடை கால இரவில் காற்று இன்னும் குளிர்ச்சி அடையவில்லை.

வீட்டைச் சுற்றிலும் சிறு தோட்டம். அதன் வாயிலில் சீக்கியக் காவலர்கள் நின்றார்கள். போர்வீரர்கள் வேலியைச் சுற்றி ரோந்து வந்து கொண்டிருந்தார்கள். பிரதமர் முகத் தைச் சுளித்தார். பிரதமர் வீட்டைச் சுற்றிப் போர்வீரர்கள் ரோந்து வர வேண்டுமென்று மவுண்ட்பேட்டன் ஆணையிட் டிருந்தார். நேருவுக்கு இந்த ஏற்பாடு பிடிக்கவில்லை. பிரத மரைச் சந்திக்க வருபவர்களுக்கு அனுமதிச் சீட்டுகள் கொடுக்க வேண்டும். அந்தத் தொல்லையைத் தவிர, அங்கேயிருந்த போலீஸ் காவல் அவர் சிறையில் கழித்த வருடங்களை வெறுப் பான வகையில் நினைவூட்டியது. ஆனால் பிரதமருக்குப் பாது காப்பு மிகவும் அவசியம் என்று கவர்னர் ஜெனரல் வற்புறுத் திச் சொல்லிவிட்டார்.

நேருவின் காரியதரிசிகள் வேலை செய்யும் இரண்டு அறை கள் கீழே இருக்கின்றன. நேரு படிகளில் இறங்கி அங்கே வருகிறார். அந்த அதிகாலை நேரத்தில் அங்கே யாருமில்லை. அவர் தோட்டத்துக்கு சென்று ரோஜாச் செடியிலிருந்து ஒரு மொட்டைப் பறித்துத் தன்னுடைய ஷெர்வானியின் மூன்று

வது பொத்தான் துவாரத்தில் சொருகிக் கொள்கிறார். ரோஜா மலர்கள் என்றால் கமலாவுக்கு எவ்வளவு பிரியம்! அவள் இப்பொழுது உயிரோடிருந்தால்...

அவர் தோட்டத்தின் நடைபாதையின் வழியாகச் சென்று அங்கே போடப்பட்டிருந்த சாய்வு நாற்காலியில் உட்கார் கிறார். அன்றைய அலுவல்கள் தொடங்குவதற்கு முன்பு அவர் பல விஷயங்களைப் பற்றி அமைதியாகச் சிந்திக்க வேண்டும். அவருடைய களைப்படைந்த முகத்தில் மகிழ்ச்சியைக் காட் டிலும் கவலைதான் அதிகமாக இருந்தது. சரியாக ஒரு வரு டத்துக்கு முன்பு 1946 ஆகஸ்ட் 16ந் தேதியன்று கல்கத் தாவில் படுகொலை நடைபெற்றது. அது அளவிலும் கொடு மையிலும் பயங்கரமான படுகொலை.

இத்தகைய மத சண்டைகள் நாட்டுப் பிரிவினையோடு முடிந்திருக்கக் கூடாதா என்று அவர் வேதனைப்பட்டார். பிரிட்டிஷ் திட்டத்தை ஒத்துக்கொள்வதைக் காட்டிலும் சுதந் திரம் தாமதமாகக் கிடைப்பது நல்லது என்று ஆஜாத் கூறியது சரிதானா? இத்தகைய சிந்தனைகள் அவரைத் துன் புறுத்தின. நாட்டைப் பிரிக்கும் போது மதக் கலவரங் களுக்கு இடமளிக்க மாட்டேன் என்று ஒரு ''போர்வீரனுக் குரிய'' முறையில் கொடுத்த வாக்கை மவுண்ட்பேட்டன் நிறை வேற்றுவாரா? பழிக்குப் பழி, பாகிஸ்தானில் இந்துக்கள் இரத்தம் சிந்தியதற்கு இந்தியாவில் முஸ்லிம்கள் இரத்தம் சிந்த வேண் டும், இந்தியாவில் முஸ்லிம்களைப் பணயக் கைதிகளாக்கு வோம் என்று தீவிரவாதிகள் கூச்சல் போட்டுக்கொண்டிருக் கிறார்கள். குருட்டுத்தனமான மதவெறியர்கள் கை ஓங்கிவிட் டால், தீவிரவாதிகளின் பயங்கரமான கோரிக்கைகள் அமுல் நடந்தால்...

பிரிக்கப்பட்ட இரண்டு பகுதிகளிலும் சிறுபான்மையர் களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்குப் பழிக்குப் பழி என்ற வழியைப் பின்பற்றுவது காட்டுமிராண்டித்தனமாக நேரு வுக்குத் தோன்றியது. 1946ம் வருடத்தில் நடைபெற்ற பயங் கரமான சம்பவங்கள் மறுபடியும் நடந்தால் என்று நினைக்கும் பொழுதே அவருடைய இருதயம் ஈயக்குண்டாக மாறியது.

ஒரு அலுவலர் காலையில் வெளிவரும் செய்தித்தாள்களைக் கொண்டு வந்து கொடுத்தார். அவருடைய புகைப்படங்கள் பல பக்கங்களில் வெளியிடப்பட்டிருப்பதைப் பார்த்து கிண்ட

லாகச் சிரித்தார். இந்த அளவுக்கு அதிகமான (அவருடைய கருத்தின்படி அர்த்தமற்ற) விளம்பரத்தில் எல்லாப் பதக்கங் களையும் அணிந்து கொண்டு காட்சியளிக்கும் மவுண்ட்பேட்டன் பிரபு மட்டும்தான் அவரோடு போட்டியிட முடியும். ஆனுல் பத்திரிகை வர்ணனைகளில் காணப்படும் ஆர்ப்பாட்டமான உளறல்களுக்குப் பின்னுல் கவலை நிறைந்த குரல்களும் ஒலிப் பது அவருக்குக் கேட்டது. ஜனநாயகப் பத்திரிகைகளில் இவை அதிகமாக ஒலித்தன. இந்திய மக்களிடம் மவுண்ட்பேட்டன் ''தனிப்பட்ட கவர்ச்சி'' மற்றும் ''நேசமான அணுகுமுறை யைக்'' கொண்டிருப்பதாக அவை குறிக்கவில்லை. நிர்ணயிக்கப் பட்ட காலத்துக்கு ஒரு வருடம் முன்பாகவே மவுண்ட்பேட் டன் கொடுத்த ''பரிசை'' ஏற்றுக்கொண்டது சரிதானு? பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அவசரத்துக்குப் பின்னுல் அவர் கள் பீதியடைந்து போயிருந்ததைத் தேசிய விடுதலை இயக்கத் தின் தலைவர்கள் பார்க்கத் தவறிவிட்டார்கள் என்று பகத் வாட்ஸ் என்ற இந்தியப் பத்திரிகையாளர் எழுதினுர். ''ஆட்சி மாற்றத்தை'' வேகமாகச் செய்யவில்லை என்ருல் பிறகு மாற்றிக் கொடுப்பதற்கு ஆட்சி எதுவும் இருக்காது என்ற ஞானே தயம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஏற்பட்டிருந்தது...

நாட்டில் மதக் கலவரங்களைப் பற்றி சோர்வூட்டக் கூடிய அறிக்கைகள் பகல் முழுவதும் பிரதமருக்கு வந்து கொண் டிருந்தன. மேற்கு பஞ்சாபில் முஸ்லிம்கள் இந்து மற்றும் சீக்கிய மதங்களைச் சேர்ந்த ஆண்களையும் பெண்களை யும் குழந்தைகளையும் படுகொலை செய்துகொண்டிருந்தார் கள்; கிழக்கு பஞ்சாபில் இந்துக்களும் சீக்கியர்களும் ஆத் திரமடைந்து முஸ்லிம் குடியிருப்புகளைத் தாக்கினுர்கள், வீடு களுக்குத் தீ வைத்தார்கள், ஒரு குற்றமும் செய்யாத மக் களைக் கொன்ருர்கள்.

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னுல் வஞ்சகமான, அனுபவம் நிறைந்த ஒரு கரத்தை மறுபடியும் ஊகிக்க முடியும். இவை எதிர்பாராமல் ஏற்பட்ட மத வெறியாட்டம் அல்ல, நிதான மாகத் திட்டமிடப்பட்டுச் செய்யப்பட்ட படுகொலைகள் என்று இரண்டு பகுதிகளிலும் வெளியிடப்படும் செய்தித்தாள்கள் எழுதின. இக்கட்டுரைகளில் ஒன்றின் ஆசிரியர் பஞ்சாப் மாகாணத்தின் கவர்னராக இருந்த ஜென்கின்ஸ் என்ற பிரிட் டிஷ்காரரின் சந்தேகத்துக்குரிய பாத்திரத்தை அம்பலப்படுத்

திஞர். பஞ்சாபில் கவர்னர் பதவியை வகித்தவர்களிலேயே மிகவும் அதிகமாகத் திறமையில்லாதவர், மிகவும் வஞ்சகமானவர் என்ற முறையில் பஞ்சாபின் வரலாற்றில் ஜென்கின்ஸ் பெயர் என்றும் நிலைத்திருக்கும் என்று அவர் எழுதிஞர். பஞ்சாபிலுள்ள மக்களினங்கள் ஒருவரையொருவர் கழுத்தை நெறித்துக் கொல்லுவதை ஆதரித்த அவரது கொள்கைக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மறைமுகமான ஆதரவு அல்லது அனுமதி எந்த அளவுக்கு உண்டு என்பது தெரியவில்லை. ஆனால் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே சீக்கியர்களை ஒரு நிரந்தரமான ஆப்பாக உபயோகிக்க வேண்டுமென்று அவர்கள் இன்னும் விரும்பிஞர்கள் என்றால், குறி போடப்பட்ட சீட்டுகளை வைத்து விளையாடுவதற்கு அவரைக் காட்டிலும் சிறந்த ஆட்டக்காரரைத் தேர்ந்தெடுத்திருக்க முடியாது.

கிழக்கு பஞ்சாபின் அமைச்சர்கள் ஒருவர் பின் ஒருவராக டில்லிக்கு ஓடிவந்தார்கள். அங்கே நடைபெற்ற சம்பவங்களைக் கண்டு அவர்கள் பொறிகலங்கிப் போய் என்ன செய்தாலும் இப்பொழுது படுகொலையை நிறுத்த முடியாது என்று நேருவிடம் கூறிஞர்கள். ஒழுங்கை நிலைநாட்டுவதற்கு ஏன் இராணுவத்தைப் பயன்படுத்தவில்லை என்று பிரதமர் கேட்டபொழுது மத அடிப்படையில் இராணுவத்தைப் பிரித்துவிட்டபடியால் இனிமேல் அதை நம்ப முடியாது என்று பதிலளித்தார்கள். நம்பிக்கையான துருப்புகளை பஞ்சாபுக்கு உடனே அனுப்ப வேண்டும் என்று கோரிஞர்கள்.

மவுண்ட்பேட்டனின் இராணுவ அனுபவத்தில் உள்நாட்டு விவகார மந்திரி படேல் முழு நம்பிக்கை வைத்திருந்தார். சாதாரணமான விஷயத்தை மாபெரும் உண்மையைப் போல வெளியிடுவது மவுண்ட்பேட்டனுடைய சிறப்பாகும். நாட்டில் ஒரு மெய்யான யுத்த நிலைமை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது, அதை யுத்த நடவடிக்கைகளின் மூலமே சமாளிக்க முடியும் என்றார் மவுண்ட்பேட்டன். பிரிட்டிஷ் மேஜர் ஜெனரல் டி. டபிள்யு. ரீஸ் தலைமையில் 50,000 போர் வீரர்களைக் கொண்ட இராணுவத்தை பஞ்சாபுக்கு அனுப்பிஞர்—அங்கே ஒழுங்கை நிலைநாட்டுகின்ற நோக்கத்தோடு இல்லாமல், இந்தியாவைப் பிரிவினை செய்வது, மதச் சண்டைகளைத் தூண்டிவிடுவது, சுதேச சமஸ்தானங்களில் தனி நாடாக இருக்கும் மனோபாவத்தைக் கிளறிவிடுவது, இவற்றின் மூலம் இந்தியா

ஸ்வ பலவீனப்படுத்திய பிறகு தம்மிடம் கீழ்ப்படிந்திருக்குமாறு செய்வது என்று பிரிட்டிஷ்காரர்களின் சொந்தத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக அனுப்பினர்.

இந்தியாவில் அமைதியை நிலைநாட்டுவேன் என்று உத்தரவாதமளித்த மவுண்ட்பேட்டன் இப்பொழுது ஜெனரல் ரீசினல் நிலைமையைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்றார்.

வெவ்வேறு மதங்களைப் பின்பற்றுபவர்களுக்கிடையே அமைதியை நிலைநாட்டுகின்ற பொறுப்பை நேருவே எடுத்துக் கொண்டார். ஆகஸ்ட் 17ந் தேதியன்று பஞ்சாபுக்குச் சென்று மதக் கலவரங்கள் மறுபடியும் ஏற்படாதபடி தடுத்தார்.

இரத்த வெள்ளத்தாலும் நெருப்புக்களினாலும், கலாச்சாரச் செல்வங்களும் குடிமக்களின் உடைமைகளும் அழிக்கப்பட்டதனாலும் பஞ்சாப் ஓய்ந்து கிடந்தது. ஆயிரக்கணக்கான அகதிகள்—பெண்களும் குழந்தைகளும், உறுப்புக்களை இழந்தவர்களும் அனாதரவான வயோதிகர்களும் வாலிபர்களும், பணக்காரர்களும் ஏழைகளும், குதிரைகளும் ஒட்டகங்களும் யானைகளும் வீடுகளில் வளர்க்கப்படும் பிராணிகளும்—ஒருவரோடொருவர் சேர்க்கப்பட்டு ஒரு பெருந்திரளாக, புழுதிப் படலத்தில் சிக்கி வெவ்வேறு திசைகளில் சாலைகளில் போய்க் கொண்டிருப்பதை நேரு கண்டார். அவர்களில் பலர் பட்டினியாக, உடலை மறைக்கத் துணியில்லாமல் சாலைகளில் மடிந்தார்கள். அவர்கள் புதிய எல்லைக்கோட்டின் மறுபக்கத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பது யாருக்கும் தெரியாது. அங்கே அவர்களுக்கு உறவினர்கள் இல்லை, உணவு கிடைக்காது, வேலை இல்லை.

இந்திய வரலாற்றில் இதற்கு முன்பு மக்கள் இப்படிக் குடிபெயர்ந்ததில்லை. சுமார் அறுபது லட்சம் முஸ்லிம்களும் நாற்பத்தைந்து லட்சம் இந்துக்களும் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் சென்றார்கள். அவர்களில் ஏழு லட்சம் மக்கள் மடிந்தார்கள்.

அது இந்திய மக்களின் வரலாற்றில் ஒரு மகத்தான சோகநாடகம். அந்த நாட்களில் நேரு மிகவும் அதிகமான மதிநுட்பத்தையும் உடல் உழைப்பையும் செலவிட வேண்டியிருந்தது. அரசியல் நுண்மையும் மன உறுதியும் அமைப்புத் திறமையும் தேவைப்பட்டன. ஒவ்வொருநாளும் அவர் டஜன்

கணக்கான ராஜியவாதிகளையும் அரசியல்வாதிகளையும் சந்தித்தார், சாதாரண விவசாயிகளோடு பேசினூர். அரசாங்கத்தைச் சேர்ந்த வேறு எந்த அமைச்சரும் நேருவைப் போல விவசாயிகளோடு எளிமையான முறையில், அவர்கள் சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடிய மொழியில் பேசவில்லை, அவர்களின் சிந்தனைகளையும் விருப்பங்களையும் புரிந்து கொள்ளவில்லை என்று சொல்ல முடியும்.

அவருடைய பணியைப் பொறுத்தவரை, அவரிடம் தனிப்பட்ட விருப்பு, வெறுப்புக்கள் இல்லை, நண்பர்களும் விரோதிகளும் இல்லை. சக அமைச்சர்களிடமிருந்து போலீஸ் அதிகாரிகள் வரை ஒரே மாதிரியாக நடந்து கொண்டார், ஒரே விதமான மரியாதை கலந்த உறுதியைக் காட்டினூர். ''1946 மற்றும் 1947ம் வருடங்களின் பயங்கரமான நாட்களின்போது ஜவகர் லால் நேரு ஒரு உண்மையான நிர்வாகியின் குணூதிசயங்களை மிகச் சிறப்பான முறையில் வெளிப்படுத்தினூர். அவர் அரசாங்கத்தில் பதவியேற்ற முதல் நாளிலிருந்தே அரசு குடிமக்களுக்கிடையே வேற்றுமை காட்டக் கூடாது; இந்துக்களையும் முஸ்லிம்களையும், சீக்கியர்களையும் கிறிஸ்தவர்களையும், பார்சிக்களையும் பௌத்தர்களையும் சமமாகவே நடத்த வேண்டும் என்பதைப் புரிந்துகொண்டார். இந்தியக் குடிமகனூ எவருக்குமே சட்டத்துக்கு முன்னூல் சம உரிமைகள் இருந்தன'' என்று ஆஜாத் பிற்காலத்தில் எழுதினூர்.

காங்கிரஸ் தலைவர்களுக்கிடையே ஒற்றுமை இல்லாததும் மிகவும் சிக்கலடைந்திருந்த உள்நாட்டு நிலைமையை மேலும் சீர்கேடடையச் செய்தது.

இந்தியாவின் பெரிய முதலாளி வர்க்கத்தினருடைய நலன்களைப் பிரதிபலித்த படேல் அரசாங்கத்திற்குள் தன்னுடைய கோஷ்டியை அமைத்துக் கொண்டு பிரதமர் நேருவின் அரசியல் முன்முயற்சிகள் பலவற்றை விடாப்பிடியாக எதிர்த்து வந்தார்.

இந்திய யூனியன் தோன்றிய ஆரம்ப நாட்களில் நேருவுக்கு ஏற்பட்ட மிகக் கடினமான பிரச்சினைகளில் எண்ணற்ற சுதேச சமஸ்தானங்களின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதும் ஒன்ருகும். நாட்டில் மொத்தம் 565 ''சுதந்திரமான அரசர்கள்,'' அதாவது மகாராஜாக்கள், இராஜாக்கள், நிஜாம்கள், நவாபுகள் மற்றும் இதே மாதிரியான பட்டங்களைக் கொண்ட

நிலப்பிரபுக்கள் இருந்தார்கள். நூற்றுக் கணக்கான சுதேச சமஸ்தானங்கள் மீது தலைமையான அதிகாரத்தை வகிப்பது அநேகமாக முடியாது என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் புரிந்து கொண்டது. எனவே எல்லா சமஸ்தானங்களையும் இல்லாவிட்டாலும் இவற்றில் சிலவற்றையாவது இந்தியா விலிருந்து பிரித்துவைத்து சுதேச சமஸ்தானங்களின் பிரச்சினை யைப் பெரிதாக்கி நாட்டில் குழப்பத்தை அதிகப்படுத்து வதற்காக சர் கான்ராட் கோர்பீல்டு என்ற அரசியல் இலாகா அதிகாரியை அனுப்பியது.

பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு சுதேச சமஸ்தானங்களின் உறவுகளையும் மற்ற விவகாரங்களையும் அரசியல் இலாகா கவனித்துக் கொண்டிருந்தது. சமஸ்தானங்களின் பிரதேசங் கள் வழியாகச் செல்லும் இரயில் பாதைகள் மற்றும் நெடுஞ் சாலைகள், தபால் மற்றும் தந்திப் போக்குவரத்தைப் பற்றி அப்போதிருந்த ஒப்பந்தங்களையும் உடன்பாடுகளையும் கோர் பீல்டின் ஆணையின் பேரில் அந்த இலாகா ரத்துச் செய்தது. நாட்டில் போக்குவரத்து மற்றும் செய்தித் தொடர்புகளைச் சீர்குலைத்து இந்திய அரசாங்கம் நாட்டை நிர்வாகம் செய்ய இயலாமற் செய்வது அவர்களுடைய நோக்கம்.

அரசியல் இலாகா எந்த அதிகாரத்தைக் கொண்டு இந்திய அரசாங்கத்தை மிகவும் பாதிக்கின்ற முடிவுகளைச் செய்தது என்று நேரு ஆத்திரத்தோடு ஆட்சேபித்தார். அர சியல் இலாகாவும் குறிப்பாக கோர்பீல்டும் அதிகாரத்தைத் தவறான முறையில் பயன்படுத்தியிருப்பதாக அவர் குற்றம் சாட்டினார். இதைப் பற்றி மிக உயர்ந்த மட்டத்தில் நீதி விசாரணை அவசியம் என்று கூறினார்.

பிரிட்டிஷ்காரர்கள் தங்களுடைய நவீன காலனியாதிக்கத் திட்டங்களில், தமக்குப் போர்த்திட்ட முக்கியத்துவத்தைக் கொண்டிருந்த சமஸ்தானங்களில், குறிப்பாக காஷ்மீர், ஹைத ராபாத், மைசூர், திருவாங்கூர் ஆகியவற்றின் மீது அதிக மான கவனம் செலுத்தினார்கள். இங்கே பிரிட்டிஷ் இராணு வமும் விமானப் படையும் அதிகமான அளவில் குவித்து வைக்கப்பட்டிருந்தன.

ஆசியாவின் புதிய அரசின் பிரதமர் தங்களுடைய சொந்த அரசாங்கத்தின் திட்டங்களை நிறைவேற்றிக்கொண் டிருந்த பிரிட்டிஷ் அரசியல் மற்றும் இராணுவ அதிகாரி

களின் வஞ்சகமும் சூழ்ச்சியும் நிறைந்த தந்திரங்களைச் சந்தித்தார். கௌரவமான ராஜியவாதிகள், ஓங்கிப் பேசும் ஜெனரல்கள், சிவில் ஆலோசகர்கள், தந்திரமான இரகசிய இலாகா ஒற்றர்கள், கூலிக்காகப் பாடுபடும் குண்டர்கள் ஆகியோர் தங்களுக்கு விதிக்கப்பட்ட இலக்குகளை நிறைவேற்றுவதற்கு அரும்பாடுபட்டார்கள்.

1947 அக்டோபர் 22ந் தேதியன்று ஆங்கில-அமெரிக்க இரகசிய இலாகாக்கள் ஆயுதங்களும் பணமும் கொடுத்து மலைப்பிரதேச மக்களைக் கொண்ட படைகளைக் காஷ்மீருக்குள் அனுப்பின. ஜியார்ஜ் கன்னிங்ஹாம் என்ற பிரிட்டிஷ் கவர்னருடைய ஆட்சியிலிருந்த வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலிருந்து படையெடுத்தார்கள். அமெரிக்காவின் ரகசிய இலாகாவை (இன்றைய சி.ஐ.ஏ.) சேர்ந்த ரஸ்ஸெல் கே. ஹெய்ட் என்ற அதிகாரி இந்தப் படையெடுப்பை ஒருங்கிணைத்து மேற்பார்வை செய்தார். காஷ்மீரைச் சேர்ந்த இந்துக்களும் முஸ்லிம்களும் சீக்கியர்களும் தங்கள் மத வேறுபாடுகளை மறந்து ஆக்கிரமித்த பலம் பொருந்திய படைகளை ஒற்றுமையோடும் உறுதியோடும் எதிர்த்து நின்றார்கள்.

நேரு இந்திய அரசாங்கத்தின் பாதுகாப்புக் கமிட்டியின் அவசரக் கூட்டத்தைக் கூட்டினார். அக்கூட்டத்தில் மவுண்ட்பேட்டன் பிரபு முதல் காரியமாக சுதேச சமஸ்தான விவகாரங்களைக் கவனிக்கும் இலாகாவிலிருந்து ஒரு முக்கிய அதிகாரியைக் காஷ்மீருக்கு அனுப்புவோம், அவர் அங்கேயுள்ள நிலைமையைப் பற்றி விசாரித்து அறிக்கை கொடுக்கட்டும் என்றார். மவுண்ட்பேட்டன் பிரபு ஏதோ காரணங்களுக்காகக் காலந்தாழ்த்த விரும்புவது தெளிவாகத் தெரிந்தது.

ஆக்கிரமிப்பாளர்கள் காஷ்மீரத்தின் தலைநகரமான ஸ்ரீநகரின் எல்லைகளுக்கு வந்துவிட்டார்கள். அக்டோபர் 27ந் தேதியன்று காஷ்மீர் இடைக்கால அரசாங்கத்தின் தலைவரான ஷேக் அப்துல்லாவும் மகாராஜாவும் காஷ்மீரத்தை இந்தியாவுடன் சேர்த்துக்கொள்ளுமாறு மவுண்ட்பேட்டனுக்கு வேண்டுகோள் அனுப்பினார்கள். அதே சமயத்தில் தலைநகரத்தைப் பாதுகாக்க இந்தியத் துருப்புகளை அனுப்புமாறும் கேட்டுக் கொண்டார்கள். அன்று காலையிலேயே நேரு காஷ்மீரத்துக்கு விமான மூலமாகப் படைகளை அனுப்பினார். விமான நிலையம் தாக்குதலுக்குள்ளாகி யிருந்தபடியால் விமானத்தை விட்டு

இறங்கிய உடனே அவர்கள் யுத்தத்தில் ஈடுபட்டார்கள்.

அமெரிக்காவும் பிரிட்டனும் பல வருடங்களாக இந்தியாவுக்கு எதிராக வெட்கங்கெட்ட விளையாட்டை நடத்திக் கொண்டிருந்தன. அவர்களுடைய இராஜீயவாதிகள் சுய நிர்ணய உரிமை, பொது வாக்கெடுப்பு என்ற மேன்மையான வார்த்தைகளை உபயோகித்துத் தங்களுடைய உள்நோக்கத்தை மறைத்துக் கொண்டார்கள். எந்த வழியைக் கடைப்பிடித்தாவது அரசுரிமை கொண்ட இந்திய அரசின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதே அவர்களுடைய உள்நோக்கம். இந்தியாவுக்கு மிகவும் ஜீவாதாரமான நலன்கள் சம்பந்தப்பட்ட காஷ்மீர் பிரச்சினையில் அமெரிக்காவும் பிரிட்டனும் அநேகமாக எப்பொழுதும் இந்தியாவுக்கு விரோதமாகவே இருந்து வந்திருக்கின்றன என்று நேரு வேதனையோடு பிற்காலத்தில் கூறினார்...

*1947* செப்டெம்பரில் காந்தி டில்லியில் ஒரு புதிய பகுதியில் இந்தியாவின் மிகப்பெரிய தொழிலதிபரான ஜி. டி. பிர்லாவுக்குச் சொந்தமான மாளிகைக்குத் தன் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டார். படேல் மற்றும் இதர சில காங்கிரஸ்காரர்களிடம் பிர்லா மிகவும் நெருக்கமாக இருந்தார். அவருடைய டில்லி மாளிகையில் யாரும் வசிக்க வில்லை. தேசிய விடுதலை இயக்கத்தின் தலைவர்களிடம் தன் மரியாதையைக் காட்டுவதைப் போல அவர் அந்த மாளிகையின் கதவுகளைத் திறந்து காந்தியிடம் ஒப்படைத்தார். மாளிகைக்கு முன்னால் பசுமையான புல்வெளிகள் நெடுந்தூரம் வரை இருந்தன. மரங்கள் குளிர்ச்சி நிறைந்த நிழலைக் கொடுத்தன. அங்கே தலையில் ஓலைத் தொப்பியோடு கால்களை மடித்து உட்கார்ந்து சிந்தனையில் மூழ்கியிருப்பது எழுபத்தெட்டு வயதான காந்திக்கு மிகவும் பிடிக்கும்.

அந்த மாளிகை நாகரிகநயமில்லாமற் கட்டப்பட்டிருந்தது. காந்தி அதைப் பற்றியோ அல்லது வெளியுலகத்தின் அழகைப் பற்றியோ சிந்திப்பவரல்ல. அவர் வசதிகளை விரும்பாதவர். அந்த மாளிகையின் பளிங்குத் தரையின் மேல் பாயை விரித்து அதன் மீது படுத்துறங்கினார்.

*1948*ம் வருடம் ஆரம்பமாவதற்குள் நான்கு லட்சம் பஞ்சாபி அகதிகள் (இந்துக்களும் சீக்கியர்களும்) டில்லியிலும் அதைச் சுற்றிலுமிருந்த பகுதிகளிலும் சேர்ந்துவிட்டார்கள்.

டில்லி முழுவதிலும் மதவெறி என்ற பயங்கரமான நோய் பரவியிருந்தது.

டில்லி மாநகராட்சியும் போலீஸ் இலாகாவும் படேலின் நிர்வாகத்தின் கீழிருந்தது. ஆனால் அவர் கலவரங்களைத் தூண்டிவிடுபவர்களுக்கு எதிராகத் தீவிரமான நடவடிக்கைகளை எடுக்கவில்லை. டில்லியில் தீவைத்தலும் கொள்ளையடித்தலும் தொடர்ந்து நடைபெற்றன. இந்து மகாசபை மற்றும் ராஷ்ட்ரீய சுயம்சேவக் சங்கத்தைச் (ஆர்.எஸ்.எஸ்.) சேர்ந்தவர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று நகரத்திலுள்ள முஸ்லிம்களை வரைமுறையின்றி பயமுறுத்தினார்கள். மக்கள் பலர் கொல்லப்பட்டனர், வரலாற்று நினைவுச் சின்னங்களும் முஸ்லிம்களின் புனித இடங்களும் அழிக்கப்பட்டன. இரு மதப் பிரிவினரையும் சமரசப்படுத்த தான் மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தும் தோல்வியில் முடிவதைக் கண்டு காந்தி பெரிதும் மனம் நொந்தார்.

அன்றாடம் பக்தர்கள் கூட்டம் காந்தியின் உபதேசங்களைக் கேட்பதற்காக பிர்லாவின் இல்லத்திற்கு வந்த வண்ணமிருந்தனர். பல்வேறு மத நூல்களிலிருந்து—இந்து மத, இஸ்லாம், புத்த மத, கிறிஸ்துவ மத நூல்கள்—சில பகுதிகளை படித்த காந்தி, சமரசத்திற்கு வருமாறும் மத சகிப்புத் தன்மையைக் கடைபிடிக்குமாறும் அறைகூவல் விடுத்தார். விரைவில் இந்து மத வெறியர்கள் காந்தியை மத துரோகி என்று குற்றஞ் சாட்டினார்கள். முஸ்லிம்களுக்கும் அவரிடம் நம்பிக்கை இல்லை. ஏனென்றால் அவர் ஒரு உண்மையான இந்துவாகவே இருந்தார். ஒரு காலத்தில் நாட்டு மக்கள் அனைவருமே அவருடைய சொற்களைக் கேட்டதுண்டு. ஆனால் இப்பொழுது காந்தியின் அதிக உணர்ச்சிகரமான வார்த்தைகளுக்குக் கூட ஒருவரும் செவி சாய்க்கவில்லை. இந்து மதவெறியர்கள் பிர்லா மாளிகைக்கு முன்னால் கூடி பயமுறுத்துகின்ற வகையில் ''காந்தியைக் கொல்வோம்'' என்று கோஷமிட்டார்கள்.

ஒரு நாள் நேரு, படேல், ஆஜாத் ஆகிய மூவரையும் தன்னைப் பார்க்க வருமாறு காந்தி அழைத்திருந்தார். இந்தப் படுகொலையை நிறுத்துவதற்கு என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள் என்று படேலைக் கேட்டார். நகரத்தில் ஏற்பட்ட கலவரங்களைப் பற்றி மிகவும் அதிகமாக மிகைப்படுத்தப்பட்ட

செய்திகள் வெளியிடப்பட்டிருக்கின்றன, முஸ்லிம்கள் புகார் செய்வதற்கு எந்தக் காரணமும் கிடையாது என்று படேல் பதிலளித்தார்.

காந்தி அவரை ஆச்சரியத்தோடு பார்த்தார். ''நான் சீனுவில் இருக்கவில்லை, இங்கே டில்லியில்தான் வசிக்கிறேன். என் கண்களையும் காதுகளையும் இன்னும் என்னல் உபயோகிக்க முடியும். முஸ்லிம்கள் புகார் செய்யக் காரணமில்லை என்று எனக்கு உறுதி சொல்லும் பொழுது என்னுடைய கண்களையும் காதுகளையும் நான் நம்பாமலிருக்க வேண்டும் என்று முயற்சிக்கிறீர்களா? அப்படியானல் நாம் இருவருமே ஒருவரையொருவர் நம்பவைக்க முடியாது'' என்று காந்தி வருத்தத்தோடு கூறினர்.

படேல் பொய் சொல்வதைக் கேட்டு ஆத்திரமடைந்த நேரு அவர்களுடைய உரையாடலில் குறுக்கிட்டார். டில்லியில் முஸ்லிம்கள் மிருகங்களைப் போலக் கொல்லப்படுகிறார்கள், இந்த நிலைமையை இனி மேல் சகிக்க முடியாது; அவர்களுக்கு உதவிசெய்ய முடியவில்லை, அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை என்பதை நினைக்க எனக்கு மிகவும் அவமானமாக இருக்கிறது என்று அவர் ஆழ்ந்த துயரத்தோடு கூறினர்.

படேலின் அரசியல் வாழ்க்கையில் காந்தி அதிகமான உதவிகளைச் செய்திருக்கிறார். அவருடைய நடத்தை இப்பொழுது காந்தியிடம் ஆருத்துயரத்தை ஏற்படுத்தியது.

வேறு எவ்விதமான நடவடிக்கைகளும் எடுக்கக் கூடிய நிலையில் இல்லாததால், மஹாத்மா தன்னுடைய வழக்கமான ஆயுதத்தை உபயோகிக்க முடிவு செய்தார். 1948 ஜனவரி 12ந் தேதியன்று உண்ணுவிரதம் இருக்கப் போவதாக அறிவித்தார். அவருடைய வாழ்க்கையில் அது பதினுருவது உண்ணுவிரதம். டில்லியில் அமைதியும் ஒழுங்கும் மறுபடியும் ஏற்படுகின்ற வரை உண்ணுவிரதத்தைத் தொடர்வதென்று அவர் முழுவுறுதியோடிருந்தார்.

அன்றைய தினம் நேரு, ஆஜாத், படேல் ஆகிய மூவரும் உண்ணுவிரதம் இருக்க வேண்டாம் என்று காந்தியைக் கேட்டுக் கொள்வதற்காக அவரைச் சந்தித்தார்கள். ஏனென்றல் அவருடைய பலவீனமான உடல் நிலையில் உண்ணுவிரதம் மரணத்தில் முடிந்துவிடலாம். படேல் காந்தியிடம், உண்ணு

விரதத்தால் பிரச்சினை தீரப்போவதில்லை, அரசாங்கத்தைக் குறை சொல்பவர்களுக்கு ஒரு சாக்கைக் கொடுப்பதாகத் தான் இருக்கும் என்று கூறினார். பிறகு வெளியே புறப்படு வதைப் போல திடீரென்று எழுந்து நின்றார். நீங்கள் இருக்க வேண்டும் என்று ஆஜாத் அவரைக் கேட்டுக் கொண்டார்.

''நான் இருப்பதால் என்ன பலன்?'' என்று படேல் பலமாகப் பேசினார். ''நான் சொல்வதைக் கேட்க காந்திக்கு விருப்பமில்லை. உலகத்துக்கு முன்னால் இந்துக்களுக்குக் கெட்ட பெயர் ஏற்படுத்த வேண்டுமென்று அவர் முடிவு செய்திருப் பது போலத் தோன்றுகிறது. அவருடைய நோக்கம் அப்படி யானால், நான் இங்கே இருந்து செய்யக் கூடியது ஒன்று மில்லை'' என்றார்.

காந்தி உண்ணாவிரதத்தை நிறுத்துவதற்குத் தன்னுடைய நிபந்தனைகளைக் கூறினார். எல்லாவிதமான மதச் சண்டை களும் நிறுத்தப்பட வேண்டும், முஸ்லிம்களின் மசூதிகளையும் நினைவுச் சின்னங்களையும் அழித்ததற்கு இந்துக்கள் ஈடு செய்ய வேண்டும் என்றார்.

ஜனவரி 12 முதல் 18ந் தேதி வரை காந்தி உண்ணா விரதம் இருந்தார். அவருடைய உடல்நிலை நாளுக்கு நாள் சீர்கேடடைந்தது. மதவெறியர்களை எதிர்த்த ஒரே தலைவர் காந்தி. மிகவும் முதிர்ந்த வயதில் அவர் உண்ணாவிரதம் இருந்தார். கோடிக்கணக்கான மக்கள் அனுதாபத்தோடும் கவலையோடும் உண்ணாவிரதத்தைக் கவனித்துக் கொண்டிருந் தார்கள். அவர்களில் பலருக்கும் சமீபத்தில் ஏற்பட்டிருந்த பைத்தியம் தெளிந்துவிட்டது போலத் தோன்றியது. டில்லி யில் நடைபெற்ற பல பெருங்கூட்டங்களில் காந்தியின் எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்றுவதாக சபதம் செய்தார்கள். ஜனவரி 18ந் தேதி, ஞாயிற்றுக்கிழமையன்று முஸ்லிம்கள் மற்றும் இந்துக்களின் பிரதிநிதிகள் காந்தியின் முன்னால் கூடி னார்கள். இரு மதங்களையும் பின்பற்றும் மக்களினங்களுக் கிடையே அமைதியைக் காப்போமென்றும் இந்தியா, பாகிஸ் தான் முழுவதிலும் அதைப் பரப்புவோமென்றும் சபதம் செய்தார்கள்.

நாட்டில் அமைதி மறுபடியும் ஏற்பட்டது. காந்தி உண்ணா விரதத்தை முடித்துக் கொண்டார். ஆனால் இந்த முடிவு எல்லோருக்கும் திருப்தியைக் கொடுக்கவில்லை. காந்தி புனித

மான இந்து மதத்துக்குத் துரோகம் செய்துவிட்டார் என்று இந்து மகாசபைத் தலைவர்கள் குற்றம் சாட்டினார்கள். காந்தியின் பிரார்த்தனைக் கூட்டங்களில் குரான் மற்றும் பைபிளிலிருந்து சில பகுதிகளை வாசிப்பதை அனுமதிக்க மாட்டோம் என்று பயமுறுத்தினார்கள்.

ஜனவரி 20ந் தேதியன்று மாலையில் பிரார்த்தனைக் கூட்டத்துக்கு ஆயிரக்கணக்கானவர்கள் வந்திருந்தார்கள். காந்தி பிர்லா மாளிகையிலிருந்து வெளியே வந்ததும் ஒரு பயங்கரவாதி அவர் மீது வெடி குண்டை வீசினான். குறி தவறிவிட்டது; நல்ல வேளையாக யாரும் காயமடையவில்லை. காந்தி சிறிதும் அஞ்சவில்லை.

''முஸ்லிமுக்கு எதிரியாக இருப்பவன் இந்தியாவுக்கும் எதிரியே'' என்று கூறிவிட்டு காந்தி அங்கேயிருந்தவர்களை அமைதியாக இருக்குமாறு கேட்டுக் கொண்டார்.

அவர் வழக்கம் போலவே காரியங்களைச் செய்துகொண்டிருந்தார். அந்த மாளிகையின் புல்வெளியில் நடைபெறும் பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வருபவர்களைச் சோதனை செய்வதற்குப் போலீஸ்காரர்களை அனுமதிக்கவில்லை. தன்னைக் கொல்ல முயற்சி செய்த பயங்கரவாதியையும் அவர் பெருந்தன்மையோடு மன்னித்து விட்டார்.

அதே சமயத்தில் நேரு அமிருதசரசுக்குப் போயிருந்த பொழுது அவரைக் கொல்ல முயற்சி செய்யப்பட்டது. யாரோ ஒரு சதிகாரன் அவர் மீது நாட்டுவெடி குண்டை வீசினான். ஆனால் அதிர்ஷ்டவசமாகக் குறி தவறிவிட்டது.

யாரோ ஒருவருடைய நன்மைக்காக காந்தியையும் நேருவையும் ஒழிக்க சதிகள் செய்யப்பட்டன என்பதை இவை எடுத்துக் காட்டின.

1948 ஜனவரி 30ந் தேதியன்று காந்தி ஆவா, மனு ஆகிய இரு பேத்தியர் உடன்வர பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் போவதற்குத் தோட்டத்துக்குப் புறப்பட்டார். அப்பொழுது நேரம் ஐந்து மணி பதினேழு நிமிடங்களாகியிருந்தது. ஒரு நபர் திடீரென்று கூட்டத்திலிருந்து விலகி காந்தியை நோக்கி வேகமாக முன்வந்து, ''இன்று நீங்கள் தாமதமாக வந்திருக்கிறீர்கள்'' என்றான். ''ஆம்'' என்று காந்தி பதிலளித்தார். அவர் மறு வார்த்தை பேசுவதற்குள் துப்பாக்கி குண்டுகள் வெடித்தன. அவன் காந்தியின் மார்பைக் குறி

வைத்துச் சுட்டான். இரண்டு குண்டுகள் இருதயம் உள்ள பகுதியைத் துளைத்தன. மூன்றுவது குண்டு வயிற்றில் பாய்ந்தது.

''ஹே! ராம்!'' என்ற வார்த்தைகளை உச்சரித்தபடியே காந்தி கீழே விழுந்தார். அவர் அணிந்திருந்த வெள்ளை வேட்டியில் இரத்தக் கறைகள் பரவின.

காந்திக்கு நெருக்கமானவர்கள் அவருடைய உடலை மாளிகைக்குள் தூக்கிச் சென்றுர்கள். அங்கே காலியாக இருந்த அறையின் மூலையில் மெத்தை மீது உடலை வைத்தார்கள். ஒரு துணியை உடல் மீது போர்த்திஞர்கள். மக்கள் மாளிகைக்குள் வரத் தொடங்கிஞர்கள். இந்த சோக நிகழ்ச்சி நடைபெற்ற சில நிமிடங்களில் ஜவகர்லாலும் மந்திரி சபையின் மற்ற உறுப்பினர்களும் அங்கே வந்து சேர்ந்தார்கள். பிரதமர் தன்னுடைய குருவின் உடலுக்கு முன்பாக அசையாமல் நெடு நேரம் நின்றுர். அவர் மிகவும் மோசமான அதிர்ச்சிக்கு உள்ளாகியிருப்பதை அவர் முகம் எடுத்துக்காட்டியது. பக்கத்து அறையில் அமைச்சர்கள் கூடியிருந்தார்கள். இறுதிச் சடங்குகளுக்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும். நேரு அங்கே சென்றுர்.

மாளிகைக்கு முன்ஞல் மக்கள் பெருந்திரளாகக் கூடிஞர்கள். போலீஸ்காரர்கள் எவ்வளவோ முயற்சி செய்து தடுத்த போதிலும் அவர்கள் தோட்டத்துக்குள் ஏறிக் குதித்தார்கள், அந்த இடம் முழுவதும் நிறைந்திருந்தார்கள். காந்திக்கு என்ன நடந்தது சொல்லுங்கள் என்று கோரிஞர்கள்.

நேரு அவர்களை நோக்கிச் சென்றுர். அந்தத் தோட்டச் சுவரின் மீது ஏறிநின்றுர். பிரதம மந்திரியின் உருவத்தின் மீது தெரு விளக்குகள் பிரகாசித்தன. கூட்டத்திலிருந்தவர்கள் அதைப் பார்த்து அமைதியாக இருந்தார்கள்.

''நம்முடைய வாழ்க்கைக்கு வழிகாட்டிய விளக்கு அணைந்துவிட்டது. இருள் நம்மைச் சூழ்ந்துவிட்டது'' என்று அவர் பேசத் தொடங்கிஞர். அவர் குரல் கம்மியிருந்தது. ''உங்களிடம் எதைச் சொல்வது, அதை எப்படிச் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. நாம் அன்போடு நேசித்த தலைவர்— பாபு என்றுதான் நாம் அவரை அழைத்தோம்—நாட்டின் தந்தை மறைந்து விட்டார். அறிவுரை அல்லது ஆறுதல் வார்த்தைகளைக் கேட்பதற்காக நாம் இனிமேல் அவரிடம்

போக முடியாது. இது ஒரு பயங்கரமான அடி—தனியே எனக்கு மட்டுமல்ல—நாட்டின் கோடிக் கணக்கான மக்களுக் கும்தான்...

''விளக்கு அணைந்துவிட்டது என்று கூறினேன். இல்லை, நான் சொன்னது தவறு. ஏனென்றால் இந்த நாட்டிலே எரிந்து கொண்டிருந்த விளக்கு சாதாரணமான விளக்கு அல்ல. கடந்த பல வருடங்களாக இந்த நாட்டில் ஒளியேற் றிய விளக்கு எதிர்காலத்தில் இன்னும் பல வருடங்களுக்கு இந்த நாட்டை ஒளிரச் செய்யும். ஆயிரம் வருடங்களுக்குப் பிறகும் இந்த நாட்டிலும் உலகத்திலும் அந்த விளக்கை இன்னும் காண முடியும்.''

வெவ்வேறு மதங்களைப் பின்பற்றுபவர்களுக்கிடையே சகோதரச் சண்டைகளை நிறுத்தி நாட்டில் அமைதியை மறுபடி யும் ஏற்படுத்துமாறு காந்தி நம்மைக் கேட்டுக் கொண்டார். அவருடைய வாழ்க்கையையும் அதற்கே அர்ப்பணித்தார். அவ ருடைய வேண்டுகோளைச் சிறிதும் குறையாமல் நிறைவேற்று வதே அவருக்கு மிகச் சிறந்த நினைவுச் சின்னமாக இருக் கும் என்று நேரு கூறினார்.

அன்றிரவில் நேரு அகில இந்திய வானொலியில் பேசினார். காந்தி பல வருடங்களாகக் கனவுகண்ட புதிய இந்தியாவை நிர்மாணிப்பதில் ஒன்றுபடுமாறு நாட்டு மக்களைக் கேட்டுக் கொண்டார்.

இந்திய மக்களின் வீரமிக்க போராட்டத்தை அனுதாபத் தோடு கவனித்துக் கொண்டிருந்த எல்லோருக்கும் டில்லியில் நடைபெற்ற துரோகத்தனமான கொலை அதிர்ச்சியைக் கொடுத்தது. ஐக்கிய நாடுகள் சபையில் சோவியத் யூனியனு டைய பிரதிநிதியான ஏ.ஏ. குரோமிகோ 1948 ஜனவரி 30ந் தேதியன்று பாதுகாப்புக் கவுன்சில் கூட்டத்தில் பேசும் பொழுது, மிகவும் தலைசிறந்த அரசியல் தலைவர்களில் ஒருவர் காந்தி, இந்திய வரலாற்றில் சந்தேகத்துக்கிடமில்லாத முறை யில் ஆழமான முத்திரையைப் பதித்தவர், இந்திய மக்கள் தங்கள் வரலாற்றில் நெடுங்காலமாக நடத்திவந்திருக்கும் தேசிய விடுதலைப் போராட்டத்தோடு அவர் பெயர் எப்பொ ழுதும் இணைந்திருக்கும் என்று கூறினார்.

மறுநாள் காலையில் மகாத்மாவின் உடல் மக்கள் அஞ்சலி செலுத்துவதற்கு வைக்கப்பட்டது. இந்தியா முழுவதுமே

சோகத்தில் மூழ்கியிருந்தது. இந்தியாவின் நகரங்களிலும் கிராமங்களிலும், சதுக்கங்களிலும் தெருக்களிலும் ஆயிரக் கணக்கான மக்கள் துயரத்தோடு மௌனமாக நின்று கொண்டிருந்தார்கள். காந்தியைக் கொன்றவன் மதவெறி ஸ்தாபனமான இந்து மகாசபையைச் சேர்ந்தவன் என்பதை அறிந்தபொழுது ஏராளமான இந்துக்கள் மிகவும் அவமானமடைந்தார்கள்.

நேரு இரண்டு நாட்களாகச் சிறிதும் உறங்கவில்லை. இறுதிச் சடங்குகளுக்கு ஏற்பாடுகளைச் செய்த பிறகு, தேசியக் கொடியால் போர்த்தப்பட்டு மலர்களால் அலங்கரிக்கப்பட்ட மகாத்மாவின் உடலுக்கு முன்னால் அவர் திரும்பத் திரும்ப வந்து நின்றார்.

காந்தியின் உடல் தூக்குபடுக்கையில் பீரங்கி வண்டியின் மீது வைக்கப்பட்டது. இந்தியக் கடற்படை வீரர்கள் நீண்ட கயிறுகளால் அந்த வண்டியை இழுத்துக் கொண்டு மெதுவாக நடந்தார்கள். மகாத்மாவின் உடல் யமுனை ஆற்றங்கரையை நோக்கிப் பதினைந்து கிலோமீட்டர் தூர இறுதிப் பயணத்தைத் தொடங்கியது. மகாத்மாவிடம், இந்தியாவின் மாபெரும் தலைவரிடம் கடைசியாக விடை பெற்றுக் கொள்ள வந்த மக்கள் சமுத்திரம் போலத் திரண்டிருந்தார்கள். ஊர்வலத்துக்கு முன்னால் இராணுவ வீரர்கள் அணிவகுத்து வந்த பொழுது மக்கள் வெள்ளம் இரண்டாகப் பிரிந்து வழிவிட்டது.

மாலை நான்கு மணிக்கு காந்தியின் கடைசி மகன் தேவதாசிடம் புரோகிதர் தீப்பந்தத்தைக் கொடுத்தார். அவர் சிதையில் நெருப்பு மூட்டினார்....

''இராஜகட்டம்'' என்று அழைக்கப்படும் அந்த இடத்தில் இன்று காந்திக்கு நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டிருக்கிறது. இந்தியாவில் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்திருக்கும் மக்கள் கூட்டத்தை அங்கே எல்லா நேரங்களிலும் பார்க்கலாம். அவர்கள் அந்தக் கல்மேடையில் மலர்களைத் தூவி சுதந்திர இந்தியாவை நிறுவியவர்களில் ஒருவரான காந்தியின் அஸ்திக்கு முன்னால் கை கூப்பி வணக்கம் செலுத்துகிறார்கள்.

காந்தி மரணமடைவதற்கு ஆறு வருடங்களுக்கு முன்பே தன்னுடைய அரசியல் வாரிசு நேரு என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அவர் முறைப்படி அறிவித்தார். அவரும் நேருவும் வெவ்வேறு அரசியல் மொழிகளைப் பேசுபவர்

களாயிற்றே என்று காங்கிரஸ் தலைவர்கள் மத்தியில் சந்தேகங்கள் ஏற்பட்டபொழுது, இதயங்கள் ஒன்று சேருவதற்கு மொழி ஒரு தடை அல்ல, நான் மறைந்த பிறகு நேரு என்னுடைய மொழியைப் பேசுவார் என்று காந்தி உறுதியாக பதிலளித்தார்.

எனினும் காங்கிரசிலிருந்த வலதுசாரிகள் காங்கிரஸ் தலைமையில் (காந்திக்கு அடுத்த) இரண்டாவது இடம் படேலுக்கு உரியது என்று அடிக்கடி கூறினார்கள். படேல் பிரதமர் நேருவைப் பல முறை எதிர்த்தார். சமீப காலத்தில் அவர் காந்தியின் கருத்துக்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை.

ஆனால் ஜனவரி 30ந் தேதியன்று வெடித்த குண்டுகள் படேலுக்கு எதிராகத் திரும்பின. அன்று நடைபெற்ற சம்பவங்களுக்கு உள்நாட்டிலாகா அமைச்சர்தான் பொறுப்பு என்று சில முக்கியமான காங்கிரஸ்காரர்கள் கருதினார்கள். காந்தியின் உயிரைப் பாதுகாப்பதற்கு அவசியமான நடவடிக்கைகளை அவர் ஏன் எடுக்கவில்லை என்று அவர்கள் கேட்டார்கள்.

படேல் ஆத்திரமடைந்தார். எனக்கு எதிராக இப்படிப்பட்ட குற்றச்சாட்டுகளைச் சொல்லி காங்கிரசில் பிளவேற்படுத்துவதற்குக் காங்கிரஸ் விரோதிகள் முயற்சிக்கிறார்கள் என்று அவர் கூறினார்.

படேலிடமிருந்த பல குணங்களை நேரு வெறுத்தார். அறிவுப் பகுதியினரிடம் அவர் மிக அலட்சியமாக நடந்து கொண்டு ஆத்திரமூட்டுதல், சோஷலிஸ்ட் நம்பிக்கைகளைக் கொண்டிருந்த காங்கிரஸ்காரர்களை ஏளனம் செய்தல், நியாயப் படுத்த முடியாத அளவுக்குக் கொடுமையான முறையில் கம்யூனிஸ்டுகளிடம் நடந்துகொள்ளுதல்—இத்தகைய குறைகள் படேலிடமிருந்தன. ஒருவரைத் தனிப்பட்ட முறையில் பிடிக்கா விட்டால் அவரோடு ஒத்துழைக்க முடியாது என்று நினைக்கும் அரசியல்வாதிகள் உண்டு. நேரு அப்படிப்பட்டவரல்ல. கட்சி ஸ்தாபன விவகாரங்களில் படேலுக்கிருந்த திறமையை அவர் மதித்தார். சுதந்திரமான, பலம்பொருந்திய இந்தியாவை உருவாக்கும் போராட்டத்தில் அவருடைய விசுவாசத்தை நேரு சந்தேகிக்கவில்லை.

காந்தி மரணமடைந்து சிறிது காலத்துக்குப் பிறகு ஒரு அமெரிக்கப் பத்திரிகையாளர் நேருவிடம் பின்வரும் கேள்வி

யைக் கேட்டார். நீங்களும் படேலும் அரசியல் எதிரிகள், உங்களிருவரில் வெற்றி பெறப்போவது யார் என்பதைப் பொறுத்தே நாட்டின் எதிர்காலம் அமையும் என்று கூறுவது சரியாகுமா என்று கேட்டார். பிரதமர் அவருக்குத் திறந்த மனதோடு பதிலளித்தார். ஸ்தூலமான நடவடிக்கைகளில், அவற்றின் விவரங்களைப் பற்றி நாங்கள் அடிக்கடி வேறுபடு வதுண்டு, அடிக்கடி எதிர்முனைகளிலும் இருப்பதுண்டு. ஆனால் காந்தியின் நினைவு எவ்விதமாகவோ எங்களை ஒன்று சேர்த்து விடுகிறது என்றார்.

ஆனால் காந்தி மறைந்துவிட்டார். இதுவரையிலும் வெற்றி கரமாக நடை பெற்ற படேலின் அரசியல் வாழ்க்கையில் ஏதோ குறைகள் ஏற்பட்டன. அரசியல் மற்றும் தனிப்பட்ட தோல்விகள் படேலின் அசாதாரணமான சக்தியைப் பலவீனப் படுத்தின, கடைசியில் அவர் உடல் நலம் கெட்டது. 1948 மார்ச்சில் படேலுக்கு ஆபத்தான இருதய வலி ஏற்பட்டது.

பல மாதங்கள் சிகிச்சைக்குப் பிறகு அவர் குணமடைந் தார். ஒரு கூட்டத்தில் நேரு மேடையில் தோன்றியதும் ஏராளமான விவசாயிகள் அவரை உற்சாகமாக வரவேற்ற தையும் தன்னைப் பற்றி அவர்கள் சிறிதும் அக்கறை எடுத்துக் கொள்ளாததையும் படேல் கவனித்தார்.

''இவர்களை என் பக்கத்துக்குத் திருப்ப என்னால் ஒரு போதும் முடியாது. அவர்கள் ஜவகர்லாலைப் பார்க்க வந்திருக் கிறார்கள்'' என்று படேல் ஒரு காங்கிரஸ்காரரிடம் கூறினார்.

காந்தியின் மரணம் இந்தியா முழுமைக்குமே ஈடு செய் யப்பட முடியாத இழப்பாக இருந்தது. காந்தி நாட்டில் வசதியுடைய பகுதியினரிடத்தில் மட்டும் அக்கறை கொண் டவர் அல்ல; நாட்டிலுள்ள எல்லோருடைய நலன்களைப் பற்றியும் அவர் அக்கறை எடுத்துக் கொண்டார். நேரு காந்தியின் ஆதரவைப் பயன்படுத்தி உள்கட்சி நெருக்கடி களை—சமீப காலத்தில் அவை அதிகமான அளவில் ஏற்பட் டன—சமாளித்தார், முக்கியமான அரசியல் முடிவுகளைக் காங் கிரசும் அரசாங்கமும் ஏற்றுக் கொள்ளுமாறு செய்தார்.

அந்தத் துயரமான நாட்களின் போது நேரு மிகவும் மாற்றமடைந்தார். அவருடைய வெளித் தோற்றம் கூட மாறிவிட்டது. அவருடைய நீண்ட முகத்தில் சுருக்கங்கள் ஆழமடைந்தன. அவருடைய பார்வை கூர்மை அடைந்தது.

மகாத்மாவின் மரணத்துக்குப் பிறகு ஏற்பட்ட அரசியல் நிலைமையைப் பற்றி, ஒரு நாட்டின் ஆன்மிக மையத்துக்கு ஊடுருவிப் பார்க்கக் கூடிய அருந்திறம் காந்தியைப் போல மிகச் சிலரிடமே இருப்பதைப் பற்றி,

மணற் பொடியில் உலகத்தைக் காண
காட்டு மலரில் சொர்க்கத்தைப் பெற
முடிவிலாப் பரப்பை அங்கையில் கொண்டிருக்க
நிலைபேற்றை ஒரு மணியில் காணும்

மேன்மையான மகிழ்ச்சி சிலருக்கு மட்டுமே கிடைப்பதைப் பற்றி அவர் அதிகமாகச் சிந்தித்தார்.

தேசியவாத இயக்க வரம்பிற்குள் செயல்பட்ட காந்தி வர்க்கங்களுக்கிடையே மோதல் என்ற முறையில் சிந்திக்க வில்லை, அவற்றுக்கிடையே உள்ள வேறுபாடுகளைச் சமரசப் படுத்துவதற்கே முயற்சி செய்தார் என்பது முற்றிலும் உண் மையே. ஆனால் அவர் ஈடுபட்ட நடவடிக்கைகள், அவர் மக்களுக்குக் கற்பித்த படிப்பினைகள் தவிர்க்க முடியாத விதத் தில் வெகுஜனங்களின் உணர்வை உயர்த்தின, சமூகப் பிரச் சினைகளை ஜீவாதாரமானவையாக்கின என்ற முடிவுக்கு நேரு வந்தார். எங்கெங்கு அவசியமோ அங்கெல்லாம் வசதிபடைத்த வர்களுக்கு எதிராக வெகுஜனங்களின் தரத்தை உயர்த்த வேண்டுமென்று அவர் வற்புறுத்தியதனால், தேசிய இயக்கம் வெகுஜனங்களுக்கு ஆதரவான திசையில் பலமாகத் திரும் பியது.

இந்தியாவில் சோஷலிச மற்றும் ஜனநாயக மாற்றங் களை ஆதரிப்பவர்கள் வெகுஜனங்கள் மத்தியில் காந்தியின் பணியின் மகத்தான அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு பாடுபட வேண்டும், இந்தியாவின் தேசிய சுதந்திரத் தைப் பலப்படுத்துவதற்கும் ஜனநாயகத்துக்கும் சமாதானத் துக்கும் ஆதரவாக நடைபெறும் போராட்டத்தில் காந்தியை ஆதரிப்பவர்களோடு சேர்ந்து பலம்பொருந்திய சக்தியைப் படைக்க வேண்டும் என்று நேரு உறுதியாக நம்பினார். இதைப் பற்றி 1948ஆம் ஆண்டு பிப்ரவரியில் நடைபெற்ற இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் இரண்டாவது காங்கிரசின்— இது மகாத்மா காந்தி கொலை செய்யப்பட்டதைக் கடுமை யாகக் கண்டித்தது—தீர்மானத்திலும் கூறப்பட்டிருந்தது.

மதத் துறையிலும் அரசியல் துறையிலுமுள்ள மேல்

மட்டக் குழுவைச் சேர்ந்த ஒரு சிலர்தான் காந்தியைக் கொலை செய்வதற்குத் திட்டம் திட்டினர்கள் என்பதையும் அவர்கள் சுதந்திர இந்தியாவில் வர்க்கம் மற்றும் ஜாதிகளின் பெயரால் அனுபவித்து வந்த வசதிகளைப் பாதுகாக்க முயற்சி செய்பவர்கள் என்பதும் நேருவுக்குத் தெரியும். மதச் சண்டை என்ற நெருப்பை மூட்டியவர்கள் பிரிட்டிஷ்காரர்கள், அதை வளர்த்தவர்கள் முஸ்லிம் மற்றும் இந்து வகுப்புவாதிகள். மகாத்மா காந்தி தன் உயிரையே பலியிட்டு அந்த நெருப்பை அணைத்ததோடு இந்தியாவை ஒரு ஜனநாயகக் குடியரசாக மாற்றுவதை எதிர்த்தவர்களுக்குப் படுதோல்வியை ஏற்படுத்தினர்.

இந்திய நாட்டின் தேசபக்தர், ஜனநாயகவாதி, மனிதாபிமானி மற்றும் வெகுஜன இயக்க அமைப்பாளரான காந்தியின் பதாகையை நேரு தன்னம்பிக்கையோடு உயர்த்திப் பிடித்தார்.

வாழ்க்கையில் உழைப்பு, ஓய்வு, சிரிப்பு, கண்ணீர் எல்லாவற்றுக்கும் உரிய நேரம் இருக்கிறது, இப்பொழுது இந்தியர்கள் உழைக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது என்று நேரு கூறினர். அவரும் மிகவும் அதிகமாக உழைத்தார். அவர் அதிகமாக வேலை செய்வதைப் பற்றி சிலர் கடிந்து கொண்டபொழுது எவ்வளவு கடினமாக ஒருவர் வேலை செய்தாலும் அதனல் அவர் மரணமடைந்து விட மாட்டார் என்று அவர் பதிலளிப்பார். மனச்சோர்வு மற்றும் இதர காரணங்களினல் பலர் மரணமடைவதுண்டு. ஆனல் நல்ல நோக்கத்துக்காகப் பாடுபடுவது அவர்களுடைய ஜீவசக்தியை அதிகப்படுத்தும் என்று கூறுவார்.

உணவுப் பொருள்கள் மற்றும் வாழ்க்கைக்கு அவசியமான பொருள்களின் பற்றுக்குறை, தொழில்துறை மற்றும் விவசாய உற்பத்தியில் ஏற்பட்ட வீழ்ச்சி, போக்குவரத்தில் ஏற்பட்ட சீர்குலைவு, வேலையில்லாமையின் அதிகரிப்பு—நாட்டில் ஏற்பட்டிருந்த இப்படிப்பட்ட நெருக்கடியான பொருளாதார நிலைமை அவருக்குக் கஷ்டத்தைக் கொடுத்தது. தொழிலதிபர்களும் பெரிய நிலவுடைமையாளர்களும் தங்களுக்குக் கிடைத்து வந்த அதிகமான லாபத்தை இழக்க விரும்பாமல் உழைக்

கும் மக்களை மேலும் அதிகமாகச் சுரண்டிக் கொண்டிருந்தார்கள். அரசாங்கத்தால் இவர்கள் மீது பெரும் தாக்கத்தை ஏற்படுத்த முடியவில்லையே என்ற உணர்வும் அவருக்குச் சங்கடத்தைக் கொடுத்தது. இந்திய யூனியன் அரசாங்கத்தின் முதல் வருட வாழ்க்கையின் விளைவுகளைத் தொகுத்துரைக்கும் பொழுது, அந்த வருடத்தில் பெரும் பகுதி உள்நாட்டுக் கலவரங்களை ஒடுக்குவதற்கே செலவிடப்பட்டுவிட்டது, மற்ற விஷயங்களைக் கவனிக்க நேரமில்லாமற் போய்விட்டது என்று கூறினார். பொருளாதாரப் பிரச்சினைகள் தீர்க்கப்படாதது மட்டுமல்ல, தவிர்த்திருக்கக் கூடிய சம்பவங்களால் அவை சிக்கலடைந்திருந்தன. உதாரணமாக, நாட்டிலேயே அதிக வளம் மிகுந்த மாகாணங்களில் ஒன்றாகிய பஞ்சாபில் உணவு உற்பத்தியே இல்லை. முன்பு விவசாயப் பொருள்களின் உற்பத்தியில் ஈடுபட்டிருந்த இலட்சக்கணக்கானவர்கள் இப்பொழுது வேலையில்லாத அகதிகளாக மாறியிருந்தார்கள்.

முன்னைக் காட்டிலும் சிறப்பான வேலை மற்றும் வாழ்க்கை நிலைமைகளுக்காகத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை அவர் அனுதாபத்தோடு கவனித்தார். அரசாங்கத்திலும் அரசியல் நிர்ணய சபையிலும் படேல் கோஷ்டியின் எதிர்ப்பை மீறி தொழிலாளர்களுக்கும் அலுவலக ஊழியர்களுக்கும் அரசு இன்ஷூரன்ஸ், குறைந்த பட்ச ஊதியம், தொழில் தகராறுகளை மத்தியஸ்தத்தின் மூலம் தீர்ப்பது, உழைக்கும் பெண்கள் மற்றும் குழந்தைகளின் கஷ்டங்களைக் குறைப்பது ஆகியவற்றை நோக்கமாகக் கொண்ட சட்டங்களை அவர் 1948லேயே நிறைவேற்றினார்.

1948 ஏப்ரல் 6ந் தேதியன்று தொழில்துறை சம்பந்தமான அரசாங்கத்தின் கொள்கையை அறிவித்த ''சோஷலிஸ்ட்'' பிரதம மந்திரியின் நடவடிக்கைகள் இந்தியாவின் தொழிலதிபர்களுக்கும் நிதியதிபர்களுக்கும் சீற்றத்தைக் கொடுத்தன. அவர்கள் அதை மறைக்கவில்லை. அரசு சுறுசுறுப்பாகவும் மென்மேலும் வளர்ச்சியடைகின்ற முறையிலும் பங்கெடுப்பதன் மூலம் தொழில்துறை உற்பத்தியின் அளவை அதிகப்படுத்தப் போவதாக அவர் உறுதியாக அறிவித்தார். இந்தியப் பொருளாதாரத்தில் அரசுத் துறையை ஏற்படுத்தியிருப்பதாகவும் அறிவித்தார். முன்பு காலனியாதிக்கவாதிகளின் உடைமைகளாக இருந்த எல்லா நிறுவனங்களும் இர

யில் கம்பெனிகளும் ஆயுத உற்பத்தித் தொழிற்சாலைகளும் அரசுத் தொழில்களாக்கப்படும். நாட்டின் மிகப் பெரிய வங்கி யான இந்திய ரிசர்வ் வங்கி தேசியமயமாக்கப்படும்.

அரசுத் துறையில் மட்டுமின்றி இயன்ற அளவிற்கு தனி யார் துறையிலும் பெருந்தொழில்களின் வளர்ச்சியைக் கட்டுப் படுத்த வேண்டியது அவசியம் என்று நேரு வற்புறுத்தினார். இதைப் பற்றி பூர்ஷ்வாப் பத்திரிகைகள் போட்ட கூக்குரலை யும் அவருடைய அமைச்சர்களிலேயே சிலரும் மேற்கு நாடு களின் தூதர்களும் எரிச்சலோடு செய்த விமர்சனத்தையும் அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை. பொருளாதாரத்தில் ஜீவாதாரமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கின்ற உலோகத் தொழில், மின்சார சக்தி உற்பத்தி, இரசாயனம், இயந்திரங்களைக் கட்டுதல், போக்குவரத்து, சுரங்கத் தொழில் ஆகியவை சுதந்திரமடைந்த இளம் அரசின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட வேண்டும், ஐந்தாண்டுத் திட்டங் களை அடிப்படையாகக் கொண்டு வளர்க்கப்பட வேண்டும்.

டில்லியில் அமெரிக்க தூதராக இருந்த ஹென்ரி ஜே. கிரேடி, இந்தியாவைத் தொழில் வளர்ச்சியடைந்த நாடாக மாற்ற முயற்சிப்பது அதன் பொருளாதார வளர்ச்சியின் ''இயற்கையான போக்கை'' அழிப்பதற்கு இட்டுச் செல்லும் என்று கூறி நேருவை பயமுறுத்த முயற்சி செய்தார். அதே சமயத்தில் நேரு ''ஒரு மறைமுகமான கம்யூனிஸ்ட்'' என்று கூறும் இரகசியத் தந்திகள் வாஷிங்டனுக்கு அனுப்பப் பட்டன.

காலனியாதிக்கத்தின் பாரம்பரியத்தை அகற்றுவதற்கு நாடு ஒன்று சேர்ந்து ஈடுபட வேண்டும் என்று நேரு தீவிர மாக விரும்பினார். வர்க்கப் பகைமைகளால் துளைக்கப்பட்டி ருந்த ஒரு சமூகத்துக்கு இது மிகவும் கடினமான பணி யாகும். இந்தியாவின் பொருளாதார மற்றும் அரசியல் நிலை மையைப் பற்றி எல்லோருமே அதிருப்தியடைந்திருப்பது போல, ஒவ்வொரு சமூக கோஷ்டியும் தன்னுடைய அதிருப் தியை ஒவ்வொரு வழியிலும் எடுத்துக் காட்டுவதாகத் தோன் றியது. ஆனால் அவை பிரதம மந்திரியைத் தன்னுடைய இலட்சியத்திலிருந்து திருப்ப முடியவில்லை.

அதே சமயத்தில் படேலின் தலைமையிலிருந்த காங்கிர சின் பிற்போக்குத்தனமான வலதுசாரிகள் கம்யூனிஸ்டுகளையும்

தொழிற்சங்கத் தலைவர்களையும் மூர்க்கத்தனமாக ஒடுக்கிக் கொண்டிருந்தார்கள்.

தொழிற்சாலைகளிலும் தொழிற்கூடங்களிலும் ''ஒழுங்கை ஏற்படுத்துவதில்'' படேல் காட்டிய அதிதீவிரமான வேகத்தைக் கட்டுப்படுத்துவதற்கு நேரு முயற்சி செய்தார். ஆனால் அதிகமானவர்கள் கைது செய்யப்பட்டதற்கு ''முக்கியமான காரணங்கள்'' இருப்பதாகப் படேல் கூறினார். வேலை நிறுத்தக்காரர்கள், உற்பத்தியைச் ''சீர்குலைப்பவர்களின்'' பால் நேரு அதிக அறிவுபூர்வமான அனுதாபமும் தீர்மானமின்மையும் காட்டுவதாகக் குற்றஞ்சாட்டி படேல் பிரதம மந்திரியைத் தாக்கினார்.

வர்க்கச் சண்டைகள் கூர்மையடைந்து கொண்டிருந்த சூழ்நிலையில் காந்தியிடமிருந்து பெறப்பட்ட அரசியல் தலைமை முறைகளை நேரு மென்மேலும் அதிகமாகக் கையாண்டார். இந்தியாவை பலமான, மலர்ச்சி நிறைந்த நாடாக மாற்றுவதற்கு எல்லா இந்தியர்களும் ஒன்றாகத் தொடர்ந்து பாடுபட வேண்டும்; இது இந்தியாவை அரசியல் ரீதியாக மட்டுமல்லாமல் பொருளாதார ரீதியாகவும் சுதந்திர நாடாக மாற்ற உதவும்.

எல்லோரும் இந்தியாவைப் பற்றிப் பேசுகிறோம், இந்தியாவிடமிருந்து பல விஷயங்களைக் கோருகிறோம், ஆனால் இந்தியாவுக்கு நாம் கொடுப்பது என்ன என்று நேரு தன்னுடைய நாட்டு மக்களைக் கேட்டார். இந்தியாவுக்கு நாம் கொடுப்பதைத் தவிர வேறு அதிகமாக எதையும் பெற முடியாது என்றார். அன்பு, சேவை, உற்பத்தியிலும் படைப்புத் துறையிலும் உழைப்பு ஆகியவற்றை இந்தியாவுக்கு நாம் கொடுத்தால் அது இறுதியில் அவற்றை நம்மிடம் திரும்பக் கொடுக்கும், நாம் விரும்பிய வடிவத்தை அது அடையும், நம்முடைய சிந்தனைகளும் செயல்களும் அதை உருவாக்கும் என்றார்.

மந்திரி சபைக் கூட்டங்கள், அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், பொதுக் கூட்ட சொற்பொழிவுகள், அந்நிய நாட்டுத் தூதர்கள் வரவேற்புகள், பத்திரிகையாளர் சந்திப்புகள், காங்கிரஸ்காரர்கள் மற்றும் பொது வாழ்வுப் பிரமுகர்களோடு உரையாடல்கள், மனுக் கொடுப்பவர்கள் முடிவில்லாதபடி வருவது ஆகிய எண்ணற்ற, தவிர்க்க முடியாத,

அன்றுடப் பணிகளால் பிரதான கடமையைப் பற்றிய தெளி வான சித்திரத்தை அவரிடமிருந்து மறைக்க முடியவில்லை. மாலை மறைந்து நெடு நேரமான பிறகு, அவருடைய கவனத் தைத் திருப்ப யாருமில்லாத பொழுது, எதிர்கால இந்தியக் குடியரசின் அரசியலமைப்புச் சட்ட நகலை தயாரிப்பதில் அவர் தீவிரமான கவனம் செலுத்திஞர்.

அவருடைய நடவடிக்கைகளை லண்டன் வட்டாரங்கள் சந்தேகத்தோடு கவனித்து வந்தன. நேரு தன்னுடைய மனச் சாட்சிக்குப் புறம்பாக நடக்க மாட்டார் என்பதைப் புரிந்து கொள்வதற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு ஏற்கெனவே பல சந்தர்ப்பங்கள் கிடைத்திருந்தன. நேரு தன்னைப் பற்றி ''காரிய ரீதியான இலட்சியவாதி'' என்று முரண்நகையோடு கூறுவ துண்டு. ஆனல் அரசியல் என்பது ஓரளவுக்கு சாத்திய மானவற்றை எதார்த்தமாக மதிப்பிடுகின்ற கலை என்ருல் நேரு அந்தக் கலையில் சிறந்த திறமைசாலியே, தன்னுடைய இலட்சியத்தை நோக்கி ஒவ்வொரு படியாக முன்னேறிச் செல்கின்ற யதார்த்தவாதி அவர்.

கன்சர்வேடிவ் கட்சியைச் சேர்ந்த சர்ச்சிலும் லேபர் கட்சியைச் சேர்ந்த அட்லியும் பிரிட்டிஷ் பேரரசு உருக் குலைந்து போவதைப் பற்றி பயங்கரமான கனவுகளால் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அதற்கு பிரிட்டிஷ் காமன் வெல்த் என்று சாமர்த்தியமாக மறுபெயர் சூட்டியிருந்தார் கள்.

இந்திய தேசியக் கொடியைப் பற்றிய வர்ணனை அரசியல் சட்டத்தில் இடம் பெற வேண்டும். மவுண்ட்பேட்டன் ஒரு நகல் கொடியைத் தயாரித்தார். அது காங்கிரஸ் கொடியை அடிப்படையாகக் கொண்டிருந்தது; மத்தியில் இராட்டையும் ஒரு மூலையில் பிரிட்டிஷ் தேசியக் கொடியான யூனியன் ஜாக்கும்(!) இடம் பெற்றிருந்தன. மவுண்ட்பேட்டன் பிரபு வின் ''அன்பான உதவியை'' நேரு உறுதியாக நிராகரித்தார். அதன் பிறகு மவுண்ட்பேட்டன் அரசியலமைப்புச் சட்ட நகலிலிருந்து ''குடியரசு'' என்ற சொல்லை நீக்குகின்ற முயற்சி யில் ஈடுபட்டார், ஆனல் இது பயனளிக்கவில்லை.

எதிர்கால இந்தியா பிரிட்டனேடு எத்தகைய உறவை வைத்துக்கொள்ள வேண்டும் என்பது ஜவகர்லாலுக்கு மிகவும் கடினமான பிரச்சினைகளில் ஒன்ருக இருந்தது. அன்றைய

உணர்ச்சிக்குப் பணிந்து நாட்டின் காலனியாதிக்கக் கடந்த காலத்தை ஒரேயடியாகத் தூக்கியெறிந்துவிட்டு பிரிட்டனோடு முழுமையாக முறித்துக் கொண்டதாக உடனே அறிவிப்பது சுலபமான காரியமே. ஆனால் அத்தகைய முடிவு இளம் அரசுக்கு உதவியாக இருக்குமா? இந்தியப் பொருளாதாரம் பிரிட்டன் மற்றும் ஸ்டர்லிங் வட்டாரத்தோடு ஆயிரக் கணக் கான இழைகளால் பிணைக்கப்பட்டிருந்தது. பல பத்தாண்டு களாக ஏற்பட்டிருந்த இந்தியாவின் பொருளாதார உறவுகளை அப்படி ஒரே வீச்சில் ஒழித்துவிட முடியாது. அவை எவ்வளவு தான் மோசமாக இருந்தாலும் அவற்றின் இடத்துக்கு வேறு ஏதாவது வேண்டுமே! அவர்கள் தமது சொந்தக் காலில் இன்னும் உறுதியாக நிற்க வேண்டும், பொருளா தார சுதந்திரத்தை அடைவதற்கு அரசியல் சுதந்திரத்தை உபயோகிக்க வேண்டும். இதற்கிடையில் நாட்டின் அரசுரி மைக்குக் குந்தகம் இல்லாதபடி இந்தியா பிரிட்டிஷ் காமன் வெல்த்துடன் சம்பிரதாயமான உறவுகளை வைத்துக் கொள்ள முடியும். காமன்வெல்த்தில் உறுப்பினராக இருப்பது சுதந் திரமும் கூடுதலாக ஒன்றும் என இருக்க வேண்டுமே தவிர சுதந்திரத்திலிருந்து எதையும் கழிப்பதாக இருக்கக் கூடாது என்று நேரு விரும்பினர். 1948 டிசம்பரில் இந்திய தேசிய காங்கிரஸ் மாநாடு ஜெய்ப்பூரில் நடைபெற்ற பொழுது, முழு சுதந்திரத்தை அடைவதைப் பற்றியும் இந்தியாவை ஒரு குடியரசு என்று அறிவித்தும் நேருவின் சிபாரிசின் பேரில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. யுனைட்டெட் கிங்டம் மற்றும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துடன் இந்தியாவின் உறவுகள் அவசியமாகவே மாற வேண்டும் என்று அந்தத் தீர்மானம் கூறியது. ''இந்தியாவின் சுதந்திரம் மற்றும் நடவடிக்கை உரிமையில் குறுக்கிடாத மற்ற நாடுகளோடும் இதே போன்ற எல்லா உறவுகளையும் வைத்துக்கொள்வதற்கு இந்தியா விரும்பு கிறது. உலக சமாதானத்தை மேம்படுத்துவதற்காகவும் பொது நன்மைக்காகவும் காமன்வெல்த்திலுள்ள சுதந்திரமான நாடுகளோடு இந்தியா சுதந்திரமான உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதைக் காங்கிரஸ் வரவேற்கும்'' என்று தீர்மானம் மேலும் கூறியது.

இந்தியாவை ஒரு டொமினியனாக வைத்திருக்கும் எண் ணம் நேருவிடம் சிறிதுமில்லை. 1949 ஏப்ரலில் லண்டனில்

நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் போது காமன்வெல்த்தில் இந்தியா உறுப்பினராக இருப்பதற்கு சாத்தியமான ஒரே வழியை நேரு அட்லி அரசாங்கத்திடம் எடுத்துக் கூறினர்: இந்தியா குடியரசாகப் போகிறது, பிரிட்டிஷ் மகுடத்தின் தலைமை அதிகாரத்தை இந்தியா அங்கீகரிக்கவில்லை. எனினும் காமன்வெல்த்தில் உறுப்பினராக இருப்பதன் மூலம் பெறக் கூடிய உரிமைகளை இந்தியா அடைவதற்கு பிரிட்டனும் மற்ற டொமினியன்களும் உடன்பட வேண்டும். அவசியமென்று கருதும் எந்த நேரத்திலும் காமன்வெல்த்திலிருந்து வெளியேறு வதற்கு இந்தியாவுக்கு உரிமை இருக்க வேண்டும்.

லண்டன் பேச்சுவார்த்தைகளில் நேரு மேற்கொண்ட நிலையை ஒரு இந்தியப் பத்திரிகையாளர் நகைச்சுவையோடு பின்வருமாறு தொகுத்துரைத்தார்: ''காமன்வெல்த்திலிருந்து என்னை ஒதுக்கி விடுங்கள், என்னை அதில் சேர்த்துக்கொள்ளுங் கள், அல்லது காமன்வெல்த்துக்கு வெளியே இருக்கும் உரிமை யோடு என்னை அதில் சேர்த்துக் கொள்ளுங்கள்.''

பிரிட்டிஷ் அரசருக்கு காமன்வெல்த்தின் அரசர் என்ற பட்டத்தைக் கொடுக்க வேண்டும் என்ற ஆஸ்திரேலியப் பிரேரணை முற்றிலும் ஒத்துக்கொள்ளப்பட முடியாதது என்று நேரு கருதினர். இந்தியக் குடியரசின் ஜனதிபதியை—சம்பிர தாயம் என்ற முறையில் மட்டுமாகிலும்—பிரிட்டிஷ் அரசர் அங்கீகரிக்க வேண்டும் என்று அட்லி கேட்டுக் கொண்டதையும் நேரு திட்டவட்டமாக நிராகரித்தார். நேருவின் நிபந்தனை களை அட்லி ஒத்துக்கொள்ளுமாறு ஆயிற்று.

காமன்வெல்த்தில் இருக்க ஒத்துக்கொள்வது அவசியமான சலுகை என்பதை இந்தியத் தலைவர் நன்கு அறிந்திருந்தார். எனினும் பெருமை மிக்க, சுதந்திரத்தை நேசிக்கும் நாட்டின் பிரதிநிதிக்குரிய கம்பீரத்தோடு அந்த சலுகையை ஏற்றுக் கொண்டார்.

ஜவகர்லால் தன்னுடைய அறுபதாவது பிறந்த நாளை 1949 நவம்பர் 14ந் தேதியன்று முழு பலத்தோடும் எதிர் காலத்தைப் பற்றிய திட்டங்களோடும் கொண்டாடினர். அந்த வயதில் காலம் விலைமதிப்பற்றதாகிவிடுகிறது, உடல் ஆரோக்கியத்தைப் பற்றி அதிகமான கவனம் செலுத்துவது அவசியமாகிறது. அவர் நான்கு அல்லது ஐந்து மணி நேரமே உறங்கினர். அதிகாலையில் எழுந்தார், ஆசனப் பயிற்சிகளைச்

செய்தார், சில சமயங்களில் குதிரைச் சவாரி செய்தார், அல்லது நீந்தினார். அவர் காய்கறிகள், பழங்கள், பால் ஆகியவற்றைக் கொண்ட மிதமான உணவைச் சாப்பிட்டார். இந்திரா அம்மையார் வீட்டு நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டார். அவர் நேருவை கவனித்துக் கொண்டதோடு அவருக்குக் கிடைத்த மிகக் குறைவான ஓய்வு நேரங்களின் போது நேருவுடன் பேசிக் கொண்டிருப்பார்.

நேரு தம்முடைய இலட்சியத்தில் கொண்டிருந்த ஈடுபாடு, அவருடைய கண்டிப்பான சுயகட்டுப்பாடு, உயர்வான ஆன் மிகப் பண்பாடு—அவர் தன் வாழ்க்கை முழுவதிலும் வளர்த்துக் கொண்டிருந்த குணங்கள் இவை—தொடர்ச்சியாக அவருக்கு ஏற்பட்ட உடற்பளுவையும் மனச் சுமையையும் சமாளிக்க உதவின.

இந்தியாவில் குடியரசை ஏற்படுத்துவது அவருடைய வாழ்க்கை இலட்சியம். அது நெருங்கிவந்து கொண்டிருந்த இந்தச் சமயத்தில் எந்தத் தடையையும் சமாளிக்க முடியு மென்று அவருக்குத் தோன்றியது.

ஒவ்வொரு இந்திய தேசபக்தரும் மறக்க முடியாத தினம், இந்திய அரசியலமைப்புச் சட்டம் நிறைவேற்றப்படும் நாள் கடைசியில் வந்தது. அதன் பாயிரத்தில் பின்வருமாறு எழுதப் பட்டிருந்தது:

''இந்தியாவின் குடிமக்களாகிய நாங்கள் இந்தியாவை அரசு ரிமை கொண்ட ஜனநாயகக் குடியரசாக அமைத்து எல்லாக் குடிமக்களுக்கும் பின்வருவனவற்றைப் பெற்றுத்தர முடிவு செய்துள்ளதைப் பறைசாற்றுகின்றோம்:

''சமூக, பொருளாதார, அரசியல் நீதி;

''சிந்தனை, பேச்சு, கருத்து, மத, வழிபாட்டுச் சுதந்திரம்;

''அந்தஸ்திலும் வாய்ப்பிலும் சமத்துவம்; அவர்கள் எல்லோ ரிடமும்

''தனிநபரின் கௌரவத்துக்கும் நாட்டின் ஒற்றுமைக்கும் உறுதியளிக்கின்ற சகோதரத்துவம்.

''நமது அரசியல் நிர்ணய சபை 1949 நவம்பர் 26ந் தேதியான இன்று இந்த அரசியலமைப்புச் சட்டத்தை ஏற்று சட்டமியற்றி நமக்கு வழங்குகிறது.''

அரசியலமைப்புச் சட்டம் 1950 ஜனவரி 26ந் தேதியன்று அமுலாக்கப்படும் என்று முடிவு செய்யப்பட்டது.

நாட்டின் சமூக வளர்ச்சிக்கான வாய்ப்புக்களைப் பற்றிப் பேசும்பொழுது இந்தியாவில் ''சோஷலிஸ்ட் பாணி சமூகத்தை'' நிர்மாணிக்கின்ற கருத்தைத் தான் ஆதரிப்பதை நேரு உறுதிப்படுத்தினர். இது அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படவில்லை. ஆனல் இந்திய தேசிய காங்கிரசின் செயல்திட்டத்தில் விரைவில் சம்பிரதாயமான முறையில் சேர்த்துக் கொள்ளப்படும். குடியரசை எதிரிடுகின்ற, இன்னும் தீர்க்கப்படாத அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்சினைகள் அதிகமான எண்ணிக்கையில் இருப்பதை நேரு பார்க்க முடிந்தது. எனினும் ஜனநாயகத்துக்கும் சமாதானத்துக்கும் இந்தியாவின் போராட்டத்துக்கான செயல்திட்டத்தைக் குறைந்த பட்சம் தத்துவரீதியில், அரசியலமைப்புச் சட்டத்திலுள்ள பல ஷரத்துக்களில் வகுத்தளிப்பதில் வெற்றியடைந்திருப்பதைப் பற்றி நேரு பெரு மகிழ்ச்சி அடைந்தார்.

காலனியாதிக்க நுகத்தடியிலிருந்து விடுதலையடைந்து, கெடுபிடிப் போர் உச்ச கட்டத்திலிருந்த பொழுது, ''உலக சமாதானத்தையும் பாதுகாப்பையும் மேம்படுத்துகின்ற'' தன்னுடைய கொள்கையை அரசியலமைப்புச் சட்டக் கோட்பாட்டின் அளவுக்கு உயர்த்திய முதல் அரசு இந்தியாவே. இதற்கு முழுப் பாராட்டும் நேருவுக்கே உரியது. ஏனென்ருல் அவர் தான் தன்னுடைய நாட்டின் முற்போக்கான வெளிநாட்டுக் கொள்கைக்கு அடித்தளமிட்டார். சர்வதேச விவகாரங்களில் நேரு மறுக்க முடியாத செல்வாக்கை வகித்தபடியால், நேருவுடன் கருத்து வேறுபாடு கொண்டிருந்த படேலும் அவருக்கு ஆதரவளித்த அமைச்சர்களும், வெளிநாட்டுத் துறையில் அவர் எடுத்த நடவடிக்கைகளைப் பற்றி பகிரங்கமாக ஆட்சேபிக்கத் துணியவில்லை.

எனினும் இந்தியாவின் ஜீவாதாரமான இப்பிரச்சினைகளைப் பற்றி அவர் தானகவே முடிவு செய்வதாக யாரும் அவரைக் குற்றஞ்சாட்ட முடியாது. அவர், உதாரணமாக, படேலைப் போன்றவர் அல்ல, சர்வாதிகார முறைகள் அவருக்கு முற்றிலும் அந்நியமானவை. இந்திய வெளிநாட்டுக் கொள்கையின் நிலையான தன்மை காங்கிரஸ் கட்சியின், இறுதிப் பகுப்பாய்வில் நாடு முழுவதின் பெரும்பான்மையினரின் பரந்த ஆதரவையும் அங்கீகாரத்தையும் பொறுத்திருக்கிறது என்பதை அவர் நன்ருக உணர்ந்தபடியால் நாடாளுமன்றத்தில் வெளி

நாட்டுக் கொள்கை பற்றிய பிரச்சினைகளை சுதந்திரமாக விவாதிப்பதற்கு நேரு சிறப்பான முக்கியத்துவமளித்தார். அவர் வானொலியில் அடிக்கடி பேசினார், பத்திரிகைகளில் எழுதினார். அவர் பத்திரிகை நிருபர்களைத் தவிர்க்கவில்லை, விருப்பத்தோடு அவர்களுக்குப் பேட்டிகள் கொடுத்தார். சுருக்கமாகச் சொல்வதென்றால் இந்தியாவின் நிலையை நாட்டு மக்களுக்கும் உலக மக்களுக்கும் விளக்கிக் கூறுவதற்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்தினார். இந்தியர்கள் மற்ற நாடுகளிலிருந்து தங்களைத் தனிமைப்படுத்திக் கொள்ளவோ, ஒரு காலத்தில் தங்களை அடக்கியாண்ட நாடுகள் மீது பகைமை கொள்ளவோ ஒரு போதும் நினைத்ததில்லை, எல்லோருடனும் நட்பாக இருக்கவே அவர்கள் விரும்புகிறார்கள் என்று எடுத்துக் கூறினார். அன்று நிலவிய சூழ்நிலையில் அத்தகைய கொள்கையைப் பின்பற்றுவது சுலபமான காரியமல்ல; மக்கள் ஒருவரைப் பற்றி ஒருவர் பயந்து கொண்டிருந்த நேரத்தில் ஒரு நபர் நடுநிலைமை வகிக்க முயற்சிப்பாராஞல், அவர் எதிர்த்தரப்புக்கு அனுதாபம் காட்டுவதாக சந்தேகிக்கப்படுகிறார் என்று நேரு கூறினார். அரசியல் நிர்ணய சபையின் விவாதங்களில் இதைப் பற்றிப் பேசுகின்ற பொழுது அமெரிக்க அரசாங்கப் பிரதிநிதியோடு தன் உரையாடலைக் குறிப்பிட்டார். இந்தியாவில் நடுநிலைமைக் கொள்கையைப் பற்றி கண்டிக்கும் பொழுது அவர் இந்தியாவைப் பற்றி எவ்விதமான அறிவோ, தெளிவோ இல்லாத சொற்களில் இந்தியாவைப் பற்றிக் குறை கூறினார்.

அமெரிக்க ராஜியவாதிகளின் தந்திரங்களை நேரு உன்னிப்பாக கவனித்து வந்தார். பிரிட்டனோடு கொண்டிருந்த நேச உறவைப் பயன்படுத்திக் கொண்டு மிக முந்திய காலமான 1941ம் வருடத்திலேயே இந்தியாவுடன் தூதர்களைப் பரிமாறிக் கொள்வதற்கு அமெரிக்கா உடன்பாடு செய்து கொண்டது. இரண்டாம் உலக யுத்தத்தின் போது அமைச்சரின் அந்தஸ்தைக் கொண்ட அமெரிக்கப் பிரதிநிதி டில்லியில் தங்கியிருந்தார். 1943ல் ஜனாதிபதி ரூஸ்வெல்டின் தனிப் பிரதிநிதியான வில்லியம் பிலிப்ஸ் இந்தியாவுக்கு வந்தார். அமெரிக்காவுக்குத் திரும்பிய பொழுது ''இந்திய விவகாரங்களில் பங்கெடுக்கும் உரிமையைப் பெறுவது அவசியம்'' என்று ரூஸ்வெல்டிடம் எடுத்துக் கூறினார்.

இந்தியாவின் மீது அமெரிக்காவின் அக்கறை அதிகரித்திருப்பதன் உண்மையான காரணம் நேருவுக்குத் தெரியும். தெற்கு ஆசியா என்ற பரந்த பிரதேசத்தில் பிரிட்டிஷ் போட்டியைக் குறுக்கி தன்னுடைய நிலையைப் பலப்படுத்துவதற்கு அமெரிக்கா முயற்சி செய்து கொண்டிருந்தது.

நேருவை அமெரிக்காவுக்கு வருகை தருமாறு கேட்டுக் கொள்கின்ற அதிகார பூர்வமான அழைப்பிதழ் 1948 மே மாதத்திலேயே அவருக்குக் கிடைத்தது. ஆனால் அவர் போக முடியாதபடி பல சந்தர்ப்பங்கள் தடுத்தன. மேலும் அவரும் அவசரப்படவில்லை. அவர் அரசியல் நெறிமுறைகளைப் பற்றி மிகவும் கவனமாக இருப்பவர். இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பு அமெரிக்காவுக்கு விஜயம் செய்வது ஆங்கில-அமெரிக்க உறவுகளைச் சிக்கலாக்குவதற்கும் லண்டனுக்கு எதிராக வெளிநாட்டு உதவியைப் பெறுவதற்கும் செய்யப்படுகின்ற முயற்சியாகக் கருதப்படும் என்று அவர் நினைத்தார். மேலும், உலகப் போராட்டத்தில் இந்தியாவைத் தங்களுடைய தரப்புக்கு ஆதரவாக வைத்துக் கொள்வது ''மாபெரும் முக்கியத்துவத்தைக்'' கொண்டது என்று நயமாக அறிவித்த டில்லியிலுள்ள அமெரிக்கத் தூதரின் அணுகுமுறையும் அவருக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. இந்தியா நடுநிலைமைக் கொள்கையைக் கைவிட்டு ஆசியாவில் ''கம்யூனிசம் பரவுவதை'' எதிர்த்துப் போராடுவதில் அமெரிக்காவின் கூட்டாளியாக மாறினால் இந்தியாவுக்கு ஏராளமான உதவி கொடுக்கப்படும் என்று வாக்குறுதியளிக்கின்ற முறையில் பல கட்டுரைகள் அமெரிக்கப் பத்திரிக்கைகளில் வெளிவந்து கொண்டிருந்தன. இதுவும் நேருவுக்குப் பிடிக்கவில்லை.

அங்கே இரண்டு அமெரிக்காக்கள் இருக்கின்றன என்பது அவருக்குத் தெரிந்ததே. சமாதானத்தை நேசிக்கின்ற, பாடுபட்டு உழைக்கின்ற அமெரிக்கா மற்றும் உலகத்திலேயே அதிகமான பலத்தைக் கொண்ட ஏகபோக நிறுவனங்களையும் அவற்றின் இராணுவ தொழில்துறைக் கூட்டுத் தொகுதியையும் கொண்ட அமெரிக்கா. வாஷிங்டன், லிங்கன் காலத்திலிருந்து மரபுவழியாகப் பெற்ற ஜனநாயக மரபுகளைக் கொண்ட அமெரிக்கா, பிற்போக்குவாதிகள் மற்றும் இனவெறியர்களின் அமெரிக்கா.

அதே சமயத்தில் சுதந்திர இந்தியா அமெரிக்காவைப்

போன்ற பலம் பொருந்திய நாட்டுடன் அரசியல், வர்த்தக மற்றும் பொருளாதார உறவுகளை வளர்க்க முயற்சி செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்ற உண்மையை அவர் கணக்கிலெடுத்துக் கொண்டார். இந்திய-அமெரிக்க உறவுகள் சமாதானத்தை மேம்படுத்துவதற்கும் இரு மக்களினங்களின் நலன்களுக்கும் உதவ வேண்டும். அமெரிக்காவுடன் பொருளாதார ஒத்துழைப்பை விரிவுபடுத்துவதைப் பற்றி குறிப்பிடத்தக்க நம்பிக்கைகள் எதுவும் இந்தியப் பிரதமரிடம் இல்லை என்பது உண்மையே. ஆசியா மற்றும் தூரகிழக்கு நாடுகளைப் பற்றிய ஐ. நா. பொருளாதாரக் கமிஷனில் கலந்துகொண்ட இந்தியப் பிரதிநிதிகளின் அறிக்கையைப் படித்தார். அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் ஆழ்ந்த முரண்பாடுகள் தோன்றியிருப்பதாக அதில் எழுதப்பட்டிருந்தது. தங்களுடைய நாட்டுப் பொருளாதாரத்தைப் பாதுகாக்கின்ற நோக்கத்தோடு அந்நிய நாடுகளின் ஏகபோக நிறுவனங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று இந்தியாவின் ஆலோசனையை அமெரிக்கர்கள் எதிர்த்தார்கள். இந்தியாவைத் தொழில்மயமாக்குகின்ற கொள்கையை முன்வைத்திருப்பதற்காக இந்தியர்களைக் கூர்மையாக விமர்சித்தார்கள்.

இந்தியாவில் நிலப்பிரபுத்துவ நிலவுடைமை முறையின் பின்தங்கிய வடிவங்களின் விளைவாக தானிய உற்பத்தி நெடுங்காலமாகவே குறைவாக இருந்து வந்தது. ஒரு புதிய பஞ்சம் ஏற்படப் போகும் அபாயம் நாட்டை அச்சுறுத்திக் கொண்டிருந்தது. அமெரிக்காவிடமிருந்து பொருளாதார உதவி பெற முடியும் என்று நேரு நம்பினார். அவர் 1949 அக்டோபர் 11 முதல் நவம்பர் 7 வரை அமெரிக்காவிலும் கானடாவிலும் சுற்றுப் பயணம் செய்தார். அங்கே அவர் சிறப்பான முறையில் வரவேற்கப்பட்டார்.

வாஷிங்டன் விமான நிலையத்தில் நேருவை வரவேற்றுப் பேசிய அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் பின்வருமாறு கூறினார்: ''உங்கள் நாட்டுக்குப் புதிய பாதையைக் கண்டுபிடிக்கப் புறப்பட்டவர்கள் எங்கள் நாட்டைக் கண்டுபிடிக்க வேண்டுமென்பது விதியின் முடிவாக இருந்தது. உங்கள் வருகை—ஒரு அர்த்தத்தில்—அமெரிக்காவைக் கண்டுபிடிப்பதாக இருக்குமென்று நம்புகிறேன்.''

எனினும் அவர்களுக்கிடையே நடைபெற்ற பேச்சுவார்த்

தைகளின் போது பொருளாதார உதவிக்கு பதிலாகத் தன்னுடைய சுதந்திரத்தில் இம்மியைக் கூட இந்தியா விட்டுக் கொடுக்காது என்று நேரு கூறினார். இதைக் கேட்ட ட்ருமன் ஏமாற்றமடைந்தார் என்பது வெளிப்படை. பல அமெரிக்கர்களுக்கு நேரு கவலைதரத்தக்க புதிராக இருந்தார், வாஷிங்டன் அதிகாரிகளில் சிலர் அவரை கம்யூனிஸ்டு அனுதாபியாக உண்மையாகவே சந்தேகித்தார்கள் என்று பிற்காலத்தில் இந்தியாவில் அமெரிக்க தூதராகப் பணியாற்றிய செஸ்டர் பௌல்ஸ் கூறினார்.

ஒரு குறிப்பிட்ட நாட்டுடன் அல்லது நாடுகளின் கோஷ்டியுடன் இந்தியா ஏன் சேர்ந்திருக்கவில்லை என்று தன்னிடம் அடிக்கடி கேட்கப்படுவதாகவும் உலகத்தை இரண்டு எதிரி முகாம்களாகப் பிரித்திருக்கும் வேலியின் மீது உட்கார்ந்திருப்பதாகத் தன் மீது குற்றஞ் சாட்டப்படுவதாகவும் நேரு அமெரிக்கர்களிடம் கூறினார். இந்தியா வெறும் நடுநிலைமைக் கொள்கையைக் கடைப்பிடிக்க முயற்சி செய்யவில்லை, மாறாக, சமாதானத்துக்காகவும் சுதந்திரத்துக்காகவும் போராடுகின்ற சுறுசுறுப்பான, ஆக்கபூர்வமான கொள்கையைக் கடைப்பிடிக்கிறது என்று தெளிவுபடுத்த விரும்புவதாகத் தொடர்ந்து கூறினார். இந்தியா வளர்ச்சியடைவதற்கு சமாதானம் கண்டிப்பாக அவசியமாக இருப்பதோடு மட்டுமல்லாமல் உலகத்துக்கும் தலைமையான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது. கடந்த இரண்டு உலக யுத்தங்களின் படிப்பினைகளை நாம் நினைவிலிறுத்த வேண்டும், ஆனால் அதே ஆபத்தான பாதையில் உலகம் தொடர்ந்து போய்க் கொண்டிருப்பது தனக்கு வியப்பளிப்பதாகக் கூறினார்.

இந்தியாவைத் தொழில்மயமாக்குகின்ற தன்னுடைய திட்டங்களைக் கைவிடுமாறு கூறப்பட்ட எந்த வாதத்தையும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. உலகப் பொருளாதார சமநிலைக்கு ஆபத்தேற்படும் என்று கவலைப்படுபவர்கள் சிலர் இருக்கிறார்கள், ஆனால் ஆசியாவின் விடுதலையடைந்த நாடுகள் தங்கள் சொந்த மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதைப் பற்றி சிந்திக்க வேண்டியிருக்கிறது, வளர்ச்சியடைந்த தொழில்துறை இல்லாமல் இது நடைபெற முடியாது என்று கூறினார்.

அமெரிக்காவில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் விரும்

பிய விளைவுகளைத் தரவில்லை. இந்தியாவுக்கு எந்தப் பொரு ளாதார உதவியும் கிடைக்கவில்லை. சோவியத் யூனியனுக்கு எதிராக நடத்தப்படும் கெடுபிடிப் போரில் இந்தியாவையும் இழுத்துக் கொள்ள முடியும் என்ற அமெரிக்க நம்பிக்கைகளைத் தகர்த்தது நேருவுக்கு அதிகமான திருப்தியைக் கொடுத்தது. இந்தியப் பொருளாதாரத்தைத் தங்களுடைய சொந்த நலன் களுக்குக் கீழ்ப்படுத்த விரும்பிய அமெரிக்க ஏகபோகவாதி களின் திட்டங்களையும் அவர் நிராகரித்தார்.

நேருவின் வருகை இரு தரப்பிலும் ஓரளவுக்கு எரிச்சலை ஏற்படுத்தியிருப்பதாக அமெரிக்க அரசு இலாகாவின் வருடாந் தர அறிக்கை (1949) குறிப்பிட்டது.

நேருவின் அமெரிக்க விஜயத்துக்கு முன்பு எதிர்கால இந்திய-அமெரிக்க உறவுகளைப் பற்றி இந்தியாவின் ஆளும் வட்டாரங்களிலும் வர்த்தக வட்டாரங்களிலும் மறைமுகமான போராட்டம் நடைபெற்றது. காங்கிரஸ்காரர்களில் ஒரு பகுதி யினர் அமெரிக்கா ஏராளமாக உதவியளிக்குமென்றும் தேசிய பெரு முதலாளிகள் லாபகரமான கடன்கள் கிடைக்குமென் றும் கனவு கண்டார்கள். அதே சமயத்தில் பிரிட்டிஷ் மூலத னத்தோடு மரபு வழிப்பட்ட பிணைப்புகளைக் கொண்டிருந்த இந்தியாவின் தொழில், வர்த்தக வட்டாரங்களில் ஒரு பகுதி யினர் மற்றும் பிரிட்டிஷ் ஆதரவுக் காங்கிரஸ்காரர்கள் அமெ ரிக்காவுடன் உறவுகளை எவ்விதத்திலும் விரிவுபடுத்துவதை எதிர்த்தார்கள்.

அமெரிக்கப் பயணத்தைப் பற்றி காங்கிரஸ் செயற்குழு வில் நேரு அறிக்கையளித்த பொழுது கேள்விகளோ, விவாதங் களோ இல்லை. இரு நாடுகளுக்குமிடையே தீவிரமான வேறு பாடுகள் இருப்பது எல்லோருக்கும் தெளிவாகத் தெரியும். ட்ருமன் அரசாங்கம் இந்தியாவின் கூட்டுச் சேராக் கொள் கையைக் கடுமையாக விமர்சனம் செய்தது. இந்திய அரசாங் கம் கெடுபிடிப் போரை ஆதரிப்பவர்களையும் காலனியாதிக் கத்தையும் இனவேற்றுமைக் கொள்கையையும் கண்டித்தது. வெளிநாட்டு வர்த்தகம் மற்றும் இந்தியப் பொருளாதாரத்தில் அமெரிக்க மூலதனத்தை முதலீடு செய்யும் நிபந்தனைகள், முதலீட்டின் அளவு ஆகிய பிரச்சினைகளில் தீவிரமான முரண் பாடுகள் வெளிப்பட்டன.

அணுயுகத்தில் ஒரு புதிய உலக யுத்தத்தைத் தடுப்பது

அரசாங்கங்கள், அரசியல்வாதிகள், இராஜியவர்திகளின் கவலை யாக மட்டும் இருக்கக் கூடாது, நல்லெண்ணம் கொண்ட மக்கள் அனைவரும் அதைப் பற்றி அக்கறை கொள்ள வேண் டும் என்று ஜவகர்லால் நேரு மென்மேலும் அதிகமாக நம்பினர். நாட்டு மக்கள் மற்றும் ஜனநாயக சக்திகளின் ஆதரவைச் சார்ந்து நின்று சமாதான இயக்கத்தை ''கம்யூ னிஸ்டு பிரச்சாரம்'' என்று கருதியவர்களை அவர் குறை கூறினர். இந்தியாவின் சமாதான ஆதரவாளர்களை அவர் வரவேற்ருர், தொடர்ச்சியாக அவர்களுக்கு உதவி செய்தார்.

1950 ஜனவரி 26. நேருவும் அவருடைய தோழர்களும் விடுத்த வேண்டுகோளின்படி தாய் நாட்டின் முழு விடுதலைக் காகப் போராடுவதென்று இந்திய மக்கள் துல்லியமாக இருபது வருடங்களுக்கு முன்பு சபதம் செய்தார்கள். அது நீண்ட, கடுமையான போராட்டமாக இருந்தது. சுதந்திரப் போர்ராட்டத்தில் பல்லாயிரக் கணக்கான இந்தியர்கள் உயிரி ழந்தார்கள். மக்கள் சிறைச்சாலைகளில் துன்புறுத்தப்பட்டார் கள், போலீஸ் சித்திரவதையினல் உயிரிழந்தார்கள். ஆனல் அவர்கள் தமது சபதத்தை நிறைவேற்றினர்கள். இன்று தங்கள் வெற்றியைக் கொண்டாடுகிருர்கள்.

இந்நாளன்று புதிய அரசியலமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது. பிரிட்டிஷ் அரசரின் அதிகாரம் தூக்கியெறியப் பட்டது. நாடு குடியரசு என்று அறிவிக்கப்பட்டது. காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான இராஜேந்திர பிரசாத் அரசின் தலை வரானர், ஜவகர்லால் நேரு அரசாங்கத்துக்குத் தலைமை யேற்ருர்.

தலைநகரத்தின் தெருக்களின் வழியே பல்லாயிரக் கணக் கான மக்கள் சாரி சாரியாக புது டில்லி மைதானத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய உற் சாகமான முழக்கங்களைக் கேட்டுத் தலைநகரம் விழித்துக் கொண்டது. அந்த மைதானத்தில் இராணுவ அணிவகுப்பும் பொது மக்களின் ஊர்வலமும் நடைபெற ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

ஊர்வலத்தில் வரிசையாக வந்த அணிகள் குடியரசையும் அதன் வீரர்களையும் போற்றி முழங்கினர்கள். குழந்தைகள் எல்லாத் திசைகளிலும் ரோஜா இதழ்களை வீசிக்கொண்டிருந் தார்கள். பிறகு கவர்ச்சி மிக்க அணிவகுப்பு தொடங்கியது.

காலாட்படை வீரர்களும் கடற்படை வீரர்களும் அணிவகுத்துச் சென்ருர்கள். ஒற்றைத் திமிலேக் கொண்ட ஒட்டகத்தின் மீது உட்கார்ந்து பாலேவனத் துருப்புகள் சென்றன. நெடுங் கால மரபைப் பின்பற்றி அலங்கரிக்கப்பட்ட யானேகள் மெது வாக நடந்து வந்தன. பிரத்யேகமான உடையணிந்த வாத் தியக் குழுவினர், குறிப்பாக புலி, சிறுத்தைப் புலியின் தோல்களேத் தோளின்மேல் போட்டிருந்த மத்தளக்காரர்கள் எடுப்பாகத் தோன்றிஞர்கள்.

அணியணியாக வந்த ஊர்வலத்தினர் மைதானம் முழு வதும் திரண்டு நின்ருர்கள். தேசிய விடுதலேப் போராட்ட வீரர்கள் அணிவகுத்து வந்தார்கள். மக்கள் மறுபடியும் உற்சா கமாக ஆரவாரம் செய்தார்கள். எங்கும் குதூகலம், எங்கும் வெற்றி மகிழ்ச்சி.

மக்களிடம் உற்சாகம் பெருக்கெடுத்தோடியது. அவர் களிடமிருந்து பிரிக்க முடியாத ஒரு பகுதியாக நேரு தன்னேக் கருதிஞர். அவரும் வெற்றியை, தன்னுடைய வாழ்க்கை முழுவதிலும் போராடிப் பெற்றிருக்கும் வெற்றியைக் கொண் டாடிக்கொண்டிருந்தார். ஆனல் இந்த மகிழ்ச்சி நிறைந்த தருணங்களில் கூட அவர் இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தார். புதிய இந்தியாவை நிர்மாணிப்பதில் குடியரசுப் பிரகடனம் ஒரு படி மட்டுமே—ஒரு வேளே அது மிகக் கடினமான படியாகக் கூட இல்லா திருக்கலாம்—என்பதை அவர் தெளிவாக உணர்ந்தார். நாட் டில் பல யுகங்களாக இருந்து வருகின்ற பின்தங்கிய நிலேமை யைப் போக்க வேண்டும், பெருந்திரளான மக்களிடம் உள்ள பயங்கரமான வறுமை, வேலேயில்லாமை, கல்லாமை அகற்றப் பட வேண்டும். இந்தியா பொருளாதார சுதந்திரத்தை அடைய வேண்டும். இந்தியா தன்னுடைய அரசு மற்றும் ஜனநாயக அடிப்படைகளேப் பலப்படுத்திக் கொண்டு உலக சமூகத்தில் தனக்குரிய இடத்தைப் பெற வேண்டும்.

## அத்தியாயம் பதின்மூன்று

டில்லியின் புறநகர்ப் பகுதிகளின் மீது நீண்ட இறக்கைகளைக் கொண்ட வெள்ளிப் பறவை அமைதியாகப் பறந்து கொண்டிருந்தது. மேகங்களே இல்லாமலிருந்த வெப்ப மண்டல வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. பூமியிலிருந்து வந்த வெப்பமான காற்று அதைக் காற்றுமண்டலத்தின் குளிர்ச்சியான பகுதிகளுக்குள் மென்மேலும் துரத்தியது. ஒரு கிளைடர் விமானத்தில் உட்கார்ந்து வானத்தில் பறந்து வானக்கடலில் சங்கமிக்கின்ற மகிழ்ச்சியை—அது வருடத்துக்கு ஒரு தடவை மட்டுமே என்றாலும்—நேரு எப்படி மறுக்க முடியும்?

இந்திய கிளைடர் விமானக் கழகத்தின்—அதன் கௌரவப் புரவலராக நேரு இருந்தார்—உறுப்பினர்கள் அங்கே குழுமி நின்று அந்த விமானம் பறப்பதை அக்கறையோடு கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

விமானம் கடைசித் தடவையாக வட்டமடித்த பிறகு பூமியிலிறங்குவதற்காகக் கீழ் நோக்கி வேகமாக வந்தது. சூரிய வெப்பம் தகித்துக் கொண்டிருந்த மைதானத்தின் எல்லாப் பக்கங்களிலுமிருந்து மக்கள் விமானத்தை நோக்கி ஓடி வந்தார்கள்.

ஒரு பத்திரிகை நிருபர் எங்கிருந்தோ வந்தார். இவ்வளவு ஆபத்தான விளையாட்டில் ஈடுபடுவது அவருக்குப் பயமாக இல்லையா என்று பிரதம மந்திரியைக் கேட்டார்.

நாம் எல்லோருமே சீக்கிரமாகவோ அல்லது தாமதமாகவோ மரணமடைய வேண்டியவர்கள்தான். எனவே கிளைடர் விமான ஓட்டிக்கு ஏற்படுகின்ற அற்புதமான அனுபவம் தனக்கு வேண்டாம் என்று பயத்தினால் கூறுவது முட்

டாள்தனமே என்று நேரு சிரித்துக் கொண்டே பதிலளித்து விட்டு தனக்காகக் காத்துக் கொண்டிருந்த காரை நோக்கிச் சென்ருர்.

ஆம், அவருடைய தலைமுறை தன்னுடைய வாழ்க்கையின் பெரும்பகுதியை வாழ்ந்து முடித்துவிட்டது. அதிலும் அந்த வாழ்க்கை இரண்டு உலக யுத்தங்களின் காரணமாக மிகவும் கஷ்டமானதாக, ஊனமடைந்ததாக இருந்தது. இப்பொழுது புதிய தலைமுறையைப் பற்றிச் சிந்திப்பது அவசியம். மரண தண்டனை விதிக்கப்பட்டு அது தள்ளி வைக்கப்பட்டிருப்பதைப் போன்ற நிலைமையில் அந்தத் தலைமுறை வாழ்ந்து கொண்டிருக்கிறது. யுத்தத்தைத் தவிர்க்க முடியாது என்ற கருத்து நாளுக்கு நாள் மக்கள் மனங்களில் விதைக்கப்பட்டு வந்தது. மேற்கத்திய ராஜியவாதிகளில் சிலர் மென்மேலும் அடிக்கடி முட்டாள்தனமாக ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு புதிய யுத்தம் ஏற்பட்டால், சில வருடங்களுக்கு முன்னுல் ஹிரோஷிமா மற்றும் நாகஸாகியின் மீது அணுக்குண்டுகளை வீசியதைப் போல, அணு ஆயுதங்களை உபயோகிக்குமாறு தயக்கமில்லாமல் உத்தரவு கொடுப்பேன் என்று ஜனதிபதி ட்ருமன் ஏற்கெனவே அறிவித்திருந்தார்.

நேரு அஹிம்சாவாதியல்ல. வன்முறை இல்லாமல் சமாளிப்பது துரதிர்ஷ்டவசமாக எப்பொழுதும் சாத்தியமல்ல என்பதை யதார்த்த நிலைமை அவருக்குக் கற்பித்திருந்தது. அவர் இந்தியாவின் பாதுகாப்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டும், எந்தச் சூழ்நிலைக்கும் தயாராக இருக்க வேண்டும்.

காலனியாதிக்க நுகத்தடியிலிருந்து விடுதலை அடைந்து கொண்டிருக்கும் ஆசியாவில் ஏற்பட்டுக் கொண்டிருந்த மகத்தான மாற்றங்களை மேற்கத்திய அரசியல்வாதிகள் அனைவருமே கணக்கிலெடுத்துக் கொண்டார்கள் என்று கூற முடியாது. ஆசிய நாடுகளுக்கு நட்புறவும் ஒத்துழைப்பும் அவசியம், அவை சொந்தக் கவலைகளில் மூழ்கியிருப்பதனுல் சர்வதேசச் சண்டைகளில் ஈடுபட விருப்பமில்லை, ஆனுல் அந்த நாடுகளின் சித்தத்தை மீறி இந்தச் சண்டைகளில் அவை ஈடுபடுத்தப் படுகின்றன என்று நேரு கருதினுர்.

தூரகிழக்கிலிருந்த நிலைமை மிகவும் கவலையளிப்பதாக இருந்தது. 1950 ஜூன் 27ந் தேதியன்று கொரியாவில் இராணுவத் தலையீட்டைத் தொடங்குமாறும் தைவான் தீவை

ஆக்கிரமிக்கும்படியும் ட்ரூமன் அமெரிக்க இராணுவத்துக்கும் கடற்படைக்கும் உத்தரவிட்டார். வியத்நாமிலிருந்த பிரெஞ்சுக் காலனியாதிக்கத் துருப்புகளுக்கு இராணுவ உதவியை அதிகப் படுத்துவதென்றும் அமெரிக்க அரசாங்கம் முடிவு செய்தது...

...இந்தியா குடியரசான பிறகு, அதன் ஜனதிபதி வைசிராய் முன்பு வசித்த மாளிகைக்கு மாறினர். இராஷ்டிரபதி பவனம் என்ற பெயர் அதற்குச் சூட்டப்பட்டது. முன்பு பிரிட்டிஷ் தலைமைத் தளகர்த்தர் வசித்த வீடு பிரதம மந்திரியின் இருப்பிடமாயிற்று. சிவப்புக் கற்களால் நிர்மாணிக்கப் பட்ட இந்தக் கட்டிடம் ஜனதிபதி மாளிகைக்கு அருகிலேயே மூன்று சிலைகளின் சாலையில் அமைந்திருந்தது. அதற்கு முன் புறத்திலிருந்த பெரிய வட்டத்தை மையமாகக் கொண்டு நகரத்தின் ஐந்து பிரதான சாலைகள் தொடங்கின. அந்தப் பெரிய வட்டத்தில் காலாட்படையினர், கடற்படையினர் மற்றும் விமானப் படையினருக்கு மூன்று நினைவுச் சின்னங்கள் நிறுவப் பட்டிருந்தன.

பிரதமர் மாளிகையின் வெளிவாயிற் கதவுகள் எப்பொழுதும் திறந்தே இருந்தன. கட்டிடத்தின் கீழ்ப் பகுதியில் பெரிய வரவேற்பு அறை இருந்தது.

உலகத்தின் அரசுத் தலைவர்களில் மிக எளிதில் சந்திக்கக் கூடிய சிலரில் நேருவும் ஒருவர் எனலாம். ஒவ்வொரு நாளும் காலைச் சிற்றுண்டிக்குப் பிறகு பிரதமர் தோட்டத்துக்குள் வருவார். அவரைப் பார்த்துப் பேச விரும்புகின்ற பொதுமக்கள் அங்கே அவருக்காகக் காத்திருப்பார்கள். தன்னுடைய நேரத்தில் சில நிமிடங்களை அவர்களுக்குத் தருவதற்கு அவர் ஒருபோதும் தவறியதில்லை. தொலைபேசிப் புத்தகத்தைப் புரட்டினல் ''ந'' என்ற எழுத்தின் கீழ் பின்வரும் குறிப்பு இடம் பெற்றிருப்பதை யாரும் பார்க்க முடியும்: ''நேரு, ஜவகர்லால்—பிரதம மந்திரி. இருப்பிடம்: 32—3—12, அலுவலகம்: 32—1—60''. பொதுமக்கள் அவரைத் தொலைபேசியில் கூப்பிடுவதுண்டு. அவர் அங்கே இருந்தால், அவருக்கு அவசரமான, முக்கியமான அலுவல் இல்லையென்றால் அவரோடு பேசுவதுமுண்டு.

அவருடைய படிப்பறை முதல்மாடியில் இருந்தது. அதில் நீண்ட மேசை போடப்பட்டிருந்தது. அதன் மீது காந்தியின் உருவப்படம் வைக்கப்பட்டிருந்தது. சுவரிலிருந்து அவருடைய

தகப்பனார் மோதிலாலின் உருவப்படம் தொங்கியது. மரப் பலகை பதிக்கப்பட்ட சுவர்கள் நெடுகிலும் புத்தக அலமாரி கள் இருந்தன. வராந்தாக் கதவுக்குப் பக்கத்தில் காபி வைக்கும் மேசையும் இரண்டு நாற்காலிகளும் ஒரு சோபாவும் போடப் பட்டிருந்தன.

1950 ஜூலை மாதத்தில் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசும்பொழுது, கொரியாவில் யுத்தத்தை விஸ்தரிக்கின்ற நடவடிக்கைகளை இந்திய அரசு எதிர்க்கிறது என்று நேரு கூறினார், யுத்தத்தை நிறுத்துவதற்குப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்குமாறு வல்லரசுகளைக் கேட்டுக்கொண்டார்.

மேசை விளக்கின் ஒளி ஒரு வெள்ளைக் காகிதத்தின் மீது விழுந்தது. மேசையின் மேல் வைக்கப்பட்டிருந்த பேனாக் களில் ஒன்றை நேரு எடுத்தார். ''மாண்பு மிக்க ஜே. வி. ஸ்டா லின், சோவியத் யூனியன் அமைச்சர்கள் கவுன்சிலின் தலைவர்'' என்று வேகமாக எழுதினார்.

அவர் நாற்காலியில் பின்னால் சாய்ந்து உட்கார்ந்தார், சற்று சிந்தித்தார், மேசையின் மேல் விரல்களால் தாளம் தப்பாமல் தட்டினார். பிறகு ஒரு சிகரெட்டை எடுத்தார். வழக்கம் போல அதை இரண்டாக முறித்தார். ஒரு பாதியை நீண்ட சிகரெட் குழாயில் சொருகிப் பற்ற வைத்தார். அவர் எழுந்து புத்தக அலமாரியின் அருகில் சென்று இரண்டு, மூன்று புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தார். பிறகு தன்னு டைய மேசைக்குத் திரும்பினார். மாஸ்கோவில் இந்தியாவின் தூதரான சர்வபள்ளி இராதாகிருஷ்ணனுக்கும் சோவியத் யூனியன் வெளிநாட்டு துணை அமைச்சர் அ. அ. குரோமி கோவுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலின் குறிப்பு களைப் பற்றி மறுபடியும் சிந்தித்தார்.

உரையாடலின் போது அன்பும் நட்பும் கலந்த சூழல் நிலவியதென்று இந்திய தூதர் மிகவும் திருப்தியோடு தெரிவித் திருந்தார். தூர கிழக்கில் அமெரிக்காவின் ஆக்கிரமிப்பு நட வடிக்கைகளைப் பற்றி சோவியத் அரசாங்கம் அதிகமான கவலை தெரிவித்ததை அவர் குறிப்பிட்டிருந்தார். சுயேச் சையான அரசியல் வளர்ச்சிப் பாதையை இந்தியா பின்பற்றத் தொடங்கியிருப்பதால் சமாதானத்தைப் பாதுகாப்பதில் அது முக்கியமான பாத்திரம் வகிக்க முடியும் என்று அ. அ. குரோ மிகோ இந்திய தூதரிடம் கூறியிருந்தார்.

இந்தியாவின் சுதந்திரத்தின் மெய்யான தன்மையைப் பற்றி சோவியத் தலைவர்களிடம் எத்தகைய சந்தேகமும் இல்லை என்பதை இராதாகிருஷ்ணன் அறிக்கையிலிருந்து தெரிந்து கொண்ட பொழுது நேரு மகிழ்ச்சியடைந்தார். சர்வதேச விவகாரங்களில் பிரிட்டிஷ் இராஜியவாதிகள் ''சடத் துவம் காரணமாக'' இந்தியாவின் சார்பில் செயலாற்ற முயற்சிகளைச் செய்து கொண்டிருந்தது உண்மையே. மாஸ் கோவிலிருந்த இந்திய தூதரகத்தின் அதிகாரிகள் இந்தியா வின் இரகசியத் தந்திக் குறிகளைப் பிரிட்டிஷ் தூதரகத்தில் பத்திரப்படுத்தியிருந்தார்கள் (அதற்குக் காரணம் தீவிர வெகு ளித்தனமே) என்பதை அறிந்தபொழுது நேரு மிகவும் ஆத்திர மடைந்தார். பிரிட்டிஷ்காரர்களுடனான உறவுகளில் உளவியல் ரீதியான தடைகளை சில இந்திய அதிகாரிகளால் இன்னும் சமாளிக்க முடியவில்லை என்பது நேருவுக்குத் தெரியாத இர கசியமல்ல.

தூர் கிழக்கில் யுத்த அபாயத்தை அகற்ற என்ன செய்ய வேண்டும்? அமெரிக்க இராஜியவாதிகளின் தந்திரங்கள் வெளிப்படையாகத் தெரிந்தன. அமெரிக்கா கொரிய மக்கள் ஜனநாயகக் குடியரசுக்கு எதிரான தன்னுடைய ஆக்கிர மிப்புத் திட்டங்களை ஐ. நா. கொடியின் கீழ் மறைத்துக் கொண்டிருந்தது. ஐ. நா.வில் சீன மக்கள் குடியரசை உறுப்பினராகச் சேர்க்க மறுத்ததை ஆட்சேபித்து சோவியத் யூனியன் 1950 ஜனவரி முதல் பாதுகாப்பு கவுன்சிலின் நடவடிக்கைகளில் பங்குகொள்ளாதிருந்தது. சோவியத் பிரதி நிதி இல்லாதிருக்கும் சந்தர்ப்பத்தைத் தனக்கு மிகவும் சாத கமாகப் பயன்படுத்திக் கொள்ள அமெரிக்கா திட்டமிட்டது.

உலக சமாதானத்தைப் பலப்படுத்துவதில் சோவியத் யூனி யன் உண்மையான அக்கறை கொண்டிருக்கிறது, எனவே சோவியத் யூனியன் இல்லாமல் கொரியச் சண்டைக்குத் தீர்வு காண்பது—அது சாத்தியமாக இருந்தால் கூட—மிகவும் கடின மாகவே இருக்கும் என்று நேரு நம்பினர்.

''மாஸ்கோவில் வெளி விவகார அமைச்சரகத்தில் இந்திய தூதர் நடத்திய உரையாடல்களில், கொரியாவில் நடை பெறும் சண்டை சம்பந்தமான இந்தியாவின் நிலையை அவர் விளக்கினர்'' என்று நேரு ஸ்டாலினுக்கு எழுதிய கடிதத் தில் குறிப்பிட்டார். ''கொரியச் சண்டை மேலும் பரவாமல்

தடுப்பதும் அது விரைவில் சமாதான பூர்வமாகத் தீர்க்கப் படுவதற்கு உதவியளிப்பதுமே இந்தியாவின் நோக்கம். அதற்கு ஐ. நா. பாதுகாப்பு கவுன்சிலில் தற்பொழுது ஏற் பட்டிருக்கும் நெருக்கடியை நீக்க வேண்டும், பாதுகாப்பு கவுன்சிலில் சீன மக்கள் அரசாங்கத்தின் பிரதிநிதி இடம்பெற வேண்டும், அப்பொழுதுதான் சோவியத் யூனியன் பிரதிநிதி பாதுகாப்புக் கவுன்சிலுக்குத் திரும்ப முடியும். பாதுகாப்புக் கவுன்சிலுக்கு உள்ளேயோ அல்லது அதிகார பூர்வமல்லாத தொடர்புகளின் மூலம் அதற்கு வெளியிலோ சோவியத் யூனியன், அமெரிக்க ஐக்கிய நாடு, சீனு சமாதானத்தை விரும்புகின்ற மற்ற அரசுகளின் உதவியோடு சண்டை யை நிறுத்துவதற்கும் கொரியப் பிரச்சினைக்கு இறுதித் தீர்வு காண்பதற்கும் அடிப்படையைத் தயாரிக்க முடியும்.

''சமாதானத்தை ஆதரிப்பதிலும் அதன் வழியாக ஐ.நா. சபையின் ஒருமைப்பாட்டைப் பாதுகாப்பதிலும் தங் களுடைய உறுதியைப் பற்றி எனக்கு முழு நம்பிக்கை இருப் பதால் இந்தப் பொது இலட்சியத்தை—மனிதகுலத்தின் எதிர் கால நல்வாழ்க்கை இதைப் பொறுத்திருக்கிறது—அடை வதற்குத் தங்களுடைய மாபெரும் சக்தியையும் செல்வாக்கை யும் பயன்படுத்த வேண்டுமென்று இந்தத் தனி முறையான வேண்டுகோளின் மூலம் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

''என்னுடைய மிக உயர்ந்த மரியாதையைத் தெரிவிப் பதை அன்பு கூர்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்'' என்று அவர் எழுதினர்.

அமெரிக்கத் தலைவர்களுக்கும் அவர் செய்தி அனுப்பினர்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு 1950 ஜூலை 15ந் தேதி யன்று மாஸ்கோவிலிருந்து அவருக்குப் பதில் வந்தது:

''தங்களுடைய சமாதான பூர்வமான முன்முயற்சியை நான் வரவேற்கிறேன். மக்கள் சீனக் குடியரசு உள்ளிட்ட ஐந்து வல்லரசுகளும் முறைப்படி கலந்து கொள்கின்ற பாது காப்பு கவுன்சில் நடவடிக்கை மூலம் கொரியப் பிரச்சினைக்குச் சமாதான பூர்வமான தீர்வு காண்பதன் அவசியத்தைப் பற்றித் தங்களது கருத்தை நான் முழுமையாகப் பகிர்ந்து கொள்கிறேன். கொரியப் பிரச்சினைக்கு விரைவில் தீர்வு காண் பதற்குப் பாதுகாப்பு கவுன்சிலில் கொரிய மக்களின் பிர

திநிதி உரையாற்றுவது உசிதமானது என்று கருதுகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள
ஜே. ஸ்டாலின்,
சோவியத் யூனியன் அமைச்சர்கள் கவுன்சில் தலைவர்.''

வாஷிங்டனிலிருந்தும் பதில் வந்தது. சிறிதும் மனச் சாட்சி இல்லாமல் ''ஆக்கிரமிப்பை ஊக்குவிப்பதாகவும்'' ''வன்முறைக்கும் ஒடுக்குமுறைக்கும்'' உதவி செய்வதாகவும் இந்தியப் பிரதமர் மீது அமெரிக்க அரசாங்கம் பழி சுமத்தியது.

அமெரிக்க அரசாங்கத்திடமிருந்து வேறு எவ்விதமான பதிலையும் நேரு எதிர்பார்த்திருக்க முடியாது. அது தன்னுடைய ''இராணுவ இராஜதந்திரத்தில்'' வெகு தூரம் போய் விட்டது. எனினும் கொரியப் பிரச்சினையில் இந்தியாவின் தெளிவான நிலை அமெரிக்க ஆக்கிரமிப்பாளருடைய நடவடிக்கைகளை நேரடியாகத் தடுக்கும் என்று அவர் கருதினார். மேலும் இந்தியாவின் சமாதான முன்முயற்சிக்கு சோவியத் யூனியன் கொடுத்த நிபந்தனையற்ற ஆதரவு தூர கிழக்கில் ஆபத்தான போரைத் தடுப்பதற்கு உறுதியான அடிப்படையைத் தோற்றுவித்தது.

ஜப்பானுடன் சமாதான உடன்படிக்கையைப் பற்றிய பிரச்சினையில் அவர் மேற்கொண்ட நிலையும் மேற்கத்திய ''கெடுபிடிப் போர் கூட்டாளிகளின்'' எதிர்ப்பைச் சந்தித்தது.

அமெரிக்கா தயாரித்த உடன்படிக்கை நகலைப் படித்துமே ஆசிய நாடுகளுக்கும் சோவியத் யூனியனுக்கும் எதிரான போர்த்திட்ட இராணுவ தளமாக ஜப்பானை மாற்றுவதை சட்ட பூர்வமாக்குவதற்கு ஏகாதிபத்திய வல்லரசுகள் முயற்சி செய்கின்றன என்பதை நேரு கண்டுகொண்டார்.

இந்தியப் பிரதமரைத் தங்கள் தரப்புக்கு இழுக்க, அல்லது குறைந்த பட்சம் அவர் பேசாமலிருக்கும்படி செய்ய அமெரிக்க, பிரிட்டிஷ் இராஜியவாதிகள் அதிகமான முயற்சிகளைச் செய்தார்கள். அவர்கள் வழக்கம் போல பொருளாதார உதவி அளிப்பதாக வாக்குறுதிகளைக் கொடுத்தார்கள், நேரடியாக அச்சுறுத்தினார்கள். ஆனால் சமாதான உடன்படிக்கைக்கான அமெரிக்க நகல் ஜப்பானிய அரசுரிமையில் தலையிடுகிறது, அதன் விளைவாக தூர கிழக்கில் நிலைமை சீர்கேடடையும் என்று நேரு சுட்டிக் காட்டினார். நகல் உடன்படிக்

கையின்படி ஜப்பானுக்குச் சொந்தமான இரண்டு தீவுகளை அமெரிக்காவின் தர்மகர்த்தா நிர்வாகத்தில் விடுவதையும் ஜப்பானியப் பிரதேசத்தில் அமெரிக்கத் துருப்புகளை வைத்திருப்பதையும் அவர் எதிர்த்தார். குரில் தீவுகளும் தெற்கு ஸகாலினும் சோவியத் யூனியனுக்கும் தைவான் சீனுவுக்கும் கொடுக்கப்பட வேண்டும், இவை உடன்படிக்கையில் இடம் பெற வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினுர்.

இந்தியாவின் பிரேரணைகளை மேற்கு வல்லரசுகள் நிராகரித்த பிறகு, ஜப்பானுடன் சமாதான உடன்படிக்கையை முடிவு செய்வதற்காகக் கூட்டப்பட்ட சான்பிரான்சிஸ்கோ மாநாட்டில் இந்தியா கலந்து கொள்ளாது என்று இந்திய அரசாங்கம் 1951 ஆகஸ்ட் 27ந் தேதிய குறிப்பில் அறிவித்தது.*

இந்தியா கலந்து கொள்ள மறுத்தது அந்த மாநாட்டின் முடிவுகளை மாற்ற முடியவில்லை. அங்கே பெரும்பான்மை வாக்குகள் மேற்கு நாடுகளிடம் இருந்தன. ஆனுல் தன்னுடைய அரசாங்கத்தின் முரணில்லாத ஏகாதிபத்திய எதிர்ப்புக் கொள்கை ஆசியாவில் சமாதானத்தை பலப்படுத்துவதற்கும் கடைசி நிலையில் இந்தியாவின் சொந்தப் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதற்கும் உதவியளிக்கும் என்பதை நேரு சிறப்பாக அறிந்திருந்தார்.

கான்னெக்டிகட் மாநிலத்தின் முன்னுள் கவர்னரும் புதிய அமெரிக்கத் தூதருமான செஸ்டர் பௌல்ஸ் 1951 அக்டோபரில் டில்லிக்கு வந்தார். அவர் மிக அதிகமான பதவி பேராசை கொண்டவர். ஆசியாவுக்கு இந்தியாவே திறவுகோல் என்று அவர் கருதினுர். எனவே இந்தியாவை சரிப்படுத்திக் கொள்வதன் மூலம் கஸபிளாங்கா முதல் டோக்யோ வரை நீண்டிருக்கின்ற ஒரு விரிவான பிரதேசத்தின் எதிர்காலத்தை முடிவு செய்வதில் அமெரிக்காவின் தலைமையான பாத்திரத்தை உறுதிப்படுத்தத் திட்டமிட்டார்.

அவருடைய எதிர்பார்ப்புகளுக்கு மாறுக, நேருவுடன் அவருடைய முதல் சந்திப்பில் நட்புணர்ச்சியின் சுவடுகூட

* அமெரிக்கா கூட்டிய மாநாட்டில் கலந்து கொள்ள மறுத்த பிறகு 1952 ஜூன் 9ந் தேதியன்று நேரு ஜப்பானேடு இரு தரப்பு முறையில் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார். அதில் ஜப்பானிய அரசுரிமையைக் கட்டுப்படுத்தும் நிபந்தனைகள் அகற்றப்பட்டிருந்தன.

இல்லாதிருந்தது. பிரதமர் நேரு பாசமில்லாமல் ஜாக்கிரதை யாகப் பேசினர். தமது நேரத்தில் இருபது நிமிடங்களுக்கு மேல் அவருக்கு ஒதுக்கவில்லை. அமெரிக்கர்களின் ''பாட்டுக்குத் தகுந்தாற்போல தாளம் போடுமாறு'' தன்னைச் செய்வதற்கு மென்மேலும் அதிகமாக முயற்சிகளைச் செய்வதைப் பற்றித் தன்னுடைய ஆத்திரத்தை நேரு மறைக்கவில்லை என்று பிற் காலத்தில் செஸ்டர் பௌல்ஸ் நினைவு கூர்ந்தார். தூதரின் கேள்விகளுக்கு அவர் சுருக்கமான முறையில் பதிலளித்தார். பிறகு மறுபடியும் மௌனமாக உட்கார்ந்திருந்தார், அதிக மாக அலுப்படைந்தவரைப் போல சன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்தார். அவர்களின் உரையாடல் தோல்வி யில் முடிந்தது. செஸ்டர் பௌல்ஸ் திகைப்படைந்தவராக தூதரகத்துக்குத் திரும்பினர். இந்தியப் பிரதமரோடு முதல் சந்திப்பைப் பற்றி வாஷிங்டனுக்கு என்ன எழுதுவதென்று அவருக்குப் புரியவில்லை. அவர் தன்னுடைய வசதிகள் நிறைந்த கான்னெக்டிகட் மாளிகையை விட்டு வந்தது உண்மையிலேயே வெப்ப மண்டல உஷ்ணத்தையும் ராஜியத் தோல்விகளையும் அனுபவிப்பதற்காகத்தானு? எனினும் அவர் நேருவுடன் அந்தரங் கமான உறவு வைத்துக் கொள்ளும் முயற்சிகளைத் தொடர்ந் தார். ஆனல் நேரு எப்பொழுதும் அவர் கருத்தை மரி யாதையோடு கேட்டுக் கொண்டிருப்பார். பிறகு உரக்க சிந் தனை செய்வது போல அவருடைய கருத்தின் ஓட்டைகளைச் சுட்டிக் காட்டுவார். ''கம்யூனிசத்தைப் பின்னுக்குத் தள்ளு வது'' மற்றும் சுதந்திரமடைந்த ஆசிய நாடுகளை இராணுவக் கூட்டணிகளுக்குள் கொண்டுவருதல் போன்ற அமெரிக்கக் கொள்கைகளுக்கு ஆதரவாக பௌல்ஸ் பேச முயற்சி செய்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இப்படி நடந்தது.

அமெரிக்க அரசு இலாகாவில் இந்தியா உணவுப் பொருள் கள் வாங்குவதற்குக் கடன் கொடுக்கலாமா, கூடாதா என்று முடிவு செய்வதற்கு முயற்சி செய்து கொண்டிருந்த பொழுது சோவியத் கப்பல்கள் இந்தியாவிற்கான தானியத்தோடு ஒன்றன் பின் ஒன்ருக பம்பாய்க்கு வந்து கொண்டிருந்தன.

இந்தியாவில் படேல் அரசியல் மாற்றங்களை ஏற்படுத்த லாம் என்று அமெரிக்கர்கள் கருதினர்கள். அவரை எதிர் காலப் பிரதம மந்திரியாகக் கூடக் கற்பனை செய்தார்கள். ஆனல் 1950 டிசம்பரில் படேல் திடீரென்று மரணமடைந்தார்.

ஒரு வருடத்துக்குப் பிறகு காங்கிரஸ் தலைமையிலும் மாற்றம் ஏற்பட்டது. காலஞ்சென்ற படேலின் ஆதரவாளரான பு. தாண்டனுக்கு பதிலாக நேரு காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்பொழுது அரசுத் தலைமையும் கட்சித் தலைமையும் நேருவிடம் ஒன்றுகுவிக்கப்பட்டன.

ஜனநாயக சீர்திருத்தங்கள் மற்றும் திட்டமிட்ட அடிப் படையில் நாட்டின் பொருளாதார வளர்ச்சி என்ற விரி வான செயல்திட்டத்தை முன்வைத்து நேரு அரசாங்கம் இந் தியாவில் முதல் பொதுத் தேர்தலை நடத்தியது. அந்தத் தேர்தலில் இந்திய தேசிய காங்கிரஸ் நாடாளுமன்றத்தில் அறுதிப் பெரும்பான்மையைப் பெற்றது.

இந்திய அரசாங்கத்தின் மீது அமெரிக்க நிர்ப்பந்தம் முடிவடையவில்லை. 1953ல் அமெரிக்க அரசு இலாகாச் செய லாளர் ஜான் பாஸ்டர் டல்லஸ் இந்தியாவுக்கு வந்தார். பிறகு உப ஜனதிபதி ரிச்சர்ட் நிக்ஸன் வந்தார். உயர்ந்த அரசியல் அந்தஸ்துடைய தூதர்கள் அகம்பாவ-வர்த்தக அணுகுமுறையைப் பின்பற்றுவது நேருவுக்கு அருவருப்பைக் கொடுத்தது. ''சுதந்திர காஷ்மீரை'' ஏற்படுத்தும் அமெரிக்க திட்டத்தை இந்தியா ஏற்றுக் கொண்டால் ஏராளமான பொருளாதார உதவி கொடுப்பதாக இருவரும் வாக்குறுதி யளித்தார்கள். ஆனல் ''சுதந்திர காஷ்மீர்'' என்பது உண் மையில் அதை அமெரிக்க இராணுவ தளமாக மாற்றுகின்ற திட்டமே.

நேரு ஒத்துக்கொள்ளவில்லை என்றல் அமெரிக்கா பாகிஸ்தா னுக்கு இராணுவ தளவாடங்களைக் கொடுக்கும், அதன் பிர தேசத்தில் இராணுவ தளங்களை ஏற்படுத்தும் என்று நிக்ஸன் வெளிப்படையாக அவரை மிரட்டினர். நிக்ஸனேடு நடத்திய பேச்சு வார்த்தைகளின்போது நேரு ஒதுக்கமாக நடந்துகொண் டார், அமெரிக்காவுடன் இராணுவ ரீதியில் ஒத்துழைக்கின்ற எவ்விதமான சாத்தியத்தையும் நிராகரித்தார். அமெரிக்க உப ஜனதிபதிக்கு அவரளித்த வரவேற்பு விருந்தில் நட்புணர்ச்சி இல்லாதிருந்ததைக் கவனமிக்க பத்திரிகையாளர்கள் குறித்துக் கொண்டார்கள்.

அமெரிக்க அரசாங்கம் விடாப்பிடியாக இருந்ததை மறுக்க முடியாது; அரசியல் சலுகைகளைச் செய்யும்படி நேருவை தாஜா செய்வதற்கு அது இடைவிடாமல் முயற்சி செய்து

கொண்டிருந்தது. நிக்ஸன் டில்லியிலிருந்து திரும்பியதும் அமெ ரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவர் நேருவுக்கு எழுதிய கடிதத்தில் இந்தியாவுக்கு இராணுவ உதவி கொடுக்கும் அமெரிக்கப் பிரேரணையை மறுபடியும் வற்புறுத்தினார்.

அமெரிக்கா பாகிஸ்தானுக்குத் தருகின்ற இராணுவ உத வியை எதிர்த்துவிட்டு நாங்களே அந்த உதவியை ஏற்றுக் கொண்டால் எங்களை வேடதாரிகளாக, கோட்பாடில்லாத சந்தர்ப்பவாதிகளாகக் கருதுவார்கள் என்று நேரு ஆத்திரத் தோடு கூறினார். சமாதானம், சுதந்திரம் என்ற இலட் சியங்களுக்கு ஒத்துழைக்கின்ற விருப்பத்தை அடிப்படையாகக் கொண்ட எமது அரசாங்கத்தின் கொள்கைகள் ஐசன்ஹோ வருக்கு நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும் என்றார்.

நேரு அமெரிக்காவின் நிர்ப்பந்தத்துக்குப் பணியவில்லை; ஆனால் பாகிஸ்தானிய அரசு ''பரஸ்பர பாதுகாப்புக்கு உதவி'' என்ற பெயரில் அமெரிக்காவுடன் 1954 மே 19ந் தேதியன்று உடன்படிக்கை செய்து கொண்டது. இதன் மூல மாக அமெரிக்கர்கள் கெடுபிடிப் போர் முனையை சமாதா னத்தை விரும்பும் இந்தியாவின் வடக்கு எல்லைகளுக்கு விஸ் தரித்தார்கள்.

அமெரிக்கா சுதந்திரமடைந்த நாடுகளுக்கு இராணுவ உதவியளிப்பதன் மூலம் ''ஆசியர்களுக்கு எதிராக ஆசியர் களின் யுத்தங்களைத்'' தூண்டிவிட்டு ஆசியாவில் அமெரிக்க நலன்களைப் பாதுகாக்க உத்தேசிக்கிறது என்பதை நேரு புரிந்து கொண்டார்.

அமெரிக்காவுடன் இராணுவ ஒப்பந்தத்தை நிராகரிக்கும் பொழுது, எந்தச் சூழ்நிலையிலும் எத்தகைய காரணத்துக்கும் இந்திய மண்ணில் அந்நியத் துருப்புகள் இருக்க அனுமதிக்க மாட்டேன் என்று அவர் உறுதியாகக் கூறினார். எந்த அந்நிய அரசாவது இந்தியாவுக்கு எதிராக ஆக்கிரமிப்புச் செயலில் ஈடுபடுமானால், அது தகுந்த முறையில் எதிர்க்கப்படும் என்றார்.

இந்தோசீனாவில் போர் நிறுத்தம் பற்றி ஜினீவாவில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் 1954 ஜூலை மாத இறுதி யில் முடிந்தன, உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது. சுமார் ஏழரை வருடங்களாக நடைபெற்ற யுத்தம் நிறுத்தப் பட்டது. வியத்நாம், லாவோஸ் மற்றும் கம்போடியாவில் சமாதானத்தை ஏற்படுத்துவதில் இந்தியா வகித்த முக்கிய

மான பாத்திரம் ஜினீவா மாநாட்டின் முடிவுப் பிரகடனத்தில் பதிவு செய்யப்பட்டது. மூன்று இந்தோசீன அரசுகளிலும் போர்நிறுத்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதைக் கண்காணிக்க நியமிக்கப்பட்ட சர்வதேசக் கமிஷன்களுக்கு இந்தியப் பிரதிநிதி தலைமை வகிக்க அங்கீகாரமளிக்கப்பட்டது.

போர் நிறுத்தம் கையெழுத்திடப்பட்ட தினத்தன்று பத்திரிகை நிருபர்கள் மாநாட்டில் பேசிய ஐசன்ஹோவர், ''தென் கிழக்கு ஆசியாவில் மேலும் நேரடியான அல்லது மறைமுகமான கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்காக'' அந்தப் பிரதேசத்தில் கூட்டுப் பாதுகாப்பு ஸ்தாபனத்தை விரைவில் ஏற்படுத்துவதற்கு அமெரிக்கா சில ஆசிய நாடுகளோடு தீவிரமான பேச்சுவார்த்தைகளை நடத்திக் கொண்டிருக்கிறது என்று அறிவித்தார்.

இது சம்பந்தமாக டில்லியிலுள்ள அமெரிக்கத் தூதரின் கடிதத்துக்கு நேரு சீக்கிரமாகவும் தீர்மானமான முறையிலும் பதிலளித்தார். 1954 செப்டெம்பர் 6ந் தேதியன்று மனிலாவில் நடைபெறவிருக்கின்ற மாநாட்டில் இந்தியா கலந்து கொள்ளாது, தென்கிழக்கு ஆசியாவில் இராணுவ கோஷ்டிகளை ஏற்படுத்துகின்ற கருத்தை இந்தியா எதிர்க்கிறது, ஜினீவா மாநாடு ஏற்படுத்திய சமாதானத்துக்குச் சாதகமான போக்கை மாற்றுவதற்குச் செய்யப்படும் முயற்சியே இந்த மாநாடு என்று நேரு கூறினார்.

இதன் பிறகு, தென்கிழக்கு ஆசியாவின் பாதுகாப்புக்காக ஒரு உடன்படிக்கை செய்யப்பட்டிருப்பதை அறிந்த பொழுது அவர் வியப்படைந்தார். ''இந்த நாடுகளை ஒன்றுசேர்த்த திடீர் அச்சம் என்ன? ஆக்கிரமிப்பு ஏதேனும் நடைபெறப் போகிறதா? தென்கிழக்கு ஆசியா அல்லது பசிபிக் பிரதேசத்தில் சமாதானத்துக்குத் திடீரென்று ஆபத்து ஏற்பட்டு விட்டதா? ஜினீவா உடன்படிக்கை முடிவடைந்த அந்தக் குறிப்பிட்ட தருணம் தேர்ந்தெடுக்கப்பட்டது ஏன்?... என்று நான் அடிக்கடி சிந்தித்தேன்'' என்று நேரு பிற்காலத்தில் எழுதினார். மனிலா உடன்படிக்கை தென்கிழக்கு ஆசியாவிலும் உலக முழுவதிலும் பதட்ட நிலைமையை அதிகப்படுத்தியது என்ற முடிவுக்கு வந்தார்.

**ஸியாட்டோ** (SEATO) அமைப்பை ஏற்படுத்துகின்ற ஒப்பந்தம் சமாதானத்தைப் பலப்படுத்துவதற்காக ஏற்பட

வில்லை, யுத்தத்துக்குத் தயாரிக்கவே ஏற்பட்டிருக்கிறது; அதன் உதவியின் மூலம் இந்தோசீனுவைப் பற்றிய ஜினீவா உடன்படிக்கையை அமுலாக்குவதைத் தடுப்பதற்கும் ஆசியா வில் காலனியாதிக்க அரசுகளின் நிலையைப் பலப்படுத்துவதற் கும் மேற்கத்திய வல்லரசுகள் உத்தேசிப்பதாக சோவியத் யூனியன் கருத்துத் தெரிவித்தது. இதை நேரு அறிந்திருந் தார்.

இந்தியாவின் உதாரணத்தைப் பின்பற்றி இந்தோனே ஷியா, பர்மா, இலங்கை ஆகிய நாடுகள் இந்த ஒப்பந்தத்தில் கலந்து கொள்ள மறுத்தன. ஆகவே அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஆஸ்திரேலியா மற்றும் நியூஸிலாந்தைத் தவிர, தாய்லாந்து, பிலிப்பைன்ஸ், பாகிஸ்தான் ஆகிய மூன்று ஆசிய நாடுகளே ஸியாட்டோவில் சேர்ந்தன.

ஸியாட்டோ ஒப்பந்தத்தின்படி, மொத்த ''பாதுகாப்புப் பிரதேசத்துக்கும்'' ஆபத்தான நிலைமை உறுப்பினர் நாடுகளில் ஏதாவதொன்றில் ஏற்படுமானுல் அதன் உள்நாட்டு விவகாரத்திற்குள் தலையிடுவதற்கு இடமளித்தது. ஆசியாவில் தேச விடுதலை இயக்கத்தை நசுக்குகின்ற ''உரிமையை'' மேற் கத்திய வல்லரசுகள் தாமாகவே எடுத்துக் கொண்டிருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

அமெரிக்கக் கொள்கையினுல் அதிகக் கவலையடைந்த நேரு 1954 செப்டெம்பர் 29ந் தேதியன்று இந்திய நாடாளுமன் றத்தில் (மக்கள் சபையில்) உலகத்தின் எதிர்காலத்தைப் பற்றி மிகவும் ஆழமான கவலையோடு பேசினுர். மேற்கத்திய வல்லரசுகள் ஏற்படுத்தியுள்ள இராணுவக் கூட்டணிகளின் ஆக்கிரமிப்பு, காலனியாதிக்க சாராம்சத்தை அவர் வெளிப் படுத்தினுர்.

''இந்தியாவிலுள்ள நாம் சமாதான மண்டலத்தைப் பற்றிப் பேசத் துணிந்ததுண்டு. தென்கிழக்கு ஆசியா முக்கி யமான சமாதான மண்டலங்களில் ஒன்ருக இருக்குமென்று நாம் நினைத்தோம். மனிலா ஒப்பந்தம் அந்த சமாதான மண்டலத்தின் பாதையில் குறுக்கே நிற்கிறது. அது சமாதான மண்டலமாக இருக்கக் கூடிய பிரதேசத்தை எடுத்து அநேக மாக யுத்தம் ஏற்படக் கூடிய பிரதேசமாக அதை மாற்று கிறது. இந்த வளர்ச்சி எனக்குக் கவலையேற்படுத்துகிறது'' என்று அவர் கூறினுர். பிறகு, மேற்கத்திய வல்லரசுகள்

வடக்கு அட்லாண்டிக் ஒப்பந்த ஸ்தாபனத்தை (NATO) ஏற்படுத்திய வரலாற்றை நினைவுபடுத்தினார்: ''முதலில் அது பூகோளரீதியில் வளர்ச்சியடைந்தது. வட அட்லாண்டிக் பிரதேசத்துக்கு என்று கருதப்பட்ட அந்த ஸ்தாபனம் மத்தியதரைப் பகுதிக்கு, ஆப்பிரிக்காவின் கடற்கரைப் பகுதிகளுக்கு, கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு, அட்லாண்டிக் பிரதேசத்தோடு எத்தகைய சம்பந்தமும் இல்லாத தொலைவிலுள்ள நாடுகளுக்குப் பரவியது... வடக்கு அட்லாண்டிக் ஒப்பந்த ஸ்தாபனத்தைப் பற்றி முதலில் சிந்தித்தபொழுது அது தற்காப்புக்கு என்று கூறப்பட்டது. படிப்படியாக அது இந்த அரசுகள் அனைத்துக்கும் சொந்தமான காலனிப் பிரதேசங்களையும் உள்ளடக்கியதாகச் சொல்லப்பட்டதைப் பார்த்தோம். இந்தக் காலனியாதிக்க அரசுகள் சார்பு நாடுகளின் மீது தம் அதிகாரத்தை நீடிப்பதும் தொடர்வதும் வட அட்லாண்டிக் சமூகத்தின் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட விவகாரமாக எப்படி மாறியது என்பது எனக்குச் சிறிதும் புரியவில்லை.''

போர்த்துகீசிய அதிகாரிகள் நேட்டோவின் செயல் எல்லையை இந்தியாவிலுள்ள போர்த்துகீசியக் காலனியான கோவாவுக்கு விஸ்தரித்திருக்கிறார்கள் என்று நேரு அறிவித்தபொழுது நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஆத்திரமடைந்தார்கள், ''இதை அனுமதிக்க முடியாது,'' ''கோவா இந்தியாவுக்குச் சொந்தமானது'' என்று முழங்கினார்கள்.

''வடக்கு அட்லாண்டிக் ஒப்பந்த ஸ்தாபனம் தன் எல்லையை கோவாவுக்கு விஸ்தரிக்க முடியுமானால், தென்கிழக்கு ஆசிய ஒப்பந்தமும் அதைப் போல விஸ்தரிக்கப்படுமோ என்று நான் ஆச்சரியப்படுகிறேன். அது நம்முடைய வாசற்படியில் தொடங்குகிறது. எங்கேயெல்லாம் போகும் என்று யார் சொல்ல முடியும்?'' என்று அவர் மேலும் கூறினார்.

மக்கள் சீனக் குடியரசையும் ஐ. நா.வில் அது இடம் பெற வேண்டிய அவசியத்தையும் பற்றிப் பேசும் பொழுது அதே சமயத்தில் சீனாவின் புதிய தலைமையைப் பற்றி அண்டை நாடுகளில் அச்சம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணத்தையும் விளக்கினார். சீனாவின் புதிய தலைமை அண்டை நாடுகளோடு ஏற்பட்டிருந்த எல்லைப் பிரச்சினைகளைத் தீர்க்க இன்னும் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை என்று சுட்டிக்

காட்டினுர். மலாயா, பர்மா, இந்தோனேஷியா, வியத்நாம், லாவோஸ், கம்போடியா, தாய்லாந்து ஆகிய நாடுகளில் எண்ணற்ற சீன மக்கள் வசித்து வருகிருர்கள். ஒரு காலத்தில் ஆசியா முழுவதிலும்—உலகம் முழுவதிலும் கூட—தங்களுக்கு ஆட்சியுரிமை இருப்பதாகக் கூறிய சீன சக்கரவர்த்திகள் மற்ற நாடுகளைத் தங்களுடைய அடிமை நாடுகளாகவும் அண்டை நாடுகளில் வசித்த இலட்சக் கணக்கான சீன இனத்தவர்களைத் தங்களுடைய குடிமக்கள் என்றும் கருதினுர்கள். வெளிநாடுகளில் உள்ள சீன இனமக்களைப் பற்றி இதே அணுகுமுறை இன்னும் பீகிங்கில் நீடிப்பதாகவே முடிவு செய்ய இயலும். எனவே சீன மக்களிடம் நட்புணர்ச்சியினுல் மட்டுமே உந்தப்பட்ட நேரு மக்கள் சீனக் குடியரசின் தலைவர்கள் அண்டை நாடுகளில் சீனுவைப் பற்றி ஏற்பட்டுள்ள அவநம்பிக்கையைப் போக்குவதற்குப் பாடுபட வேண்டும் என்று அதிகமான மரியாதை உணர்ச்சியோடு கேட்டுக் கொண்டார்.

இதற்கு முன்னர், 1954 ஜூன் மாத இறுதியில், இந்தோசீனுவைப் பற்றிய ஜினீவா மாநாட்டின் இடைநிறுத்தங்களில் ஒன்றில் மக்கள் சீனக் குடியரசின் பிரதமர் சூஎன் லாயை நேரு டில்லிக்கு விஜயம் செய்யும்படி அழைத்தார்.

மக்கள் சீனக் குடியரசு இந்தியாவுடன் அன்றைய எல்லையை அங்கீகரிக்கத் தயாராக இருப்பதைப் போலத் தோன்றியது. இரு நாடுகளுக்குமிடையே எல்லைத் தகராறுகள் ஏற்பட எந்தக் காரணமும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனுல் மாஸேதுங் திபெத்தின் மீது படையெடுப்பு நடத்தி திபெத்தின் மரபுவழிப்பட்ட சுயாட்சியைப் பறித்துவிட்டு இந்தியாவின் எல்லை வரை வந்து, இந்தியாவின் வட பகுதிகள், வடக்கு பர்மா, பூட்டான் மற்றும் இதர பிரதேசங்கள் மீது (சீனுவின் சக்கரவர்த்திகள் இந்தப் பிரதேசங்களை ஆட்சி செய்ததாக சீன தேசப் படங்கள் எடுத்துக் காட்டின) சீனுவுக்கு உரிமை இருப்பதாகக் கூற உத்தேசிக்கிருர் என்று இந்திய உள்நாட்டிலாகாவின் இரகசிய வேவுத் துறையின் தலைவரான பி. மல்லிக் தன் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார்.

நேரு இந்தத் தகவலைக் கவலையோடும் ஓரளவுக்கு அவநம்பிக்கையோடும் படித்தார். மக்கள் சீனக் குடியரசுடன் நல்ல

அண்டை நாட்டுறவுகளை ஏற்படுத்திக் கொள்வதற்காக அவர் அதிகமாகப் பாடுபட்டிருந்தபடியால் சீனத் தலைவர்கள் வஞ்சக மானவர்கள் என்று நம்புவதற்கு அவர் விரும்பவில்லை.

எனினும் டில்லியில் சூஎன்லாயுடன் நடத்திய பேச்சுவார்த் தைகளின்போது அவர் பல இந்தியப் பிரதேசங்களைச் சீனுவுக்குச் சொந்தம் என்று காட்டுகின்ற சீன தேசப் படங்களைப் பற்றிய பிரச்சினையைக் கவனமாக எழுப்பினார்.

சூஎன்லாய் அவர் கண்களை நேரடியாகப் பார்த்தவாறு அவை பழைய தேசப் படங்கள், அவற்றைத் திருத்தி வெளியிடுவதற்கு சீன அரசாங்கத்துக்கு இன்னும் நேரம் கிடைக்கவில்லை என்று கூறினார்.

நேரு எழுப்பிய பிரச்சினை மிக முக்கியமானது. அது தீர்க்கப்படாவிட்டால் இரு நாடுகளுக்குமிடையே மோதல்களுக்கும் யுத்தங்களுக்கும் வழி வகுத்துவிடும். அத்தகைய பிரச்சினையை சீனத் தலைவர் தட்டிக் கழித்தது சரியல்ல என்று நேருவுக்குத் தோன்றியது. மேலும் சூஎன்லாய் மேற்கு நாடுகளில் படித்தவர், உலக வரலாற்றையும் பிரதேசங்கள் மீது கோரிக்கைகளினால் ஏற்பட்ட எண்ணற்ற யுத்தங்களைப் பற்றியும் நன்கு அறிந்தவர். எனவே அந்த பதில் இன்னும் விசித்திரமாகத் தோன்றியது.

மொத்தத்தில் டில்லி பேச்சுவார்த்தைகள் நல்ல முறையில் நடைபெற்றன. இரண்டு நாடுகளுக்குமிடையே உறவுகளுக்கு அடிப்படையாக வைத்துக் கொள்ளப்பட வேண்டிய ஐந்து கோட்பாடுகளை (''பஞ்ச சீலம்'') அறிவித்துக் கூட்டறிக்கை வெளியிட வேண்டும் என்று நேரு தெரிவித்த ஆலோசனையை சூஎன்லாய் ஏற்றுக் கொண்டார். ஐந்து கோட்பாடுகள் கீழே தரப்பட்டுள்ளன:

1) ஒவ்வொரு தரப்பினருடைய பிரதேச முழுமைக்கும் அரசுரிமைக்கும் பரஸ்பர மரியாதை;

2) பரஸ்பரம் ஆக்கிரமிப்பு செய்யாதிருத்தல்;

3) உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை;

4) சமத்துவம் மற்றும் பரஸ்பர உதவி;

5) சமாதான சகவாழ்வு.

ஒப்பந்தக் காலத்தை இருபத்தைந்து வருடங்களாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று முதலில் இந்தியத் தரப்பு முன்மொழிந்தது; சூஎன்லாய் பிறகு எட்டு வருடங்களாக அதைக்

குறைத்துக் கொண்டதைப் பற்றி நேரு ஆச்சரியமடைந்தார்.

சமாதானத்தை விரும்பும் எல்லா நாடுகளும் ஐந்து கோட்பாடுகளுக்கு விரிவான அங்கீகாரமும் ஆதரவும் கொடுத்தன. சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத், எல்லா அரசுகளும் தங்களுடைய பரஸ்பர உறவுகளை இந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைத்துக்கொள்வதற்காகப் பாடுபடுமாறு அனைத்து நாடாளுமன்றங்களையும் 1955 பிப்ரவரி 9ல் கேட்டுக் கொண்டது.

நேரு 1954 அக்டோபரில் சீன மக்கள் குடியரசுக்கு விஜயம் செய்து பத்து நாட்கள் தங்கியிருந்தார். அப்பொழுது மாஸேதுங்கைச் சந்தித்தார். சூஎன்லாயுடன் முக்கியமான பேச்சுவார்த்தைகளை நடத்தினார். அவற்றில், இந்திய-சீன ஒத்துழைப்பை விஸ்தரித்து ஆசியாவில் ''சமாதான மண்டலத்தை'' ஏற்படுத்த வேண்டியது அவசியம் என்ற கருத்தை அவர் தொடர்ச்சியாக முன்வைத்தார்.

சூஎன்லாய் அவருக்கே உரிய நயமான மரியாதையோடு, இரு நாடுகளுக்குமிடையே மரபு வழியாக ஏற்பட்டிருக்கும் நட்பு மற்றும் ஒத்துழைப்புப் பிணைப்புகளைப் பலப்படுத்த வேண்டிய அவசியத்தைப் பற்றி இந்தியப் பிரதமரிடம் பேசினார். பழங்கால முதலே இந்தியாவுக்கும் சீனாவுக்கும் எல்லைப் புறத்தில் வர்த்தகம் நடைபெற்றிருப்பதையும் கலாச்சார உறவுகளையும் நினைவு கூர்ந்தார்.

சீன அதிகாரிகளின் அறைகளில் இரு நாடுகளுக்கும் இடையே உள்ள எல்லைகளைத் தவறாகக் காட்டுகின்ற தேசப் படங்கள் மாட்டப்பட்டிருப்பதை இந்தியப் பிரதமர் பார்த்தார். இதைப் பற்றி ஏற்கெனவே என்னிடம் விளக்கம் கூறிவிட்டார்கள், இனி நான் இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை, ஏனென்றால் இந்திய எல்லைகள் தெளிவானவை, அதில் சந்தேகத்துக்கு இடமில்லை என்று அவர் உரத்த குரலில் கூறினார். இவை 1949க்கு முன்னர் அச்சிடப்பட்ட பழைய தேசப் படங்கள் என்று தன்னுடைய பழைய விளக்கத்தை சூஎன்லாய் மறுபடியும் கூறினார். (இந்த ''பூகோள வரைபட ஆக்கிரமிப்பு'' 1950க்களின் இறுதியில் இராணுவச் சண்டைகளின் வடிவத்தை அடையும் என்று நேரு அப்பொழுது ஊகிக்கவில்லை.)

சீனப் பிரதமர் இந்திய விருந்தினரை வாயாரப் புகழ்ந்

தார். சில சமயங்களில் அது நேருவுக்குச் சங்கடமாக இருந்தது. (நேருவைக் காட்டிலும் அகம்பாவமான மனிதரை நான் சந்தித்ததில்லை என்று குஎன்லாய் பிற்காலத்தில் கூறினார்.)

சீனத் தலைவர்கள் நேருவின் கருத்துக்களை ஒத்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது; சர்வதேச நிலைமையைப் பற்றிய மதிப்பீட்டில் கணிசமான அளவுக்கு உடன்பாடு ஏற்பட்டது. எனினும் அக்டோபர் 26ந் தேதியன்று பீகிங்கில் பத்திரிகை நிருபர்கள் மாநாட்டில் பேசும் பொழுது இந்தியாவின் அடிப்படையான அணுகுமுறை சீனாவிடமிருந்து ஓரளவுக்கு வேறுபட்டிருக்கிறது என்று நேரு கூறினார்.

அவருடைய கூற்று மிகவும் குறியடையாளமானது. மாஸேதுங்குடன் உரையாடியபொழுது அவருக்கு ஏற்பட்ட அதிருப்தியின் விளைவாகவே அவர் இப்படிக் கூறியிருக்க வேண்டும். உலக நாடுகளின் எதிர்காலத்தைப் பற்றி, சீனர்கள் உள்பட கோடிக்கணக்கான மக்களின் வாழ்க்கையையும் மரணத்தையும் பற்றி சீனத் தலைவர் நம்பிக்கையற்ற அலட்சியத்தோடு பேசினார். பிரதமர் முதல் விவசாயி வரை எல்லோருமே அவருக்கு அழிய வேண்டியவர்களே. தன்னுடைய ''மாபெரும் பேரரசை'' அவர் நிர்மாணிக்கப் பயன்படுகின்ற மூலப் பொருள் அந்த அழிவுக் குவியல்தான். அந்த எண்ணம் அவருடைய அகம்பாவமான கற்பனைக்கும் சர்வாதிகார ஆசைக்கும் ஓய்வைத் தரவில்லை.

உரையாடலின்போது மாஸேதுங் தொடர்ச்சியாகப் புகை பிடித்தார். சீனப் பிசாசின் உருவத்திலிருந்த ஒரு பெரிய சாம்பற்குப்பி அவருக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் சாம்பலைத் தரையில், மேசை மேல், பாதி காலியாக இருந்த தேநீர்க் கோப்பையின் மேல் தட்டிக் கொண்டிருந்தார். கடைசியில் சிகரெட்டைத் தூக்கியெறிந்து விட்டு தன்னுடைய மொத்தையான கைகளை வயிற்றின் மீது வைத்துக்கொண்டு, சீனாவின் மேல் அணுகுண்டை வீசினாலும் இருபது அல்லது முப்பது கோடி சீனர்கள் செத்தாலும் நான் பயப்பட மாட்டேன், அமெரிக்கர்களை ஒழித்துக் கட்டுவதற்குப் போதுமான காரணமாக இது அமையும் என்றார். அணுகுண்டு யுத்தம் கூட நல்லதுதான், உலக யுத்தத்துக்குப் பிறகு ஒரு புதிய உலக நாகரிகம் நிர்மாணிக்கப்படும்

என்றார் மாவோ. அது ஒரு புதிய பேரரசாக இருக்கும், சீனப் பரம்பரை அதை ஆட்சி செய்யும் என்று நாம் ஊகிக்கலாம்.

மாவோ திடீரென்று சீனாவில் கி.மு. 221ல் ஒன்றுபட்ட சின் மரபை ஏற்படுத்திய சின்ஷிங்ஹுவாங்கைப் பற்றிப் பேசத் தொடங்கினார். மாஸேதுங் வெளிநாட்டுக்காரர்களோடு பேசும் பொழுதெல்லாம் பழங்கால சீன சக்கரவர்த்திகளைப் பற்றிப் பெருமையாகப் பேசுவார் என்று நேரு கேள்விப்பட்டிருந்தார். மாவோவின் அங்கீகாரத்தோடு அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதிய அமெரிக்கப் பத்திரிகையாளரான எட்கார் ஸ்னோ, மாவோ சின்ஷிங்ஹுவாங்கை மிகவும் போற்றுவதாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் சக்கரவர்த்தி சின்ஷிங்ஹுவாங் ஒரு கொடுங்கோலர், அவர் புத்தகங்களை எரிக்குமாறும் கல்விமிக்க புலமையாளர்களை நெருப்பில் பொசுக்குமாறும் உத்தரவிட்டவராயிற்றே என்றும் நேரு சிந்தித்தார். இந்த உண்மையைப் பற்றி மாஸேதுங் சிறிதும் அக்கறை காட்டவில்லை. ''சித்தாந்த ஒருமைப்பாட்டை உருவாக்குவதற்காக அந்தப் புத்தகங்கள் எரிக்கப்பட்டன'' என்று அவர் கருதினார்...

இந்தியப் பிரதமர் சீன நகரங்களுக்குப் பிரயாணம் செய்தார். கடுமையான உழைப்பும் கட்டுப்பாடும் நிறைந்த சீன மக்கள் உற்சாகத்தோடு புதிய வாழ்க்கையை நிர்மாணித்துக் கொண்டிருந்ததை அவர் அனுதாபத்தோடு கவனித்தார். பல நூற்றாண்டுகளாக நிலவிய பின்தங்கிய நிலைமை, அறியாமை, வறுமை ஆகியவற்றை ஒழிக்க அவர்கள் எப்படிப் பாடுபடுகிறார்கள், சோவியத் யூனியன் நம்முடைய சகோதர நாடு, இந்தியா உள்பட மற்ற நாடுகளோடு சமாதானமும் ஒத்துழைப்பும் என்ற கோஷங்கள் எப்படி உத்வேகமூட்டுகின்றன என்பவற்றை அவர் கவனித்தார்.

ஆனால் புதிய சீனாவின் வாழ்க்கையில் பிளவைப் போன்ற ஒன்றிருப்பதை நேரு ஆச்சரியத்தோடு கவனித்தார். ஒரு பக்கத்தில் மக்களின் படைப்பாற்றல், புதிய வாழ்க்கையை நிர்மாணிக்கும் வேகம். மறு பக்கத்தில் போர்வெறி, தேசிய வெறி. சீனத் தலைவர்களில் சிலர், குறிப்பாக மாஸேதுங் தங்கள் சொற்பொழிவுகளின் மூலம் இந்த உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டனர்.

நேரு இந்தியாவுக்குத் திரும்பினார். காலனியாதிக்கத்துக்கு எதிராக, சமாதானம், சமூக முன்னேற்றம், பொருளாதார சுதந்திரத்துக்கு ஆதரவாகப் புதிதாக விடுதலையடைந்த ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் முயற்சிகளைப் பிளவுபடுத்துவதற்கு ஏகாதிபத்திய வல்லரசுகள் மென்மேலும் அதிகமான முயற்சிகளைச் செய்ததை எதிர்த்து இந்த நாடுகளின் கூட்டு நடவடிக்கைகளை அதிகமான உற்சாகத்தோடு அமைக்கத் தொடங்கினார். அவர் பர்மா, இலங்கை, இந்தோனேஷியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் தலைவர்களைச் சந்தித்தார். பாந்துாங்கில் நடைபெறப் போகும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் மாநாட்டின் அடிப்படை அரசியல் ஆவணங்களின் நகல்களைத் தயாரிப்பதற்காக போகோர் என்ற இந்தோனேஷிய நகரத்தில் 1954 டிசம்பர் இறுதியில் சில ஆசிய நாடுகளின் பூர்வாங்கக் கூட்டம் நடைபெற்றது. நேரு வெளிநாட்டு விவகாரங்களில் எப்பொழுதும் தன்னுடைய ஆலோசகரான கிருஷ்ண மேனனுடன் அதில் கலந்து கொண்டார்.

எகிப்திய அரசாங்கத்தின் தலைவரான கமால் அப்துல் நாஸருடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்காக நேரு 1955 பிப்ரவரி 15ந் தேதியன்று கெய்ரோவுக்கு இரண்டு நாள் விஜயம் செய்தார். இரு நாடுகளும் ஏகாதிபத்தியக் கூட்டணிகளில் சேரவில்லை. அத்தகைய கூட்டணிகளைப் பற்றி இரு நாடுகளும் ஒரே விதமான கருத்தைக் கொண்டிருந்தன. அவை வெளியிட்ட கூட்டறிக்கையில் அடிப்படையான சர்வதேசப் பிரச்சினைகளில் இரு நாடுகளும் ஒரே கருத்தைக் கொண்டிருப்பதைக் குறிப்பிட்டதோடு பாந்துாங் மாநாடு உலக சமாதானத்தை மேம்படுத்த உதவும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்தன.

மார்ச்—ஏப்ரலில் கம்போடியா மற்றும் வியத்நாம் அரசாங்கங்கள் சமாதான சகவாழ்வுக்கான பஞ்சசீலக் கோட்பாடுகளுக்குத் தமது அங்கீகாரத்தையும் ஆதரவையும் தெரிவித்தன. டில்லியில் நடைபெற்ற இந்திய-வியத்நாமியப் பேச்சுவார்த்தைகள் முடிவடைந்த பிறகு வியத்நாம் ஜனநாயகக் குடியரசின் உதவிப் பிரதம மந்திரியும் வெளி விவகார அமைச்சருமான பாம் வான் டோங் டில்லி வானொலியில் உரை நிகழ்த்தினார். விடுதலைக்கும் சுதந்திரத்துக்கும் தாங்கள் நடத்திய போராட்டத்துக்கு இந்திய மக்கள் கொடுத்த தார்

மிக ஆதரவை வியத்நாம் மக்கள் என்றும் நினைவில் வைத்திருப்பார்கள், ஜினீவா மாநாடு வெற்றிகரமாக முடிவடைவதில் இந்தியா வகித்த ஆக்கபூர்வமான பாத்திரத்தையும் இந்தோசீனுவில் போர்நிறுத்த ஒப்பந்தம் நிறைவேறுவதில் இந்தியாவின் பங்கையும் அவர்கள் மறக்க இயலாது என்று கூறினர்.

நேருவின் தலைமையில் இந்திய அரசாங்கம், சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளுக்கு இயன்ற அளவுக்கு அதிகமான நாடுகளின் அங்கீகாரத்தைப் பெறுவதற்கு முயற்சிகளைச் செய்து பாந்தூங் மாநாட்டுக்கு சுறுசுறுப்பான ராஜியத் தயாரிப்புகளைச் செய்து கொண்டிருந்தது.

பாந்தூங் மாநாட்டைக் கூட்டுவதற்கும் அதை வெற்றிகரமாக நடத்துவதற்கும் இந்தியா மற்றும் இதர ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளின் முயற்சிகளை சோவியத் யூனியனும் சோஷலிஸ்டு நாடுகளும் சமாதானத்தை நேசிக்கும் அனைத்து சக்திகளும் ஆதரித்தன. உலகத்தில் பதட்ட நிலையைத் தணித்து சமாதானத்தை மேம்படுத்துகின்ற இலட்சியத்துக்கு நாடுகளின் ஒத்துழைப்பை வளர்க்கும் பாதையில் பாந்தூங் மாநாடு ஒரு புதிய முன்னேற்றமாக இருக்கும் என்று சோவியத் அரசாங்கம் நம்புவதாக வெளிநாட்டிலாகாவின் துணை அமைச்சர் வி. வி. குஸ்னெத்ஸோவின் அறிக்கையை நேரு வரவேற்ருர். இந்த அறிக்கைக்கும் மேற்கு நாடுகளின் அணுகுமுறைகளுக்குமிடையே மிகவும் அதிகமான வேறுபாடு இருந்தது. விரைவில் நடைபெறப் போகின்ற ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு அமெரிக்காவின் கருத்தோட்டத்தில் விரும்பத்தக்கதல்ல என்று ஐசன்ஹோவர் அரசாங்கம் கருதுவதாக *The Chicago Sun Times* வெளியிட்ட கட்டுரையில் எழுதப்பட்டிருந்ததை நேரு படித்தார்.

ஏப்ரல் 11ந் தேதியன்று காஷ்மீர் இளவரசி என்ற இந்திய விமானம் ஹாங்காங்கிலிருந்து ஜாகர்தாவுக்குப் பறந்து கொண்டிருந்தது. வியத்நாம் ஜனநாயகக் குடியரசு, சீன மக்கள் குடியரசு ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள், சில பத்திரிகையாளர்கள் உட்பட பதினெட்டு நபர்கள் விமானத்தில் சென்று கொண்டிருந்தார்கள். ஸ்தல நேரப்படி 16.20 மணிக்கு விமானம் ஒழுங்காகப் போய்க்கொண்டிருப்பதாக விமான ஓட்டியிடமிருந்து செய்தி கிடைத்தது. அதற்கு இருபது நிமிடங்

களுக்குப் பிறகு அந்த விமானத்துடன் செய்தித் தொடர்பு இல்லாமற் போய்விட்டது. சில நாட்களுக்குப் பிறகு ஸரா வாக்குக்கு வடமேற்கிலுள்ள கடலில் அந்த விமான ஊழியர் கள் மூவர் பட்டினியாலும் களைப்பாலும் துன்பமடைந்த நிலையில் கண்டுபிடிக்கப்பட்டார்கள். விமானத்தின் சரக்குப் பகுதியிலும் வலப்பக்கச் சிறகிலும் குண்டுகள் வெடித்தன, அதற் குப் பிறகு விமானம் தீப்பிடித்துக் கடலில் மூழ்கியது என்று அவர்கள் தெரிவித்தார்கள். இவர்கள் மூவர் மட்டுமே உயிர் பிழைத்தனர்.

இந்த விமான விபத்து ''அசாதாரணமான சந்தர்ப்பங் களில்'' நடைபெற்றிருக்கிறது என்று நேரு கூறினார். அதைப் பற்றி மிகவும் நுணுக்கமாக விசாரணை செய்யும்படி உத்தர விட்டார். அவர் முதலில் விபத்தைப் பற்றித் தன்னுடைய சந்தேகங்களை வெளியிடாதிருந்தது இயற்கையே. ஆனால் பாந் தூங் மாநாட்டுக்குப் பிரதிநிதிகளை ஏற்றிச் சென்ற முதல் விமானங்களில் ஒன்றான **காஷ்மீர் இளவரசியில்** இரண்டு குண்டுகள் வெடித்ததாகத் தெரிந்து கொண்டபொழுது அவரு டைய சந்தேகங்கள் மறைந்தன. சில மேற்கு நாடுகளின் அதிகாரபூர்வமான பிரதிநிதிகள் அந்த விமானத்தின் கோளாறு களைப் பற்றி அசம்பாவிதமாகப் பேசினார்கள். அது விபத்து அல்ல—ஏகாதிபத்திய சதிகாரர்களால் திட்டமிட்டு நிறைவேற் றப்பட்ட சதிச்செயலே. விசாரணை முடிவுகள் இதை உறுதிப் படுத்தின. அந்தக் குற்றவாளி தைவானில் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. ஆனால் குற்றவாளியை ஒப்படைக்க வேண் டும் என்று இந்திய அரசாங்கம் கோரியபொழுது அமெரிக்கா அதற்கு ஆதரவு கொடுக்க மறுத்தது.

மாநாட்டைக் குலைப்பதற்கு மிரட்டல், சதி முதல் சீர் குலைவு நடவடிக்கைகள் வரை ஏகாதிபத்தியம் செய்த முயற்சி கள் தோல்வியடைந்தன. இந்தோனேஷியாவின் தலைநகரமான ஜாகர்தாவிலிருந்து நூறு கிலோமீட்டர்கள் தூரத்திலுள்ள பாந்தூங்கில் இருபத்தொன்பது நாடுகளின் பிரதிநிதிகள் கூடி னார்கள்.

நேரு ஏப்ரல் 16ந் தேதியன்று நாசருடன் ஒரே விமானத் தில் பாந்தூங்குக்கு வந்தார். இந்த மாநாடு ''சகவாழ்வு முறையில் ஒரு பரிசோதனை'', இது ''ஆசியாவுக்கு மட்டுமல்ல, உலக முழுமைக்குமே மிகவும் முக்கியமானது'' என்று அறிவித்

தார். பிறகு மாநாட்டில் கலந்து கொள்பவர்களிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளை நீக்குவதற்காக தூதுக் குழுக் களின் தலைவர்களோடு உடனடியாகப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினார்.

துரதிர்ஷ்டவசமாகப் பல கருத்து வேறுபாடுகள் ஏற்பட் டிருந்தன. ஏகாதிபத்தியத்தின் பிராந்தியக் கூட்டணிகளில் ஏற்கெனவே சேர்ந்திருந்த சில நாடுகளின் பிரதிநிதிகள் ''சர்வ தேசக் கம்யூனிச அபாயத்தைப்'' பற்றிப் பேசினார்கள், ''மேற் கத்திய ஏகாதிபத்தியத்தோடு சேர்த்து சோவியத் காலனி யாதிக்கமும் கண்டனம் செய்யப்பட வேண்டுமென்று'' கோரி னார்கள். சிலர் சமாதான சகவாழ்வின் ஐந்து கோட்பாடுகளைப் பகிரங்கமாக எதிர்த்துப் பேச விரும்பாமல், சோஷலிஸ்டு நாடுகளின் கொள்கை காரணமாக அவற்றை அமுல்நடத்த முடியவில்லை என்றார்கள். பாகிஸ்தான், துருக்கி மற்றும் இதர ஆசிய நாடுகள் இராணுவக் கூட்டணிகளில் சேர்ந் திருப்பதை நியாயப்படுத்துவதற்கும் மற்ற நாடுகள் அக்கூட் டணிகளில் சேர அங்கீகாரமளிப்பதற்கும் இந்தக் கோட் பாடுகளை ''விரிவுபடுத்த'' அல்லது ''குறை நீக்க'' முயற்சி கள் செய்யப்பட்டன. இவை எல்லாவற்றிலும் மேற்கத்திய இராஜியவாதிகளின் பங்கை நேரு கண்டார். பாந்துூங்கில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் அந்த மாநாட்டில் கெடுபிடிப் போரின் எதிரொலிகள் குறுக்கிட்டதன் பிரதிபலிப்பே என்று பின்னர் நேரு கூறினார்.

பாந்துூங் மாநாடு 1955 ஏப்ரல் 18 முதல் 24 வரை நடைபெற்றது. அந்த மாநாட்டில் முற்போக்கான வெளி நாட்டுக் கொள்கைக்கு ஆதரவான சக்திகள், காலனியாதிக்கத் தையும் ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பையும் எதிர்க்கும் நாடு களுக்கிடையே சர்வாம்சப் பொருளாதார, கலாச்சார ஒத்து ழைப்பை ஆதரித்த சக்திகள் வெற்றியடைந்தன. அது கூட்டுச் சேராத நாடுகளின் இயக்கத்தைத் தொடங்கிவைத்தது. சமா தான சகவாழ்வின் ஐந்து கோட்பாடுகளை அங்கீகரிக்க வேண்டு மென்று நேரு, பாம் வான் டோங், நாஸர் மற்றும் தேச விடுதலை இயக்கத்தின் மற்ற தலைவர்கள் மாநாட்டில் விடாப் பிடியாகவும் கோட்பாட்டு நிலையுடனும் வாதாடினார்கள். மாநாட்டில் முடிவில் வெளியிடப்பட்ட உலக சமாதானம் மற்றும் ஒத்துழைப்புப் பிரகடனம் என்ற ஆவணத்தில் அவை

இடம் பெற்றன. மாநாட்டில் கலந்து கொண்டவர்கள் பொது படைக்கலைப்பு, பெருந்திரளான மக்களை அழிக்கக் கூடிய ஆயுதங்களை உற்பத்தி செய்வதையும் சோதனை செய்வதையும் உபயோகிப்பதையும் தடைசெய்வது ஆகியவற்றுக்கு ஆதர வாகப் பேசினர்கள்.

நேரு இந்தியாவுக்குத் திரும்பியதும் முதலில் பத்திரிகை நிருபர்களின் கூட்டத்தில் பேசும் பொழுது பாந்துரங் மாநாடு மிகச் சிறப்பான வெற்றியடைந்ததாகக் கூறினர். ஆசிய மற்றும் ஆப்பிரிக்க நாடுகளின் பிரதிநிதிகள் ஒன்று கூடியது மட்டுமல்ல, பல வேறுபாடுகளைக் கொண்ட நாடுகள் கணிச மான அளவுக்குக் கருத்து உடன்பாட்டை உருவாக்கிக் கொள்ள முடிந்தது முக்கியமானது என்று சுட்டிக்காட்டினர்.

...நேரு மாஸ்கோவுக்கு விமானத்தில் செல்ல வேண்டும். டில்லியிலிருந்து மாஸ்கோவுக்கு நேரடியாக விமானத்தில் போவதென்ருல் அந்தப் பயணத்துக்கு ஆறு மணி நேரமே போதும். ஆனல் இரு நாடுகளுக்குமிடையே விமான வழிப் போக்குவரத்து இன்னும் ஏற்படவில்லை. எனவே அவருடைய விமானம் பம்பாய், கெய்ரோ, ரோம், பிராக் ஆகிய நகரங் களில் தங்கிப் போக வேண்டியிருந்தது.

சோவியத் யூனியனுக்கு அவர் செல்கின்ற விஜயத்தின் நோக்கம் மிக முக்கியமானதாக இருந்தபடியால் பிரயாண நேரத்தைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அதற்கு மாருக, சோவியத் தலைவர்களுடன் விவாதிக்க விரும்பிய பிரச்சினை களைப் பற்றி அவர் மறுபடியும் சிந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது.

இந்தியா மற்றும் இதர வளர்முக நாடுகளைப் பற்றி சோவியத் யூனியனுடைய கொள்கையை நேரு எப்பொழுதுமே நுணுக்கமாக கவனித்து வந்தார். அவர் கண்டவை ஒரு போதும் அவருக்கு ஏமாற்றத்தைக் கொடுக்கவில்லை. உலக அரங்கத்தில் சோவியத் அரசாங்கத்தின் செய்முறை நடவடிக் கைகள் அது அறிவித்த வெளிநாட்டுக் கொள்கைக் கோட்பாடு களோடு முற்றிலும் பொருந்தியிருந்தன.

சமாதான சகவாழ்வு பற்றி இந்தியா முன்வைத்த ஐந்து கோட்பாடுகளுக்கு சோவியத் யூனியன் முழு ஆதரவு கொடுக் கும் என்று பாந்துரங் மாநாட்டுக்குப் பிறகு மாஸ்கோ அறிவித்திருந்தது.

சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்யுமாறு நேருவைக் கேட்டுக் கொள்ளும் அழைப்பிதழை 1954 ஜூலை மாதத்தில் இந்தியாவுக்கு சோவியத் யூனியனுடைய தூதரான எம். ஏ. மென்ஷிகோவ் கொடுத்தார். இரு நாடுகளுக்குமிடையே வளர்ந்துவரும் நட்புறவை உறுதிப்படுத்தும் வகையில் உடன்படிக்கை செய்து கொள்வதைப் பற்றியும் சோவியத் தூதர் குறிப்பிட்டார்.

இத்தகைய பிரச்சினைகளைப் பற்றி அபிப்பிராயம் தெரிந்து கொள்வதற்காக தூதர்களைப் பயன்படுத்துவதுண்டு என்பது நேருவுக்குத் தெரியும். ஆனால் மென்ஷிகோவின் வார்த்தைகள் அதிகார முறையிலான பிரேரணை என்பதைப் போலத் தோன்றியது. நேரு வெளித் தோற்றத்துக்கு அமைதியாக இருந்தார்; ஆனால் அவருடைய கண்கள் ஆழமான திருப்தியைக் காட்டின. அழைப்பிதழுக்குத் தன்னுடைய நன்றியைத் தெரிவித்தார் நேரு. உடன்படிக்கையைப் பொறுத்தவரை கோட்பாட்டளவில் தான் அதை வரவேற்பதாகவும் அதைச் செய்வதற்கு மிகச் சிறந்த சமயத்தைப் பற்றிச் சிந்தித்து முடிவு செய்ய வேண்டும் என்றும் கூறினார்.

சோவியத் தூதருடைய பிரேரணைகளைப் பற்றி அவர் சிந்தித்தார். இந்திய அரசாங்கத்துக்கு முன்னால் மிகச் சிக்கலான வரலாற்றுக் கடமை இருந்தது: நாட்டின் கனரகத் தொழிலின் முக்கியமான கிளைகளில் அரசுத் தொழில் நிறுவனங்களை ஏற்படுத்தி பொருளாதாரத் துறையில் ஏகாதிபத்திய ஏகபோகங்களைச் சார்ந்திருக்கும் நிலையை அகற்ற முயற்சி செய்ய வேண்டும், பல பிரதேசங்களில் இன்னும் நிலப்பிரபுத்துவப் பொருளாதார அமைப்பைக் கொண்டிருக்கின்ற பின்தங்கிய, விவசாய நாட்டை வளர்சியடைந்த, தொழில்வளம் நிறைந்த நாடாக மாற்ற வேண்டும்.

தன்னுடைய அரசாங்கம் இந்தத் திட்டங்களை அமுல் நடத்துவதில் மேற்கு நாடுகள் விருப்பத்தோடு ஒத்துழைக்கப் போவதில்லை என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். அவர் பிரிட்டனுடைய உதவியை எதிர்பார்க்க முடியாது. அந்த நாடு தன்னுடைய முன்னாளைய காலனி ஒரு விவசாய நாடாக, தனக்கு மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்துகொண்டிருக்கும் நாடாகவே நீடிக்க வேண்டும் என்று விரும்பியது. அமெரிக்க ஏகபோகவாதிகளிடமிருந்தும் உதவியை எதிர்பார்க்க முடி

யாது. அவர்கள் தங்களுடைய பொருள்களைக் கொண்டுவந்து விற்பனை செய்வதற்கு ஒரு இலட்சியச் சந்தையாக மட்டுமே இந்தியாவைக் கருதினார்கள். இந்தியாவைத் தொழில்மயமாக்குவதில் உதவி செய்வதற்கு இந்த நாடுகள் ஒத்துக்கொண்டால் கூட, இந்திய அரசாங்கம் தன்னுடைய சுயேச்சையான வெளிநாட்டுக் கொள்கையைக் கைவிட வேண்டும், உலக ஏகாதிபத்தியத்தின் போர்த்திட்டப் பாதைக்குள் வர வேண்டும் என்ற நிபந்தனையைப் போடுவார்கள்.

நேரு சோவியத் யூனியனுடைய உதாரணத்தைப் பற்றி மீண்டும் மீண்டும் சிந்தித்தார், சமீப வருடங்களில் சோவியத் யூனியனுக்குப் போய்விட்டு வந்தவர்களோடு அடிக்கடி விவாதித்தார். இந்தியாவில் தேசிய தொழில்துறையை உருவாக்குவதற்குப் பயனுள்ள, தன்னலமற்ற உதவியை சோவியத் யூனியன் மட்டுமே கொடுக்கும் என்று முன்னெப்போதையும் காட்டிலும் அதிகமாக நம்பத் தொடங்கினார். அத்தகைய உதவி கிடைக்கும் வாய்ப்பைப் பற்றி விசாரிக்குமாறு தனக்கு மிகவும் நெருங்கிய சகாக்களிடம் கூறினார். ரபி அகமத் கித்வாய், பி.ஜி. ரெட்டி, மற்ற சில அமைச்சர்கள் இதன் தொடர்பாக சோவியத் தூதரகத்தை நாடினார்கள். இந்திய அரசாங்கம் பொருளாதார ஒத்துழைப்பு சம்பந்தமாக அக்கறையோடிருக்கிறது என்று சோவியத் தூதர் மாஸ்கோவுக்குத் தெரிவித்தார். விரைவில் சாதகமான பதில் வந்தது. அது சம்பந்தப்பட்டவர்களுக்கு உடனே அனுப்பப்பட்டது.

சோவியத் யூனியனுடைய உதவியோடு அரசுத் தொழில் துறையை நிறுவ வேண்டுமென்று பிரதமர் நேருவும் அவருடைய நெருங்கிய சகாக்களும் தயாரித்த திட்டங்களை மேற்கத்திய வல்லரசுகள் எதிர்த்தன. அது எதிர்பார்க்கப்பட்டது தான். இந்திய அரசாங்கம் சோவியத் உதவியை ஏற்றுக் கொள்ளுமானால் ''வெளிநாடுகளைச் சேர்ந்த முதலாளிகள் இந்தியாவில் முதலீடு செய்வதில் அக்கறை காட்ட மாட்டார்கள்'' என்று அமெரிக்க, பிரிட்டிஷ் ஏகபோகவாதிகள் பயமுறுத்தினார்கள். பிரிட்டிஷ் மரபைச் சேர்ந்த, பெரிய முதலாளிகளின் பிரதிநிதிகளான சில இந்திய அரசியல்வாதிகள் சோவியத் யூனியனோடு பொருளாதார உதவுகளை வளர்ப்பதை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ எதிர்த்தார்கள். வலதுசாரி பூர்ஷ்வா பத்திரிகைகள் நேருவை மூர்க்கத்தன

மாகத் தாக்கி எழுதத் தொடங்கின. இத்தகைய சூழலில் நேரு மிக அதிகமான அளவுக்கு அடக்கத்தையும் நிதானத்தையும் கடைப்பிடிக்க வேண்டியிருந்தது. இதை மிகச் சிறந்த முறையில் அவர் நிறைவேற்றினர். அவர் தனக்கே உரிய வாதத்திற மையோடு எதிரிகள் வாயை மூடும்படி செய்தார், ஊசலாடு பவர்களைச் சாமர்த்தியமாகத் தன் பக்கத்துக்கு இழுத்துக் கொண்டார், தன்னுடைய ஆதரவாளர்களின் உறுதியைப் பலப்படுத்தினர். ஏகாதிபத்தியப் பிரச்சாரத்துக்கு இரையாகி விட்ட தன்னுடைய கட்சிக்காரர்கள் சிலருக்கு மறுபடியும் புரிய வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டபொழுதுதான் அவர் குறிப்பிடத்தக்க அளவுக்கு மலைத்தார். சோவியத் யூனியனுடைய உதவியோடு இந்தியாவில் பொருளாதார மாற் றங்களை ஏற்படுத்த வேண்டிய அவசியத்தை அவர்கள் அங்கீ கரித்த மாதிரித் தோன்றியது; ஆனல் ''இந்தியாவின் மேல் சிகப்பு நட்சத்திரத்தின் நிழல் விழுவதைப்'' பற்றி அவர்கள் அச்சமடைந்தார்கள். மாஸ்கோவின் கொள்கை இன்னும் மர்ம மாகத்தான் இருக்கிறது, ''இரும்புத் திரை'' லேசாகத்தான் விலகியிருக்கிறது, இந்தியாவைப் போன்ற நாடுகளிடம் கிரெம் ளின் தலைவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள் என்று யாருக்குமே தெரியாது என்று பிரிட்டிஷ்காரர்களும் அமெரிக் கர்களும் சொல்லிக் கொண்டிருந்த ஊகங்கள் அவர்களை ஓரளவுக்கு பாதித்திருக்க வேண்டும். இந்தியா ஏற்கெனவே மேற்கு நாடுகளோடு ''நெருக்கமான'' பிணைப்புகளைக் கொண் டிருக்கிறது, இந்த வளர்ச்சியடைந்த ''கூட்டுக்குள்'' இந்தி யாவுக்கு மறைமுக ஆபத்தைக் கொண்டிருக்கக் கூடிய புதிய சக்தி களை அனுமதிப்பது புத்திசாலித்தனமல்ல என்று சில மேற் கத்திய தலைவர்கள் வாதிட்டார்கள்.

நேரு சோவியத் பிரதிநிதிகளை அடிக்கடி சந்தித்துப் பேசினர். அந்த உரையாடல்களில் தன்னுடைய முடிவுகள் சரியானவைதானு என்று சரிபார்த்துக் கொண்டார், சோவியத் யூனியனுடைய பொருளாதாரம் மற்றும் அரசியலின் குறிப்பிட்ட அம்சங்களைப் பற்றி அதிக விவரங்கள் வேண்டும் என்று கேட்டார். அவர் உரத்த சிந்தனையில் ஈடுபட்டார், சந்தேகங்களை மறைக்காமல் விளக்கங்களைக் கோரினர். சோவியத் பிரதிநிதிகள் எப்படி பதிலளிக்கிருர்கள் என்று நுணுக்கமாக கவனித்தார். அவர்கள் எதையும் மறைக்காமல்,

புதிர் போடாமல் வெளிப்படையாகப் பேசினார்கள். மேற்கு நாடுகளைச் சேர்ந்த இராஜியப் பிரதிநிதிகளிடம் அவருடைய அனுபவம் வேறு விதமாக இருந்தது.

சோவியத் தூதரோடு பேசிக்கொண்டிருந்த ஒரு சந்தர்ப்பத்தில் அவர் ஓரளவுக்குக் கவலையோடிருப்பதாக நேருவுக்குத் தோன்றியது. உடனே அவர் நேரடியாகக் கேட்டார்: ''தூதர் அவர்களே! நீங்கள் எதைப் பற்றிக் கவலைப்படுகிறீர்கள்?''

இந்தக் கேள்வியைக் கேட்டு மென்ஷிகோவ் சிறிதுகூட ஆச்சரியமடையவில்லை. ஏனென்றால் நேரு எதையும் நுணுக்கமாக கவனிக்கக் கூடியவர் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

''ஆம், பிரதமர் அவர்களே! எனக்குக் கவலையாகத்தான் இருக்கிறது. உங்கள் மந்திரி சபையைச் சேர்ந்த சில அதிகாரிகள் சோவியத் யூனியனோடு பொருளாதார ஒத்துழைப்பு என்ற கருத்தில் ஆர்வமில்லாதிருப்பதோடு அதற்கு எதிர்ப்பாகக் கூட இருக்கிறார்கள்'' என்று மென்ஷிகோவ் பதிலளித்தார்.

நேருவின் நெற்றியிலிருந்த சுருக்கங்கள் மறைந்தன; அவர் முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. ''அதிகாரிகள் ஏதாவதொரு விவரத்தில் அக்கறை காட்டலாம், தங்களுடைய அதிருப்தியைக் கூடத் தெரிவிக்கலாம்.'' அவர் பொருட்செறிவோடு பேச்சை நிறுத்தினார். ''ஆனால் முடிவு செய்வது அவர்களல்ல'' என்றார்.

இதன் பிறகு சீக்கிரத்திலேயே இந்திய உப ஜனாதிபதி எஸ். ராதாகிருஷ்ணன் சோவியத் தூதரிடம் பின்வருமாறு கூறினார்: ''ஒரு தொழிற்சாலையை நிர்மாணிப்பதைப் பற்றி சோவியத் யூனியனுடன் உடன்படிக்கை செய்து கொள்வதென்று பிரதமர் உறுதியாக முடிவு செய்திருக்கிறார். இந்தியாவில் பெருந்தொழிற்சாலைகளை அரசுத் துறையில் தொடங்குவதற்கு அவர் பொதுவான ஆதரவளிக்கப் போகிறார்.''

சோவியத் யூனியனுடைய உதவியோடு பிலாயில் உருக்கு மற்றும் உலோகத் தொழிற்சாலையை நிர்மாணிக்கின்ற ஒப்பந்தம் 1955 பிப்ரவரி 2ந் தேதியன்று கையெழுத்திடப்பட்டது. அந்த ஒப்பந்தத்தின் ஷரத்துக்களில் மேற்கு நாடுகள் கொடுக்க முன்வந்ததைக் காட்டிலும் அதிகமான சலுகைகள் இடம் பெற்றிருந்தன. உதாரணமாக, முதலாளித்துவ நிறுவனங்கள்

கேட்ட வட்டியில் பாதியளவுக்கு சோவியத் யூனியன் கடன் கொடுத்து உதவியது, அந்தத் தொழிற்சாலையின் நிர்வாகத்தில் பங்கு தர வேண்டும் என்று கேட்கவில்லை.

சுதந்திரமான தேசியப் பொருளாதாரத்தை உருவாக்கும் பாதையில் இந்திய அரசாங்கம் எடுத்துவைத்த முதல் முக்கிய மான காலடி பிலாய் ஒப்பந்தம் என்று நேரு கருதினர். சோவியத்-இந்திய வர்த்தக ஒப்பந்தம் (டிசம்பர் 2,1953) மற்றும் பிலாய் ஒப்பந்தம் எதிர்காலப் பொருளாதார ஒத்து ழைப்புக்கு நம்பகமான அடிப்படை என்று அவர் கருதினர்.

1955 ஜூன் மாதத்தில் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்ய விரும்புவதாக மார்ச் மாதத்தில் நேரு சோவியத் தூதரிடம் கூறினர்.

இரு நாடுகளின் வெளிநாட்டு அமைச்சகங்களும் அவர் வருகைக்குத் தயாரிக்கும் வேலையில் வேகமாக ஈடுபட்டன. சோவியத் யூனியனில் பிரதம மந்திரியின் சுற்றுப் பயணத் தைப் பற்றிய நகல் திட்டம் விரைவில் ஏற்றுக் கொள்ளப் பட்டது.

நேரு சுற்றுப் பயணத் திட்டத்தை அங்கீகரித்தார். ஆனல் அதில் ஸாமர்க்கான்டைச் சேர்த்துக் கொள்ள முடி யுமா என்று சோவியத் தூதரிடம் கேட்டார். அந்த நகரத் தின் வரலாறும் அங்கேயுள்ள பழங்காலச் சின்னங்களும் நெடுங்காலமாகவே நேருவின் கவனத்தை ஈர்த்துவந்திருக் கின்றன. தேசியச் சிறுபான்மையினருடைய பிரச்சினைகளுக்கு சோவியத் யூனியன் எப்படித் தீர்வு கண்டது, மத்திய ஆசியா விலுள்ள மக்களினங்கள் அடைந்திருக்கும் பொருளாதார, கலாச்சார வெற்றிகள் ஆகிய பிரச்சினைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதில் அவர் எப்பொழுதுமே அதிகமான ஆர்வத்தைக் காட்டிவந்திருக்கிறர்.

அவர் இயன்ற அளவுக்கு அதிகமான சோவியத் உலோகத் தொழிற்சாலைகள், பொறியியல் நிறுவனங்களைப் பார்க்க விரும் புவதாகவும் தெரிவித்தார். பொருளாதாரத்தைத் திட்டமிடு வதைப் பற்றிய பிரச்சினைகளில் தனக்கு மிகவும் அக்கறை இருப்பதை சோவியத் தூதரிடம் நினைவுபடுத்தினர். அவர் களுக்கு ஆட்சேபமில்லை என்றல் சோவியத் தேசிய பொரு ளாதாரத் திட்டமிடும் அமைப்பைப் பற்றி அதிகமாகத் தெரிந்து கொள்ள விரும்புவதாகக் கூறினர்.

சுற்றுப் பயணத் திட்டத்தில் பிரதம மந்திரி அதிகமான இடங்களுக்குப் போவதைக் குறைத்து அவர் ஓய்வெடுக்க அதிக நேரத்தை ஒதுக்க வேண்டும் என்று ஒரு இந்திய அதிகாரி ஆலோசனை கூறினார். நான் விடுமுறைக்காக சோவியத் யூனியனுக்குப் போகவில்லை சோவியத் மக்களுடைய வாழ்க்கையைப் பற்றி இயன்ற அளவுக்கு முழுமையாகத் தெரிந்து கொள்வதற்காகவே போகிறேன் என்று நேரு பதிலளித்தார்.

நேரு எழுதிய **இந்திய தரிசனம்** என்ற புத்தகத்தை சோவியத் யூனியனில் வெளியிடுவதற்கு அனுமதியளிக்குமாறு சோவியத் தூதர் நேருவிடம் கேட்டார்.

சோவியத் மக்கள் தன்னுடைய புத்தகத்தைப் படிப்பது தனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கும், ருஷ்யப் பதிப்புக் கென்று மகிழ்ச்சியோடு முன்னுரை எழுதித் தருகிறேன் என்று நேரு கூறினார்.

சோவியத் நாடு முக்கிய விருந்தினரை வரவேற்பதற்குத் தயாராயிற்று. அந்த சமயத்தில் மாஸ்கோ, லெனின்கிராட் மற்றும் இதர நகரங்களின் கலாச்சார வாழ்க்கை இந்திய உணர்ச்சியோடு பொலிந்தது. மாஸ்கோவில் சோவியத் நுண் கலைகள் பேரவையிலும் லெனின்கிராடில் ஹெர்மிடாஜ் பொருட்காட்சியகத்திலும் இந்திய மக்களின் பண்பாட்டை யும் கலைகளையும் விளக்குகின்ற கண்காட்சிகள் நடை பெற்றன. தொன்மை மிக்க இந்தியக் கலைச் சின்னங்களிலும் இந்தியாவின் இயற்கை அழகையும் மக்களின் வாழ்க்கையையும் சித்தரிக்கின்ற இந்திய, ருஷ்ய, சோவியத் கலைஞர்களின் ஓவியங்களிலும் சோவியத் மக்கள் அதிகமான அக்கறை காட் டினார்கள். கம்பளங்கள், மென்துகில், மரக்கட்டையிலும் தந்தத்திலும் உலோகத்திலும் செய்யப்பட்ட வேலைப்பாட மைந்த சிற்பங்கள் மற்றும் அரிய கலைப் பொக்கிஷங்களைத் தயாரித்த இந்தியக் கைவினைஞர்களின் திறமையை எல்லோரும் பாராட்டினார்கள்.

**1955** மே மாதத்தில் மாபெரும் ருஷ்யப் பயணியான அபனாஸி நிக்கிதினுக்கு வோல்கா நதிக் கரையிலுள்ள காலினின் நகரத்தில் நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டது. அவர் பதினைந் தாம் நூற்றாண்டிலேயே இந்தியாவுக்குச் சென்ற முதல் ருஷ்யர். அவர் இந்தியாவை மிகவும் நேசித்தார். மூன்று

கடல்களுக்கு அப்பால் என்று அவர் எழுதிய பயணப் புத்தகத்தில் இந்தியாவைப் பற்றி உற்சாகத்தோடு எழுதியிருக்கிறார்.

1955 ஜூன் மாதத்தில் மாபெரும் கவிஞரும் எழுத்தாளருமான இரவீந்திரநாத் தாகூரின் தொகுப்பு நூல்களின் எட்டு தொகுதிகளில் முதல் தொகுதி சோவியத் யூனியனில் வெளியிடப்பட்டது. சோவியத் ஆட்சிக்காலத்தில் இந்த மாபெரும் இந்திய எழுத்தாளருடைய நூல்கள் டஜன் கணக்கான பதிப்புகளில் வெளியாகியிருந்தன. ஆனால் அப்போது முதல் தடவையாக அவருடைய நூல்கள் ஒரே தொகுப்பில் வெளியிடப்பட்டிருந்தன. இத்தொகுப்பின் கடைசி நூலில், 1930ல் தாகூர் சோவியத் யூனியனுக்கு வருகையளித்த பொழுது எழுதிய ருஷ்யாவிலிருந்து எழுதிய கடிதங்கள் வெளியிடப்பட்டன.

நேரு வருவதற்குச் சற்று முன்பாக இந்திய தரிசனத்தின் ருஷ்ய மொழிபெயர்ப்பு வெளியிடப்பட்டது.

அப்புத்தகத்தின் ருஷ்யப் பதிப்புக்காக எழுதிய முன்னுரையில் நேரு பின்வருமாறு கூறினார்: ''நான் எழுதிய இந்திய தரிசனம் என்ற புத்தகம் ருஷ்ய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்படுவதைப் பற்றி நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நான் சோவியத் யூனியனைப் பற்றி, இந்த மாபெரும் நாட்டைப் பற்றி அதிகமாகப் படித்திருக்கிறேன்; அவற்றையெல்லாம் நேரில் பார்க்க, மொத்த உலகத்தின் எதிர்காலத்திலும் அதிகமான தாக்கத்தை வகிக்கின்ற இந்தப் பரந்த, பிரம்மாண்டமான நாட்டை நம் காலத்தில் தோற்றுவிக்கப் பாடுபட்ட சக்திகளைப் பற்றி சிறிதளவாவது தெரிந்து கொள்வதற்காக சில நாட்களில் வரவிருக்கிறேன்.''

நேரு சோவியத் யூனியனுக்குத் தன்னுடைய விஜயத்தைப் பற்றி பத்திரிகையாளர்களுக்கு அதிகமான பேட்டிகள் கொடுத்தார். ''தவறான எண்ணங்கள் எதுவுமில்லாமல் நான் சோவியத் யூனியனுக்குப் போவது மட்டுமல்ல, திறந்த மனதோடு, சோவியத் மக்களின் உணர்ச்சிகளை ஏற்று மறுமொழி கூறத் தயாராகப் போகிறேன். அவர்களுடைய சாதனைகள் எல்லாவற்றைப் பற்றியும் கேட்க விரும்புகிறேன், என் கண்களாலேயே எல்லாவற்றையும் பார்க்க விரும்புகிறேன்'' என்று ஒரு நிருபர் மாநாட்டில் கூறினார்.

ஜூன் 5ந் தேதியன்று நேரு தன் மகள் இந்திரா காந்தியுடன் மாஸ்கோவுக்குப் புறப்பட்டார். அவர்கள் சென்ற விமானம் பம்பாயில் சிறிது நேரம் தங்கிய பிறகு கெய்ரோவை நோக்கிப் பறந்தது. அங்கே எகிப்திய அரசாங்கத் தலைவரான நாஸருடன் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. பிறகு பத்திரிகையாளர்கள் நேருவைச் சூழ்ந்துகொண்டார்கள்.

சோவியத் தலைவர்களுடன் சமாதானம் மற்றும் சர்வ தேசப் பதட்ட நிலைத் தணிவு என்ற அடிப்படையான பிரச்சினையைப் பற்றி விவாதிக்கப் போகிறேன் என்று அவர்களிடம் கூறினார். இந்தியாவுக்கும் சோவியத் யூனியனுக்குமிடையே வர்த்தக மற்றும் பொருளாதார உறவுகளைப் பற்றிய பிரச்சினைகளும் விவாதிக்கப்படும். இவை தவிர, திட்டமிடுதலில் சில பிரச்சினைகளைப் பற்றியும் விவாதிக்க விரும்புவதாகக் கூறினார். இந்தியாவின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிவடையப் போகிறது, இந்தியப் பொருளாதாரம் வளர்ச்சியடையக் கூடிய முறையில் புதிய ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரிக்கப் போகிறோம் என்றார்.

விமானத்தில் பிரயாணிகள் பகுதி அமைதியாக இருந்தது. நேருவின் சகாக்கள் நீண்ட பிரயாணத்தால் களைப்படைந்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அரைக் கண்கள் மூடிய நிலையில் நேருவின் முகம் உணர்ச்சியைக் காட்டவில்லை. ஒருவேளை அந்தக் கணத்தில் அவருடைய வரலாற்று உணர்வு இரு நாடுகளுக்கும் நட்புறவுகளை ஏற்படுத்திய முதல் பிரயாணிகளின் பெயர்களை நினைவுபடுத்திக் கொண்டிருக்கலாம்: கோரெஸ்மைச் சேர்ந்த மாபெரும் அறிஞரும் சிந்தனையாளருமான அல்-பிரூனி ஒன்பது நூற்றாண்டுகளுக்கும் அதிகமான காலத்துக்கு முன்பே இந்தியாவுக்கு வந்து அதன் விஞ்ஞானம், பண்பாடு, மொழிகள் மற்றும் பழக்க வழக்கங்களைப் பற்றி ஆழமான ஆராய்ச்சிகளைச் செய்தார்; அபனாஸி நிக்கிதினுக்கு இந்தியா இரண்டாம் தாய் நாடு என்று கூடச் சொல்லலாம்; ருஷ்யப் பயணியான எஃப். யெ. யெப்பிரெமோவ் 1774 முதல் 1782 முடிய எட்டு வருடங்கள் இந்தியாவில் இருந்தார். அவர் இந்தியாவைப் பற்றி ஏராளமாக எழுதினார். இதில் இந்தியர்களின் பாலான ஆழ்ந்த மரியாதை ஊடுருவியிருந்தது. பிரிட்டிஷ் பயணிகளும் மதப்

பிரச்சாரகர்களும் ''மர்மமான கிழக்கைப் பற்றி,'' அங்கே யுள்ள காட்டு மிராண்டித்தனமான பழக்கவழக்கங்களையும் பயங்கரங்களையும் பற்றி எழுதியவற்றுக்கும் யெப்பிரெமோவ் எழுதியவற்றுக்கும் எவ்வளவு வேறுபாடு! பாடகரும் நாடக ஆசிரியருமான கெராஸிம் லேபெதெவ் பதினெட்டாம் நூற் றாண்டின் முடிவில் கல்கத்தாவில் ஒரு நாடகக் குழுவை ஏற்படுத்தினர். பதினேழாம் நூற்றாண்டின் முதற்பாதியில் வோல்கா நதிக்கரையில் குடியேறிய இந்திய வர்த்தகர்களை மறக்க முடியுமா? 1625ல் அஸ்ட்ரகானில் கவர்னரின் உத்தர வுப்படி அவர்களுக்காக ஒரு முகாம் அமைக்கப்பட்டது. ருஷ்ய அரசாங்கம் அவர்கள் தொழில் நடத்த ஊக்கமளித்தது. 1722ல் அஸ்ட்ரகானுக்கு வந்த மாபெரும் பீட்டர் அவர் களுக்குப் பேட்டியளித்து அன்போடு உரையாடினர். அந்த வர்த்தகர்களின் வாரிசுகள் 1812ல் நெப்போலியன் துருப்பு களை எதிர்த்துப் போர் செய்த ருஷ்ய இராணுவத்துக்குப் பெருந்தொகைகளை நன்கொடையாகக் கொடுத்தார்கள்.

ருஷ்யாவையும் இந்தியாவையும் சேர்ந்த முற்போக்கான தலைவர்கள் கொடுங்கோன்மைக்கும் எதேச்சாதிகாரத்துக்கும் எதிராக இந்திய, ருஷ்ய மக்களின் போராட்டத்தை எப் பொழுதும் ஆழமான அனுதாபத்தோடு கவனித்து வந்தார் கள். தங்கள் காலத்தின் மிகச் சிறந்த மனிதாபிகளான லேவ் தோல்ஸ்தோயும் மகாத்மா காந்தியும் எழுதிய கடிதங் கள் இரண்டு நாடுகளிலுமிருந்த முற்போக்கான வட்டாரங் கள் ஜாரிஸ்ட் ருஷ்யாவிலும் காலனி நாடான இந்தியாவிலும் மக்களின் எதிர்காலத்தைப் பற்றிக் கொண்டிருந்த ஆழமான, தொடர்ச்சியான அக்கறையைப் பிரதிபலிக்கின்றன.

...மாஸ்கோ நேரத்தின்படி 18.00 மணிக்கு விமானம் வந்திறங்கியது. படிகள் உருட்டிக் கொண்டு வந்து நிறுத்தப் பட்டன. நேரு பழுப்பு நிறத்தில் ஷெர்வானி அணிந்து அதன் பொத்தான் துவாரத்தில் சொருகப்பட்ட ரோஜா மலரோடு வெளியே வந்தார். விமான நிலையத்தில் வரவேற்புக் காகத் திரண்டிருந்த ஏராளமான மாஸ்கோவாசிகள் அந்த நேரத்தில் எதிர்பாராத விதத்தில் கொடிகளையும் மலர்ச் செண்டுகளையும் ஆட்டியபடியே விமானத்தை நோக்கி ஓடினர் கள். வரவேற்புக்குப் பொறுப்பான சோவியத் பிரதிநிதிகளில் ஒருவரோடு பிறகு பேசும் பொழுது மக்கள் ''ஒழுங்கு

குலைந்த'' முறையில் தன்னை வரவேற்றது, அவர்கள் தன் மீது கொண்டிருக்கும் அன்பை மனப்பூர்வமான வகையில் எடுத்துக்காட்டியது தன்னை நெகிழச் செய்தது என்று நேரு கூறினார்.

நேரு இளைஞரைப் போல படிகளில் வேகமாக இறங்கி வந்தார். இளம் பயனீர்கள் நேருவுக்கும் அவருடைய குழுவைச் சேர்ந்தவர்களுக்கும் பெரிய மலர்ச் செண்டுகளைக் கொடுத்தார்கள். சோவியத் தலைவர்கள் அவரைத் தழுவி வரவேற்றார்கள். இரு நாடுகளின் தேசீய கீதங்களும் வாசிக்கப் பட்டன. நேரு அணிவகுப்பு மரியாதையைப் பார்வையிட்டார். பிறகு ஒலிபெருக்கி முன்பாகச் சென்றார்.

''இங்கே வர வேண்டும், சோவியத் யூனியனுக்கு வர வேண்டும் என்று நெடுங்காலமாக நான் நினைத்திருந்தேன். இந்தப் பிரபலமான, குறிப்பிடத்தக்க நகரத்துக்கு வர வேண்டுமென்று நெடுங்காலமாக விரும்பியிருந்தேன். அந்த விருப்பங்கள் இன்று நிறைவேறியுள்ளன. என்னை ஒரு பயணியாகத் தான் கருதுகிறேன். உங்களுடைய அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் மிகவும் சிறந்த நல்வாழ்த்துக்களைக் கொணர்ந்துள்ள பயணியாகவே இங்கு வந்திருக்கிறேன். உங்களைப் பற்றி மேலும் சிறப்பாகத் தெரிந்து கொள்வதற்காக இங்கே வந்திருக்கிறேன். என்னுடைய வருகை நம்முடைய உறவுகளைப் பலப்படுத்துமென்று நம்புகிறேன். எனக்கு அன்பும் நட்புணர்ச்சியும் நிறைந்த வரவேற்பளித்ததற்கு நன்றி கூறுகிறேன்.''

அவர் அலங்காரமான வார்த்தைகளை உபயோகிக்கவில்லை; அவை இதயத்தின் ஆழத்திலிருந்து வெளிவந்தன. அவற்றைக் கேட்ட மக்கள் ஆரவாரத்தோடு கை தட்டினார்கள். அந்த உணர்ச்சிமயமான வரவேற்புக்கு அவர் தன்னுடைய நாட்டின் மரபைப் பின்பற்றி ''நமஸ்தே'' என்று கூறிவிட்டு சிரித்துக் கொண்டு உணர்ச்சி வசப்பட்டவராகக் காரை நோக்கிச் சென்றார். சாலைகள் வரவேற்பு வளைவுகளாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. இந்திய, சோவியத் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. சாலைகளின் இரு மருங்கிலும் மாஸ்கோவாசிகள் திரண்டு நின்று இந்திய மக்களின் பிரதிநிதியைக் கோலாகலமாக வரவேற்றார்கள்.

கார்கள் வரிசையாக, மெதுவாக நகர்ந்து சென்றன. சாலைகளில் நின்று கொண்டிருந்த மக்களின் முகங்களைக்

கவனிக்க நேருவுக்கு நேரமிருந்தது. அவர்களுடைய முகங்கள் உண்மையான மகிழ்ச்சியைக் காட்டின. மாஸ்கோ நகரமக்கள் அனைவருமே தெருக்களில் நின்று கொண்டிருப்பதைப் போலத் தோன்றியது. ''ருஷ்யர்களும் இந்தியர்களும் சகோதரர்களே'' என்று முழக்கங்கள் இடப்பட்டன. இதுவரை சோவியத் யூனியனில் எந்த வெளிநாட்டுத் தலைவருக்கும் இவ்வளவு சிறந்த வரவேற்புக் கொடுக்கப்படவில்லை என்று இந்தியாவின் செய்தித்தாள்கள் அப்பொழுது எழுதின.

நேருவின் சோவியத் சுற்றுப் பயணத்தை இந்தியா மட்டு மல்ல, உலக முழுவதுமே அக்கறையோடும் கவனத்தோடும் பார்த்துக்கொண்டிருந்தது. அது வரலாற்று முக்கியத்துவம் கொண்டிருப்பதாகக் கருதப்பட்டது.

ஜூன் 8ந் தேதியன்று கிரெம்ளினில் சோவியத் தலைவர் களுடன் பேச்சுவார்த்தைகள் தொடங்கின. இதற்கு முன்பு பல அரசுகளையும் சேர்ந்த பிரபலமான தலைவர்களோடு நேரு பேச்சுவார்த்தைகள் நடத்தியிருக்கிறார். மேற்கு நாடுகளின் இராஜதந்திரத்தின் ''நெகிழ்ச்சியைப்'' பற்றி அவருக்கு அதிக மான அனுபவம் உண்டு. அவர்களது பிரதிநிதிகள் அவநம் பிக்கையோடும் சந்தேகத்தோடும் நடந்துகொள்வதையும் அவர்களுடைய அகம்பாவத்தையும் கவனித்திருக்கிறார். ஒரு பிரச்சினையை விவாதிக்கும்பொழுது அதன் அடிப்படையைத் தவிர்த்துவிட்டு தங்களுடைய சொந்தக் கருத்தோட்டத்தைத் திணிப்பதற்கு தொடர்ந்து முயற்சிகளில் ஈடுபடுவதை அவர் பார்த்திருக்கிறார்.

கிரெம்ளினில் நடைபெற்ற பேச்சுவார்த்தைகளில் மனப் பூர்வமான அன்பு, உதவி, நம்பிக்கை நிறைந்த சூழலைக் கண்டார். இந்திய அரசாங்கத்தின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளை அவர் விளக்கிக் கூறியபொழுது சோவியத் தலைவர்கள் அனுதாபத்தோடு கேட்டுக்கொண்டிருப்பதைக் கவனித்தார். இந்தியாவை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளைப் பற்றி சோவியத் தலைவர்கள் நன்கு புரிந்து கொண்டிருக் கிறார்கள் என்பது அவர்களுடைய கேள்விகளிலிருந்து தெரிந் தது. இந்தப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு, குறிப்பாகப் பொரு ளாதாரத் துறைக்கு சாத்தியமான எல்லா உதவிகளையும் செய்ய அவர்கள் கோட்பாட்டளவில் தயாராக இருந்தார் கள், நட்புணர்ச்சியோடு, ஒளிவுமறைவில்லாத முறையில்

விவாதம் நடைபெற்றது. கிழக்கு நாடுகளுக்கும் மேற்கு நாடுகளுக்குமிடையே பதட்ட நிலையைத் தணித்தல், சமாதான சகவாழ்வு போன்ற அடிப்படையான சர்வதேசப் பிரச்சினைகளைப் பற்றிப் பேசினார்கள். அமெரிக்க அரசாங்கம் பலத்தை அடிப்படையாகக் கொண்ட கொள்கையைப் பின்பற்றுவதைப் பற்றி சோவியத் தலைவர்கள் கவலையைத் தெரிவித்தார்கள்.

ஒரு பலசாலி எல்லா நேரங்களிலும் தன்னுடைய பலத்தை ஏன் காட்ட வேண்டும் என்பது தனக்குப் புரியவில்லை என்று நேரு கூறினார். பிறகு அமெரிக்கக் கொள்கையைப் பற்றி அவர் பேசினார். அது தெளிவில்லாமல் இருக்கிறது, காங்கிரஸ் கோஷ்டிகளின் நிர்ப்பந்தங்கள் மற்றும் ஜனாதிபதி தேர்தல்கள் அந்தக் கொள்கையை விருப்பப்படி மாற்றிவிட முடியும்; அமெரிக்கர்கள் திடீரென்று எதைப் பற்றியாவது பரபரப்படைந்து விடுகிறார்கள், சிறிது காலத்துக்குப் பிறகு அதை முற்றிலும் மறந்து விடுகிறார்கள் என்று நேரு கூறினார். மக்கார்த்தியும் அவருடைய கோஷ்டியும் சமீபத்தில் முக்கியத்துவத்தை இழந்தது, டல்லசுக்கும் ஐசன் ஹோவருக்கும் இடையில் கருத்து வேறுபாடுகள், ஐசன் ஹோவர் அதிகச் சமரசமான கொள்கையைக் கடைப்பிடிப்பது ஆகிய நம்பிக்கையளிக்கும் போக்குகளும் அமெரிக்காவில் ஏற்பட்டிருக்கின்றன என்று அவர் குறிப்பிட்டார். யுத்தத்துக்கு எதிரான போக்குகள் அமெரிக்காவிலும் இருக்கின்றன, சமாதானத்தை ஆதரிக்கும் சக்திகளை எப்படி பலப்படுத்துவது என்பதே பிரச்சினை என்று நேரு சுட்டிக்காட்டினார். பிரிட்டன் எப்பொழுதும் அமெரிக்காவை ஆதரிப்பதாகத் தோன்றுகிறது, ஆனால் பிரிட்டனும் பிரான்சும் சில சமயங்களில் தனிப்பாதையைப் பின்பற்றக் கூடியவை என்பதை ஜினீவா மாநாடு எடுத்துக்காட்டியது. ''அமெரிக்கா இல்லாமல் ஐரோப்பா நீடிக்க முடியாதென்றால், ஐரோப்பா இல்லாமலும் அமெரிக்கா நீடிக்க முடியாது'' என்று பிரிட்டனில் அமைச்சராக இருந்த எர்னெஸ்ட் பெவின் கூறியதை நேரு நினைவுபடுத்தினார்.

இந்தியாவுக்குத் திரும்புவதற்கு முன்னால் லண்டனுக்கு விஜயம் செய்யுமாறு பிரிட்டிஷ் பிரதமர் அந்தோணி ஈடனிடமிருந்து தனக்குக் கடிதம் வந்திருப்பதாக நேரு தெரிவித்தார். உலக யுத்தம் முடிந்த பிறகு சமாதானத்துக்கான

வாய்ப்புக்கள் முன்னெப்போதுமிருந்ததைக் காட்டிலும் தற் பொழுது சிறப்பாக இருப்பதாகத் தான் கருதுவதாக ஈடன் தன்னுடைய கடிதத்தில் எழுதியிருந்தார். எனவே ஜினீவாவில் தாங்கள் தனிமைப்பட்டு விடலாம் என்று சோவியத் தலைவர் கள் அஞ்ச வேண்டியதில்லை என்று நேரு கூறினர். பிரிட்டனும் பிரான்சும் சமாதானத்துக்கு உதவி புரியலாம், டல்லசைக் காட்டிலும் ஐசன்ஹோவர் ஆலோசனைகளைக் கேட்கக்கூடிய வராக இருக்கிறார். அதே சமயத்தில் அந்த மாநாட்டின் பலனாக அதிசயங்கள் ஏற்படும் என்று எதிர்பார்க்கக் கூடாது; ஆனால் உலக நாடுகளின் தலைவர்களுக்கிடையே தனிப்பட்ட தொடர்புகளும் அதிகார பூர்வமில்லாத பேச்சுவார்த்தைகளும் ஆக்க பூர்வமான மாற்றங்களை ஏற்படுத்தலாம் என்றார்.

ஜினீவா மாநாடு தொடங்குவதற்கு முன்பாக நேரு லண்டனுக்குப் போவது பலனுள்ளதாக இருக்கலாம் என்று சோவியத் தலைவர்கள் கூறினர்கள். தாங்கள் நேருவைப் புரிந்துகொண்டதைப் போல மேற்கு நாடுகளும் அவரைப் புரிந்து கொண்டால் அது சமாதான இலட்சியத்துக்கு உதவி யாக இருக்கும் என்றார்கள்.

அவர்களுடைய பேச்சுவார்த்தைகள் சில சமயங்களில் மணிக் கணக்காக நீடித்தன. இந்திய-சோவியத் உறவுகளின் வளர்ச்சி, தூரகிழக்கு மற்றும் இந்தோசீனவில் உள்ள நிலைமை, படைக்கலைப்புப் பிரச்சினைகள் ஆகிய அனைத்தும் விவாதிக்கப் பட்டன.

பல சர்வதேசப் பிரச்சினைகளில் சோவியத் யூனியனும் இந்தியாவும் ஒரே மாதிரியான கருத்துக்களைக் கொண்டிருப் பது நேருவுக்கு அதிகமான மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுத்தது. இந்தியாவைத் தங்கள் தரப்புக்கு ஆதரவாகத் திருப்புவதற்கு சோவியத் தலைவர்கள் நிர்ப்பந்தத்தை மட்டு மல்ல, சிறிதளவு செல்வாக்கைக் கூடப் பயன்படுத்தவில்லை என்று கிருஷ்ண மேனன் பிற்காலத்தில் நினைவு கூர்ந்தார். விருந்தினர்கள் என்ற முறையில் இந்தியர்களே கூட்டறிக் கையைத் தயாரிக்கலாம் என்று தொடக்கத்திலேயே அவர் கள் தெளிவாகக் கூறிவிட்டார்கள்.

நேரு விரும்பியதைப் போல பிரயாணங்களும் சந்திப்பு களும் மிக அதிகமாக இருந்தன. அவரும் எல்லா இடங் களுக்கும் நேரந் தவருமல் சென்றார். அவர் சுறுசுறுப்

புடையவராதலால் எப்பொழுதும் உற்சாகமாகவே இருந்தார். உரிய நேரத்துக்கு எல்லா இடங்களுக்கும் சென்றதோடு தன்னுடைய சகாக்களும் அப்படியே நடக்க வேண்டுமென்று விரும்பினர்.

இந்தியப் பிரதமரின் விருப்பங்களை சோவியத் தலைவர்கள் மகிழ்ச்சியோடு பூர்த்தி செய்தார்கள். அவர் விமானத் தொழிற்சாலையைப் பார்வையிடுவதற்கு சோவியத் அரசாங்கம் ஏற்பாடு செய்தது. அங்கே நேரு சிவில், இராணுவ விமானங்களின் உற்பத்தியைப் பற்றித் தெரிந்து கொண்டார். மாஸ்கோவிலிருந்து புறப்படுவதற்கு முன்தினத்தன்று முதல் அணுசக்தி மின்சார நிலையத்தை அவர் பார்வையிட்டார். சோவியத் அரசாங்கம் தன் மீது காட்டிய நம்பிக்கையை அவர் மிகவும் பாராட்டினர்.

அவர் எந்தத் தொழிற்சாலைக்குச் சென்றாலும் தொழிலாளர்கள், பொறி இயலாளர்கள், மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர் எல்லோரிடமும் அன்பாக, ஒளிவு மறைவில்லாமல் உரையாடினர். பரிசோதனையாகத் தயாரிக்கப்படும் மாதிரிப் படிவத்தை எப்படிப் பெருவீதத்தில் உற்பத்தி செய்கிறார்கள், மக்களின் வேலை மற்றும் ஓய்வு நிலைமைகள், வீட்டு வசதிப் பிரச்சினையைத் தீர்த்தது எப்படி மற்றும் பல பிரச்சினைகளைப் பற்றி, எல்லா விஷயங்களைப் பற்றியும் அவர் அக்கறை காட்டினர்.

கிழக்கு நாடுகளின் அல்லது மேற்கு நாடுகளின் கலையைப் பற்றித் தனக்கு ஒன்றுமே தெரியாது, அதைப் பற்றிப் பேசுவதற்குத் தனக்குத் தகுதி கிடையாது என்று நேரு சில சமயங்களில்—பாதி வேடிக்கையாகவும் பாதி உண்மையாகவும்—கூறுவதுண்டு. கல்வியறிவில்லாத சாதாரண மனிதனைப் போலவே நான் கலையை ரசிக்கிறேன், ஒரு ஓவியம் அல்லது சிற்பம் அல்லது கட்டிடத்தைப் பார்க்கும்பொழுது. எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது அல்லது ஒரு விசித்திரமான உணர்ச்சி ஏற்படுகிறது அல்லது சிறிதளவு மகிழ்ச்சி ஏற்படுகிறது அல்லது ஒரு உணர்ச்சியுமே ஏற்படவில்லை (அப்படியானல் நான் அதைப் பார்க்காததைப் போலப் போய்விடுகிறேன்), சில சமயங்களில் அது என் மனதில் அருவருப்பைக் கூட ஏற்படுத்துகிறது என்று அவர் கூறினர்.

நேருவின் அடக்கமே அவர் இப்படிப் பேசக் காரணமாக

இருந்தது. உண்மையில் அவர் கலையை நேசித்ததோடு அதை நன்றாகப் புரிந்து கொள்ளும் திறமை உடையவராக இருந்தார். அவர் பண்டைய இந்தியக் கலையின் வரலாற்றை நன்றாக அறிந்திருந்தார், பாலே நடனத்தையும் இசை நடனத்தையும் சிற்பங்களையும் கட்டிட இயலையும் ரசித்தார். சிம்பனி இசையைக் கேட்பதில் அவருக்கு அதிகமான ஆர்வமுண்டு. அவருக்குச் சிறிதளவு சந்தர்ப்பம் கிடைத்தாலும் மாபெரும் கலைஞர்களின் திறமையாலும் மேதாவிலாசத்தாலும் படைக்கப்பட்ட அழகின் உலகத்தில் ஆனந்தமாக மூழ்கிவிடுவார். ஆனல் அந்த வாய்ப்பு அவருக்கு மிகவும் அபூர்வமாகவே கிடைத்தது. சாய்கோவ்ஸ்கியின் அன்னத் தடாகம் மற்றும் அஸாஃபியேவின் பக்சிஸராய் நீரூற்று என்ற நடனங்களை போல்ஷாய் நாடக அரங்கத்தில் கண்டு களித்தார். அவற்றின் கற்பனை நிறைந்த தயாரிப்பையும் அற்புதமான இசையையும் காட்சிகள் மற்றும் உடைகளின் அழகையும் கலைஞர்களின் நுட்பமான நடிப்புத் திறனையும் பாராட்டிப் பேசினர்.

லெனின்கிராடில் உள்ள ஹெர்மிடாஜ் கலைக்காட்சியில் அவருக்கு மிகவும் பிடித்தமான லியனர்டோ டா வின்சி மற்றும் ரெம்பிராண்டின் ஓவியங்களுக்கு முன்னல் மெய்மறந்த படி நின்றார்.

மாஸ்கோவிலும் லெனின்கிராதிலும் இந்தியப் பண்பாட்டைச் சித்தரிக்கும் கண்காட்சிகளைப் பார்த்த பிறகு இந்தியாவின் கலைப்பொருள்களை சோவியத் மக்கள் எவ்வளவு கவனத்தோடும் ஈடுபாட்டோடும் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பரவசமடைந்தார். இந்தியாவுக்கு விஜயம் செய்த ருஷ்ய மற்றும் சோவியத் கலைஞர்களின் படைப்புகளைக் கொண்ட கண்காட்சியையும் அவர் பார்த்து மகிழ்ந்தார்.

ஜூன் 11ந் தேதியன்று நேருவும் அவருடைய குழுவினரும் சோவியத் நாட்டுக்குள் சுற்றுப் பயணத்தைத் தொடங்கினர்கள். சோவியத் யூனியன் வெளிநாட்டிலாகாவின் முதல் துணை அமைச்சரான வி.வி. குஸ்னெத்ஸோவும் இந்தியாவில் சோவியத் தூதரான எம். ஏ. மென்ஷிகோவும் உடன் சென்றனர்.

அவர்கள் முதலில் பெரும் புகழ் வாய்ந்த ஸ்டாலின்கிராதுக்குச் சென்றார்கள். அந்த நகரத்தில்தான் சோவியத் மக்கள் ஹிட்லரின் இராணுவ இயந்திரத்துக்கு மரண அடி கொடுத்தார்கள்.

ஸ்டாலின்கிராத் என்ற பெயர் உலக முழுவதிலும் பிரபலமடைந்திருக்கிறது, அங்கே சோவியத் மக்கள் யுத்தத்தில் மட்டுமல்லாமல் சமாதானத்திலும் தங்களுடைய வீரத்தைக் காட்டிவிட்டார்கள் என்று விமான நிலைய வரவேற்பின் போது நேரு கூறினார்.

விமான நிலையத்திலிருந்து நகரத்துக்கு பதினெட்டுக் கிலோமீட்டர் தூரம் ஊர்வலமாகச் சென்றபொழுது பல்லாயிரக் கணக்கில் ஸ்டாலின்கிராத் நகர மக்கள் அவரை வரவேற்றார்கள். நேரு அவர்களுடைய முகங்களைப் பார்த்த பொழுது ஹிட்லரோடு நடைபெற்ற காட்டுமிராண்டித்தனமான சண்டையில் அவர்கள் உறுதியோடு நிற்பதற்கும், வெற்றியடைந்த பிறகு அழிந்து போன இந்த நகரத்தை மறுபடியும் நிர்மாணிப்பதற்கும் உதவி செய்த பலத்தைப் புரிந்து கொள்ள முயற்சி செய்தார்.

விருந்தினர்கள் அப்பொழுது கட்டப்பட்டுக்கொண்டிருந்த நீர்மின்சார உற்பத்தி நிலையத்தையும் பிரபலமான டிராக்டர் தொழிற்சாலையையும் பார்வையிட்டார்கள்.

இங்கே உபயோகிக்கப்படும் தொழில் நுட்பம் என்ன? அவற்றின் தன்மை எப்படிப்பட்டது? வெளிநாட்டுத் தயாரிப்புகளோடு ஒப்பிடும் பொழுது அவற்றின் தரம் என்ன? இந்தியாவின் வயல்களில் அவற்றை எந்த அளவுக்கு உபயோகிக்க முடியும்? இவையும் இவை போன்ற பல கேள்விகளையும் பட்டறைகளில் கேட்டார். நேரு எளிமையாகவும் சுலபமாகவும் தொழிலாளர்களோடு பேசினார். அவர்களிடம் வேடிக்கையாகப் பேசினார், அவர்களுடைய வேடிக்கைப் பேச்சுகளைக் கேட்டு அவரும் சிரித்தார்.

நேரு குழந்தைகளை நேசித்தார். அவர்கள் மனித குலத்தின் நம்பிக்கை என்றார். உலகத்தை இப்பொழுதிருப்பதைக் காட்டிலும் அதிகத் தூய்மையானதாக, நியாயமானதாக அவர்கள்தான் மாற்ற வேண்டும் என்றார். அவருக்குப் பல அலுவல்கள் இருந்த போதிலும் பல நாடுகளிலும் உள்ள குழந்தைகளோடு அவர் விரிவான கடிதப் போக்குவரத்து வைத்திருந்தார். அவருடைய முன்முயற்சியினால் டில்லியில் குழந்தைகளின் ஓவியக் கண்காட்சி வருடந்தோறும் நடைபெற்றது. நேரு தவறாமல் அதைப் பார்வையிடுவார்.

நேரு குழந்தைகளுக்கு எழுதிய கடிதங்களில் ஒன்றில்

பின்வருமாறு கூறினர்: ''நமக்குச் சொந்தமான இந்த அழ கான உலகத்தைப் பற்றி, அதன் மலர்கள், மரங்கள், பறவை கள், விலங்குகளைப் பற்றி, நட்சத்திரங்கள், மலைகள், பனி நதிகளைப் பற்றி உங்களிடம் பேச எனக்கு மிகவும் ஆசை யுண்டு. நீங்கள் தேவதைக் கதைகளையும் பழங்காலத்தைப் பற்றிய கதைகளையும் அதிகமாகப் படிக்க வேண்டும். இந்த உலகமே ஒரு அற்புதம் நிறைந்த வீரசாகசக் கதையாகத் தானே இருக்கிறது. உலகத்தின் அழகையும் வாழ்க்கையையும் பார்க்கக் கண்களும் கேட்கக் காதுகளும் இருந்தால் போதுமே.''

சோவியத் யூனியனிலும் நேரு குழந்தைகளைச் சந்தித்து ஆனந்தமடைந்தார். மாஸ்கோவில் ஒரு பள்ளிக்கூடத்தில், லெனின்கிராதில் இளம் பயனீர்கள் அரண்மனையில், ''அர்ட் டெக்'' இளம் பயனீர்கள் முகாமில் இச்சந்திப்புக்கள் நடை பெற்றன. அர்ட்டெக் இளம் பயனீர்கள் முகாமைப் பார்வை யிட்ட பிறகு விடைபெறும் பொழுது, இந்தியாவோ, அல் லது வேறு நாடோ—எங்கே குழந்தைகளைச் சந்தித்தாலும் நான் அவர்களை நேசிக்கிறேன், உங்களைச் சந்தித்ததில் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன் என்று நேரு கூறினர். எங்கள் நாட்டை உங்களுக்குப் பிடிக்கிறதா என்று சிறிது நேரத்துக்கு முன்பு ஒரு சிறுமி என்னிடம் கேட்டாள். எனக்கு சோவியத் மக்களைப் பிடிக்கிறது, சோவியத் குழந்தைகளை இன்னும் அதிகமாகவே பிடிக்கிறது என்று நான் பதிலளித்தேன். இந்தச் சந்திப்பை நான் எப்பொழுதும் நினைவில் வைத்திருப்பேன், உங்கள் வாழ்த்துக்களை இந்தியக் குழந்தைகளிடம் தெரிவிப் பேன். நீங்கள் வளர்ந்த பிறகு, இந்தியக் குழந்தைகளும் வளர்ந்த பிறகு ஒருவரோடொருவர் ஒத்துழைப்பீர்கள் என்று நம்புகிறேன் என்றார்.

அவர்கள் ஜார்ஜியாவுக்கும் உஸ்பெகிஸ்தானுக்கும் சென் ருர்கள். அவருடைய குழுவைச் சேர்ந்த ஒருவர் பிரயாணத் திட்டத்தில் அதிகமான நிகழ்ச்சிகள் இருப்பதால் உறங்கு வதற்கே முடியவில்லை என்று வேடிக்கையாகக் கூறினர்.

''என்னைப் பின்பற்றுங்கள், விமானத்திலேயே தூங்கி விடுங்கள்'' என்றார் நேரு.

1955 ஜூன் 15ந் தேதியன்று அவர் ஸாமர்க்கான்டுக்கு வந்தார். இந்தப் பழமையான நகரம் ஒரு காலத்தில் தைமூ ரின் தலைநகரமாக இருந்தது. தைமூர் வமிசத்தைச் சேர்ந்த

பாபர் பதினரும் நூற்றாண்டில் டில்லியில் ஆட்சி புரிந்தது தெரிந்ததே. இந்தியாவின் முகலாய அரசர்கள் இரானேடு மிக நெருக்கமான உறவுகளைக் கொண்டிருந்தார்கள். அது கலைத்துறையில் இரானின் பொற்காலம். இந்திய இலட்சியங்களையும் பாரசீகக் கலைப்பண்பையும் இணைத்துக் கொண்ட புதிய கட்டிடக் கலை இந்தியாவில் தோன்றியது. ஸாமர்க்காண்டில் அத்தகைய கட்டிடக் கலையின் கூறுகளை நேரு கண்டார். நகரத்தின் அழகு அவரை மிகவும் கவர்ந்தது. அங்கேயுள்ள பிரபலமான நினைவுச் சின்னங்களையும் மசூதிகளையும் அவர் பார்வையிட்டார். மாபெரும் உஸ்பெக் சிந்தனையாளரும் அறிஞருமான உலூக்பெக் அமைத்த வான வியல் ஆய்வுக் கூடத்துக்கும் கொடுமையால் அனைவரும் அஞ்சி நின்ற தைமூரின் சமாதிக்கும் சென்றார்.

அந்தப் பழமையான நினைவுச் சின்னத்தைப் பழுது பார்க்கும் வேலை நடைபெற்றுக் கொண்டிருந்தது. நுட்பமான பல்வண்ணச் சாந்து வேலை நேருவைக் கவர்ச்சித்தது. இத்தகைய அருமையான திறமையைக் கொண்ட கலைஞர்கள் இன்னும் அங்கே இருக்கிறார்களா என்று அந்த புனரமைப்பு வேலையைச் செய்து கொண்டிருந்த சிற்பியிடம் நேரு கேட்டார்.

அந்தச் சிற்பி விருந்தினரின் அன்பு மிக்க முகத்தை நன்றாகப் பார்த்துவிட்டு மொழிபெயர்ப்பாளரிடம் கூறினார்: ''இதை மட்டுமல்ல—இன்னும் கடினமான வேலைகளையும் செய்யக் கூடிய திறமை மிக்க கலைஞர்கள் எங்களிடம் இருக்கிறார்கள். நவீனக் கட்டிடங்களைக் கலையழகு மிளிரும்படி செய்வதற்கு அவர்களுடைய சேவை அடிக்கடி தேவைப்படுகிறது.''

மறுநாள் பிற்பகலில் விருந்தினர்கள் ருப்ட்ஸோவ்ஸ்க் பிரதேசத்தின் கன்னி நிலங்களைப் பார்வையிடச் சென்றார்கள். இந்தியாவிலிருக்கும் ஏராளமான தரிசு நிலங்களையும் பாதித் தரிசு நிலங்களையும் விவசாயத்துக்கு எப்படி உபயோகப்படுத்துவது என்ற பிரச்சினையைப் பற்றி நேரு நெடுங்காலமாகச் சிந்தித்து வருபவர். எனவே இத்துறையில் சோவியத் அனுபவத்தைத் தெரிந்து கொள்ள விரும்பினார். அங்கே உழுது போடப்பட்டிருந்த வயல்களில் நடந்தார். ஸ்தல அரசுப் பண்ணையின் மேலாளர்களிடம் பல கேள்விகளைக் கேட்டார்.

இந்தியாவின் தொழில்துறை வளர்ச்சிக்கு கனரகத்

தொழில் மிகவும் அவசியம் என்பது நேருவுக்குத் தெரியும். எனவே சோவியத் கனரகத் தொழில்துறையைச் சேர்ந்த மாபெரும் தொழிற்சாலைகளான மக்னிடகோர்ஸ்க் இரும்பு மற்றும் உருக்குத் தொழிற்சாலை, யூரல் கனரகத் தொழில் நிறுவனம் ஆகியவற்றைப் பார்வையிட்ட பொழுது அவர் அங்கே எல்லா அம்சங்களையும் பற்றி நுணுக்கமாக ஆராய்ந்தார். ''யூரல்மாஷ்'' தொழிற்சாலையைப் பார்வையிட்ட பிறகு ''இந்தியாவில் இப்படிப்பட்ட தொழிற்சாலையைத்தான் நாம் அமைக்கவேண்டும்'' என்று பாராட்டிக் கூறினர்.

சோவியத் யூனியனில் அவருடைய சுற்றுப் பயணம் முடிவடைந்து கொண்டிருந்தது. மாஸ்கோவில் இறுதிக் கட்டப் பேச்சுவார்த்தைகளுக்கு முன்பு அவர் லெனின்கிராதில் இரண்டு நாட்களைக் கழித்தார். மனிதகுலத்தின் வரலாற்றில் மிகப் பெரிய புரட்சி நடைபெற்ற இந்த அழகிய நகரத்தின் வரலாறு அவருக்கு நன்ருகத் தெரியும். லெனின்கிராத் சாலைகளில் நடந்து சென்ற பொழுது அங்கே ஏற்கெனவே வந்திருப்பதைப் போன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது. அரண்மனைச் சதுக்கம், மாரிக்கால அரண்மனை, நெவ்ஸ்கி பிராஸ்பெக்ட், ஸ்மோல்னி இன்ஸ்டிடியூட் முதலியவற்றை செய்திப் படங்களிலும் புகைப்படங்களிலும் பார்த்திருந்தபடியால் அவை அவருக்கு நன்கு தெரிந்திருந்தன.

ஜான் ரீட் எழுதிய **உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்** என்ற புத்தகத்தை 1920க்களில் அவர் படித்த பொழுது புரட்சிகரமான பெட்ரோகிராத் நகரத்தைப் பற்றிய வர்ணனைகள் அவர் மனதில் பதிந்தன. மகத்தான அக்டோபர் புரட்சியின் பத்தாவது ஆண்டுவிழாவை ஒட்டிப் புடோவ்கின் தயாரித்த **செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கின் முடிவு** என்ற திரைப் படத்தை 1927ல் மாஸ்கோவில் பார்த்தது அவருக்கு நினைவு வந்தது. ஜாரிஸ்ட் ருஷ்யாவின் கடந்த காலத்தைப் பற்றிய காட்சிகள்—போகவாழ்க்கையும் பயங்கரமான வறுமையும் அடுத்தடுத்து நிலவியது, ஏகாதிபத்திய யுத்தத்தின் போது நடைபெற்ற பயங்கரமான நிகழ்ச்சிகள், ஜாரிசம் வீழ்ச்சியடைந்த பிப்ரவரி மாதத்தில் எங்கும் நிறைந்திருந்த ஆனந்தமும் கொண்டாட்டமும், லெனின் தலைமையில் போல்ஷிவிக் கட்சியினர் நடத்திய வீரச் செயல்கள்—நேருவின் நினைவில் அப்படியே இருந்தன. அந்தத் திரைப்படத்தின்

வன்மை, இயக்காற்றல் மற்றும் புரட்சித்தன்மை அன்று இளைஞராக இருந்த நேருவை உலுக்கிவிட்டன. இவ்வளவு சிறந்த திரைப்படத்தை இந்தியர்கள் ஒருபோதும் பார்க்க முடியாதே என்று அப்பொழுது நேரு நினைத்து வேதனை யடைந்தார். இந்தியாவின் திரைப்பட அரங்கங்களின் முதலாளி கள் சோவியத் திரைப்படத்தைக் காட்ட ஒருபோதும் விரும்பி யிருக்க மாட்டார்கள். மேலும் இந்தியத் திரைப்பட அரங் கங்களை ஆங்கில, அமெரிக்கத் திரைப்படங்கள் ஆக்கிரமித் திருந்தன...

சோவியத் நாட்டைப் பத்து நாட்கள் சுற்றிப் பார்த்த பிறகு ஜூன் 21ந் தேதி காலையில் நேரு மாஸ்கோவுக்குத் திரும்பினார்.

இந்திய-சோவியத் நட்புறவைச் சிறப்பிப்பதற்காக ''டினமோ'' விளையாட்டு அரங்கத்தில் நடைபெற்ற கூட்டம் அங்கே திரண்டிருந்த எண்பதாயிரம் மாஸ்கோவாசிகளின் கோலாகலமான கொண்டாட்டமாக மாறியது. நேரு தன் னுடைய தாய்மொழியான இந்தியில் சொற்பொழிவாற்றினார்.

''இரண்டு வாரங்களுக்கு முன்பு நாங்கள் சோவியத் யூனி யனுக்கு வந்தோம். இந்த மாபெரும் நாட்டை விட்டுச் சீக்கிரத்தில் போய்விடுவோம். இந்த இடைக்காலத்தில் நாங் கள் பதின்மூன்றுயிரம் கிலோமீட்டர்கள் பிரயாணம் செய் தோம், பல பிரபலமான நகரங்களுக்குச் சென்றேம், அற்புத மான பல இடங்களைப் பார்வையிட்டோம். நாங்கள் சென்ற இடங்களில் எல்லாம் எங்களுக்குக் கிடைத்த அற்புதமான வரவேற்பு, எங்களிடம் மக்கள் காட்டிய அன்புதான் எல்லா வற்றைக் காட்டிலும் அற்புதம்.

''சோவியத் யூனியனில் எங்கே சென்றாலும் அங்கே சமாதான ஆர்வத்தைப் பார்த்தோம். எல்லா நாடுகளிலும் மிகப் பெரும்பான்மையான மக்கள் சமாதானத்துக்காகத் துடிக்கிறார்கள் என்பது என்னுடைய நம்பிக்கை. ஆனால் அடுத்த நாட்டு மக்களைப் பற்றிய அச்சம் அவர்களுடைய உணர்வைக் கெடுக்கிறது, அவர்கள் வேறு விதமாக நடந்து கொள்ளச் செய்கிறது. இந்த அச்சத்தையும் வெறுப்பையும் நாம் அகற்ற வேண்டும், சமாதானச் சூழ்நிலையைத் தோற்று விக்க முயற்சி செய்ய வேண்டும்.''

1955 ஜூன் 22ந் தேதியன்று கிரெம்ளின் அரண்மனை

அறையில் இந்திய-சோவியத் கூட்டறிக்கை கையெழுத்திடப் பட்டது, இந்திய சோவியத் உறவுகள் ''ஒவ்வொரு நாட்டின் பிரதேசத்துக்கும் அரசுரிமைக்கும் பரஸ்பர மரியாதையளித் தல்; பரஸ்பரம் ஆக்கிரமிப்பு செய்யாதிருத்தல்; பொருளா தார, அரசியல் அல்லது சித்தாந்தத் தன்மையைக் கொண்ட எக்காரணத்துக்கும் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதி ருத்தல்; சமத்துவம் மற்றும் பரஸ்பர அனுகூலம்; சமாதான சகவாழ்வு என்ற ஐந்து கோட்பாடுகளை வழிகாட்டியாகக் கொண்டிருப்பது அவசியம்'' என்று வலியுறுத்தப்பட்டது. ஐந்து கோட்பாடுகளும் சோவியத் யூனியனுக்கும் இந்தியா வுக்கும் இடையே பொருளாதார, தொழில் நுட்ப, கலாச் சார ஒத்துழைப்பின் வளர்ச்சிக்கு விரிவான களத்தை தோற்று விப்பதாக அறிக்கை சுட்டிக்காட்டியது. இந்தியாவுக்குப் பொருளாதார உதவி கொடுப்பதற்கு சோவியத் யூனியன் எந்த அரசியல் நிபந்தனையும் விதிக்கவில்லை.

இந்தியாவுக்கு விஜயம் செய்யுமாறு நேரு கொடுத்த அழைப்பை சோவியத் தலைவர்கள் நன்றியுடன் ஏற்றுக் கொண்டார்கள்.

இந்தியாவுக்குப் புறப்படுவதற்கு முன்பு நேருவுக்கு மற் றொரு எதிர்பாராத ஆச்சரியம் காத்திருந்தது. மாஸ்கோ அரசு பல்கலைக்கழகத்தின் விஞ்ஞான கவுன்சில் நேருவுக்கு சட்டத் துறையில் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. சர்வதேசச் சட்டக் கோட்பாடுகளைப் பின் பற்ற வேண்டும், பெரிய அரசுகள், சிறிய அரசுகள் இரண்டின் அரசுரிமையையும் அங்கீகரிக்க வேண்டும், ஆசியாவிலும் உலக முழுவதிலும் பதட்ட நிலைமையைத் தணிக்க வேண்டும் என்று பாடுபடுகின்ற ஒரு முக்கியமான ராஜியவாதியின் பணிகளை அந்தப் பல்கலைக்கழகம் இதன் மூலம் பாராட்டியது.

நேருவின் சோவியத் விஜயமும் கூட்டறிக்கையும் இந்தி யாவுக்கும் சோவியத் யூனியனுக்குமிடையே மேலும் நட்புறவு களைப் பலப்படுத்துவதற்கு மட்டுமின்றி, உலகத்தில் பதட்ட நிலையைத் தணிப்பதற்கும் மாபெரும் வரலாற்று முக்கியத் துவம் நிறைந்த சம்பவங்கள் என்று உலகப் பத்திரிகைகள் விரிவாக விமர்சனம் செய்தன.

மேற்கு நாடுகளில், குறிப்பாக அமெரிக்காவில் உள்ள பிற்போக்கு வட்டாரங்கள் நேருவின் சோவியத் விஜயத்தைப்

பற்றி எரிச்சலடைந்தன. சோவியத் யூனியனுக்கும் காலனி ஆட்சியிலிருந்து விடுதலையடைந்த் ஆசியாவின் இளம் அரசு களுக்குமிடையே உறவுகள் வளர்ச்சியடைவதை அவை விரும்ப வில்லை என்பது தெளிவாயிற்று.

ஜூன் 23ல் அமெரிக்க அரசு இலாகாவின் பிரதிநிதி மாஸ்கோவில் கையெழுத்திடப்பட்ட கூட்டறிக்கையைப் பற்றி கருத்துக் கூறுவதற்கு மறுத்தார். நேரு சோவியத் யூனியனோடு நட்புறவுகளைப் பலப்படுத்திக்கொள்வது அமெரிக்காவின் விரோ தத்தைத் தூண்டுவதில்தான் முடியும் என்று செல்வாக்குள்ள அமெரிக்கப் பத்திரிகைகள் எச்சரிக்கை செய்தன.

சோவியத் விஜயத்தின் விளைவுகளைப் பற்றி நேரு முழுத் திருப்தி அடைந்தார். நெடுங்காலமாகத் துன்பமடைந்திருக்கும் இந்தியாவுக்கு, உண்மையான அனுதாபத்துக்கும் ஆதரவுக்கும் ஏங்குகின்ற நாட்டுக்கு மிகவும் உண்மையான, நம்பிக்கையான தோழன் கிடைத்திருப்பதை நேரு புரிந்துகொண்டார்.

''இங்கே வந்தபொழுது இருந்ததைக் காட்டிலும் வளமை யாகவும்—ஒரு அர்த்தத்தில் வறுமையாகவும்—நான் திரும்பிச் செல்வதாக நினைக்கிறேன்'' என்று சோவியத் மக்களிடம் விடை பெற்றுக் கொள்கின்ற பொழுது நேரு உணர்ச்சி யோடு கூறினர். ''நமக்கிடையே உள்ள நட்பைப் பற்றியும் நீங்கள் எனக்களித்த சிறப்பான வரவேற்புகளைப் பற்றியும் மிக அதிகமான அழகிய நினைவுகள் எனக்கு வளத்தைக் கொடுக்கின்றன. நான் என்னுடைய இதயத்தை இங்கே விட்டுப் போவதால் வறியவனகத் திரும்புகிறேன்'' என்ருர்.

அதற்கடுத்த இரண்டு வாரங்களில் அவர் போலிஷ் மக்கள் குடியரசுக்குச் சென்ருர். அங்கே போலிஷ் தலைவர்களோடு இதைப் போன்ற கூட்டறிக்கையை வெளியிட்டார். பிறகு ஆஸ்திரியா, யுகோஸ்லாவியா மற்றும் கிரேட் பிரிட்டன் ஆகிய நாடுகளுக்குச் சென்ருர்.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் வளர்ச்சி வெற்றிகர மான முறையில் தொடங்கி வைக்கப்பட்டது. சோவியத் தலைவர்கள் 1955 நவம்பர்-டிசம்பர் மாதங்களில் இந்தியா வுக்கு விஜயம் செய்தபொழுது அது தொடர்ந்தது. அன்று முதல் சோவியத் தலைவர்களுக்கும் இந்தியத் தலைவர்களுக்கு மிடையே முறையான சந்திப்புக்கள் அடிக்கடி நடைபெறுவது உறுதியான மரபாகிவிட்டது.

## அத்தியாயம் பதினான்கு

ஏகாதிபத்திய வல்லரசுகளில் ஏதாவதொன்று சர்வதேச விவகாரங்களை ஒழுங்குபடுத்திய காலம், மேற்கு ஐரோப்பிய நாடுகளும் அமெரிக்காவும் யுத்த மற்றும் சமாதானப் பிரச்சினைகளைத் தனியாக முடிவு செய்த காலம் மறைந்து விட்டது. இனி அந்தக் காலம் திரும்பாது.

உலக சோஷலிஸ்ட் அமைப்பு உருவாகியதும் ஆசியா, ஆப்பிரிக்கா மற்றும் இலத்தீன் அமெரிக்காவில் விடுதலையடைந்த நாடுகள் உலக அரசியல், பொருளாதார அரங்கத்துக்குள் ஈடுபட்டதும் அரசுகளுக்கிடையே உள்ள உறவுகள் உலகரீதியான, அதிக ஜனநாயகமான தன்மையைப் பெறத் தொடங்கின.

கொரியாவில் நடைபெற்ற யுத்தமும் இந்தோசீனாவில் பிரெஞ்சுத் தலையீடும் முடிவடைந்ததும், காலனியாதிக்கத்திலிருந்து விடுதலையடைந்த நாடுகளுக்கிடையே ஏகாதிபத்திய எதிர்ப்பு ஒத்துழைப்பைத் தொடங்கி வைத்த பாந்தூங் மாநாடு வெற்றிகரமாக நிறைவடைந்ததும், சோவியத் யூனியன், அமெரிக்கா, கிரேட் பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகளின் தலைவர்கள் மிக உடனடியான எல்லாப் பிரச்சினைகளைப் பற்றியும் திறந்த மனதோடு கருத்துக்களைப் பரிமாறிக் கொண்ட ஜினீவா மாநாடும் வெவ்வேறு சமூக அமைப்புகளைக் கொண்ட அரசுகளுக்கிடையே சமாதான சகவாழ்வு பற்றிய கோட்பாடுகள் வெற்றியடைய முடியும் என்ற நம்பிக்கையையும் உத்வேகத்தையும் நேருவிடம் ஏற்படுத்தின.

கெடுபிடிப் போரினால் ஏற்பட்ட அவநம்பிக்கை, சந்தேகம், அச்சம் ஆகியவற்றினால் களைப்படைந்துவிட்ட மனிதகுலத்துக்கு முன்னால் மக்கள் சமாதானமாக வாழ்க்கை நடத்துவதற்கும்

நம்பிக்கையோடு படைப்பு மற்றும் நிர்மாணப் பணிகளைச் செய்வதற்கும் உதவுகின்ற சிறப்பான மாற்றங்கள் ஏற்படப் போகின்றன என்ற நம்பிக்கை—அது இப்பொழுது பலவீன மாக இருந்தாலும்—கடந்த ஆண்டுகளில் முதல் தடவை யாகத் தோன்றியது என்று சொல்ல முடியும்.

இந்த பூமியில் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுகின்ற மிகப் பெரும்பான்மையான மக்களின் பொதுவான விருப் பார்வங்களைப் பிரதிபலிக்கின்ற தகுதியைக் கொண்ட புதிய அரசியல் தலைவர்களை நமது சகாப்தம் உருவாக்கியிருக்கிறது. அத்தகைய தலைவர்களில் ஜவகர்லால் நேருவும் ஒருவர். அவ ருடைய அரசியல் சிந்தனை தேசிய எல்லைகளுக்கு வெகு தூரத்துக்கு அப்பால் சென்றது.

நேரு சோவியத் யூனியன் மற்றும் சோஷலிஸ்ட் நாடு களின் தலைவர்களோடும் தேசிய விடுதலை இயக்கத் தலைவர்கள் மற்றும் மேற்கு நாடுகளின் முற்போக்கான பிரமுகர்களோடும் ஒன்று சேர்ந்து உலகத்தில் பெரிய யுத்தங்களோ அல்லது சிறிய யுத்தங்களோ ஏற்படுகின்ற சாத்தியத்தை நீக்குவதற் காகப் பாடுபட்டார். அவருடைய அரசியல் நடவடிக்கைகள் அனைத்தின் சாராம்சம் இதுவே.

சமாதானத்துக்காகப் பாடுபடுவதில் தான் தனியாக நிற்க வில்லை, மற்ற நாடுகள், குறிப்பாக சோவியத் யூனியனின் தலைவர்கள் மனிதகுலத்தின் எதிர்காலத்தைப் பற்றி தன்னு டைய அச்சங்களைப் பகிர்ந்து கொள்கிறார்கள் என்பதை அறிந்த பொழுது அவர் உற்சாகமடைந்தார். 1956 பிப்ர வரி மாதத்தில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் இருபதாவது காங்கிரசின் முடிவுகள் அவருக்கு திருப்தியைக் கொடுத்தன. சமாதான சகவாழ்வுக் கொள்கையைக் கடைப் பிடிப்பதற்குச் சாதகமான நிலைமைகளைத் தோற்றுவிப்பதற்கு அவை உதவும் என்று அவர் கருதினார். படைக்கலைப்பு பற்றிய அடிப்படையான பிரச்சினைகளில் சோவியத் பிரேரணை களை அவர் மிகவும் மதித்தார். சோவியத் இராணுவத்தின் எண்ணிக்கையில் 12,00,000 துருப்புகளைக் குறைத்ததைப் போன்ற ஆக்கபூர்வமான நடவடிக்கைகளினால் அவர் ஊக்க மடைந்தார். அத்தகைய நடவடிக்கை சமாதானத்தைப் பலப் படுத்துகின்ற நடவடிக்கையாகும். சோவியத் யூனியன் கூட்டுச் சேராத நாடுகளின் இயக்கத்தை முழுமையாகப் புரிந்துகொண்ட

தோடு மட்டுமல்லாமல் தொடக்கத்திலிருந்தே அதற்கு ஆதரவு கொடுத்தது அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தது. கூட்டுச் சேராத நாடுகளின் 'வெளிநாட்டுக் கொள்கை ''ஒழுக்கஞ் சாராதது, குறுகிய நோக்கமுடையது'' என்று குறை கூறிய மேற்கு நாடுகளின் அரசியல்வாதிகளுக்குப் பதிலளிப்பதைப் போல கூட்டுச் சேராமை என்பது நடுநிலைமையோ அல்லது செயலற்றிருப்பதோ அல்ல என்று இந்தியப் பிரதமர் அடிக்கடி விளக்கினார். ஏகாதிபத்தியத்தையும் காலனியாதிக்கத்தையும் எல்லா வடிவங்களிலும் நவீன காலனியாதிக்கத்தையும் நாங்கள் கண்டனம் செய்திருக்கிறோம், தொடர்ந்து கண்டனம் செய்வோம் என்றார். உலகத்திலுள்ள ஒடுக்கப்பட்ட மக்களினங்களின் அனைத்து தேசிய விடுதலை இயக்கங்களுக்கும் இந்தியா தீவிரமாக ஆதரவு கொடுக்கும், அடிமைப்படுத்தப்பட்டிருக்கும் மக்களினங்களின் விடுதலைக்கு உதவியளிக்கும், அவர்கள் அரசுரிமையைப் பெற வேண்டுமென்று கோரும், எனவே நமது கொள்கை சாதாரண நடுநிலையல்ல, ''ஆக்கபூர்வமான நடுநிலை'' ஆகும். உலக விவகாரங்களில் சுறுசுறுப்பாகப் பங்கெடுப்போமே தவிர, செயலற்ற நிலையில் காலத்தைக் கடத்த மாட்டோம் என்று கூறினார்.

நேரு அரசாங்கத்தின் நண்பர்கள், எதிரிகள் இருவருமே இந்த வார்த்தைகள் எவ்வளவு உண்மையானவை என்பதைப் பிறகு பல தடவை தெரிந்து கொண்டார்கள். உலகத்தின் எந்தப் பகுதியில் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டாலும் அங்கே சண்டையைத் தடுப்பதற்கும் சமாதான வழிகள்—பேச்சுவார்த்தைகள், கலந்தாலோசித்தல் முதலியன—மூலமாகத் தீர்வு காண்பதற்கும் நேரு தன்னுடைய முழு செல்வாக்கையும் இந்திய அரசின் உறுதியடைந்த அதிகாரத்தையும் தாமதமில்லாமல் பயன்படுத்தினார்.

**1956**ம் வருடத்தின் இலையுதிர்காலத்தின் போது ஏற்பட்ட சூயஸ் நெருக்கடியின் கவலை மிகுந்த வாரங்களின் போது நேரு இப்படித்தான் செயலாற்றினார்.

நேரு எகிப்திய ஜனாதிபதியான நாஸருடன் தோழமையான உறவுகளால் மட்டும் பிணைக்கப்பட்டிருக்கவில்லை. இரண்டு தலைவர்களையும் எதிர்நோக்கிய கடமைகள் ஒரே மாதிரியானவை. காலனியாதிக்கத்தின் பாரம்பரியத்தை இயன்ற அளவுக்கு மிகவும் குறைவான காலத்துக்குள் அகற்று

வதும் உண்மையான பொருளாதார சுதந்திரத்தை அடை வதும் அந்தக் கடமைகளாகும். நாஸரின் துணிச்சலும் தீர்மான மான உறுதியும் நேருவின் இதயத்தைக் கவர்ந்தன. எகிப்து தன்னுடைய முற்போக்கான வெளிநாட்டுக் கொள்கையைக் கைவிட்டால் உதவியளிப்பதாக அமெரிக்காவும் பிரிட்டனும் கூறின. நாஸர் இந்த அவமானகரமான நிபந்தனைக்கு உடன் பட மறுத்து உதவியை நிராகரித்தார்.

சூயஸ் கால்வாயை தேசியமயமாக்குவதென்று நாஸர் அரசாங்கம் முடிவு செய்தது. எகிப்திய மக்களின் மகத்தான முயற்சியினால் கட்டப்பட்ட சூயஸ் கால்வாயை தேசிய மயமாக்கியது நியாயமானது, சட்ட பூர்வமானது என்று நேரு கருதினார்.

எகிப்திய அரசாங்கம் தன்னுடைய சர்வதேசப் பொறுப்பு கள் அனைத்தையும் கண்டிப்பாக நிறைவேற்றுவதாக உறுதி கொடுத்தது. எனினும் ஏகாதிபத்திய நாடுகள், குறிப்பாக கிரேட் பிரிட்டனின் ஆளும் வட்டாரங்கள் எகிப்துக்கு எதிராக இராணுவ மற்றும் அரசியல் நடவடிக்கைகளுக்குத் தயாரிப்புகளைச் செய்தன. ஜெர்மனியின் சான்சலராக இருந்த பிஸ்மார்க் கவர்ச்சிகரமான சொற்றொடர்களை உபயோகிப் பவர். அவர் சூயஸ் கால்வாயை ''பிரிட்டிஷ் சாம்ராஜ் யத்தின் முதுகெலும்பு'' என்று பழங்காலத்தில் வர்ணித் தார். இப்பொழுது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நலிந்துபோய் பலவீனமடைந்திருந்தாலும் தன் ''முதுகெலும்பை'' இழப் பதற்கு விரும்பவில்லை. மிகவும் இரகசியமான முறையில் அமெரிக்க அரசாங்கத்தின் அங்கீகாரத்தோடு எதிர்கால ஆக் கிரமிப்பு நாடுகளான பிரிட்டன், பிரான்ஸ், இஸ்ரேல் ஆகிய வற்றின் கூட்டணி அமைக்கப்பட்டது. இந்தக் கூட்டணியில் எகிப்தின் மேல் படையெடுக்கும் முக்கியப் பொறுப்பு இஸ்ரே லுக்குக் கொடுக்கப்பட்டது. நாஸரின் முடிவை ''சர்வதேசக் கொள்ளைக்காரத்தனம்'' என்று கூறிய பிரிட்டிஷ் இராஜிய வாதிகள் ''கண்ணியமான ஆத்திரம்'' அடைந்தவர்களாகத் தோன்றினர்கள், வெளிப்பார்வைக்குச் சட்ட மரபுகளைப் பின் பற்றுவர்களைப் போல நடித்தார்கள். சூயஸ் கால்வாய் பிரச் சினையைப் பற்றி விவாதிப்பதற்காக பிரிட்டனும் பிரான்சும் அமெரிக்காவும் 1956 ஆகஸ்ட் 16ந் தேதியன்று லண்டனில் இருபத்திரண்டு நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட மாநாட்

டைக். கூட்டின. இந்தியப் பிரதிநிதி கிருஷ்ண மேனன் சூயஸ் கால்வாய் எகிப்தின் பிரிக்க முடியாத பகுதி என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்ட பிரேரணைகளை முன் வைத்தார். சோவியத், இலங்கை மற்றும் இந்தோனேஷியப் பிரதிநிதிகள் இந்தியப் பிரேரணைகளை ஆதரித்தார்கள். அமெரிக்க அரசுத் துறைச் செயலாளர் ஜான் பாஸ்டர் டல்லஸ் சூயஸ் கால்வாயை ''சர்வதேசக் கட்டுப்பாட்டின் கீழ்'' வைக்க வேண்டும் என்ற திட்டத்தை முன்வைத்தார். மேற்கு அரசுகள் அத்திட்டத்துக்கு ஆதரவு கொடுத்தன.

சூயஸ் கால்வாயை உபயோகிக்கும் நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட பேச்சுவார்த்தைக் குழுவை அமைக்க வேண்டுமென்று நாஸர் வெளியிட்ட திட்டத்துக்கு ஆதரவு கொடுக்குமாறு பிரிட்டிஷ் பிரதம மந்திரி அந்தோணி ஈடனுக்கும் அமெரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவருக்கும் நேரு கடிதங்கள் எழுதினார். சோவியத் அரசாங்கமும் சூயஸ் பிரச்சினைக்குச் சமாதான ரீதியில் தீர்வு காண்பதற்குத் தொடர்ச்சியாக ஆதரவளித்தது.

செப்டெம்பர் மாதத்தில் ஒரு நாள் இந்திய நாடாளுமன்றத்தில் ஒரு பேச்சாளரின் சொற்பொழிவை நேரு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தபொழுது அவரிடம் ஒரு கடிதம் கொடுக்கப்பட்டது. அவர் அதைப் பிரித்துப் படித்தார். ஈடன் உண்ணாவிரதமிருப்பதாக லண்டனிலுள்ள இந்திய தூதரகம் தெரிவித்திருந்தது. பிரிட்டிஷ் பிரதமர் பிரிட்டிஷ் இராஜியவாதிகளுக்கு அசாதாரணமான ஒரு காரியத்தில் ஈடுபடுவது சூயஸ் கால்வாய் பிரச்சினையைத் தனக்குச் சாதகமான முறையில் தீர்க்க முடியும் என்ற நம்பிக்கையின் காரணமாகவா? நேரு நாடாளுமன்றக் கூட்ட நடவடிக்கைகளில் குறுக்கிட்டார், கிண்டலாகச் சிரித்துக் கொண்டு தந்தியின் வாசகத்தைப் படித்தார். அங்கே உட்கார்ந்திருந்த உறுப்பினர்களைக் குறும்புத்தனமாகப் பார்த்தார். ''தலை காலியாக இருப்பதைக் காட்டிலும் வயிறு காலியாக இருப்பது மிகவும் நல்லது'' என்றார். எல்லோரும் படீரென்று சிரித்தார்கள்.

இந்திய அரசாங்கம் எகிப்துக்கு தார்மிக ஆதரவு மட்டும் கொடுக்கவில்லை. மேற்கு அரசுகள் எகிப்தின் மேல் பொருளாதார பகிஷ்கார நடவடிக்கை எடுத்த பிறகு நாஸர் அரசாங்கத்துக்குக் கடனுதவி கொடுத்தது. எகிப்தியர்களுக்கு உணவுப்

பொருள்களையும் மருந்துகளையும் அனுப்பத் தொடங்கியது.

1956 அக்டோபர் 29ந் தேதியன்று ஒரு லட்சம் வீரர்களைக் கொண்ட இஸ்ரேலிய இராணுவம் வஞ்சகமான முறையில் எகிப்தின் மீது படையெடுத்தது. இது நடைபெற்ற இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் பிரிட்டனும் பிரான்சும் கூட்டாக எகிப்துக்கு இறுதி எச்சரிக்கை கொடுத்தன. நாஸர் இஸ்ரேலியத் துருப்புகளை எதிர்ப்பதை நிறுத்த வேண்டும், சூயஸ் கால்வாய் பிரதேசத்தில் முக்கியமான இடங்களில் பிரிட்டிஷ், பிரெஞ்சுத் துருப்புகள் வைக்கப்படுவதை ஒத்துக்கொள்ள வேண்டும் என்று ஈடனும் பிரெஞ்சுப் பிரதமர் கி மோலேயும் கோரினார்கள். இந்த அவமானகரமான எச்சரிக்கையை நாஸர் ஆத்திரத்தோடு நிராகரித்தார். எகிப்தில் பொது ராணுவ அறைகூவலை அறிவிக்கும்படி உத்தரவிட்டார். பிறகு சைப்ரஸ் மற்றும் மால்டாவில் வைக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் விமானப்படை எகிப்திய விமான நிலையங்கள் மற்றும் இராணுவ இலக்குகளைத் தாக்கின. நவம்பர் 5ந் தேதியன்று பிரிட்டிஷ், பிரெஞ்சுத் துருப்புகள் போர்ட் செயிடில் இறங்கின.

எகிப்தின் மீது மூன்று அரசுகள் படையெடுத்திருப்பது ''கேவலமான ஆக்கிரமிப்பு நடவடிக்கை'' என்று நேரு கூறினார். ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் செயலாளருக்கு அனுப்பிய தந்தியில் ஆக்கிரமிப்பாளர்களைக் கண்டனம் செய்தார், பிரிட்டன், பிரான்ஸ், இஸ்ரேல் ஆகிய நாடுகளின் இராணுவத் தாக்குதலை நிறுத்துவதற்குத் தேவையான எல்லா நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

சோவியத் யூனியன் எகிப்தியக் குடியரசின் உதவிக்கு விரைந்தது. அண்மைக் கிழக்கு மற்றும் மத்திய கிழக்கில் சமாதானம் மறுபடியும் ஏற்பட சோவியத் யூனியன் உறுதியாக நடந்து கொண்டது ஆக்கிரமிப்பாளர்கள் தங்களுடைய இராணுவ நடவடிக்கையைக் கைவிடுமாறும் தாங்கள் ஆக்கிரமித்த பிரதேசங்களிலிருந்து துருப்புகளைத் திரும்பப் பெறுமாறும் நிர்ப்பந்தித்தது.

அண்மைக் கிழக்கிலும் மத்திய கிழக்கிலும் நெருக்கடியின் பிறப்பிடங்களை அகற்றுவதற்கும் அராபிய மக்களினங்களின் தேசிய சுதந்திரத்தை வலுப்படுத்துவதற்கும் சோவியத்

அரசாங்கத்தின் முயற்சிகளுக்கு நேரு முழு ஆதரவு கொடுத்தார்.

1958ம் வருடத்தின் கோடைகாலத்தில் லெபனுனிலும் ஜோர்டானிலும் அமெரிக்க-பிரிட்டிஷ் தலையீட்டின் விளைவாக அண்மைக் கிழக்கிலும் மத்திய கிழக்கிலும் மறுபடியும் நிலைமை சீர்கேடடைந்தபொழுது, அந்தச் சண்டையை நிறுத்த உடனடியாக நடவடிக்கைகள் எடுப்பதற்கு சோவியத் யூனியன், இந்தியா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகளின் தலைவர்களின் மாநாட்டை நடத்த வேண்டும் என்ற சோவியத் பிரேரணையை நேரு ஏற்றுக்கொண்டார். டல்லஸ்—ஐசன்ஹோவரின் நவீன காலனியாதிக்கக் கோட்பாட்டை அவர் கூர்மையாக விமர்சனம் செய்தார். அண்மைக் கிழக்கிலும் மத்திய கிழக்கிலும் பிரிட்டிஷ் மற்றும் பிரெஞ்சு செல்வாக்கு அழிந்துகொண்டிருப்பதன் விளைவாக ஏற்படுவதாகச் சொல்லப்படுகின்ற ''வெற்றிடத்தை'' அமெரிக்கா பூர்த்தி செய்ய வேண்டும், அந்தப் பிரதேசத்தில் ''கம்யூனிஸ்ட் ஊடுருவலை'' அனுமதிக்கக் கூடாது என்று அமெரிக்க அரசியல் வாதிகள் கூறிவந்தனர். அந்தப் பிரதேசத்தில் அமெரிக்காவின் மேலாதிக்கத்தை நிறுவுவதற்குச் செய்கின்ற முயற்சி இது என்பதைப் புரிந்து கொள்வது அத்தனை கஷ்டமல்ல.

இந்தியாவை விட்டு வெளியேறுமாறு பிரிட்டிஷ்காரர்கள் நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். அவர்கள் வெளியேறியதனுல் இந்தியாவில் எவ்வகையான ''வெற்றிடமும்'' ஏற்படவில்லை என்று நேரு மக்கள் சபையில் சுட்டிக் காட்டினுர். ''வெற்றிடத்'' தத்துவம் காலனியாதிக்கத்தைத் தூக்கியெறிந்து விடுதலையடைந்த எல்லா நாடுகளுக்குமே ஆபத்தானது. மேற்கு ஆசியாவில் ஏதேனும் ''வெற்றிடம்'' ஏற்பட்டிருந்தால், மேற்கு ஆசியாவைச் சேர்ந்த நாடுகளே தங்களுடைய பலம், ஒற்றுமை, முன்னேற்றத்தின் மூலம் அதைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

அதே சமயத்தில் மத்திய கிழக்கில் நிலையான சமாதானம் பாதுகாக்கப்படுவதற்குத் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினைகளை அவர் புறக்கணிக்கவில்லை. கிழக்கில் யூப்ரடீஸ் நதி வரையிலும் மேற்கில் நைல் நதி வரையிலும் தங்களுடைய பிரதேசத்தை விரிவுபடுத்த வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த இஸ்ரேலிய ஆளும் வட்டாரங்களின் விஸ்

தரிப்பு நோக்கங்களைப் பற்றி அவர் கவலைப்பட்டார்.

அராபிய நாடுகளுக்கும் இஸ்ரேலுக்கும் இடையிலுள்ள உறவுகளில் அபாயத்தை ஏற்படுத்தக் கூடிய நிரந்தரமான கூறு இருக்கிறதென்று 1958 ஆகஸ்டில் நேரு கூறினார். இஸ்ரேல் நிறுவப்பட்ட வினாடியிலிருந்தே அரபு நாடுகளுக்குத் தொல்லை கொடுக்கும் நிரந்தரமான தோற்றுவாயாக இருந்து வந்திருக்கிறது. அதற்கு இரண்டு வருடங்களுக்கு முன்பு எகிப் தின் மீது இஸ்ரேல் படையெடுத்தது அவர்களுடைய நினைவில் இன்னும் பசுமையாக இருந்தது. இதைத் தவிர, சிக்கல் மிகுந்த பாலஸ்தீன அகதிகள் பிரச்சினை இன்னும் நீடித்தது. அண்மைக் கிழக்கு மற்றும் மத்திய கிழக்குப் பிரதேசத்தில் எல்லா நாடுகளுக்கிடையிலும் நல்லெண்ணம் நிலவினால் மட் டுமே அங்கேயுள்ள சிக்கலான எல்லாப் பிரச்சினைகளையும் தீர்க்க முடியும் என்பதை நேரு குறிப்பிடத்தக்க விதத்தில் வலியுறுத்தினார். யுத்தத்தின் மூலம் அவற்றைத் தீர்க்க முடி யாது, ஏனென்றால் யுத்தம் தொடங்கினால் அது சுலபமாக உலக யுத்தமாக மாறிவிடலாம்.

ஏகாதிபத்திய, காலனியாதிக்க சக்திகள் உலகத்தின் ஏதாவ தொரு பகுதியில் (காங்கோவில், மேற்கு பெர்லினில் அல் லது கியூபா கடற்கரையை ஒட்டிய கரிபியன் கடலில்) ஆத்திரமூட்டுகின்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டதன் பலனாக சமாதானத்துக்கும் நாடுகளின் பாதுகாப்புக்கும் ஆபத்தேற் படுத்திய பொழுதும், நேருவின் தலைமையிலான இந்திய அரசாங்கம் இத்தகைய தொலை நோக்குடைய, சமாதான ஆதரவுப் பாதையைப் பின்பற்றியது. –

சோவியத் யூனியனும் இந்தியாவும் படைக்கலைப்பு பற்றிய பிரச்சினைகளுக்கு மிகவும் அதிகமான முக்கியத்துவத்தைக் கொடுத்தன. ஆயுதப் போட்டியை நிறுத்த வேண்டும், ஆயுதங்களைக் குவித்துவைப்பதைக் குறைத்து இறுதியில் அவை யனைத்தும் அழிக்கப்பட வேண்டும் என்ற நோக்கங்களுக்காக நடைபெறும் போராட்டம் தன்னுடைய அரசாங்கத்தை எதிர் நோக்கியுள்ள முக்கியமான கடமைகளில் ஒன்று என்பது நேருவின் கருத்து. மிக முந்திய காலமான 1940ம் வருடத்தி லேயே, சுதந்திர இந்தியா பொதுவான படைக்கலைப்பைத் தன் முழு பலத்தோடும் ஆதரிக்கும், இந்தப் பிரச்சினையில் உலகத்துக்கு முன்னுதாரணமாக இருப்பதற்கும் கூடத் தயா

ராய் இருக்கும் என்று இந்திய தேசிய காங்கிரஸ் தலைவர்கள் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

காற்றுமண்டலத்தில், அண்ட்வெளியில், ஆழ்கடலில் அணு ஆயுதப் பரிசோதனைகளைத் தடை செய்யும் ஒப்பந்தம் மாஸ்கோவில் 1963 ஆகஸ்டு 5ல் கையெழுத்திடப்பட்டபொழுது, இந்த ஒப்பந்தம் ஒரு புதிய தொடக்கம், மனிதகுலத்தை மூடியிருந்த அச்சம் என்ற மரணப்போர்வையை அது கிழித்து விட்டது, நவீன வரலாற்றில் ஒரு திருப்புமுனை என்ற முறையில் படைக்கலைப்புக்கும் சமாதானத்துக்கும் வழியைத் திறந்து விட்டிருக்கிறது என்று நேரு கூறினார். வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த ஆவணத்தில் முதலில் கையெழுத்திட்ட நாடுகளில் இந்தியாவும் ஒன்று.

நேருவின் வெளிநாட்டுக் கொள்கையில் நேர்மையும் நிலையான தன்மையும் இருந்தன என்றால் அவருடைய உள்நாட்டுக் கொள்கையில் சில முரண்பாடுகள் இருந்தன. சமரசங்கள் மற்றும் அரசின் சீர்திருத்தங்கள் மூலமாக வர்க்கங்களுக்கிடையே ஏற்படுகின்ற ஒத்துழைப்பின் அடிப்படையில் சமூக வளர்ச்சியை ஏற்படுத்துவது சாத்தியம் என்ற அவருடைய நம்பிக்கை, கூர்மையான சமூக மோதல்களைத் தீர்ப்பதில் மகாத்மா காந்தியின் அறநெறிப் போதனையை எல்லா சந்தர்ப்பங்களிலும் ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும் என்ற முயற்சி அவரை தேசிய விடுதலை இயக்கத்தின் பொது ஜனநாயகக் கட்டத்தின் எல்லைகளுக்குள் உறுதியாக நிறுத்தின.

ஆளும் கட்சியின் அடுக்கமைவில் அதிக வேறுபாடான தன்மை இருந்தது. காலனியாதிக்க எச்சங்களை அகற்றுவதோடு சம்பந்தப்பட்ட, தீர்க்கப்படாத பொது ஜனநாயகக் கடமைகளும் பிரச்சினைகளும் எண்ணிக்கையில் மிக அதிகமாக இருந்தன. அந்த நிலைமைகளில் நேரு எல்லா வர்க்கங்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வளமான அரசையும் வருமானங்களில் அதிக ஏற்றத்தாழ்வு இல்லாத, எல்லோருக்கும் சமமான வாய்ப்புக்களைத் தருகின்ற சோஷலிஸ்ட் பாணி சமூகத்தையும் நிறுவுவதற்கு அறைகூவல் விடுத்தார். காந்தியின் போதனையைப் பின்பற்றி வர்க்கங்களுக்கிடையே சமாதானத்துக்கும் ஒத்துழைப்புக்கும் ஆதரவாக நேரு மென்மேலும் அதிகமாகப் பேசினார். அதே சமயத்தில் இந்தக் கருத்தை வாழ்க்கை தொடர்ச்சியாக நிராகரிப்பதையும் அவர் கண்டார். தனி

உரிமைகளையும் வசதிகளையும் கொண்ட வர்க்கங்கள் நேரடியான வன்முறையில் ஈடுபட்டன, உழைப்பாளிகளை மூர்க்கத்தனமாக ஒடுக்கின. அரசியலமைப்புச் சட்டம் எல்லா இந்தியர்களுக்கும் சமவாய்ப்புக்களை வழங்கியிருக்கிறது. ஆனால் நடைமுறையில் ஏற்றத்தாழ்வுகள் தொடர்ந்து நீடித்தன என்பதோடு அவை தீவிரமடைந்தன.

நேருவின் சிந்தனைகள், முயற்சிகள் அனைத்துமே இந்திய மக்களின் எதிர்காலத்தோடு பிணைந்திருந்தன. ஆனால் ஒடுக்கப்பட்ட மக்களின் துயரத்தைக் குறைக்க வேண்டும் என்று அவர் உணர்ச்சிகரமாக விரும்பிய அதே சமயத்தில் வெறும் கற்பனைகளைக் கொண்டு ஆறுதலடையவில்லை. ''சமீப வருடங்களில் ஏகபோகங்கள் எவ்வளவு அதிகமாக வளர்ச்சியடைந்திருக்கின்றனவோ, அந்த அளவுக்கு சோஷலிசத்திலிருந்து நாம் விலகிப் போய்விட்டோம்'', என்று ஒத்துக் கொள்கிறார். ஏனென்றால் ''ஏகபோகங்கள் சோஷலிசத்தின் எதிரிகள்'' என்று எடுத்துக் காட்டுகிறார். மக்கள் போராடிப் பெற்ற சுதந்திரத்தின் பலன்களை முதலில் அனுபவிக்கத் தொடங்கிய பெரிய முதலாளிகள் மென்மேலும் பிற்போக்கானவர்களாக மாறுவது அவருக்குத் தெளிவாயிற்று. காலனியாதிக்கத்தின் போது சுதேசத் தொழில்களின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தக் கூடிய சட்டங்கள் இருந்தன. அவை அகற்றப்பட்ட பிறகு சுதேச முதலாளிகள் நாட்டில் உள்ள மலிவான உழைப்புச் சக்தியைப் பயன்படுத்திக் கொள்ளை லாபமடிக்க முடிந்தது, இந்தியாவின் தொழில்துறை, விவசாய உற்பத்திகள் உலகச் சந்தையில் போட்டி போடுவது சாத்தியமாயிற்று. ஆகவே பெரிய முதலாளிகளுக்கு இந்தியாவின் தேசிய விடுதலைப் போராட்டம் இந்தக் கட்டத்தோடு முடிவுக்கு வந்துவிட்டது. ஆனால் நேருவும் அவருடைய ஆதரவாளர்களான முற்போக்கு சக்திகளும் மேலும் முன்னேறிச் செல்ல விரும்பினார்கள். மொத்த இந்திய மக்களின் விருப்பார்வங்களைத் திருப்தி செய்யக் கூடிய, ஆசியாவில் மாபெரும் நாடாக இந்தியா வளர்ச்சியடைவதற்கு உதவக் கூடிய தீவிரமான சீர்திருத்தங்களை நிறைவேற்ற விரும்பினார்கள்.

நாட்டில் தேசிய இன மற்றும் மொழி அடிப்படையில் மாநிலங்களைப் பிரித்தல், ஆரம்ப நிலச் சீர்திருத்தங்களை அமுல் நடத்துதல், கன்னி நிலங்கள் மற்றும் தரிசு நிலங்களில்

விவசாயம் செய்தல், நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்று தல், கிராமப்புறத்தில் பாதைகள் அமைத்தல், அரசு கால் நடைப் பண்ணைகளும் விதைப் பண்ணைகளும் ஏற்படுத்தல், கிராம வளர்ச்சித் திட்டங்களின் மூலம் நவீன விவசாயத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி கிராமங்களில் சமூக-கலாச்சார அபிவிருத்தியை ஏற்படுத்துதல், கல்வித்துறை அமைப்பை விஸ்தரித்து எல்லா வழிகளிலும் விஞ்ஞானம் மற்றும் கலைகளின் வளர்ச்சியை ஊக்குவித்தல் ஆகிய பணி களை நிறைவேற்றக் கூடிய முறையில் நிர்வாக அமைப்பில் நேருவின் தலைமையில் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டு வந்தன.

ஆனால் நாட்டைத் தொழில்மயமாக்குவதும் திட்டமிட்ட அடிப்படையில் பொருளாதாரத்தைத் திருத்தியமைப்பதும் அவ ருடைய உள்நாட்டுக் கொள்கையின் முக்கிய நோக்கங்களாக இருந்தன.

காலனியாட்சியின் எச்சங்களை அகற்றுவதற்குப் பூர்வாங்க நடவடிக்கைகள் எடுப்பதும் இந்தியாவின் பல அடுக்குப் பொரு ளாதாரத்தில் காலாவதியான சமூக உறவுகளைத் திருத்திய மைப்பதும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் (1951/52—1955/56) அடிப்படையான நோக்கமாகும். அத்திட்டத்தின் வெற்றி நேருவுக்கு ஊக்கமளித்தது, எடுத்த காரியம் வெற்றி பெறும் என்ற நம்பிக்கையைக் கொடுத்தது. சோவியத் யூனி யனுக்கு விஜயம், சோவியத் திட்டகர்த்தாக்களுடன் நெடு நேரம் நடத்திய உரையாடல்களும் விவாதங்களும், சோஷ லிஸ்ட் நாடுகளில் திட்டக் கொள்கையைப் பற்றிய பரிபூரண தத்துவ அறிவும் நேரடி அனுபவமும், கடந்த சில வருடங்களாக அவருக்கு ஏற்பட்டிருந்த சொந்த அனுபவமும் திட்டக் கமி ஷனின் தலைவர் என்ற முறையில் நேரு இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டத்தைத் (1956/57—1960/61) தயாரிப்ப தற்கு உதவியது. அந்தத் திட்டம் சோவியத் யூனியன் கொடுக்கும் பொருளாதார, தொழில்நுட்ப உதவியைக் கணக் கில் எடுத்துக் கொண்டு நாட்டைத் தொழில்மயமாக்குவதற்கு விரிவான செயல்திட்டத்தைக் கொண்டிருந்தது.

இந்திய தேசிய காங்கிரசின் வலதுசாரி அணியினர் மற் றும் தன் மந்திரி சபையில் சில உறுப்பினர்களின் எதிர்ப்பைச் சமாளித்து ''தொழில்துறை சம்பந்தமாக இந்திய அரசாங் கத்தின் புதிய கொள்கையை'' 1956 ஏப்ரலில் நேரு நிறை

வேற்றினர். தொழில் வளர்ச்சி, சக்தி உற்பத்தி, போக்கு வரத்து ஆகிய தலைமையான துறைகளில் தனியார் துறையைக் காட்டிலும் அரசுக்கு முன்னுரிமை கொடுக்கப்பட்டது.

இந்தியாவில் தனியார் தொழில் வளர்ச்சிக்குக் கணிசமான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு அரசுத் தொழில்துறை பலப்படுத்தப்பட்டிருந்தாலும் பொருளாதார உறவுகளைத் தீவிரமாக, நேர்மையாக ஆராயும் தகுதிகொண்டவர் என்ற முறையில் நேரு இந்தியாவில் அவற்றை அதிகமான அளவுக்கு இலட்சியப்படுத்த விரும்பவில்லை. இந்தியப் பொருளாதாரம் கணிசமான அரசு கட்டுப்பாட்டைக் கொண்ட முதலாளித்துவப் பொருளாதாரம் அல்லது அரசின் நேரடியான நிர்வாகத்திலுள்ள பொதுத் துறையைக் கொண்ட முதலாளித்துவப் பொருளாதாரம் என்று நேரு கூறினர். ஆனல் இந்த இந்தியத் தலைவன் வளர்ச்சியுறும் நாடுகளின் பொருளாதாரத்தில் அரசுத் துறையின் முக்கியத்துவத்தை குறைத்து மதிப்பிடவேயில்லை.

அவருடைய நூலகத்தில் லெனின் எழுதிய நூல்களை வைத்திருந்தார். அவற்றை அடிக்கடி படித்தார். எனவே ''அரசு முதலாளித்துவம் என்பது மத்தியப்படுத்தப்பட்ட, கணக்கெடுக்கப்பட்ட, கட்டுப்படுத்தப்பட்ட, சமூகமயமாக்கப்பட்ட ஒன்று''* என்றும் ''சிறு உடைமையாளர் (தந்தை வழிச் சிறு உடைமையாளர் மற்றும் குட்டி முதலாளித்துவ ஆகிய இருவருமே) என்ற கூறுடன் ஒப்பிடும் பொழுது அரசு முதலாளித்துவம் முன்னல் எடுத்துவைக்கப்பட்ட காலடியே''** என்றும் லெனின் எழுதியவை அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

இந்தியப் பொருளாதாரத்தில் திட்டமிடுதல், அரசுத் துறை ஆகியவை நாட்டின் பொருளாதார, சமூக உறவுகளின் சென்ற காலத் தன்மையை மாற்றியமைக்கின்ற ''அதிகச் சுறுசுறுப்பான, புரட்சிகரமான கூறு'' என்று நேரு கருதினர்.

பொருளாதார வளர்ச்சியை அரசு திட்டமிட்ட முறையில் நிர்வகித்ததானது, நேருவும் அவருடைய அரசாங்கமும் பொருளாயத மற்றும் நிதித்துறைச் செல்வாதாரங்களை அறிவுக்குப்

---

* V. I. Lenin, *Collected Works,* Vol. 27, p. 294.

** V. I. Lenin, *Collected Works,* Vol. 32, p. 345.

பொருந்திய முறையில் பகிர்ந்தளிக்கவும் நாட்டிற்கு அத்தியா வசியமான தொழில் துறைகளில் அதிகமான வளர்ச்சி விகிதத்தை உறுதிப்படுத்தவும் அந்நிய ஏகபோகங்களைச் சார்ந் திருப்பதைக் குறைக்கவும் பொதுவான தேசியக் கடமைகளை நிறைவேற்றுகின்ற திசையில் மக்களுடைய ஆற்றலைத் திருப் பவும் கடைசியாக, இந்தியா பொருளாதார சுதந்திரம் பெற வும் உதவியது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தயாரித்துக் கொண்டிருந்த பொழுது நேரு தொழில்மயமான இந்தியா வைப் பற்றிக் கனவு கண்டார். நிர்மாணப் பணிகள் நடை பெறும் இடங்களுக்குச் செல்லும் பொழுது, அடித்தளக் கல் நாட்டும் பொழுது அல்லது புதிய தொழிற்சாலை, விஞ் ஞான மையம், அணை ஆகியவற்றைத் திறக்கும் பொழுது நேரு எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார் என்பதை மக்கள் கண்டார்கள்.

''லட்சக் கணக்கான சகோதர மக்களின் நன்மைக்காக ஆயிரக் கணக்கானவர்கள் பிரம்மாண்டமான கட்டிடங்களை எழுப்புகின்ற நிர்மாண வேலை நடைபெறும் இடங்களை நான் ஆலயங்கள், பிரார்த்தனை செய்யும் இடங்கள் என்று கூறுகி றேன். முன்னேற்றத்துக்காகவும் சிறப்பான வாழ்க்கைக்காகவும் மக்கள் தங்களுடைய இரத்தத்தையும் வியர்வையையும் அர்ப் பணிக்கின்ற இடங்கள் புனிதமானவை. அங்கே அவர்கள் துன்பமடைகிறார்கள், ஆனால் தோல்வியடைவதில்லை. இவை புதிய சகாப்தத்தின் ஆலயங்கள், மாதாகோவில்கள், மசூதி கள்'' என்று நேரு கூறினார்.

அவருடைய படிப்பறையில் ஒரு பக்கச் சுவர் முழுவ தையும் அடைத்துக்கொண்டு ஒரு பெரிய தேசப் படம் இருந்தது. ஐந்தாண்டுத் திட்டத்தில் புதிய நிர்மாணப் பணி கள் நடைபெறுகின்ற இடங்கள் அனைத்தையும் நேரு அதில் குறித்திருந்தார். அவர் அடிக்கடி அதற்குப் பக்கத்தில் போய் நெடுநேரம் அதைப் பார்த்துக் கொண்டிருப்பார். அந்தப் படத்தில் பஞ்சாப் சமவெளிக்கு வடக்கே, சட்லெஜ் நதியின் மேல் ஒரு இடம் குறிக்கப்பட்டிருந்தது. அந்த இடத்தில் பக்ரா நங்கல் அணைக்கட்டு நிர்மாணிக்கப்பட்டு வந்தது.

இந்தியாவில் பல நதிகள் இமயமலையின் பனிப்பாறை களிலிருந்து உற்பத்தியாகின்றன. ஒரு வருடத்தில் ஆறு

மாதங்கள் அவை இந்தியச் சமவெளிகளில் சிற்றாறுகளாகப் பாய்கின்றன. எல்லாவற்றையும் பொசுக்கும் சூரியக் கதிர்கள் பூமியில் தண்ணீரை ஆவியாக்கி விவசாயிகளின் பயிரை எரித்துவிடுகின்றன. மழைக்காலம் வந்ததும் சிற்றாறுகள் ஒன்றுசேர்ந்து பெரிய நதியாக மாறுகின்றன. நதியில் வெள்ளம் பெருகி கரையை மீறிப்பாய்ந்து வயல்களை அழித்து வளமான மண்ணைக் கடலுக்கு அடித்துச் செல்கின்றது. வாழ்க்கைக்கு அவசியமான தண்ணீர் வெள்ளமாக வரும் போது அழிவையும் மரணத்தையும் கொண்டு வருகிறது.

நேரு இதைப் பற்றி நிபுணர்களைக் கலந்தாலோசித்து திட்டக் கமிஷனின் நிபுணர்களோடு விவாதித்தார். மலைகளிலிருந்து ஓடிவருகின்ற நதிகளின் பாதையில் அணைகளைக் கட்டி அவற்றின் தண்ணீரைத் தேக்கி விவசாயத்துக்குப் பயன்படுத்தினால் வருட முழுவதிலும் விவசாயத்துக்குத் தண்ணீர் கிடைக்கும், வறட்சி நிலைமையும் வெள்ளப் பெருக்கும் மறுபடியும் ஏற்படாமற் செய்ய முடியும், அந்தத் தண்ணீரிலிருந்து மின்சாரத்தை உற்பத்திசெய்து கிராமங்களில் இருளை அகற்ற வேண்டும் என்று நேரு கூறினார்.

அந்த தேசப் படத்தில் சோட்டா—நாகபுரி இரும்புத் தாதுப் பிரதேசத்தில் பிலாய் என்ற கிராமத்தில் ஒரு இடம் குறிக்கப்பட்டிருந்தது. அந்த இடத்தைப் பற்றி அதற்கு முன்பு யாருக்குமே தெரியாது. ஒரு சிலருக்குத் தெரிந்திருந்தாலும் அவர்களும் அதை மறந்துவிட்டார்கள். சில வருடங்களுக்கு முன்பு சில இந்தியத் தொழிலதிபர்கள் அந்த இடத்தில் உருக்குத் தொழிற்சாலை கட்ட விரும்பினார்கள். அதற்கு உதவி செய்யுமாறு பிரிட்டிஷ், அமெரிக்க முதலாளிகளை அணுகிய பொழுது அவர்கள் உடனடியாக மறுத்தார்கள். இது முற்றிலும் புரிந்து கொள்ளப்படக் கூடியதே. இந்தியாவில் உருக்கு, உலோகத் தொழிலை நிறுவுவதில் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் அக்கறை கிடையாது. அவர்கள் தங்களுடைய உருக்கை இந்தியாவுக்கு மும்மடங்கு அதிகமான விலைக்கு விற்பனை செய்ய விரும்பினார்கள். மேலும் இந்தியா எப்பொழுதும் தங்களுடைய சப்ளையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.

சோவியத் யூனியனுக்கு நேரு விஜயம் செய்து பிலாயில் அரசுத் துறையில் உருக்குத் தொழிற்சாலை கட்டுவதற்கு

சோவியத் உதவி ஒப்பந்தம் செய்யப்பட்டு ஒரு வருடம் முடிவதற்குள்ளாகவே உருக்குத் தொழிற்சாலையின் தொழில் நுட்ப விவரங்கள் இந்தியர்களிடம் கொடுக்கப்பட்டன, தொழிற்சாலையைக் கட்டுகின்ற வேலையும் ஆரம்பமாகி விட்டது.

பிலாயில் இயந்திரங்களின் உறுமலும் கர்ச்சனையும் வங்காளம், பஞ்சாப், கேரளம், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களிலிருந்து ஆயிரக்கணக்கான இந்தியர்களை அங்கே கொண்டு வந்து சேர்த்தன. அந்தச் சிறு கிராமம் ஒரு மாபெரும் தொழிற்சாலையை நிர்மாணிக்கும் இடமாக மாறியது. அது பிரம்மாண்டமான எறும்புப் புற்றைப் போலத் தோன்றியது. பூமியிலிருந்து இலட்சக் கணக்கான டன் மண்ணை வெட்டியெடுக்க வேண்டும், ஐந்து லட்சம் கன மீட்டர் கான்க்ரீட் கலவையைக் கொட்ட வேண்டும், ஐயாயிரம் மின்சார இயந்திரங்களைப் பொறுத்த வேண்டும், நூற்றுக் கணக்கான கிலோமீட்டர்களுக்கு இரயில் பாதைகளையும் குழாய்களையும் போட வேண்டும், ஏராளமான கட்டிடங்களையும் ஊதுலைகளையும் சோவியத் யூனியன் கொடுக்கும் மிகவும் நவீனமான இயந்திரங்களையும் நிறுவ வேண்டும்.

இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கொடிக்கப்பலாக பிலாய் மாறியது.

பல நூற்றாண்டுகளாக உறக்கத்திலாழ்ந்திருந்த இந்தியா நேற்றுத்தான் விழித்துக் கொண்டது. ஆனால் எதிர்கால இந்தியா ஏற்கெனவே நேருவின் கண்களுக்குத் தெரிந்தது. விஞ்ஞானத் தொழில்நுட்பப் புரட்சி யுகத்துக்குள் உடனே காலடி வைப்பது சுலபமான விஷயமல்ல. அதற்கு மொத்தமாக நாட்டின் முயற்சிகளை ஒன்று குவிக்க வேண்டும், நண்பர்களாக உள்ள அரசுகளின் தன்னலமற்ற உதவிகளைத் திரட்ட வேண்டும். அதே சமயத்தில் கட்சியிலும் அரசாங்கத்திலுமுள்ள சடத்துவம், பழமைவாதம், மோதல்கள், கருத்து வேறுபாடுகளை அகற்ற வேண்டும். 20ம் நூற்றாண்டுக்குள் நுழைவது மட்டும் போதுமானதல்ல, 21ம் நூற்றாண்டு வெகு தூரத்தில் இல்லை, ஆனால் இந்தியா இன்னும் நிலப் பிரபுத்துவ விலங்குகளை உடைக்கவில்லை என்பதை நிரூபிக்க வேண்டும். இந்தியா தனக்கென்று ஒரு எதிர்காலத்தை உருவாக்க வேண்டுமென்றால் அது தன் வாழ்க்கைப் போக்கை

வேகப்படுத்த வேண்டும், நிர்மாணிக்க வேண்டும், படைக்க வேண்டும், துணிச்சலோடு செயலாற்ற வேண்டும்.

இந்தியாவின் அணுசக்திக் கமிஷன் நேருவின் தலைமையில் இருந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பம்பாயில் அணு உலையைக் கட்டுதல் இடம் பெற்றிருந்தது. நேற்று ''கூலிகளாக'' இருந்தவர்கள் தேவதைக் கதைகளில் சொல்லப்படுகின்ற சக்தியின் ''ஆலயத்தை'' நிர்மாணித்துக் கொண்டிருந்தார்கள். அது எதிர்காலத்தில் வரப் போகின்ற தலைமுறைகளின் வாழ்க்கையைத் தீவிரமாக மாற்றும். இந்தியாவை வளங்கொழிக்கின்ற, மலர்ச்சியடைந்த நாடாக மாற்றப் போகிறது.

சுதந்திரத்தின் பொருளாதார அடிப்படைகளை உருவாக்குவது, இந்தியாவின் சமூக, கலாச்சார, அரசியல் வாழ்க்கையில் காலனியாதிக்க மரபுகளை அகற்றுவது என்ற அரசாங்கக் கொள்கை நேரு மற்றும் காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கைப் பலப்படுத்தியது. எனினும் இந்தியாவின் ஏகபோக முதலாளிகளும் அவர்களுடைய அரசியல் ஸ்தாபனங்களும் இந்தக் கொள்கையை அவ்வப்போது எதிர்க்கத் தலைப்பட்டன.

இந்தியாவின் ஏகபோக முதலாளியான ஏ. டி. ஷ்ராஃப் சுதந்திரத் தொழில் முறைச் சங்கம் என்ற அமைப்பைத் தொடங்கினர். காங்கிரஸ் கட்சிக்கு உள்ளேயும் வெளியிலும் இருக்கின்ற நேரு அணியை வெளியேற்றி அந்த இடத்தில் பழமைவாதக் கோஷ்டியை வைப்பது இந்தச் சங்கத்தின் நோக்கம். ''நேருவின் சோஷலிசத்துக்கு எதிராக இந்து மத மரபு மற்றும் பழமைவாதிகள் தொடுத்த புனிதப் போருக்குப்'' பண உதவி செய்வதற்கு உடனே அமெரிக்கக் கோடீசுவரர்களின் கோஷ்டிகள் முன்வந்தன. நாட்டின் அரசியல் வாழ்க்கையின் மேற்பரப்பில் மினு மசானியின் ஆபத்தான உருவம் தோன்றியது. அவர் அதிதீவிரமான பிற்போக்காளர்களின் பிரதிநிதி, ஒரு கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஸ்தாபனத்தின் தலைவர். இந்தியாவிலுள்ள அமெரிக்க தூதரகத்தின் பண உதவியைக் கொண்டுதான் அந்த ஸ்தாபனம் இயங்கிவந்தது என்று *Liberation* என்ற பிரெஞ்சுப் பத்திரிகை ஆதாரங்களோடு அம்பலப்படுத்தியது. மசானி வலதுசாரி காங்கிரஸ்காரர்களோடு அரசியல் கூட்டணி அமைத்துக்கொண்டு நேருவுக்கு எதிர்ப்பை சிருஷ்டித்தார், காங்கிரஸ் கட்சிக்குச் சவால்

விடக் கூடிய ஒரு புதிய கட்சியை அமைக்கின்ற அளவுக்குக் கூடச் சென்ருர்.

இந்து மகாசபை மறுபடியும் தலையைத் தூக்கிற்று. அது பஞ்சசீலத்தை நிராகரித்து நாட்டை இராணுவமயமாக்க வேண்டுமென்று கோரியது. மற்ரெரு வலதுசாரிக் கட்சியான ஜன சங்கமும் அதனேடு சேர்ந்து கொண்டது. அது பாகிஸ் தானை ''மூட வேண்டும்'', பாகிஸ்தானேடு யுத்தம் செய்ய வேண்டுமென்று கோரியது.

1957ல் நாடாளுமன்றத்துக்கும் மாநில சட்ட மன்றங் களுக்கும் பொதுத் தேர்தல் நடைபெற்ற பொழுது நேரு இரண்டாவது முறையாக வெற்றிகரமான பிரச்சாரத்தை நடத்திஞர். காங்கிரஸ் மற்ற எல்லாக் கட்சிகளையும் வெகு தூரம் பின்ஞல் தள்ளி விட்டு சிறப்பான முறையில் வெற்றி பெற்றது. மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி களின் எண்ணிக்கையில் கம்யூனிஸ்ட் கட்சி மறுபடியும் இரண் டாவது இடத்தைப் பெற்றது. கேரள மாநிலத்தில் கம்யூனிஸ்டு கள் வெற்றியடைந்து முதன்முறையாக அரசாங்கத்தை அமைத்தார்கள்.

நாட்டின் அரசியல் வாழ்க்கையில் இடதுசாரி சக்திகள் பலம் பெறுவதைக் கண்டு பழமைவாதத் தலைவர்கள் எரிச்ச லடைந்தார்கள். காங்கிரஸ் கட்சியின் முந்தைய மூத்த தலைவர்களில் ஒருவரான இராஜகோபாலாச்சாரியார் (இரா ஜாஜி என்று சுருக்கமாக அழைக்கப்படுபவர்) இந்தியா அமெரிக்காவை ஆதரிக்க வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டிருந்தவர். அவரும் மசானியும் சுதந்திரக் கட்சியை அமைத்தார்கள். அவர்கள் நேருவின் கொள்கையைப் பகிரங்க மாக எதிர்த்தார்கள், நிலச் சீர்திருத்தங்களையும் அரசுத் துறையையும் இந்தியப் பொருளாதார வாழ்க்கையைத் திட் டமிட்ட முறையில் நிர்வகிப்பதையும் எதிர்த்தார்கள்.

ஆஞல் அந்தக் காலகட்டத்தில் வலதுசாரிப் பிற்போக்கு வாதத்திஞல் நேருவின் பெரும் செல்வாக்கையும் அரசியல் நிலையையும் தீவிரமாக அசைக்க முடியவில்லை. நாடு தன்னு டைய தலைவருக்குப் பின்ஞல் உறுதியாக நின்றது. நேரு வின் உள்நாட்டுக் கொள்கையும் வெளிநாட்டுக் கொள்கை யும்—நாட்டிற்கு உள்ளேயும் வெளியிலும்—மென்மேலும் அதிக மான ஆதரவைப் பெற்றது. எனினும் இது தன்னுடைய

தனிப்பட்ட சாதனை என்று பிரதம மந்திரி சிறிதும் கருத வில்லை. அவர் தன்னுடைய அரசாங்கத்தின் பணியை மிகவும் புறநிலையான முறையில் மதிப்பிட்டார். அரசுக் கொள்கையை உருவாக்குவதில் தனிநபருடைய பாத்திரத்தை மிகைப்படுத்து வதற்கு எதிராகப் பேசினார்.

இந்தக் கொள்கையை ''நேரு கொள்கை'' என்று சொல்வது முற்றிலும் தவறு, ஏனென்றால் நான் இந்தக் கொள்கையை விளக்கிக் கூறுகின்ற பணியையே செய்தேன் என்று மக்கள் சபையில் பேசும்பொழுது அவர் கூறினார். இந்தக் கொள்கை என்னிடமிருந்து பிறக்கவில்லை, இது இந்தியாவின் சந்தர்ப்பங்களில், இந்தியாவின் கடந்தகாலச் சிந்தனையில், இந்தியாவின் மொத்த மனோபாவத்தில், விடுதலைப் போராட்டத்தின் போது இந்தியாவின் சித்தத்துக்கு ஏற்பட்ட முன் வரையறைகளில், அன்றைக்கிருந்த உலக சந்தர்ப்பங்களில் உள்ளுறையாக இருந்த கொள்கையே என்று விளக்கினார். ''கடந்த சில வருடங்களாக வெளிநாட்டு அமைச்சர் என்ற முறையில் அந்தக் கொள்கையை நான் பிரதிநிதித்துவப்படுத்தினேன், அந்தத் தற்செயலான விஷயத்தின் மூலமாகவே இதில் நான் சம்பந்தப்பட்டிருக்கிறேன்'' என்றார். ''இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கைக்கு யார் பொறுப்பாக இருந்திருந்தாலும், இந்தியாவில் எந்தக் கட்சி ஆட்சியை நடத்தியிருந்தாலும் அவர்கள் இந்தக் கொள்கையிலிருந்து அதிகமாக விலகியிருந்திருக்க முடியாது என்று நான் உறுதியாக நம்புகிறேன்'' என்றார்.

...உயர்ந்த அந்தஸ்தைக் கொண்ட வெளிநாட்டு விருந்தினர்களை வரவேற்பதற்காக நேரு பாலம் விமான நிலையத்துக்கு வருகின்ற பொழுது வழக்கமாக உற்சாகத்தோடிருப்பார். நாட்டுக்கு வருகின்ற தலைவர்களும் இந்தியாவும் அக்கறை கொண்டுள்ள முக்கியமான பிரச்சினைகளுக்கு நியாயமான தீர்வு காண்பதற்காக இராஜியவாதிகள் அந்தப் பிரச்சினைகளை விளக்குவதிலும் விரித்துரைப்பதிலும் புரிந்து கொள்வதிலும் பல நாட்களைச் செலவிட்ட பிறகுதான் இத்தகைய உயர் மட்ட விருந்தினர்கள் நாட்டுக்கு வருகை யளிக்கிறார்கள் என்பதை அவர் உணர்ந்தவர். ஆனால் 1960 ஏப்ரல் 19ந் தேதியன்று சீன மக்கள் குடியரசின் பிரதமர் சூஎன்லாய் வெளிநாட்டமைச்சர் சென்யி ஆகியோரை வர

வேற்பதற்காக நேரு பாலம் விமான நிலயத்துக்கு வந்த பொழுது அத்தகைய சந்தர்ப்பத்துக்குரிய எழுச்சியோ, அவர் களுடைய வருகையினுல் பலன் ஏற்படும் என்ற உறுதியோ அவரிடம் காணப்படவில்லே. அரசியல் தலேவர்களுக்கிடையே தனிப்பட்ட சந்திப்புகளே அவர் இன்னும் நம்பியதால் அவரிடம் ஒரு லேசான நம்பிக்கை ஏற்பட்டிருக்கலாம். ஆம், இந்தியாவும் சீனுவும் சில வருடங்களுக்கு முன்பு நல்ல அண்டை நாடுகளாகவும் நட்புணர்ச்சி கொண்ட வையாகவும் இருந்தன. இன்று இரண்டு நாடுகளுக் கும் இடையே அவநம்பிக்கை, சந்தேகம், பகைமை கூட ஏற்பட்டிருக்கின்றன. அவருக்கும் சூஎன்லாய்க்குமிடையே அந் தரங்கமான பேச்சுவார்த்தைகள், ஒளிவு மறைவில்லாத, நேர் மையான கருத்துப் பரிவர்த்தனேகள் மிகக் குறைந்த அளவி லேனும் இவற்றை அகற்ற உதவி செய்யும் என்று அவர் நம்பினுர்.

1959 மார்ச்சில் திபெத்தில் நடைபெற்ற சம்பவங் களுக்குப் பிறகு, சீன ஆட்சியாளர்கள் தங்களேத் தொடர்ச்சி யாக ஒடுக்குவதை எதிர்த்து லாஸா நகர மக்கள் கலகம் செய்த பிறகு இரு நாடுகளுக்கும் இடையில் உறவுகள் சீர்கேடடைந்தன. திபெத்திய மக்களின் எழுச்சி மூர்க்கத் தனமாக நசுக்கப்பட்டது. அடக்குமுறையிலிருந்து தங்களேக் காப்பாற்றிக் கொள்வதற்காக திபெத்திய மக்களில் ஒரு பகுதியினர் இந்தியாவுக்கு ஓடிவந்தார்கள். மார்ச் 31ந் தேதி யன்று திபெத்தின் சிவில் மற்றும் மதத் தலேவரான தலாய் லாமா இந்தியாவுக்கு வந்தார். அவருக்கும் மற்ற திபெத்தியர் களுக்கும் இந்திய அரசாங்கம் அடைக்கலம் கொடுத்தது. தலாய்லாமா மற்றும் அவருடைய ஆதரவாளர்களேப் பூரண மாக ஆதரிக்க வேண்டும் என்று இந்தியாவின் சில வட்டாரங் களில் எழுந்த கோரிக்கைகளுக்கு நேரு செவிசாய்க்கவில்லே. சீனுவுடன் நட்புறவுகள் நீடிப்பதை இந்தியா விரும்புவதை அவர் வலியுறுத்தினுர்.

1959ம் வருடத்தின் நடுப்பகுதிக்குள்ளாகவே சீனுவின் உள்நாட்டு விவகாரங்களில் நேரு அரசாங்கம் தலேயிடுகிறது என்று குற்றஞ்சாட்டுகின்ற கட்டுரைகள் பீகிங் செய்தித்தாள் களில் தொடர்ச்சியாக வந்து கொண்டிருந்தன. கராச்சியிலுள்ள சீனத் தூதருக்கும் பாகிஸ்தான் வெளிநாட்டு அமைச்சருக்கும்

நடைபெற்ற உரையாடலைப் பற்றி இரகசிய இலாகாவின் அறிக்கை நேருவுக்கு ஜூன் மாதத் தொடக்கத்தில் கிடைத்தது. இந்திய அரசாங்கம் சீனுவிடம் ''பகிரங்கமான விரோதமான நிலையைக்'' கடைப்பிடிப்பதால் சீனுவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே ஒத்துழைப்பை வளர்ப்பதைப் பற்றி ''புதுச் சிந்தனை'' செய்ய வேண்டுமென்று தூதர் கேட்டுக் கொண்டார். பாகிஸ்தான் சீன தூதரின் வேண்டுகோளைப் பற்றி மிகவும் நிதானமாக நடந்து கொண்டது, எந்த உறுதி மொழியும் கொடுக்கவில்லை என்று இரகசிய அறிக்கை சுட்டிக் காட்டியது. ஸியாட்டோவில் உறுப்பினராக உள்ள பாகிஸ்தானை ஊக்குவித்ததன் மூலம் தெற்கு ஆசியாவில் மேற்கு நாடுகளின் நோக்கங்கள் தனக்கு உகந்தவையே என்று பீகிங் அமெரிக்காவுக்குக் குறிப்புக் காட்டியது. எப்படிச் சிந்தித்தாலும் இதைப் பற்றி ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர முடியும்: சீன மக்கள் குடியரசின் தலைவர்கள் இந்தியாவை எதிர்க்கும் கூட்டணியை வேகமாக உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள், ஆகவே இந்தியா அதற்குத் தகுந்த நடவடிக்கைகளை எடுப்பது அவசியம். எனினும் நேரு இறுதி முடிவுகளைச் செய்வதில் அவசரப்படவில்லை. பீகிங் என்ன செய்கிறதென்று கூர்மையாக கவனித்து வந்தார். மேலும் அந்த வருடம் மார்ச் மாதத்தில் சூஎன்லாய்க்கு எழுதிய கடிதத்துக்குப் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அதில் இந்திய எல்லைகளைப் பற்றி பீகிங் வெளியிட்டிருக்கும் தேசப் படங்களுக்கும் டில்லி வெளியிட்டிருக்கும் தேசப் படங்களுக்குமிடையே அதிகமாக வேறுபாடுகள் இருப்பதைப் பற்றி நேரு தன்னுடைய கவலையை வெளியிட்டிருந்தார். இரு நாடுகளுக்குமிடையே வரலாற்று ரீதியாக உருவாகியுள்ள எல்லைக் கோட்டை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ முடிவு செய்கின்ற பல்வேறு உடன்படிக்கைகள், ஒப்பந்தங்களை ஆதாரமாகக் காட்டி இந்திய அரசாங்கத்தின் நிலையை விளக்கியிருந்தார். அந்த எல்லைக் கோட்டின் பெரும்பகுதி மக்கள் அதிகமாக வசிக்காத மலைப் பிராந்தியங்களின் வழியாகச் சென்றது.

ஜூலை மாதக் கடைசியில், லடாக் பிரதேசத்தில் சீனர்கள் இந்திய எல்லையை மீறி நுழைந்திருப்பதாகக் கிடைத்திருக்கும் அறிக்கைகளைப் பற்றி நேரில் ஆராய்வதற்குச் சென்ற

ஆறு போலீஸ்காரர்களைக் கொண்ட இந்தியப் படைப் பிரிவை சீன எல்லைக் காவலர்கள் கைது செய்தனர். 1957ம் வருடத்தில் திபெத்தை. சின்சியானுடன் இணைக்கின்ற நெடுஞ்சாலையை சீனர்கள் இந்தப் பிரதேசத்தில் மிகவும் இரகசியமான முறையில் அமைத்திருந்தார்கள். இந்திய அரசாங்கத்தின் வன்மையான ஆட்சேபணைகளுக்குப் பிறகு ஆகஸ்ட் 18ந் தேதியன்று இந்தியப் போலீஸ்காரர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள்.

திபெத்தில் நடைபெற்ற சம்பவங்களுக்குப் பிறகு இந்திய அதிகாரிகள் லோங்ஜூவில் ஒரு எல்லைக் காவல் நிலையத்தை ஏற்படுத்தியிருந்தார்கள். ஆகஸ்ட் 25ந் தேதியன்று அந்த எல்லைக் காவல் நிலையத்துக்குப் பக்கத்தில் இரண்டு நாடுகளையும் சேர்ந்த காவல் படையினர்களுக்கிடையே முதல் தடவையாக துப்பாக்கிச் சண்டை நடைபெற்றது.

எல்லைப் பகுதிகளில் சீனாவின் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளைப் பற்றி ஆட்சேபத்தைத் தெரிவிக்குமாறு நேரு உடனே பீகிங்கிலிருந்த இந்தியத் தூதருக்கு உத்தரவிட்டார். ஆட்சேபணைக் கடிதத்தைக் கொடுத்த பிறகு மக்கள் சீனக் குடியரசின் வெளிநாட்டிலாகாவின் பிரதிநிதி இந்திய அரசாங்கம் ''எல்லையில் பதட்ட நிலையை'' ஏற்படுத்துவதாகக் குற்றம் சாட்டி அளித்த பெரிய அறிக்கையை கேட்க வேண்டியிருந்தது என்று இந்திய தூதரிடமிருந்து சீக்கிரத்தில் அறிக்கை வந்தது.

நேருவின் கடிதத்துக்கு சூஎன்லாயின் பதில் செப்டெம்பர் 8ந் தேதி வரை கிடைக்கவில்லை. சூஎன்லாயின் பதில் மார்ச்சில் நேருவின் கடிதத்தில் கூறப்பட்ட வாதங்கள் அனைத்தையும் நிராகரித்தது, எல்லைச் சம்பவங்களுக்கு முழுப் பொறுப்பும் இந்தியாவே என்று கூறியது. இதே காலகட்டத்தில் சீனாவின் வெளிநாட்டு அமைச்சரான சென்யி சீனாவுக்குச் சொந்தமான சுமார் 1,30,000 சதுர கிலோமீட்டர் பிரதேசத்தை இந்தியா ஆக்கிரமித்திருப்பதாகத் தன்னுடைய சொற்பொழிவுகளில் ஒன்றில் இந்தியாவின் மீது குற்றஞ்சாட்டினார். அதன் மூலம் சீனாவின் பிரதேசக் கோரிக்கைகளைத் தெளிவாக வரையறுத்துக் கூறினார்.

எல்லைப் பிரதேசத்தில் சிறிது காலத்துக்கு அமைதி நிலவிய பிறகு மறுபடியும் ரைபிள்களும் இயந்திரத் துப்பாக்கிகளும் வெடித்தன. அக்டோபர் 21ந் தேதியன்று கோங்ஹா

கணவாய்க்கு அருகில் நடைபெற்ற துப்பாக்கிச் சண்டையில் 9 எல்லைப் படை வீரர்கள் கொல்லப்பட்டார்கள். காய மடைந்தவர்கள் உட்பட 10 வீரர்களை சீனர்கள் சிறைப்பிடித் தார்கள்.

சீனு தன்னுடைய தென்மேற்கு எல்லையை ''சமாதான மற்றும் நட்புறவு'' எல்லையாகக் கருதுவதாக சூஎன்லாய் சில வருடங்களுக்கு முன்பு பறைசாற்றியிருந்தார். ஆனுல் இப்பொழுது, இந்தியா தன்னுடைய விஸ்தரிப்பு நோக்கங் களைப் பின்பற்றி சீனுவின் மீது இராணுவ மற்றும் இராஜிய வாதத் தாக்குதலைத் தொடுத்திருப்பதாகவும் உலகத்தின் பொதுஜனக் கருத்தை சீனுவுக்கு எதிராகத் திருப்ப முயற்சி செய்வதாகவும் சீனத் தலைவர்கள் கூக்குரலிட்டனர்.

இவற்றைக் கேட்கும் பொழுது சில சமயங்களில் நேரு வேதனையடைந்தார். எல்லைப் பிரதேசத்தில் போர்த்திட்ட முக்கியத்துவத்தைக் கொண்ட நெடுஞ்சாலையை சீனு அமைத் ததையும் இந்தியப் பிரதேசத்துக்குள் சீனுவின் படைவீரர் கள் எண்ணற்ற தடவைகள் ஊடுருவி வந்ததையும் உலகம் தெரிந்து கொள்வதைத் தடுப்பதற்கு இந்தியா பல வாரங் களாகத் தன்னுலியன்ற எல்லாவற்றையும் செய்திருக்கிறது, அதன் மூலம் நாடாளுமன்றத்தில் அரசாங்கத்தைக் கூர்மை யாக விமர்சனம் செய்வதற்கும் இடமளித்திருக்கிறது என்பது பீகிங் அரசாங்கத்துக்கு உண்மையாகவே தெரியாதா? மாஸேதுங்கும் அவரைச் சுற்றி இருப்பவர்களும் உலக அபிப் பிராயத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளத்தானே வேண்டும், அதை மீற மாட்டார்கள் என்று நேரு நினைத்தார். ஆனுல் மாவோயிஸ்டுகள், இந்தியாவின் நிதானத்தையும் பெருந்தன் மையையும் கோழைத்தனம் என்று கருதினுர்கள், நேரு அர சாங்கத்தைப் பயமுறுத்துவதற்கும் எல்லைப் பிரச்சினையில் சலு கைகளைக் கொடுக்குமாறு அதை நிர்ப்பந்திப்பதற்கும் யுத் தத்தை தூண்டத் தயங்க மாட்டார்கள் என்று வெளிப் படையாகத் தெரிந்தது.

பதட்டமான நிலைமை ஏற்பட்டிருந்த போதிலும் நேரு சிறைப்பிடிக்கப்பட்ட இந்திய வீரர்களின் விடுதலைக்கு ஏற்பாடு செய்து, மரணமடைந்த வீரர்களின் உடல்களை ஒப்படைக்கும் படி செய்து, இந்தியாவிலிருந்த வலதுசாரி அணி அவரை எவ்வளவு நிர்ப்பந்தித்தாலும் சீனுவுடன் ஏற்பட்டிருந்த தகரா

றுக்குச் சமாதான வழியில் தீர்வு காணும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார். சூஎன்லாய்க்கு எழுதிய கடிதங்களில் சீனவின் ஆதாரமில்லாத குற்றச் சாட்டுகளை நிராகரித்தார், சீனு எழுப்பும் பிரதேசக் கோரிக்கைகள் ஆதாரமற்றவை என்று சுட்டிக் காட்டினார். அதே சமயம் இந்தியா சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளுக்கு விசுவாசமாக நடக்கும் என்று வலியுறுத்தினார், தகராறு ஏற்பட்டிருக்கும் பிரச்சினைகளைப் பற்றிப் பரஸ்பர விவாதங்களுக்குத் தயார் என்றும் தெரிவித்தார்.

...எட்டு இந்திய இராணுவ விமானங்கள் வழி நடத்த ஒரு ''விக்கர்ஸ் வைக்கவுண்ட்'' விமானம் விமான நிலையத்துக்கு மேலே வானத்தில் தோன்றியது. அது கீழே இறங்கி சில நிமிடங்களில் வரவேற்புப் பகுதியில் ஓடிவந்து நின்றது. நேரு, உப ஜனதிபதி இராதாகிருஷ்ணன், கிருஷ்ண மேனன் ஆகியோர் படிகளை நோக்கிச் சென்றார்கள். விமானத்திலிருந்து சூஎன்லாய் மற்றும் சென்யி படிகளில் இறங்கி வந்தார்கள். சீனவின் தலைவர்கள் வழக்கமாக அணிகின்ற சாம்பல் நிறக் கோட்டுகளை அணிந்திருந்தார்கள். ''உம்'' மென்ற முகங்களில் மரியாதையான சிரிப்பு.

நேரு விருந்தினர்களோடு மரியாதைக்காக கைகுலுக்கிய பிறகு ஒலிபெருக்கிக்கு முன்னல் சென்று வரவேற்புரை நிகழ்த்தினர். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் தயாரிப்பில்லாமல் பேசுவதையே அவர் மிகவும் விரும்புவார். ஆனல் இந்த சந்தர்ப்பத்தில் அவர் எழுதப்பட்டிருந்த உரையிலிருந்து கண்களைச் சிறிது கூட அகற்றாமல் மெதுவாகப் பேசினர். வழக்கமான உற்சாகம் அவரிடம் இல்லை. தயாரிக்கப்பட்ட சூத்திரங்கள் சரியானவைதானு என்று மறுபடியும் சரிபார்ப்பதைப் போலப் பேசினர். சீன அரசாங்கத் தலைவர் இதற்கு முன்பு இந்தியாவுக்கு வந்த சந்தர்ப்பங்களையும் நட்புணர்ச்சியுள்ள அண்டை நாட்டின் பிரதிநிதி என்ற முறையில் இந்தியர்கள் அவரை உற்சாகமாக வரவேற்றதையும் நினைவுபடுத்திவிட்டு சமீபத்தில் நடைபெற்றிருக்கும் சம்பவங்களைப் பற்றித் தன்னுடைய வருத்தத்தைக் குறிப்பிட்டார். ''நமது நிகழ்கால மற்றும் எதிர்கால உறவுகளுக்கு ஆபத்தேற்பட்டிருக்கிறது. இந்த உறவுகளின் அடிப்படைகளே ஆட்டம் கொடுக்கின்றன'' என்றார்.

சூஎன்லாய் தன்னுடைய பதிலில் சீனுவுக்கும் இந்தியாவுக்கும் இடையே உள்ள நட்பில் எதுவுமே குறுக்கிட முடியாது, அந்த நட்பு ''ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு'' நீடிக்கும் என்றுர். இது மிகையான நம்பிக்கை என்று நேரு கருதினுர்.

அவர்களுடைய பேச்சுவார்த்தைகள் ஒரு வார காலம் வரை நீடித்த போதிலும் அநேகமாகத் தோல்வியடைந்தன. முதல் பேச்சுவார்த்தையின் போதே எல்லைப் பிரச்சினையைப் பற்றி இரண்டு தரப்பினருடைய அணுகுமுறையிலும் அதிகமான வேறுபாடுகள் ஏற்பட்டன. மேலும் சீனத் தலைவர்கள் ஆத்திரமூட்டும் விதத்தில் நடந்துகொண்டனர். தங்களுடைய நிலை முற்றிலும் சரியானது என்று திரும்பத்திரும்பக் கூறினுர்கள். சீன வெளிநாட்டு மந்திரி ஒரு இராஜியவாதியாக இல்லாமல் படைவீரரைப் போல நடந்து கொண்டார், வெற்றியடைந்தவர் தோல்வியடைந்தவரிடம் அதிகாரக் குரலில் நிபந்தனைகளைப் போடுவதைப் போல இந்தியத் தலைவர்களிடம் பேசினுர் என்று இந்திய உப ஜனுதிபதி பின்னர் கூறினுர். எனினும் ஒரு விஷயத்தில் உடன்பாடு ஏற்பட்டது. இரு தரப்புக்களையும் சேர்ந்த அதிகாரிகள் எல்லைப் பிரச்சினைகளைப் பற்றிக் கிடைக்கும் எல்லா ஆவணங்களையும் தொகுத்து முறைப்படுத்தி ஆராய்ந்து அறிக்கை தயாரிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

1960ம் வருடத்தில் சீனப் பிரதிநிதிகளும் இந்தியப் பிரதிநிதிகளும் மூன்று தடவைகள் கூடிப் பேசினுர்கள். இக்கூட்டங்கள் பீகிங்கிலும் டில்லியிலும் ரங்கூனிலும் நடைபெற்றன. நேரு நாடாளுமன்றத்தில் இந்திய அதிகாரிகள் குழுவின் அறிக்கையைப் பற்றிப் பேசினுர். சீனு சட்ட விரோதமான முறையில் ஆயிரக் கணக்கான சதுர கிலோ மீட்டர் இந்தியப் பிரதேசத்தை (1959ல் செப்டெம்பருக்குள் லடாக்கில் கைப்பற்றப்பட்டது) பயன்படுத்தி வருகிறது என்பதை நேரு வலியுறுத்தினுர். சீனத் துருப்புக்கள் ஆக்கிரமித்துள்ள பிரதேசங்களிலிருந்து வெளியேறியதும்தான், இந்தப் பிரச்சினையில் இந்திய அரசாங்கத்தின் நிலையை பீகிங்கில் ஒத்துக் கொண்டால்தான் இந்தியாவிற்கும் சீனுவிற்கும் இடையிலான எல்லைப் பிரச்சினை தீர்க்கப்படும் என்று நேரு 1960 பிப்ரவரி 20ந் தேதியன்று நாடாளுமன்றத்தில் கூறினுர்.

இரண்டு மிகப் பெரிய ஆசிய நாடுகளுக்கிடையே ஏற்

பட்ட தகராறு தீர்க்கப்படாமல் நீடித்தது. இந்த நிலைமையைக் கண்டு இந்திய, சீன மக்களின் உண்மையான நண்பர்கள் கவலையடைந்தார்கள்.

பீகிங்கினுல் தொடங்கி வைக்கப்பட்ட இந்த மோதல் நேரு அரசாங்கத்துக்கு நெருக்கடியான நிலைமையை ஏற்படுத்தியது, இந்தியா பின்பற்றிய கூட்டுச் சேராமைக் கொள்கையை மிகக் கடுமையான சோதனைக்கு உட்படுத்தியது.

இந்தியாவுக்கு உள்ளேயும் வெளியிலுமிருந்த பிற்போக்காளர்கள் நேருவின் வெளிநாட்டுக் கொள்கை வகையில்லாதது, அதனுல் நாட்டைப் பாதுகாக்க முடியாது என்ற கூக்குரலிடுவதற்குத் தக்க தருணத்துக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தார்கள் என்று தெரிந்தது.

பிரதம மந்திரியின் இருப்பிடத்துக்கு முன்னுல் முதலில் ஆர்ப்பாட்டம் செய்தவை வலதுசாரி அரசியல் ஸ்தாபனங்களே. ''நேருவே! தூங்காதே!'' ''நேருவே! ராஜினுமா செய்!'' என்று அவர்கள் கோஷமிட்டார்கள்.

இந்திய தேசிய காங்கிரசின் வலதுசாரி அணியின் நடவடிக்கைகளும் குறிப்பிடத்தக்க விதத்தில் அதிகரித்தன. அவர்கள் ''நேரு வழியைப்'' பற்றி அவநம்பிக்கைகளை ஏற்படுத்தினுர்கள். இந்தியா எந்த இராணுவக் கூட்டணியிலும் சேருவதை எதிர்க்கின்ற பாதுகாப்பு அமைச்சர் கிருஷ்ண மேனனையும் பெட்ரோலிய அமைச்சர் கே.டி. மாளவியாவையும் மந்திரி சபையிலிருந்து வெளியேற்ற முயன்று கொண்டிருந்தார்கள். நாட்டின் பொருளாதாரம் சுயேச்சையான முறையில் வளர்ச்சியடைவதற்கு நேரு வகுத்த கொள்கைகளை உறுதியாக ஆதரித்தவர் மாளவியா.

இந்திய எதிர்ப்பணியின் செய்தித்தாள்களோடு சேர்ந்து மேற்கத்திய பத்திரிகைகளும் நேருவுக்கு எதிராக இயக்கம் நடத்தின. நேருவிடம் ''தலைவருக்குரிய தகுதிகள் இல்லை'' என்பதை இந்திய-சீன நெருக்கடி எடுத்துக் காட்டிவிட்டது, நேருவினுல் சீனுவுக்கு எதிராக ''உறுதியான நிலையைக்'' கடைப்பிடிக்க முடியாது என்று பிற்போக்கான பத்திரிகையாளர்கள் எழுதினுர்கள். இந்தியப் பிரதேசத்தில் சீனுவின் ஊடுருவல்கள் ''உலக கம்யூனிஸ்ட் போர்த்திட்டத்தின் ஒரு பகுதியே'' என்று அவருடைய அரசியல் எதிரிகள் சிலர் விஷமத்தனமாகப் பேசினுர்கள். ''நாடாளுமன்றக் காங்கிரஸ்

கட்சியில் மட்டுமல்லாமல் அரசாங்கத்திலும்'' இருக்கின்ற கம்யூனிஸ்ட் கோஷ்டிக்கு எதிராக நடவடிக்கைகள் எடுக்க நேரு தவறிவிட்டார் என்று குற்றஞ்சாட்டினுர்கள். வெளி நாட்டுக் கொள்கையை மறுபரிசீலனே செய்வதற்கு ஆதர வாகப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டுவதற்கு வலது சாரிகள் தங்களாலியன்ற எல்லாவற்றையும் செய்தார்கள். ''சீனு தொடங்கியிருக்கும் கெடுபிடிப் போரின் விளைவாக இந்தியா தன்னுடைய கூட்டுச் சேராக் கொள்கையைக் கைவிட வேண்டியிருக்கும்'' என்று வலியுறுத்தினுர்கள். அதே சமயத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்பு, கூட்டுச் சேராத இயக் கத்தின் தலைவர் என்ற முறையில் நேருவின் சர்வதேச செல்வாக்கை அரித்தழிக்கின்ற நோக்கத்தோடு பீகிங்கும் வாஷிங்டனும் (ஏற்கெனவே உடன்பாடு செய்து கொண் டிருப்பதைப் போல) எதிர்த்திசைகளிலிருந்து அவதூறுப் பிரச் சாரத்தைத் தொடங்கின.

இந்திய-சீன மோதலிஞல் இந்தியாவில் அரசியல் நிலைமை மோசமடைந்ததைப் பயன்படுத்திக் கொண்டு நேருவை மேற்கு நாடுகளுக்கு ஆதரவான இராணுவக் கூட்டணிக்குள் இழுப்பதற்கு வாஷிங்டன் மறுபடியும் முயற்சி செய்தது. ''உலக கம்யூனிசம் என்ற பொது அபாயத்துக்கு'' எதிராக இந்தியா பாகிஸ்தாஞேடு'' சமரசம்'' செய்துகொள்ள வேண்டு மென்று வற்புறுத்தியது. நேரு அரசாங்கத்துக்கு நேரடியான வேண்டுகோள்களே அனுப்பியதோடு அமெரிக்க இராஜியவாதி கள் பாகிஸ்தான் ஜனதிபதி அயூப் கான் மூலமாகவும் முயற்சி செய்தார்கள். அவர்களுடைய ஆலோசனேப்படி இந்தியத் துணைக் கண்டத்தின் கூட்டுப் பாதுகாப்புக்காக உடன்படிக்கை செய்து கொள்ளலாம் என்று அயூப் கான் நேருவைக் கேட்டுக் கொண்டார். ஆனுல் நேரு இந்த வலேயில் சிக்கவில்லே. அயூப் கானின் திட்டத்தை ஏற்றுக் கொள்வதென்ருல் பாகிஸ்தான் சேர்ந்திருக்கின்ற மேற்கு நாடுகளுக்கு ஆதரவான, ஆக்கிர மிப்பு நோக்கம் கொண்ட **ஸியாட்டோ** இராணுவக் கூட்டணி யில் இந்தியா மறைமுகமாகப் பங்கெடுப்பதே அதன் அர்த்தம் என்று நேரு கருதினுர்.

செஸ்டர் பௌல்ஸ் இதற்கிடையில் அமெரிக்க காங் கிரசின் உறுப்பினராகவும் வெளிநாட்டு இலாகாவின் ஆலோச கராகவும் பதவியேற்றிருந்தார். இந்திய பிரதமரும் பாகிஸ்

தான் ஜனாதிபதியும் சந்திக்க வேண்டும் என்ற ஆலோசனையை அவர் முன்வைத்தார். அத்தகைய சந்திப்பினால் பயன் ஏற்படுமா என்று தான் சந்தேகிப்பதாகக் கூறி நேரு இந்த ஆலோசனையை நிராகரித்தார். 1959 செப்டெம்பரில் அயூப் கான் டில்லிக்கு வருகையளித்த போதிலும், இந்தியத் தலைவர்களுடன் அவருடைய பேச்சுவார்த்தைகள் மேற்கு நாடுகளின் இராஜியவாதிகள் எதிர்பார்த்த விளைவுகளை ஏற்படுத்தவில்லை.

நேரு நாடாளுமன்றத்தில் தன்னுடைய பழைய கொள்கையை மறுபடியும் வலியுறுத்தினார். பஞ்ச சீலம் மற்றும் கூட்டுச் சேராமைக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட என்னுடைய வெளிநாட்டுக் கொள்கை மாறவில்லை, அந்தக் கொள்கைக்கு மாறான எந்த ஆலோசனையையும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என்றார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய கவுன்சில் 1959 நவம்பர் 15ல் மீரத் நகரத்தில் கூடியபொழுது பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றியது: ''பிற்போக்கு சக்திகள் மிக அதிகமாக நெருக்கிய போதிலும் சுயேச்சையான வெளிநாட்டுக் கொள்கையைத் தொடர்ந்து பின்பற்றுவேன் என்று உறுதியாகக் கூறியிருப்பதற்கும் இராணுவக் கூட்டணிகளில் ஈடுபடுவதை வன்மையாக நிராகரித்திருப்பதற்கும் பேச்சு வார்த்தைகளையும் சமாதான பூர்வமான தீர்வுகளையும் வலியுறுத்தியிருப்பதற்காகவும் நாட்டில் யுத்த வெறி கூடாதென்று எச்சரிக்கை செய்திருப்பதற்காகவும் பிரதமர் நேருவின் நிலைக்குத் தன்னுடைய பாராட்டை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய கவுன்சில் பதிவு செய்கிறது.''

கூட்டுச் சேராத நாடுகளின் தலைவர்களின் மாநாடு 1961 செப்டெம்பர் 1 முதல் 6 முடிய பெல்கிராடில் நடைபெற்றது. இந்த இயக்கத்தின் தலைவர்களில் ஒருவர் என்ற முறையில் நேரு இந்த மாநாட்டில் தீவிரமாகப் பங்கெடுத்தார்.

மேற்கு நாடுகளைச் சேர்ந்த அரசியல்வாதிகள் சோவியத் எதிர்ப்பு வெறியைப் பரப்புவதிலும் சர்வதேசப் பதட்ட நிலையை அதிகப்படுத்துவதிலும் யுத்தத்தின் விளிம்பில் உலகத்தைத் தடுமாறவைப்பதிலும் பெல்கிராட் மாநாட்டை ஏகாதிபத்திய எதிர்ப்பு நிலைகளிலிருந்து பின்னுக்குத் தள்ளுவதிலும், சோவியத் யூனியன் மற்றும் சோஷலிஸ்ட் நாடுகளுக்கும் கூட்டுச் சேராத நாடுகளுக்குமிடையே செயற்கையான பகை

மையை நோக்கி அதன் உறுப்பினர்களைத் திருப்புவதிலும் ஈடுபட்டிருந்தார்கள்.

எனினும் தேசிய விடுதலை இயக்கத்தின் அனுபவமிக்க தலைவர்களான நேரு, நாஸர், நுக்ருமா மற்றும் அரசு, அரசாங்கத் தலைவர்களில் அதிகப் பெரும்பான்மையினர் கூட்டுச் சேராத நாடுகளின் இயக்கத்தின் உண்மையான நோக்கங்கள், வேறுபட்ட சமூக அமைப்புகளைக் கொண்ட அரசுகளுக்கிடையே ஒத்துழைப்பை வளர்ப்பதற்காகவும் காலனி யாதிக்கத்தின் எல்லா வடிவங்களையும் ஒழித்துக் கட்டுவதற் காகவும் உலக சமாதானத்திற்காகவும் போராடுகின்ற சோஷ லிஸ்ட் நாடுகளின் கொள்கைகளோடு புறவயமாகப் பொருந்தி யிருப்பதை வலியுறுத்தினார்கள்.

நேரு மாநாட்டின் கடைசி நாளைத் தீர்மானங்கள் தயாரிப்பதில் கழித்தார். **யுத்த அபாயத்தைப் பற்றிய அறிக்கையும் சமாதானத்துக்கு வேண்டுகோளும்** என்ற ஆவணத்தை நேரு முன்முயற்சியின்படி மாநாடு நிறைவேற் றியது. அந்த ஆவணத்தில் மாநாட்டில் பங்குகொண்டவர் கள், சர்வதேச நிலைமை சீர்கேடடைந்திருப்பதையும் புதிய யுத்தம் ஏற்படக் கூடிய அபாயத்தையும் பற்றித் தங்கள் கவலையைத் தெரிவித்திருந்தார்கள். அக்கறை கொண்ட நாடு கள், குறிப்பாக அமெரிக்காவும் சோவியத் யூனியனும் ஐ. நா. சாஸனக் கோட்பாடுகளைப் பின்பற்றி தங்களுக் கிடையே உள்ள வேறுபாடுகளை சமாதானமான வழியில் தீர்த்துக்கொள்வதற்குப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். சமாதான சகவாழ்வு சர்வதேச உறவுகளின் அடிப்படையாக இருக்க வேண்டும், காலனியாதிக்கம் மற்றும் ஏகாதிபத்தியச் சுரண் டலின் விளைவாக நாடுகளுக்கிடையே ஏற்பட்டிருக்கும் பொரு ளாதார ஏற்றத்தாழ்வு உடனடியாக, இறுதியாக ஒழிக்கப் பட வேண்டும் என்று மற்றொரு பிரகடனத்தில் வலியுறுத் தினார்கள்.

நேரு சோவியத் அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் மாஸ்கோவுக்குப் போய்க் கொண்டிருந்தார். அந்த விமானப் பயணத்தில்தான் அவருக்கு முதல் முறையாக ஓய்வு கிடைத் தது. மாநாட்டின் முடிவுகளை சோவியத் தலைவர்களிடம் தெரிவிக்கும் பொறுப்பு நேருவுக்கும் கானாவின் ஜனாதிபதி

நுக்ருமாவுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது. உலகத்தில் பதட்ட நிலையைத் தணிப்பதற்கும் சமாதானத்தை ஏற்படுத்துவதற்கும் கூட்டுச் சேராத நாடுகளின் தலைவர்களுடைய ஆலோசனைகளடங்கிய கடிதத்தை அவர்கள் சோவியத் தலைவர்களிடம் கொடுக்க வேண்டும். இந்தோனேஷியாவின் ஜனாதிபதி சுகர்னோவும் மாலி நாட்டின் ஜனாதிபதி மொடிபோ கெய்த்தாவும் அதே போன்ற கடிதத்தை அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடியிடம் கொடுப்பார்கள்.

நேரு விமானப் பயணத்தின் போது சமீபத்திய செய்தித் தாள்களைப் படித்தார். பெல்கிராட் மாநாட்டின் முடிவுகள் வாஷிங்டனுக்கு ''எரிச்சலையும் ஏமாற்றத்தையும்'' கொடுத்திருப்பதாகத் தெரிந்து கொண்டார். படைக் கலைப்புப் பிரச்சினைகளையும் பெர்லின் நெருக்கடிக்குத் தீர்வையும் பற்றி மாஸ்கோவின் நிலையைக் கூட்டுச் சேராத நாடுகள் ஏற்றுக் கொண்டிருப்பதாக அமெரிக்க அரசாங்கத்தின் பிரதிநிதிகள் கூறியிருந்தார்கள். நடு நிலைமை நாடுகள் அமெரிக்காவிடம் நிதியுதவி கேட்கும் பொழுது பல்வேறு சர்வதேசப் பிரச்சினைகளைப் பற்றி அவற்றின் அணுகுமுறை இனிமேல் கவனமாக ஆராயப்படும் என்று வழக்கமாகச் சொல்லப்படுகின்ற பய முறுத்தலையும் அவர்கள் கூறுதிருக்கவில்லை...

செப்டெம்பர் 6ந் தேதியன்று பிற்பகல் 2.55ல் அவர்கள் வ்னுகொவோ விமான நிலயத்தில் இறங்கினார்கள். சோவியத் மக்கள் திறந்த மனதுடன் மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்ததும் இதமான, இலையுதிர் கால வெப்பமும் நேருவின் களைப்பின் கடைசிச் சுவடுகளை அகற்றின. சோவியத் நாட்டுக்கு மறுபடியும் வர வேண்டும், முன்னேற்றம், மலர்ச்சி பாதையில் சோவியத் யூனியன் தொடர்ச்சியாகச் சென்று கொண்டிருப்பதை மறுபடியும் பார்க்க வேண்டும், மனித குலத்திற்குக் கவலையைத் தந்துகொண்டிருக்கும் பல புதிய பிரச்சினைகளைப் பற்றி சோவியத் அரசாங்கத்தோடு விவாதிக்க வேண்டும் என்று தான் மிகவும் விரும்பியதாக நேரு சோவியத் தலைவர்களை நோக்கி நிகழ்த்திய உரையில் கூறினார்.

அது குறுகிய வருகைதான், ஆனால் இந்திய-சோவியத் உறவுகளின் எதிர்காலத்தைப் பற்றியும் சூடான சர்வதேசப் பிரச்சினைகளைப் பற்றியும் முக்கியமான விவாதங்கள் நிறைந்திருந்தன.

பெல்கிராட் மாநாட்டின் முடிவுகளை சோவியத் அர சாங்கம் நன்ருகப் புரிந்து கொண்டிருந்ததும் உலகத்தின் எதிர்காலத்தைப் பெருமளவுக்கு நிர்ணயிக்கக் கூடிய சோவியத்-அமெரிக்க உறவுகள் உட்பட அரசுகளுக்கிடையே பரஸ்பரம் புரிந்து கொள்வதை வளர்ப்பதில் ஒத்துழைப்பதற்கு சோவியத் யூனியன் தயாராக இருக்கிறது என்ற உறுதிமொழிகளும் நேருவுக்கு முழுத் திருப்தியைக் கொடுத்தன.

இந்திய-சீன எல்லையில் சமீபத்தில் நடைபெற்ற ஆயுதச் சண்டை நேருவை மிகவும் பாதித்தது வெளிப்படையாகத் தெரிந்தது. கருத்து வேறுபாடுகளைத் தீர்த்துக் கொள்வதற்கு யுத்தத்தை ஒரு வழியாக உபயோகிப்பதைப் பற்றி ஆழமான அதிருப்தியோடு நேரு மாஸ்கோவில் பேசிஞர். எல்லா நாடு களையும் நான் மதிக்கிறேன், ஆனுல் நம் காலத்தில் யார் மீதாவது யுத்தம் தொடுப்பது வடிகட்டிய முட்டாள்தனம். ஒவ்வொரு நாட்டிலும் செய்ய வேண்டிய காரியங்கள், ஆராயப்படாத வாய்ப்புக்கள் ஏராளமாக இருக்கின்றன. இந்த நேரத்தில் யுத்தத்தை ஆரம்பிப்பது தர்க்கவிரோதமானது, தவருனது, முட்டாள்தனமானது என்று அவர் கூறிஞர்.

சோவியத் யூனியன் இந்தியாவுக்குச் செய்யும் பொருளா தார உதவியை நேரு மிகவும் மதித்தார். சோவியத் யூனிய ஞேடு ஏற்பட்டுள்ள பிரிக்கப்பட முடியாத நட்பையும் இரு மக்களினங்களும் பரஸ்பரம் புரிந்து கொள்வதையும் தன்னு டைய நாட்டுக்குக் கிடைத்திருக்கும் அரிய சொத்து என்று வலியுறுத்திஞர்.

இரு நாடுகளுக்கிடையிலான தொடர்புகளை உயர்ந்த மட் டத்தில் நீடிப்பதற்கும் மேலும் பலமடைவதற்கும் இந்திய அரசாங்கம் சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலை மைக் குழுவின் தலைவரான லியனீத் பிரேஷ்னெவை வரு கின்ற மாதங்களில் இந்தியாவுக்கு வருகையளிக்குமாறு கேட்டுக் கொண்டது.

நேரு செப்டெம்பர் 11ந் தேதி டெல்லிக்குத் திரும்பிய பொழுது எல்லையில் சீஞ விரிவான இராணுவத் தயாரிப்பு களைச் செய்திருக்கின்ற தகவல்கள் முற்றிலும் நம்பிக்கையான பல வழிகளில் பிரதமருக்குக் கிடைக்கத் தொடங்கின. பீகிங் கின் நிலையைத் தங்களுடைய சொந்த நோக்கங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய சில அரசியல் கோஷ்டிகள்

மக்களிடையே கம்யூனிஸ்ட் எதிர்ப்பு மனோபாவத்தைத் தூண்டி விட்டன. ஹிந்து வகுப்புவாதிகளின் மதவெறி ஸ்தாபன மான ராஷ்ட்ரிய சுயம்சேவக் சங் (ஆர். எஸ். எஸ்.) பொறுப்பற்ற யுத்தக் கூக்குரல்களை முழங்கிக் கொண்டு அர சியல் அரங்கத்தில் மறுபடியும் நுழைந்தது. ஆர். எஸ். எஸ். மற்றும் அதற்குப் பின்னாலிருந்த சக்திகள் சீனாவுடன் ஏற்பட் டிருந்த தகராறுக்கு அரசாங்கம் நியாயமான தீர்வு காண் பதை மேலும் கடினமாக்கின.

இந்தியா கவனமில்லாதிருக்கும் சமயத்தில் சீனா ஆக்கிர மிப்புச் செய்யக் கூடும், அதைத் தடுக்கத் தயாராக இருக்க வேண்டுமென்று நேரு பாதுகாப்பு அமைச்சர் கிருஷ்ண மேன னுக்கு அவசியமான எல்லா உத்தரவுகளையும் கொடுத்திருந் தார். எனினும் எல்லையில் இராணுவ நடவடிக்கையைத் தடுக்க முடியும், கருத்து வேறுபாடுகளை சமாதானமான வழிகளில் தீர்த்துக் கொள்ள முடியும் என்று தொடர்ந்து நம்பினார்.

சீன மக்கள் குடியரசை ஐ.நா. சபையில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அவர் தொடர்ந்து வற்புறுத் தினார். அது நடைபெறும் பொழுது உலக அபிப்பிராயத் தைக் கணக்கிலெடுத்துக் கொள்ளுமாறு சீனத் தலைவர்கள் நிர்ப்பந்திக்கப்படுவார்கள், உலகத்தின் எதிர்காலத்தை உரு வாக்குவதில் தங்களுடைய பொறுப்பை அதிகக் கூர்மையாக உணர்வார்கள் என்று அவர் கருதியதும் (மற்றவற்றோடு) இதற்குக் காரணமாகும்.

நேரு அடிப்படையான சர்வதேசப் பிரச்சினைகளைத் தீர்ப் பதைப் பற்றி, அணு ஆயுதங்களுக்குத் தடைவிதிப்பதையும் படைக் கலைப்பையும் பற்றித் தொடர்ச்சியாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

சமாதானத்துக்குப் போராடுவதில் அவர் காட்டிய தீவிரம் அவருடைய நண்பர்கள், எதிரிகள் இருவரையுமே வியக் கும்படி செய்தது. 1961 அக்டோபர், நவம்பர் இரண்டு மாதங்களில் அவர் பல நாடுகளுக்குச் சென்றார். வாஷிங் டனில் ஜனாதிபதி கென்னடியையும் லண்டனில் பிரதம மந்திரி மாக்மில்லனையும் சந்தித்துப் பேசினார். கெய்ரோவில் நாஸ ரையும் டிட்டோவையும் மறுபடியும் சந்தித்துப் பேசினார். ஐ. நா. சபையின் பொதுப் பேரவைக் கூட்டத்தில் சொற் பொழிவாற்றினார். மெக்ஸிகோவுக்கு அதிகார பூர்வமாக

விஜயம் செய்தார். டில்லியில் போலந்தின் ஜனாதிபதி ஸவாத்ஸ்கியையும் ஜப்பானியப் பிரதம மந்திரி இக்கேடாவையும் வரவேற்றுப் பேச்சுவார்த்தைகள் நடத்தினார். அந்நிய நாடுகளின் தூதர்களையும் இந்தியாவுக்கு வருகையளித்த எண்ணற்ற வெளிநாட்டு தூதுக்குழுக்களின் உறுப்பினர்களையும் சந்தித்தார், பேசினார். விண்வெளியில் பறந்த முதல் மனிதரான யூரி ககாரின் இந்த சமயத்தில் இந்தியாவுக்கு வந்தது நேருவுக்கு விசேஷமான மகிழ்ச்சியைக் கொடுத்தது.

விமான இயலுக்கும் நேருவுக்கும் ஒரே வயது என்றுதான் கூற வேண்டும். அவர் பள்ளி மாணவராக இருந்த பொழுதே மனிதன் விண்வெளியை வெற்றி கொள்கின்ற திரு நாளைப் பற்றிக் கனவு கண்டார். 1903ல் உள் எரி வாயுப் பொறியைக் கொண்ட முதல் விமானத்தில் ரைட் சகோதரர்கள் ஆகாயத்தில் பறந்தது அவருடைய் நினைவில் பதிந்திருந்தது. 1909ல் எல். பிளேரியோ விமானத்தில் ஆங்கிலக் கால்வாயைக் கடந்ததை அவர் நினைவு வைத்திருந்தார். பிரபல ருஷ்ய விமானிகளான டி. பி. கிரிகொரோவிச், வி. ஏ. ஸ்லேஸரெவ் மற்றும் பி. என். நெஸ்டெரோவ் அவருடைய வழிபாட்டுக்குரியவர்களாக இருந்தார்கள்.

நேரு தன்னுடைய வரவேற்பு அறையில் உட்கார்ந்திருந்தார். அவருக்கு எதிரில் ஒரு இளைஞர் உட்கார்ந்திருந்தார். ருஷ்ய முகம், பிறரைக் கவரும் சிரிப்பு, அக்கறை, குறும்பான கண்கள். சோவியத் இராணுவத்தில் மேஜர் பதவிக்குரிய வெள்ளை உடையை அவர் அணிந்திருந்தார். நேரு அவரைப் பரவசத்தோடு பார்க்கிறார். அந்த இளைஞர்தான் யூரி ககாரின். ஸ்மொலேன்ஸ்க் கூட்டுப்பண்ணை விவசாயியின் குடும்பத்தைச் சேர்ந்தவர். புவி ஈர்ப்புச் சக்தியின் விலங்குகளை மீறி விண்வெளியில் பறப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் மனிதர்.

நேரு விருந்தினர்களுக்குத் தேநீரை ஊற்றிக் கொடுத்தார். அது இமயமலையின் அடிவாரத்தில் வளரும் பூக்களின் சாறு கலந்த தேநீர்.

''எங்கள் தேயிலையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று நேரு ககாரினுடைய மனைவி வாலென்டினாவைக் கேட்டார்.

சோவியத் யூனியனில் நெடுங்காலமாகவே மக்கள் விரும்பிக் குடிக்கும் பானம் தேநீர் என்று வாலென்டினா சங்கோ

ஜத்திஞல் சிரித்த படியே பதிலளித்தாள். ககாரின் அதை ஒத்துக் கொண்டார். இரண்டு நாடுகளுக்குமிடையே வர்த்த கம் வளர்ச்சி அடைந்திருப்பதஞல் இந்தியத் தேநீரின் சுவை யான மணம் சோவியத் மக்களுக்கு ஏற்கெனவே அறிமுக மாகிவிட்டது என்று கூறிஞர்.

விண்வெளிப் பயணத்தின் எல்லா விவரங்களேயும் தெரிந்து கொள்ள நேரு விரும்பிஞர். விண்வெளி வீரர் தன் அனுப வத்தைக் கூறிஞர். முதன் முறையாக வழி காட்டுபவர்கள் சில ஆபத்துக்களே விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டியிருக் கிறது என்று நேரு கூறிஞர்.

''புதிதாக எந்த முயற்சியைச் செய்தாலும் அதில் ஆபத் தும் சேர்ந்திருக்கிறது'' என்று யூரி ககாரின் ஒத்துக்கொண் டார். ''ஆகாய விமானத்தைப் பற்றி நம்பிக்கை ஏற்படு வதற்கு முன்பு எத்தனே விமானிகள் தங்கள் உயிரை தியா கம் செய்தார்கள் என்பதை நினேத்துப் பாருங்கள். ஆஞல் விமான இயல் மக்களுக்கு அவசியமாக இருந்தது. அது தற்பொழுது மக்களுக்குச் சிறந்த சேவை செய்கிறது. விண் வெளி இயலும் மக்களுக்கு அவசியமாக இருக்கும், அது இல்லேயென்ருல் மேலும் விஞ்ஞான வளர்ச்சி சாத்தியமல்ல.'' ககாரின் புன்சிரிப்போடு பேச்சைத் தொடர்ந்தார். ''பிரதம மந்திரி அவர்களே! உங்களிடம் திறந்த மனதோடு பேசு கிறேன். என்னுடைய விண்வெளிப் பயணத்தைப் பொறுத்த வரையிலும் ஆபத்து மிகக் குறைவாகவே இருந்தது. எங்கள் நாட்டின் விண்வெளித் தொழில்நுட்பவியல் மிகவும் சிறப் பானது. ''வோஸ்டோக்-1'' என்னும் கப்பலில் இருக்கும் எல்லா அமைப்புக்களும் பூமியில் கவனமாகப் பரிசோதனே செய்யப்பட்டவையே.''

ககாரின் காட்டிய அடக்கம் பிரதம மந்திரியை வசீகரித் தது. எனினும் விண்வெளியில் பறக்கும் மனிதர்களுக்கு நம்பக மான வாழ்க்கை பாதுகாப்பு அமைப்பைத் தயாரிப்பதிலுள்ள சிக்கல்களே அவரால் கற்பனே செய்ய முடியும.

''பிரயாணத்தின்போது சுவாசிப்பது கஷ்டமாக இருக்க வில்லேயா?'' என்று நேரு கேட்டார். ''சாதாரணமான விமானிகளுக்கும் விண்வெளிப் பிரயாணிகளுக்குமிடையே ஒற் றுமை மிகவும் குறைவானதே. எனினும் ஐந்து அல்லது ஆருயிரம் மீட்டர்களுக்கு மேலே போன பிறகு பிராண

வாயு குறைந்துவிடுவதை நாம் உணரத் தொடங்குகிறோம் என்பது கிளைடர் விமானி என்ற முறையில் என்னுடைய அனுபவம்.''

அந்தப் பிரச்சினையைத் தீர்க்காமல் விண்வெளிப் பிரயாணம் என்பது சாத்தியமல்ல என்று ககாரின் கூறினார். நேரு கேட்ட மற்ற கேள்விகளுக்கு அவர் பதிலளித்தார். புவி ஈர்ப்புச் சக்தியை மீறிப் போவதற்கு அவசியமான வேகத்தைப் பெறும் போது விண்வெளிப் பிரயாணி ஏராளமான அழுத்தத்தை உணர்வதைப் பற்றிக் கூறினார். எடையில்லாத நிலையைத் தத்ரூபமாக வர்ணித்தார், விண்வெளிக் கப்பலின் துவாரத்திலிருந்து பார்க்கும் பொழுது பூமியின் அழகைப் பற்றிப் பரவசத்தோடு பேசினார்.

சோவியத்-இந்திய உறவுகள் ஒவ்வொரு வருடமும் மேலும் பலமடைந்தன, விரிவடைந்தன. 1961 டிசம்பர் 15ந் தேதியன்று இரு நாடுகளின் வரலாற்றில் ஒரு முக்கியமான சம்பவம் நடைபெற்றது. சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுத் தலைவரான லியனீத் பிரேஷ்னெவ் அதிகாரபூர்வமாக இந்தியாவுக்கு விஜயம் செய்தார்.

தலை நகரத்தின் சாலைகளில் சோவியத், இந்திய தேசியக் கொடிகள் அழகாகப் பறந்து கொண்டிருந்தன. உயர்ந்த அந்தஸ்தைக் கொண்ட விருந்தினர் ஊர்வலமாக வரும் சாலைகளில் வரவேற்பு வளைவுகள் அமைக்கப்பட்டு அவற்றில் மாலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. நட்பு நிறைந்த சோவியத் நாட்டிலிருந்து வருகின்ற தூதருக்கு வரவேற்பளிப்பதற்காகப் பல்லாயிரக்கணக்கான இந்தியர்கள் நெடுஞ்சாலைகளில் திரண்டு நின்றார்கள்.

விமான நிலைய வரவேற்பில் பேசுகின்றபொழுது, இரண்டு நாடுகளின் தலைவர்களும் விஜயங்களைப் பரிமாறிக் கொள்வது இரண்டு நாடுகளின் உறவுகளிலும் ஒரு மரபாகிவிட்டது, அது மிகவும் சிறப்பானது என்று லியனீத் பிரேஷ்னெவ் கூறினார். இப்படிப்பட்ட ஒவ்வொரு விஜயமும் இரண்டு நாடுகளுக்கிடையே பரஸ்பரத் தெளிவை ஆழப்படுத்துவதிலும் இந்தியா மற்றும் சோவியத் யூனியன் மக்களுக்கிடையே ஒத்துழைப்பை வளர்ப்பதிலும் முன்னெடுத்து வைக்கப்பட்ட புதிய காலடியைக் குறிக்கிறது, இதன் மூலம் இரண்டு நாடுகளுக்கும் உலக சமாதானத்துக்கும் கிடைக்கும் சாதகம் குறைவான

தல்ல. சமாதானம், நட்புறவு, நல்லெண்ணம் என்ற வார்த்தைகளின் முழு அர்த்தத்தில் நாங்கள் உங்கள் நாட்டுக்கு வந்திருக்கிறும் என்று பிரேஷ்னெவ் பேசினுர்.

பிரேஷ்னெவும் நேருவும் அன்றே ஜனுதிபதி மாளிகையில் பேச்சுவார்த்தைகள் நடத்தினுர்கள். சமீபத்தில் மாஸ்கோவில் சந்தித்துப் பேசியது அவர்களுடைய நினைவுகளில் இன்னும் பசுமையாக இருந்தபோதிலும் புதிய பிரச்சினைகள் தோன்றியிருந்தன. அவற்றை விவாதிப்பது அவசியமாக இருந்தது.

அந்த சமயத்தில் இந்தியாவுக்கு வெளியே ஏற்பட்டிருந்த அரசியல் நிலைமை நாட்டுக்கு முற்றிலும் சாதகமாக இருக்கவில்லை. சீனுவின் இராணுவ பயமுறுத்தல் அதிகரித்துக் கொண்டிருந்தது; அமெரிக்கா மற்றும் பிரிட்டனுடைய ஆதரவின் பேரில் பாகிஸ்தான் காஷ்மீரைச் சுற்றி பதட்ட நிலையை ஏற்படுத்திக் கொண்டிருந்தது; இந்தியாவைத் தங்களுடைய போர்த்தந்திர, அரசியல் திட்டங்களுக்குள் இழுக்க வேண்டும் என்று மேற்கத்திய அரசுகள் தொடர்ந்து முயற்சி செய்து கொண்டிருந்தன; இந்தியப் பிரதேசங்களான கோவா, டையூ மற்றும் டாமனை வைத்துக் கொண்டிருந்த போர்த்துகீசியக் காலனியாதிக்கவாதிகள் அவற்றின் சுதந்திரத்தைப் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்த மறுத்தார்கள்.

இந்தியாவுக்குக் கவலையைக் கொடுத்த பல சர்வதேசப் பிரச்சினைகளைப் பற்றி சோவியத் தலைமையின் கருத்தைத் தெரிந்து கொள்வது இந்தியப் பிரதமருக்கு முக்கியமாக இருந்தது. பல விஷயங்கள் சோவியத் அணுகுமுறையைப் பொறுத்திருந்தன.

லியனீத் பிரேஷ்னெவுக்குத் தரப்பட்ட மாலை நேர வரவேற்பின்போது நேரு உற்சாகமாக இருந்தார், நகைச்சுவையாகப் பேசினுர். மதிப்புக்குரிய விருந்தினருடன் சுவாரசியமாக உரையாடினுர். அவரைத் தன்னுடைய மந்திரிசபை உறுப்பினர்களுக்கு அறிமுகம் செய்தார்.

பிரேஷ்னெவ் மறு நாள் காலையில் ராஜகட்டத்துக்குச் சென்று காந்திஜி தகனம் செய்யப்பட்ட இடத்தில் அமைக்கப் பட்டிருக்கும் நினைவுச் சின்னத்தில் மலர்வளையம் வைத்தார்.

பகலில் அவரும் நேருவும் மறுபடியும் சந்தித்தார்கள். பிரதமருடைய படிப்பறையில் அமர்ந்து நெடுநேரம் பேசினுர்கள். பிறகு வெளியே சென்று தோட்டத்தில் உலாவிய

படியே ஆரஅமர உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

டிசம்பர் 17ந் தேதியன்று லியனீத் பிரேஷ்னெவின் சுற்றுப்பயணம் தொடங்கியது.

பம்பாயில் மகாராஷ்டிர அரசாங்கம் அவரை வரவேற்றது. இந்திய சமூகத்தின் பல துறைகளையும் சேர்ந்த ஏராள மான மக்கள் கலந்து கொண்ட சிறப்பான வரவேற்புக் கூட்டத்தை இந்திய-சோவியத் கலாச்சாரக் கழகம் நடத் தியது. பிரேஷ்னெவ் அக்கூட்டத்தில் நீண்ட சொற்பொழி வாற்றினார்.

ஆசியா, ஆப்பிரிக்கா மற்றும் இலத்தீன் அமெரிக்காவைச் சேர்ந்த மக்களினங்கள் காலனியாதிக்கத்துக்கு எதிராகவும் தேசிய சுதந்திரத்தைப் பலப்படுத்திக் கொள்வதற்காகவும் நடத்தும் நியாயமான போராட்டத்துக்கு சோவியத் யூனி யன் ஆதரவளிக்கிறது என்று அவர் உணர்ச்சியோடு கூறிய வார்த்தைகளை மக்கள் ஆர்வத்தோடு கேட்டார்கள். ''காலனி யாதிக்க மற்றும் அரைக் காலனியாதிக்க நுகத்தடியைத் தூக்கியெறிந்த மக்களினங்களோடு சகோதர ஒற்றுமை எங் களுடைய வெளிநாட்டுக் கொள்கையின் அடிப்படைகளில் ஒன்று'' என்றார். இந்தியப் பிரதேசத்திலிருந்து காலனியாதிக் கத்தின் எச்சமிச்சங்களை, அதாவது போர்த்துகலின் ஆதிக் கத்தில் இருந்த கோவா மற்றும் இதர இந்தியப் பிரதேசங் களை விடுவிப்பது அப்பொழுது இந்தியாவுக்கு மிக முக்கியமான பிரச்சினையாக இருந்தது. அதைப் பற்றி சோவியத் யூனியனு டைய நிலை தெளிவானது; எல்லோருக்கும் தெரிந்ததே என்று பிரேஷ்னெவ் கூறினார். கோவாவையும் மற்றுமுள்ள இந்தியப் பிரதேசங்களையும் விடுவிப்பதற்கு இந்திய மக்களுடைய முயற்சி களைப் பற்றி சோவியத் யூனியன் நன்றாகப் புரிந்து கொண்டு அனுதாபம் காட்டுகிறது என்று அவர் மறுபடியும் உறுதியளித் தார்.

அவர் சொற்பொழிவை முடித்தவுடன் ''சோவியத் யூனியன் வாழ்க!'' என்று மக்கள் உணர்ச்சிகரமாக முழங் கினார்கள்.

1961 டிசம்பர் 18ந் தேதியன்று இந்திய அரசாங்கம், போர்த்துகீசிய காலனிகளுக்குள் பிரவேசித்து அவற்றை இந்தி யாவுடன் இணைக்குமாறு இந்தியத் துருப்புகளுக்கு உத்தர விட்டது.

இந்த முடிவெடுப்பதற்கு முன்பு இந்திய அரசாங்கம் மிகவும் அதிகமான பொறுமையைக் கடைப்பிடித்தது. போர்த்து கீசியர்கள் கைப்பற்றிய பிரதேசங்களை இந்தியாவிடம் ஒப்ப டைப்பதற்குப் பேச்சுவார்த்தைகள் நடத்த வேண்டுமென்று இந்திய அரசாங்கம் போர்த்துகீசிய அரசாங்கத்திடம் பல பிரேரணைகளைப் பல வருடங்களாகக் கூறிவந்தது. ஆனால் பலன் கிடைக்கவில்லை.

மேற்கு நாடுகளின் ஆதரவு தமக்கிருப்பதாகப் போர்த் துகீசியக் காலனியாதிக்கவாதிகள் கருதினார்கள். எனவே இந் தியப் பிரதமரின் சமாதானப் பிரேரணைகளைப் புறக்கணித் தார்கள். அமெரிக்க ஜனாதிபதி கென்னடி 1961 டிசம்பர் 13ந் தேதியன்று நேருவுக்கு எழுதிய கடிதத்தில் கோவா, டையூ மற்றும் டாமன் பிரதேசங்களை விடுவிப்பதற்கு அவ ருடைய உத்தேசத்தை செயல்படுத்தாமல் தடுக்க முயற்சி செய்தார்.

இந்தியத் துருப்புகள் இந்தப் பிரதேசங்களுக்குள் நுழைந்த வுடன் போர்த்துகலின் ''புகாரைக்'' கேட்பதற்காக ஐ.நா. சபையின் பாதுகாப்பு கவுன்சில் கூட்டம் நியூயார்க்கில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் ஐ. நா. சபையில் அமெரிக்கப் பிரதிநிதியான அட்லாய் ஸ்டீவென்சன், ஐ. நா. சபை பிறந்த விழாவிலே நான் கலந்து கொண்டேன், இப்பொழுது அது மரணமடைந்து கொண்டிருப்பதைப் பார்க் கிறேன் என்று நாடகபாணியில் கூக்குரலிட்டார். சண்டையை உடனடியாக நிறுத்த வேண்டும், இந்தியத் துருப்புகள் உடனடி யாகப் பின்வாங்க வேண்டும் என்று வற்புறுத்தும் தீர் மானத்தை அமெரிக்காவும் பிரிட்டனும் மற்றும் சில முதலா ளித்துவ நாடுகளும் முன்மொழிந்தன. அந்தத் தீர்மானம் நிறைவேறியிருக்குமானால் இந்தியாவில் போர்த்துகீசிய காலனி கள் நீடிக்க உதவியிருக்கும். ஆனால் கோட்பாடு பிறழாத சோவியத் யூனியன் தனது ரத்துரிமையைப் பயன்படுத்திய காரணத்தால் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது. இந்தியாவின் பழமையான பிரதேசங்களை அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடு வித்து அவற்றைத் தாய்நாட்டுடன் மறுபடியும் இணைத்ததற் காக நேருவைப் பாராட்டி சோவியத் யூனியன் தந்தி அனுப் பியது.

அப்பொழுது சென்னையிலிருந்த பிரேஷ்னெவ் ஒரு

மாபெரும் பொதுக்கூட்டத்தில் சொற்பொழிவாற்றிய பொழுது, இந்தியாவின் உண்மையான நண்பர்கள், மக்களினங்களின் தேசிய சுதந்திரத்தை ஆதரிப்பவர்கள் யார், பேச்சில் நட்பும் வார்த்தையளவில் காலனியாதிக்கத்தை நிராகரித்தும் ஆனால் செயலில் இந்தக் கொள்ளைக்காரத்தனமான அமைப்பின் கடைசித் தளங்களை ஒழிப்பதைத் தடுப்பதற்கு சாத்தியமான எல்லா வழிகளிலும் பாடுபடுபவர்கள் யார் என்பதை இந்திய மக்கள் இப்பொழுது தெளிவாகப் பார்க்க முடியும் என்று கூறினார்.

1962ம் வருடத்தின் கோடை காலத்தில் சமாதான சகவாழ்வின் ஐந்து கோட்பாடுகளின் அடிப்படையில் இந்தியாவுக்கும் சீனாவுக்கும் ஏற்பட்டிருந்த நட்புறவு ஒப்பந்தக் கெடு முடிந்துவிட்டது. ஆனால் பீகிங் அந்த ஒப்பந்தத்தையே மறந்துவிட்டதாகத் தோன்றியது. அது மட்டுமன்றி, சீன-இந்திய எல்லையில் ஒவ்வொரு நாளும் நிலைமை அதிகமாக சீர்கேடடைந்து கொண்டிருந்தது. எல்லைப் பிரதேசங்களில் சீனத் துருப்புகள், காலாட்படை, பீரங்கிப் படை, டாங்குகள் கூட பெருமளவில் குவிக்கப்பட்டுவருவது நேருவுக்குத் தெரிவிக்கப்பட்டது. இத்தகைய சூழ்நிலையில் இந்திய அரசாங்கம் நாட்டினுடைய எல்லைகளின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதற்குக் கூடுதலான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி, குறிப்பாக சீனர்களின் துருப்புகள் குவிக்கப்பட்டிருந்த பகுதிகளுக்கு எதிரில் இந்திய எல்லையில் இராணுவக் காவல் நிலையங்களை அமைக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டது.

ஜூலை மாதக் கடைசியில் ஒரு சீனப் படைப் பிரிவு கால்வான் நதிப் பிரதேசத்தில் எல்லையின் மேற்குப் பகுதியில் இந்தியக் காவல் நிலையத்தைச் சூழ்ந்துகொண்டது; ஆனால் இந்திய வீரர்களின் தீவிரமான எதிர்ப்பைச் சந்தித்தவுடன் அவர்கள் பின்வாங்கி விட்டார்கள். செப்டெம்பர் 8ந் தேதியன்று தோலா மலையிடுக்குப் பிரதேசத்தில் கைகலப்பு ஏற்பட்டது.

அக்டோபர் 20ந் தேதியன்று சீனடிவிஷன்கள் வடக்கிலிருந்து இந்தியாவின் மேல் படையெடுத்தன. இரண்டு நாட்களுக்குப் பிறகு தாக்குதல் எல்லையின் மத்தியப் பகுதிகளுக்கு மாற்றப்பட்டது. கடைசியில், 27-28ந் தேதிகளில் சீனத் துருப்புகள் தெற்குப் பகுதியிலுள்ள காவல் நிலையங்களைத் தாக்கின. தம்மைவிடப் பெரிதாயிருந்த சக்திகளுடைய தாக்கு

தலால் இந்தியப் படைகள் மெதுவாக நாட்டின் உட்புறம் நோக்கிப் பின்வாங்கின. அவர்கள் பல இடங்களில் 80 முதல் 100 கிலோமீட்டர் தூரம் வரை இந்தியப் பிரதேசத்துக்குள் நுழைந்துவிட்டார்கள். இந்தியத் துருப்புகள் வீரத்தோடு போர்புரிந்தனர்; இந்தியாவுக்கு அதிகமான இழப்புக்கள் ஏற்பட்டன. முதல் வாரத்தில் நடைபெற்ற சண்டையில் மட்டும் இரண்டாயிரத்துக்கும் அதிகமான படைவீரர்கள் கொல்லப்பட்டார்கள்.

இந்தியாவின் மீது படையெடுக்கும்படி பீகிங் தலைவர்கள் உத்தரவு போட்ட நேரத்தில் உலகத்தின் மற்ற பகுதியில் சமாதானம் உண்மையிலேயே நூலிழையில்தான் தொங்கிக் கொண்டிருந்தது. உலக யுத்தம் முடிவடைந்த பிறகு இது வரை நடந்திராத நாடக பாணியான சம்பவங்கள் கரிபியன் பகுதியில் நடைபெற்றுக் கொண்டிருந்தன. ஆனால் பீகிங்கின் மாவோயிஸ்ட் தலைவர்கள் தங்களுடைய விஸ்தரிப்பு வீரசாகசங்களுக்காக உலகத்தில் இன்னொரு நெருக்கடியை ஏற்படுத்தி விட்டார்கள். கோடிக் கணக்கான மக்கள் ஈடுபடக் கூடிய மாபெரும் யுத்த அபாயம் ஏற்பட்டுவிட்டது.

அக்டோபர் 22ந் தேதியன்று நேரு அகில இந்திய வானொலியில் உரை நிகழ்த்தினார். அவர் நாட்டு மக்களுக்கு விடுத்த வேண்டுகோளில் எவ்விதமான பீதியின் அறிகுறியும் அறவே இல்லை, நாட்டு நிலைமையைப் பற்றிய நிதானமான சிந்தனையும் துல்லியமான பகுப்பாய்வும் அதன் சிறப்பான அம்சங்களாக இருந்தன. இந்தியா சுதந்திரமடைந்த பிறகு இது வரை நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் மிகப் பெரிய ஆபத்து சீனப் படையெடுப்பே என்று கூறி தாய்நாட்டின் பிரதேச முழுமையை, இந்திய மக்களின் தேசியப் பெருமை மற்றும் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு நாட்டிலுள்ள அனைத்து சக்திகளும் ஒன்றுகத் திரள வேண்டுமென்று அறைகூவல் விடுத்தார்.

எல்லைச் சண்டைகள் நடைபெற்றுக் கொண்டிருந்த, கவலை நிறைந்த ஆரம்ப நாட்களின் போது நேரு காட்டிய உறுதியும் அமைதியும் அவரைப் பார்த்தவர்கள், அவருடைய உரையைக் கேட்டவர்களின் மனங்களில் மாபெரும் பதிவை ஏற்படுத்தின. ஆனால் உள்ளூற அவர் எவ்வளவு பாதிக்கப்பட்டிருந்தார் என்பது ஒரே ஒரு நபருக்கு, அவருடைய மகள் இந்

திராவுக்கு மட்டுமே தெரியும். மாவோயிஸ்ட் சீனத் தலைமை இந்தியாவுக்கு எதிராகத் தன்னுடைய ஆத்திரமூட்டும் நடவடிக்கைகளின் மூலம் இந்தியத் துணைக் கண்டத்திலும் தென் ஆசியாவிலும் சமாதானத்துக்கு உண்மையான ஆபத்தை ஏற்படுத்தியது மட்டுமல்லாமல், நேரு முரணில்லாமல் பாடுபட்டு வந்த சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளையும் அவமதித்து அழித்துவிட்டது.

நேரு அக்டோபர் 26ந் தேதியன்று ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா மற்றும் ஆஸ்திரேலியாவிலுள்ள அரசுகளின் தலைவர்களுக்குக் கடிதங்கள் எழுதினார். பீகிங் ஆரம்பித்துள்ள இந்த இராணுவ மோதல் உலக சமாதானத்துக்கு மிகவும் ஆபத்தை ஏற்படுத்தக் கூடியது என்று சுட்டிக் காட்டினார். ''வஞ்சகம், பாசாங்கு, சர்வதேச உறவுகளில் வன்முறையைக் கையாளுதல்'' ஆகியவற்றை என்றுமே எதிர்த்து வந்திருக்கும் சமாதானமான வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்றுகின்ற நாடு என்ற முறையில் இந்தியாவுக்கு ஆதரவளிக்க வேண்டுமென்று அவர்களைக் கேட்டுக் கொண்டார்.

நேருவின் வேண்டுகோளுக்கு அறுபதுக்கும் அதிகமான நாடுகளிடமிருந்து பதில்கள் வந்தன. அவற்றின் அரசாங்கங்கள் மாவோயிஸ்ட் சீனாவின் இராணுவ ஆத்திரமூட்டல்களைக் கண்டனம் செய்தன.

சோவியத் யூனியன் கடைப்பிடித்த உறுதியான, தெளிவான நிலை நேருவுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. இந்தியாவுக்கு மிகவும் கஷ்டமாக இருந்த 1959ம் வருடத்தின் இலையுதிர் காலத்தைப் போலவே இப்பொழுதும் சோவியத் யூனியன் போர்நிறுத்தம் செய்யுமாறும் தகராறுகளுக்கு சமாதான பூர்வமான தீர்வு காணப் பேச்சுவார்த்தைகள் நடத்துமாறும் அறைகூவியது.

இந்த எல்லைச் சண்டைகள் தொடங்கிய காலத்திலிருந்தே இந்தியாவுடன் எல்லைத் தகராறுகளைத் தீவிரப்படுத்துவது எதிர்மறையான விளைவுகளை ஏற்படுத்தும் என்று சோவியத் யூனியன் இராஜிய மற்றும் இதர வழிகளின் மூலம் சீனத் தலைமையிடம் ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் எச்சரிக்கை செய்திருப்பதை நேரு அறிந்திருக்க முடியாது. இந்த மதிநுட்பமான எச்சரிக்கைகளை சீனத் தலைவர்கள் ஏற்றுக் கொள்ளாதது

மட்டுமல்ல, சோவியத் யூனியன் பாட்டாளி வர்க்க சர்வதே சியவாத நிலையிலிருந்து விலகிவிட்டதென்றும் குற்றஞ் சாட்டி னார்கள்.

எல்லைச் சண்டை ஒரு மாத காலம் வரை நடைபெற்றது. ஸ்தலச் சண்டைகள் எந்த நேரத்திலும் நெடுங்கால யுத்தமாக மாறக் கூடும். அது எவ்வளவு பயனற்றது என்பதை பீகிங்கில் புரிந்து கொள்ளத் தொடங்கியிருப்பதாகத் தோன்றியது. இந்திய-சீன எல்லையில் சமாதானத்தை மறுபடியும் ஏற்படுத்த வேண்டும் என்று சோவியத் யூனியனும் சோஷலிஸ்ட் நாடு களும் மற்ற சமாதானத்தை விரும்பும் அரசுகளும் வெளியிட்ட கோரிக்கைகளும், இந்தியாவிடம் நட்புறவு அணுகுமுறையைப் பலப்படுத்தி வளர்த்துச் செல்ல வேண்டும் என்ற கொள் கைக்கு அவை கொடுத்த ஆதரவும் மாவோ மற்றும் அவரைச் சுற்றியுள்ளவர்களிடம் நிதானத்தை ஏற்படுத்தின.

எல்லையின் எல்லாப் பகுதிகளிலும் நவம்பர் 22ந் தேதியி லிருந்து போர் நிறுத்தம் செய்வதென்றும் சண்டை தொடங்கு வதற்கு முன்பு இருந்த இடங்களுக்கு டிசம்பர் 1ம் தேதிக் குள் சீனத் துருப்புகளைப் பின்வாங்கிக் கொள்வதென்றும் சீன அரசாங்கத்தின் முடிவை பீகிங் வானொலி நவம்பர் 21ந் தேதி இரவில் அறிவித்தது.

இந்தத் தகவல் நேருவுக்குத் தெரிவிக்கப்பட்டது. ''நான் இதை எதிர்பார்த்தேன். இது நடக்க வேண்டியதே. இப்படித் தானிருக்கும். சீனர்கள் இதற்கு மேல் எப்படி வர முடியும்? அவர்கள் ஏற்கெனவே அதிக தூரம் வந்து விட்டார்கள்... சீனர்கள் இப்பொழுது தங்களுடைய சப்ளை பாதைகளின் கடைசிக்கு வந்துவிட்டபடியால், நம்மீது ராஜியத் துறையில் வெற்றியடைய விரும்புகிறார்கள். தாங்கள் விரும்புவதை அடைவதற்கு அவர்கள் முயற்சி செய்யலாம். ஆனால் அவர் களுடைய கோரிக்கைகளுக்கு நாம் விட்டுக் கொடுக்கப் போவ தில்லை'' என்று நேரு கூறினார்.

எல்லைப் பகுதிகளில் போர் நிறுத்தம் ஏற்பட்டது நேரு அரசாங்கத்தின் உண்மையான வெற்றி என்று முற்போக்கான இந்திய சமூகம் நியாயமான முறையில் பாராட்டியது. ஆனால் உள்நாட்டில் அரசியல் நிலைமை முன் போலவே சிக்க லடைந்திருந்தது. 1962 பிப்ரவரியில் நடைபெற்ற மூன்றாவது பொதுத் தேர்தலில் ஓரளவுக்கு பலம் பெற்றிருந்த வலது

சாரி எதிர்ப்பு அணி பிரதமர் நேரு மீதும் அவருக்கு நெருக்க மான சகாக்கள் மீதும் தாக்குதல்களை அதிகப்படுத்தியது. நேருவின் நெருங்கிய நண்பரான பாதுகாப்பு அமைச்சர் கிருஷ்ண மேனனைப் பதவியிலிருந்து விலகுமாறு செய்த பிறகு அரசாங்கம் தன்னுடைய கூட்டுச் சேராமைக் கொள்கையைக் கைவிட வேண்டுமென்று பிற்போக்காளர்கள் கோரினார்கள். அவர்களுக்கு அந்தக் கொள்கை மிகவும் வெறுப்பாக இருந் தது. ''சர்வதேசக் கம்யூனிசத்தின்'' அபாயம் நிரந்தரமானது என்று தாங்கள் கருதியதைக் கூறி சீனாவை அதற்கு உதாரண மாகச் சுட்டிக் காட்டினார்கள். வன்மையான இராணுவத் தொழில்நுட்பத்தைக் கொண்ட மேற்கு நாடுகளின் பலமே இந்தியாவின் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் என்பதால் இந் தியா ஏகாதிபத்திய இராணுவக் கூட்டணிகளில் சேர வேண் டும் என்று வற்புறுத்த முயற்சி செய்தார்கள்.

இந்தியப் பிரதேசத்தில் அந்நிய விமான தளங்களை வைத்துக் கொள்கின்ற பேச்சுக்கே இடமில்லை என்று 1963 பிப்ரவரி 21ந் தேதியன்று நாடாளுமன்றத்தில் பேசும் பொழுது நேரு திட்டவட்டமாகக் கூறினார். உண்மையிலேயே நட்புணர்ச்சி யுள்ள எந்த ஒரு நாடும் இந்தியாவிடம் இந்த ஆலோசனை யைச் சொல்லாது என்று அவர் சுட்டிக்காட்டினார். ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பேசும் பொழுது, தீவிரமான பிற்போக்காளர் கள்தான் சீன ஆக்கிரமிப்பைப் பற்றி மிகவும் அதிகமாகக் கூச்சல் போடுகிறார்கள், உரத்த கூச்சல் மூலம் தங்களுடைய பிற்போக்குத் தனத்தை மறைத்துக் கொள்வதற்கு முயற்சி செய்கிறார்கள் என்று நேரு கூறினார்.

நேரு மீதும் அவரைப் போல சிந்தித்தவர்கள் மீதும் வலதுசாரிகளின் தாக்குதல் குறையவில்லை. அவர்கள் இப்பொ ழுது காங்கிரஸ் கட்சி மற்றும் அரசாங்கத்தில் இடதுசாரி அணியின் தலைவரும் பெட்ரோலிய அமைச்சருமான கே.டி. மாளவியாவைத் தாக்கினார்கள். அவர் மீது லஞ்ச ஊழல் குற்றஞ்சாட்டினார்கள். அவருக்கு எதிராக நடத்தப் பட்ட இயக்கம் அதிகமான பரிமாணங்களை அடைந்தபடியால் அவர் அமைச்சர் பதவியிலிருந்து விலகிக் கொள்ள முடிவு செய்தார். நேரு அவருடைய பதவி விலகலை ஏற்றுக் கொண் டார். அவருடைய நியாயத்தையும் நேர்மையையும் பாதிக்கக்

கூடிய எந்தக் காரியத்தையும் அவர் செய்யவில்லை என்றும் தனிப்பட்ட முறையில் தனக்கு நம்பிக்கை இருக்கிறது என்றும் நாடாளுமன்றச் சொற்பொழிவில் நேரு கூறினார்.

மந்திரி சபையிலிருந்து மேனனும் மாளவியாவும் பதவி விலகிய பிறகு அரசாங்கத்திலும் கட்சித் தலைமையிலுமிருந்த சமநிலை அழிந்தது. நேருவுக்கும் காங்கிரசில் அவருடைய ஆதரவாளர்களுக்கும் ஆபத்தான அடி கொடுக்க வேண்டுமென்று எதிர்க்கட்சி அவசரப்பட்டது.

ஆகஸ்ட் மாதத்தில் நாடாளுமன்றத்தின் வழக்கமான கூட்டத்தின் போது, கூட்டணி வகுத்திருந்த எதிர்க் கட்சிகள் நேரு பதவியிலிருந்து விலக வேண்டுமென்று கோரின. நாடாளுமன்றத்தில் சில நாட்கள் காரசாரமான விவாதம் நடைபெற்றது. அந்தக் காலம் முழுவதும் டில்லி நகரத் தெருக்களில் நேருவை ஆதரிப்பவர்களும் எதிர்ப்பவர்களும் பெருந் திரளான ஆர்ப்பாட்டங்களை நடத்தினார்கள்.

அரசாங்கத்தின் மீது நம்பிக்கையின்மையைத் தெரிவித்து வலதுசாரிகள் முன்மொழிந்த தீர்மானம் அதிகமான பெரும்பான்மையினால் தோற்கடிக்கப்பட்டது. நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்கு ஆதரவாக 61 உறுப்பினர்களும் எதிர்ப்பாக 346 உறுப்பினர்களும் வாக்களித்தார்கள்.

இந்திய மக்கள் நாடாளுமன்றத்தின் முடிவை வரவேற்றார்கள். இந்தியாவின் அரசுரிமையையும் பொருளாதார வலிமையையும் பலப்படுத்துகின்ற, சமூக முன்னேற்றத்துக்கு உதவி செய்து சர்வதேச அரங்கத்தில் தகுதி மிக்க இடத்தை இந்தியாவுக்குப் பெற்றுத் தந்திருக்கின்ற உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளைக் கொண்ட முற்போக்கான பாதைக்குத் தங்களுடைய ஆதரவைத் தெரிவித்தார்கள்.

''இந்தக் கொள்கை முற்றிலும் சரியானது என்று நாம் கருதுகிறோம். எப்படிப்பட்ட இலட்சியக் கோணத்திலிருந்து பார்த்தாலும் இது சரியானதே. செய்முறைக் கோணத்தின் படியும் இது சரியான கொள்கையே என்பதை சமீப வருடத்திய சம்பவங்கள் எடுத்துக் காட்டியுள்ளன. இக்கொள்கையிலிருந்து விலகினால் அது நம்முடைய நலன்களையும் சுதந்திரத்தையும் ஒற்றுமையையும் பாதிக்கும், அது உலக சமாதானத்துக்கு உதவியாக இருக்காது என்பதை இங்கே குறிப்பிடத் தேவையில்லை'' என்று நாடாளுமன்றத்தில் பேசும்

அன்றும் அவர் வழக்கம் போல இரவில் வெகு நேரம் வரை வேலே செய்தார். தான் இல்லாத பொழுது மேசையில் குவிந்து விட்ட முக்கியமான கோப்புகளேப் படித்தார், கடிதங் களுக்குப் பதில் எழுதினுர். பிறகு இந்திராவைக் கூப் பிட்டார். ''எல்லாவற்றையும் முடித்து விட்டேன் என்று நினைக்கிறேன்'' என்ருர். இந்த வார்த்தைகளேக் கூறிய பிறகு அவர் மெதுவாக மேசையை விட்டு எழுந்து தன்னுடைய படுக்கை அறைக்குள் சென்ருர்.

27ந் தேதி காலேயில் அவருடைய உடல்நிலே மிகவும் மோசமாக இருந்தது. டாக்டர்கள் அவசரமாக வரவழைக்கப் பட்டார்கள். அவருக்கு மோசமான இருதயவலி ஏற்பட்டிருப் பதாகக் கூறினுர்கள். அவர்கள் அடுத்த அறையில் சிகிச்சை முறையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த பொழுது நேரு படுக்கையிலிருந்து எழுந்து சில அடிகள் நடக்க முயற்சி செய்தார். டாக்டர்கள் கலவரத்தோடு ஓடிவந்தார்கள். காலங் கடந்து விட்டது, இனி மருந்துகளால் குணப்படுத்த முடியாது என்று நேரு டாக்டர்களேப் பார்த்துக் கூறினுர். இந்த வார்த்தைகளுக்குப் பிறகு அவர் உணர்விழந்தார். அன்று பிற்பகல் 2 மணிக்கு (டில்லி நேரம்) நேரு மரண மடைந்தார்.

அவருடைய படுக்கைக்குப் பக்கத்திலிருந்த மேசையில் இராபர்ட் ஃபிராஸ்டின் கவிதைப் புத்தகம் திறந்து கிடந்தது. அதில் அவருக்கு மிகவும் பிடித்தமான வரிகளுக்குக் கீழே கோடுகள் போடப்பட்டிருந்தன:

''அழகிய வனங்கள், இருண்டு அடர்ந்த காடுகள்
ஆனுல் நான் வாக்குறுதிகளே நிறைவேற்ற வேண்டும்;
உறங்குவதற்கு முன்னே நெடுந்தொலேவு போக
வேண்டும்.''

தன்னுடைய கடைசி நேரத்தைப் பற்றி நேருவுக்கு முன் னுணர்வு இருந்தது. தன்னுடைய வாழ்க்கையில் எல்லாக் கடமைகளேயும் நிறைவேற்றியவருக்கு உரிய தகுதியோடு அவர் அந்தக் கடைசி நேரத்தைச் சந்தித்தார்...

மாபெரும் தொழில்துறை இணேயங்கள் தொன்மை மிக்க இந்தியாவின் தோற்றத்தை வரலாற்று ரீதியில் மிகக் குறுகிய

காலத்துக்குள் மாற்றிவிட்டன; உலகத்தில் தொழில் வளர்ச்சி யடைந்த முதல் பத்து நாடுகளில் இந்தியா இடம் பெற்றிருக் கிறது. இந்தியாவின் முற்போக்கான, சமாதானத்தை நேசிக் கின்ற வெளிநாட்டுக் கொள்கை நாட்டில் வேரூன்றி உலகத் தின் அங்கீகாரத்தைப் பெற்று விட்டது. சோவியத், இந்திய மக்களுக்கிடையே மரபு வழிப்பட்ட நட்புறவுகள் சமாதானம், நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு உடன்படிக்கையை அடிப்படை யாகக் கொண்டு வளர்ச்சியும் பலமும் அடைந்து வருகின்றன. இந்த உறவுகள் காலத்தின் சோதனைகளை வென்று நிலைத்து விட்டன, அரசியல் நிலைமையின் மாறுபாடுகளுக்கோ அல்லது தற்காலிகமான கூறுகளின் தாக்கத்துக்கோ உட்பட்டவை அல்ல என்பதை நிரூபித்து விட்டன.

ஜவகர்லால் நேரு இதைத்தான் கனவு கண்டார், தன்னு டைய வாழ்க்கையை இதற்காகவே அர்ப்பணித்தார்.